Muthialpet High School, Madras.

உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

வில்லிபுத்தூராழ்வார்

இயற்றிய

# மகாபாரதம்

## ஆதிபருவம் மூலமும்,

யாழ்ப்பாணத்து நல்லூர்

ஆறுமுகநாவலரவர்கள்

மருகரும், மாணாக்கரும், வித்துவசிரோமணியுமாகிய

ச. பொன்னம்பலபிள்ளையவர்கள்

இயற்றிய

## புத்துரையும்.

இவை

வயி. நாக. ராம.

அ. வேங்கடாசலச் செட்டியார்

கேட்டுக்கொண்டபடி,

சி. தம்பையாபிள்ளையால்

மதராஸ் ரிப்பன் யந்திரசாலையில்

அச்சிற்பதிப்பிக்கப்பட்டன.

விளம்பி௵ - சித்திரைமீ.

இதன்விலை ரூபா-௧.

௨

# சூசிபத்திரம்.



## க—ஆதிபருவம்.

கணபதிதுணை.

# மகாபாரதம்.

## மூலமுமுரையும்.

### காப்பு.

நீடாழியுலகத்துமறைநாலொடைந்தென்றுநிலைநிற்கவே
வாடாததவவாய்மைமுனிராசன்மாபாரதஞ்சொன்னநா
ளேடாகமாமேருவெற்பாகவங்கூரெழுத்தாணிதன்
கோடாகவெழுதும்பிரானைப்பணிந்தன்புகூர்வாமரோ.

(இதன்பொருள்.) வாடாத தவவாய்மை முனிராசன் - சுருங்காத தவமெய்ம்மையினையுடைய முனிசிரேட்டராகிய வியாசமுனிவர்—நீடு ஆழிஉலகத்து மறை நாலொடு ஐந்து என்று நிலை நிற்க - நெடிய கடல்சூழ்ந்த நிலவுலகத்தில் நான்கு வேதங்களோடு ஐந்தாம் வேதமென்று நிலைபெற—மா பாரதம் சொன்ன நாள் - மகாபாரதகதையைச்சொன்னநாளில்—மாமேருவெற்பு ஏடு ஆக - மகமேருமலையை ஏடாகவும்—ஆகவம் கூர் தன் கோடு எழுத்தாணி ஆக - யுத்தத்திலே கூர்ந்த தம்முடையகொம்பை எழுத்தாணியாகவுங் (கொண்டு)—எழுதும் பிரானைப் பணிந்து அன்பு கூர்வாம் - (அக்கதையை) எழுதும் விநாயகக்கடவுளை (யாம்) வணங்கி அன்புசெய்வாம். என்றவாறு.

ஏ அரோ அசைநிலைகள். சொன்னநாள் எழுதும்பிரான் என்பன "இறப்பேயெதிர்வே" என்னுஞ் சூத்திரத்தால் இறந்தகாலத்தோடெதிர்காலம் மயங்கியவழுவமைதி. ஆகவென்னுஞ் செயவெனெச்சங்களிரண்டும் காரணப்பொருளவாய் வருவித்த, கொண்டு என்னும் பிறகருத்தாவின் வினையோடுமுடிந்தன. அது எழுதும் என்னும் பெயரெச்சங்கொண்டது. இனிக் கொண்டு என்னுஞ்சொல் வருவியாது ஆகவென்னுஞ் செயவெனெச்சமிரண்டும் "சூரியனுதிக்கவந்தான்"என்பது போலக் காரணகாரியமென்னும் இரண்டுமின்றி நின்றதெனக் கொள்ளினுமிழுக்காது. முனிராசன் வடநூன்முடிபு. மஹா என்னும் வடமொழிகள் மா எனத் தற்பவமாயின. எல்லா வளங்களுஞ் சுரத்தற் கேதுவாகிய மழைக்குமுதலாதல் பற்றி நீடாழியெனவும், அக்கடலாற் சூழப்பட்டமையின் எல்லாவளங்களையுந் தருமியல்பினதென்பது போதர ஆழி யுலகமெனவும், வியாசமுனிவர்கூறியமகாபாரதகதையை மேருகிரியிலே, தமது கோட்டாலெழுதிய அத்துணைவிருப்புடைய விநாயகக்கடவுள் அக்கதையைச் சுருக்கித் தமிழில் மொழிபெயர்த்துக்கூறும் இந்நூலும் இடையூறின்றி இனிது முடியுமாறருள்புரிவரென்னுங் கருத்தால் விநாயகக்கடவுளுக்குப் பிறவடை கொடாது மாபாரதஞ்சொன்னநாள் எழுதும்பிரான் எனவும், பெருங்கதையாகிய மகாபாரதத்தைக் கடினமாகிய மேருமலையில் எழுதும்

பொழுதும் மழுங்காத்தகையதென்பது போதர ஆகவங் கூர்கோடெனவுங் கூறி னர். இந்நூற்கு மகாபாரதம் என்னும்பெயர் முதனூலால் வந்தபெயர். ஸ்ரீகிருட் டிணர்அருச்சுனருக்குபதேசித்த வேதசாரங்களே செறிந்த பகவற்கீதையைத் தன் னிடத்துடைமையினாலும்,விட்டுணுமுதலியதேவர்களுடையசரித்திரங்களைக்கூறு தலானும், சின்னாட் பல்பிணிச் சிற்றறிவினோராகிய மக்கள் எளிதினுணர்ந்துய்யும் படி உறுதிப்பொருள்களைக் கூறுதலானும், வேதங்களை நான்காய்ப்பகுத்த வியாச முனிவராற் கூறப்பட்டவுரிமையினாலும் மகாபாரதம்ஐந்தாம்வேதமெனப்பட்டது. பரதன் என்னும் அரசன்குலத்திற்பிறந்த பாரதர்களுடைய கதையைக்கூறுதலின் இந்நூற்குப் பாரதமெனக்காரணப்பெயராயிற்று. முனிவர்கள் வேதங்களோடு சீர்தூக்கிப் பார்த்தபொழுது இந்நூல் அவற்றினும் பெருமையும் பாரமுமுடைத் தாயிருந்தமைபற்றிப் பாரதமெனக் காரணக்குறியாயிற்றென்பாருமுளர். இங்கே பாரம் என்றது உயிர்க்குறுதிபயக்கும் பொருளையுடைய மேன்மையை. மறை என்பது மறைந்தபொருளையுடையது எனப்பொருடருதலாற் காரணப்பெயர். அது அலையென்பதுபோல வினைமுதற்பொருளுணர்த்தும் இகரவிகுதிபுணர்ந்து கெட்டுநின்றது. "எவ்வயிற் பெயரும் வெளிப்படத்தோன்றி - யவ்விய னிலையல் செவ்வி தென்ப" என்பதனால் யாமென்னும் எழுவாய் தோன்றாமல் நின்று கூர் வாம் என்னும் பயனிலைகொண்டது. (க)

முருகார்மலர்த்தாமமுடியோனையடியார்முயற்சித்திறந்
திருகாமல்விளைவிக்குமதயானைவதனச்செழுங்குன்றினைப்
புருகூதன்முதலாயமுப்பத்துமுக்கோடிபுத்தேளிரு
மொருகோடிபூதேவருங்கைதொழுங்கோவையுறவுன்னுவாம்.

(இ - ள்.) முருகு ஆர் தாம மலர்முடியோனை - வாசனைநிறைந்த கொன்றைப் பூவையணியுஞ் சடைமுடியையுடையவரை—அடியார் முயற்சித்திறம்திருகாமல் விளைவிக்கும் மதயானை வதனச் செழும் குன்றினை - அன்பர்களாகிய உழவர்களு டைய முயற்சியின் பகுதிகளாகிய பயிர்களை மாறுபடாமல் விளையச்செய்யும் மத மாகிய அருவியைச்சொரியும் யானைமுகத்தினையுடைய செழுமையாகியமலையை— புருகூதன் முதலாய முப்பத்துமுக்கோடி புத்தேளிரும்—இந்திரனை முதல்வனாகக் கொண்ட முப்பத்துமுக்கோடி தேவர்களும்—ஒருகோடி பூதேவரும் கைதொழும் கோவை - ஒருகோடி பிராமணரும் வணங்கும் விநாயகக்கடவுளை—உற உன்னு வாம் - (யாம்) மிகவுந்தியானிப்பாம். எ-று.

எனவே அன்பனாகிய எனக்கும் இந்நூல்செய்தற்க ணிகழும் முயற்சியை இடையூறின்று இனிது முடிப்பர் என்பது கருத்து. முயற்சிகள் பலவாதல் பற்றி முயற்சித்திறம் எனவும், தன்னையடைந்தோர்க்குப் பலவளங்களையும் எளிதிற் கொடுக்கும் மலையென்பதுபோதரச் செழுங்குன்றெனவுங் கூறினர். இங்கே ஒரு கோடி என்றது வரையறுத்ததோரெண்ணையுணர்த்தாது எண்ணின்மிகுதியை யுணர்த்திநின்றது "உருத்திரர் வசுக்கதிர் மருத்துவரெனப்பொலியு முப்பத்து முக்கோடி தேவர்கள்" என முப்பத்துமுக்கோடி தேவர்களின்வகை கூறுதலின் இந்திரன் அவருளடங்காமைபற்றிப் புருகூதன்முதலாய என்பதற்கு இந்திரனை முதல்வனாகக்கொண்ட எனப் பொருளுரைக்கப்பட்டது. அடியார் முயற்சித்திறந் திருகாமல் விளைவிக்கு மதயானைவதனச் செழுங்குன்றினை என்பதுகுறிப்புருபகம் என்னும் அலங்காரம். உற உரியடியாகப்பிறந்தவினையெச்சம். (உ)

---

# சிறப்புப்பாயிரம்.

(நூலாசிரியர் குமாரர் வரந்தருவார் செய்தது.)

பொருப்பிலேபிறந்துதென்னன்புகழிலேகிடந்துசங்கத்
திருப்பிலேயிருந்துவைகையேட்டிலேதவழ்ந்தபேதை
நெருப்பிலேநின்றுகற்றோர்நினைவிலேநடந்தோரேன
மருப்பிலேபயின்றபாவைமருங்கிலேவளருகின்றாள்.

(இ - ள்.) பொருப்பிலே பிறந்து-பொதியமலையிலே பிறந்து—தென்னன்புகழிலே கிடந்து - பாண்டியனுடைய கீர்த்தியிலே கிடந்து—சங்கத்து இருப்பிலே இருந்து - முச்சங்கத்தி னிருக்கையிலே இருந்து—வைகை ஏட்டிலேதவழ்ந்த பேதை - (திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்)வைகையாற்றிலே இட்ட(திருப்பாசுரமடங்கிய) ஏட்டிலேதவழ்ந்த (தமிழென்னும்) பெண்ணனவள்—நெருப்பிலே நின்று - (அந்நாயனார்க்குஞ் சமணர்க்கும் வாதுநிகழ்ந்தபொழுது பாண்டியனுக்கெதிரேவளர்த்த) அக்கினியிலேநின்று—கற்றோர் நினைவிலே நடந்து-படித்தவர்களுடைய நினைவிலேநடந்து—ஓர் ஏன மருப்பிலேபயின்ற பாவை மருங்கிலே வளருகின்றாள் - (விட்டுணுவாகிய) ஒரு பன்றியினெயிற்றிலே தங்கின (பூமியாகிய) பெண்ணினுடைய ஒக்கலையிலே வளர்கின்றாள். எ - று.

பேதை என்பது ஈண்டுப் பருவத்தையுணர்த்திநின்றது. தமிழைப்பேதையென உருவகஞ்செய்ததற்கியையப் பிறத்தல் கிடத்தல் இருத்தல் தவழ்தல் நிற்றல் நடத்தல் வளர்தலாகிய வினைகளை முறையேகூறினார். ஏகாரங்கள் தேற்றம்.

அகத்தியன்பயந்தசெஞ்சொலாரணங்கம்புயாதன்
முகத்தினில்வாழுமந்தமொய்குழலருளினாலே
பகைத்தெதிர்பொருததெய்வபாரதகதையிம்மூந்நீர்ச்
செகத்தினில்விருத்தயாப்பாற்செய்கெனச்செய்ததன்றே.

(இ - ள்.) பகைத்து எதிர் பொருத தெய்வபாரதகதை - பகைகொண்டு எதிர்த்து யுத்தஞ்செய்த தெய்வத்தன்மையினையுடைய மகாபாரதசரித்திரம்—அம்புயாதன் முகத்தினில் வாழும் - பிரமாவினுடைய நாவில்வாழும்—அந்தமொய்குழல் ஆரணங்கு அருளினாலே - அந்தமொய்த்த கூந்தலையுடைய அரியசரசுவதியினது கிருபையினாலே—இம் மூந்நீர்ச்செகத்தினில் - இந்தக்கடலாற்சூழப்பட்ட நிலவுலகத்தில்—அகத்தியன் பயந்த செஞ்சொல் விருத்த யாப்பால்செய்க என - அகத்தியமுனிவர் அருளிச்செய்த செந்தமிழில் விருத்தப்பாவாற் பாடுக என்ன—செய்தது - பாடப்பட்டது. எ - று.

அன்று ஏ அசைகள். பாரதகதை வடநூன்முடிபு. "அகன்று பொருள்கிடப்பினு மணுகிய நிலையினு - மியன்றுபொருண்முடியத் தந்தனருரைத்தன் - மாட்டெனமொழிப பாட்டியல் வழக்கின்" என்னும் விதிபற்றி இச்செய்யுட்கு இங்ஙனம் மாட்டேற்றிப் பொருளுரைக்கப்பட்டது. ஆட்கொண்டான் தமிழில் விருத்தயாப்பாற் பாடுக எனக்கூறச் சரசுவதியின் அருள்கொண்டு வில்லிபுத்தூராழ்வாரால் இப்பாரதகதை பாடப்பட்டதென்பது கருத்து. அந்த என்னும் பண்டறிசுட்டுப் பிரமாவின்நாவில் என்றும் வாழுமியல்பினள் என்பதை யுணர்த்திற்று. முகம்-ஆகு பெயர். நிலத்தைப் படைத்தலுங் காத்தலும் அழித்தலுமாகிய மூன்று தொழிலுமுடைமையின் கடலை மூந்நீர் என்பதும் ஆகுபெயர். இந்நூலில் வே

பாவினங்கள் சிறுபான்மை யுளவாயினும் கமுகந் தோட்ட மென்றாற்போல் மிகுதி பற்றியகுறியாய், விருத்தப்பாவாற் செய்கெனச் செய்ததெனக் கூறினார். செய்க என்னும் வியங்கோளீறுதொக்கது. பாரதகதை செய்ததெனமுடிக்க. இது மரம்வெட்டிற்று என்பதுபோலச் செயப்பாட்டு வினைவிகுதி கெட்டுநின்ற வினைமுற்றுச்சொல். இதனை வடநூலார் கருமகருத்தா என்ப. மேலைச்செய்யுளிலே தமிழைப் பேதையென உருவகஞ்செய்ததற்கியைய அகத்தியன் பயந்த செந்தமிழாகிய பெண்ணில் எனப் பொருள்கூறினும் பொருந்தும். (உ)

தேடினரியாவரேகொலெழுவகையானுஞ்சீர்த்தி
நீடினரவரேயென்பர்நீணிலத்துயர்ந்தமாந்தர்
பாடினரியாவர்யாவர்பாடுவித்தார்கொலென்று
நாடினர்தெளியும்வண்ணநவையறநவிலலுற்றேன்.

(இ - ள்.) எழுவகையானும் சீர்த்தி தேடினர் யாவரே - எழு வகைகளினாலும் கீர்த்தியைச் சம்பாதித்தவர்கள் எவர்களோ—அவரே நீடினர் என்பர் - அவர்களே என்றும் அழியாதிருப்பவர் என்பர்கள்—நீள் நிலத்து உயர்ந்தமாந்தர் - பெரிய நிலவுலகத்தில் உயர்ந்த அறிஞர்கள்—பாடினர் யாவர் - (கீர்த்திக்கேதுவாகிய எழுவகைச் செயல்களுள் நூல் செய்தலும் ஒன்றாதலால் இந்நூலைப்) பாடினவர் எவர்—பாடுவித்தார்கள் யாவர் என்று - பாடுவித்தவர் எவர் என்று—நாடினர் தெளியும் வண்ணம் - ஆராய்ந்தோர் அறியும்படி—நவை அற நவிலலுற்றேன் - குற்றந்தீர (யான்) சொல்லத்தொடங்கினேன். எ-று.

கொல் அசை. கீர்த்திக்கேதுவாகிய எழுவகைச் செயல்களாவன:—தடாகப் பிரதிஷ்டை, தன நிக்ஷேபம், அக்கிராகாரப் பிரதிஷ்டை, தேவாலயப்பிரதிஷ்டை, வனப்பிரதிஷ்டை, பிரபந்த நிர்மாணம், சத்திரப்பிரதிஷ்டை. இவற்றைவடநூலார் சப்தசந்தானம் என்ப. பிரபந்தநிர்மாணம் நூல்செய்தல். நூல்செய்சற்கின்றியமையா ஏதுவாய்ச் சிறந்தமையின் செய்வித்தலையுமுடன்கூறினார். ஈண்டு நவை என்றது ஆக்கியோன் பெயரும் அதற்கினமாகிய ஆக்குவித்தோன் பெயரும் இல்லை என்னும் நவையை. (ந)

வேறு.

நாணிரைத்தநேகதாரகாகணமாநவமணியுடனவவிதங்கொள் [டல்
கோணிரைத்தீரேழ்புவனமும்வலஞ்செய்கொற்றநேமியின்வருகொண்
வாணிரைத்திரவிவிதிர்ப்பபோன்மின்னிவான்முகடுறநெடும்பளிக்குத்
தூணிரைப்பனபோனந்திமால்வரையின்சூழலிற்றாரைகொண்டதுவே.

(இ ள்.) ஆம் நவமணியுடன்-(திரைகளைத்) தன்னிடத்துண்டாகின்ற நவரத்தினங்களோடு—நாள் நிரைத்து - அச்சுவினி முதலிய நாண்மீன்களில்நிரைத்து—அநேக தாரகாகணம் நவ விதங்கொள்கோள் நிரைத்து-(மற்றை) அநேக நட்சத்திரங்களிலும் நவக்கிரகங்களிலும் நிரைத்து—ஈரேழ் புவனமும் வலஞ்செய் கொற்ற நேமியின் வருகொண்டல்-(அதனாற்) பதினாலுலகமுஞ்சுழலும் வெற்றியையுடைய கடலினின்றும் (நீரைப் பானித்து) நந்திமலையில் வரும் முகில்—இரவி வாள் நிரைத்து விதிர்ப்பபோல் மின்னி - அம்மலை வாட்படைகளை நிரைத்துச் சுழற்றுதல்போல மின்னி—வான்முகடு உற நெடும்பளிக்குத்தூண் நிரைப்பனபோல்—அண்ட முகட்டைப்பொருந்த நெடிய பளிக்குத் தூண்களை நிரைப்பனபோல—மால் நந்திவரையின்சூழலில் தாரைகொண்டது-பெரிய நந்திமலைச்சாரலில் மழைத்தாரையைப் பொழிந்தது. எ - று.

ஏ - அசை. நிரைத்தலாலே பதினுலுலகையும் வலஞ்செய்கொற்றம் என்க. நிரைத்தென்னுஞ் செய்தெனெச்சமிரண்டும் ஏதுப்பொருட்கண்ணும் நேமியின் என்பதன்கண் இன்னுருபு நீக்கப்பொருட்கண்ணும் வந்தன. நாள்நிரைத்து கோள் நிரைத்து என்பன ஏழாம்வேற்றுமைத்தொகை. வலஞ்செய்கொற்றம் - சுழலும் வெற்றி. "சுழலுமிசைவேண்டி" எனப் பிறருங் கூறுதல்காண்க. நவரத்தினங் களுங் கடலினுள்ளன என்பதை இந்நூலாசிரியர் "அறலின் முழுகினர் தருநவ மணிகளும்" எனப் பின் கூறுமாற்ருனுமுணர்க. திரைகளை என்னுஞ் செயப்படு பொருள் வருவித் துரைக்கப்பட்டது.

நிரைத்த என்னும் பெயரெச்சத் தகரங்கள் விகாரத்தாற் ருெக்கனவாகக் கொண்டு நாள்கள் நிரைக்கப்பட்டனவும் தாரகாகணமாம் புதிய மணிகளோடு நவவிதங்கொள் கோள்கள் நிரைக்கப்பட்டனவுமாகிய பதினுலுலகங்களையுஞ் சூழ்ந்த வெற்றியையுடைய விஷ்ணுவைப்போலக் கருநிறங்கொண்டு வரும் முகில் எனப் பொருள்கோடலு மொன்று. நிரைத்த என்னும் ஈறு தொக்க பெயரெச்ச ங்கள் உலகம் என்னும் பெயர்கொண்டன.

நாண்மீன்களைநிரைத்து, அநேகநட்சத்திரக் கூட்டங்களாகிய நவரத்தினங்க ளோடு நவக்கிரகங்களை நிரைத்துப் பதினு லுலகங்களையும் வலஞ் செய்விக்கும் வெற்றியையுடைய துருவசக்கரம் எனவும், துருவர் கயிற்றை நிரைத்தலால் அள வற்ற நட்சத்திரக் கூட்டமாகிய நவரத்தினங்களோடு ஒன்பது விதங்களையுடைய கிரகங்களும் நிரைக்கப்பட்டுப் பதினுலுலகையும் பிரதக்ஷிணஞ்செய்தற்கிடமாகிய வெற்றியையுடைய மேருமலையினின்றும் வருகின்ற முகில் எனவும் பொருள் கூறுவாருமுளர். அவர் அப்பொருள்களுக்கு வலஞ்செய்நேமி யென்றியைப்பர். ()

வம்பறுமலருஞ்செம்பொனுமணியுமருங்கெலாநெருங்குமக்குன்றி
னும்பருடெழப்பாரளவுநின்றேங்கியுள்ளுறத்துள்ளிவீழருவி
யம்புராசியைமான்மந்தரஞ்சுழற்றியமுதெழக்கடைந்தநாளதற்குத்[தே
தம்பமாமதியையதனுடன்பெயர்த்துச்சார்த்திவைத்தென்னலாந்தகைத்

(இ - ள்.) வம்பு அறு மலரும் செம்பொனும் மணியும் மருங்கு எலாம் நெருங்கும் அக்குன்றின்-நறுமணம் நீங்காத பூக்களும் மாற்றுயர்ந்த பொன்னும் இரத் தினமும் பக்கமெல்லாம் நெருங்கும் அந்தமலையினின்றும்—உள்ளுற - (கண் டோர்) மதிக்க—பாரளவு நின்று உம்பர் ஊடு எழ ஓங்கி - பூமியினெல்லையில் நின்று ஆகாயத்தில் எழ உயர்ந்து—துள்ளி வீழ் அருவி - துள்ளிவ் ழுகின்ற அரு வியானது—மால் அம்புராசியை மந்தரம் சுழற்றி அமுது எழக்கடைந்தநாள்— விட்டுணு பாற்கடலை மந்தரமலையாகிய மத்தைச்சுழற்றி அமுதம் எழும்படி கடை ந்தகாலத்தில்—அதற்குத்தம்பம் ஆம்மதியை-அம்மத்திற்குக் கடைதறியாக இருந்த சந்திரனை—அதனுடன் பெயர்த்துச் சார்த்திவைத்து என்னலாம் தகைத்து - (அக்கடலினின்றும்) அம்மலையோடொருங்கு பெயர்த்துச் சார்த்தி வைத்தது என்று சொல்லலாந் தகைமையுடையது. எ - று.

ஏ - அசை. துள்ளி உள்ளுற என மாற்றி, துள்ளிகள் இடத்திலேபொருந்த எனப் பொருள்கொள்ளினும் பொருந்தும். வைத்தது என்பது வைத்தெனக் குறைந்து நின்றது. குன்றின் என்பதன்கண் இன் உருபு நீக்கப்பொருளில் வந் தது. ஊடு என்பது ஏழனுருபின் பொருள்படவந்ததோர் இடைச்சொல். உள் முதனிலைத் தொழிற்பெயர். நந்திமலையினின்று வீழுமருவி மந்தரமாகிய மத்தைக் கொண்டு பாற்கடலைக் கடைந்தநாளில் அதற்குக் கடைதறியாயிருந்த சந்திரனை

அதனோடுபெயர்த்துச் சார்த்திவைத்ததுபோலும் என்பதுகருத்து. உள்ளூற என்பதற்கு, மலையி னுட்பக்கமெனப்பொருள் கூறல்பொருந்தாது. (கு)

வெண்ணெயேகமழும்பவளவாய்விமலன்மெய்யெனக்கருகிமெல்லியலார், கண்ணேயேயனையநெடுங்கடன்முகந்துககனமுந்திசைகளும் விழுங்கிப், பண்ணைசூழ்ந்திலகுந்திருமுனைப்பாடிப்பழையநாடனைத்தையுமொருதன், பெண்ணையேகொண்டுபோகமுய்த்திடுமாற்புயலெனும் பெயருடைப்பெரியோன்.

(இ - ள்.) புயல் எனும்பெயர் உடைப்பெரியோன் - முகிலெனும் பெயரையுடைய பெரியவன்—மெல்லியலார் கண்ணேயே அனைய நெடும் கடல்முகந்து - பெண்களுடைய கண்ணையொத்த நெடுமையாகிய கடல்நீரை மொண்டு—வெண்ணெயே கமழும் பவளவாய் விமலன் மெய்யெனக்கருகி - வெண்ணெயே மணக்கும் பவளம் போலும் வாயினையுடைய ஸ்ரீ கிருட்டிணருடைய திருமேனியைப் போலக் கறுத்து—ககனமும் திசைகளும் விழுங்கி - ஆகாயத்தையும் திக்குக்களையும் மூடி—பண்ணை சூழ்ந்து இலகும் பழைய திருமுனைப்பாடி நாடு அனைத்தையும் - வயல்கள் சூழ்ந்து விளங்கும் பழைய திருமுனைப்பாடி நாடுமுழுவதையும்—தன் ஒரு பெண்ணையே கொண்டு போகம் உய்த்திடும் - தன்னுடைய ஒருபெண்ணையேகொண்டு போகத்தை நுகர்விப்பான். எ - று.

கண்ணே ஏ - என்றதொழிந்த ஏகாரங்கள் தேற்றப் பொருளில்வந்தன. ஆல் அசை. முகந்து என்னுஞ் செய்தெனெச்சம் ஏதுப்பொருட்கண்வந்தது. மெல்லியலார் கண்ணே அனைய நெடுங்கடல் என்பது விபரீத உவமை. பெண்ணையேகொண்டு என்பது பெண்ணை யாற்றைக்கொண்டு எனவும் பெண்ணைக்கெண்டு எனவும் இருபொருள் போதரநின்றது. புயலெனும்பெயருடைய பெரியோன்போகம் உய்த்திடுமென்க. (சா)

தொடுத்தநாண்மலர்வேய்ந்தகிலளைந்துந்திச்சுழிவயினிலங்கமெய்த்தனங்க, ளெடுத்துமேல்வீசிமணிமருங்கலையவினங்கொள்வண்டொடுசிலம்பிரங்க, வடுத்தநீள்சுரதமகளிரிற்றடங்கணிறஞ்சிவப்புறக்கரையழிந்து, படுத்தபேரணைப்போர்புரிந்ததாலந்தப்பண்ணையங்கானல்சூழ்பெண்ணை.

(இ- ள்.) பண்ணை அம் கானல் சூழ் அந்தப்பெண்ணை - வயல்களையும் கானலையுஞ் சூழும் அந்தப்பெண்ணையானது—நீள் சுரதம் அடுத்த மகளிரில் - மிக்க புணர்ச்சியைப் பொருந்திய பெண்களைப்போல—தொடுத்த நாள்மலர்வேய்ந்து - சேர்க்கப்பட்ட புது மலர்களை அணிந்து—அகில் அளைந்து - அகில்களைப்பொருந்தி—உந்திச்சுழிவயின் இலங்க - ஆற்றுச்சுழி இடத்தில் விளங்க—மெய்த்தனங்கள் எடுத்து மேல் வீசி - மெய்ம்மையாகிய திரவியங்களை எடுத்து மேலே வீசி—மணி மருங்கு அலைய - (முத்து முதலிய) இரத்தினங்கள் பக்கத்தில் அலைய—இனம் கொள் வண்டொடு சிலம்பு இரங்க - கூட்டத்தையுடைய வண்டுகளோடு மலை ஒலிக்க—தடங்கள் சிவப்பு நிறம் உற - தடாகங்கள் செந்நிறம்பொருந்த—கரை அழிந்து - கரைகடந்து—படுத்த பேரணைப் போர் புரிந்தது - கட்டப்பட்ட பெரிய அணையோடுமோதியது. எ - று.

ஆல் அசை. சிலம்பிரங்கல் மலையிற் பிரதித்தொனியுண்டாதல். சுரதமகளிருக்கியைப் பொருள்கொள்ளுங்கால் தொடுத்த மலரைச்சூடி அகிற் புகையை அளைந்து கொப்பூட்சுழிவயிற்றில் விளங்க மெய்யிலுள்ள தனங்களை எடுத்துமேற்காட்டி இடை அசைய வளையுஞ்சிலம்பும் ஒலிக்கக்கண்சிவப்புற மனமழிந்து விரி

த்த சயனப் போரைப்புரிந்து எனக்கொள்க. அணைப்போர் இடக்கரடக்சல். பண்ணையங்கானல் என்பதில் அம் சாரியை. (எ)

அவ்வைபாடலுக்குநறுநெய்பால்பெருகியருந்தமிழறிவினாற்சிறந்து
பௌவநீராடைத்தரணிமான்மார்பிற்பயிலுமுத்தரியமும்போன்று
மொய்வரால்கெண்டைவாளைசேல்மலங்குமுதலியசனமெதிர்கொள்ளத்
தெய்வமாநதிநீர்பரக்குநாடந்தத்திருமுனைப்பாடிநன்னாடு.

(இ - ள்.) அந்த நல் திருமுனைப்பாடி நாடு - முற்கூறிய நல்ல திருமுனைப்பாடி நாடு—அவ்வைபாடலுக்கு நறுநெய் பால் பெருகி - அவ்வையுடைய பாடலுக்காக நல்ல நெய்யும்பாலும் பெருகி—அரும் தமிழ் அறிவினால் சிறந்து - அரிய தமிழையறியும் அறிவினாற் சிறப்புற்று—பௌவநீர் ஆடைத் தரணிமான் மார்பில் பயிலும் உத்தரியமும் போன்று - கடல்நீரை யாடையாகவுடைய பூமிதேவியின் மார்பிற் பொருந்தும் உத்தரியத்தையும் ஒத்து—மொய்வரால் கெண்டை வாளை சேல் மலங்குமுதலிய சனம் எதிர்கொள்ள-கூட்டமாகிய வரால்கெண்டை வாளை சேல் மலங்குமுதலிய (மீனமாகிய) சனங்கள் எதிர்கொள்ள—தெய்வமாநதி நீர் பரக்கும் நாடு - தெய்வத் தன்மையினையுடைய பெரிய பெண்ணை நதியின் நீர் பரக்கும் நாடாம். எ-று.

பெருகி சிறந்து போன்று பரக்கும் நாடெனமுடிக்க. உத்தரியமும் என்னும் உம்மை சிறப்பும்மையோ டெச்சவும்மையுமாய் நின்றது. "முத்தெறியும் பெண்ணை முதுநீர் தனைத்தவிர்ந்து, தத்திநறு நெய்பா றலைப்பெய்து - குத்திச், செருமலைதெய் வீகன் திருக்கோவ லூர்க்கு, வருமளவு நீயோடி வா" என்று அவ்வை தன்னைக் குறித்துப்பாடிய பாடலுக்காக அங்ஙனம் பெருகினமைபற்றி அருந்தமிழறிவினாற் சிறந்து எனவும், புது நீர்வருங்கால் மீன்கள் உவகையினால் அந்நீர்க்கெதிர்செல்லுதல்பற்றி மலங்கு முதலிய சனமெதிர்கொள்ள எனவுங் கூறினார்.

பாவருந்தமிழாற்பேர்பெறுபனுவற்பாவலர்பாதிநாளிரவின்
மூவருநெருக்கிமொழிவிளக்கேற்றிமுகுந்தனைத்தொழுதநன்னாடு
தேவருமறையுமின்னமுங்காணச்செஞ்சடைக்கடவுளைப்பாடி
யாவருமதித்தோர்மூவரிலிருவர்பிறந்தநாடிந்தநன்னாடு.

(இ - ள்.) இந்த நல் நாடு - இந்த நல்லநாடு—அரும் தமிழ்ப் பாவால் பேர்பெறு பனுவற் பாவலர் மூவரும் - அரிய தமிழ்ப்பாக்களைப் பாடுதலினாற் பெயர்படைத்த நூல்களையறிந்த (பொய்கையாழ்வார் முதலிய) புலவர் மூவரும்—பாதி நாள் இரவில் நெருக்கி - நடுயாமத்தில் ஒருவரையொருவர் நெருக்கி—மொழிவிளக்கு ஏற்றி - (இந்நெருக்க முண்டாதற்குக்காரணம் என்னையென்று) பிரபந்தமாகிய விளக்கை ஏற்றி—முகுந்தனைத் தொழுத நல்நாடு - (தங்களைநெருக்கிய) விட்டுணுவைத் (தரிசித்து) வணங்கிய நல்ல நாடாம் (அதுமாட்டோ)—தேவரும்மறையும் இன்னமும் காணச் செஞ்சடைக் கடவுளைப்பாடி- தேவர்களும் வேதங்களும் இன்னமும் அறியாத சிவந்த சடையையுடைய சிவபெருமானைப்பாடி—யாவரும் மதித்தோர் மூவரில் - யாவராலும் மதிக்கப்பட்ட திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் திருநாவுக்கரசு நாயனார் சுந்தரமூர்த்தி நாயனார் என்னும் மூவரில்—இருவர் பிறந்த நாடு-திருநாவுக்கரசு நாயனார் சுந்தரமூர்த்தி நாயனார் என்னும் இருவரும் திருவவதாரஞ் செய்த நாடுமாம். எ - று.

நாடும் என்னும் எச்சவும்மை வருவித்துரைக்கப்பட்டது. பா, மொழி என்பன ஆகுபெயர்கள். பாடி என்னும் செய்தெனெச்சம் ஏதுப்பொருட்டாய் நின்

றது. மதித்தோர் வினைமுற்றுப் பெயரெச்சமாயிற்று. திருநாவுக்கரசு நாயனாரும் சுந்தரமூர்த்தி நாயனாரும் திருவவதாரஞ் செய்தநாடு திருமுனைப்பாடிநாடு என்பதனை "அறந்தரு நாவுக்கரசு மாலால சுந்தரரும் - பிறந்தருள வுளதானால் நம்மளவோ பேருலகிற் - சிறந்ததிரு முனைப்பாடித் திறம்பாடுஞ் சீர்ப்பாடு" எனச் சேக்கிழார் சுவாமிகள் அருளிச்செய்தவாற்றானு முணர்க. தமிழ் வரும்பாவால் எனக் கொண்டு தமிழில் வரும் பாக்களைப் பாடுதலால் எனப்பொருள்கூறினும் பொருந்தும். (கூ)

வே று.

அந்தத்திருநாட்டந்நதியமுதம்பெருகியிருகரையுஞ்
சந்தத்துடன்காரகில்கமழத்தடங்காவகஞ்சூழ்தடநிறைப்பக்
கந்தக்குவளைமேய்பகட்டின்காலானெரிந்துகதிர்முத்தஞ்
சிந்தச்சிந்தக்கொழுமுனைக்குமுன்னேருழுவசெய்ச்சங்கம்.

(இ - ள்.) அந்தத்திருநாட்டு - அந்த அழகிய (திருமுனைப்பாடி) நாட்டில்—அந்த நதி அமுதம் பெருகி - அப்பெண்ணைநதியின் நீர்பெருகி—இருகரையும் சந்தத்துடன் கார் அகில் கமழ - இரண்டுகரையும் சந்தனத்தோடு கரிய அகில்மணங் கமழும்படி—தடம் கா அகம் சூழ் தடம் நிறைப்ப - பெரியசோலைகள் புடையிற் சூழ்ந்த தடாகங்களை நிறைக்க—செய்ச்சங்கம் - வயல்களிலுள்ள சங்குகள்—கந்தக் குவளை மேய் பகட்டின் காலால் நெரிந்து - வாசனையையுடைய குவளைகளை மேய்கின்ற எருமைக் கடாக்களின் கால்களால்நெரிந்து—கதிர் முத்தஞ் சிந்தச் சிந்த - ஒளியையுடைய முத்துக்கள் சொரியச்சொரிய—கொழுமுனைக்குமுன் நேர் உழுவ - கொழுமுனைக்கு முன்னரே நேராயுழுவன. எ - று.

கமழ என்னுஞ் செயவெனெச்சம் காரியப்பொருட்டு. சிந்தச்சிந்த என்னும் அடுக்கு ஒருதொழில் பலகாலனிகழ்தல்பற்றி வந்தது. ஏர் உழுவ என்று பிரித்து ஏரா யுழுவன எனப் பொருள்கொள்ளினும், அந்தத்திரு நாடென்பதற்கு அந்த மகான்கள் பிறத்தலால் அருட்செல்வம் நிறைந்தநாடெனப்பொருள்கொள்ளினும் இழுக்காது. (௧0)

கொழுநீர்மதுவுண்கடைசியர்தங்குழைதோய்விழியினெழுநிழலைக்
கழுநீர்மலரென்றொருபகலுங்காலான்மயக்கிக்களைதுவைப்பார்
முழுநீரூடுதமதுநிழன்முழுதுங்கண்டுதொழுதிறைஞ்சிச்
செழுநீரரமங்கையரென்றுதிகைப்பார்நகைப்பார்செறுவெல்லாம்.

(இ - ள்.) செறு எல்லாம் - வயல்கடோறும்—மது உண் கடைசியர்-கள்ளையுண்ட மள்ளப்பெண்கள்—கொழுநீர் எழு தம் குழை தோய் விழியின் நிழலை - உழவுசாலிலுள்ள (அற்ப) நீரில் தோன்றுகின்ற தங்களுடைய காதளவோடுங் கண்ணினது நிழலை—கழுநீர்மலர் என்று - செங்கழுநீர்மலர் என்று (எண்ணி)—ஒருபகலும் காலால் மயக்கிக் களைதுவைப்பார் - ஒரு நாண்முழுதுங் காலினாலே சேர்த்து அக்களைகளைத் துவைத்துவிடுவார்கள்—முழுநீர் ஊடு தமது நிழல் முழுதுங்கண்டு - முழுச்சலத்தினுள்ளே தங்கள் நிழல் முழுவதையும்பார்த்து—செழு நீரரமங்கையர் என்று தொழுது இறைஞ்சி - செழுமையாகிய நீரரமகளிரென்று எண்ணி அஞ்சலி செய்து வணங்கி—திகைப்பார் நகைப்பார் - திகைப்பார்கள் சிரிப்பார்கள். எ - று.

கொழு - ஆகுபெயர். செழுமை-நீருக்கடை. மதுவுண்டு தங்கள் கண்சிவந்திருத்தல்பற்றிக் கழுநீர்மலரெனக் கருதினார். முழுநீரெனப் பின் விதந்தமையினாற் கொழுநீர் என்பதற்கு உழவுசாலிலுள்ள சின்னீரெனப் பொருளுரைக்கப்பட்டது. கொழுநீர் என்பதை மதுவுக்கடையாக்கிச் செழித்த நீர்மையையுடைய மதுவெனப் பொருள்கொள்ளுதல் பொருந்தாது. (௧௧)

கரும்புங்கமுகுந் தலைதெரியாக்கழனிச்செந்நெற்களையாகி
யரும்புங்குவளை நறுமலர்த்தேனாறுயெங்குஞ்சேறாக
விரும்புஞ்சுருதியிசைகேட்டுவேலைக்கழிக்கானலங்கைதை
சுரும்புந்தும்பிகளுமருந்தமாறாதென்றுஞ்சோறிடுமால்.

(இ-ள்.) கரும்பும் கமுகும் தலைதெரியா - கரும்புகளுங் கமுகுகளும் வேற்றுமைதெரியாத—கழனிச் செந்நெற்களையாகி அரும்பும் - வயல்களிலுள்ள செந்நெற்களின் களைகளாயுண்டாகின்ற — நறும் குவளைமலர்த் தேன் - நறுமணம் பொருந்திய குவளைப்பூவிலுள்ள தேனானது—எங்கும் ஆறாய் - எவ்விடங்களிலும் ஆறாக—சேறாக - (பின் அத்தேனாறு) சேறாகும்படி—வேலைக் கழிக்கானலங் கைதை - கடற்கரையிலுள்ள கழியையுடைய அளங்களில் நிற்கின்ற தாழைகள்—விரும்பும் சுருதி இசைகேட்டு - எவரும்விரும்புஞ் சுதியையுடைய இசையைக் கேட்டு—சுரும்பும் தும்பிகளும் அருந்த - (அவ்விசையைப்பாடும்) சுரும்புகளும் தும்பிகளும் உண்ண—மாறாது என்றும் சோறு இடும்-தவறாமல் எப்பொழுதும் சோற்றைக்கொடுக்கும். எ - று.

ஆல் அசை. எங்கும் குவளைமலர்த்தேன் ஆறாக, பின் அவ்வாறு சேறாகும்படி சுரும்புந் தும்பிகளும் உண்ணத் தாழைகள் சோற்றைக்கொடுக்கும் என்பது கருத்து. ஆறாய் என்னும் எச்சம் திரிக்கப்பட்டது. தெரியாத என்னும் பெயரெச்சத் தீறுதொக்கது. இசைகேட்டு உவந்து இசைபாடுவோர் வருத்தந்தீரச் சோற்றை இடும் எனவும் ஒருபொருடோன்றி நின்றது. சுரும்பு தும்பி என்பன வண்டுகளின்பேதம். (கஉ)

வேறு.

கம்பலைக்கழனிச்சேனைக்காவலர்கரங்கணீக்கிப்
பைம்புலத்துழுநர்தங்கள்பலவகைவிளைவுமீட்டி
யைம்புலத்தவர்க்குமீந்தாங்கறத்தினைவளர்த்தலாலே
செம்புலக்கிழத்திக்காவியன்னதச்செல்வநாடே.

(இ-ள்.) பைம்புலத்து உழுநர்-பசியபுலங்களை உழுபவர்—கம்பலைக்கழனி—(பலவகைப்பட்ட) ஒலிகளையுடைய வயல்களில் — தங்கள் பலவகைவிளைவும் ஈட்டி - தங்களுடைய பலவகைப்பட்ட விளைவுகளையுந் தொகுத்து—சேனைக்காவலர் கரங்கள் நீக்கி - சேனைகளையுடைய அரசர்க்குரிய இறைப்பொருளைக்கழித்து—ஐம்புலத்தவர்க்கும் ஈந்து - ஐந்திடத்தார்களுக்குங் கொடுத்து—ஆங்கு அறத்தினை வளர்த்தலால் - அங்கே தருமத்தைவளர்த்தலால்—அச்செல்வ நாடு - அந்தச்செல்வத்தையுடைய திருமுனைப்பாடி நாடு—செம்புலக்கிழத்திக்கு ஆவி அன்னது - செம்மையாகிய நிலமகளுக்கு உயிரை ஒத்திருந்தது. எ - று.

ஏகாரமிரண்டும் அசை. நாடே என்பதில் ஏகாரத்தைத்தேற்ற மாக்கினுமமையும். கழனிச்சேனை என்பது "மாயிருமருப்பிற்பரல்" என்பதுபோலத் தழாத்தொடராகிய வேற்றுமைச்சந்தி. ஐம்புலத்தவர் - தென்புலத்தார், தெய்வம், விருந்து, சுற்றம், தான் என்பவராம். (கங)

வேறு.

எண்ணுமாகடலேழுமன்றிருகடலாகப்
பெண்ணைமாநதிநறுநெய்பால்பெருகுமப்பழனப்
பண்ணைநீள்வளம்பல்குசீர்ப்பழையநன்னாட்டில்
வண்ணநான்கினுமுயர்ந்துளோனொருமுனிவந்தான்.

(இ - ள்.) எண்ணும் மாகடல் ஏழும் - எண்ணப்படும் பெரிய கடலேழும்—அன்று நறு நெய்பால் இருகடல் ஆக - அக்காலத்தில் நல்ல நெய்பாலாகிய இரண்டுகடல்களாக—பெண்ணை மாநதி பெருகும்-பெண்ணையாகிய பெரியநதிபெருகிய—அப்பழனப் பண்ணைநீள் வளம் பல்கு - அந்த வயல்களையுடைய மருதநிலத்தின் மிக்க வளம்நிறைந்த—சீர்ப்பழைய நல் நாட்டில் - சிறப்பையுடைய பழைய நல்ல (திருமுனைப்பாடி) நாட்டில் — வண்ணநான்கினும் உயர்ந்துளோன் ஒரு முனி வந்தான் - நான்குவருணத்துள்ளும் முதல் வருணத்தினனாய் ஒருமுனிவன் அவதரித்தான்.

பெருகும் நாடெனக்கூட்டுக. பெருகும் பழனமெனினுமமையும். உயர்ந்துளோன் வினையெச்சமுற்று. (௧௪)

ஐந்துபாவுடைநால்வகைக்கவிக்கதிபதியாய்
வந்துவட்டமாமணியினன்மணிமுடிபுனைந்து
பைந்துழாய்முடிப்பரமனைப்பலகவித்துறையுஞ்
சிந்தையான்மொழிந்தன்பர்தந்திருவுளம்பெற்றோன்.

(இ - ள்.) ஐந்து பா உடை நால்வகைக் கவிக்கு அதிபதியாய் வந்து - ஐந்து பாக்களையுடைய நால்வகைக் கவிகளுக்குத் தலைவனாய்க் கற்றுணர்ந்து—வட்டமாமணியில் நல் மணிமுடி புனைந்து-வட்டமாகிய பெருமைபொருந்திய துளசிமணிகளால் நல்ல அழகிய முடியைச்சூடி—பைந்துழாய் முடிப் பரமனை - பசியதுழாய் மாலையையணிந்த முடியையுடைய விட்டுணுவுக்கு—பலகவித்துறையும் சிந்தையால் மொழிந்து - பலகவிவர்க்கங்களையும் மன அன்பினாலேபாடி—அன்பர்தம் திருவுளம் பெற்றோன் - அன்பர்களுடைய திருவுள்ளத்தின் மதிப்பைப் பெற்றவன். எ - று.

வட்டமாமணி என்பதற்கு வட்டமாகிய பெரிய தாமரைமணியெனப் பொருள்கொள்ளுதலுமொன்று. பா ஐந்து: வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா, மருட்பா என்பன. கவி நான்கு: ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம் என்பன. பரமனை என்பதில் ஐயுருபு குவ்வுருபாகத்திரித்துப் பொருளுரைக்கப்பட்டது. புலவர்களைக் கவிச்சக்கிரவர்த்திகளென வழங்குதற்கியைய வட்டமாகிய பெரிய இரத்தினத்தாலாய நல்ல அழகிய முடிபுனைந்தெனப் பொருள்கொள்வாருமுளர்; அது இங்கே பொருந்தாது. (௧௫)

தென்னர்கேரளர்செம்பியரெனப்பெயர்சிறந்த
மன்னர்மூவரும்வழங்கியவரிசையாலுயர்ந்தோன்
முன்னரெண்ணியமுத்தமிழ்ப்பாவலரெவரும்
பின்னர்வந்தொருவடிவுகொண்டனரெனப்பிறந்தோன்.

(இ - ள்.) தென்னர் கேரளர் செம்பியர் எனப் பெயர் சிறந்த மன்னர் மூவரும் - பாண்டிய சேர சோழர் எனப் பெயர்சிறந்த அரசர் மூவரும்—வழங்கிய வரிசையால் உயர்ந்தோன்-கொடுத்தவரிசைகளால் உயர்ந்தவன்—முன்னர் எண்ணிய முத்தமிழ்ப் பாவலர் எவரும் - முற்காலத்தில் மதிக்கப்பட்ட முத்தமிழையுடைய புலவரெவரும்—பின்னர்வந்து ஒரு வடிவுகொண்டனர் எனப் பிறந்தோன் - பிற்காலத்தில்வந்து ஒருருக்கொண்டார்களென்று சொல்லும்படி பிறந்தவன். எ - று.

முச்சங்கப்புலவரென்பது போதர முன்னரெண்ணிய என்றார். சேரசோழ பாண்டியரெனக் கூறுதலே முறையாயினுஞ் செய்யுணோக்கிப் பிறழவைத்தார். முத்தமிழாவன: இயல், இசை, நாடகம் என்பன. (கசு)

தாரகாயணவண்டலைதண்டலைச்சனியூர்
வீரராகவனருள்பெறுவில்லிபுத்தூர
னூரராமுடிமண்மிசையுயர்புகழ்நிறுத்தித்
தீரகாகளம்பெறுதலின்யாரினுஞ்சிறந்தோன்.

(இ - ள்.) தார காயண வண்டு அலை தண்டலைச் சனியூர்-உச்சவிசையைப் பாடுகின்ற வண்டுகளுலாவுஞ் சோலையையுடைய சனியூரிலிருக்கின்ற—வீரராகவன் அருள்பெறு வில்லிபுத்தூரன் - வீரராகவனென்னுங் குருவினுடைய அருளைப்பெற்ற வில்லிபுத்தூர னென்பவன்—ஊர் அரா முடி மண்மிசை உயர்புகழ் நிறுத்தி - ஊருகின்ற சேடனுடைய முடியிற்பொருந்திய நிலவுலகத்தில் உயர்ந்த புகழை நிறுத்தி—தீர காகளம் பெறுதலின் - வெற்றிச் சின்னத்தைப்பெறுதலினால்—யாரினும் சிறந்தோன் - எவரினுஞ் சிறந்தவன். எ - று.

தாரம் உச்சவிசை. காயநம் பாடுவது. இறுதியல்லாதவிடத்தில் ரவ்வின் பின்வரும் ந, ணவ்வாமென்பது வியாகரணவிதியாகலான், தாரகாயநம் என்னுந் தொடர்மொழி தாரகாயணமென்றாயிற்று. ஊரரா சாதியடை. நிறுத்தி என்னும் எச்சம் ஏதுப்பொருட்கண்வந்தது. தீரகாகளம் வடநூன்முடிபு. (கஎ)

வேறு.

எங்குமிவனிசைபரப்பிவருநாளில்யாமுரைத்தவிந்தநாட்டிற் [றி
கொங்கர்குலவரபதியாட்கொண்டானென்றொருவண்மைக்குரிசிறோன்
வெங்கலியின்மூழ்காமற்கருநடப்பேர்வெள்ளத்துவிழாமனான்காஞ்
சங்கமெனமுச்சங்கத்தண்டமிழ்நூல்கலங்காமற்றலைகண்டானே.

(இ - ள்.) இவன் எங்கும் இசை பரப்பி வருநாளில்-இவ்வியல்புகளை யுடைய வில்லிபுத்தூரன் உலகமெங்கும் புகழைப் பரப்பிவருகின்ற நாட்களில்—யாம் உரைத்த இந்த நாட்டில் - நாம்சொன்ன இந்தத் திருமுனைப்பாடி நாட்டில்—கொங்கர்குல வரபதி - கொங்கர்குலத்தில் வரத்தினாற்றலைவனாகிய—ஆட்கொண்டான் என்று வண்மை ஒரு குருசில்தோன்றி - ஆட்கொண்டானென்னும் நாமத்தைக்கொண்டு கொடையையுடைய ஒரு பெருமையிற் சிறந்தவன் பிறந்து—வெம் கலியில் மூழ்காமல் - (தன்றேயத்துள்ளார்) கொடிய வறுமைக்கடலுள் அமிழ்ந்தாமலும்—கருநடப்பேர் வெள்ளத்து விழாமல் - கருநாடகம் என்னும் பெயரையுடைய பெருக்கில் அமிழ்ந்தாமலும் - நான்காம் சங்கம் என - நான் காஞ் சங்கமென்று சொல்ல—முச்சங்கத்தண் தமிழ்நூல் - (முத லிடை கடை என்னும்) முச்சங்கங்களினுமுள்ள குளிர்ந்த தமிழ்நூல்களை—கலங்காமல் தலை கண்டான் - ஐயந்திரிபறக்கற்று முடிவுகண்டான். எ-று.

ஏகாரம் அசை. கருநாடகம் அறியாமை; அது கருநடம் என்றாயிற்று. ஒரு வண்மைக்குரிசில்தோன்றி, தன்றேயத்துள்ளார் கலியின் மூழ்காமலும் கருநட வெள்ளத்து வீழாமலும் முச்சங்கநூலை நான்காஞ்சங்கமென்று கூறுமாறு கற்று முடிவுகண்டான் என்பது கருத்து. வரபதி யென்பது - சீயகங்கன் என்பதுபோல ஆட்கொண்டானை விசேடித்தது. பேர் கருநடம் வெங்கலியின் மூழ்காமல் வெள்ளத்து விழாமல் நான்காஞ்சங்கமெனக் கொண்டுகூட்டிப், பெரிய கருநடதேயம்

கொடியவறுமையிலே மூழ்காதபடி சமுத்திரத்தி லமிழ்ந்தாமலிருக்கும் நான்காஞ் சங்கமென்று சொல்லக் கரைகண்டான் எனப்பொருள் கூறுவாருமுளர். அவர், மதுரைச்சங்கங்கடல் கொள்ளப்பட்டமைபற்றி வெள்ளத்துவிழாமல், நான்காஞ் சங்கம் என்றார் எனவிதப்புக்கூறிக், கருநடம் வெங்கலியின் மூழ்காமற்கரைகண்டான் எனக்கூட்டிமுடிப்பர். (கஅ)

மற்றவனிப்புவியாளும்வளவனுக்குமுடிகவித்துவழுதித்தெவ்வைச், செற்றவனுக்கவனியெல்லாஞ்செங்கோன்மைநிலையிட்டுச்செல்வமெல்லாங், கற்றவருக்கிருகையுடைக்கற்பகம்போலினிதளித்துக்கமலமாதுங், கொற்றவையுமனங்களிப்பத்தன்னாமமேருவினுங்கோட்டினானே.

(இ - ள்.) மற்றவன் - அவ்வாட்கொண்டான்—வழுதித் தெவ்வைச்செற்று-பாண்டியனாகிய பகைவனைக்கொன்று—இப்புவி ஆளும் வளவனுக்குமுடிகவித்து-இப்பூமியையாளுஞ் சோழனுக்கு முடியைச்சூட்டி—அவனுக்கு அவனி எல்லாம் செங்கோன்மை நிலையிட்டு-அச்சோழனுக்கு நிலவுலகமெல்லாஞ் செங்கோன்மை நிலைபெறச்செய்து—கற்றவருக்குச் செல்வம் எல்லாம் இருகை உடைக் கற்பகம் போல் இனிது அளித்து-படித்தவர்களுக்குச் செல்வமெல்லாவற்றையும் இரண்டு கைகளையுடைய கற்பகம்போல மகிழ்ச்சியோடு கொடுத்து—கமலமாதும் கொற்றவையும் மனம் களிப்ப - தாமரைமலரி லிருக்கின்ற இலக்குமியும் வீரலக்குமியும் மனமகிழ—தன்நாமம் மேருவினும் கோட்டினான் - தன்பெயரை மேருமலையினுந் தீட்டினான். எ - று.

மற்று ஏ அசைகள். வழுதித்தெவ்வைச்செற்று வளவனுக்கு முடிகவித்துச் செங்கோன்மை நிலையிட்டமையாற் கொற்றவையும், கற்றவர்க்குக் கற்பகம்போலினி தளித்தமையாற் கமலமாதும் மனங்களிப்ப மேருவிலே தன்னாமத்தைத் தீட்டினான் என்க. மேருவினும் என்னும் உம்மை எச்சவும்மையோடு சிறப்பும்மையுமாயிற்று. களிப்ப என்னும் எச்சம் காரியப்பொருட்டு. தெவ் - ஆகுபெயர். இருகையுடைக்கற்பகம் இல்பொருளுவமை. (கக)

தென்னாட்டில்வடநாட்டிற்குடநாட்டிற்குணநாட்டிற்றெவ்வரோடக்
கன்னாட்டியமர்பொருதுகங்கைநீரூட்டுவித்துக்கண்டன்வேங்கை
யென்னாட்டுமெழுதியவன்றிருமரபோர்பெற்றபுகழ்யாவர்பெற்றா
ரன்னாட்டுக்கொற்றமெல்லாமக்குரிசில்புகழொடவதரித்ததன்றே.

(இ - ள்.) தென் நாட்டில் வட நாட்டில் குட நாட்டில் குண நாட்டில் தெவ்வர் ஓட அமர்பொருது - தென்னாட்டிலும் வடநாட்டிலும் மேல் நாட்டிலும் கீழ் நாட்டிலுமுள்ள பகைவர்கள் ஓடுமாறு யுத்தஞ்செய்து—கல் நாட்டி - (ஓடாதெதிர்த்து நின்றிறந்தோரை) நடுகல்லில் நிற்கும்படிசெய்து—கங்கைநீர் ஊட்டுவித்து - (அக்கல்லிற்கு) கங்கைநீராலாட்டுவித்து—கண்டன்வேங்கை எந்நாட்டும் எழுதி-(தன்னெசமானனாகிய) கண்டனென்னுஞ் சோழனுடையபுலிக் கொடியை எத்தேசத்திலும் எழுத—அவன் திருமரபோர் பெற்ற புகழ் யாவர் பெற்றார் - (அதனால்) அவனுடைய அழகிய வம்மிசத்திலுள்ளோர் பெற்ற புகழை எவர்பெற்றவர்—அந் நாட்டுக் கொற்றம் எல்லாம் - (ஆதலால்) அத்தேசத்திலுள்ள வெற்றியெல்லாம்—அக்குரிசில் புகழொடு அவதரித்தது - அந்தப் பெருமையில் சிறந்தோனுடைய புகழோடு தோன்றியது. எ - று.

அன்று, ஏ அசைகள். எழுதி என்னுஞ் செய்தெனெச்சம் செயவெனெச் சமாய்த்திரிக்கப்பட்டு ஏதுப்பொருளாய்நின்றது. எழுதியவன் என்பதற்கு எழுதிய அவன் எனப் பொருள்கொள்ளினும்பொருந்தும். இப்பொருட்கு எழுதிய என்னும் பெயரெச்சத்தீறுதொக்கதாகக்கொள்க. எழுதியவன் என்பதை வினையாலணையும் பெயராக்கினுமமையும். போரிற் புறமிடாது நின்றிறந்தோரை நடுகல்லில் நாட்டுதலும் நாட்டுதற்கு முன் அக்கல்லை நீர்படுத்துத் தூய்மைசெய்தலும் பின்னர்ப்பெயரும் பீடும் எழுதி நாட்டியவழி அக்கல்லிற்கு நீராட்டலும் புறப்பொருணூற்றுணிபாகலிற் கன்னாட்டி அமர்பொருது கங்கைநீரூட்டுவித்து என்றார். இதனை "என்னைமுன் னில்லன்மின் றெவ்விர்பலரென்னை - முன்னின்று கன்னின் றவர்" எனுந் திருக்குறண்முதலியவற்றானுமுணர்க. கண்டன்வேங்கை என்பதற்குத் தன் யசமானனுடைய வேங்கையெனப் பொருள்கொள்வாருமுளர். ஈண்டு ஊட்டுதல் ஆட்டுதல் என்னும்பொருட்டு. (உ0)

ஆற்றியமெய்ச்செல்வத்தாலளகையைவென்றிருங்கவினாலமரரூரை மாற்றியபொற் றடமதில்சூழ் வக்கபாகையினறத்தின் வடிவம்போலத், தோற்றியவக்கொங்கர்பிரான்சூழ்தமிழானாட்கொண்டான்சுற்றத்தோடு போற்றியவிப்புவிமுழுதுந் தன்றிருப்பேர்மொழிகொண் டேபுரந்தானம்மா.

(இ-ள்.) ஆற்றிய மெய்ச் செல்வத்தால் - சம்பாதித்த மெய்ம்மையாகிய செல்வத்தினால் —அளகையைவென்று - (குபேரனுடைய) அளகை நகரைவென்று— இரும் கவினால் அமரர் ஊரை மாற்றிய - பெருமையாகிய அழகினாலே தேவருலகத்தைவென்ற—பொன் தடமதில் சூழ் வக்கபாகையின் - பொன்னாற்செய்த விசாலித்த மதில் சூழ்ந்த வக்கபாகையென்னும் நகரில்—அறத்தின் வடிவம்போலத் தோற்றிய - தருமத்தினுருவம்போலத்தோன்றிய—அக்கொங்கர்பிரான் - அந்தக் கொங்கர்குலாதிபனும்—சூழ்தமிழான் - ஆராய்ந்த தமிழை யுடையவனுமாகிய— ஆட்கொண்டான் - ஆட்கொண்டானென்பவன்—சுற்றத்தோடு போற்றிய இப்புவிமுழுதும் - சுற்றத்தோடு (தன்னைத்) துதித்த இந்நிலவுலகமுழுவதையும்—தன் திருப்பேர் மொழிகொண்டே புரந்தான் - தன்னுடைய (ஆட்கொண்டான் என்னும்) அழகிய பெயராகிய சொல்லைக்கொண்டே காத்தான். எ - று.

ஏகாரம் தேற்றம். அம்மா அசை. தோற்றிய என்பது ஈண்டுத் தன்வினையாய்நின்றது, "நட்பாடறேற்றாதவர்" என்பதுபோல. தன்னைத்துதித்த உலகத்தைத்தன் சுற்றத்தோடு காத்தான் என்பதும் ஒருபொருள். ஆட்கொண்டான் அடிமை கொண்டவன். தருமநெறியாற் சம்பாதித்த செல்வம் என்பதுபோதர மெய்ச்செல்வம் எனவும், உலகமனைத்தையுந்தன்கீழ்ப்படுத்தி ஆண்டான் என்பது போதரத் தன்றிருப்பேர்மொழிகொண்டே புரந்தான் எனவுங் கூறினார். (உக)

பிறந்துய்யக்கொண்டவனிப்பேருலகம்பெருவாழ்வுகூருநாளி, னிறைந்தபுகழ்ச்சனிநகர்வாழ்வில்லிபுத்தூரனைநோக்கிநீயுநானும், பிறந்திசைக்கிசைநிற்பப்பாரதமாம்பெருங்கதையைப்பெரியோர்தங்கள், சிறந்தசெவிக்கமுதமெனத் தமிழ்மொழியின் விருத்தத்தாற் செய்கவென்றான்.

(இ - ள்.) பிறந்து உய்யக்கொண்டவன் - (உலகில்) அவதரித்து எவரையும் ஈடேறச்செய்த அவ்வாட்கொண்டான்—இப்பேர் உலகம் பெருவாழ்வு கூரும் நாளில் - இந்தப் பெரிய உலகம் (தன்னாற்) பெருமையாகிய வாழ்வு மிகுன்ற காலத்

தில்—நிறைந்த புகழ்ச் சனி நகர்வாழ் வில்லி புத்தூரனைநோக்கி - மிகுந்த கீர்த்தியையுடைய சனியூரில் வாழுகின்ற வில்லிபுத்தூரனைப் பார்த்து—நீயும் நானும் பிறந்ததிசைக்கு இசை நிற்ப - நீயும் நானும் பிறந்த ஊருக்குக் கீர்த்தி நிலைபெற - பாரதம் ஆம் பெரும் கதையை - பாரதமென்கிற பெரிய சரித்திரத்தை—பெரியோர் தங்கள் சிறந்த செவிக்கு அமுதம் என - பெரியோர்கள் தங்களுடைய சிறந்த செவிகளுக்கு அமிர்தமென்றுசொல்ல—தமிழ்மொழியின் விருத்தத்தால் செய்க என்றான் - தமிழ்ப்பாஷையிற் (பெரும்பான்மையும்) விருத்தப்பாவாற் பாடுக என்றான். எ - று.

உய்யக்கொண்டவன் நோக்கிச்செய்க என்றான் எனமுடிக்க. பெரியோர்செவி என்று முயிர்க்குறுதி பயப்பனவற்றை அன்றி ஏனையவற்றை மறந்துங் கேளாத்தகையவென்பார் சிறந்தசெவி என்றார். சிறுபான்மை பிறபாவினங்களும் விரவிவருதல்பற்றிப் பெரும்பான்மை என்றாம். (உஉ)

இருக்காதிமறைமொழிந்தோனியம்பியவிப் பெருங்கதையையாருங்கேட்பச்,சுருக்காகப்புராணமுறைசொல்லுகவென்றலினவனுஞ்சொல்லலுற்றான், பெருக்காளர்முதலாயபெருங்குலத்தோரிக்கதையின்பெற்றிகேட்டார், செருக்காகவவன்மைந்தன்வரந்தருவானிப்பதிகஞ்செப்பினானே.

(இ - ள்.) மறை இருக்காதிமொழிந்தோன் - வேதத்தை இருக்குமுதல் நான்காகப்பகுத்த வியாசமுனிவர்—இயம்பிய இப்பெரும் கதையை - சொன்ன இந்தப் பெரியசரித்திரத்தை—யாரும் கேட்ப - எவருங் கேட்கும்படி—சுருக்கு ஆகப் புராணமுறை சொல்லுக என்றலின் - சுருக்கமாகப் பழைய முறைப்படி பாடுக என்று (ஆட்கொண்டான்) சொன்னமையினால்—அவனும் சொல்லலுற்றான்-அவ்வில்லிபுத்தூரனும் பாடுவானாயினான்—செருக்கு ஆக இக் கதையின் பெற்றிகேட்டார் - மகிழ்ச்சியுண்டாக இந்தச்சரித்திரத்தின் மகிமையைக்கேட்டவர்கள்—முதல் ஆயபெரும் குலத்தோர் பெருக்காளர் - முதன்மைபொருந்திய பெரியவம்மிசத்திலுள்ளோராகிய (கல்விசெல்வங்களாற்) பெருக்கத்தையுடையோர்களாம்—இப்பதிகம் செப்பினான் அவன்மைந்தன் வரந்தருவான் - இப்பாயிரத்தைப்பாடினவன் அவ்வில்லி புத்தூரனுடைய புதல்வனாகிய வரந்தருவான் என்பவன். எ - று.

ஏகாரம் அசை. குலத்தோர் வினைமுற்றுப்பெயரெச்சமாயிற்று. பெருக்கம், பெருக்கென்றாயதுபோற் சுருக்கம், சுருக்கென்றாயிற்று. வேதங்கள் முற்காலத்தில் தைத்திரியமுதலிய பெயருடையனவாய் வரம்பின்றிவழங்கின; அவற்றை வியாசமுனிவர் சின்னாட்பல்பிணிச் சிற்றறிவினையுடையோர்க்காக இருக்குமுதலிய பெயரிட்டு வரம்புபட நான்காய்வகுத்தமைபற்றி இருக்காதிமறைமொழிந்தோன் எனவும், முதனூலாகிய வியாசபாரதத்தோடு முரணாது கூறுக என்றான் என்பார் புராணமுறைசொல்லுகவென்றலின் எனவுங் கூறினார். புராணமுறை என்பதற்குப் புராணவரிசைப்படி எனப் பொருள் கூறுதல்பொருந்தாது. (உங)

சிறப்புப்பாயிர முற்றிற்று.

---

## * தற்சிறப்புப்பாயிரம்

ஆக்குமாறயனாமுதலாக்கியவுலகங்
காக்குமாறுசெங்கண்ணிறைகருணையங்கடலாம்
வீக்குமாறரனாமவைவீந்தநாண்மீளப்
பூக்குமாமுதலெவனவன்பொன்னடிபோற்றி.

(இ - ள்.) உலகம் முதல் ஆக்குமாறு அயன் ஆம் - உலகங்களை முதலிற்படைத்தலாற் பிரமனாயிருக்கும்,—ஆக்கிய உலகம் காக்குமாறு செம் கண் நிறை கருணையங்கடல் ஆம் - (அப்படிப்) படைக்கப்பட்ட உலகங்களைக் காத்தலினாற் சிவந்த கண்களில் நிறைந்த கிருபைக்கடலாகிய விட்டுணுவாயிருக்கும்,—உலகம் வீக்குமாறு அரன் ஆம், உலகங்களைச் சங்கரித்தலால் உருத்திரனாயிருக்கும்,—அவை வீந்தநாள் மீளப்பூக்கும் மாமுதல் எவன் - அவ்வுலகங்கள் சங்கரிக்கப்பட்ட நாளிற் பின்பு அவற்றைத் தோற்றுவிக்கும் முழுமுதல்வன் எவனோ,—அவன் பொன் அடி போற்றி - அவனுடைய பொலிவாகிய பாதங்கள் (நம்மாற்) றுதிக்கப்படுவன: எ - று.

மாறு என்பன "அனையையாகன்மாறே"என்பதுபோல மூன்றனுருபின்பொருள்படவந்த இடைச்சொற்கள். அம் சாரியை. ஈற்றுயிர்மெய்கெட்டுநின்ற ஆம் என்னும் பெயரெச்சங்கள்மூன்றுந் தனித்தனி முதலென்னும் பெயர்கொண்டன. அவைவீந்தநாண்மீளப்பூக்கும் என்பது இடைப்பிறவரல். அது "பழமுதிர்சோலைமலைகிழவோன்" என்பதுபோல உடம்பொடுபுணர்த்தலாய் முதலென்பதை விசேடித்துநின்றது. நிறையென்னும் வினைத்தொகை கருணையென்னும் பெயர்கொண்டது. போற்றி என்பதனுள் இகரஞ் செயப்படுபொருள்விகுதி; ஊருணி என்பதனுட்போல. போற்றி என்பதனை வாழியவென்பது வாழியெனவந்தாற்போல வந்த வியங்கோண் முற்றெனக்கொண்டு காக்கவெனப் பொருள்கொள்ளினும் பொருந்தும். உலகம் என்பது இடைநிலைத்தீபகமாய்நின்றது. எல்லாப்பொருளும் ஒடுங்குமிடத்திலேயே உற்பத்தியாம் என்னும் அவினாபாவத்தால் உலகமுஞ் சங்காரகாரணனிடத்தே ஒடுங்குதலின் அவனிடத்தினின்றும் உற்பத்தியாம்; அவனையொழியத்தோற்றுவிப்பான்வேறொருவன் இலனென்பார் வீக்குமாறரனாமவைவீந்தநாண்மீளப் பூக்குமாமுதல் என்றும், உலகமே உருவமாக யோனிகளுறுப்பாம்,வடிவென்பார் பொன்னடி என்றுங் கூறினார். பொன்னடியென்பதற்குப் பொன்போற் போற்றிக்கொள்ளப்படும் அடியென்றலித்துணைச்சிறப்பின்றாம். படைத்தல் காத்தல் அழித்தலென்னும் முத்தொழிலுஞ்செய்வான் ஒருவனேயென்பது இச்செய்யுளின்கருத்து. (க)

ஏழ்பெருங்கடன்மாநிலமெங்குநல்லறமே
சூழ்கவண்டமிழோங்குகதேங்குகசுருதி
வீழ்கபைம்புயல்விளங்குகவளங்கெழுமநூல்
வாழ்கவன்புடையடியவர்மன்னுமாதவமே.

(இ - ள்.) ஏழ்பெரும் கடல் மாநிலம் எங்கும் நல் அறமே சூழ்க-ஏழுபெரிய கடல்சூழ்ந்த பெருமையாகிய நிலவுலகமெங்கும் நல்லதருமமே சூழக்கடவது—வண்

* தற்சிறப்புப்பாயிரம் என்பது தெய்வவணக்கத்தையுஞ் செயப்படுபொருளையும் விளங்க உணர்த்துவதாம்.

தமிழே ஓங்குக - அழகிய தமிழே விருத்தியாகக்கடவது,—சுருதியே தேங்குக - வேதங்களே (எங்கும்) நிரம்பக்கடவன,—பைம்புயலேவீழ்க - பசிய மழையே பெய்யக்கடவது,—வளம் கெழு மநுநூலே விளங்குக - வளம்பொருந்திய ஸ்மிருதிகளே விளங்கக்கடவன,—அன்பு உடை அடியவர் மன்னும் மாதவமே வாழ்க - அன்பினையுடைய அடியவர்கள்செய்கின்ற நிலைபெறும் பெரியதவமே வாழக்கடவது. எ - று.

அறமே என்பதின் ஏகாரம் தமிழ், சுருதி, புயல், மநுநூல் என்பனவற்றோடுங் கூட்டிப்பொருளுரைக்கப்பட்டது. மாநிலம் என்பதை இடைநிலைத்தீபமாகக்கொள்க. இச்செய்யுள் வாழ்த்தென்னும் அலங்காரம். (உ)

கன்னபாகமெய்களிப்பதோரளப்பிறொல்கதைமுன்
சொன்னபாவலன்றுகளறுசுகன்றிருத்தாதை
யன்னபாரதந்தன்னையோரறிவிலேனுரைப்ப
தென்னபாவமற்றென்னையின்றென்சொலாதுலகே.

(இ - ள்.) கன்ன பாகம் மெய் களிப்பது ஓர் அளப்பில் தொல்கதை - (கேட்ட) காதின்வழியால் உடம்பைக்களிப்பிக்கின்ற ஒப்பில்லாத அளவற்ற பழைய இந்தக் கதையை,—முன் சொன்ன பாவலன் - முன்னே சொன்ன புலவன்,—துகள் அறு சுகன் திருத்தாதை - குற்றமற்ற சுகப்பிரமரென்னும் முனிவருடைய அழகிய பிதாவாகிய வியாசமுனிவராம்,—அன்னபாரதந்தன்னை - அவ்வியல்பினையுடைய பாரதகதையை,—ஓர் அறிவிலேன் உரைப்பது என்ன பாவம் - அறிவு சிறிதுமில்லாத நான்சொலுதல் என்ன அபிப்பிராயம்,—என்னை இன்று உலகு என் சொலாது - என்னை இன்றைக்கு உலகம் என்ன சொல்லமாட்டாது. எ - று.

மற்று ஏ அசைகள். பாவம் அபிப்பிராயம். களிப்பது என்பது வினைமுற்றுப் பெயரெச்சமாய்ப் பிறவினைவிகுதி தொக்குநின்றது. இனிக் கேட்டகாதும் அதன் வழியால் உடம்புங்களித்தற் கேதுவாகிய கதை எனினும்பொருந்தும். இப்பொருட்குக் கன்னபாகம் காது. (ந)

மண்ணிலாரணநிகரெனவியாதனூர்வகுத்த
வெண்ணிலாநெடுங்காதையையானறிந்தியம்பல்
விண்ணிலாதவன்விளங்குநீடெல்லையையூமன்
கண்ணிலாதவன்கேட்டலுங்காண்டலுங்கடுக்கும்.

(இ - ள்.) மண்ணில் ஆரணம் நிகர் என வியாதனூர் வகுத்த - நிலவுலகத்தில் வேதத்தை ஒத்ததென்று சொல்லுபடி வியாசமுனிவர் அருளிச்செய்த,—எண் இலா நெடும் காதையை-அளவில்லாத பெரிய இந்தப்பாரதகதையை,—யான் அறிந்து இயம்பல் - நான் அறிந்துசொல்லுதல்,—விண்ணில் ஆதவன் விளங்கும் நீடு எல்லையை - ஆகாயத்திற் சூரியன்விளங்குகின்ற உயர்ச்சியினளவை,—ஊமன்கேட்டலும் - ஊமன்கேட்டலையும்,—கண் இலாதவன் காண்டலும் கடுக்கும் - குருடன் காண்டலையும் ஒக்கும். எ - று.

ஆதவன் விளங்குநீடெல்லையை ஊமன்கேட்டலும் கண்ணிலாதவன் காண்டலுமரிதாயவாறுபோல வியாதனூர்வகுத்த எண்ணிலாநெடுங்கதையை அறிந்தியம்பல் எனக் கரிதென்பது கருத்து. "இயற்பெயர்முன்ன ராரைக்கிளவி - பலர்க்கு ரிமருங்கின் வினையொடுமுடிமே" என்னுஞ் சூத்திரவிதிபற்றி வியாதனூர் என்றாயிற்று. ஊமன் கண்ணிலாதவன்கேட்டலும் காண்டலும் என்பதுமுறைநிரனிறை

முன்சொலாகியசொல்லெலாமுழுதுணர்முனிவன்
றன்சொலாகியமாப்பெருங்காப்பியந்தன்னைத்
தென்சொலாலுரைசெய்தலிற்செழுஞ்சுவையில்லாப்
புன்சொலாயினும்பொறுத்தருள்புரிவரேபுலவோர்.

(இ-ள்.) முன்சொல் ஆகிய சொல் எலாம் முழுது உணர் - புராணங்களாகிய நூல்களையெல்லாம் முற்ற அறிந்த—முனிவன்றன் சொல் ஆகிய மா பெரும் காப்பியந்தன்னை - வியாசமுனிவருடைய சொல்லாகிய மிகப் பெரிய (அந்தக்) காப்பியத்தை,—தென் சொலால் உரை செய்தலின் - (நான்) தமிழ்ப் பாஷையாற் காப்பியமாயியற்றுதலினால்,— செழும் சுவை இல்லாப் புன்சொல் ஆயினும்-(அது) செழுமையாகிய சுவையில்லாத வழூஉச் சொற்களுடைத்தாயினும்,—புலவோர் பொறுத்து அருள்புரிவர்-அறிஞர் (அப்பிழையைப்) பொறுத்து அருள்செய்வர். எ - று.

ஏகாரம் அசைநிலை. தேற்றமெனினு மமையும். புன்சொலாயினும் என்னும் உம்மை "மறப்பினும் ஒத்துக்கொளலாகும்" என்புழிப்போல எதிர்மறை. காவ்யம் என்பது "இணைந்தியல்காலை" என்னுஞ் சூத்திரத்திற் பிறவென்றமையாற் காப்பியம் என்றாயிற்று. பதினெண்புராணங்களையும் நைமிசாரணியமுனிவர்க்கு ஐயந்திரிபற வுணர்த்திய சூதமுனிவருக்கும் பரமாசாரியரென்பதுபோதர, வியாசரை முன்சொலாகிய சொல்லெலா முழுதுணர்முனிவன் என்றார். தென்சொலால் என்றவிதப்பால் வியாசமுனிவர் கூறியது வடசொல்லி னென்பது தாமே போதரும். என்சொல் புன்சொலாயினும் இக்கதை விசேஷம்பற்றிப் பொறுத் தங்கீகரிப்பர் என்பது கருத்து. முன்சொல் - புராணம். முன்சொல், சொல், உரை என்பன ஆகுபெயர்கள். காப்பியம் என்பதைத் தமிழ்நூலார் தொடர்நிலைச் செய்யுளென்ப. வழு என்றது திணை, பால், மரபு, இடம், காலம் முதலியன மயங்குதலை. ஈண்டுச் சுவையென்றது வழிமோனை அநுப்பிராச முதலியவற்றை. இந்நூல் பெருங்காப்பியத்திற்குரிய இலக்கணத்திற் சிலவுறுப்புக் குறைந்துள்ளதாயினும் இன்றியமையாத அறமுதலிய நான்கனுலுங் குறைவுபடாதிருத்தலால் "கூறியவுறுப்பிற் சிலகுறைந்தியலினும் வேறுபாடின்றென விளம்பினர் புலவர்" என்ற சூத்திர விதிப்படி பெருங்காப்பியமேயாம். முன்சொலாகிய சொல் என்பது சம்ஸ்கிருதமென்பாருமுளர். (ரு)

முன்னுமாமறைமுனிவருந்தேவரும்பிறரும்
பன்னுமாமொழிப்பாரதப்பெருமையும்பாரேன்
மன்னுமாதவன்சரிதமுமிடையிடைவழங்கு
மென்னுமாசையால்யானுமீதியம்புதற்கிசைந்தேன்.

(இ-ள்.) முன்னும் மாமறை முனிவரும் - எண்ணப்படும் பெரிய வேதங்களை அறிந்த முனிவர்களும்,—தேவரும்-தேவர்களும்,—பிறரும்-ஒழிந்தோரும்,—பன்னும் மாமொழிப் பாரதப் பெருமையும் பாரேன் - கற்கின்ற வடமொழியி

ுள்ள பாரதகதையின் பெருமையையும் நோக்கேன்,—மன்னும் மாதவன் சரிதமும் இடை இடை வழங்கும் என்னும் ஆசையால் - நிலைபெற்ற கிருட்டிணருடைய சரித்திரமும் இடை யிடையே வழங்கப்படும் என்னும் ஆசையினால்;— யானும் ஈது இயம்புதற்கு இசைந்தேன்-(பாடவலியில்லாத) யானும் இதைப்பாடுதற்கு உடன்பட்டேன், எ - று.

சதாசிவமூர்த்தியுடைய தற்புருடமுதலாகிய நான்கு முகங்களினும் நின்று நான்கு வேதங்களும் தோன்றிய விசேடம்பற்றி அவை எவராலும் மதிக்கப்படுமியல்புடையவென்பதுபோதர முன்னுமாமறை எனவும் எல்லாத்தேயத்திற்கும் விண்ணுலகத்திற்கும் பொதுவாதல்பற்றி வடமொழியை மாமொழி யெனவுங் கூறினர். பெருமையும் சரிதமும் என்னும் உம்மைகள் உயர்வுசிறப்பு. யானும் என்னும் உம்மை இழிவுசிறப்பு. வழங்குமென்பது கருமகருத்தா. மாதவன் சரிதமும் என்பதற்குச் சிவபெருமானுடைய சரித்திரமும் எனப் பொருள்கூறுதலுமொன்று.இப்பொருட்கு மாதவன் என்பதை மாது அவன் எனப்பிரிக்க. (சு)

தற்சிறப்புப்பாயிர முற்றிற்று.

---

முதலாவது

# ஆதிபருவம்.

## குருகுலச் சருக்கம்.

எங்கண்மாதவனிதயமாமலர்வருமுதயத்
திங்கண்மாமரபினிற்பிறந்திசையுடன்சிறந்தோ
ரங்கண்மாநிலத்தரசர்பல்கோடியவ்வரசர்
தங்கண்மாக்கதையானறியளவையிற்சமைக்கேன்.

(இ - ள்.) எங்கள் மாதவன் மா இதய மலர் வரும் - எங்கள் (தெய்வமாகிய) விட்டுணுவினுடைய பெருமைபொருந்திய இருதயகமலத்தில் அவதரித்த,—உதய மா திங்கள் மரபினில் பிறந்து - உதித்தலையுடைய பெரிய சந்திர வம்மிசத்தில் அவதரித்து,—இசையுடன் சிறந்தோர் - கீர்த்தியினுற் சிறப்புற்றோர்,—அம் கண் மாநிலத்துப் பல்கோடி அரசர் - அழகிய இடத்தையுடைய பெரிய நிலவுலகத் திலே பலகோடி அரசர் (உளர்),—அவ் அரசர்தங்கள் மா கதை - அந்த அரசர்க ளுடைய பெரிய சரித்திரத்தை,—யான் அறி அளவையில் சமைக்கேன் - நான் அறிந்த அளவிற் பாடுவேன். எ - று.

இனமுள்ளனவற்றிற்கே யன்றி இனமில்லாதனவற்றிற் கடைகொடுத்துக் கூறல் வழுவாயினும் "இனச்சுட்டில்லாப் பண்புகொள் பெயர்க்கொடைவழக்கா றல்ல செய்யுளாறே" என்னுஞ் சூத்திரவிதிபற்றிச் செய்யுட்கணமைகவென்ற லின் உதயத்திங்களெனவும், சந்திரனுக்குத் தோன்றுமிடங்கள் பலவுளவாகவும், அவனுயர்ச்சி தோன்றுதற்கு எங்கண்மாதவன் இதயமாமலர்வரும் எனவும் கூறி னார். உளர் என்பது வருவிக்கப்பட்டது. பிறந்து என்னும் எச்சம் எதுப்பொரு ட்டு. சமைக்கேன் சிறுபான்மை ககரவொற்றெதிர்காலங் காட்டிவந்த தன்மை யொருமைவினைமுற்று. (க)

பொருந்தவானுறைநாள்களைநாடொறும்புணர்வோ
னருந்தவானவர்க்காரமுதன்புடனளிப்போன்
றிருந்தவானவர்க்கரியவன்செஞ்சடைமுடிமே
லிருந்தவானவன்பெருமையையார்கொலோவிசைப்பார்.

(இ - ள்.) வான் உறை நாள்களை நாள் தொறும் பொருந்தப் புணர்வோன்- ஆகாயத்தில் இருக்கின்ற நாண்மீன்களை நாடோறும் (ஒவ்வொன்றாக) இயையப் புணர்பவனும்,—வானவர்க்கு அருந்த ஆர் அமுது அன்புடன் அளிப்போன் - தேவர்களுக்கு உண்ணும்படி பெறுதற்கரிய அமிர்தத்தை அன்போடு கொடுப்பவ னும்,—திருந்து அ வானவர்க்கு அரியவன் செஞ்சடைமுடிமேல் இருந்தவான வன் - (அகந்தையில்) திருந்திய அந்தப் பிரமவிட்டுணுக்களுக்கு அரிய சிவபெரு

மானுடைய சிவந்த சடைமுடியின்மேலே இருந்த தேவனும் ஆகிய சந்திரனுடைய,—பெருமையை யார் இசைப்பார் - பெருமையை யாவர் சொல்லவல்லவர். எ - று.

கொல் ஓ அசைகள். திருந்துவானவர் வினைத்தொகை. அகந்தையிற்றிருந்துதல் அகந்தையில் முதிர்தல். திருந்தவானவர்க்கரியவன் செஞ்சடை முடிமேலிருந்தவானவன் என்பதனை வானவர்க்கரியவன் செஞ்சடைமுடிமேல் திருந்த இருந்தவானவன் எனக்கொண்டு கூட்டி, சிவபெருமானுடைய சடை முடியின் மேலே (தான்) திருத்தமுற இருந்ததேவன் எனப் பொருள்கொள்வது மொன்று. திருந்துதல் கலைதேய்வுறுமை. இப்பொருட்குத் திருந்த என்னுஞ் செயவெனெச்சங் காரியப்பொருட்டாய் நின்றது. அ என்னும் பண்டறிசுட்டு அன்னவடிவும் பன்றிவடிவுங்கொண்டு தேடிய என்பதை யுணர்த்திற்று. அச்சுவினி முதலிய இருபத்தேழு நக்ஷத்திரங்களை நாண்மீனென்றுன்றோர் ஆளுப. (உ)

மண்டலம்பயிலுரகர்பேருயிர்ப்பினுன்மயங்கி
மண்டலம்பொரவருந்தியபெருந்துயர்மாற
மண்டலந்தனைநிழலெனுமரபினுற்றனது
மண்டலம்பொழியமிழ்தின்மெய்குளிரவேவைத்தோன்.

(இ-ள்.) மண்டலம் பயில் உரகர் பேர் உயிர்ப்பினால் மயங்கி - மண்டலமிடுகின்ற நாகர்களுடைய பெரிய மூச்சினாலே மயங்குதலால்,—மண்டு அலம் பொர வருந்திய பெரும் துயர் மாற - நெருங்கிய சஞ்சலம் வருத்த வருந்திய பெரிய நோய்நீங்க,—நிழல் என்னும் மரபினால் - நிழலைச் செய்வோன் என்னும் முறைமையினாலும்,—தனது மண்டலம் பொழி அமிழ்தின் - தன்னுடைய மண்டலத்தினின்று பொழிகின்ற அமிர்தத்தாலும்,—மண்டலந்தனை மெய்குளிரவைத்தோன்- பூமியை உடம்புகுளிர வைத்தவன். எ - று.

ஏ - அசை. அலம் - சஞ்சலம். நிழல் - ஆகுபெயர். மண்டு அலம்பொர என்பதற்கு நெருங்கிய கலப்பைபொர எனப் பொருள் கொள்ளுதலு மொன்று. நாகர்களுடைய மூச்சினாலே மயங்குதலாற் பூமிக்குண்டாகிய வருத்தம் நீங்கும்படி நிழலினாலும் அமிர்தத்தினாலும் அதனுடம்பு குளிரச்செய்தவன் என்பதுகருத்து. இனி, உரகர்பேருயிர்ப்பினால் மண்டு அலம்பொர மயங்கி வருந்திய பெருந்துயர் எனக் கொண்டு கூட்டி உரகருடைய உயிர்ப்பினால் நெருங்கி நஞ்சூதாக்க மயங்கி வருந்திய துயர் எனப் பொருள்கோடலுமொன்று. இப்பொருட்டு ஆலம் அலம் எனக் குறுகிற்று. இச்செய்யுள் சொற்பின் வருநிலை என்னும் அலங்காரம்.

பைம்பொன்மால்வரைமத்தினிற்பணிவடம்பிணித்திட்
டும்பரானவர்தானவருடன்கடைந்திடவே
தம்பமானதுமன்றியத்தழல்விடந்தணிய
வம்புராசியினுரமுதுடனவதரித்தோன்.

(இ - ள்.) உம்பரானவர் தானவருடன்-தேவர்கள் அசுரர்களோடு,—பைம்பொன் மால்வரை மத்தினில் - பசிய பொன்னாலாகிய பெரிய மந்தர மலையென்னும் மத்தில்,—பணிவடம் பிணித்திட்டுக் கடைந்திட - பாம்பாகிய கயிற்றைக்கட்டிக்கடைய,—தம்பம்ஆனதும்அன்றி-(அம்மத்திற்குக்) கடைதறியானதும்அன்றி,—

அ தழல் விடம் தணிய - அந்த நெருப்பையொத்த நஞ்சின் வெம்மை தணிய,— அம்புராசியின் ஆர் அமுதுடன் அவதரித்தோன் - பாற்கடலில் பெறுதற்கரிய அமிர்தத்தோடு பிறந்தவன். எ-று.

ஏ அசை. விடம் ஆகுபெயர். தம்பமானதும் என்பதில் உம்மை எச்சம். பிணித்திட்டு என்பது ஒருசொல். தணிய என்னும் எச்சம் காரியப்பொருட்டு. ஆனவர் - எழுவாய்வேற்றுமைச்சொல்லுருபு. அ என்னும் பண்டறிசுட்டு, கடைதலாற்றோன்றிய என்பதையுணர்த்திற்று. (ச)

பத்திரட்டியிலீரிரண்டொழிந்தபல்கலேயோன்
மித்திரற்கவைகொடுத்துமீளவுங்கவர்வோ
னத்திரிப்பெயரந்தணனம்பகந்தனிலுஞ்
சித்திரக்கனன்முகத்தினும்பிறந்தொளிசிறந்தோன்.

(இ - ள்.) பத்திரட்டியில் ஈரிரண்டு ஒழிந்த பல்கலேயோன் - பதினாறு கலைகளையுடையவன்,— அவை மித்திரற்கு முன் கொடுத்து மீளவும் கவர்வோன்-அக்கலைகளைச் சூரியனுக்குமுன்னரே (ஒவ்வொன்றாகக்) கொடுத்துப் பின்னரும் (அம்முறையே) வாங்குகிறவன்,—அத்திரிப்பெயர் அந்தணன் அம்பகந்தனிலும்-அத்திரியென்னும் பெயரையுடைய முனிவனது கண்ணிலும்,—சித்திரக் கனல் முகத்தினும் - அழகுபொருந்திய அக்கினிதேவனுடைய முகத்திலும்,— பிறந்து ஒளி சிறந்தோன் - அவதரித்து ஒளிமிக்கவன். எ - று.

மீளவும் என்பதில் உம்மை எச்சத்தோடு சிறப்புமாயிற்று. அம்பகந்தனிலும் கனன்முகத்தினுமென்னு மும்மைகள் எண்ணும்மையோடு எச்சவும்மையுமாயின. பத்திரட்டி இருபது. ஈரிரண்டு நான்கு. இருபதில் நான்கொழிந்த எனவே பதினாறென்பதாம். பிறந்து என்னும் எச்சம் ஏதுப்பொருட்டு. தன்மாட்டுச் சொரியும் அவிகளை நாவிலேற்றுச் சுத்தமுடையவாக்கித் தேவருவப்ப அவர்க்கூட்டும் விசேடம்படைத்த கனல் என்பார் சித்திரக்கனல் என்றார். சித்திரம்என்னும் அடையை முகத்திற்கேற்றல், இத்துணைச்சிறப்பின்று. (ரு)

அந்தியாரணமந்திரத்தன்புடனிவனை
வந்தியாதவர்மண்ணினும்வானினுமில்லை
புந்தியாலுயர்புதனெனும்புதல்வனைமகிழ்வாற்
றந்தியாவருங்களிப்புறவிருக்குநாடன்னில்.

(இ - ள்.) இவனை - இந்தச் சந்திரனை,— அந்தி ஆரண மந்திரத்து - அந்திக்காலத்தில் வேதமந்திரத்தினால்,—அன்புடன் வந்தியாதவர் - அன்போடு வழிபடாதவர்கள்,—மண்ணினும் வானினும் இல்லை - மண்ணுலகத்தினும் விண்ணுலகத்தினும் இல்லை,—புந்தியால் உயர் புதன் எனும் புதல்வனை - (இவன்) அறிவாலுயர்ந்த புதனென்கிற புத்திரனை,—யாவரும் களிப்பு உற மகிழ்வால் தந்து இருக்கும் நாள்தன்னில் - எவருங் களிப்பைப்பொருந்த மகிழ்ச்சியோடு பெற்று இருக்கின்ற நாளில். எ-று.

மகிழ்வால் என்னும் ஆலுருபு உடனிகழ்ச்சிக்கண்வந்தது. சந்திரன் குருபன்னியைப்புணர்ந்து இழுக்கடைந்துதுன்புற்றானாயினும் பண்டிதனாகிய புதல்வனை அதுவாயிலாகப் பெற்றுக் கொண்டமையினால் அத்துன்ப நீங்கி உவப்படைந்தானென்பதுபோதர மகிழ்வாற்றந்தெனவும் அப்புதல்வன் தீவழிக்கட் செல்லுதலை

மாற்றி நல்வழிக்கட் செலுத்துங்கல்வியை உலகத்தார்க்குக் கொடுக்கு மதிகாரியாத லால் உலகமவன்மாட்டு மகிழ்வுற்றிருந்ததென்பதுபோதர யாவருங் களிப்புற என வுங்கூறினர். (௬)

வளைநெடுஞ்சிலைக்கரத்தினன் மனுவருண்மைந்த
னுளையெழும்பரித்தேரின னுறுவதொன் றுணரான்
விளையருந்தவவிபினமுற்றம்பிகைவிதியா
லிளையெனும்பெயர்மடவரலாயினனென்ப.

(இ-ள்.) வளை நெடும் சிலைக் கரத்தினன் மநு அருள் மைந்தன் - வளைந்த நெடிய வில்லையுடைய கையினனாகிய மநு என்பவன் பெற்ற (இளன் என்னும்) புதல்வன்,—உளை எழும் பரித் தேரினன் - பிடர்மயிர் விளங்கும் குதிரைபூண்ட தேரினையுடையனாய்,—உறுவது ஒன்று உணரான்-சம்பவிப்பது ஒன்றையும் அறி யாதவனாய்,—அம்பிகை அரும் தவம் விளைவிபினம் உற்று - உமாதேவியார் அரு ந்தவத்தைச்செய்கின்ற காட்டை அடைந்து,—விதியால் - (அந்த உமாதேவியாரு டைய) சாபத்தினால்,—இளை எனும்பெயர் மடவரல் ஆயினன் - இளையென்னும் பெயரையுடைய பெண்ணாயினன். எ - று.

என்ப - அசை; "அவைதாம், மின்னேவற்றே" என்னுஞ்சூத்திரத்தில் பிற வும் என்றதனால்வந்தது. என்ப என்பதற்கு வியாசர் சைமினியென்னும் முத னூலாசிரியர்கள் கூறுவர் எனப் பொருள்கொள்ளினும்பொருந்தும். கரத்தினன் வினைமுற்றுப் பெயரெச்சம். தேரினன், உணரான் என்பன வினையெச்சமுற் றுக்கள். (எ)

மாரகாகளமெழுவதோர்மதுமலர்க்காவிற்
றாரகாபதிபுதல்வனத்தையலைக்காணு
வீரகாமபாணங்களின்மெலிவுறமயங்கித்
தீரகாமமுஞ்செவ்வியுமிகும்படிதிளைத்தான்.

(இ - ள்.) மாரகாகளம் எழுவதோர் மதுமலர்க் காவில் - மன்மதனுடைய வெற்றிச்சின்னமாகிய குயிலோசை எழுகின்ற தேன்பொருந்திய பூவையுடைய சோலையில்,—தாரகாபாதி புதல்வன் - சந்திரனுடைய புதல்வனாகிய புதன்,— அத்தையலைக் காணு - அந்த இளையென்பவளைக் கண்டு,—வீரகாமபாணங்களின் மெலிவு உறமயங்கி-வீரத்தையுடைய மன்மதபாணங்களால் மெலிவுண்டாக அறி வழிந்து,—தீர - அம்மயக்கந்தீர,—காமமும் செவ்வியும் மிகும்படி திளைத்தான் - காமமும் காலமும் நீட்டிக்கும்படி புணர்ந்தான். எ-று.

காலம் மதனநூலிற்கூறியகாலம். மாரகாகளம் என்பது நடைமலை என்பது யானையையுணர்த்துமாறுபோலக் குயிலையுணர்த்திப் பின், ஆகுபெயராயிற்று. தீரத் திளைத்தான் எனமுடிக்க. தீரகாமம் என்பது எதுகைநோக்கி இயல்பாயிற்று. மார காகளம், தாரகாபதி, வீரகாமபாணம் என்பன வடநூன்முடிபு. தீரகாமமும் என் பதை வடநூன்முடிபாக்கி மிக்க காமம் எனப் பொருள்கொள்வாருமுளர். (அ)

புதனுமந்தமென்பூவையும்புரூரவர்வினைத்தஞ்
சுதனெனும்படிதோற்றுவித்தனரவன்றோன்றி
யிதநலம்பெறுமழகினுந்திறலினுமிலங்கி
மதனனுங்கலைமுருகனுமெனும்படிவளர்ந்தான்.

(இ ள்.) புதனும் அந்த மென் பூவையும் - புதனென்பவனும் அந்த மெல்லிய நாகணவாய்போன்ற மொழியையுடைய இளை என்பவளும்,—புரூரவாவினைத்தம் சுதன் எனும்படி தோற்றுவித்தனர் - புரூரவாவைத் தம்புதல்வன் என்னும்படி உற்பவிப்பித்தார்கள், —அவன் தோன்றி - அவன்பிறந்து,—இத நலம்பெறும் அழகினும் திறலினும் - இன்பநலம்பெறுதற் கேதுவாகிய அழகாலும் வீரத்தாலும் மதனனும் கலை முருகனும் எனும்படி இலங்கி வளர்ந்தான் - மன்மதனும் கலைஞானத்தையுடைய முருகக்கடவுளும் என்று சொல்லும்படி விளங்கி வளர்ந்தான். எ - று.

பூவை - ஆகுபெயர். அழகினுந் திறலினும் மதனனுங் கலை முருகனும் எனும்படி என்பது முறைநிரனிறை. நலம்பெறு மழகெனக் காரணங் காரியமாக வுபசரிக்கப்பட்டது. தலைச்சங்கத்திற் றலைமைப்புலவனுய்த் தமிழாராய்ந்தமைபற்றிக் கலைமுருகன் என்முர். (கூ)

பொருப்பினைச்சிறகரிந்தவன்புரத்துமங்கையரு
ளுருப்பசிப்பெயரொண்டொடியுருவினிற்சிறந்தா
டருப்பொழிற்பயில்காலையிற்றானவர்காணு
விருப்புறக்கவர்ந்தேகினரவளுடன்விசும்பில்.

(இ - ள்.) பொருப்பினைச் சிறகு அரிந்தவன் புரத்து மங்கையருள்-மலையைச் சிறகின்கண் அரிந்த இந்திரனுடைய நகரத்திலுள்ள பெண்களுள்,—உருவினில் சிறந்தாள் உருப்பசிப் பெயர் ஒண்டொடி-அழகிற்சிறந்த உருப்பசியென்னும் பெயர்கொண்ட ஒள்ளிய வளையலையுடையவள்,—தருப் பொழில் பயில்காலையில்-மரங்களையுடைய சோலையிலிருக்கும்பொழுதில்,—தானவர் காணு - அசுரர்கள் கண்டு,—விருப்பு உறக் கவர்ந்து—ஆசைமிகுதலாற் கவர்ந்து,—அவளுடன் விசும்பில் ஏகினர் - அவளோடு ஆகாயத்திற்போனுர்கள். எ - று.

சிறந்தாள் வினைமுற்றுப்பெயரெச்சம். வினைமுற்றாக்கிப் பொருள்கொள்ளினும் பொருந்தும். உற என்னுஞ் செயவெனெச்சம் ஏதுப்பொருட்டு. உருவினிற் சிறந்தாளென்னும்பெயரடையால் அசுரர்கவர்தற்கேதுக்கூறியவாறு. பொருப்பினைச் சிறகரிந்தவன் என்பது "முதன்முனைவரிற் கண்ணென்வேற்றுமை - சினைமுன்வருத றெள்ளிதென்ப" என்னுஞ் சூத்திரவிதிப்படி கண்ணுருபுவிரித்துப் பொருள்கொள்ளப்பட்டது பொருப்பைச்சிறகை அரிந்தவன் எனினும் அமையும்.

கொண்டுபோதலுமபயமென்றுருப்பசிகூவ
வண்டர்யாவருமஞ்சினரவருடனடுபோர்
வண்டுசூழ்குழலணங்கையிம்மதிமகன்மகனுங்
கண்டுதேர்நனிகடவினனசுரர்மெய்கலங்க.

(இ-ள்.) கொண்டு போதலும்-கவர்ந்துகொண்டுபோகவும்,—உருப்பசி அபயம் என்றுகூவ - உருப்பசி அடைக்கலமென்று அலற,—அண்டர்யாவரும் - (கண்ட) தேவரனைவரும்,—அவருடன் அடுபோர் அஞ்சினர் - அவ்வசுரர்களோடு கொல்லுகின்ற போர்செய்தற்குப் பயந்தனர்,—வண்டு சூழ் குழல் அணங்கை - வண்டுகள் சூழ்கின்ற அளகத்தையுடைய அவ்வுருப்பசியை,—இம்மதிமகன் மகனும் கண்டு-இந்தச் சந்திரனுடைய பௌத்திரனுகிய புரூரவாவுங்கண்டு,—அசுரர் மெய்கலங்கத்தேர் நனி கடவினன் - அசுரர்களுடைய சரீரம் நடுங்கத் தேரை விரைவிற்செலுத்தினுன். எ - று.

த்தலுமாகிய மேன்மையுடையோர் என்பது போதர வரந்தருங்குறுமுனி என்றார். வரத்தைத் தருங் குறுமுனியெனினும்பொருந்தும். இந்நகுடன் சரித்திரத்தைத் திருவிளையாடற்புராணத்தில் இந்திரன் பழிதீர்த்த படலத்தாற்றெள்ளிதினுணர்க.

மற்றவன்றிருமைந்தன்வின்மைந்திறலுயர்ந்த
கொற்றவன்றிறற்கொற்றவைக்கிருபுயங்கொடுத்தோன்
முற்றவன்பகைமுகங்கெடமுகந்தொறுந்திசையிற்
செற்றவன்பெருஞ்செற்றமில்குணங்களிற்சிறந்தோன்.

(இ-ள்.) அவன் திருமைந்தன் - அந்த நகுடனுடைய அழகிய புதல்வன்,—வில் மைந்திறல் உயர்ந்த கொற்றவன் - வில்வலிமையாலுயர்ந்த வெற்றியையுடையவன்,—திறல் கொற்றவைக்கு இருபுயம் கொடுத்தோன் - வலிய வீரலக்குமிக்குத்தன் இருபுயங்களையும் (வசித்தற்கிடமாகக்) கொடுத்தவன்,—முகந் தொறும் முற்று அ வன் பகை முகம் கெட - போர்முகங்கடோறும் முதிர்ந்த அந்த வலிய பகைவர்கள் புறங்கொடுக்க,—திசையில் செற்றவன் - திசைகளிலே (அவர்களை) வென்றவன்,—பெரும் செற்றம் இல்குணங்களில் சிறந்தோன் - பெருமையாகிய சாந்தகுணங்களாற் சிறந்தவன். எ-று.

மற்று அசை. பகை - ஆகுபெயர். முற்றுபகை - வினைத்தொகை. தொறும் என்பது இடப்பன்மைகுறித்துநின்றது. குணங்களில் என்பதன்கண் இல்லுருபு ஏதுப்பொருட்டு. முகந்தொறும்வன்பகை முகங்கெடத்திசையில் முற்றச்செற்றவன் என்றியைத்துப் பொருள்கோடலும் ஒன்று. வின்மைந்தாலுயர்ந்த கொற்றவனாதலாற் கொற்றவைக்கிருபுயங்கொடுத்தான்; அங்ஙனங்கொடுத்தலால், வன்பகை முகங்கெடச்செற்றான்; அங்ஙனஞ்செறலாற், செற்றமில் குணங்களிற்சிறந்தான் என ஒன்றற்கொன்றேதுவாக்கிப் பொருள்கொள்க. பகையுடையாற்கே செற்றமுண்டு; பகையைச் செற்றானுக்குச் செற்றம் யாண்டுமின்மையாற் பகையைச் செறல், செற்றமின்மைக்குக் காரணமாதலறிக. (கசு)

யயாதியென்றுகொண்டிவனையேயெவரினுஞ்சிறக்க
வியாதனும்புகழ்ந்துரைத்ததுமற்றிவன்மேனாட்
புயாசலங்களுக்கிசையவேபுகரவன்புதல்வி
குயாசலந்தழீஇயிருவர்வெங்குமாரரையளித்தான்.

(இ-ள்.) வியாதனும் இவனையே எவரினும் சிறக்க யயாதி என்று கொண்டு புகழ்ந்து உரைத்தது - வியாசமுனிவரும் இந்தப் புதல்வனையே எவரினுஞ்சிறப்புற யயாதியென்று கைக்கொண்டு புகழ்ந்துகூறியது,—இவன்மேல் நாள் - இந்த யயாதியென்பவன் முற்காலத்தில்,—புய அசலங்களுக்கு இசைய - (தன்) புயமலைகளுக்கு இயைய,—புகரவன் புதல்வி குய அசலம் தழீஇ - சுக்கிரன் புதல்வியாகிய தேவயானையினுடைய தனமலைகளைத்தழுவி,—இருவர் வெம் குமரரை அளித்தான் - (யது, துர்வசு என்னும்) இரண்டு கொடிய புதல்வர்களைப் பெற்றான்.

மற்று - ஏ - அசைகள். இவனையே என்னும் ஏகாரம் பிரிநிலை. புயாசலம், குயாசலம் வடநூன்முடிபு. எவரினும் என்னும் உம்மை முற்றும்மை. வியாதனும் என்னும் உம்மை சிறப்பும்மை. உரைத்தது இறந்தகாலவிடைநிலை பெற்ற துவ்விகுதிமீற்றுத்தொழிற்பெயர். என்றுகொண்டென்பதை ஒருசொல்லாக்கினுமமையும். வெங்குமரர் என்றார் பிதாவின் சொல்லை அவமதிக்கு மியல்பினர் என்பது போதர. (கஎ)

அன்னகாலையிலிவடனதாருயிர்த்துணையாய்
முன்னிசைந்தபேரிசைவினுலேவலின்முயல்வா
ளுன்னலந்திகழ்கவிதனக்குரைகெழுநண்பா
மன்னவன்றருமடவரலிவனுழைவந்தாள்.

(இ - ள்.) நல் நலம் திகழ் கவிதனக்கு உரை கெழு நண்பாம் - நல்ல நலம் விளங்குகின்ற சுக்கிரனுக்குப் புகழ்பொருந்தும் நண்பனுகிய,—மன்னவன் தரும டவரல் - (விடபபன்மன் என்னும் அசுர) ராசன்பெற்ற (சன்மிட்டை என்னும்) பெண்ணனவள்,—இவள் தனது ஆர் உயிர்த்துணை ஆய் - இத்தேவயானையான வள் தன்னுடைய பெறுதற்கரிய உயிர்த்துணையாகி (யிருந்தும்),—முன் இசை ந்த பேர் இசைவினுல் - முன்னே (தான்) உடன்பட்டபெரிய உடன்பாட்டினுல், ஏவலின் முயல்வாள் - (இவளுக்கு ஏவல் செய்பவளாயினுள்,—அன்ன காலையில் இவனுழை வந்தாள் - (அவள்) அப்புதல்வரிருவர் பிறந்தநாளில் இந்த யயாதி என்பவனிடத்தில் வந்தாள். எ-று.

நண்பு - ஆகுபெயர். மழைக்கோளாய் மழைபெய்வித்து உலகிற்கு நன்மை பயக்கு மியல்பினனுதலால் நன்னலந்திகழ்கவியெனவும், சன்மிட்டையும் தேவ யானையும் நட்பினரா யொழுகுநாளில் ஒர்நாள் தேவயானையைச் சன்மிட்டை கிணற்றில்வீழ்த்தினுள்; அதனுல் விடபபன்மனுகிய பிதா இவளை அத்தேவயானை கருத்தின்படி அவளுக்கு ஏவலாட்டியாக்கினுன்; அவளும் அங்ஙனம் ஏவலாட்டி யாயொழுகினுள் என்னுங் கதையையுட்கொண்டு, முன்னிசைந்த பேரிசைவினு லேவலின்முயல்வாள் எனவுங்கூறினுர். தேவகுருவாகிய வியாழனுமறியாத சஞ்சீ விமந்திரத்தை அத்தேவகுருவின் புதல்வனுகிய கயன் என்பவனுக்கு உபதேசித்த சாதுரியர் என்பதுபோதர நன்னலந்திகழ்கவியென்ருரெனினுமமையும். இருந் தும் என்பது வருவித்துரைக்கப்பட்டது. (கஅ)

ஆழிமன்னனவ்வணங்கினையணங்கெனக்கண்டு
பாழிவன்புயம்வலந்துடித்துடலுறப்பரிந்து
வாழிதன்மனைமடவரலறிவுருவண்ணம்
யாழினேர்பெரும்புணர்ச்சியினிதயமொத்திசைந்தான்.

(இ - ள்.) ஆழி மன்னன் அ அணங்கினை அணங்கு எனக் கண்டு - ஆஞ்ஞா சக்கரத்தையுடைய யயாதி என்னும் அரசன் அப்பெண்ணைத் தெய்வமகள்போ லக் கண்டு,—வன் பாழி வலப்புயம் துடித்து - வலிமையாகிய பருத்த வலப்புயந் துடிக்க,—உடல் உறப் பரிந்து - அவளைப் புணரவிரும்பி,—தன்மனை மடவரல் அறிவுருவண்ணம் - தன்மனைவியாகிய தேவயானை அறியாதபடி,—யாழினேர் பெரும் புணர்ச்சியின் - காந்தருவருடைய பெருமையாகிய புணர்ச்சியினுல்,— இதயம் ஒத்து இசைந்தான் - மனம் ஒத்துக் கூடினுன். எ - று.

வாழி - அசை. துடித்து எச்சத்திரிபு. துடித்திசைந்தான் எனச் சினைவி னைமுதலொடு முடிந்ததெனினுமமையும். உடல் உற ஒருசொல். மணமெட்டினு ட்காந்தருவமணஞ் சிறந்தமைபற்றி யாழினேர் பெரும்புணர்ச்சியெனவும், இவளை ப்புணர்ந்து பெறும் புதல்வனுல் இவனுக்குப் பேராக்கமுண்டாம் என்பதுபோத ரப் புயம் வலந்துடித்தெனவுங்கூறினுர். (கசு)

சாருமன்பினிற்கற்பினிற்சிறந்தசன்மிட்டை
சேருமைந்தினுமுயர்வினுந்தேசினுஞ்சிறந்து

மேருவென்றிடமேதினியாவையுந்தரிப்பான்
பூருவென்றொருபுண்ணியப்புதல்வனைப்பயந்தாள்.

(இ - ள்.) சாரும் அன்பினில் கற்பினில் சிறந்த சன்மிட்டை - அடைத்ற் பாலனவாகிய அன்பினாலும் கற்பினாலும் சிறந்த சன்மிட்டையானவள்,— சேரும் மைந்தினும் உயர்வினும் தேசினும் சிறந்து - சேர்தற்பாலனவாகிய வலிமையினாலும் உயர்ச்சியினாலும் அழகினாலும் சிறந்து,—மேரு என்றிட மேதினியாவையும் தரிப்பான் - மேருமலை என்று சொல்லுல்படி பூமிமுழுதையுந்தாங்க,—பூரு என்று ஒரு புண்ணியப் புதல்வனைப் பயந்தாள் - பூரு என்று ஒரு பெயரையுடைய புண்ணியனாகிய புத்திரனைப்பெற்றாள். எ - று.

சன்மிட்டைபயந்தாள் எனமுடிக்க. மகளிர்க்கு நாயகரிடத்தன்புங் கற்புமின்றி யமையாதன என்பதுபோதர அன்பினிற்கற்பினில் என வாளாகூறாமற் சாரும் என அடைகொடுத்தும், ஆடவர்க்கு மைந்தும் உயர்வுந் தேசும் இன்றியமையாதனவென்பதுபோதர மைந்தினு முயர்வினுந் தேசினும் என வாளாகூறாமற் சேரும் என்றடைகொடுத்தும், பிதாவின்சொற்கமைந்தொழுகு நீதியுடையானென்பதுபோதரப்புண்ணியப் புதல்வனெனவுங்கூறினார். பூரு என்றொரு என்பதற்கு பூரு என்ற ஒரு எனப் பொருள்கூறிப் பெயரெச்சத்தீறுதொக்கதெனக்கொள்ளினுமமையும். (உ௦)

மருவிளங்கொடியனையமென்மருங்குலாள்பின்னு
மிருவர்மைந்தரைப்பயந்தனளிறைமனைகாணு
வுருவிளங்கியவுலகுடைநிருபனுக்கிவண்மேற்
றிருவுளங்கொலென்றழன்றுதன்றாதையிற்சென்றாள்.

(இ - ள்.) மரு இளம் கொடி அனைய மெல் மருங்குலாள் - வாசனைபொருந்திய இளங்கொடிபோன்ற மென்மையாகிய இடையையுடைய சன்மிட்டையானவள் —பின்னும் மைந்தர் இருவரைப் பயந்தனள் - பின்னும் புதல்வரிருவரைப்பெற்றாள்,—உருவிளங்கிய - (அவர்களுடைய) வடிவம் (பிதாவின்வடிவம்போல) விளங்கின,—இறை மனைகாணு - யயாதியரசனுடைய மனைவியாகிய தேவயானை (அதனைக்) கண்டு,—உலகு உடை நிருபனுக்கு - உலகையுடைய நம்மரசனுக்கு,—இவள் மேல் திருவுளம் கொல் என்று அழன்று - இவள் மேற் பிரியம் உண்டு போலுமென்று கோபித்து,—தன் தாதையில் சென்றாள் - தன் பிதாவினிடத்திற்போனாள். எ - று.

கொல்- ஐயம். அசையெனினுமமையும். தாதையில் இல் எழனுருபு. பின்னும் என்பதில் உம்மை எச்சம். உருவிளங்கிய என்பதற்கு உருவால்விளங்க என எச்சமாக்கிப் பொருள்கொள்ளினும்பொருந்தும். இம்மூன்றுபுதல்வரும் பிறந்தகாரணத்தைத் தேவயானைவினவ, சன்மிட்டை மெய்யைமறைத்துப் பொய்யைக்கூற அதை அவள் மெய்யெனக்கருதிப்போயினாள்; பின் இப்புதல்வர்மூவரும் வீதியில் விளையாட, தன் நாயகனுடனிருந்த தேவயானை இப்புதல்வர்கள் தன் நாயகனாகிய யயாதியையொத்த வடிவழகுடையராயிருத்தல்கண்டு அதுவாயிலாக, அவன் புதல்வர்களென்றறிந்தாளென, முதனூல்கூறுதலால் உருவிளங்கிய என்பதற்கு அவர்கள்வடிவம் பிதாவின்வடிவம்போல விளங்கின எனப் பொருள்கூறப்பட்டது. உருவிளங்கியநிருபன் என அரசனுக்கடையாக்கிப் பொருள் கொள்ளுதல் பொருந்தாது. புதல்வரிருவர் துருகுவு, மனு என்போர். (உக)

சென்றுதாதையைப்பணிந்திதுசெப்பலுஞ்சினவேல்
வென்றிமன்னனைவிருத்தனும்வகையவன்விதித்தா
னன்றுதொட்டிவனைம்முதற்பிணியினாலழுங்கி
யின்றுநூறெனநரைமுதிர்யாக்கையோடிருந்தான்.

(இ - ள்.) சென்று தாதையைப் பணிந்து இது செப்பலும் - போய்ப் பிதாவாகிய சுக்கிரனைவணங்கி இதனைச் சொல்லவும்,—அவன் - (கேட்ட) அந்தச்சுக்கிரன்,—சினவேல் வென்றி மன்னனை - கோபம்பொருந்திய வேலை ஏந்திய வெற்றியையுடைய அரசனை,—விருத்தன் ஆம்வகை விதித்தான் - வயோதிகனாம்படி சபித்தான்,—இவன் அன்று தொட்டு ஐ முதற் பிணியினால் அழுங்கி - இவன் அன்றுமுதற் சிலேட்டுமத்தை முதலாகவுடைய நோய்களால்வருந்தி,—இன்று நூறு என - (கண்டோர் இவனுக்கு) இன்றே நூறுவயசு என்று சொல்ல,—நரை முதிர் யாக்கையோடு இருந்தான் - நரைமுதிர்ந்த சரீரத்தோடு இருந்தான். எ-று.

நூறு - ஆகுபெயர். செப்பலும், உம்மீற்றுவினையெச்சம். விருத்தாவத்தையில் ஐயாலாகும் பிணிமேலிடலால் ஐமுதற்பிணியினால் என்றார். சினவேல் என்பதற்கு மறந்தருங்கழல் என்பதற்குரைத்தாங்குரைக்க. விருத்தனும்வகை என்பது "அன்னமரபிற் காலங்கண்ணிய வென்னகிளவியும்" என்பதனால்வந்தவகையீற்று வினையெச்சம். (உஉ)

அந்தமன்னவன்மைந்தரையழைத்தெனக்குசனார்
தந்தமூப்பைநீர்கொண்மினும்மிளமைதந்தென்ன
மைந்தர்யாவருமறுத்திடப்பூருமற்றவன்ற
னிந்தமூப்பினைக்கவர்ந்துதன்னிளமையுமீந்தான்.

(இ - ள்.) அந்த மன்னவன் மைந்தரை அழைத்து - அந்த யயாதி என்னும் அரசன் தன்புதல்வ ரைவரையும் அழைத்து,—எனக்கு உசனார் தந்தமூப்பை - எனக்குச் சுக்கிரன் தந்த வயோதிகத்தை,—நும் இளமை தந்து நீர்கொண்மின் என - உங்கள் இளமையைத்தந்து நீங்கள் கொள்ளுங்கள் என்று சொல்ல,—மைந்தர் யாவரும் மறுத்திட - நான்குபுதல்வரும் மறுக்க,—பூரு அவன்றன் இந்த மூப்பினைக்கவர்ந்து - பூரு என்னும் புதல்வன் அவனுடைய இந்த வயோதிகத்தைக் கவர்ந்து,—தன் இளமையும் ஈந்தான் - தன்னுடைய இளமையையும் (அவனுக்குக்) கொடுத்தான். எ - று.

மற்று - அசை. மைந்தர் யாவரும் என்றது பூருவையொழிந்த நால்வரையும். இளமையும் என்னும் உம்மை சிறப்பும்மையோ டெச்சவும்மையுமாயிற்று. உசனன் என்பது உசன் என்றாயிற்று. தன்மருகன் எனக் கண்ணோடாது சபித்தானெனக் கருதிக்கூறலால் உசனார் என்ப திழித்தற்கண்வந்தது. (உ௩)

விந்தைபூமகண்முதலியமடந்தையர்விரும்ப
முந்தைமாமணம்யாவையும்பலபகன்முற்றிச்
சிந்தையாதரந்தணிந்தபின்சிந்தனையின்றித்
தந்தைமீளவுமிளமைதன்றனயனுக்களித்தான்.

(இ - ள்.) தந்தை - பிதாவாகிய யயாதியானவன்,—விந்தை பூமகள் முதலிய மடந்தையர் விரும்ப-வீரலக்குமி தனலக்குமி முதலிய பெண்கள் விரும்ப,—முந்தை மாமணம் யாவையும் பலபகல் முற்றி - பழைய பெரிய போகமனைத்தையும் பலநாள் அனுபவித்து,—சிந்தை ஆதரம் தணிந்த பின் - (அவற்றில்) மனவிருப்பந் தணிந்தபின்பு,—சிந்தனை இன்றி - விருப்பின்றி,—மீள இளமை தன் தன

யனுக்கு அளித்தான் - திரும்ப இளமையைத் தன் புத்திரனாகிய பூருவிற்குக் கொடுத்தான். எ - று.

மீளவும் என்னும் உம்மை அசை. ஈண்டு முந்தையென்றது இவற்கு இங்ஙனம் யேவந்த விருத்தாவத்தைக்கு முன்னுள்ள தருணவத்தையைக் குறித்து நின்றது. அட்ட ஐசுவரியங்களோடும் போகங்களை அனுபவித்தான் என்பார் விந்தைபூம கண் முதலிய மடந்தையர் விரும்ப எனவும், பெண்ணோடனுபவிக்குங் காமபோக மன்றி ஏனைப்போகங்களையு மனுபவித்தான் என்பார் மணம்யாவையும் முற்றி எனவுங்கூறினார். தந்தைமுந்தைமாமணம் யாவையும் பலபகல்முற்றிச் சிந்தை ஆதரம் தணிந்தபின் சிந்தனையின்றி மீளவும் தன் தனயனுக்கு விந்தைபூமகள் முதலியமடந்தையர் விரும்ப இளமை அளித்தான், எனக்கொண்டுகூட்டிப்பொரு ள்கோடலும் ஒன்று. இப்பொருட்கு, விந்தைபூமகளாதியோர், நமக்குரிய மண மகனாவான் பூருவாகவும், இவன்எம்போகத்தை முறைபிறழ்ந்து அநுபவித்தானே என வருந்தினோர் புதல்வற்கு இளமை ஈந்தபொழுதே இனி எம்போகத்தை நுகர் தற்குரிய மணமகனைப் பெற்றோமே என்று மனமகிழ என்பார் விரும்ப என்றார் என அகலங்கூறுக. (௨௪)

இடியுமாறுகொணெடுமொழியயாதியன்றிவற்கே
முடியுமாலையுமுத்தவெண்கவிகையுமுரசும்
படியும்யாவையும்வழங்கியெம்பனிமதிமரபிற்
கடியுநீயினியெனமகிழ்ந்தளியுடனளித்தான்.

(இ - ள்.) இடியும் மாறுகொள் நெடுமொழியயாதி - இடியையும் மாறுபடு கின்ற உரத்தசொற்களையுடைய யயாதியென்னும் அரசன்,—அன்று இவற்கே - அன்றைக்கு இந்தப் பூரு என்பவனுக்கே,—முடியும் மாலையும் முத்த வெண்கவி கையும் முரசும் படியும் யாவையும் வழங்கி - கிரீடமும் வெற்றிமாலையும் முத் துத் தூக்கிய வெண்கொற்றக்குடையும் (மும்) முரசும் பூமியும் ஆகிய எவற்றை யும் (உன்னுடையனவே என்று) சொல்லி,—எம் பனிமதிமரபிற்கு அடியும் இனி நீ என மகிழ்ந்து - எம்முடைய குளிர்ந்த சந்திரவம்மிசத்திற்கு முதலும் இனி நீயே என்று களித்து,— அளியுடன் அளித்தான் - அன்போடு (அவற்றைச்) கொடுத்தான். எ - று.

யாவையும் வழங்கி மகிழ்ந்து அளித்தான் எனமுடிக்க. வழங்கல் - சொல் லல். இடியும், அடியும் என்னும் உம்மைகள் சிறப்பு. மும்முரசாவன: மங்கலமு ரசு, வெற்றிமுரசு, கொடைமுரசு என்பனவாம். முரசும் என்பதற்கு சந்திரகுல வரசர்க்குரிய கொடைமுரசும் எனப் பொருள்கோடலும் ஒன்று. கொடைமுரசு சந்திரகுலத்தார்க்கே உரியதென்பதை "மும்மலையு முந்நாடு முந்நதியும்" என் னுஞ் சீத்தலைச்சாத்தனார்வாக்கா லுணர்க. இடியுமாறுகொ ணெடுமொழி என்பத ற்கு இடியுமஞ்சும் மேம்பாட்டுரை எனப் பொருள்கோடலும் ஒன்று. (௨௫)

விரதமிஞ்சியவேள்வியாற்கேள்வியான்மிக்கான்
சுரதமங்கையர்முலைக்குவடணைவரைத்தோளான்
பரதனென்றொருபார்த்திவன்பரதமுமிசையுஞ்
சரதமின்புறவக்குலந்தனிலவதரித்தான்.

(இ - ள்.) விரதம் மிஞ்சிய வேள்வியால் கேள்வியால் மிக்கான் - நோன்பு மிக்க யாகத்தினாலும் கேள்வியினாலும் மேம்பட்டவனும்,—சுரத மங்கையர்முலை க்குவடு அணைவரைத்தோளான் - கலவிமங்கையருடைய முலையாகிய மலையைச்

சேருகின்ற மலைபோன்ற புயங்களையுடையவனுமாகிய,—பரதன் என்று ஒரு பார்த்திவன் - பரதனென்று ஒரு அரசன்,—பரதமும் இசையும் சரதம் இன்பு உற - நாடகமும் சங்கீதமும் உண்மையாக இன்பம் மிக,—அக்குலந்தனில் அவதரித்தான் - அந்தப்பூருவின் வம்மிசத்திற் பிறந்தான். எ - று.

இன்புற என்றது இலக்கணை. மிக்கான் தோளான் என்பன வினைமுற்றுக்கள் பெயரெச்சமாயின. பரதமுமிசையும் இவனால் மிக விருத்தியடைந்தன என்பார் சரதம் இன்புற என்றும், இன்பமொன்றனையே நோக்கும் இன்பநூலுடையார் நன்றெனக்கருதும் பிறர்மனைவியரை நயத்தலும் வரைவின்மகளிரை நயத்தலும் அறநூற்கு விலக்கென்றவற்றை நீக்கித் தனக்கெனவரைந்த காமக்கிழத்தியரைப் புணர்வோனென்பார் சுரதமங்கையர்முலைக்குவடணை வரைத்தோளானென்றுங் கூறினார். அது அறநூற்கு விலக்கன்மை "காமக்குவரைந்தோள்காமக்கிழத்தி" "அவருளும் வரைதற்குரியோருளரே" என்றற்றொடக்கத் தான்றோர்வாக் கானுணர்க. பரதனென்றொருபார்த்திபன் என்பதற்குப் பரதன் என்ற ஒரு அரசன் எனப் பொருள்கூறிப் பெயரெச்சத் திறுதொக்கதெனக் கொள்ளினு மமையும். (௨௬)

சுரசமூகமுஞ்சுராரிகள்சமுகமுஞ்சூழ
விரகுபூசலின்வாசவனடுங்கிவெந்நிடுநா
ளரசர்யாவருமறுமுகக்கடவுளென்றயிர்ப்பப்
புரசைநாகமுன்கடவினனுகமும்புரந்தோன்.

(இ - ள்.) சுரசமூகமும் சுராரிகள் சமூகமும் சூழ விரகு பூசலில் - தேவர் கூட்டமும் அசுரர்கூட்டமுஞ் சூழ நெருங்கிய போரில்,—வாசவன் நடுங்கி வெந்நிடுநாள் - இந்திரன் நடுங்கி (அசுரர்க்குப்) புறங்கொடுத்தநாளில்,—அரசர் யாவரும் அறுமுகக்கடவுள் என்று அயிர்ப்ப-அரசரனைவரும் (இவன்) முருகக்கடவுளோ என்று சந்தேகங்கொள்ள,—புரசைநாகம் முன் கடவினன் - கழுத்திடுகயிற்றையுடைய (ஐராவத) யானையை (வாகனமாகக்கொண்டு) முன்னேசெலுத்தி,—நாகமும் புரந்தோன் - சுவர்க்கத்தையுங் காத்தவன் எ - று.

சூழவென்னும் செயவெனெச்சம் ஏதுப்பொருட்டு. கடவினன் வினையெச்சமுற்று. நாகமும் என்பதன்கண் உம்மை எச்சவும்மையோடு சிறப்பும்மையுமாயிற்று. இந்திரனுக்காக அசுரரைக்கொன்று ஐராவதத்தை யூர்ந்து சுவர்க்கத்தைக் காத்த ஒற்றுமைபற்றி அறுமுகக்கடவுளென் றயிர்த்தனரென்க. (௨௭)

முக்குலத்தினுமதிக்குலமுதன்மைபெற்றதுவென்
றெக்குலத்தினிலரசும்வந்தடியிணையிறைஞ்ச
மைக்குலத்தினிற்புட்கலாவர்த்தமாமெனவே
யக்குலத்தினிலத்தியென்பவனவதரித்தான்.

(இ - ள்.) எக்குலத்தினில் அரசும் - எந்தக்குலத்திலுள்ள அரசர்களும்,—முக்குலத்தினும் மதிக்குலம் முதன்மை பெற்றது என்று - (அக்கினி சூரியன் சந்திரன் என்னும்) மூவருடைய குலத்தினுள்ளும் சந்திரகுலம் மேன்மையைப் பெற்றது என்று,—வந்து இணையடி இறைஞ்ச - வந்து இருகால்களையும் வணங்க,—மைக்குலத்தினில் புட்கலாவர்த்தம் ஆம் என - முகிற்கூட்டங்களுள் (சிறந்த பொன்மழைபெய்யும்) புட்கலாவர்த்தமுகில் ஒப்பாகும் என்றுசொல்ல,—அக்குலத்தினில் அத்தி என்பவன் அவதரித்தான் - அந்தவம்மிசத்தில் அத்தி என்பவன் பிறந்தான். எ - று.

ஏ - அசை. முக்குலத்தினும், அரசும் என்னும் உம்மைகள் முற்று. இறைஞ்ச என்னும் செயவெனெச்சம் காரியப்பொருட்டு. இறைஞ்ச அவதரித்தானென இயையும். அரசு என்பது உயர்திணைப் பொருளுணர்த்தி நின்றதோர் ஃறிணைச் சொல். இதனை "குடிமையாண்மை" என்னுஞ் சூத்திரத்தாலறிக. (உஅ)

கொண்டல்வாகனுங்குபேரனுநிகரெனக்குறித்துப்
புண்டரீகன்முன்படைத்தவப்புரவலனமைத்த
தெண்டிசாமுகத்தெழுதுசீரியக்கர்மாநகரு
மண்டர்தானமுமுவமைகூரத்தினுபுரியே.

(இ - ள்.) புண்டரீகன் - பிரமன்,—கொண்டல்வாசனும் குபேரனும் நிகர் எனக்குறித்து,—இந்திரனுங் குபேரனும் (இவனை) நிகர்ப்பர் என்றுசிந்தித்து,—முன்படைத்த அப் புரவலன் அமைத்தது - முன்னேபடைத்த அந்த அத்தி என்னும் அரசன் உண்டாக்கிய நகரம் (எது என்னில்),—எண் திசா முகத்து எழுது சீர் மா இயக்கர் நகரும்-எட்டுத்திக்குக்களிலும் எழுதிய கீர்த்தியையுடையபெரிய அளகை நகரத்திற்கும்,—அண்டர் தானமும் உவமைகூர் அத்தினு புரி - சுவர்க்க நகரத்திற்கும் உவமையில்மேம்பட்ட அத்தினுபுரியாம். எ - று.

ஏ - அசை. இந்திரனிலும் குபேரனிலும் அத்தி விசேடித்தவன்; அமராவதியினும் அளகாபுரியினும் அத்தினுபுரி விசேடித்ததென்பது கருத்து. எண்டிசாமுகத்தெழுதுசீர் என்பதை அண்டர்தானத்திற்கும் எற்றுக. நகரும் தானமும் என்பனவற்றில் நான்கனுருபுகள் விகாரத்தாற்றொக்கன. திசாமுகம்வடநூன்முடிபு. "பெறுவதுகொள்வாருங்கள் வருநேர்" என்பதில்நேர்வர் என்பது நேர் எனநின்றாற்போல நிகர்வர் என்பது நிகர் என முதனிலைத்தொழிற்பெயர் வினைமுற்றாய் நின்றது. அமைத்தது, வினையாலணையும்பெயர். எது என்னிலென்பது வருவித்துரைக்கப்பட்டது. (உகூ)

மீனமாகியவிண்ணவன்வினதைமுன்பயந்த
யானமீதெழுந்தருளிவந்திருபதம்வழங்கக்
கானநாண்மலர்க்கயத்திடைக்கயமும்வெங்கராமு
மானமானவரிருவருமக்குலத்தவரே.

(இ - ள்.) மீனம் ஆகிய விண்ணவன்-மீன்வடிவாகிய விட்டுணு,—வினதை முன் பயந்த யானமீது எழுந்தருளிவந்து,—வினதையென்பவள் முன்பெற்றகருடனாகிய வாகனத்தின்மேல் ஏறிவந்து,—இரு பதம் வழங்க - இருபாதங்களையுங் கொடுக்க,—கான நாள் மலர்க் கயத்திடை-வாசனைசெறிந்த புதுமலர்களையுடைய குளத்தில்,—கயமும் வெம் கராமும் ஆன மானவர் இருவரும் - யானையும் (அந்த யானையைப்பிடித்த) கொடியமுதலையும் ஆன வீரர் இருவரும்,—அக்குலத்தவர் - அந்த வம்மிசத்தில் அவதரித்தோர். எ - று.

ஏ - அசை. மீனம் என்பதில் அம்சாரியை. கயமுங்கராமுமானவர் இந்திரத்துய்ம்மன், அநூகு என்பவராம். அநூகுவை ஊகூ எனவும் வழங்குப. இருபதம் என்பதில் முற்றும்மை விகாரத்தாற் றொக்கது. இசையெச்சமெனினும் அமையும். முன்னர் இவ்வாறு முற்றும்மைதொக்கனவற்றிற்கும் இவ்விதிகொள்க. (௩0)

பொருபெரும்படைத்தொழில்வயப்புரவிதேர்மதமா
மருவருந்தொழின்மன்னர்நீதியின்றொழில்வளங்கூர்
சுருதியின்றொழின்முதலியதொழிலனைத்தினுக்குங்
குருவெனும்புகழ்க்குருவுமக்குலத்திலங்குதித்தான்.

(இ - ள்.) மருவு அரும் பொரு பெரும் படைத்தொழில் - அடைதற்கரிய பொருகின்ற பெரிய படைக்கலத்தொழில்,—வயப் புரவி தேர் மத மாத் தொழில்- வெற்றியையுடைய குதிரையும் தேரும் மதத்தையுடைய யானையும் ஆகிய இவற்றின்றொழில்,—மன்னர் நீதியின் தொழில் - அரசர் நீதிநடத்துந்தொழில்,—வளம் கூர் சுருதியின் தொழில் - வளம் மிக்க வேதத்திற் சொல்லப்பட்ட யாகத்தொழில்,—முதலிய தொழில் அனைத்தினுக்கும் - முதலாயுள்ள தொழில்களெவற்றிற்கும்,—குரு எனும் புகழ்க் குருவும் - இவனே ஆசாரியன் என்று சொல்லும் புகழையுடைய குரு என்பவனும்,—அக்குலத்தில் உதித்தான் - அந்தக் குலத்திற் பிறந்தான். எ - று.

அங்கு - அசை. குருவும் என்னும் உம்மை எச்சத்தோடு சிறப்புமாயிற்று. மருவரும் என்பதனை மன்னர்நீதியின் றொழிலென்பதன்காறுங் கூட்டுக. படைத்தொழின்முதலியன, கூர்ந்தபுத்தி யுடையோராலன்றி மந்தபுத்தியுடையோரா லறியப்படாவென்னுங்கருத்தால் மருவரும் எனவும், சுருதியின்றொழில், மழைபெய்வித்தல் மேற்கதிக்கட் செலுத்தன்முதலிய பயன்களைத் தருதலால் வளங்கூர் எனவும் விசேடிக்கப்பட்டன. இவன் பிதாவாகிய சவ்வருணன் இவனைக் குருவினருளாற் பெற்றமையின் இவனுக்குக் குருவென்று பெயராயிற்று. (௩௧)

வருகுலத்தவரெவரையும்வரிசையாலின்றுங்
குருகுலத்தவரெனும்படிபேரிசைகொண்டா
னிருகுலத்தினுமாசறுதேசினுலிவனுக்
கொருகுலத்தினுமுரைப்பதற்குவமைவேறுண்டோ.

(இ - ள்.) வரு குலத்தவர் எவரையும் - தன்குலத்திற் பின்வருவோரெவரையும்—வரிசையால் இன்றும் குருகுலத்தவர் எனும்படி - முறைமையினால் இன்றைக்குங் குருகுலத்தவரென்று புகழ்ந்துசொல்லும்படி,—பேர் இசைகொண்டான் - பெரும்புகழைப்பொருந்தினவன்,—மாசு அறு தேசினுல் - குற்றமற்ற கீர்த்தியினால்,—இருகுலத்தினும் - (அக்கினி சூரியன் என்னும்) இருவர் குலத்தினும்,—வேறு ஒருகுலத்தினும்-பிறிதொருகுலத்தினும்,—இவனுக்கு உவமை உரைப்பதற்கு உண்டோ-இக்குரு என்பவனுக்கு (ஒருவர்) உவமை சொல்லுதற்குண்டோ (இல்லை.) எ - று.

இன்றும் என்னும் உம்மை எச்சத்தோடு சிறப்புமாயிற்று. இருகுலத்தினும் என்னும் உம்மை முற்றும்மையோடு எச்சவும்மையும் எண்ணும்மையுமாய்நின்றது. ஒருகுலத்தினும் என்னு மும்மை எண்ணும்மையோடு சிறப்பும்மையும் முற்றும்மையுமாய்நின்றது. வேறொருகுலம் என்றது இம்முக்குலத்தை யொழிந்த குறுநிலமன்னர்முதலியோர் குலங்களையென்க. இரு குலத்தினும் மாசறுதேசினால் இவனுக்கு வேறொருகுலத்தினும் உவமையுரைப்பதற்குண்டோ என்றியைத்துத் தாய் தந்தையென்னு மிருவர்மரபினுங் குற்றம் நீங்கிய கீர்த்தியினால் இவனுக்கு வேறெந்தமரபிலாயினும் ஒருவர் உவமை சொல்லுதற்குண்டோ எனப் பொருள்கொள்ளினுமமையும். (௩௨)

வேறு.

அந்தணன்மரபினிலமுதவெண்டிரைச்
சிந்துவின்மிசைவருதிங்களாமெனச்
சந்தனுவெனும்பெயர்த்தரணிகாவலன்
வந்தனனவன்செயன்மகிழ்ந்துகேண்மினோ.

(இ - ள்.) அந்த நல் மரபினில் - அந்த நல்ல குருகுலத்தில்,—வெண் திரை அமுதச் சிந்துவின் மிசை வரு திங்கள் ஆம் என - வெண்மையாகிய திரையையுடைய பாற்கடலிலுதித்த சந்திரன் நிகராகும் என்று சொல்ல,—சந்தனு எனும்பெயர்த் தரணிகாவலன் வந்தனன்-சந்தனுவென்னும் பெயரையுடைய அரசன் அவதரித்தான்,—அவன் செயல் மகிழ்ந்து கேண்மின் - அவனுடைய செயலை மகிழ்ந்து கேளுங்கள். எ - று.

ஓ - அசை. தூயகுலமென்பார் அமுதவெண்டிரைச் சிந்து எனவும், நிறைந்த தண்ணளியுடையன் என்பார் திங்களாம் என எனவும், இவற்கு முன்னுள்ள அரசர்கள், பூவுக்குப்பாரமாகப் பாரதவீரருற்பவித்தமையும் கிருட்டிணன் பூபாரந்தீர்க்க வந்தவ தரித்தமையும்அவராற் பூபாரந் தீர்ந்தமையும் ஏனையவுமாகிய சரிதங்கணிகழ்தற்கு ஏதுவாயிராமையினால் அவர் சரிதங் கழிபேருவகைபயவா அதனால் அவற்றைச் சுருக்கிக்கூறி, இவன் இவற்றிக்கெல்லாம் காரணனாதலால் இவன் சரிதங் கழிபேருவகைபயக்கும் அதனால் விரித்துக்கூறுவேன் என்பார் அவன்செயல் மகிழ்ந்து கேண்மினோ எனவுங்கூறினார். (௩௩)

வேனிலானிவனெனவிளங்குகாலையிற்
கானகவேட்டைபோயிளைத்தகாவல
னானமென்குளிர்புனலாசையான்மணித்
தூநிறக்கங்கையாள்சூழலெய்தினான்.

(இ- ள்.) இவன் வேனிலான் என விளங்கு காலையில் - இவன் (அழகால்) மன்மதனென்றுசொல்ல விளங்குங்காலத்தில்,—கானக வேட்டைபோய் இளைத்த காவலன் - காட்டில் வேட்டைத்தொழிலிற்சென்று (அதனால்) இளைத்த அந்தச்சந்தனுமகாராசன்,—குளிர் ஆன மென் புனல் ஆசையால் - குளிர்ச்சி பொருந்திய மென்மையாகிய நீர்வேட்கையால்,—மணித் தூநிறக் கங்கையாள் சூழல் எய்தினான் - இரத்தினங்களையுடைய வெண்ணிறம்பொருந்திய கங்கையின்கரையை அடைந்தான். எ - று.

வேட்டைபோய் என்பது "மெல்லெழுத்து மிகுவழி" என்னுஞ் சூத்திரத்திலே தன்னினமுடித்த லென்பதனால் வல்லினமியல்பாயிற்று. மன்மதன், தான் ஒருவர்மாட்டு மயங்காது தன்மாட்டெவரும் மயங்குமாறு செய்யுமியல்பினனாதல் போல, இவனுந், தான் ஒருவர்மாட்டுமயங்காது தன்மாட் டெவருமயங்குமாறுசெய்தலால், வேனிலான் இவனென உவமைபுணர்த்தினாரெனினுமமையும். கங்கை காளிகளின் மயங்கினனெனில், ஊழ்பற்றிமயங்கலால் அது வினவன்றென்க.(௩௪)

மருவருங்குழல்விழிவதனம்வார்குழை
யிருதனந்தோள்கழுத்திதழொடின்னகை
புருவம்வண்புறவடிபொற்பப்பாவைய
ருருவுகொண்டனடனதுடைமைதோன்றவே.

(இ - ள்.) மரு வரும் குழல் விழி வதனம் வார்குழை - (அவன் அடைந்தபொழுது கங்கையானவள்) மணங் கமழுகின்ற அளகமும் கண்களும் முகமும் வடிந்த காதுகளும்,—இரு தனம் தோள் கழுத்து - இருமுலைகளும் தோள்களும் கழுத்தும்,—இதழொடு இன் நகை - அதரமும் இனிய பற்களும்,—புருவம் வண் புறஅடி - புருவமும் அழகிய புறங்கால்களும் ஆகிய இவைகள்,—தனது உடைமை

பொற்பத் தோன்ற - தனக்கு உடைமையாந்தன்மை பொலியத் தோன்ற,—பாவையர் உருவு கொண்டனள் - பெண்களுடைய வடிவத்தைக்கொண்டாள். எ - று.

ஏ - அசை. ஒடு, எண்ணுப்பொருளில் வந்தது; அது, "என்று மெனவுமொடு வுந்தோன்றி" என்னுஞ் சூத்திரவிதிப்படி நின்றவிடத்துப் பிரிந்து பிறவழிச்சென்று ஒன்றிற்று. நறுமணம் இயல்பாய்த்தோன்றுங் குழலென்பார் மருவருங்குழலென்றார். இவ்வவயவங்கள் வெளிப்படத் தோன்றும்படி கங்கை பெண்வடிவு கொண்டு நின்றாள் என்பதாம். (௩௫)

கங்கையின்வெள்ளமேற்கருத்துமாறியிம்
மங்கைதன்பேரொளிவனப்பின்வெள்ளமே
தங்கியசோகமுந்தாபமுங்கெடப்
பங்கயவிழிகளாற்பருகினனரோ.

(இ - ள்.) கங்கையின் வெள்ளமேல் கருத்து மாறி - (அச்சந்தனுமகாராசன்) கங்கையின் வெள்ளத்தில்வைத்த விருப்பம்நீங்கி,—இம் மங்கைதன் பேர் ஒளி வனப்பின் வெள்ளமே - இந்தப் பெண்ணினுடைய பெரிய காந்திபொருந்திய அழகாகிய வெள்ளத்தையே,—தங்கிய சோகமும் தாபமும் கெட - (வேட்டைபோயிளைத்தலால் தன்னிடத்துத்) தங்கிய இளைப்பும் விடாயுந்தீர,—பங்கய விழிகளாற் பருகினன் - தாமரைமலர்போன்ற கண்களாகிய வாயாற் குடித்தான். எ - று.

அரோ - அசை. ஏகாரம் தேற்றம். வனப்பின்வெள்ளம் என்பதில் இன் அல்வழிச்சாரியை. பங்கயம் ஆகுபெயர். விழிகளாற்பருகினன் என்பது வினைக்கண் வந்த சமாதியென்னும் அலங்காரம். இச்செய்யுள் அகப்பொருட்டுறையில் காட்சி.

வையகமடந்தைகொல்வரைமடந்தைகொல்
செய்யபங்கயமலர்த்திருமடந்தைகொ
றுய்யவண்கலைவிதச்சொன்மடந்தைகொ
லையமுற்றனனிவளார்கொலென்னவே.

(இ - ள்.) இவள் - (அங்ஙனம் பருகினவன்) இந்தப்பெண்,—வையக மடந்தை கொல் - பூமியில்வசிக்கு மொருபெண்ணோ,—வரை மடந்தை கொல் - வரையரமகளோ,—செய்ய பங்கய மலர்த்திரு மடந்தை கொல் - செந்தாமரை மலரிலிருக்கும் இலக்குமியோ,—துய்ய வண் கலைவிதச் சொல் மடந்தை கொல் - பரிசுத்தமான அழகுபொருந்திய கலைஞானங்களின் பகுப்புக்களையுடைய சரசுவதியோ,—ஆர் கொல் என்ன ஐயம் உற்றனன் - (இவர்களுள்) ஆரோ என்று சந்தேகமுற்றான். எ - று.

ஏ - அசை. கொல் ஐந்தும் ஐயம். கலை, வேதம், புராணமுதலாக அறுபத்து நான்காய் விரிதலிற் கலைவிதம் என்றார். இச்செய்யுள் அகப்பொருட்டுறையில் ஐயம்.

கண்ணிமைத்திருநிலங்காலுந்தோய்தலாற்
பெண்ணிவண்மானுடப்பிறப்பினளென
வெண்ணமுற்றவளருகெய்தியாவர்செய்
புண்ணியநீயெனப்புகழ்ந்துபோற்றினன்.

(இ - ள்.) கண் இமைத்துக் காலும் இரு நிலம் தோய்தலால் - (அப்படிஐயுற்றவன்) கண்கள் இமைக்கக் கால்களும் பெரிய நிலத்திற்படிதலினால்,—பெண் இவ

ள் - இப்பெண்ணானவள்,—மானுடப் பிறப்பினள் என எண்ணம் உற்று-மனுடப் பிறப்பை யுடையாளென்று துணிந்து,—அவள் அருகு எய்தி - அவள் சமீபத்திற் போய்,—நீ யாவர் செய் புண்ணியம் என - நீ யாவர்செய்த புண்ணியப்பயனென் று,—புகழ்ந்து போற்றினன் - புகழ்ந்து துதித்தான். எ - று.

புண்ணியம் - ஆகுபெயர். காலும் எச்சவும்மை. இமைத்து இமைக்க வெனத் திரிக்கப்பட்டது. இவள் ஒருவற் குரிமைபூணாது பொதுத்தன்மையுடைய கன்னி என்பதறிந்தானாய் ஒருவரைச்சுட்டாது யாவர் எனவும், புண்ணியந் தன்னை விரும் பிச்செய்தாரை இறப்ப உயர்த்திக் கழிபேருவகை நல்குமாறுபோல, இவளுந் தன் னைப்பெற்றாரை யிறப்ப உயர்த்திக் கழிபேருவகை நல்குமியல்பினள் என்னுங் கருத்தினனாய்ப் புண்ணியம் எனவுங்கூறினன். இச்செய்யுள் அகப் பொருட்டுறை யில் துணிவும் நயப்பும். (௩அ)

போற்றியகுரிசின்மேற்புளகமெய்தவே
யேற்றியவிழியினளிளகுநெஞ்சினள்
சாற்றியமலரயன்சாபமிவ்வழித்
தோற்றியதெனவுறுதுயரநீங்கினாள்.

(இ - ள்.) போற்றிய குரிசில்மேல் - (அவள் தன்னைத்) துதித்த அரசனிடத் தில்,—புளகம் எய்த ஏற்றிய விழியினள் - மயிர்சிலிர்த்தல் உண்டாக அழுந்த நோக்கிய கண்களையுடையளாய்,—இளகும் நெஞ்சினள் - கரைகின்ற மனத்தை யுடையளாய்,—மலர் அயன் சாற்றிய சாபம் - தாமரையாசனனாகிய பிரமன்சொல் லிய சாபம் நீங்குங்காலம்,—இவ்வழித் தோற்றியது என - இப்பொழுது தோன்றிய தென்று,—உறுதுயரம் நீங்கினாள் - அடைந்ததுக்கத்தை நீங்கினாள். எ - று.

எ - அசை. சாபம் - ஆகுபெயர். விழியினள் நெஞ்சினள் என்பன வினை யெச்சமுற்றுக்கள். தோற்றிய என்பது தன்வினையாய்நின்றது. எய்தவென்னுஞ் செயவெனெச்சங் காரியப்பொருட்டு. குரிசின்மேலேற்றிய விழியினள் எனக்கூட் டுக. எளிய மானுடப்பிறவி யெடுத்துழலுதல் எக்காலத்து நீங்குமோ வென்றுண் டாகிய துக்கம் என்பார் உறுதுயரம் என்றார். (௩௯)

பொங்கியமதர்விழிப்புரிவுமாதரந்
தங்கியமுகிண்முலைத்தடமுநோக்கியே
யிங்கிதமுறைமைநன்றென்றுவேந்தனு
மங்கிதமுடனவட்கன்புகூரவே.

(இ - ள்.) வேந்தனும் - சந்தனுமகாராசனும்,—ஆதரம் தங்கியமதர்விழிப்புரி வும் - (தன்மேல்) ஆசைவைத்த மதர்த்த கண்ணின்றொழிலையும்,—பொங்கிய முகிழ் முலைத் தடமும் நோக்கி - (அவ்வாசையினால்) பூரித்த (கோங்கின்) அரும்புபோலும் முலைத்தடத்தையும்பார்த்து,—இங்கிதமுறைமை நன்றுஎன்று - (இவளுடைய) எண்ணக்குறிப்பின் முறைமை நன்றென்று,—அங்குஇதமுடன் அவட்கு அன்பு கூர - அவ்விடத்தே இன்பத்தோடு அவண்மாட்டு அன்புமிக. எ - று.

ஏ இரண்டும் அசை. எய் இங்கிதம் என்பதனை வினைத்தொகை யாக்கி அவள் மாட்டேய்ந்த விங்கிதம் எனக்கோடலுமாம். தடம் - உயர்ந்தவிடம். ஆதரந்தங்கிய மதர்விழிப்புரிவு குறிப்புநோக்கு. குறிப்புநோக்காலும் முலைப்பூரிப்பாலும் அவ

ளெண்ணக்குறிப்பை அறிந்தானென்க. மகளிர்க்கு ஆடவர்மீதாசையுறுங்கால் முலை பூரித்தல் இயல்பு. பொங்கிய என்பதை விழிக்கேற்றிப் பொருள்கொள்ளுதல் சிறப்பின்று. அவள் அன்புவைத்தமையையன்றி அரசனும் அன்புகூர்ந்தான் என்னும் பொருளைத்தருதலின் வேந்தனும் என்னும் உம்மை இறந்தது தழீஇயிற்று. அவட்கு உருபு மயக்கம். (௪0)

கன்னியேயாமெனிற்கடிகொள்பான்மையை
யென்னின்மற்றுயர்ந்தவரில்லைமண்ணின்மே
லுன்னினைவுரையெனவுசாவினனிகன்
மின்னிலைவடிகொள்வேல்வேந்தர்வேந்தனே.

(இ - ள்.) கன்னியே ஆம் எனில் - (பெண்ணே நீ) கன்னிகையேயாயின்,— கடி கொள் பான்மையை - விவாகஞ்செய்துகொள்ளும் பகுதியை உடையை,— மண்ணின்மேல் என்னில் மற்று உயர்ந்தவர் இல்லை - நிலவுலகத்தில் என்னிலும் வேறுயர்ந்தாரில்லை (ஆதலால் நானே உன்னை விவாகஞ்செய்தற்கு உரியேன்),— உன் நினைவு உரை என உசாவினன் - (இனி) உன்னெண்ணத்தைச் சொல்லுதி என்று (அவளை) ஆராய்ந்தான்,—இகல் மின் இலை வடி கொள் வேல் வேந்தர் வேந்தன் - பகையையுடைய ஒளிபொருந்திய இலைத்தொழிலமைந்த கூர்மையாகிய வேலையுடைய அரசர்க்கரசனாகிய சந்தனுமகாராசன். எ-று.

கன்னியே யென்பதன் கண்ணேகரம் தேற்றம். பிரிநிலை யெனினுமாம். இறுதியில் ஏகாரம் - அசை. என்னில் என்பதில் இல்லுருபு நீக்கப்பொருட்டு. பான்மையை முன்னிலை ஒருமைக் குறிப்புவினைமுற்று. மின் நிலை எனப்பிரித்து, மின்னிலைத்த எனப் பொருள்கொள்ளினும் பொருந்தும். அன்புகூர உசாவினன் எனமுடிக்க. நீ கன்னியேயாமெனில் என்னால் மணம்புரியப்படும் பகுதியுடையை யாவை; (எனக்குமேற்பட்டவனை விவாகஞ்செய்யலாமெனக்கருதில்) எனக்கு மேற்பட்டோரில்லை ஆதலால், எனப் பொருள்கோடலும் ஒன்று. (௪க)

நாணினளொதுங்கினணதிமடந்தையும்
பூணுறுமுலைமுகம்பொருந்தநோக்கினள்
சேணுறுதனதுமெய்த்தேசுபோனகை
வாணிலவெழச்சிலவாய்மைகூறுவாள்.

(இ - ள்.) நதிமடந்தையும் நாணினள் ஒதுங்கினள் - கங்கையாகிய பெண்ணும் நாணி ஒதுங்கி,—பூண் உறு முலை முகம் பொருந்த நோக்கினள் - ஆபரணம்பொருந்தும் முலையிற் றன்முகம் பொருந்தப்பார்த்து,—சேண் உறு தனது மெய்த் தேசுபோல் - ஆகாயத்திலுள்ள தனது வடிவின் ஒளிபோல,—நகை வாள் நிலவு எழ - சிரிப்பாகிய ஒளிபொருந்திய சந்திரிகை உண்டாக,—சில வாய்மை கூறுவாள் - சில வசனங்களைச் சொல்லுவாள். எ-று.

நாணினள் ஒதுங்கினள் நோக்கினள் என்பன வினையெச்சமுற்றுக்கள்.நதிமடந்தையும் என்னும் உம்மை இறந்தது தழீஇயது. முலையினது முகத்தைப்பொருந்த நோக்கி எனினும்பொருந்தும். சேணுறுதனது மெய்த்தேசு என்பதற்குத் தூரத்தே விளங்குகின்ற தன் மெய்யொளியெனக் கோடலுமொன்று. கற்புடைமகளிராடவரோடுபேசுங்கால் அவர் முகம்பாராது தலைகுனிந்து பேசுதலியல்பென்பார், முலை முகம் பொருந்தநோக்கி என்றும், இவனிடத்தில் தான் வினவுவது,எவரும் உடன்படாப் பெருந் தீச்செயலாயினும் தன்மீதுள்ள மோகத்தால் தடையின்றி உடன்

ண்படுவானென இங்கிதம் வடிவுசெயல் என்பனவற்றான்நன்றுயறிந்தமையால் இவனறிவிருந்தபடி என்னே என எள்ளல்பற்றி வந்த நகை நிகழ வினவினளென்பார் நகைவாணிலவெழச் சிலவாய்மைகூறினுள் என்றுங் கூறினர். (சுஉ)

இரிந்துமெய்ந்நடுங்கிடயாதியாதுநான்
புரிந்ததுபொறுத்தியேற்புணர்வலுன்புயம்
பரிந்தெனைமறுத்தியேற்பரிவொடன்றுனைப்
பிரிந்தகன்றிடுவெனிப்பிறப்புமாற்றியே.

(இ - ள்.) இரிந்து மெய் நடுங்கிட - (நீ) அஞ்சி உடம்பு நடுங்க,—நான் புரிந்தது யாது யாது பொறுத்தியேல் - நான் செய்தது எது எதுவோ அது அதைப் பொறுத்தியானால்,—உன் புயம் புணர்வல் - உன்புயத்தை அணைவேன்,— பரிந்து எனை மறுத்தியேல் - (அத்தொழிற்கு) இரங்கி என்னைத் தடுத்தியாயின்,— பரிவொடு அன்றே உனைப் பிரிந்து - வருத்தத்தோடு அன்றைக்கே உன்னைப்பிரிந்து,—இப் பிறப்பு மாற்றி அகன்றிடுவென் - இந்த மனுடப்பிறப்பை ஒழித்து நீங்குவேன். எ - று.

மாற்றியே என்பதில் ஏகாரம் அன்று என்பதனோடு பிரித்துக் கூட்டப்பட்டது. பொறுத்தியேல் என்பது ஏலீற்றுவினையெச்சம். யாதுயாது என்பது தொழிற்பன்மைகுறித்துநின்றது. புரிந்தது என்பது இறந்தகால இடைநிலை பெற்ற தொழிற்பெயர். புணர்வல் தன்மையொருமை வினைமுற்று. என்னாற் செயப்படும் வன்செய்கையெல்லாம் ஏனைவன் செய்கையில் நின்றுந் தெரிந்தெண்ணப்படும் வன்செய்கையென்பாள் இரிந்து மெய்ந்நடுங்கிட யாதுயாது நான்புரிந்தது என்றாள்.

மெய்தருவிதியினேன்விரதமற்றிவை
யெய்தரிதொருவராலெய்தவல்லையேற்
கைதருகெனப்பெருங்காதலாளனு
முய்தரிதெனவிசைந்துடன்படுத்தினன்.

(இ - ள்.) இவை மெய் தரு விதியினேன் விரதம் - இவைகள் மெய்மைபொருந்திய நியமத்தையுடைய என் விரதம்,—ஒருவரால் எய்தரிது - ஒருவராற் பொறுத்தல் அரிது,—எய்த வல்லையேல் கைதருக என-(நீ இதனைப்) பொறுக்க வல்லையானாற் கை வழங்குக என்றுசொல்ல,—பெரும் காதலாளனும் - பேராசையையுடைய சந்தனுமகாராசனும்,—உய்தரிது என இசைந்து உடன்படுத்தினன் - உய்தல் அரிதென்று சம்மதித்து (அவளை) உடன்படச்செய்தான். எ - று.

மற்று - அசை. உய்து என்பது துச்சாரியைபெற்றுநின்ற முதனிலைத் தொழிற்பெயர். தருக என்னும் வியங்கோள் ஈறுதொக்கது. ஏனையர் தாங்கொண்ட விரதமழியவரினும் பொறுப்பர்; யானங்ஙனமழியவரிற் பொறேனென்பாள் மெய்தரு விதியினேன் என்றாள். ஒன்றை நிச்சயப்படுத்துவோர் இக்காலத்தும் கைவழங்குமாறு காண்க. (சச)

எனதுயிரரசுவாழ்வென்பயாவையு
நினதுநின்னேவலினிற்பன்யானென
வனிதையைமருட்டினன்மன்றலெண்ணியே
தனதனுநிகரிலாத்தனமகீபனே.

(இ - ள்.) தனதனும் நிகர் இலாத் தனமகீபன்- குபேரனும் நிகரில்லாதசெல்வங்களையுடைய சந்தனுமகாராசன்,—மன்றல் எண்ணி - விவாகஞ்செய்தலை நினை

ந்து, எனது உயிர் அரசு வாழ்வு என்ப யாவையும் நினதே - என்னுடைய உயிர் இராச்சியம் வாழ்வு என்பன எவையும் நின்னுடையவே,—யான் நின் ஏவலின் நிற்பன் என - நான் உன்னுடைய ஏவலின்வழி நிற்பேன் என்று கூறி,—வனிதையை மருட்டினன் - கங்கையைமயக்கினன். எ - று.

ஈற்றில் ஏ - அசை. எண்ணியே என்பதில் ஏகாரம் நினது என்பதனோடு கூட்டப்பட்டது. நினது என்பது துவ்விகுதியும் அகரச்சாரியையும் பெற்றுநின்ற வினைக்குறிப்புமுற்று. யாவையும் நினது என்பது பன்மையொருமை மயக்கம். நினது என்பதில் துவ்வைச் சாரியையாக்கினுமமையும். என்ப என்பது அன்பெறு அகரவீற்றுப்பலவறிசொல். நிகரிலாத என்னும் பெயரெச்சத்தீறுதொக்கது. (௪௫)

அருமறைமுறையினலங்கிசான்றெனத்
திருமணம்புரிந்துளந்திகழவைகின
னிரதியுமதனனுமல்லதில்லைமற்
றொருவருமுவமையென்றுலகுகூறவே.

(இ - ள்.) அருமறை முறையினால் அங்கி சான்று எனத் திருமணம் புரிந்து - அரிய வேதவிதியோடு அக்கினிசாக்ஷியாக அழகிய விவாகத்தைச்செய்து,—உளம் திகழ - மனம் உவப்ப,—இரதியும் மதனனும் அல்லது - இரதியும் மன்மதனும் அல்லாமல்,—மற்று ஒருவரும் உவமை இல்லை என்று - வேறொருவரும் நிகரில்லையென்று,—உலகு கூறவைகினன் - உலகஞ்சொல்லும்படி இருந்தான். எ - று.

ஏ - அசை. முறையினாற்புரிந்து எனக்கூட்டுக. திகழவைகினன் கூறவைகினன் எனத் தனித்தனி சென்றியையும். அரு என்னும் அடை முறையைவிசேடித்தது. நுண்ணறிவுடையோரானன்றி யேனையோரானறியப்படா முறையென்பார் அருமுறையெனவும், மன்மதன் இரதியுடன்கூடி அனுபவிக்கும்போகம், பிறர்க்கு வேட்கைமீதூரச்செய்து காமவின்பத்திற் புகுத்துமாறுபோல, இவனும் கங்கையுடன்கூடி அனுபவிக்கும்போகம், அறிந்தோரெவரையும் வேட்கை மீதூரச்செய்து காமவின்பத்திற்புகுத்தும் வலிபடைத்ததென்றுலகுபுகழும் என்பார் இரதியுமதனனுமல்லது மற்றொருவருமுவமையில்லையென்றுலகுகூறஎனவுங் கூறினர். அரு என்னும் அடையை மறைக்கேற்றினும் அமையும். இப்பொருட்கு, உயிர்களுக்கு உறுதிபயக்கும் விதிநிடேதங்கள் தெள்ளிதிற்புலப்படச் சிவபெருமான் ஆதியிலருளிச்செய்தமையினால் அருமைபடைத்த மறை யென்றகலங்கூறுக. (௪௬)

மருவுறச்சிலபகன்மணந்துமான்விழி
கருவுயிர்த்தனளெனக்களிகொள்காலையிற்
பருவமுற்றன்புடன்பயந்தமைந்தனைப்
பொருபுனற்புதைத்தனள்புவனங்காணவே.

(இ - ள்.) சிலபகல் மருவுற மணந்து - (சந்தனுமகாராசன் இப்படிச்) சில நாள் (மனம்) பொருந்தப் புணர்ந்து,—மான்விழி கரு உயிர்த்தனள் எனக்களி கொள் காலையில் - மான்போன்ற (மருண்ட) நோக்கத்தையுடைய கங்கையானவள் பிள்ளையைப்பெற்றாள் என்று களிப்படையுஞ்சமயத்தில்,—பருவம் உற்று அன்புடன் பயந்த மைந்தனை - (அவள்) பத்துமாசம் நிரம்பத (தான்) அன்போடு பெற்ற புத்திரனை,—புவனம் காணப் பொருபுனல் புதைத்தனள் - உலகங்காண அலை மோதும் நீரிலே அமிழ்த்தினாள். எ - று.

ஏ - அசை. உற்று என்பது உற எனத் திரிக்கப்பட்டது. மணந்து களி கொள்காலை எனவும், கருவுயிர்த்தனளெனக்களிகொள்காலை எனவும் தனித் தனிகூட்டுக. அடாப்பழிசெய்வார் தமக்குவரும் ஏதத்திற்கஞ்சி அந்தரங்கமாகச்செய்தலியல்பு; இவள் அங்ஙனமன்றி அஞ்சாநெஞ்சளாய் வெளிப்படச்செய்தாள் என்பார் புவனங்காணப்புதைத்தனள் என்றார். மணத்தலாற் கருவுயிர்த்தனள் என இயைப்பினும் அமையும். பருவத்தையுற்றுப் பயந்த என உருபுவிரித்து எச்சத்தைத் திரியாது பொருள் கோடலுமொன்று. (சஎ)

கண்டுளம்வெருவிமுன்கதித்தவாசகங்
கொண்டுரையெடுத்திலன்கொண்டகாதலா
னொண்டொடியுடன்மணந்துருகிவைகினன்
பண்டையினெழுமடிபரிவுகூரவே.

(இ - ள்.) கொண்ட காதலான் - (அவள்மேல்) வைத்த ஆசையுடையனாகிய சந்தனுமகாராசன்,—கண்டு உளம் வெருவி - (அதனைக் கண்டு மனம் அஞ்சி,—முன் கதித்த வாசகம் கொண்டு உரை எடுத்திலன் - (நீ என்ன செய்யினும் பொறுப்பேன் என்று தான்) முன்னே (அவளுக்குச்) சொன்னவசனத்தை உட்கொண்டு ஒன்றும் பேசாதவனாய், பண்டையின் எழுமடி பரிவுகூர - முன்னையினும் எழுமடங்கு அன்பு மிக,—ஒள் தொடியுடன் உருகி மணந்து வைகினன் - ஒள்ளிய வளையலை அணிந்த கங்கையோடு கசிந்து புணர்ந்திருந்தான். எ - று.

ஏ - அசை. கதித்தல் சொல்லுதல். எடுத்திலன்வினையெச்சமுற்று. பண்டையின் இன்னுருபுநீக்கப் பொருளில்வந்தது. காதலான், குறிப்புவினையாலணையும் பெயர். கொண்டகாதலான் என உடம்பொடுபுணர்த்திக்கூறினமையிற் காதலாலும் உரையெடுத்திலனென்க. (சஅ)

பின்னருமறுவரைப்பெற்றதாய்மன
முன்னரின்மும்மடிமுரண்டுமாய்க்கவே
மன்னவனவற்றினும்வாய்திறந்தில
னன்னகர்ச்சனமெலாநடுநடுங்கவே.

(இ - ள்.) பின்னரும் அறுவரை - பின்னும் ஆறுபுதல்வர்களை,—பெற்றதாய்- பெற்ற தாயானவள்,—முன்னரின் மும்மடி மனம் முரண்டு மாய்க்க - முன்னையினும் மும்மடங்கு மனம் வெறுத்துக்கொல்ல—நல் நகர்ச் சனம் எலாம் நடு நடுங்க - நல்ல நகரிலுள்ள சனங்களெல்லாம் (அதுகண்டு) நடுநடுங்க—மன்னவன் அவற்றினும் வாய் திறந்திலன் - சந்தனுமகாராசன் அக்கொலைகள் நிகழ்ந்தவழியும் ஒன்றும் பேசாதிருந்தான். எ - று.

ஏ - இரண்டும் அசை. அறுவரை மாய்க்கவென்றியையும். அவற்றினும் என்னும் உம்மை இழிவுசிறப்போடிறந்தது தழீஇயவெச்சமுமாய் நின்றது. பின்னர் முன்னர் என்பவற்றில் அர் பகுதிப்பொருள் விகுதி. முன்னரில் என்பதில் இல்லுருபு நீக்கப்பொருட்டு. முரண்டு என்னுஞ் செய்தெனெச்சம் சினைவினையாதலின் மாய்க்க என்னும் முதல்வினையோடுமுடிந்தது. தாய் என வாளாகூறின் ஆட்டுவாள், ஊட்டுவாள், ஒலுறுத்துவாள், நொடிபயிற்றுவாள், கைத்தாய் எனத் தாயரைவகையர்; அவருள் ஒருத்திகொல்லோ என ஆசங்கைநிகழுமன்றே, அது நிகழாதபடி பெற்றதாயென அடைகொடுத்தும், இத் தீச்செய்கை கண்டுழி அதற்குப் பரிந்து கலங்கினார் என்பார் நகர்ச்சனமென வாளாகூறாமல் நன்னகர்ச்சனம் என்றடைகொடுத்துங் கூறினார். (சகூ)

வழுவறுகுருகுலமன்னன்மைந்தரோ
ரெழுவரைமுருக்கினளீன்றதாயெனப்
பழுதறுமகப்பலபயந்தமங்கைய
ரழுதனர்கட்புனலாறுபாயவே.

(இ - ள்.) வழு அறு குருகுல மன்னன் மைந்தர் ஒரெழுவரை - குற்றமற்ற குருகுல ராசனாகிய சந்தனுவினுடைய புதல்வ ரெழுவரை—ஈன்ற தாய் முருக்கினள் என - பெற்றதாய் கொன்றாள் என்று—பழுது அறு பல மகப் பயந்த மங்கையர் - பழுதில்லாத பல பிள்ளைகளைப் பெற்ற பெண்கள்—கண் புனல் ஆறு பாய அழுதனர் - கண்ணீராகிய ஆறு பெருக அழுதார்கள். எ - று.

ஏ - அசை. கட்புனல் ஐந்தனுருபும் பயனு முடன்றொக்க தொகை. வழுவறு என்பதனை மைந்தரோடும், பழுதறு என்பதனை மங்கையரோடுங் கூட்டுக. ஐம்பொறியிற் பலகுறைந்த புதல்வருயிர்விடினும் ஈன்றதாயர் அவருடனே தாமு முயிர்விடுவர்; அங்ஙனமாகவும், ஈன்ற தாயாகிய இவள் அப்பொறிகள் சிறிதுங் குறையாத பேரழகரெனக் கண்டுங், கண்ணோடாது வதைத்தாள் என்பார் மைந்தரை முருக்கினள் ஈன்றதாய் என்றது வழுவறுமைந்தரை ஈன்றதாய் முருக்கினள் எனவும், தம்புதல்வர்போற் பிறபுதல்வரினும் இரக்க முடையர் என்பார் பழுதறு மங்கையர் எனவும், கற்றோர் அருமை கற்றோரறியுமாறுபோல மகப்பெற்றோரருமை பெற்றோரறிவர் என்பார் மகப்பலபயந்த மங்கையர் எனவும், மிக மனநெகிழ்ந்தழுதார் என்பார் கட்புனலாறு பாய அழுதனர் எனவுங் கூறினார். வழுவறு என்பதனை மன்னற்கேற்றிப் பொருள்கொள்ளில் நீதியில் வழுவுதலற்ற என்றுரைக்க. (ருo)

கங்கையென்றுலகெலாங்கைதொழத்தகு
மங்கையங்கனந்தரம்வயிறுவாய்த்துழி
வெங்கயகடகரிவேந்தன்மாமனப்
பங்கயந்துறந்ததுபழையவின்பமே.

(இ - ள்.) கங்கை என்று உலகு எலாம் கைதொழத் தகும் மங்கை - கங்கையென்று உலகமெல்லாம் வணங்கத்தக்க பெண்ணானவள்—அனந்தரம் வயிறு வாய்த்துழி - பின்பு கருப்பந் தரித்தபொழுது—வெம் கய கட கரி வேந்தன் மா மனப் பங்கயம் - கொடிய பெரிய மதம் பொருந்திய யானையையுடைய சந்தனு மகாராசனது பெருமை பொருந்திய இருதயகமலம்—பழைய இன்பம் துறந்தது - (அவளுடைய) பழைய இன்பத்தை வெறுத்தது. எ - று.

அங்கு - ஏ - அசைகள். கய என்பது உரிச்சொல்லாதலால் கயகடம் என இயல்பாயிற்று. கடகரி என்பது வடநூன் முடிபு. வயிறுவாய்த்தல் - ஒருசொல். அவன்மனம் வசிட்டமுனிவரது சாபத்தின் வழியேசென்று போகத்தைவெறுத்த தென்பார் துறந்தானென முதன்மேலேற்றிக் கூறாது மனப்பங்கயந் துறந்தது எனச் சினைமேலேற்றியும், இவளது இன்பம் புதிதன்று முற் பிறப்புத்தொட்டு மரீஇயதென்பார் பழைய இன்பம் எனவுங் கூறினார். வெங்கயகடகரி வேந்தன் என்பதற்கு மதயானை போலு மரசனென உவமை யாக்கி, மதயானை தன்வயமின்றி மதத்தின் வயமாமாறுபோல இவனுந் தன்வயமின்றி ஆசையின் வயத்தானான் என அகலங்கூறலும் ஒன்று. (ருக)

மதலையைப்பயந்தனண்மடந்தையென்றலுங்
கதுமெனச்சென்று தாய்கைப்படாவகை
யிதமுறப்பரிவுடனெடுத்துமற்றவள்
பதயுகத்தாமரைபணிந்துபேசுவான்.

(இ - ள்.) மடந்தை மதலையைப் பயந்தனள் என்றலும் - மனைவி புதல்வனைப்பெற்றாள் என்று கூறலும்—கதுமெனச் சென்று - (அது கேட்ட சந்தனுமகாராசன்) விரைந்துபோய்—தாய் கைப்படாவகை - மாதாவின் கையில் அகப்படாவண்ணம்—இதம் உறப் பரிவுடன் எடுத்து - இன்பம் மிக அன்போடு (அப்புதல்வனை) எடுத்து—அவள் பத யுகத்தாமரை பணிந்து பேசுவான் - அவளுடைய கால்களாகிய இரண்டு தாமரை மலர்களையும் வணங்கிச் சொல்லுவான். எ - று.

மற்று அசை. தாமரை ஆகுபெயர். என்றலும் என்பது உம்மீற்றுவினையெச்சம். கைப்படாவகை என்பது வகையீற்று வினையெச்சம். யுகத்தாமரையென்பது சந்த இன்பநோக்கி மிக்கது. ஏழு பிள்ளைகளை இரக்கமின்றி வதைத்தவாறுபோல இப்பிள்ளையையும் வதைப்பாள் என்னும் பதைப்பால் விரைந்தான் என்பார் கதுமென என்றும், மக்கண்மெய்தீண்டல் உடற்கின்பம் என்னுங் கருத்துடையனாய் என்பார் இதமுற என்றும், எல்லா வாஞ்சையினும் புத்திரவாஞ்சை மிகப்பெரிதென்பார் பரிவுடன் என்றும், தான் அவட்குக் கூறிய உறுதிமொழி அழிதலினாலே கழிபெருஞ்செற்ற முடையளாய்த் தன்னைத் துறந்தேவிடுவாள்; அங்ஙனந் துறவாவகை அவள் செற்றத்தைச் சாதுரியமாய் நீக்கி முகங் கோடல் வேண்டுமென்னுங் கருத்துடையனாய்த், தன்னை வணங்கற்பாலளாய அவளைத் தான் வணங்கினானென்பார் அவள் பதயுகத்தாமரை பணிந்தெனவுங் கூறினார். ()

நிறுத்துகமரபினைநிலைபெறும்படி
வெறுத்தெனைமுனியினும்வேண்டுமாவிது
மறுத்தனன்யானெனமனஞ்செயாதினிப்
பொறுத்தருள்புரிகவிப்புதல்வன்றன்னையே.

(இ - ள்.) மரபினை நிலைபெறும்படி நிறுத்துக - (பெண்ணே என்) வம்மிசத்தை நிலைபெறும்படி நிறுத்துக—எனை வெறுத்து முனியினும் இது வேண்டும் - என்னைவெறுத்து (நீ) கோபித்தாலும் (மரபு நிலை பெறுதலாகிய) இதுவே (எனக்கு) வேண்டும்—யான் மறுத்தனன் என மனஞ்செய்யாது - நான் (உனக்கு முன் சொன்னவாக்கை) மறுத்தேன் என்று எண்ணாது—இனி இப் புதல்வன் றன்னைப் பொறுத்து அருள்புரிக - இனி இந்தப் புதல்வனைக் (கொல்லாது) பொறுத்து அருள்செய்க. எ - று.

ஆல் - ஏ - அசைகள். மனஞ்செய்தல் - ஒருசொல். பெறும்படி என்பது படியீற்று வினையெச்சம். வேண்டும் என்பது தேற்றப் பொருட்கும் தொழிற்பெயர். முனியினும் என்னும் உம்மை எதிர்மறை. வியங்கோள்கள் வேண்டிக் கோடற்பொருளில் வந்தன. இது என்பதற்கு இப்பிள்ளை யெனப் பொருள் கொள்ளுதல் பொருந்தாது. (ருங)

என்றுபற்பலமொழியிவணியம்பவே
நன்றுநன்றவனிபநவின்றவாசக
மின்றுநின்றிரங்கினையெழுவர்மைந்தரைக்
கொன்றவன்றென்செய்தாய்கொடியையென்னவே.

(இ - ள்.) என்று பற்பல மொழி இவன் இயம்ப - என்று பற்பல (விநய) வசனங்களை இந்தச் சந்தனுமகாராசன்சொல்ல—அவனிப நவின்ற வாசகம் நன்று நன்று - அரசனே நீ சொன்னவசனம் நன்று நன்று—இன்று நின்று இரங்கினை - இப்பொழுது நின்று இரங்கினாய்—எழுவர் மைந்தரைக் கொன்ற அன்று என்செய்தாய் - ஏழு புதல்வர்களையுங் கொன்ற அக்காலங்களில் என்னசெய்தாய்—கொடியை என்ன-நீ மிகக் கொடியை என்று (கங்கை) சொல்ல. எ - று.

ஏ இரண்டும் அசைகள். நன்று நன்று என்னும் அடுக்கு வெகுளிபற்றிவந்தது. "தொடரலிறுதி தம்முற்றாம்வரின்" என்னுஞ் சூத்திரத்தாற் பற்பல மொழியென்றார். அவனிப என்பது அண்மைவிளியாதலின் ஈறுகெட்டது. இரங்கினை, கொடியை என்பன முறையே முன்னிலை யொருமை யிறந்தகாலத் தெரிநிலை வினைமுற்றுங் குறிப்புவினைமுற்றுமாம். "கற்றதனாலாய பயனென் கொல்" என்பதுபோல எவனென்னும் வினாப்பெயர் என்னெனமரீஇ, ஈண்டு இன்மை குறித்துநின்றது. எழுபிள்ளைகளையும் ஒரேகாலத்திற் கொல்லாமற் பிறந்த அவ்வக் காலங்களிற் கொன்றமையினால் அன்று என்பதற்கு அக்காலங்களில் எனப்பொருளுரைக்கப்பட்டது. (௰௪)

அரசனுமுணர்ந்துநீயார்கொல்பாலரைத்
திரைசெறிபுனலிடைச்செற்றதென்கொலா
முரைசெயவேண்டுமென்றுரைப்பவஞ்சியும்
வரிசையினுயர்ந்ததன்வரவுகூறுவாள்.

(இ - ள்.) அரசனும் உணர்ந்து - அதுகேட்ட சந்தனுமகாராசனும் ஆலோசித்து—நீயார் - பெண்ணே நீயார்—பாலரைத்திரைசெறி புனலிடைச் செற்றது என் - புதல்வர்களைத் திரைநெருங்கிய நீரிலே அமிழ்த்திக்கொன்றது என்னை—உரைசெயவேண்டும் என்று உரைப்ப - (யான் அறியச் சொல்லல் வேண்டும் என்று சொல்ல—வஞ்சியும் - கொடிபோன்ற இடையையுடைய கங்கையும்—உயர்ந்த தன் வரவு வரிசையிற் கூறுவாள்-உயர்ந்த தன்னுடைய வரலாற்றை முறைமையோடு சொல்லுவாள். எ - று.

கொல் - இரண்டும், ஆம் என்பதும் அசைகள். உம்மைகளிரண்டும் எச்சவும்மைகள். வஞ்சி - ஆகுபெயர். யார் என்னும் வினாவினைக்குறிப்புமுற்று உயர்திணை முப்பாற்கும் பொதுவினையாதலால் நீயார் எனப்பட்டது. உரைசெய என்பது ஒருசொல். அமிழ்த்திக்கொல்லுதற் கியைந்த நீர் என்பான் திரைசெறிபுனல் எனவும், பாலரைக்கோறல் பழியெல்லாவற்றினு மிக்க பழியாகலின் வெகுளி தோன்ற நீயார் எனவுங் கூறினான். (௰௫)

வான்முகமதியமும்புதியமாலிகைக்
கான்முகவிதழியுங்கமழுங்கங்கையா
டேன்முகம்பொழிதருசெய்யதாமரை
நான்முகன்பேரவைநண்ணினாளரோ.

(இ - ள்.) வான்முக மதியமும் - ஆகாயத்திலுள்ள இளம்பிறையும்—புதிய கான்முக இதழி மாலிகையும் - அன்றலர்ந்த வாசனையைத் தன்னிடத்துள்ள கொன்றைப்பூமாலையும்—கமழும் கங்கையாள் - கமழுகின்ற கங்கை யானவள்—தேன்முகம் பொழிதரு செய்ய தாமரை நான்முகன் பேர் அவை நண்ணினாள் - தேனை (விண்ட) வாயாற் சொரிகின்ற செந்தாமரை யாசனனாகிய பிரமனுடைய பெரிய சபையை அடைந்தாள். எ - று.

அரோ - அசை. இதழி, தாமரை என்பன ஆகுபெயர்கள். மதியமும் இதழியும் என்னும் உம்மைகள் எண்ணும்மையோடு சிறப்பும்மையு மாயின. மாலிகை போலத் தொடர்ந்த இதழி எனினுமமையும். கமழ்தலை மதிக்குக்கொள்ளுங்கால் விளங்குதல் என்று பொருள்கொள்க. சிவபெருமானுடைய சடை முடியிற் பிறையும் இதழியுங் கங்கையும் ஒருசேரவிருக்கும் ஒற்றுமைபற்றி மதியமும் இதழியுங் கமழுங் கங்கையாள் என்றாள். பொழிதரு என்பது ஒருசொல். கங்கையாள் நண்ணினாள் என்றியையும். வால்முகமதியம் எனக் கண்ணழித்து, களங்கமில்லா இளம்பிறை எனினும் அமையும். (ருசு)

இருங்கலையிமையவரெதிரிறைஞ்சுவாண்
மருங்கலைமதியினைமதிக்குமாறுபோ
லருங்கலையயலுறவதிர்ந்துவீசினான்
பொருங்கலையெனுமிகற்புரவிவீரனே.

(இ - ள்.) பொரும் கலை எனும் இகற் புரவி வீரன் - பொருகின்ற கலைமானென்னும் வலிய வாகனத்தையுடைய வாயுதேவன்—எதிர் இறைஞ்சுவாள் மருங்கு அலை - (பிரமனுக்கு) எதிரே வணங்குபவளாகிய கங்கையின் மருங்கிலே அலைகின்ற—இரும் கலை இமையவர் மதியினை மதிக்கும் ஆறுபோல் - பெரிய நூலறிவையுடைய தேவர்களுடைய புத்தியை (இவ்வளவினதென்று) அளவிடுந் தன்மைபோல—அரும் கலை அயல் உற அதிர்ந்து வீசினான் - (அவளுடைய) அரிய புடைவை ஒருபக்கத்திலே விலகும்படி கிளர்ந்துவீசினான். எ - று.

ஏ - அசை. அலைமதி - வினைத்தொகை. இறைஞ்சுவாள் - வினையாலணையும் பெயர். கலை - ஆகுபெயர். கங்கையினது இடையில் ஆசைவைத்த தேவர் புத்தி அவ்வாசையிற் சிறிதோ பெரிதோ என்பதை மதிக்குமாறுபோல அவள்புடைவை பக்கத்தி லொதுங்க வீசினான் என்பது கருத்து. கல்வி யறிவிருப்பினும் பெண்ணாசையை அடக்கலரிதென்பதுபோதர இருங்கலை இமையவர் எனவும், தொழில் முதலியவற்றாலும் மென்மையினாலுஞ் சிறந்த கலையெனவும், மானத்தைக் காத்தலாற் சிறந்தகலையெனவும், இருபொருள் போதர அருங்கலை எனவுங் கூறினாள். இறைஞ்சுவாண்மருங்கு என்பது இடக்கரடக்கல். கலையெனுமிகற்புரவி என்பது "தோகைப்புரவி" என்பதுபோல நின்றது. இச்செய்யுள் போல, என்னும் உவமச்சொல்லோடு வந்த பெயர்பொருட்டற் குறிப்பேற்ற மென்னும் அலங்காரம். (ருஎ)

திருத்தகுமவயவந்திகழ்ந்துதோன்றவே
கருத்துடனவைக்கணோர்கண்புதைக்கவு
மருத்தினைமனனுறமகிழ்ந்துகாதல்கூ
ருருத்தகுமுரிமையோடொருவனோக்கினான்.

(இ - ள்.) திருத்தகும் அவயவம் திகழ்ந்து தோன்ற - (அப்பொழுது அவளுடைய) அழகுதக்க அவயவம் விளங்கித்தோன்ற—அவைக்கணோர் கருத்துடன் கண் புதைக்கவும் - சபைக்கணுள்ளோர் (பார்த்தல்பாவத்துக்கு ஏதுவாகும் என்னும்) எண்ணத்தோடு கண்மூடவும்—ஒருவன் - (அவருள்) ஒருவன்—மருத்தினை மனன் உற மகிழ்ந்து - வாயுவை மனத்தில் மிக மகிழ்ந்து—காதல் கூர் உரு - ஆசையை மிகுவிக்கும் அவ்வவயவத்தை—தகும் உரிமையோடு நோக்கினான் - (புணர்ச்சிக்குத்) தகுந்த உரிமையோடு பார்த்தான். எ - று.

ஏ - அசை. புதைக்கவும் என்னும் உம்மை இழிவு சிறப்பு. தேவர்க்குக் கொள்ளின் உயர்வு சிறப்பு. கூர் உரு என்பது பிறவினைப் பொருளுணர்த்தும்

விவ்விகுதி தொக்க வினைத்தொகை. பெண்களுக்குள்ள அவயவங்களெவற்றினும் பார்க்க விசேடமாய்ப் பெண்பாலை உணர்த்துவதும், ஆடவர்க்கு இன்பத்தைக் கொடுத்தற்கு இன்றியமையா திருப்பதுமாகிய அவயவம் இது என்பாள் திருத்தகும் அவயவம் என்றும்; தனக்குள்ள வேணவாவினால் எத்துணை முயற்சி செய்யினும் காண்டற்கரிய அவயவத்தை இவன் மிக எளிவரவாய்க் காணச்செய்தானேயென் றவன்மீது மிக மகிழ்ந்தா னென்பாள் மருத்தினை மனனுற மகிழ்ந்து என்றும், தானிவட்கு நாயகனும் பெருங்கிழமை பூண்டு புணரவேண்டு மென்னும் பேரவாவயத்தனாய் நோக்கினான் என்பாள் தகுமுரிமையோடு ஒருவன் நோக்கினான் என்றுங் கூறினாள். திருத்தகுமவயவம் என்றது தொடை மூலத்தை. (ருஅ)

நோக்கியவருணனை நுவலுநான்மறை
யாக்கியமுனியுருத்தழன்றுபார்மகள்
பாக்கியமென்னவுற்பவிக்கநீயெனத்
தாக்கியவுருமெனச்சபித்தகாலையே.

(இ - ள்.) நோக்கிய வருணனை - (அவ்வவயவத்தைப்) பார்த்தவருணனை— நுவலும் நான்மறை ஆக்கியமுனி உருத்து அழன்று - அத்தியயனஞ் செய்கின்ற நான்கு வேதங்களையும் உண்டாக்கிய பிரமன் மிகக்கோபித்து—நீ பார்மகள் பாக்கியம் என்ன உற்பவிக்க என - நீ பூமிதேவியுடைய பாக்கியம் என்று சொல்ல (அவளிடத்திலே) பிறக்கக்கடவாய் என்று—தாக்கிய உரும் எனச் சபித்தகாலை - பாய்ந்த இடிபோலச் சபித்த சமயத்தில். எ - று.

ஏ - அசை. நான்மறை ஆக்கிய என்பது உபசாரம். உருத்தழன்று என்பது ஒருபொருட் பன்மொழி. எனைத்துணைச் சிறிய தீமைகண்டுழியுஞ் சகியாது, அதனைச் செய்தார்க்கு இயைந்த தண்டம் புரியும் நீதியுடையனென்பாள் முனியெனவாளாகூறாது நான்மறை ஆக்கிய முனி என அடைகொடுத்தும், பாக்கியத்தாலொருவற் கதிவிசேடங்க ளுளவாமாறுபோல வீட்டுமனைப் புதல்வனாகப் பெறுதலும் செங்கோலோச்சுதலும் முதலாயினவற்றையுடையனாகும் இவனாற் பூமிதேவிக் கதிவிசேடங்களுளவாமென்பது பற்றிப் புவிமகள் பாக்கியமென்னக் கூறினான் எனவும், இடி பாய்ந்த பொழுதே கெடுக்குமாறுபோல இச்சாபமுங் கூறிய பொழுதே பயன்றந்த தென்பாள் தாக்கிய வுருமென எனவுங் கூறினாள். (ருகூ)

கோனிடநினைவொடுகுறுகிநீயுநன்
மானுடமடந்தையாய்மணந்துமீள்கென
வானிடநதியையும்வழுவினாலவ
டானிடருறும்வகைதந்தையேவினான்.

(இ - ள்.) தந்தை-பிரமனானவன்—வானிடை நதியையும்-ஆகாயத்திலுள்ள கங்கையையும்—நீயும் கோனிடம் நினைவொடு குறுகி - நீயும் உனக்கு நாயகனாகும் வருணனிடத்தே (இவ்விடத்துள்ள) நினைவோடு சென்று—நல் மானுட மடந்தையாய் மணந்து மீள்க என - நல்ல மானுடப் பெண்ணாய்ப் புணர்ந்து திரும்புக என்று—வழுவினால் அவள் இடர் உறும் வகை ஏவினான் - (செய்த) தவற்றினால் அவள் துன்பம் பொருந்தும்படி அனுப்பினான். எ - று.

தான் - அசை. நன்மானுடம் என்றியையும். மீள்க என்னும் வியங்கோள் ஈறுதொக்கது நீயும் நதியையும் என்னும் உம்மைகள் உயர்வு சிறப்போடிறந்தது தழீஇய வெச்சமுமாயின. இடருறும் வகை என்பது வகையீற்று வினையெச்சம். இவள் மானுட மகளாய பின்னும் முற்பிறப்பி னுணர்ச்சியுடையளா யிருக்க என்

றும், இங்கு அவன் மீது வைத்த ஆசையின்படியே அங்குப்போய்ப் புணர்க என்றும் இருபொருள்பட நினைவொடுகுறுகி எனவும், தேவர்க்குக் காட்சி மாத்திரையான போகமேயன்றி ஏனைப்போகங்களில்லை; போக பூமியில் வசிக்கும் மானுடர்க்கே மெய்யுறப்புணரும் புணர்ச்சி முதலிய போகம் அனைத்தும் உள்ளன; ஆதலால் நீ இப்பொழுது செல்லுங் கதி அவ்வியல்பினையுடைய கதி என்பான் மானுடமென வாளாகூறாது நன்மானுடமென் றடைகொடுத்துங் கூறினன். அவள் செய்த தவறாவது, வருணனைப் பிரியமுற்றுத் தானும் பார்த்தமை. (சு0)

பாரினுநமக்கொருபதமுண்டென்றவ
ளீரமுற்றிழிதருமெல்லைவானகத்
தோரிடையுடன்விழுமுற்கைபோன்முக
வாரொளிமழுங்கினர்வசுக்கடோன்றினர்.

(இ - ள்.) அவள் பாரினும் நமக்கு ஒரு பதம் உண்டு என்று - அக்கங்கையானவள் (வானிலன்றி) மண்ணிலும் நமக்கு ஒரு பதவி உண்டு என்று—ஈரம் உற்று இழிதரும் எல்லை - அன்புகொண்டு இறங்கும் பொழுது—வானகத்து ஓரிடை உடன் விழும் உற்கைபோல் - ஆகாயத்தினின்றும் ஓரிடத்தில் ஒருசேர விழும் விண்மீன்கள்போல—வசுக்கள் முகவார் ஒளி மழுங்கினர் தோன்றினர் - அட்டவசுக்களும் முகத்திலுள்ள மிக்க ஒளி மழுங்கித் தோன்றினர். எ - று.

உற்கைபோற் றோன்றினர் எனக்கூட்டுக. மழுங்கினர் வினையெச்ச முற்று. பாரினும் என்னும் உம்மை எச்சவும்மையோடு சிறப்பும்மையு மாயிற்று. அவள் மேற் கதி நீங்கிக் கீழ்க்கதி புறும்பொழுதும் வருந்தாமல் தான் விரும்பிய நாயகனோடு கலந்து பல போகங்களை அனுபவித் தின்புறலாம் என்னுங் கருத்துடனிழிந்தாள் என்பாள் பாரினு நமக்கொரு பத முண்டென்றவ ளீரமுற்றிழிதரும் எல்லை எனவும், தமக்குற்ற சாபத்தால் முக ஒளி மழுங்கினர் என்பாள் வார் ஒளி மழுங்கினரெனவுங் கூறினாள். (சுக)

என்னையிங்கிழிந்தவாறெங்கண்மாநதி
யன்னையென்றவளடியவர்வணங்கலுந்
தன்னையங்கயனிடுசாபங்கூறினள்
பின்னையங்கவருந்தம்பெற்றிபேசுவார்.

(இ - ள்.) அவர் - அந்த அட்டவசுக்களும்—எங்கள் மா நதி அன்னை - எங்களுடைய பெரிய கங்கையாகிய தாயே—இங்கு இழிந்த ஆறு என்னை என்று அவள் அடி வணங்கலும் - நீ இங்கே இறங்கிய நிமித்தம் என்னை என்று அவளுடைய கால்களை வணங்கவும்—அங்கு அயன் தன்னை இடு சாபம் கூறினள் - (அவள்) அந்தச் சத்திய லோகத்திலே பிரமன் தனக்கிட்ட சாபத்தைச் சொன்னாள்—பின் அவரும் தம் பெற்றி பேசுவார் - பின்பு அவர்களுந் தம் வரலாற்றைச் சொல்வார்கள். எ - று.

பின்னை என்பதில் ஐ - சாரியை. எவன் என்னும் வினைப்பெயர் என்னை என மரீஇயிற்று. என்னை, பின்னை என்பவற்றில் ஐயைப் பகுதிப்பொருள் விகுதியெனக் கூறினும் அமையும். அங்கு அசை. வணங்கலும் உம்மீற்று வினையெச்சம். அன்னை என்பது அண்மை விளியாதலின் இயல்பாயிற்று. தன்னை யங்கயனிடு சாபம் என்பது "தவ்வையைக் காட்டிவிடும்" என்பதுபோல உருபு மயக்கம். அவரும் என்னும் உம்மை எச்சம். அன்னை ஈண்டு முறைப்பெயர் அன்று. (சுஉ)

உற்றுறையெங்களுளொருவன்றன்மனைப்
பொற்றொடிக்கழிந்தவள்புன்மைவாய்மையாற்
௺ சற்றுமெய்யுணர்வறத்தகாதொன்றெண்ணினன்
மற்றெழுவருமவன்வயத்தராயினேம்.

(இ - ள்.) உற்று உறை எங்களுள் ஒருவன் - சேர்ந்திருக்கின்ற எங்களுள் ஒருவன்—தன் மனைப் பொன் தொடிக்கு அழிந்து - தன் மனைவியாகிய பொன்னாலாகிய வளையலை யுடையாள்பொருட்டுத் (தன்றன்மை) கெட்டு—அவள் புன்மை வாய்மையால் - அவளுடைய எளிய வசனத்தால்—சற்றும் மெய்யுணர்வு அறத் தகாத ஒன்று எண்ணினன் - சிறிதும் மெய்யுணர்வில்லாமல் தகாதவொன்றைச் சிந்தித்தான் – மற்று எழுவரும் அவன்வயத்தர் ஆயினேம் - ஒழிந்த எழுவரும் அவன் வயப்பட் டொழுகினோம். எ - று.

தகாத என்னும் பெயரெச்சத்தீறு தொக்கது. சற்று என்பது சிறிது என்னும் பொருளை யுணர்த்திநின்றதோரிடைச்சொல். இழிவு சிறப்பும்மை தொக்கது. எங்களுள் ஒருவன் என்றது பிரபாசனன் என்னும் வசுவை. ஏழு வசுக்களும், மனைவி ஏவல்செய்தொழுகுவான் ஆடவனல்லனென ஆன்றோர் கூறிய கூற்றிற்குத் தாமு முடன்படுவோராய் மனைப்பொற்றொடிக் கழிந்தெனக் கூறினார். தகாது எண்ணினன் என்று இயைத்து வினை எச்சம் ஆக்கலும் ஒன்று (சுங)

தூநகைமொழிப்படிசோரராகியே
வானவர்வணங்குதாள்வசிட்டன்வாழ்மனைத்
தேனுவையிரவினிற்சென்றுகைக்கொளா
மீனெறிகரந்தெனமீளவேகினோம்.

(இ - ள்.) தூ நகை மொழிப்படி சோரர் ஆகி - (நாங்கள் எண்மரும்) வெண்மையாகிய நகையை யுடையாளது சொற்படி திருடராய்—வானவர் வணங்கு தாள் வசிட்டன் வாழ் மனைத் தேனுவை - தேவர்கள் வணங்கும் பாதங்களை யுடைய வசிட்டமுனிவர் வாழுகின்ற ஆச்சிரமத்தி லுள்ள காமதேனுவை—இரவினில் சென்று கைக்கொளா - இரவிற்சென்று கவர்ந்து—மீன் நெறி கரந்தது என மீள ஏகினோம் - மீன் சென்றவழி (பிறருக்குத் தெரியாமல்) மறைந்தது போல (நாங்கள் சென்றவழி பிறருக்குத் தெரியாமல் மறையத்) திரும்பிப்போனோம். எ - று.

ஏ - அசை. மீள என்னுஞ் செயவெனெச்சம் செய்தெனெச்சமாகத் திரிக்கப்பட்டது. கரந்தது என்னும் இறந்தகால இடைநிலைபெற்ற தொழிற்பெயர் ஈறு தொக்குநின்றது. தூநகை - பண்புத் தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை. கரந்தென என்பதை வினையெச்சமாக்கினு மமையும். (சுச)

பசுக்கவர்ந்தனரெனப்பயிலுமாதவ
முசுக்குலமனையமெய்ம்முனிவர்கூறலுஞ்
சிசுக்களினறிவிலாச்சிந்தைசெய்தவர்
வசுக்களென்றருந்ததிமகிழ்நனெண்ணினன்.

(இ - ள்.) பயிலும் மாதவம் முசுக்குலம் அனைய மெய் முனிவர் - செய்கின்ற பெரிய தவ இருக்கையினால் முசுக் கூட்டம்போன்ற மெய்ம்மையினையுடைய (சீடர்களாகிய) இருடிகள்—பசுக் கவர்ந்தனர் எனக் கூறலும் - காமதேனுவைத் (திருடர்) கவர்ந்தனர் என்று சொல்லுதலும்—அருந்ததி மகிழ்நன் -

(அதுகேட்ட) அருந்ததிக்கு நாயகராகிய வசிட்டமுனிவர்—சிசுக்களின் அறிவு இலாச் சிந்தை செய்தவர் வசுக்கள் என்று எண்ணினன் - குழந்தைகளினும் பார்க்க அறிவில்லாத இவ்வாலோசனையைச் செய்தவர்கள் வசுக்களென்று சிந்தித்தறிந்தார். எ - று

தவம் - ஆகுபெயர். சிசுக்களின், இன்னுருபு நீக்கப்பொருளில் வந்தது. இலாதவென்னும் பெயரெச்சத்தீறு தொக்கது. கூறலும் உம்மீற்று வினையெச்சம். முசு என்பது குரங்கினுள் ஒருசாதி. முசுமுள் காந்திருக்குமாறுபோலத் தவஞ் செய்யும் பொழுதிலிருக்கும் முனிவர் என்பதாம். இதனை, "பசுப்போல்வார் முற்பட்டாற் பாற்பட்டசான்ரோர் முசுப்போல முள்காந்திருப்பர்" என்பதனாலறிக. சிசுக்கள் இது செய்தால் இது வருமென்னும் விசேட வுணர்வு சிறிதாயினு முளராவர்; இவர், துறந்தார் பொருளைக்கவரில் இம்மையிற் சாபத்தாற் கழிபேரிடரும் மறுமையில் நரகயாதனையுந் தடையின்றிவரும் என்னும் விசேட வுணர்வு சிறிதாயினும் இலராய்ச் செய்தாரே, இவர் அறிவிருந்தபடி என்னை என்பார், சிசுக்களினறிவிலாச் சிந்தைசெய்தவர் என்றார். (சுடு)

உம்பதமிழந்துநீருததிமண்ணுளோர்
தம்பதம்பெறுகெனச்சாபங்கூறலு
மெம்பதம்பெறுவதென்றினியெனவவன்
செம்பதமெமதுபூஞ்சென்னியேந்தினேம்.

(இ - ள்.) நீர் உம் பதம் இழந்து - (அறிந்த வசிட்ட முனிவர் எங்களை நோக்கி) நீங்கள் உங்கள் பதவியை இழந்து—உததி மண்ணுளோர் தம் பதம் பெறுக எனச் சாபம் கூறலும் - கடல் சூழ்ந்த நிலவுலகத்தோருடைய நிலையைப் பெறுக என்று சாபத்தைச் சொல்லவும்—இனி எம் பதம் பெறுவது என்று என - இனி நாங்கள் எங்கள் பதத்தைப் பெறுவது எப்பொழுது என்று—அவன் செம் பதம் எமது பூம் சென்னி ஏந்தினேம் - அவருடைய சிவந்த பாதங்களை எம்முடைய பொலிவாகிய சிரங்களிற் றாங்கினேம். எ - று.

பெறுக என்னும் வியங்கோளீறுதொக்கது. பெறுவது தொழிற்பெயர். கூறலும் உம்மீற்று வினையெச்சம். மண் என்பது உலகத்திற்குப் பொதுப்பெயராதலால் எவ்வுலகம் என ஐயமுண்டாமன்றே அதனை நீக்க உததிமண் என அடைகொடுத்துக் கூறினர். புண்ணியராகிய வசிட்ட முனிவருடைய பாதந்தீண்டப் பெற்றுக்கொண்ட விசிட்டம்பற்றிப் பூஞ்சென்னி என்றார். எல்லா அங்கங்களினும் தலை உத்தமாங்க மாதலாற் பூஞ்சென்னி யென்றாரெனினுமமையும். பூஞ்சென்னி என்பதற்கு மலர்சூடிய சென்னியென்றலு மொன்று. (சுசு)

அன்புடைமுனிமுனிவாறிமானுடப்
புன்பிறப்பெழுவரும்புரிந்துமீளுதிர்
மின்புரைதெரிவைசொல்விழைந்தநீயவ
ணின்பமற்றநேககாளிருத்தியென்னவே.

(இ - ள்.) அன்பு உடை முனி முனிவு ஆறி - அன்பினையுடைய வசிட்ட முனிவர் கோபந்தணிந்து—எழுவரும் புன் மானுடப் பிறப்புப் புரிந்து மீளுதிர் - (நீங்கள் எழுவரும் எளிய மானுடப் பிறவியை அடைந்து திரும்புதிர்—மின்புரை தெரிவை சொல் விழைந்த நீ - மின்னலை யொத்த) நுடக்கத்தை

யுடைய) மனைவியின் சொல்லை விரும்பிய நீ—அவண் இன்பம் அற்று அநேகநாள் இருத்தி என்ன - அம்மண்ணுலகத்திற் பெண்போகத்தைநீங்கி நெடுங்காலம் இருக்குதி என்றுகூற. எ - று.

ஏ - அசை. இருத்தி யென்பது முன்னிலையொருமை வினைமுற்று. மானுடப் பிறப்பை எடுத்தன் மாத்திரை யன்றி அதனால் ஒன்றையும் பெறக்கடவீ ரல்லீர் என்பார் மானுடப் பிறப்பு எழுவரும்புரிந்து மீளுதிர் எனவும், பிரபாசன னென்போன் அறிவின்மிக்கோனாயினும் அவனை மயக்கியது அவளுடைய சரீர அழகே என்பார் மின்புரைதெரிவை எனவுங் கூறினார். அன்புடை முனி என்றது "சூழுடை ஆயம்" என்பது போலநின்றது. இல்லறத்தார்க்கு அன்பும் துறவறத்தார்க்கு அருளும் உரிய என்னும் நூற்றுணிபோடுமுரண, அன்புடைமுனி என்று கூறியது வழுவாமெனின், அன்பினின்றும் அருள் தோற்றும் ஒற்றுமைபற்றி அருளையே ஈண்டன்பென்று ராகவின் வழு யாண்டையதென்க. அன்பினின்றும் அருள்தோன்றலை "அருளென்னு மன்பீன்குழவி" என்பதனானறிக. உடைமுனி என்பதனை, "சங்கு தரு நீணிதியஞ் சாலவுடை நாய்கன்" என்பதுபோல வினைத்தொகையாக்கிப் பற்றற்ற முனியெனக்கொண்டு, அவ்வசுக்கள் தன்னதாகிய தேனுவைக் கவர்ந்தமைக்கு வெகுண்டாரல்லர் நீதிநூற்கடாத்தொழில் செய்தாரென்று மதுபற்றியே வெகுண்டார் என்பது அதனாற் போந்த பொருளென்றகலங் கூறலும் ஒன்று. (௬௭)

விண்வருசெல்வமும்விழைவுமேன்மையு
மெண்மருமிழந்தனமென்செய்வேமென
மண்வருதையலைவணங்கத்தையலும்
பண்வருமொழிசிலபகர்ந்துதேற்றினாள்.

(இ-ள்.) விண்வரு செல்வமும் விழைவும் மேன்மையும் - விண்ணுலகத்துள்ள செல்வத்தையும் போகத்தையும் மேன்மையையும்—எண்மரும் இழந்தனம் என் செய்வேம் என-நாங்கள் எண்மரும் இழந்தோம் (இனி) என்ன செய்வோம் என்று சொல்லி - மண்வரு தையலை வணங்க - மண்ணுலகில்வருங் கங்கையை வணங்க—தையலும் பண்வரு சிலமொழி பகர்ந்து தேற்றினாள் - அவளும் பண்ணைத் தோற்றுவிக்குஞ் சில வசனங்களைச்சொல்லி (அவர்களைத்) தெளிவித்தாள். எ-று.

விழைவு - ஆகுபெயர். இழந்தனம் செய்வேம் என்பன முறையே அம் ஏமீற்றுத் தன்மைப்பன்மை வினைமுற்றுக்கள். தையலும் என்பது சுட்டின்பொருளாய் நின்று எச்சவும்மைபெற்றது. பண்வருமொழி என்பது பிறவினைப்பொருளுணர்த்தும் விவ்விகுதிதொக்கு நின்றது. பண்வருமொழி என்பதற்கு அவரது துயரை நீக்குதற்குரிய குணம் மிக்க மொழியெனப்பொருள்கோடலும் ஒன்று. வரும் என்பதனை உவம உருபாக்கிப் பண்போலும் மொழி என்றல் இத்துணைச் சிறப்பின்று.

வலத்துயர்தடம்புயவருணனுங்குரு
குலத்தினிலயன்வரங்கொண்டுதோன்றுமா
னலத்துடனவன்மனைநண்ணுமெல்லையி
னிலத்திடையென்வயினீருந்தோன்றுவீர்.

(இ-ள்.) வலத்து உயர் தடம் புய வருணனும் - வெற்றியினாலுயர்ந்த பெரிய புயங்களையுடைய வருணனும்—அயன் வரம் கொண்டு நிலத்திடைக் குருகுலத்தினில் தோன்றும் - பிரமாவினுடையவரத்தாற் பூமியிலே குருகுலத்தில் அவதரிப்பான்—நலத்துடன் அவன் மனை நண்ணும் எல்லையில் - (நான்) இன்பத்தோடு

அவன் மனைவியாய் இருக்கும் பொழுது—நீரும் என் வயின் தோன்றுவீர் - நீங்களும் என்வயிற்றிற் பிறக்கக்கடவீர்கள். எ - று.

ஆல் - அசை. தடம்புயம் என அகரவீற்றுரிச்சொன்முன் புறனடையால், வல்லெழுத்துமிகாது மெல்லெழுத்துமிக்கது. வருணனும் என்னும் உம்மை சிறப்பும்மையோடெச்சவும்மையுமாயிற்று. நீரும் என்னும் உம்மை எச்சம். கொண்டு என்பது மூன்றனுருபின் பொருள்பட வந்ததோ ரிடைச்சொல். மனை - ஆகுபெயர். ஈண்டு வரம் என்றது சாபத்தை. பிரமாவினவைக்களத்துச் சிறந்த தேவர் பலர் இருந்தாராயினுந் தன்னை மயக்கத்தக்க வடிவத்தையுடையான் வருணனே என்பாள் வலத்துயர் தடம்புய வருணன் என்றும், தன்மனத்துக் கியைந்த கொழுநனைப் பெற்றமையால், தான் விரும்பிய இன்பங்களை அநுபவித்தற் குரியனுயினேன் என்பாள் நலத்துடன் அவன் மனை நண்ணும் எல்லையில் என்றுங் கூறினாள். (சுகூ)

அஞ்சன்மி னும்மைநானவனிதோயுமு
னெஞ்சவீட்டிடுவெனிவ்விறைவன்றன்னையு
நெஞ்சுறத்தந்தைபானிறுத்திநானுமவ்
வஞ்சகப்பிறப்பினைமாற்றுவேனென்றாள்.

(இ-ள்.) அஞ்சன்மின் - அஞ்சாதொழிமின்—நான் உம்மை அவனி தோயும் முன் எஞ்ச வீட்டிடுவென் - நான் உங்களுள் எழுவரைப் பூமியிற்பிறப்பதற்கு முன் (சாபங்) கழியும்படி கொல்லுவேன்—இவ்விறைவன் தன்னையும் - இந்தப் பிரபாசனன் என்னும் வசுவையும்—நெஞ்சு உறத் தந்தைபால் நிறுத்தி - பிதாவின் மனத்திற்கிசைய அவனிடத்தே நிறுத்தி—நானும் அவ்வஞ்சகப்பிறப்பினை மாற்றுவேன் என்றாள் - நானும் அந்த வஞ்சகத்தையுடைய மானுடப்பிறப்பை ஒழிப்பேன் என்று சொன்னாள். எ - று.

தன்னையும் நானும் என்னும் உம்மைகள் எச்சப்பொருள. எஞ்ச என்னும் செயவெனெச்சம் உண்ணவந்தான் என்பதுபோலக் காரண காரியப்பொருட்டு. வீட்டிடுவென் தன்மையொருமை வினைமுற்று. தோயுமுன் என்பது முன்னீற்று வினையெச்சம். புண்ணியத்தாலாய தேவப்பிறப்பினும் பாவத்தாலாய மானுடப்பிறப்பு மிக இழிந்ததென்பாள் அவ்வஞ்சகப்பிறப்பென்றாள். நெஞ்சுற என்பதற்கு வசிட்டமுனிவருடைய கருத்திற்கியைய எனினும் பொருந்தும். (எo)

நாலிருவசுக்களுநதிமடந்தைசொற்
பாலிருசெவிப்படப்படாதநற்றவஞ்
சாலிருநிலத்திழிதாயையன்புடன்
காலிருகரத்தினாற்கசிந்துபோற்றினார்.

(இ - ள்.) நாலிரு வசுக்களும் - அட்டவசுக்களும்—நதி மடந்தை சொற்பால் இரு செவிப்பட - கங்கையென்னும் பெண்ணினுடைய வசனமாகிய பால் இரண்டு செவிகளிலும் விழ—படாத நல் தவம் சால் இரு நிலத்து இழிதாயை - அழியாத நல்லதவம் மிக்க பெரிய நிலவுலகத்தில் இறங்கும் மாதாவை—அன்புடன் கசிந்து கால் இரு கரத்தினால் போற்றினார்-அன்போடு மனம் உருகிக் கால்களில் இருகரங்களாலும் வணங்கினார்கள். எ - று.

போற்றுதல் - வணங்குதல். வசுக்களும் என்னும் உம்மைமுற்று. தாயை என முதற் கையுருபு வந்தமையினாற் கால் என்னுஞ் சினைக்கு "முதன்முனைவயிற் கண்ணென் வேற்றுமை, சினைமுன் வருத றெள்ளி தென்ப" என்பதனால் இல்

னுருபு விரித்துப் பொருளுரைக்கப்பட்டது. அவள் சொல் அவர் செவிக்கின் பஞ்செய்ததென்பது போதரச் சொற்பால் எனவும், கங்கை இவர்க்கிப்பொழுது தாயல்லளாயினும் நீங்கள் பூமியில் என் வயிற்றிற் பிறக்கக் கடவீர்கள் என்று கூறிய தெளிவுபற்றித் தாய் எனவுங் கூறினர். தவஞ்சால் தாயெனக் கூட்டுக. தன்னிற் படிந்தோருடைய பாவங்களைக் கெடுக்குந் தவமுடையாள் என்பாள் நற்றவஞ்சால்தாய் என்றாள். தவஞ்சால் நிலம் என்றியைத்து, எவரும்பூமியிலேயே தவஞ்செய்து பயன்களை யடைதல் வேண்டும் என்னும் நூற்றுணிபுபற்றிப் படாத நற்றவஞ்சா லிருநிலமென்றாள் என அகலங் கூறலும் ஒன்று. (எக)

சதையமீன்கடவுளுஞ்சசிகுலத்துநல்
விதையெனமேதினிமீதுதோன்றினன்
றுதையளிசெறிகுழற்றோகையாயின
ளிதையமுற்றுயர்நதியென்னுமின்னுமே.

(இ - ள்.) சதைய மீன் கடவுளும் - சதைய நக்ஷத்திரத்தை யுடைய வருணனும்—சசிகுலத்து நல் விதை என - சந்திரவமிசத்திற்கு நல்ல வித்தென்று சொல்ல—மேதினி மீது தோன்றினன் - பூமியில் அவதரித்தான்—உயர்நதி என்னும் மின்னும் - உயர்ந்த கங்கை என்னும் பெண்ணும்—இதையம் உற்று - (பிரமனுடைய சாபத்தைச்) சிந்தித்து — துதை அளி செறி குழல் தோகை ஆயினள் - நெருங்கிய வண்டுகள் மொய்க்கின்ற அளகத்தையுடைய பெண்ணாயினள். எ - று.

ஏ - அசை. கடவுளும் மின்னும் என்னும் உம்மைகள் சிறப்பும்மையோ டெச்சவும்மையு மாயின. துதையளி வினைத்தொகை. தோகை, மின் என்பன ஆகுபெயர்கள். உற்று என்னுஞ் செய்தெனெச்சம் ஏதுப்பொருட்டு. இதயம் உற்றென்பது ஒருசொல். சசிகுலம் வடநூன் முடிபு. சதயம், வருணனுள் ஆதலிற் சதயமீன் கடவுள் என்றும், சந்திரகுலம் இவனால் விருத்தியாயிற் றென் பதுபோதரச், சசிகுலத்து நல்விதையெனவும், மானுட மகளாயினள் என்பது போதர அளிசெறி குழற்றோகை ஆயினள் எனவுங் கூறினள். (எஉ)

தவமுறக்குடதிசைத்தலைவன்றாரமா
மவள்வயிற்றுதித்தனரந்தவெண்மரு
முவகையிற்பெருமநீயுணர்ந்துகொள்கென
விவடிருக்கணவனுமின்னகூறுவான்.

(இ - ள்.) தவம் உறு அக் குடதிசைத் தலைவன் தாரம் ஆம் அவள் வயிற்று - தவம் மிக்க அந்த மேலைத்திசைக் கதிபனாகிய வருணனுடைய மனைவியாகும் அக் கங்கையின் வயிற்றில்—அந்த எண்மரும் உதித்தனர் - அந்த அட்டவசுக்களும் பிறந்தார்கள்—பெரும நீ உவகையில் உணர்ந்து கொள்க என - பெருமையை யுடையவனே நீ மகிழ்ச்சியோடு (இக்கதையை) அறிந்துகொள்ளுக என்று (மனைவி) சொல்ல—இவள் திருக் கணவனும் இன்ன கூறுவான் - இவளுடைய அழகிய நாயகனாகிய சந்தனுமகாராசனும் இவ்வசனங்களைச்சொல்லுவான். எ - று.

கொள்க என்னும் வியங்கோளீறு தொக்கது. கணவனும் என்னும் உம்மை எச்சம். இல்லுருபு உடனிகழ்ச்சிப் பொருட்டு. பெரும அண்மை விளியாதலி னீறுதொக்கது. இன்ன என்பது அஃறிணைப் பன்மைப்பெயர். வான் முகமதியமும் என்னும் கவிதொட்டுத் தவமுற என்னும் கவியளவும் கங்கை, தம்

வரலாற்றை நாயகனுகிய சந்தனு என்பானுக்குப் பிறர்பால் நிகழ்ந்த வரலாறு போற் கூறியது, தான் அவற்கு நேரே அவ்வரலாற்றைக் கூறின் அவன் நமக்கிங்ஙனம் நிகழ்ந்ததோ எனக் கழிபேர் இடருற்று ஏனையோரும் அறியுமாறு ஆவலிப்பன், பிறர்பால் நிகழ்ந்த வரலாறுபோற் கூறில் அது வாயிலாக அறிவானுயின் கழிபேரிடருற்று ஆவலியானென்று கருதி என்க. இவ்வாறே சீவகன் என்னும் அரச குமரனுக்கும் அவன் வரலாற்றை ஆசிரியனுகியஅச்சணந்தி உணர்த்தினமை காண்க. (எ௩)

அறப்பயனென்னுமாறறிவிலாவெமைப்
பிறப்புணர்த்தினைமகப்பேறுசெய்துநீ
யிறப்பவரெழுவரோடேகலாவுயர்
சிறப்புடையினையவன்செய்வதென்னென்ருன்.

(இ - ள்.) அறப் பயன் என்னும் ஆறு அறிவு இலா எமை - (புதல்வரைக் கொன்றது) தருமப் பயன் என்னும் வழியை அறித லில்லாத எமக்கு—நீ மகப் பேறு செய்து பிறப்பு உணர்த்தினை - நீ புதல்வர்களைப் பெற்று (எங்கள்) பிறப்பை அறிவித்தாய்—இறப்பவர் எழுவரோடு ஏகலா உயர் சிறப்பு உடை இனையவன் - இறந்த புதல்வ ரெழுவரோடு (தானும்) இறவாத உயர்ந்த சிறப்பையுடைய இவன்—செய்வது என் என்ருன் - செய்யுந் தொழில் என்னை என்ருன். எ-று.

எமை என்பது வேற்றுமை மயக்கம். இறப்பவர் வினையாலணையும் பெயர்; இயல்பினல் இறந்தகாலம் எதிர்கால மாயிற்று. இல்லாத என்னும் பெயரெச்சத் தீறுதொக்கது. செய்து என்னும் வினையெச்சம் ஏதுப்பொருட்டு. செய்வது - தொழிற்பெயர். மகப்பேறு செய்து பின் அம்மகாரைக் கொல்ல இவரை என் கொல்கின்றனை யென்று தான் வினுவ இவ்வரலா றெல்லாவற்றையும் ஒருசேர உணர்த்தினு ளாதலால் நீ மகப்பேறு செய்து எமைப் பிறப்புணர்த்தினை எனவும், இவன் குருமரபை விளக்கிப் புகழை நிறுவி நெடுங்காலமிருந்து புண்ணியங்களைச் சம்பாதித்து முத்தியடைவான் என்பதனை யறிந்தானுதலின் உயர் சிறப்புடை இனையவன் எனவுங் கூறினுன். (எ௪)

முக்குலத்தரசினுமுதன்மையாலுய
ரிக்குலத்திவனலாதில்லைமாமகா
ரக்குலத்தவமுனியருளினுலிவன்
மெய்க்குலத்தந்தையாம்விழைவுமில்லென்ருள்.

(இ-ள்.) முக்குலத்து அரசினும் முதன்மையால் உயர் இக் குலத்து - அக்கினி சூரியன் சந்திரன் என்னும் மூவருடைய குலத்துள்ளும் முதன்மையினுல் உயர்ந்த இந்தச் சந்திரகுலத்தில்—இவன் அலாது மாமகார் இல்லை - இவனல்லாமற் பெருமையை யுடைய புதல்வர் இல்லை—அக்குலத் தவமுனி அருளினுல் - அந்த மேலான தவத்தை யுடைய வசிட்ட முனிவரது கட்டளையினுல்—இவன் மெய்க்குலத் தந்தை ஆம் விழைவும் இல் என்ருள் - இவனுக்கு மெய்ம்மையாகிய குலத்தில் (தான் ஒருவற்குப்) பிதாவாயிருக்கும் காம இச்சையும் இல்லை என்று சொன்னுள். எ-று.

விழைவும் என்பதில் உம்மை சிறப்பும்மை. அரசினும் என்னும் உம்மை முற்றும்மை. இவன் என்பதன்கண் நான்கனுருபு விகாரத்தாற் ருெக்கது. குலம் மேன்மை. தவமுனி அருளாவது பெண்சொற்கேட்ட நீ பூமியில் இல்வாழ்வின்றி நெடுங்காலம் இருத்தி என்றதேயாம். (எ௫)

மன்னவர்தொழுகழன்மன்னன்மைந்தனோ
டின்னமுமொருவனையினிதளித்துநாம்
௧ பன்னகநெடுமுடிப்பார்களிக்கவே
பொன்னகரிருவரும்போதுமென்னவே.

(இ - ள்.) மன்னவர் தொழு கழல் மன்னன் - (அதுகேட்ட) அரசர்வணங்குங் கால்களையுடைய சந்தனுமகாராசன்—மைந்தனோடு இன்னமும் ஒருவனை - இப்புதல்வனோடு இன்னும் ஒரு புதல்வனை—பன்னக நெடுமுடிப் பார்களிக்க நாம் இனிது அளித்து - சேடனுடைய நெடிய முடியிற்பொருந்திய பூமியிலுள்ளோர் களிக்க நாங்கள் மகிழ்ச்சியோடுபெற்று—இருவரும் பொன் நகர் போதும் என்ன - இருவரும் விண்ணுலகத்திற்குப் போவோம் என்று சொல்ல. எ-று.

ஏ - இரண்டும் அசைகள். பார்-ஆகுபெயர். இன்னமும் என்னும் உம்மை எச்சம். மன்னன் என்னவென் றியையும். போதும், தன்மைப்பன்மைவினைமுற்று. நம்மரசகுமாரன் இல்வாழ்க்கை இலனாகவே குருமரபு குன்றிவிடுமேயென்றுலகம் வருந்துமன்றோ அவ்வருத்த நீங்க இன்னும் ஒரு புதல்வனைப் பெறல்வேண்டுமென்பான் பார்களிக்கவெனவும், உனக்கு நான்செய்துகொண்ட உறுதிப்பாட்டில் வழீஇ, இங்ஙனங் கூறினேனென்று முனியற்கவென்பான் இனிதளித்து எனவுங் கூறினன். (எசு)

போயிருந்தென்பயன்போகம்பல்வகை
யாயிருந்தனவெலாமருந்தியின்னமு
மாயிருந்தரணியின்மன்னுசில்பக
னீயிருந்தரசியனிறுத்திமீளுவாய்.

(இ - ள்.) நீ போயிருந்து என் பயன் - நீ (விண்ணுலகத்திற்குப்) போயிருந்து என்ன பிரயோசனம்—பல்வகையாய் இருந்தன போகம் எலாம் இன்னமும் அருந்தி - பலவகைப்பட்டிருந்த போகங்களையெல்லாம் இன்னும் அனுபவித்து—மா இரும் தரணியில் மன்னு சில்பகல் இருந்து - மிகப்பெரிய நிலவுலகில் நிலைபெற்ற சிலநாள் இருந்து—அரசியல் நிறுத்தி மீளுவாய் - அரசியலை நிலைபெறச் செய்து (விண்ணுலகத்திற்குத்) திரும்புவாய். எ-று.

இன்னமும் என்னும் உம்மை எச்சம். மாயிரு என உரிச்சொல்லாகாரவீற்றின்வழி யகரவுடம்படுமெய் "இடையுரிவடசொலின்" என்னுஞ்சூத்திரவிதிபற்றி வந்தது. இருந்தன என்னும் வினைமுற்றுப்பெயரெச்சமாயிற்று. செய்து என்னும் வாய்பாட்டு வினையெச்சமாய இருந்து என்பது ஏதுப்பொருட்டு. "தொடரலிறுதி தம்முற்றும்வரின்" என்னுஞ் சூத்திரத்தில், அருத்தாபத்தியாற் பல்வகை, சில்பகலென நின்றன. "உண்டற்குரிய வல்லாப்பொருளை யுண்டனபோலக் கூறலும் மரபே" என்பதனாற் போகமாயிருந்தனவெலாமருந்தி என்றார். அன்றிச் சமாதியென்னு மலங்காரமெனினுமமையும். (எஎ)

இப்புதல்வனுமினியென்னொடேகியே
மெய்ப்படுகாளையாம்பதத்துமீளநின்
கைப்படுத்துவலெனக்கணவனைத்தழீஇ
யப்பெரும்புதல்வனோடவளுமேகினள்.

(இ-ள்.) இனி இப்புதல்வனும் என்னொடு ஏகி-இனி இந்தப்புத்திரனும் என்னோடுவந்து—மெய்ப்படு காளை ஆம் பதத்து - உடம்பிலேதோன்றுங் காளைப் பருவத்தைப் பொருந்துங்காலத்தில் — மீள நின் கைப்படுத்துவல் என - திரும்ப

(இவனை)உன்கையகப்படுத்துவேன் என்றுசொல்லி—கணவனைத் தழீஇஅப்பெரும் புதல்வனோடு அவளும் ஏகினள் - நாயகனைத்தழுவி அந்தப் பெருமையையுடைய புத்திரனோடு அவளுஞ்சென்றாள். எ-று.

ஏகாரம் - அசை. புதல்வனும் அவளும் என்னும் உம்மைகள் எச்சம். அசையெனினுமமையும். ஏகி ஆம் என இயையும். இளமை முதுமைமுதலிய வேறுபாடெல்லாம் உடம்பிற்கே யுரியவென்பதுபற்றி மெய்ப்படுகோளையாம்பதம் என்றாள். தான்பிரிதலா லவற்குண்டாகிய வருத்தம் நீங்குமாறும், நாயகன்மீது தனக்குள்ள அன்பின் ஆராமை அவற்குப் புலப்படுமாறுந் தழீஇயினள் என்பார் கணவனைத் தழீஇ என்றார். (எஅ)

வேறு.

அன்றுதொட்டிவனுமகன்றபூங்கொடியையழகுறவெழுதிமுன் வைத்து, மொன்றுபட்டுவமைப்பொருள்களாற்கண்டுமுரைத்தவை யெடுத்தெடுத்துரைத்து, மன்றலிற்றலைநாள்விழைவொடுமணந்தமடந் தையர்வதனமுநோக்கா, னென்றினிக்கிடைப்பதென்றுளம்வருந்தியெ ண்ணுநாளெல்லையாண்டிருந்தான்.

(இ-ள்.) இவனும் அன்று தொட்டு - இந்தச் சந்தனுமகாராசனும் (அவள்பிரிந்த) அன்றுமுதலாக—அகன்ற பூம் கொடியை அழகு உற எழுதி முன்வைத்தும்-(தன்னைப்) பிரிந்த பொலிவாகிய கொடிபோல்பவளை அழகு மிகப் (படத்தில்) எழுதி எதிரேவைத்துப்பார்த்தும்—ஒன்றுபட்டு உவமைப் பொருள்களாற் கண்டும் - மனம் ஒருமித்து (அவளவயவங்களுக்கு) உவமையாகிய பொருள்களாலே (அவைகளைக்) கண்டும்—உரைத்தவை எடுத்தெடுத்து உரைத்தும் - (அவள்) சொன்னவைகளை எடுத்தெடுத்துச்சொல்லியும்—தலை நாள் மன்றலில் விழைவொடு மணந்த மடந்தையர் வதனமும் நோக்கான் - முற்காலத்திற்செய்த விவாகத்தில் விருப்பத்தோடுசேர்ந்த பெண்களுடையமுகங்களையும் பாராதவனாய்—இனி என்று கிடைப்பது என்று உளம் வருந்தி-(இவளுடையபோகம்) இனி (எனக்கு) என்றைக்குக் கிடைப்பது என்று மனம் வருந்தி—எண்ணும் நாள் எல்லை ஆண்டு இருந்தான் - (அவள்) குறித்த நாள்வரையும் அந்த அத்தினபுரத்தில் இருந்தான். எ-று.

வதனமும் என்னும் உம்மை சிறப்போடெச்சமுமாயிற்று. எடுத்தெடுத்தென்பது ஒருதொழில் பலகால்நிகழ்தலாகிய பொருள்பற்றிவந்த அடுக்கு. நோக்கான் வினையெச்சமுற்று. கிடைப்பது எதிர்காலவிடைநிலைபெற்று நின்ற தொழிற்பெயர். குணத்தினுமழகினு மேற்படலா லிவன்விரும்பி அவரை மணஞ் செய்தான் என்பார் மன்றலிற்றலைநாள் விழைவொடுமணந்த மடந்தையர் என்றார். இங்ஙனங் கூறவே கங்கையை மணஞ்செய்தற்குமுன்னும் பலபெண்களை விவாகஞ் செய்திருந்தான் என்பதுபோதரும். ஒன்றுபட்டு என்பதை ஒன்றுபட்ட என்றும், ஆண்டிருந்தான் என்பதற்கு உலகையாண்டிருந்தான் என்றும் பொருள்கோடலுமொன்று. (எகூ)

பின்னொருதினத்திலமைச்சரும்பிறரும்பெரும்படைத் தலைவருஞ் சூழ, முன்னொருதினத்தின்வனத்துமாவேட்டைமுன்னினன்முயன்று போய்முற்றி, மின்னொருவடிவுகொண்டெனச்சிறந்தமெல்லியன்மீண் டுறைமறையுந், தன்னொருமதலையாக்கமுங்கருதிச்சானவிந்தடங்கரை யடைந்தான்.

(இ-ள்.) பின் ஒருதினத்தில்-(சந்தனுமகாராசன்) பின்ஞெருநாளில்—அமைச்சரும் பிறரும் பெரும் படைத்தலைவரும் சூழ - மந்திரிமாரும் ஒழிந்த கருமஞ்செய்வோரும் பெரிய சேனைத்தலைவருஞ் சூழ—வனத்து மா வேட்டை முன்னினன் முயன்றுபோய் முற்றி - காட்டில் மிருக வேட்டை செய்ய நினைத்து முயன்றுபோய் முடித்து—மீண்டு உறை மறையும் மின் ஒரு வடிவுகொண்டு எனச் சிறந்தமெல்லியல் - திரும்பிச்சென்று நீரில்மறைந்த மின்ஞெரு வடிவுகொண்டாலெனச் சிறந்த மனைவியையும்—தன் ஒரு மதலை ஆக்கமும் கருதி - தன்னுடைய ஒப்பில்லாத புதல்வனது பேற்றையும் நினைத்து—முன் ஒரு தினத்தின் சானவித் தடம் கரை அடைந்தான் - முன்ஞெருநாள் அடைந்தவாறுபோலக்கங்கையினது பெரியகரையை அடைந்தான். எ-று.

மெல்லியல் என்பதில் உம்மையும் உருபும் விகாரத்தாற்ஞெக்கன. கொண்டாலென்பது கொண்டெனத் திரிந்துநின்றது. முன்ஞெருதினத்தின் என்பதில் இன்னுருபு உவமப்பொருட்கண் வந்தது. முன்னினன் வினையெச்சமுற்று. மறையும் என்னும் பெயரெச்சம் மெல்லியல் என்னும் பெயர்கொண்டது. முற்றி யடைந்தானென முடிக்க. நடக்கமும் ஒளியும் உடைமையான் மின்ஞெருவடிவுகொண்டெனச் சிறந்த மெல்லியல் என்ருர். (அ0)

பண்டுதானவளையெதிர்ப்படுங்கனகப்பைங்கொடிப்பந்தர்வானிழலும்
வண்டருநறைப்பூஞ்சோலையுந்தடமுமருங்கலைமலயமாருதமும்
புண்டரீகமுஞ்செங்காவியுங்கமழும்புளினமும்புளினமென்றுறையுங்
கண்டுகாரிகையையிம்மையிலின்னுங்காண்குமோவெனமனங்கசிந்தான்.

(இ-ள்.) பண்டு தான் அவளை எதிர்ப்படும் கனகப் பைங்கொடிப் பந்தர்வான் நிழலும் - (அவன்) முன்னே தான் அக்கங்கையை எதிர்ப்படும் பொன் மயமான பசிய கொடிகளாலாகிய பந்தர்களின் பெரியநிழலையும்—வண்டு அரு நறைப் பூஞ்சோலையும்-வண்டுகள்நீங்காத தேன்பொருந்திய பூக்களையுடைய சோலையையும்—தடமும் - தடாகத்தையும்—மருங்கு அலை மலய மாருதமும் - பக்கத்தில் அசைகின்ற இளந்தென்றலையும்—புண்டரீகமும் செங்காவியும் கமழும் புளினமும் - தாமரைமலருஞ் செங்கழுநீர்மலருங் கமழுகின்ற மணற்குன்றையும்—புள் இனம் மென் துறையும் - பறவைக்கூட்டங்களையுடைய மென்மையாகிய கரையையும்—கண்டு - பார்த்து—காரிகையை இம்மையில் இன்னும் காண்குமோ என மனம் கசிந்தான் - அவ்வழகினை யுடையாளை இப்பிறப்பில் இன்னும் காண்போமோ என்று மனம் உருகினுன். எ-று.

இன்னும் என்னும் உம்மை எச்சம். காண்குமோ என்னும் ஓகாரம் கங்கையின் உயர்ச்சியையும் அவன் எளிமையையும் உணர்த்திநின்றது. அன்றிக் "கண்ட காட்சி சேணின்குறியோ" என்புழிப்போல ஐயத்தின்கண் வந்ததெனினுமமையும். பண்டுதானவளையெதிர்ப்படும் என்பது இறந்தகாலத்தோ டெதிர்காலமயங்கிய காலவழுவமைதி. காண்கு எனத் தன்மை யொருமை வினைமுற்ருகற் பாலது இழித்தலால் காண்கும் எனத் தன்மைப் பன்மை வினைமுற்ருயிற்று. உயர்த்தலாலங்ஙனமாயிற்றென்றல் ஈண்டுப்பொருத்தமின்று. அலைமாருதம் வினைத்தொகை. பந்தல் பந்தர் எனப் போலியாயிற்று. அருத என்னும் பெயரெச்சத் தீறுதொக்கது. புண்டரீகம், செங்காவி என்பன ஆகுபெயர்கள். வண்டருப் பூஞ்சோலை நறைப்பூஞ்சோலை எனத் தனித்தனிசென்றியையும். காலை உச்சி மாலை யாமம் என்னுங் காலங்கடோறும் பதனழியாமலர்களையுடைய சோலை என்பார் வண்ட

றுப் பூஞ்சோலை என்றார். வண்டறு என்பதனை நறைக்காக்க லித்துணைச் சிறப்பின்று. (அக)

பிரிந்தநாளெண்ணிப்பகீரதிப்பெருக்கைப்பேதுறுங்குறிப்பொடு நோக்கிக், கரிந்தபாதவம்போனின்றவப்பொழுதிற்கால்பொரக்குனித்த கார்முகமுந், தெரிந்துமேன்மேலுந்தொடுத்தசாயகமுஞ்சிலம்பெனத் திரண்டதோளிணையும், விரிந்தநூன்மார்புமாகிமுன்னடந்தான்விழிகளித்திடவொருவீரன்.

(இ-ள்.) பிரிந்த நாள் எண்ணி - (சந்தனுமகாராசன் தன்னை அவள்) பிரிந்த நாளை நினைந்து--பகீரதிப் பெருக்கைப் பேதுறும் குறிப்பொடு நோக்கி - கங்கைப் பெருக்கைத் துன்புறுங் குறிப்போடுபார்த்து—கரிந்த பாதவம் போல் நின்ற அப்பொழுதில் - தீந்த மரம்போல நின்ற அப்பொழுதில்—ஒருவீரன் - ஒரு வீரனானவன்—கால் பொரக் குனித்த கார்முகமும் - இருகாலும் பொருந்த வளைத்தவில்லையும்—தெரிந்து மேன்மேலும் தொடுத்த சாயகமும் - (வலி) தெரிந்து மேன்மேலும் தொடுத்துவிடுகின்ற அம்பையும்—சிலம்பு எனத் திரண்ட தோளிணையும் - மலைபோலத்திரண்ட இரண்டு புயங்களையும்—விரிந்த நூல்மார்பும் ஆகி - பரந்த பூணூல் பொருந்திய மார்பையும் உடையவனாகி—விழிகளித்திட முன் நடந்தான் - கண்கள் களிக்கும்படி (அவனுக்கு) முன்னே நடந்தான். எ-று.

எண்ணி, நோக்கி என்னுஞ் செய்தென் வினையெச்சங்கள் எதுப்பொருள. விரிந்தமார்பு என இயையும். முறுக வளைத்த வில்லென்பார் கால்பொரக் குனித்த கார்முகம் என்றார். (அஉ)

வியந்திடவருமக்குரிசிலைவிவனேவிடையவன் குமரனென்றயிர்க்கும், வயந்தனினுலவுமதன்கொலோவென்னும்வாசவன்மதலையென்றெண்ணு, முயர்ந்தவரிவனின்வின்மையினில்லையொருவருமுலகின்மேலென்னும், பயந்ததன்வடிவின்படியெனத்திகழும்பான்மையைநினைந்திலன்பயந்தோன்.

(இ-ள்.) பயந்தோன் - பிதாவானவன்—வியந்திட வரும் அக்குரிசிலை விடையவன் குமரன் இவனே என்று அயிர்க்கும்—எவரும் வியக்க வருகின்ற அப்புதல்வனைச் சிவபெருமானுடைய குமாரராகிய சுப்பிரமணியக்கடவுள் இவனோ என்று சந்தேகப்படுவான்—வயந்தனில் உலவும் மதன்கொலோ என்னும்-தென்றலாகிய தேரில் ஏறியுலாவும் மன்மதனோ என்று சொல்லுவான்—வாசவன் மதலையோ என்று எண்ணும் - இந்திரனுடைய புதல்வனாகிய சயந்தனோ என்று எண்ணுவான்—உலகின்மேல் வின்மையின் இவனில் உயர்ந்தவர் ஒருவரும் இல்லை என்னும் - உலகத்தில் வில்வலியால் இவனிலுமுயர்ந்தவர் ஒருவரும் இல்லை என்பான்—பயந்த தன்வடிவின் படி எனத்திகழும் பான்மையை நினைந்திலன்-பெற்ற தன்னுடையவடிவத்தின் பிரதிமை என்று சொல்லவிளங்கும் (அவன்) தன்மையை நினைந்திலன் எ-று.

ஓகார எகாரங்கள் வினாப்பொருளில்வந்தன. கொல் - அசை. ஓகாரம் மதலைக்குங் கூட்டப்பட்டது. "உவ்வுமாம்பிற" என்பதிற் பிற என்பதனால் வசந்தன் என்பது வயந்த னென்றாயிற்று. "வயந்தனதையனை" என்றார் பிறரும். இவனின் என்னும் இன்னுருபு நீக்கப் பொருட்டு. படி என்பது பிரதி என்னும் வடமொழிச் சிதைவு. "படிச்சந்தம்" என்பதுபோல. வீரத்தால் விடையவன்குமரனோ அழகால் மதனோ பெருமிதத்தால் வாசவன்மதலையோ என்றயிர்த்தான் என்க. நினைந்திலன்

என்பதனை வினையெச்சமாக்கி அயிர்க்கும், என்னும், எண்ணும், என்னும் எனக்கோடலும், வயந்தனில் என்பதற்கு வசந்தகாலத்தில் எனக்கோடலும் பொருந்தும். ஒகார ஏகாரங்கள் ஐயப் பொருளில்வந்தன எனக்கோடல் சிறப்பின்று.

தந்தையென்றிவனையுணர்கிலாமதியாற்சராசனந்தழுவுறவளைத்து
மைந்தனுமொருபோர்மோகனக்கணையான்மறையுடன்மார்புறவெழுதி
யிந்திரதனுவோடிந்திரனெழிலியிடைமறைந்தனனெனப்புடையே
சிந்தியதிவலைச்சிந்துவின்மறைந்தானரசனுமகிதலஞ்சேர்ந்தான்.

(இ - ள்.) மைந்தனும்-(அப்பொழுது)புதல்வனும்—இவனைத் தந்தை என்று உணர்கிலா மதியால் - இவனைப் பிதாவென்றறியாத புத்தியினால்—சராசனம் தழுவுற வளைத்து - வில்லை (இருகாலும்) பொருந்தவளைத்து—போர் ஒரு மோகனக் கணையால் மறையுடன் மார்பு உற எழுதி - போரையுடைய ஒரு மோகனபாணத்தால் மந்திரத்தோடு மார்பிற்பொருந்த எழுதி—இந்திரன் இந்திர தனுவோடு எழிலியிடை மறைந்தனன் என - இந்திரன் தன் வில்லோடு முகிலினிடை மறைந்தனன் என்னும்படி—புடை சிந்திய திவலைச் சிந்துவில் மறைந்தான்—பக்கத்திற் சிந்திய திவலையையுடைய நீரிலேமறைந்தான்—அரசனும் மகிதலம் சேர்ந்தான் - சந்தனுமகாராசனும் நிலத்தில்விழுந்தான். எ-று.

ஏ - அசை. மைந்தனும் அரசனும் என்னும் உம்மைகள் எச்சம். உணர்கிலாத என்னும் பெயரெச்சத்தீறுதொக்கது. இவனுடைய தோற்றத்தாற், சிறந்த வீரனென மதித்து அவன் வன்மைக்கேற்ப வில்லை முறுக வளைத்தானென்பார் தழுவுறவளைத்து எனவும், தேவபாணங்கள் தமக்குரிய மந்திரங்களோடு கூடாவழிப் பயன்படாவென்பார் மறையுடன்மார்புற எழுதி எனவுங்கூறினர். மோகனக்கணை மயக்கத்தைப்புரியும் பாணம். இதனைப் பெரும்பான்மை மோகபாணம் என்று வழங்குப. கணையாலெழுதி யென்பது கணையை யழுத்தியென்னும் பொருட்டு. (அசு)

காதலனயர்வுந்திருமகன்புனலிற்கரந்ததுங்கண்டுளமுருகி, மேதகுவடிவுகொண்டுமற்றந்தவெஞ்சிலைவினோதனுந்தானு, மோதவெண்டிரையின்மதியுடனுதித்தவொண்மலர்க்கொடியெனவோடித், தூதுளங்கனிவாய்மலர்ந்தினிதழைத்துச்சூடகச்செங்கையாலெடுத்தாள்.

(இ - ள்.) காதலன் அயர்வும் திருமகன் புனலிற் கரந்ததும் கண்டு - நாயகனுடைய சோர்வையும் அழகியபுதல்வன் நீரில் மறைந்தமையையுங் (கங்கையானவள்) கண்டு—உளம் உருகி - மனமுருகி—மேதகு வடிவு கொண்டு - மேலான உருவத்தைக்கொண்டு—அந்த வெம் சிலை வினோதனும் தானும் - அந்தக் கொடிய வில்வித்தையையே பொழுது போக்கும் விளையாட்டாக வுடைய புதல்வனுந்தானும்—ஓத வெண் திரையின் மதியுடன் உதித்த ஒண் மலர்க்கொடி என ஓடி - பெருக்கையுடைய வெண்மையாகிய பாற்கடலிற் சந்திரனோடு பிறந்த அழகிய இலக்குமியைப்போல ஓடிப்போய்—தூதுளங்கனி வாய்மலர்ந்து இனிது அழைத்து-தூதுளம்பழம்போன்ற சிவந்த வாயைத்திறந்து இனிமையோடு அழைத்து—சூடகச் செங் கையால் எடுத்தாள் - வளையலையுடைய சிவந்த கைகளாற்றூக்கினாள். எ - று.

மற்று - அசை. சிலை, திரை என்பன ஆகுபெயர்கள். வினோதனுந்தானும் எடுத்தாள் என்பது பால்விரவிச் சிறப்பினாலொருமுடி பேற்றது. "பனையுமரையும்" என்னுஞ் சூத்திரத்தில் நினையுங்காலை, என்பதனால் தூதுளை என்பது ஐ கெட்டு

அ

அம்முப்பெற்றுத் தூதளங்கனியென நின்றது. இவள், வெண்மையாகிய நீர்ப்பெருக்கினின்று புதல்வனோடெழுந்து சென்றமையினால், ஓதவெண்டிரையின் மதியுடனுதித்த வொண்மலர்க்கொடியென என்று கூறினார். சூடகம் என்பது கையிலணியும் ஓர் அணிவிசேடமெனினுமமையும். (அரு)

வாடியதருவின்மழைபொழிவதுபோன்மடவரல்கருணைநீர்பொழியக், கூடியவுணர்வோடெழுந்தகாவலனைக்கொங்கைமார்புறத்தழீஇக்கொண்டு, நாடியகருமம்வாய்த்ததென்றுவகைநலம்பெறத்தந்தைபைங்கழற்கால், சூடியமகவைக்கைக்கொடுத்திவளுந்தோன்றலோடிவையிவைசொன்னாள்.

(இ - ள்.) வாடிய தருவில் மழை பொழிவதுபோல் - வாடியமரத்தில் மழை பொழிதல்போல—மடவரல் கருணை நீர் பொழியக் கூடிய உணர்வோடு எழுந்த காவலனை - கங்கையானவள் கிருபையாகிய நீரைப்பொழிய (அதனால்) உண்டாகிய அறிவோடு எழுந்த அரசனை—கொங்கை மார்பு உறத் தழீஇக்கொண்டு - (தன்) முலைகள் (அவன்) மார்பிற்பொருந்த அணைத்துக்கொண்டு—நாடிய கருமம் வாய்த்தது என்று - (தான்) எண்ணிய கருமம் வாய்த்தது என்று கருதி—உவகை நலம் பெறத் தந்தை பைங் கழல் கால் சூடிய மகவைக் கைக் கொடுத்து - சந்தோஷநலம்பொருந்தப் பிதாவினுடைய பசிய வீரக்கழலை யணிந்த கால்களை வணங்கிய புத்திரனை (அவன்) கையிற்கொடுத்து—இவளும் தோன்றலோடு இவை இவை சொன்னாள் - இக்கங்கையும் அரசனோடு இந்த இந்த வசனங்களைச்சொன்னாள். எ - று.

இவளும் என்னும் உம்மை எச்சம். வாய்த்ததென்று கொடுத்தெனமுடிக்க. பொழிவது தொழிற்பெயர். பொழிய என்னுஞ் செயவெனெச்சம் ஏதுப்பொருட்டு. உற, பெற என்னுஞ் செயவெனெச்சங்கள் காரியப்பொருள. இவையிவை என்னும் அடுக்குப் பன்மைபற்றிவந்தது. மீளநின் கைப்படுத்துவலென்று தான் கூறியபடி புதல்வனாகிய தேவவிரதனைப் பிதாவிடத்திற்கொடுபோய் விடுக்குவலென்று கருதியகருமம் அவன் தானிருக்குமிடந்தேடி வந்தமையாற் றடையின்றிமுடிந்ததென்பாள் நாடியகருமம் வாய்த்ததென்றாள். அறிவோடெழுந்த நாயகன் புதல்வ னிங்ஙனம் மோகனக்கணையாலழுத்த எனக்கிவள் மனைவியாயிருந்தும் அவனைத்தடாமல் வாளா இருந்தாளே இவளியல்பிருந்தபடி என்னையோவென்று தன்னை முனியாதபடி தழீஇயினாள் என்பார், உணர்வோடெழுந்த நாயகனைக் கொங்கை மார்புறத்தழீஇ எனவும், இந்நாள் காறும் புதல்வரைக் கொண்டாடுதலாலுளதாம் உவகை இவற்கில்லை; இந்நாள் தொட்டேயுளதாம் என்பாராயும், இவ்வுவகை எவ்வுவகையினு மிகச் சிறந்த தென்பாராயும் உவகை நலம்பெற எனவுங் கூறினார். நாடியகருமம்வாய்த்த தென்று என்பதனைச் சந்தனுவுக்கேற்றிப் பொருள்கோடலும் ஒன்று. இப்பொருட்கு உவகை நலம்பெறு அத்தந்தை என்று கண்ணழித்துக் கொள்க. (அசு)

வேந்தகேளிவனுன்மதலையேதேவவிரதனென்றிவன்பெயர்பல்லோ
ராய்ந்தநூல்வெள்ளங்கடந்தனன்கரைகண்டருந்ததிபதிதிருவருளாற்
பூந்துழாய்மாலைப்போர்மழுப்படையோன்பொன்னடிபொலிவுறவணங்கி
யேந்துநீள்சிலையும்பலகணைமறையுமேனையபடைகளும்பயின்றான்.

(இ - ள்.) வேந்த கேள் இவன் உன் மதலையே - அரசனே கேள் இவன் உன் புத்திரனே—தேவவிரதன் என்று இவன் பெயர் - தேவவிரதன் என்று இவனுக்குப் பெயராகும்—அருந்ததிபதி திரு அருளால் - (இவன்) வசிட்டமுனி

வருடைய திருவருளினால்—பல்லோர் ஆய்ந்த நூல் வெள்ளம் கரைகண்டு கட ந்தனன் - (அறிஞர்) பலரும் ஆராய்ந்த சாத்திரங்களாகிய கடலைக் கரைகண்டு கடந்தான் (அதுவன்றி)—பூந் துழாய் மாலைப் போர் மழுப்படையோன் பொன் அடி பொலிவு உற வணங்கி - பொலிவாகிய துழாய்மாலையைத் தரித்த போர் செய்கின்ற பரசுராமருடைய அழகிய பாதங்களைத் தான் மேற்பட்டுத் தோன்ற வணங்கி—ஏந்து நீள் சிலையும் - தாங்குகின்ற நெடிய வில்வித்தையையும்—பல கணை மறையும் - பல பாணங்களைத் தொடுக்குந் தொழிலையும் (அவற்றிற்குரிய) மந்திரங்களையும்—ஏனைய படைகளும் - ஒழிந்த படைக்கலத் தொழில்களையும்—பயின்றான் - கற்றான். எ - று.

ஏகாரம் - தேற்றம். சிலை, கணை, படை ஆகுபெயர்கள். உற என்னுஞ் செய வெனெச்சம் காரணகாரியப்பொருட்டு. பல்லோர் என்பதில் முற்றும்மை விகாரத் தாற்றொக்கது. கணைமறை, உம்மைத்தொகை. போர், மழுவை விசேடித்தது. ஆய்ந்த என்பது "யரலழ வென்னு மீரிரண்டொற்றும், வரன்முறை பிறழாது வந் திடை யுயிர்ப்பினஃ, தாசிடை யெதுகையென் றறைதல் வேண்டும்" என்னும் விதிபற்றி, யகரவொற்றிடைவந்த ஆசெதுகை. எத்துணைப் பெரியோர் பல ரும் அளவுகாண்டற் காய்ந்தாய்ந்து அளவுபடாமையினால் ஒழிந்தநூன்மிகுதி என் பார் பல்லோராய்ந்தநூல் வெள்ளம் எனவும், அங்ஙனமளவுபடாத வற்றை இவற் களவுபடுத்திய வருளென்பார் திருவருள் எனவும், விட்டுணுவின் அவதாரத்தனெ ன்பார் துழாய் மாலைப்போர் மழுப்படையோ னெனவும், தநுர்வேதமுதலியவற் றினு லெவரினும் மேற்பட்டுத்தோன்ற வணங்கினான் என்பார் பொலிவுறவணங்கி எனவுங் கூறினர். பொலிவுற வணங்கி என்பதற்கு, வணங்கும் விதிபிறழாது வண ங்கி எனினும் அமையும். (அஎ)

மகப்பெறுமவரிலொருவரும்பெறாதமகிழ்ச்சியும்வாழ்வுமெய்வலியு
மிகப்பெறுந்தவநீபுரிந்தனை நின்னைவேறினிவெல்லவல்லவரா
ருகப்புறவிவனோடவனியாளுகவென்றோரடிக்கோரடிபுரிந்து
தகப்பெறுமயிலுந்தலைவன்மேலுள்ளந்தகைவுறத்தடம்புனல்புகுந்தாள்.

(இ - ள்.) நீ மகப் பெறும் அவரில் ஒருவரும் பெறாத மகிழ்ச்சியும் - அர சனே நீ புதல்வரைப்பெறுமவரில் ஒருவரும் அடையாத சந்தோஷத்தையும்—வாழ்வும் மெய் வலியும் மிகப் பெறும் தவம் புரிந்தனை - வாழ்வையும் மெய்ம்மை யாகிய வலிமையையும் மிகுதியாகப் பெறுதற்கேதுவாகிய தவத்தைச்செய்தனை—இனி நின்னை வெல்ல வல்லவர் வேறு ஆர் - இனி உன்னை வெல்ல வல்லவர் வேறு யாவர்—உகப்பு உற இவனோடு அவனி ஆளுக என்று - மகிழ்ச்சி மிக இப்புதல்வ னோடு பூமியை ஆளுக என்று சொல்லி—தகப்பெறு மயிலும் - தகைமை பொரு ந்திய மயில்போலுஞ் சாயலையுடைய கங்கையும்—தலைவன்மேல் உள்ளம் தகைவு உற ஓரடிக்கு ஓரடி புரிந்து - தலைவன்மேற் பற்றிய மனம் வருந்தப்(பிரிவாற்றாமை யால்) அடிக்குமேல் அடிவைத்து நடந்து—தடம் புனல் புகுந்தாள் - மிக்க நீரினுள் மறைந்தாள். எ - று.

மயில் ஆகுபெயர். மயிலும் என்னும் உம்மை எச்சத்தோடு சிறப்புமாயிற்று. ஒருவரும் என்னும் உம்மைமுற்று. தடம்புனல் என்பதற்குத் தடந்தோட் குரைத் தாங்குரைக்க. பெறும் என்னும் பெயரெச்சம், தவம் என்னும் ஏதுப்பெயர் கொ ண்டது. கல்விகரைகண்டவனையும் வீரனையும் விளங்கும் புதல்வன் அருந்தவப் பே றுடையார்க்கே யன்றி ஏனையோர்க்குவாயான்; அப்புதல்வனாலேயே பிதாவுக்கு

மகிழ்வும் வாழ்வும் வலியுமுளவாம்; அவனை உலகில் நின்னையொழிய வேறொருவர் பெற்றாரிலரென்பாள் மகப்பெறுமவரிலொருவரும்பெறாதமகிழ்ச்சியும் வாழ்வு மெய்வலியு மிகப் பெறுந்தவனீ புரிந்தனை என்றாள். ஓரடிக்கோரடி புரிந்து என்பதற்குத் தான் பெயர்த்துவைக்கும் ஒவ்வோரடிக்கும் அவனும் ஒவ்வோரடிபெயர்த்துவைத்துப் பின்றொடரும்படி செய்து எனினும் அமையும். இப்பொருட்குப் புரிந்து என்பதிலே பிறவினைப் பொருளுணர்த்தும் விவ்விகுதி தொக்கதாகக் கொள்க. இனி இதற்கு அடிக்குமே லடிவைக்குந்தோறும் இவனோ டவனியாளுக வென்று சொல்லி எனப் பொருள்கொள்வாருமுளர். உகப்புற என்பதற்கு முன்னையினும் உயர்ச்சி உண்டாக எனினுமமையும். (அஅ)

மனைவியைக்கண்டுமீளவும்பிரிந்தவருத்தமெய்த்திருத்தகுகேள்வித்
தனையனைக்கண்டமகிழ்ச்சியாலருக்கன்றன்னெதிரிருளெனத்தணப்ப
நினைவினிற்சிறந்ததேர்மிசைப்புதனுநிறைகலைமதியுமேநிகர்ப்பப்
புனைமணிக்கழலானவனொடுந்தனதுபுரமெதிர்கைதொழப்புகுந்தான்.

(இ - ள்.) மனைவியைக் கண்டு மீளவும் பிரிந்த வருத்தம் - (தான்) மனைவியைக்கண்டு திரும்பவும் பிரிந்த வருத்தமானது—மெய்த் திருத்தகு கேள்வித் தனையனைக் கண்ட மகிழ்ச்சியால் - மெய்ம்மையாகிய அழகு தக்ககல்வியையுடைய புத்திரனைக்கண்ட சந்தோஷத்தால்— அருக்கன் எதிர் இருள் எனத் தணப்ப - சூரியனை எதிர்ந்த இருளைப்போல நீங்க—நினைவினிற் சிறந்த தேர்மிசை - (வேகத்தால்) மனத்தினுஞ்சிறந்த தேரின்மேல்—புதனும் நிறைகலை மதியுமே நிகர்ப்ப - புதனையும் நிறைந்த கலைகளையுடைய சந்திரனையுமேபோல—அவனொடு புனைமணிக் கழலான் - அந்தப் புதல்வனோடு கட்டப்பட்ட அழகியவீரக்கழலையுடைய சந்தனுமகாராசன்—தனது புரம் எதிர் கைதொழப் புகுந்தான் - தன்னுடைய நகரத்திலுள்ளோர்கள் எதிரே அஞ்சலிசெய்யப்போனான். எ - று.

தன் - சாரியை. நினைவினில் என்பதில் இல்லுருபு நீக்கப்பொருளில் வந்தது. ஏகாரம் - தேற்றம். புரம் - ஆகுபெயர். அவனொடும் புகுந்தான் என்பது ஒருவினையொடுச்சொ லுயர்பின் வழித்தன்றிக் கைப்பொருளொடு வந்தான் என்பதுபோலப் பிறிதுபொருள் படுவதோரொடுவென்க. மனைவியைப் பிரிந்த வருத்தம் இவனைக்கண்டபொழுதே நீங்கிற்றென்பார் அருக்கன்றன்னெதிரிருளெனத் தணப்பவென்றும், பிதா நிறைந்த தண்ணளியுடையனா யிருத்தலினாலும் புதல்வன் பண்டிதனா யிருத்தலினாலும் இவர்க்குப் பிறரொருவரும் ஒவ்வாரென்பார் தேற்றேகாரங்கொடுத்துப் புதனும் நிறைகலைமதியுமே நிகர்ப்ப என்றும், கல்விக்குத்தக்க ஒழுக்கமுடையனென்பார் மெய்த்திருத்தகு கேள்வித் தனயன் என்றும், எம்மரசன் தனக்குப்பின் தன்னினுஞ் சிறந்த ஓரரசகுமரனை நெறிபிறழாதாள நமக்குத் தந்தானே இவனன்றோ நாம் வழிபடு கடவுளென உவகை வெள்ளத் தழுந்தித் தொழுதார் என்பார் தனது புரம் எதிர் கைதொழ என்றுங் கூறினார். (அகூ)

தானுமம்மகனுந்தரியலர்வணங்கத்தங்குநாடன்னிலங்கொருநாட்
டேனுறுந்தொடையலிளவரசெனத்தன்றிகழரியாசனத்திருத்திக்
கானுறுவிலங்கினுயிர்கவர்நசையாற்காற்றெனக்கூற்றெனநடந்து
பானுவின்மகளாங்காளிந்திநதியின்பாரமெய்தினன்விறற்படையோன்.

(இ - ள்.) விறற் படையோன் - வலிய படைகளையுடைய சந்தனுமகாராசன்—தானும் அம்மகனும் தரியலர் வணங்க அங்குத் தங்கு நாளில் ஒரு நாள்-தானும் அப்புத்திரனும் பகைவர்கள்வணங்க அங்கே இருக்குநாளில் ஒருநாள்—தேன்

உறும் தொடையல் இள அரசு எனத் தன் திகழ் அரி ஆசனத்து இருத்தி - (புத்திரனைத்) தேன்மிக்க மாலையையுடைய இளவரசனாகத் தனது விளங்குகின்ற சிங்காசனத்தில் இருத்தி—கான் உறு விலங்கின் உயிர் கவர் நசையால்-காட்டில் மிக்க மிருகங்களினுடைய உயிரைக்கவரும் ஆசையினால்—காற்று எனக் கூற்று என நடந்து - (வேகத்தால்) வாயுவெனவும் (கொலையால்) யமன் எனவுஞ்சென்று—பானுவின் மகள் ஆம் காளிந்தி நதியின் பாரம் எய்தினன்-சூரியனுடையமகளாகிய காளிந்தி நதியின் கரையை அடைந்தான். எ - று.

தன் - சாரியை. தான் கருதியதனைத் தவறாதுமுடிக்கு மாற்றலுடையனென்பார் விறற்படையோன் எனவும், முடியுங் குடையுமாகிய அரசசின்னம் இரண்டும் ஒழிய ஏனை அரசசின்ன மெல்லாம் இளவரசர்க் குரியவென்பார்தேனுறுதொடையலிளவரசெனத் தன்றிகழரியாசனத்திருத்தி எனவும், காட்டில் விலங்குகள் மிகின் அவை நாட்டிற் கேதஞ்செய்யு மென்னுங் கருணையுடைய கருத்தினனாய் அவற்றைத் தப்பாமற் கொல்லக்கருதி விரைந்தான் என்பார் கானுறுவிலங்கினுயிர் கவர்நசையாற் காற்றெனக் கூற்றென நடந்து எனவுங் கூறினார். (கூ0)

பாசறைமுழுதுமொருபெருங்கடவுட்பரிமளமொல்லெனப்பரப்பி
யோசனையளவுங்கரையிருமருங்குமுயிர்க்குமெல்லுயிர்ப்பெதிரோடித்
தாசர்தங்குலத்துக்கதிபதியளித்ததையலைத்தரணிபர்க்கெல்லா
மீசனுமுருகிக்கண்டுளங்களியாவிலங்கிழையார்கொனீயென்றான்.

(இ - ள்.) பாசறை முழுதும் ஒரு பெரும் கடவுட் பரிமளம் ஒல்லெனப் பரப்பி - (தான் இருக்கின்ற) பசிய (இலைகளால் வேயப்பட்ட) சிறு வீடு முழுதும் ஒப்பற்ற பெரிய தெய்வீகமாகிய வாசனையை விரைவாய்ப்பரப்புதலால்—கரை இரு மருங்கும் யோசனை அளவும் உயிர்க்கும் மெல் உயிர்ப்பு எதிர் - (காளிந்தி நதிக்) கரையின் இருபக்கத்திலும் ஒருயோசனைவரைக்கும் செல்கின்ற மெல்லிய காற்றுக்கெதிரே—தரணிபர்க்கு எல்லாம் ஈசனும் ஒடி - (கரையை அடைந்த) அரசர்க்கரசனாகிய சந்தனுவும் விரைந்துபோய்—தாசர் குலத்துக்கு அதிபதி அளித்த தையலைக் கண்டு - பரதவர் குலத்துக்குத் தலைவன் பெற்ற பெண்ணைக் கண்டு—உளம் உருகிக் களியா - மனமுருகிக் களித்து—இலங்கு இழை நீ யார் என்றான் - விளங்குகின்ற ஆபரணங்களையுடைய பெண்ணே நீ யார் என்று வினாவினான். எ - று.

பாசறை விகாரம்; பாசவல் என்பதுபோல. தம் - சாரியை. ஈசனும் என்னும் உம்மை சிறப்பு; எச்சமுமாம். முழுதும் மருங்கும் என்னும் உம்மைகள் முற்று. அளவும் என்னும் உம்மை முற்றோடு சிறப்பு. இலங்கிழை, வினைத்தொகைப் புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை; அது, அண்மைவிளியாதலின் இயல்பாயிற்று. ஒல்லென விரைவுக்குறிப்பு. பரப்பியென்னுஞ் செய்தெனெச்சம் ஏதுப்பொருட்டு. கொல் - அசை. தாசர் - நெய்தனிலமாக்கள். ஏனைமணங்கள்போ லிடையீடுபடாமற் றடையூடறுத்துச் செல்லுந் தெய்வீகமணமென்பார் கடவுட் பரிமளம் ஒல்லெனப்பரப்பி என்றும், இஃதோ ரதிசயமிருந்தபடியென்னை யென்பானாய் விரைந்தான் என்பார் ஒடி என்றும், தரணிபர்க்கெல்லா மீசனாயினும்அவளுடைய கடவுட்பரிமளத்தாலும் அழகாலும் கண்டபொழுதே யுருகிக்களித்தான் என்பார் உளமுருகிக் களியா என்றும், அவளை முகங்கோடற்குச் சிறப்பித்து விளித்தான் என்பார் இலங்கிழையார்கொனீ என்றான் என்றுங் கூறினார். (கூக)

நிருபனதுரைகேட்டஞ்சினளொதுங்கிநின்றுகைநினைவுறக்குவியா,
விருதுறைநெறியில்வருநரைநாவாயேற்றுவலெந்தையேவலினென், உ
ரைசெயுமளவில்வேட்கையாலுள்ளமுருகிமெய்ம்மெலிந்தொளிகருகி,ய
ரிவையையளித்தோன்பக்கமதடைந்தானவனும்வந்தடிமலர்பணிந்தான்.

(இ - ள்.) நிருபனது உரை கேட்டு அஞ்சினள் ஒதுங்கி - அவள் அரசனுடைய வசனத்தைக்கேட்டுப் பயந்து ஒதுங்கி—நினைவு உற நின்று கை குவியா- ஆலோசனை மிக நின்று அஞ்சலிசெய்து—இரு துறை நெறியில் வருநரை - இரண்டு துறைகளின் வழியிலும் வருகின்றவர்களை—எந்தை ஏவலின் நாவாய் ஏற்றுவல் என்று உரைசெயுமளவில் - என்பிதாவினது கட்டளையினால் நாவாயிலேற்றுவேன் என்று சொல்லுமளவில்—வேட்கையால் உள்ளம் உருகி மெய் மெலிந்து ஒளி கருகி - (அவன்) ஆசையினால் மனமுருகி உடம்பு மெலிந்து நிறங்கருகி—அரிவையை அளித்தோன் பக்கமது அடைந்தான் - அப்பெண்ணைப் பெற்றோனிருக்குமிடத்தை அடைந்தான்—அவனும் வந்து அடிமலர் பணிந்தான் - அவனும் வந்து இவனுடைய கால்களாகிய தாமரைமலர்களை வணங்கினான். எ - று.

பக்கமது என்பதில் அது பகுதிப்பொருள்விகுதி; சிவனவன் என்பதுபோல. அஞ்சினள் வினையெச்சமுற்று. அவனும் என்னும் உம்மை எச்சம்; அசையெனினுமமையும். உருகி, மெலிந்து, கருகி என்னுஞ் சினை வினைகள் முறையே ஒன்றற்கொன்று காரணகாரியமாய் அடைந்தான் என்னு முதல்வினைகொண்டன. தன்மாட்டுக் குற்றங்கண்டு வந்தானோ அன்றி வேறு காரணம்பற்றி வந்தானோ எனக் கருதினாள் என்பார் நினைவுற என்றார். (கூஉ)

பாகனையரசன்குறிப்பினாலேவப்பாகனும்பரதவர்பதியை
யோகையோடிருத்திநின்னுழைவதுவையுலகுடைநாயகனயந்தான்
றோகைசெய்தவமோநின்பெருந்தவமோதொல்குலத்தவர்புரிதவமோ
வாகுமிவ்வாழ்வென்றுரைத்தனனவனுமாகுமாறவனுடனுரைப்பான்.

(இ - ள்.) பாகனை அரசன் குறிப்பினால் ஏவ - (அப்பொழுது தன்) தேர்ப்பாகனைச் சந்தனுமகாராசன் குறிப்பினாலே (மணம் பேசுக என்று) கட்டளையிட—பாகனும் பரதவர் பதியை ஓகையோடு இருத்தி - அத் தேர்ப்பாகனும் பரதவர்க்கதிபதியை மகிழ்ச்சியோடு இருத்தி—உலகு உடை நாயகன் நின்னுழை வதுவை நயந்தான் - உலகையுடைய சந்தனுமகாராசன் உன்னிடத்தில் விவாகத்தைவிரும்பினான்—ஆகும் இவ்வாழ்வு தோகை செய் தவமோ - நிகழுகின்ற இந்தவாழ்வு உன்மகள் செய்த தவப்பயனோ—நின் பெரும் தவமோ - (அன்றி) உன்னுடைய பெருந்தவப்பயனோ—தொல் குலத்தவர்புரிதவமோ—(அன்றிப்) பழைய உன் வம்மிசத்தவர்செய்த தவப்பயனோ—என்று உரைத்தனன் - என்று சொன்னான்—அவனும் ஆகுமாறு அவனுடன் உரைப்பான் - அவனும் இயையும்படி அப்பாகனோடு சொல்லுவான். எ-று.

தவம் மூன்றும் தோகையும் ஆகுபெயர்கள். பாகனும் அவனும் என்னும் உம்மைகள் எச்சம்; அசை எனினுமமையும். ஆகுமாறு என்பது மாறீற்று வினையெச்சம். அவனுட னுரைப்பான் என்பதில் ஒடு, "பகையுடன் கிடந்த நிலைபிரிவழக்கினை" என்பதுபோல வேறுவினை ஒடு. தான் அரசனுடைய பாகனாயினும் நினைத்தகருமமுடித்தல் வேண்டும் என்னுங் கருத்துடையனாய் அவனை முகங்கோடற்குரிய மெய்ப்பாட்டைத் தன்மாட்டு நிகழ்த்தி இருத்தி

ஞன் என்பார் உவகையோடிருத்தி என்ருர். இவள் எழுபிறப்பினுமுயன்ற தவப்பயனோ வென்பான் தோகைசெய்தவமோ என்றும், மாரிக்கண் நீர் நிலைநின்றுங் கோடைக்கண் வெயினிலைநின்றும் நீ இயற்றிய அருந்தவப்பயனோ வென்பான் நின் பெருந்தவமோ என்றும், உன்ருதை மூதாதை அவன்ருதை முதலியோர்புரிந்ததவப்பயனோ என்பான் தொல்குலத்தவர் புரிதவமோ என்றுங் கூறினன். (௩)

பூருவின்மரபிற்பிறந்தகோமகனென்புன்குலமகள்குயம்பொருந்தன், மேருவுமணுவுநிறுக்குமாறொக்குமேலினியிவைபுகன்றென்கொல், பாருவகையினுலாளுதற்கிருந்தான்பகீரதிமகனிவள்பயந்த, சீருடைமகன்மற்றென்செய்வானிசைமின்செய்கைதான்றிருவுளங்குறித்தே.

(இ - ள்.) பூருவின் மரபிற் பிறந்த கோமகன் என் புன் குலமகள் குயம் பொருந்தல் - (உயர்ந்த) பூருமகாராசனுடைய வம்மிசத்தில் அவதரித்த அரசன் எனது எளியகுலத்தில் அவதரித்த புதல்வியுடையமுலைகளை அணைதல்—மேருவும் அணுவும் நிறுக்கும் ஆறு ஒக்கும் - மகாமேருமலையும் (சிறிய) அணுவும் நிறுக்கும் வழி (அடையும் வேறுபாட்டைப்) போலும்—மேல் இனி இவைபுகன்று என் - இனிமேல் இவைகளைச்சொல்லி என்ன பயன்—பகீரதி மகன் பார் உவகையினல் ஆளுதற்கு இருந்தான் - கங்கையினுடைய குமாரர் பூமியை மகிழ்ச்சியோடு ஆளுதற்கிருந்தார்—இவள் பயந்த சீர் உடை மகன் மற்று என் செய்வான் - இவள் பெற்ற சிறப்பையுடைய புத்திரன் வேறென்ன செய்வான்—திருவுளம் குறித்துச் செய்கை இசைமின்—திருவுளத்திற் சிந்தித்து (அடியேன்) செயற்பாலனவற்றைத் (தாங்கள்) கட்டளையிட்டருளுங்கள். எ - று.

கொல் - ஏ - அசைகள். தான் - சாரியை. இருந்தான், பயந்த என்பன, முறையே நிகழ்காலமு மெதிர்காலமும் இயற்கைபற்றி இறந்தகாலமாயின. மற்று என்பது பிறிதென்னும் பொருளில்வந்த இடைச்சொல். இறப்பவுயர்ந்தான் இறப்பவிழிந்தாளை மணஞ்செய்தல் இருபாலார்க்குமடாதாயினும் அரசனுணைக்கமைந்துடன்படல்வேண்டுமென்பான் மேலினியிவை புகன்றென் என்றும், பகீரதிமகன் பாராளுதற்கோர் தடையின்றென்பான் பாருவகையினு லாளுதற் கிருந்தான் என்றும், அரசனுக்குற்பவித்த புதல்வனுதலின் நம்மனோராகிய வலைஞர்க்குரிய தொழில் அவற்கடாதென்பான் இவள் பயந்த சீருடை மகன் மற்றென் செய்வான் என்றும், பாகனே மணம்பேசினனயினும் அருகில்நின்ற அரசன்கருத்தின்படியே பேசினன் என்பதனை அவன் வாளாநின்றமையா லறிந்தா னுதலின் அவற்கே விடைகூறுபவனுய் உயர்த்தி ஒருவரைக்கூறும் பன்மைக்கிளவியாற் செய்கைதான் றிருவுளங்குறித்தேஉரைமின் என்றுங்கூறினன். தான் என்பதைச் சாரியையாக்காது பெயராக்கித் தான் இசைமினென்றியைத்து ஒருமை பன்மை மயக்கமெனக்கோடல் ஈண்டுச்சிறப்பின்று. பொருந்தல் என்பதனைப் பிறவினைப் பொருள் உணர்த்தும் விவ்விகுதி தொக்கதாகக் கொண்டு புன்குலமகள் குயத்தைப்பொருந்துவித்தல் எனப்பொருள் கொள்வாருமுளர். (கூச)

என்னமுன்னிறைஞ்சியிவன்மொழிகொடுஞ்சொலிறையவன்கேட்டலுமிரண்டு, கன்னமுமழற்கோல்வைத்தனதொத்திதயங்கருகிவேறொன்றையுங்கழறான், முன்னமுன்மதத்தான்முனியிடுசாபமுடிந்ததென்றுகுலமுற்றி, யன்னமுங்குயிலும்பயிலுநீள்படப்பையத்தினுபுரியைமீண்டடைந்தான்.

(இ - ள்.) என்ன முன் இறைஞ்சி இவன் மொழி கொடும் சொல் இறையவன் கேட்டலும்-என்று தன்முன்னே வணங்கி இப்பரதவர்க்கதிபதி சொல்லுங்

கொடிய சொல்லைச் சந்தனுமகாராசன் கேட்டு—இரண்டு கன்னமும் அழற்கோல் வைத்தது ஒத்து - இரண்டு காதுகளிலும் அக்கினியிற் காய்ச்சிய சலாகையை வைத்ததை ஒத்து—இதயம் கருகி வேறு ஒன்றையும் கழறான்-மனங்கருகி வேறொன்றையும் பேசாதவனாய்—முன்னம் உன் மதத்தால் முனி இடு சாபம் முடிந்தது என்று ஆகுலம் முற்றி - முன்னே (நான் கொண்ட) மயக்கத்தினாற் பிரமனிட்ட சாபம் முடிந்தது என்று வருத்தம் முதிர்ந்து—அன்னமும் குயிலும் பயிலும் நீள் படப்பை அத்தினபுரியை மீண்டு அடைந்தான் - அன்னங்களுங் குயில்களுமிருக்கும் பெரிய மருதநிலஞ் சூழ்ந்த அத்தின புரத்தைத் திரும்பி வந்தடைந்தான். எ - று.

கழறான் வினையெச்சமுற்று. கேட்டலும் என்னும் செயவெனெச்சப் பொருட்டும் உம்மீற்றுவினை யெச்சம் செய்தெனெச்சமாகத் திரிக்கப்பட்டேதுப்பொருளாய்நின்றது. கன்னமும், ஒன்றையும் என்னும் உம்மைகள்முற்று. உன்மதம் - மயக்கம். இவளைச் சேராவிடில் நான் இறந்துவிடுவேன் என்னுங் கருத்துடையனாய் முனியிடுசாபம் முடிந்தது என்றான். ஒன்றற் கொன்றியை பில்லாத அன்னச்சாதியுங் குயிற்சாதியும் ஒருங்குகந்து பயிலும் நாட்டையுடையனாதலால் இவனுந்தன்மரபிற்கியையாப் பரதவப்பெண்ணை விரும்பினான் என்பது போதர அன்னமுங்குயிலும் பயிலும் நீள்படப்பை யத்தினபுரி என்றார். (சுரு)

கங்கையாளிடத்திலாதரமெலிந்தகாலையிற்களிந்தவெற்பளித்த
மங்கையாமென்னநின்றபூங்கொடிமேல்வைத்தபேராதரமலியப்
பங்கையானனந்தான்முறைமுறைகுறையும்பான்மதியெனவழகழிந்த
சங்கையான்மைந்தன்வினவலுநிகழ்ந்ததன்மையைச்சாரதிபுகன்றான்.

(இ - ள்.) கங்கையாளிடத்தில் ஆதரம் மெலிந்தகாலையில் - கங்கையென்பவளிடத்தில் வைத்த விருப்பங் குறைந்தபொழுதில்—களிந்த வெற்பு அளித்த மங்கையாம் என்ன நின்ற பூங்கொடிமேல்-களிந்தமலை பெற்ற காளிந்திநதி என்னும் பெண்ணாமென்று சொல்ல நின்ற பூவையுடைய கொடிபோல்வாள் மேல்—வைத்த பேர் ஆதரம் மலிய - வைத்த பெரிய விருப்பம் நிறைய—பங்கய ஆனனம் முறை முறை குறையும் பால் மதி என அழகு அழிந்த சங்கையால் - (பிதாவினுடைய) தாமரைமலர்போலும் முகம் நாளுக்குநாட் (கலை) குறையும் வெண்மையாகிய சந்திரனைப்போல் அழகு கெட்டமையினால் வந்த சந்தேகத்தால்—மைந்தன் வினவலும் - புதல்வனாகிய தேவவிரதன் வினவ—நிகழ்ந்த தன்மையைச் சாரதி புகன்றான் - சம்பவித்த சமாசாரத்தைத் தேர்ப்பாகன் சொன்னான். எ - று.

தான் - அசை. அழகழிந்த சங்கை என்பதனைப் பந்தெறிந்தவயர் வென்பது போற்கொள்க. பங்கையானனம் மொழியிடைப்போலியாய்வடநூன்முடிபாயிற்று. வினவலும் உம்மீற்றுவினையெச்சம். மலிய என்னுஞ் செயவெனெச்சம் எதுப்பொருட்டு. இவன்முகம் நாளொருவண்ணமாய்க் குறைந்ததென்பார் முறைமுறை குறையும் பான்மதி என்றும், நிகழ்ந்தவற்றை மிகுத்துங் குறைத்துங் கூறாது உள்ளபடியே கூறினான் என்பார் நிகழ்ந்ததன்மையை என்றுங் கூறினார். (சுசு)

கேட்டவக்கணத்திற்கடற்புறத்தரசைக்கேண்மையோடடைந்திளவரசும்
பாட்டனீயெனக்குப்பெற்றதாய்தானும்பகீரதியல்லணின்மகளே
நாட்டமின்றுனக்கியாததுநிலையிந்தஞாலமுமெம்பியர்ஞால
நீட்டமற்றின்றேதிருமணநேர்வாய்நீதிகூர்நிருபனுக்கென்றான்.

(இ - ள்.) இள அரசும் கேட்ட அக்கணத்தில் கடற் புறத்து அரசைக் கேண்மையோடு அடைந்து - இளவரசனாகிய தேவவிரதனும் (பாகன் சொல்லிய வசனத்தைக்) கேட்ட அந்தக்கணமே நெய்தனிலத்தலைவனை உறவாந்தன்மையோடு அடைந்து—எனக்குப் பாட்டன் நீ - எனக்குப்பாட்டன் நீயே—பெற்ற தாய் தானும் பகீரதி அல்லள் நின் மகளே - என்னைப் பெற்றதாயுங் கங்கையல்லள் உன்மகளே—இன்று உன்க்கு நாட்டம் யாது அது நிலை - இன்றைக்கு உனக்கு எண்ணம் யாதோ அதுவேநிலையாம்—இந்த ஞாலமும் எம்பியர் ஞாலம் - இந்தப் பூமியும்எனக்குத் தம்பியராவாருடைய பூமியே(ஆதலால்)—நீட்டம்அற்று இன்றே நீதிகூர் நிருபனுக்குத் திருமணம் நேர்வாய் என்றான் - தாமதமின்றி இன்றைக்கே நீதிமிக்க அரசனுக்குத் திருமணஞ்செய்ய உடன்படுவாய் என்றான். எ-று.

அரசும் தானும் என்னும் உம்மைகள் சிறப்பு. ஞாலமும் என்னும் உம்மை சிறப்போடெச்சமுமாய் நின்றது. ஏகாரங்கள் இரண்டும் - தேற்றம். நீட்டம் - தொழிற்பெயர். தந்தைமுகம் நாளொருவண்ணமாய் அழகழிந்தமையினால் இனி இவனுயிர்க்கும் இறுதிவருங்கொலோ என்றஞ்சி விரைந்தான் என்பார் கேட்ட அக்கணத்தில் என்றும், தான் மிக உயர்ந்த அரசனாயினும் தந்தைகருத்தை முடித்தலே மைந்தர்க்குக் கடன் என்னுங் கருத்தினனாய் உறவிற்குரிய அளவளாவுதலோடு மிக எளியபரதவனை அடைந்தான் என்பார் கேண்மையோ டடைந்தென்றும், தனக்கினி உற்பவிக்கும் புதல்வரைப் பக்ஷபாதமின்றி நடாத்துவான் என்பான் நீதிகூர்நிருபனுக்கு என்றான் என்றுங்கூறினார்.　　　　(கூஎ)

விரதமுற்றியவாறனைவருங்கேண்மின்மெய்யுயிர்வீடுமன்றளவுஞ், சுரதமுற்றியமெய்த்தாதுவுமூலத்தழலுடன்மீதெழுந்தகைத்தே, யிரதமுற்றியசொன்மகப்பெறாதவருக்கில்லையென்றியம்புநற்கதியுஞ், சுரதமுற்றியவென்றந்தைதன்பொருட்டாற்பெறுவலென்றின்னதுஞ்சொன்னான்.

(இ - ள்.) விரதம் முற்றிய ஆறு அனைவரும் கேண்மின் - (யான்) விரதம் முடித்தவழியை எல்லாருங்கேளுங்கள்—மெய் உயிர் வீடும் அன்று அளவும்-(என்) உடம்பினின்று உயிர்நீங்கும் அக்காலம்வரையும்—முற்றிய மெய்த்தாதுவும் மூலத் தழலுடன் மீது எழும் தகைத்தே - முதிர்ந்த உடம்பினுள்ள சுக்கிலமும் மூலாக்கினியுடன் மேலே எழுந்தகைமையை யுடைத்தே—சரதம் - (இது) நிச்சயம்—இரதம் முற்றிய சொல் மகப் பெறாதவருக்கு இல்லை என்று இயம்பு நல் கதியும் - (செவிக்கு) இனிமைமிக்க சொல்லையுடைய புதல்வரைப் பெறாதவருக்கு இல்லை யென்று சொல்லும் மேலானபதவியையும்—சுரதம் முற்றிய என் தந்தை பொருட்டால் பெறுவல் என்று - புணர்ச்சியைமுடித்த என் பிதாவின் பொருட்டால் அடைவேன் என்று—இன்னதும் சொன்னான் - இதனையுஞ் சொன்னான். எ - று.

தன் - சாரியை. தகைத்தே என்னும் ஏகாரம் தேற்றம். தாதுவும் கதியும் என்னும் உம்மைகள் சிறப்பு. இன்னதும் என்னும் உம்மை இறந்தது தழீஇய வெச்சம். முற்றிய என்னும் பெயரெச்சம் தாதுவென்னும் பெயர் கொண்டது. அளவும் என்பது உம்மீற்றுவினையெச்சம். பெறுவல் தன்மை யொருமைவினை முற்று. தெளிவுபற்றிச் சுரதமுற்றியவென எதிர்காலம் இறந்த காலமாகக் கூறப் பட்டது. அடக்கற்கரியதாது என்பான் மூற்றியதாது என்றும், மேனோக்கிய வீரியத்தை உடையேனாதலால் இந்திரியவாதை எனக்கில்லை என்பான் தாதுவும் மூலத்தழலுடன் மீதெழுந்தகைத்து என்றும், செவிக்கின்பஞ் செய்வனவாகிய குழல்

யாழ்முதலியவற்றினும்பார்க்க மிக இன்பஞ்செய்வதுஎன்பான் இரசமுற்றியசொல் என்றும், புத்திரரைப் பெறாதாருக்கு இல்லையெனப்படும் நற்கதியை என்றந்தை மனத்தை உவப்பித்தலாகிய புண்ணியத்தாற் பெறுவேன் என்பான் மகப்பெறா தவருக் கில்லையென்றியம்பு நற்கதியுஞ் சுரதமுற்றிய என்றந்தைதன்பொருட்டாற் பெறுவல் என்றுங் கூறினன். (சுஅ)

இவன்மொழி நயந்துகேட்டுழியவையினிருந்ததொன்மனிதரேயன்றித்
தவமுனிவரருந்தேவருங்ககனந்தங்குமாமங்கையர்பலரு [தா
முவகையோடிவனுக்கேற்றபேருரைசெய்தொளிகெழுபூமழைபொழிந்
ரவனியினிருபர்வெருவருந்திறலானரியசொற்பொருணிலையறிந்தே.

(இ - ள்.) இவன் மொழி நயந்து கேட்டுழி - இந்தத் தேவவிரதனுடைய வசனத்தை விரும்பிக் கேட்டபொழுது—அவையில் இருந்த தொல் மனிதரே அன்றி- சபையிலிருந்த பழைய மனிதரேயன்றி—தவ முனிவரரும் - தவத்தையுடைய இருடிகளும்—தேவரும் - தேவர்களும்—ககனம் தங்கு மா மங்கையர் பலரும் - விண்ணுலகத்திற் றங்குகின்ற பெருமையையுடைய பெண்கள் பலரும்—அவனியில் நிருபர் வெருவரும் திறலான் அரிய சொற்பொருள் நிலை அறிந்து - பூமியிலுள்ள அரசர்கள் அஞ்சத்தக்க வலிமையினை யுடையனாகிய அவனது அரியசொல்லின் பொருணிலையை அறிந்து—உவகையோடு இவனுக்கு ஏற்ற பேர் உரைசெய்து - மகிழ்ச்சியோடு இவனுக்கியைந்த (வீடுமன் என்னும்) பெயரைச்சொல்லி—ஒளி கெழு பூமழை பொழிந்தார் - ஒளிபொருந்திய பூமாரியைப் பொழிந்தார்கள். எ - று.

ஏ - அசை. இவன் கூறியமொழி எவர்க்கும் இன்பஞ்செய்த தென்பார் இவன்மொழி நயந்தென்றும், இம்மொழியின் நயத்தையறிய வல்லசாதுரியர் என்பார் தொன்மனிதரே அன்றித் தவமுனிவரருந் தேவருங் ககனந்தங்கு மா மங்கையர் பலரும் என்றடைகொடுத்தும், கற்பகத்தின் பொற்பூ வாதலால் ஒளிகெழு பூ என்றும், ஏனைப்புவியரச ரெவராலு மடக்கற் கரிய காமத்தையடக்கிய மனத்திட்பமுடையானெனவும் அவரஞ்சத்தக்க சரீர வலியுடையானெனவும் இருபொருள்படப் பொதுவாய் அவனியினிருபர் வெரு வருந்திறலானென்றும், ஏனைச்சொற்பொருளினின்றும் இது மிக மேலான சொற்பொருளென்பார் அரிய சொற்பொருணிலை என்றுங் கூறினர். (சுகூ)

மெய்ம்மகிழ்கடவுட்பூமழையுடனேவீடுமனெனும்பெயரெய்திக்,
கைம்மகிழ்வரிவிற்றாசபூபதியுங்கன்னிகைகாளியுந்தானு, மொய்ம்மணங்கமழுமன்றல்வேனிலின்வாய்முனிவருங்கிளைஞருஞ்சூழச், செய்ம்மகிழ்பழனக்குருநிலமுடையான்றிருமனைவிரைவுடன்சேர்ந்தான்.

(இ - ள்.) செய் மகிழ் பழனக் குருநிலம் உடையான் - செய்களும் மகிழ்ச்சியைத் தருகின்ற பழனங்களுஞ் சூழ்ந்த குருநாட்டை யுடைய தேவவிரதன்—மெய் மகிழ் கடவுட் பூமழை யுடனே வீடுமன் எனும்பெயர் எய்தி - உடம்பை மகிழ்விக்குங் கற்பகப் பூமழையோடு வீடுமன் என்னும் பெயரைப்பொருந்தி—கை மகிழ் வரிவில் தாச பூபதியும்—கையில் மகிழ்ச்சியைத் தருதற்கேதுவாகியவரிந்தவில்லை ஏந்துகின்ற பரதவருக்குத் தலைவனும்—கன்னிகை காளியும் தானும் - கன்னிகையாகிய பரிமளகந்தியுந் தானும்—மொய் மணம் கமழும் மன்றல் வேனிலின்வாய்- மிக்கவாசனை கமழுகின்ற விவாகத்திற்குரிய வேனிற்காலத்தில்—முனிவரும் கிளைஞரும் சூழ - இருடிகளும் சுற்றத்தாருஞ் சூழ—திருமனை விரைவுடன்சேர்ந்தான்- அழகிய (தன்னுடைய) மாளிகையை விரைவோ டடைந்தான். எ - று.

செய், பழனம் என்பன விளைநிலவிசேடம். பூபதியென்னுஞ் சொற்கியைய வரிவில்லென அடைகொடுத்தார். பூபதியும் காளியும் தானும்சேர்ந்தான் என்பன "தானுந்தன், றையலுந் தாழ் சடையோ னுண்டிலனேல்'' என்பதுபோலச் சிறப் பினு லொருமுடி பேற்றன. வியாசமுனிவராகிய புதல்வற்பேறுற்றாள் கன்னியா காளாயினும் பராசரமுனிவரி னருளால் மீட்டுங் கன்னியாயினுள் என்பார் கன் னிகை காளி என்றடைகொடுத்தும், ஆறு ருதுக்களினும் வசந்த ருதுவே விவா கஞ் செய்தற்குரிய விசேட ருது என்பது நூற்றுணிபென்பார் மன்றல் வேனில் என்று அடைகொடுத்துங் கூறினார். பீஷ்மன் என்னும் வடமொழி வீடுமென்எனத் தற்பவமாயிற்று. வீடுமன் பயங்கரமானவன்: பயங்கரமான விரதமுடையவன் என் பதுகருத்து. குருநிலமுடையான் என்பதைச் சந்தனுவுக்கேற்றிப் பொருள்கோட லும் கைம்மகிழ் வரிவில் என்பதற்குக் கையுவக்கும் வரிவில் என இலக்கணையாக் கலும் ஒன்று கைமகிழ் வரிவிற் றூசபூபதி என்பதற்கு இவன் விரத ஒழுக்கத்தை க்கண்டு மகிழுந் தாசபூபதி எனினும் அமையும். (கOO)

பரிமளவடிவப்பாவையையரசன்பாலளென்றொருபுடைநிறுத்தி, யிருபதந்தொழுதுநின்றமாமகனையிதயமோடிறுகுறத்தழுவித், தருமணங்கமழுஞ்சென்னிமேல்வதனந்தாழ்ந்துமோந்துருகிமுன்றந்தைக்,குரியபேரிளமைகொடுத்தகோமகனுமுனக்கெதிரல்லனென்றுரைத்தான்.

(இ - ள்.) பரிமள வடிவப் பாவையை அரசன் பாலள் என்று ஒருபுடை நிறு த்தி - பரிமளகந்தி என்னும் பெண்ணைச் சந்தனுமகாராசனுக்கு உரியள் என்று ஒருபக்கத்தில் நிறுத்தி—இரு பதம் தொழுது நின்ற மா மகனை - தன் இரு கால் களையும் வணங்கிநின்ற பெருமையையுடைய புத்திரனை—இதயமோடு இறுகுறத் தழுவி - மார்போடு அழுந்தத் தழுவி—தருமணம் கமழும் சென்னிமேல் வதனம் தாழ்ந்து மோந்து உருகி - கற்பகப் பூமணங் கமழும் சிரசின்மேல் தன் முகந்தாழ் ந்து மோந்து மனம் உருகி—முன் தந்தைக்கு உரியபேர் இளமை கொடுத்த கோம கனும் - முற்காலத்திற் பிதாவுக்குத் தனக்குரிய பெருமையாகிய இளமைப்பருவத் தைக் கொடுத்த பூரு என்னும் அரசகுமாரனும்—உனக்கு எதிர் அல்லன் என்று உரைத்தான் - உனக்கு நிகரல்லன் என்று சொன்னான். எ - று.

தரு - ஆகுபெயர். வதனந்தாழ்ந்து மோந்துருகி யென்பது சினைவினைமுதல் வினையொடுமுடிந்தது. கோமகனும் என்னும் உம்மை சிறப்பு. இவன்கொண்ட விரதத்தி னருமையறிந்து வீட்டுமனென்னும் பெயரைக் கற்பகப் பூமழைபொழி ந்து தேவர்கள் கொடுத்தாரென்பதை வலியுறுத்துவார், தருமணங்கமழுஞ் சென் னியென் றநுவதித்தார். பூரு என்பவன் தன் பிதாவாகிய யயாதிக்குத் தன் இள மையைமருது கொடுத்தானாயினும், அவ்விளமையாலாகிய காமவின்பத்தைப் பின் னுயினும் அனுபவித்தான்; நீ உன்னரச வுரிமையையுங் காம வின்பத்தையும் அங் ஙனமும் அனுபவியாது என்றும் இழந்தாய் என்பதுபோதரத், தந்தைக்குரியபேரி ளமைகொடுத்த கோமகனு முனக்கெதிரல்லன் என்றான். (கOக)

தந்தையர்க்குதவுமுதவியினெனக்குச்சதமடங்குதவினை யுனக்கு, மைந்தருக்குதவுமுதவியிற்சிறிதுமாதவஞ்செய்திலேனுதவச், சிந்தையிற்றுறக்கம்வேண்டுமென்றெண்ணிச் செல்லுமன்றல்லதுன்னுயிர்மேன், முந்துறக்காலன்வரப்பெறுனென்றேமுடிவிலாவொருவரமொழிந் தான்.

(இ - ள்.) தந்தையர்க்கு உதவும் உதவியின் எனக்குச் சதமடங்கு உதவினை- (புதல்வர்) தந்தையர்க்கு உதவுகின்ற உதவியினும் எனக்கு நீ நூறுமடங்கு உதவி

செய்தாய்—மைந்தருக்கு உதவும் உதவியில் சிறிதும் உனக்கு உதவ மாதவம்செய் திலேன் - (பிதாமார்) புதல்வருக்குச் செய்யும் உதவியிற் சிறிதேனும் உனக்கு உத வும்படி நான் பெருந்தவத்தைச் செய்திலேன்—சிந்தையில் துறக்கம் வேண்டும் என்று எண்ணிச் செல்லும் அன்று அல்லது - மனத்திற் சுவர்க்கம் வேண்டுமெ ன்று சிந்தித்து நீ போகும் அன்றேயல்லது—உன் உயிர்மேல் முந்துறக் காலன் வரப்பெருன் என்று - உன்னுடைய ஆன்மாவின்மேல் அதற்குமுன் யமன் வர மாட்டான் என்று—முடிவிலா ஒருவரம் மொழிந்தான் - அழியாத ஒரு வரத்தைக் கொடுத்தான். எ - று.

ஏ - அசை. உதவியின் என்பதில் இன்னுருபு நீக்கப்பொருளில் வந்தது. வர ப்பெருன் என்பது ஒருசொன்னீர்மைத்து. உதவ என்னுஞ் செயவெனெச்சங் காரியப்பொருட்டு. முடிவிலாத என்னும் பெயரெச்சத் தீறுதொக்கது. இவ்வரம் இவற்குத் தடையின்றிப் பலித்ததென்பதை "உயிரை யோடா வண்ண நிறுவி, மாகஞ் சூழு மிரவி வடபா லெய்து மளவு, நாகங் காணே னென்ன ஞானத் தோடே வைக" என ஆசிரியர் பின்னர்க் கூறுமாற்ருனுணர்க. (கoஉ)

அம்புவியரசன்மாமனுமரசனடிபணிந்தவயவத்தழகா, லும்பரும் வியக்குங் கிளியைமுன்னிறுத்தியொடுங்கினன் வாய்புதைத்துரைத்தா, னெம்பெருமானீகேட்டருளுனக்கேயிசைந்தமெய்த்தவம்புரியிவளை, வ ம்பவிழ்மலர்மாதென்பதேயன்றிவலேஞர்மாமகளெனக்கருதேல்.

(இ - ள்.) அம்புவி அரசன் மாமனும் அரசன் அடிபணிந்து-அழகிய பூமிக்கர சனுகிய சந்தனுவினுடைய மாமனும்அவனுடைய கால்களைவணங்கி—அவயவத்து அழகால் உம்பரும் வியக்கும் கிளியை முன் நிறுத்தி - அங்கங்களின் அழகினுற் றேவரும் வியக்கும் (மொழியாற்) கிளிபோல்வாளை முன்னரே நிறுத்தி—ஒடுங் கினன் வாய் புதைத்து உரைத்தான் - உடம்பொடுங்கி வாய்புதைத்துச் சொன் னுன்—எம்பெருமான் நீ கேட்டருள் - எம்பெருமானே நீர் கேட்டருளும்—உன க்கே இசைந்த மெய்த் தவம்புரி இவளை - உமக்கே இசைந்த மெய்ம்மையாகிய தவத்தைச்செய்த இவளை—வம்பு அவிழ் மலர்மாது என்பதே அன்றி - மணம் விரிகின்ற தாமரை மலரிலிருக்கும் இலக்குமி என்று சொல்வதேயன்றி—வலேஞர் மாமகள் எனக் கருதேல் - பரதவருடைய சிறந்த பெண்ணென்று எண்ணற்க. எ - று.

மாமனும் என்னும் உம்மை எச்சம். உம்பரும் என்னும் உம்மை எச்சத்தோடு சிறப்பு. உனக்கே என்பதே என்னும் ஏகாரங்கள் தேற்றம். கிளி ஆகுபெயர். ஒடுங் கினன் வினையெச்சமுற்று. குருகுலாதிபராய் விளங்கும் நுமக்கு மனையாளாதல் மிக வரிதாயினும், இவள் செய்த மெய்த் தவப்பேற்ருல் அங்ஙனமாயினுளென்பா ன்,உனக்கேயிசைந்த மெய்த்தவம்புரியிவள் என்றும்,இவள் எளியவலேஞரிடத்து வளர்ந்தாளாயினும் உற்பவத்தான் மிக வுயர்ந்தமையினுலும், நல்வினையையுடைய நும்மிடத்தே யிடைவிடாது வதியப்பெறுதலாலும் இலட்சுமியென்று பலரும் அறிய வெளிப்படப்பேசுக என்பான் வம்பவிழ் மலர்மாதென்பதேயன்றி என்றும், அந்தரங்கமாக நும்மனத்தில் வலேஞர் மாமகள் என்று கருதற்க என்பான் வலே ஞர்மாமக ளெனக்கருதேல் என்றுங்கூறினன். என்பதேயெனச் சொன்மேலேற் றியும், கருதேலென நினைவின்மேலேற்றியும் கூறியிருத்தலினுல் என்பதேய ன்றி என்பதற்கு என்று கருதலே அன்றி எனப் பொருள்கோடல் பொருத்தமின் றென்க. (கoங)

வாசவனளித்தவிமானமீதொருவன்வசுவெனுஞ்சேதிமாமரபோன் [மி கேசரனெனப்போம்விசும்பிடைமனையாள்கிரிகையைநினைந்துடல்கெழு நேசமோடிதயமுருகுமக்கணத்தினினைவறவிழுந்தவீரியமெய்த் தேசவனளித்தநதியிடைத்தரளத்திரளெனச்சிந்தியதொருபால்.

(இ - ள்.) வாசவன் அளித்த விமான மீது - இந்திரன்கொடுத்த விமானத்தின்மேல்—வசு எனும் சேதி மா மரபோன் ஒருவன் - வசுவென்னும் பெயரையுடைய சிறந்த சேதி வம்மிசத்தவனொருவன்—கேசரன் எனப் போம் விசும்பிடை - விஞ்சையனைப்போலத் தான் செல்லுகின்ற ஆகாயத்தில்—மனையாள் கிரிகையை நினைந்து உடல் கெழுமி - தன் மனைவியாகிய கிரிகை என்பவளை நினைந்து உடம்பு பூரித்து—நேசமோடு இதயம் உருகும் அக்கணத்தில் - அன்போடு மனம் உருகுகின்ற அந்தக்கணத்தில்—நினைவு அற விழுந்த வீரியம் - தன் வசமற விழுந்த சுக்கிலம்—மெய்த் தேசவன் அளித்த நதியிடை ஒருபால் தரளத் திறள் எனச் சிந்தியது-இயற்கை ஒளியையுடையவனாகிய சூரியன்பெற்ற யமுனைநதியின் ஒருபக்கத்தில் முத்துத்திரளைப்போலச் சிந்தியது. எ - று.

இவன் ஆகாசத்திற்சென்றமைபற்றி விஞ்சையனை உவமைகூறினார். கிரிகை என்பது அவன் மனைவிபெயர். தானுயியங்கும் விமானமென்பார் வாசவனளித்த விமானமென்றும், இவற்கு நித்திரைவந்துழி மனைவிமீது கொண்ட மோகத்தால் அவளுடன் புணரக் கனாக்கண்டு விழுந்த வீரியமென்பார் நினைவறவிழுந்த வீரியம் என்றும்,அங்ஙனம் விழுந்த வீரியத்தை வசுவென்பான் றன்மனைவிக்கீ யென ஒரு வல்லூற்றினிடத்திற் கொடுக்க, அது அதனை அலகாற் கௌவிக்கொண்டுவந்துழி ஒரு பட்சி இரையென்று கருதி அதனுடன் சண்டைசெய்ய, அவ்வீரியம் காளிந்திநதியிற்சிந்தியதென்பார் நதியிடைச்சிந்திய தென்றுங் கூறினார். அறன் எனுஞ் செயவெனெச்சம் ஏதுப்பொருட்டு. பிறர்க்கெல்லாம் ஒளியைக் கொடுக்குஞ் சுய ஒளியையுடையவன் சூரியனென்பார் மெய்த் தேசவனென்றார். (௧0௪)

ஒருமுனிமுனிவாலரமகளொருத்திமீனமாயுற்பவித்துழல்வா
ளிரையெனவதனைவிழுங்குமுன்கருக்கொண்டீன்முதிர்காலையிலதனைப்
பரதவர்வலையினகப்படுத்தரியப்பாலகனொருவனுமிவளு
மிருவருமிந்தமீன்வயிற்றிருந்தார்யமுனையும்யமனுநேரெனவே.

(இ - ள்.) அரமகள் ஒருத்தி ஒருமுனி முனிவால் மீனமாய் உற்பவித்து உழல்வாள்-இயக்கமகளொருத்தி ஒப்பற்ற பிரமனுடையசாபத்தினால் மீனாய்ப்பிறந்து உழலுபவள்—அதனை இரை என விழுங்கு முன் - அவ்வீரியத்தை இரையென்று விழுங்குதற்குமுன்னமே—கருக்கொண்டு ஈன் முதிர் காலையில் - கருப்பத்தைப் பொருந்தி ஈனுதல் சமீபித்தபொழுதில்—அதனைப் பரதவர் வலையில் அகப்படுத்து அரிய - அம்மீனை வலைஞர்வலையில் அகப்படுத்தி அரிய—பாலகன் ஒருவனும் இவளும் இருவரும் - புத்திரன் ஒருவனும் இவளுமாகிய இருவரும்—யமுனையும் யமனும் நேர் என இந்த மீன்வயிற்று இருந்தார் - யமுனையையும் யமனையும்போல இந்த மீனினுடைய வயிற்றில் இருந்தார்கள். எ - று.

ஏ - அசை. விழுங்குமுன் என்பது இறந்தகாலம்பற்றிவந்தமுன்னீற்றுவினையெச்சம்; "மருந்துதின்னுமுன்னோய்தீர்ந்தது" என்புழிப்போல. அரிய என்னுஞ் செயவெனெச்சம் ஏதுப்பொருட்டு. உழல்வாள் வினையாலணையும்பெயர். ஈன் முதனிலைத்தொழிற்பெயர். இயக்கரும் தேவகுழுவினுள் ஒருபாலாராகலின் அரமகளொருத்தியென்றும், இயக்கப்பெண்ணொருத்தி மீனமா யுற்பவித்துழல்வாள் எனச்சரிதங்கூறுஞ் சம்பந்தம்பற்றி, இந்தமீனென் றண்மைச்சுட்டுக்கொடுத்துங் கூறினன். யமுனையும் யமனும் சகோதரர் என்க. (௧0௫)

மானவர்பதியாம்வசுவினுக்கிவரைமகிழ்வுறக்காட்டலுமகனை, மீனவனெனப்பேர்கொடுத்தனன்கொண்டுமெல்லியலிவளைமீண்டளித்தான், யானுமின்றளவுமென் மகளென்னுமியற்கையாலினிமையின் வளர்த்தேன், கானமென்குயில்போல் வந்துமீளவுந்தன்காவலர் குலத்திடைகலந்தாள்.

(இ - ள்.) இவரை மானவர் பதி ஆம் வசுவினுக்கு மகிழ்வு உறக் காட்டலும்- இவ்விருவரையும் அரசனாகிய வசு என்பவனுக்கு (யான்) மகிழ்ச்சிமிகக் காட்டுதலும்—மகனை மீனவன் எனப்பேர் கொடுத்தனன் கொண்டு - (அவன்) புதல்வனை மற்சன் என்று பெயர்கொடுத்துத் தான் கைக்கொண்டு—மெல்லியல் இவளை மீண்டு அளித்தான் - மென்மையாகிய இயல்பையுடைய இவளைத் திரும்ப (எனக்குத்) தந்தான்—யானும் இன்று அளவும் என் மகள் என்னும் இயற்கையால் இனிமையின் வளர்த்தேன் - நானும் இன்றளவும் என்புதல்வி என்னும் இயல்பினால் மகிழ்ச்சியோடு வளர்த்தேன்—கான மென் குயில்போல் மீளவும் வந்து - (இவள்) சோலையிலுள்ள மிருதுவான குயிலைப்போலத் திரும்பவும் வந்து—தன் காவலர் குலத்திடை கலந்தாள் - தன்னுடைய அரசவம்மிசத்திற் சேர்ந்தாள். எ - று.

மானவர்பதி என்பது நரபதியென்பதுபோல நின்றது. காட்டலும் உம்மீற்றுவினையெச்சம். கொடுத்தனன் வினையெச்ச முற்று. யானும் என்னும் உம்மை இழிவுசிறப்பு. "மெல்லெழுத்து மிகுவழி" என்னுஞ் சூத்திரத்திலே தன்னின முடித்தல் என்பதனாற் குலத்திடை கலந்தாள் என வல்லொற்று மிகாது இயல்பாயிற்று. குயில் எளியகாகத்தின் கூட்டில்வளர்ந்து பருவம்வந்துழித்தன்கிளையொடு சேருமாறுபோல, இவள் எளிய என்வீட்டில்வளர்ந்து பருவம்வந்துழித் தன் அரசசாதியோடு சேர்ந்தனள் என்பதுபோதரக் கானமென்குயில்போல் வந்து மீளவுந் தன்காவலர்குலத்திடைகலந்தாள் என்றான். (கoசு)

வேறு.

என்றுகூறிவிடுத்தனனேந்தலு
மன்றவைக்கணவன்மொழிகேட்டுவந்
தின்றுநற்றினமென்றிளந்தோகையை
மன்றலெய்தினன்மாநிலம்வாழ்த்தவே.

(இ - ள்.) என்று கூறி விடுத்தனன்-என்று (பரதவர்க்கதிபதியானவன்)சொல்லிமுடித்தான்—ஏந்தலும் அன்று அவைக்கண் அவன்மொழிகேட்டு உவந்து - சந்தனுமகாராசனும் அன்றைக்குச் சபையின்கண் அவனுடைய வசனங்களைக் கேட்டு மகிழ்ந்து—இன்று நல் தினம் என்று - இன்றைக்குச் சுபதினம் என்று சொல்லி—இளம் தோகையை-சாயலால் இளையமயில்போன்ற அவளை—மா நிலம் வாழ்த்த மன்றல் எய்தினன் - பெரிய நிலவுலகத்தோர் வாழ்த்த விவாகஞ் செய்தான். எ - று.

ஏ - அசை. ஏந்தலும் என்னும் உம்மை எச்சத்தோடுசிறப்பு. எளிய பரதவப் பெண்ணைப் பெரிய அரசன் மணஞ்செய்தான் என்று உலகங்கூறுமிளிவரவு தமக்கில்லையெனக்கருதி மகிழ்ந்தான் என்பதுபோதர அவன் மொழிகேட்டுவந்து என்றார். நிலம் தோகை என்பன ஆகுபெயர்கள். (கoஎ)

காளிவந்துகலந்தனள்கங்கைவேய்த்
தோளியும்புயந்தோய்ந்தனண்முன்னமே
வாளிவெம்பரிமாநெடுந்தேருடை
மீளிதானும்விடையவனாதலால்.

(இ - ள்.) வாளி வெம்பரி மா நெடும் தேருடை மீளிதானும் - மண்டலமா யோடுகின்ற வேகம்பொருந்திய குதிரைபூண்ட பெரிய உயர்ந்த தேரினையுடைய சந்தனுமகாராசனும்—முன்னமே விடையவன் ஆதலால் - முன்னமே விடையவ னயிருத்தலினுல்—காளி வந்து கலந்தனள் - காளியென்னும் பெயரையுடைய பரிமளகந்தி வந்து சேர்ந்தாள் [உமை வந்து சேர்ந்தாள்]—கங்கை வேய்த் தோளி யும் புயம் தோய்ந்தனள் - கங்கை என்னும் மூங்கில்போலுந் தோளையுடையாளும் புயத்தை அணைந்தாள். எ - று.

தோளியும் மீளிதானும் என்னும் உம்மைகள் எச்சம். விடையவன் சிவன். இடபக்குறியையுடைய வருணனவதாரமாயிருத்தலிற், சந்தனுவும் விடையவன் எனப்பட்டான். காளி, பரிமளகந்தி; கருநிறமுடைமையினுல் உமைக்கும் இப்பெ யராயிற்று. வாளி வெம்பரி என்பதற்குச் சரகதியையுடைய குதிரை எனப் பொ ருள்கூறினும் பொருந்தும். (கoஅ)

கங்கையின்கரைக்கண்ணுறுகாரிகை
கொங்கையின்பங்குலைந்தபின்மற்றவ
ளெங்கையென்னயமுனையின்பால்வரு
மங்கையின்பமகிழ்ந்தனன்மன்னனே.

(இ - ள்.) கங்கையின் கரைக்கண் உறு காரிகை கொங்கை இன்பம் குலைந் தபின் - கங்கைக்கரையில்வந்த பெண்ணினுடைய தனபோகம் நீங்கியபின்—அவள் எங்கை என்ன-அக்கங்கையானவள் (இவள்) என்றங்கை என்று சொல்ல—யமுனையின்பால் வரும் மங்கை இன்பம் - யமுனைநதியிற்பிறந்த பரிமள கந்தி என்னும் பெண்ணினுடைய இன்பத்தை—மன்னன் மகிழ்ந்தனன் - சந்தனு மகா ராசன் விரும்பினுன். எ - று.

ஏ - மற்று அசைகள். என்னவென்னுஞ் செயவெனெச்சங் காரியப்பொரு ட்டு. குலைந்தபின் என்பது பின்னீற்று வினையெச்சம். கங்கைக்கரையிலே கண்ட எனினும்பொருந்தும். இப்பொருட்குச் கண்ணுறு என்பதை ஒருசொல்லாக்குக. எங்கையென்ன மகிழ்ந்தனன் என முடிக்க. (கoகூ)

வீடுமன்கழல்வேந்தர்வணங்கிட
நாடுநன்னெறிநாளுநடத்திட
நீடுமன்னனுநேரிழைமேன்மலர்த்
தோடுமன்னுசுரும்பெனவீழவே.

(இ - ள்.) வீடுமன் கழல் வேந்தர் வணங்கிட - வீடுமன் என்பவன் (தன்) கால்களை அரசர்கள் வணங்காநிற்ப—நாடு நல் நெறி நாளும் நடத்திட - (தன்) தேயத்தில் நீதியை நாடோறும் நடாத்திவர—நீடு மன்னனும் - உயர்ந்த சந்தனு மகாராசனும்—நேர் இழைமேல் - இயைந்த ஆபரணங்களையுடைய பரிமளகந்தியி டத்தில்—மலர்த் தோடு மன்னு சுரும்பு என வீழ - பூவிதழில் (தேனை யுண்டு களித்து) இருக்கும் வண்டினைப்போலவிரும்பிப் போகத்தையனுபவிக்க. எ - று.

ஏ - அசை. நடத்திட என்னுஞ்செயவெனெச்சம் ஏதுப்பொருட்டு. நாடு தோடு என்பன வேற்றுமையில் எதுகைநோக்கி டகரம் இரட்டப்பெறுவாயின. மன்னனும் என்னும் உம்மை எச்சம். இடைவிடாது புல்லி அவளிடத்துள்ள போகங்களை நுகர்ந்திருந்தான் என்பார் மலர்த்தோடு மன்னுசுரும்பென வீழ என் றார். (ககo)

அன்னநாளிலருக்கனுந்திங்களு
மென்னமைந்தரிருவரையீன்றனண்
மன்னனுவிவடிவுகொண்டன்னமெய்க்
கன்னபூரங்கலந்தசெங்கண்ணியே.

(இ - ள்.) அன்ன நாளில் - அந்தநாளில்—மன்னன் ஆவி வடிவுகொண்டு அன்ன மெய் - சந்தனுமகாராசனுடைய (அருவாகிய) ஆன்மாவேஒருவடிவுகொண்டாற்போன்ற உருவத்தையுடைய—கன்னபூரம் கலந்த செங்கண்ணி - காதணியையளாவிய செவ்வரிபொருந்திய கண்ணினுள்—அருக்கனும்திங்களும் என்ன மைந்தர் இருவரை ஈன்றனள்—ஆதித்தனுஞ் சந்திரனுமென்று சொல்லப் புதல்வரிருவரைப்பெற்ருள். எ - று.

ஏ - அசை. கொண்டாலன்ன என்பதுகொண்டென்னஎனத்திரிந்துநின்றது. கன்னபூரம் கலர்த செங்கண்ணி வாளாபெயர்மாத்திரையாய் நின்றது. மெய்யையுங் கண்ணையுமுடையாள் எனினும்பொருந்தும். ஒருவரையொருவரின்றியமையாத்தொடர்ச்சியினுலும் ஒரிடத்தில் முன்னும்பின்னும் பிறத்தலினுலும் இருளையோட்டி யொளியையாக்கி யுலகையளித்தலினுலும் அருக்கனுந் திங்களும் என்ன என்றும், அவயவத்தழகால் அவளுடம்பைத் தன்னுயிர்போல விரும்பினுன் என்பதுபோதர மன்னனுவி வடிவுகொண்டன்ன மெய்யென்றுங் கூறினுர். கன்னபூரம் காதணி. (கககூ)

சித்திராங்கதன்செப்புநலனுடை
மெய்த்தசீர்த்திவிசித்திரவீரிய
னித்திறத்தரிருவருந்தம்முனு
லொத்தகல்வியராயினருண்மையே.

(இ - ள்.) சித்திராங்கதன் - சித்திராங்கதனும்—செப்பு நலனுடை மெய்த்த சீர்த்தி விசித்திர வீரியன் - (எவரும் வியந்துபேசும்) நன்மையையுடைய மெய்ம்மையான கீர்த்திபொருந்திய விசித்திரவீரியனும் ஆகிய—இத் திறத்தர் இருவரும்- இத்தகைமையையுடையோரிருவரும்—தம் முனுல் ஒத்த உண்மைக்கல்வியர் ஆயினர் - தங்கள் தமையனுகிய வீடுமனுல் (அவனை) ஒத்த மெய்ம்மையாகிய கல்வியையுடையராயினர். எ - று.

ஏ - அசை. கல்வியராயினர் என்பது ஆக்கவினைக்குறிப்பு. ஒத்தகல்வியராயினர் என்பதற்குத் தம்முள் நிகர்த்த கல்வியையுடையராயினர் எனப் பொருள் கூறினும் பொருந்தும். இளையனுகிய விசித்திரவீரியனுற் குருகுலம் விளக்கமடைந்தமைபற்றிச் செப்புநலனுடைமெய்த்தசீர்த்திவிசித்திரவீரியன் என்றடைகொடுத்தார். (கசஉ)

மதிநெடுங்குலமன்னனைநண்பினுல்
விதியனந்தரம்விண்ணுலகேற்றினு
னதியின்மைந்தனுநம்புவிக்கெம்பியே
யதிபனென்றரியாசனத்தேற்றினுன்.

(இ - ள்.) மதி நெடும் குலமன்னனை - சந்திரனது பெரிய வம்மிசத்தையுடைய சந்தனுமகாராசனை—அனந்தரம் நண்பினுல் விதி விண்ணுலகு ஏற்றினுன் - அதன்பின் (அவன்மீதுவைத்த) நட்பினுல் ஊழ் விண்ணுலகிற் குடி

யேற்றினன்—நதியின்மைந்தனும் - (அதன்பின்) வீட்டுமெனும்—நம் புவிக்கு எம்பியே அதிபன் என்று - நம்முடைய பூமிக்கு என் தம்பியாகிய சித்திராங் கதனே அதிபதியென்று—அரி ஆசனத்து ஏற்றினன் - அவனைச் சிங்காசனத்தி லேற்றினன். எ - று.

நதியின்மைந்தனும் என்னும் உம்மை எச்சம். எம்பியே என்னும் ஏகாரம் தேற்றம். விதி இவன் சாபத்தைநீக்கிப் பழையநிலையில் விட்டமைபற்றி நண்பி னல் என்றார். நண்பினல் விதி விண்ணுலகேற்றினன் என்பது இலக்கணை; விதி, வடமொழிமுறைமைப்பற்றி ஏற்றினன் என ஆண்பாலாகக்கூறப்பட்டது. நாண், அம்முறைமைபற்றி "நாணென்னு நல்லாள்" எனப் பெண்பாலாகக் கூற ப்பட்டவாறுபோல. (கக௩)

எங்கணுமமிவன்கவர்ந்தானெனக்
கங்குல்வந்தொருகந்தருவாதிபன்
றெங்கன்மாமுடிசூடியவேந்தனை
யங்கையான்மலைந்தாருயிர்கொள்ளவே.

(இ-ள்.) ஒரு கந்தருவ அதிபன் - ஓர்கந்தருவராசன்—எங்கண்நாமம் இவன் கவர்ந்தான் என - எம்மிடத்துள்ள (சித்திராங்கதனென்னும்) பெயரை இவன் கொண்டான் என்று—கங்குல் வந்து - இரவில்வந்து—தொங்கல் மா முடி சூடிய வேந்தனை - மாலையையுடைய பெரிய முடியைச்சூடிய சித்திராங்கதன் என்னும் அரசனை—அம் கையால் மலைந்து ஆர் உயிர் கொள்ள - அழகிய கையினுற் பொருது அரிய உயிரைக்கவர. எ -று.

ஏ - அசை. கந்தருவாதிபன் வடநூன்முடிபு. கொள்ள என்னுஞ் செய வெனெச்சம் ஏதுப்பொருட்டு. போர்த்தொழின் மிகப்பயின்றகையென்பார் அங் கையென் றடைகொடுத்தும், ஆயுத மின்றிக் கையால் அவன்றலை கொண்டா னென்பார் கையான்மலைந்து ஆருயிர்கொள்ள என்றுங்கூறினர். சித்திராங் கதன் என்னும் பெயருடைய கந்தருவராசன் இவனைக்கொன்றான் என்பதாம். அங்கையென்பதற்கு இணைக்கயல் பதுமம் சங்குமுதலிய ரேகைகளைப் பொ ருந்தி முழந்தாளைத்தீண்டும் இலக்கணமமைந்த கையெனப் பொருள்கோடலு மொன்று. (கக௪)

எம்முனன்றியிறந்தனனென்றுதாய்
விம்முநெஞ்சின்மிகுதுனிமாறவே
தெம்முன்வல்லவிசித்திரவீரனைத்
தம்முன்மீளத்தனிமுடிசூட்டினன்.

(இ-ள்.) தாய் - தாயானவள்—எம் முன் அன்றி இறந்தனன் என்று - (புதல்வன்) நம்முடைய கண்முன்னன்றி இறந்தான் என்று—விம்மு நெஞ்சின் மிகு துனி மாற - ஏங்குகின்ற மனசில் மிக்க துன்பம் நீங்க—தெம்முன் வல்ல விசித்திர வீரனை - பகைமுனையில்வல்ல விசித்திரவீரியன் என்பவனை—தம்முன் மீளத் தனிமுடி சூட்டினன் - தமையனாகிய வீடுமன் திரும்ப ஒப்பற்றமுடியைச் சூட்டினன். எ - று.

ஏ - அசை. சித்திராங்கதனென்னும் கந்தருவராசன் வீட்டுமெற்கு அஞ்சி, இவனைத் தனிமையிற் கொல்லக்கருதிச் சமயம்பார்த்து ஓரிரவு தனித்துலாவும்

பொழுது தலைகவர்ந்தானே; எம்முனிறந்தால் அவனைக்காண்டல் நீண்டன் முத லியவற்றானுயினுங் கவலைசிறிதொழியுமன்றே, அதுவும் வாய்த்திலதே யென்றத ஞனே தாய் மிகவருந்தினள் என்பார் எம்முனன்றியிறந்தனனென்று தாய்விம்மு நெஞ்சின் மிகுதனியென்றார். (ககடு)

சிற்பொருட்பரமானபொருட்கெதி
ருற்பவிக்குமுபாயமதென்னவே
விற்படைத்திறல்வீடுமன்வாய்மையாற்
பொற்புறப்புவிபூபதியாளுநாள்.

(இ-ள்.) சிற் பொருள் ஆன பரம் பொருட்கு எதிர் - ஞானமயமாகிய பரம் பொருளுடைய சந்நிதானத்தில்—உற்பவிக்கும் உபாயமது என்ன - (பிரபஞ்சம்) தொழிற்படும் உபாயம்போல—விற் படைத்திறல் வீடுமன் வாய்மையால் - விற்ப டை வலியையுடைய வீடுமனதுசொல்லினால்—பொற்பு உறப்புவி பூபதி ஆளு நாள் - அழகு மிகப் பூமியை விசித்திரவீரியன் என்னும் அரசன் ஆளுகின்றநா ளில். எ-று.

ஏ - அசை. உபாயமது என்பதில் அது பகுதிப்பொருள்விகுதி. பிரம சந்நிதானத்திற் பிரபஞ்சந் தொழிற்படுமாறுபோல வீடுமன்சொற்படி விசித்திர வீரியன் அரசாண்டான் என்பது கருத்து. சிற்பொருட்பரமானபொருட்கு - ஞானமயமாகிய பரம்பொருளின்முன்—எதிர் உற்பவிக்கும் உபாயமது என்ன - பிரபஞ்சந் தொழிற்படுமுபாயம்போல எனப் பொருள்கோடலும் ஒன்று. இப் பொருட்கு எதிர் என்பது பிரபஞ்சம். ஆன்மாச்சிவசந்நிதானத்திற்றொழிற்படுமு பாயம்போல எனப் பொருள்கூறிச், சிற்பொருளை எழுவாயாக்குவர் ; அது பொ ருந்தாது. (ககசு)

காசிமன்னவன்கன்னியர்மூவருந்
தேசின்மிக்கவர்ச்சேர்வதென்றாள்விட
மாசிறொல்குலமன்னவரீண்டினார்
மூசிவண்டினமொய்ப்பதுபோலவே.

(இ-ள்.) காசி மன்னவன் கன்னியர் மூவரும் - காசிராசனுடைய புதல் வியர்கள்மூவரும்—தேசில் மிக்கவர்ச் சேர்வது என்று ஆள் விட - அழகின் மிக்க அரசர்களைச்சேர்தலே (எங்கள் நியமம்) என்று தூதரை அனுப்ப—மாசு இல் தொல் குல மன்னவர் - குற்றமில்லாத பழைய வம்மிசத்தையுடைய அர சர்கள்—வண்டு இனம் மூசி மொய்ப்பது போல ஈண்டினர் - வண்டின்கூட் டங்கள் (மலர்களிலே) நெருங்கி மொய்ப்பதுபோல (வந்து) நெருங்கினார்கள். எ-று.

ஏ - அசை. சேர்வது தொழிற்பெயர். மிக்கவர்ச்சேர்வதுஎன்பது "மெல்லெ ழுத்துமிகும்வழி" என்னுஞ் சூத்திரத்தில் "இயற்கைமருங்கின் மிகற்கை தோன் றலும்" என்பதனால் வல்லொற்றுமிக்கது. விட வென்னுஞ் செயவெனெச் சம் ஏதுப்பொருட்டு. சுயம்வரத்திற்குச்செல்லும் அரசர் மாசிறொல்குலமன்னரா காராயின் அரசகன்னியராலிழிக்கப்பட் டவமானமடைவர் என்பது நிச்சயமாத லான் மாசிறொல்குலமன்னரே அதற்குமுயன்று நெருங்குவாரென்பார் மாசிறொல் குலமன்னவரீண்டினாரென்றார். (ககஎ)

வரித்தமன்னர்மறங்கெடவன்பினாற்
றிரித்துமெம்பியைச்சேர்த்துவல்யானெனாத்
தரித்தவில்லொடுந்தன்னிளவேந்தொடும்
விரித்தவெண்குடைவீடுமனேகினான்.

(இ-ள்.) வரித்த மன்னர் மறம் கெட - (அக்கன்னியர் தமக்கென்று) நியமித்த அரசர்களுடைய வீரங்கெட—வன்பினால் திரித்தும் - வலிமையினால் (அவர் கருத்தை) மாறுபடுத்தியாயினும்—எம்பியைச் சேர்த்துவல் யான் எனா - என் தம்பியை அவரோடு கூட்டுவேன் யான் என்று—தரித்த வில்லொடும் தன் இளவேந்தொடும் - கையிற்றரித்த வில்லோடும் தன் தம்பியாகியவிசித்திரவீரியன் என்னும் அரசனோடும்—விரித்த வெண்குடை வீடுமன் ஏகினான் - விரித்த வெண்கொற்றக் குடையையுடைய வீடுமன் சென்றான். எ- று.

திரித்தும் என்னும் உம்மை எதிர்மறை. கெட என்னுஞ் செயவெனெச்சங் காரியப்பொருட்டு. வரித்த மன்னர் மறத்தினராயின் அவர் கருத்தைத் திரிக்கவிடார்; திரிக்கின் அம்மன்னர் மறங்கெடும் என்பான் மன்னர் மறங்கெடத்திரித்தும் என்றான். தன் கீழ்வாழுமுயிர்க்கு நிறைந்ததண்ணளியை என்றும் புரிபவன் என்பார் விரித்தவெண்குடை வீடுமன் எனக் கூறினார். வரித்தமன்னர் என்பதற்குக் கன்னியரைத் தமக்கென நியமித்த அரசர் எனப் பொருள்கூறின், சுயம்வரம் என்னுஞ்சொற்பொருளோடு முரணுதலால் அது பொருந்தாதென்க. (கக அ)

அரவமாநதியன்னையுந்தன்மகன்
வரவறிந்துவழியிளைப்பாற்றினாள்
பரவிவந்துபனிமலர்த்தென்றலாய்
விரவுநுண்டுளிமீதெறியூதையால்.

(இ-ள்.) அரவ மா நதி அன்னையும் - ஓசையுடைய பெரிய கங்கையாகிய தாயும்—தன் மகன் வரவு அறிந்து - தன் புதல்வனாகிய வீடுமனுடைய வரவை அறிந்து—பரவி வந்து பனி மலர்த் தென்றலாய் விரவும்—பரந்துவந்து குளிர்ந்த பூக்களில் அளாவும் (இளந்) தென்றலாய்ப்பொருந்தும்—நுண் துளி மீது எறி ஊதையால் - நுண்ணிய நீர்த்துளியை மேலே வீசுகின்ற காற்றினால்—வழி இளைப்பு ஆற்றினாள் - வழியிளைப்பை நீக்கினாள். எ-று.

அன்னையும் என்னும் உம்மைசிறப்பு. தென்றலாய் விரவு ஊதை என முடிக்க. இச்செய்யுள் பெயர்பொருட்டற் குறிப்பேற்றம் என்னும் அலங்காரம். தந்தைமுதலாயினாரினும் பார்க்கப் புதல்வரிற் றாயரே மிகப்பரிந்து இளைப்பாற்றல் தொன்றுதொட்டுமரீஇயகுணம் என்பார் அன்னையுந் தன்மகன்வரவறிந்து வழியிளைப்பாற்றினாள் என்றார். (ககக)

கஞ்சவாவிகலைமதிகண்டென
நெஞ்சழிந்துநிருபர்குழாந்தொழ
வெஞ்சராசனவீரனுந்தம்பியு
மஞ்சமேறிமணித்தவிசேறினார்.

(இ-ள்.) கஞ்ச வாவி கலைமதி கண்டென - தாமரைத்தடாகம் பூரணசந்திரனைக்கண்டாற்போல—நெஞ்சு அழிந்து நிருபர் குழாம் தொழ - மனமழிந்து அரசர் கூட்டம் வணங்க—வெம் சராசன வீரனும் தம்பியும் - கொடிய வில்

பொழுது தலைகவர்ந்தானே; எம்முனிறந்தால் அவனைக்காண்டல் தீண்டன் முதலியவற்ருனுயினுங் கவலைசிறிதொழியுமன்றே, அதுவும் வாய்த்திலதே யென்றதனுனே தாய் மிகவருந்தினுள் என்பார் எம்முனன்றியிறந்தனனென்று தாய்விம்மு நெஞ்சின் மிகுதுனியென்றார். (கசரு)

சிற்பொருட்பரமானபொருட்கெதி
ருற்பவிக்குமுபாயமதென்னவே
விற்படைத்திறல்வீடுமன்வாய்மையாற்
பொற்புறப்புவிபூபதியாளுநாள்.

(இ-ள்.) சிற் பொருள் ஆன பரம் பொருட்கு எதிர் - ஞானமயமாகிய பரம் பொருளுடைய சந்நிதானத்தில்—உற்பவிக்கும் உபாயமது என்ன - (பிரபஞ்சம்) தொழிற்படும் உபாயம்போல—விற் படைத்திறல் வீடுமன் வாய்மையால் - விற்படை வலியையுடைய வீடுமனது சொல்லினுல்—பொற்பு உறப்புவி பூபதி ஆளுநாள் - அழகு மிகப் பூமியை விசித்திரவீரியன் என்னும் அரசன் ஆளுகின்றநாளில். எ-று.

ஏ - அசை. உபாயமது என்பதில் அது பகுதிப்பொருள்விகுதி. பிரம சந்நிதானத்திற் பிரபஞ்சந் தொழிற்படுமாறுபோல வீடுமன்சொற்படி விசித்திர வீரியன் அரசாண்டான் என்பது கருத்து. சிற்பொருட்பரமானபொருட்கு - ஞானமயமாகிய பரம்பொருளின்முன்—எதிர் உற்பவிக்கும் உபாயமது என்ன - பிரபஞ்சந் தொழிற்படுமுபாயம்போல எனப் பொருள்கோடலும் ஒன்று. இப் பொருட்கு எதிர் என்பது பிரபஞ்சம். ஆன்மாச்சிவசந்நிதானத்திற்ருெழிற்படுமுபாயம்போல எனப் பொருள்கூறிச், சிற்பொருளை எழுவாயாக்குவர்; அது பொருந்தாது. (கசசு)

காசிமன்னவன்கன்னியர்மூவருந்
தேசின்மிக்கவர்ச்சேர்வதென்றுள்விட
மாசிறுெல்குலமன்னவரீண்டினுர்
மூசிவண்டினமொய்ப்பதுபோலவே.

(இ-ள்.) காசி மன்னவன் கன்னியர் மூவரும் - காசிராசனுடைய புதல்வியர்கள்மூவரும்—தேசில் மிக்கவர்ச் சேர்வது என்று ஆள் விட - அழகின் மிக்க அரசர்களைச்சேர்தலே (எங்கள் நியமம்) என்று தூதரை அனுப்ப—மாசு இல் தொல் குல மன்னவர் - குற்றமில்லாத பழைய வம்மிசத்தையுடைய அரசர்கள்—வண்டு இனம் மூசி மொய்ப்பது போல ஈண்டினுர் - வண்டின்கூட்டங்கள் (மலர்களிலே) நெருங்கி மொய்ப்பதுபோல (வந்து) நெருங்கினுர்கள். எ-று.

ஏ - அசை. சேர்வது தொழிற்பெயர். மிக்கவர்ச்சேர்வதுஎன்பது "மெல்லெழுத்துமிகும்வழி" என்னுஞ் சூத்திரத்தில் "இயற்கைமருங்கின் மிகற்கை தோன்றலும்" என்பதனுல் வல்லொற்றுமிக்கது. விட வென்னுஞ் செயவெனெச்சம் ஏதுப்பொருட்டு. சுயம்வரத்திற்குச்செல்லும் அரசர் மாசிறுெல்குலமன்னராகாராயின் அரசகன்னியராலிழிக்கப்பட் டவமானமடைவர் என்பது நிச்சயமாதலான் மாசிறுெல்குலமன்னரே அதற்குமுயன்று நெருங்குவாரென்பார் மாசிறுெல்குலமன்னவரீண்டினுரென்றார். (கசஎ)

வரித்தமன்னர்மறங்கெடவன்பினுற்
றிரித்துமெம்பியைச்சேர்த்துவல்யானெனுத்
தரித்தவில்லொடுந்தன்னிளவேந்தொடும்
விரித்தவெண்குடைவீடுமனேகினுன்.

(இ-ள்.) வரித்த மன்னர் மறம் கெட - (அக்கன்னியர் தமக்கென்று) நியமித்த அரசர்களுடைய வீரங்கெட—வன்பினுல் திரித்தும் - வலிமையினுல் (அவர் கருத்தை) மாறுபடுத்தியாயினும்—எம்பியைச் சேர்த்துவல் யான் என - என் தம்பியை அவரோடு கூட்டுவேன் யான் என்று—தரித்த வில்லொடும் தன் இள வேந்தொடும் - கையிற்றரித்த வில்லோடும் தன் தம்பியாகியவிசித்திரவீரியன் என்னும் அரசனேடும்—விரித்த வெண்குடை வீடுமன் ஏகினுன் - விரித்த வெண்கொற்றக் குடையையுடைய வீடுமன் சென்ருன். எ- று.

திரித்தும் என்னும் உம்மை எதிர்மறை. கெட என்னுஞ் செயவெனெச்சங் காரியப்பொருட்டு. வரித்த மன்னர் மறத்தினராயின் அவர் கருத்தைத் திரிக்கவிடார்; திரிக்கின் அம்மன்னர் மறங்கெடும் என்பான் மன்னர் மறங்கெடத்திரித்தும் என்ருன். தன் கீழ்வாழுமுயிர்க்கு நிறைந்ததண்ணளியை என்றும் புரிபவன் என்பார் விரித்தவெண்குடை வீடுமென் எனக் கூறினுர். வரித்தமன்னர் என்பதற்குக் கன்னியரைத் தமக்கென நியமித்த அரசர் எனப் பொருள்கூறின், சுயம்வரம் என்னுஞ்சொற்பொருளோடு முரணுதலால் அது பொருந்தாதென்க. (ககஅ)

அரவமாநதியன்னையுந்தன்மகன்
வரவறிந்துவழியிளப்பாற்றினுள்
பரவிவந்துபனிமலர்த்தென்றலாய்
விரவுநுண்டுளிமீதெறியூதையால்.

(இ-ள்.) அரவ மா நதி அன்னையும் - ஓசையுடைய பெரிய கங்கையாகிய தாயும்—தன் மகன் வரவு அறிந்து - தன் புதல்வனுகிய வீடுமனுடைய வரவை அறிந்து—பரவி வந்து பனி மலர்த் தென்றலாய் விரவும்—பரந்துவந்து குளிர்ந்த பூக்களில் அளாவும் (இளந்) தென்றலாய்ப்பொருந்தும்—நுண் துளி மீது எறி ஊதையால் - நுண்ணிய நீர்த்துளியை மேலே வீசுகின்ற காற்றினுல்—வழி இளைப்பு ஆற்றினுள் - வழியிளைப்பை நீக்கினுள். எ-று.

அன்னையும் என்னும் உம்மைசிறப்பு. தென்றலாய் விரவு ஊதை என முடிக்க. இச்செய்யுள் பெயர்பொருட்டற் குறிப்பேற்றம் என்னும் அலங்காரம். தந்தைமுதலாயினுரினும் பார்க்கப் புதல்வரிற் ருயரே மிகப்பரிந்து இளைப்பாற்றல் தொன்றுதொட்டுமரீஇயகுணம் என்பார் அன்னையுந் தன்மகன்வரவறிந்து வழியிளைப்பாற்றினுள் என்ருர். (ககக)

கஞ்சவாவிகலைமதிகண்டென
நெஞ்சழிந்துநிருபர்குழாந்தொழ
வெஞ்சராசனவீரனுந்தம்பியு
மஞ்சமேறிமணித்தவிசேறினுர்.

(இ-ள்.) கஞ்ச வாவி கலைமதி கண்டென - தாமரைத்தடாகம் பூரணசந்திரனைக்கண்டாற்போல—நெஞ்சு அழிந்து நிருபர் குழாம் தொழ - மனமழிந்து அரசர் கூட்டம் வணங்க—வெம் சராசன வீரனும் தம்பியும் - கொடிய வில்

வீரனாகிய வீடுமனும் அவன்றம்பியாகிய விசித்திரவீரியனும்—மஞ்சம் ஏறி மணித் தவிசு ஏறினார் - மஞ்சத்தில் ஏறிப் (பின்பு) இரத்தினங்களழுத்திய ஆசனங்களில் ஏறினார்கள். எ-று.

கண்டாலென்னும்வினையெச்சங் கண்டெனத்திரிந்துநின்றது. தொழ என்னுஞ்செயவெனெச்சங் காரியப்பொருட்டு. தநுர்வேதத்தைப் பரசுராமனிடத்தில் வழுவறக்கற்றுக் கைவந்தவீரன் என்பார் வெஞ்சராசன வீரன் என்றும், இவரைக்கண்டபொழுதே அரசர்விரைந்து செயலழிந்தஞ்சினார் என்பார் சஞ்சவாவிகலை மதிகண்டென நெஞ்சழிந்து நிருபர்குழாந்தொழ என்றுங்கூறினார். மஞ்சம் ஆசனத்திலேறுதற்கு அதன் கீழ்ப்படியாயிடப்பட்டிருப்பது. (சஉ0)

குருத்தலந்தனிற்கூறியவஞ்சின
மொருத்தான்றறிவாருலகோர்பலர்
விருத்தன்வந்தனன்மேலினியேதிவன்
கருத்தெனமனங்கானையர்கன்றினார்.

(இ - ள்.) குருத்தலந்தனில் கூறிய வஞ்சினம் - (வீடுமன்) குருநிலத்தில் (முன்) சொன்னசபதத்தை—அறிவார் ஒருத்தர் அன்று உலகோர் பலர் - அறிபவர் ஒருவரல்ல உலகத்திலுள்ளோர் பலர் (அங்ஙனமாக)—விருத்தன் வந்தனன் - முன்செய்துகொண்ட சபதத்திற்கு ஒவ்வாமையுடையவனாய் இப்பொழுது வந்தான்—இனிமேல் இவன்கருத்து ஏது என - இனிமேல் இவன்எண்ணம் என்னை என்று—காளையர் மனம் கன்றினார் - அரசர்கள் மனம் கன்றினார்கள். எ-று.

விருத்தன் குறிப்புவினையெச்சமுற்று. விசிட்டமான இடத்திற்கூறிய வஞ்சினம் ஏனை வஞ்சினங்களின் மிகச் சிறந்ததென்பார் குருத்தலந்தனிற்கூறிய வஞ்சினம் என்றும், அது புவியிலுள்ளார் விண்ணிலுள்ளாராகிய விருபாலாருமறிந்த ஆற்றலுடைத்தென்பார் ஒருத்தரன்றறிவாருலகோர் பலரென்றும், குருத்தலந்தனிற் கூறிய விசிட்டத்தாலும் பலராலறியப்பட்ட ஆற்றலினாலும் அவ்வஞ்சினத்திற்றவறில் அத்தவறு இம்மையிற் பலராலிழிக்கப்படுதலையும் மறுமையில் நரகயாதனையையும் தவறின்றிப்பயக்கும் என்பதையுணரான் என்பார் விருத்தன் வந்தனன் என்றும், இங்ஙனம் விருத்தனாயின் இவன் மனத்திட்பம் என்னையோ என்று நகையாடுவார் மேலினியேதிவன்கருத்தென என்றுங்கூறினார். ஈண்டுக்காளையர் என்பது இளமைகுறியாது ஆடவர் என்னும் பெயர் மாத்திரையாய்நின்றது. விருத்தன் என்பதற்குக் கிழவன் எனப் பொருள்கூறல் சிறப்பின்று. (கஉக)

இருந்தமன்னரிவரிவரென்றுளம்
பொருந்தமற்றவர்பொற்புடைதேசெலாந்
திருந்தநின்றுசெவிலியர்கூறவே
முருந்தவாணகைமூவருந்தோன்றினார்.

(இ-ள்.) செவிலியர் - கைத்தாயர்—இருந்த மன்னர் இவர் இவர் என்று - சபையில் இருந்த அரசர் இவரிவர் என்று—உளம் பொருந்த - அக்கன்னியர்களுடைய) மனத்திற்பொருந்த—அவர் பொற்பு உடைத் தேசு எலாம் - அவ்வரசர்களுடைய அழகுபொருந்திய கீர்த்திகளையெல்லாம்—திருந்த நின்று கூற - செப்பமாகநின்று சொல்ல—முருந்த வாள் நகை மூவரும் தோன்றினார் - இறகினடிக்குருத்துப்போன்ற ஒளிபொருந்திய பற்களையுடைய மூன்று பெண்களும் வெளிப்பட்டார்கள். எ - று.

மற்று - ஏ - அசைகள். பொருந்த என்னுஞ் செயவெனெச்சங் காரியப்பொருட்டு. கூற என்னும் செயவெனெச்சம் எதுப்பொருட்டு. பூருந்த என்னும் பெயரெச்சக்குறிப்பு நகையென்னும் விசேடிச்சப்பெற்ற பெயர்கொண்டது. அக்கன்னியர்மனம் அவர்மாட்டுப் பதியத்தக்க தேசுகளை யொழிவற ஆராய்ந்தார் என்பார் உளம்பொருந்த மற்றவர் பொற்புடைத் தேசெலாம் என்றும், பலவிடத்துங் குழுமியிருக்கும் அரசரையெல்லாம் அவரிருந்துழிச் சென்றுசென்று காணுதுநின்றுழிநின்று ஒரேகாலத்திற் காண்டற்குரியவிடத்தே நின்றாரென்பார் திருந்த நின்றென்றும், அரச கன்னியரை அரசசபையி னழைத்துப்போய் அவர் வரலாற்றைக் கூறல் செவிலியர்க்குத் தொன்றுதொட்டு மரீஇய வழக்கென்பார் செவிலியர் கூறவென்றுங் கூறினர். திருந்தநின்று என்பதற்கு அரசகன்னியர்க் குரிய மரியாதையுடையராய் அவர்முன் நின்றெனப் பொருள் கோடல் ஈண்டுச் சிறப்பின்று. (கஉஉ)

கையின்மாலையிவற்கெனக்கன்னியர்
வெய்யநெஞ்சொடுமின்னெனவந்தவர்
வையமன்னன்வயநிலைநோக்கியே
யையமுற்றனரன்புறுகாதலார்.

(இ - ள்.) கையின் மாலை இவற்கு என - கையிலுள்ள மாலை இவ்வரசனுக்கு என்று—வெய்ய நெஞ்சொடு மின் என வந்தவர் கன்னியர் - விரும்பிய மனத்தோடு மின்போல வந்தபெண்கள்—அன்பு உறு காதலார்-(அவர்கண்மீது) அன்பு மிக்க ஆசையையுடையராய்—வையமன்னன் வயநிலைநோக்கி - பூவுலக அரசனாகிய வீட்டுமனுடைய வீரநிலையைப்பார்த்து—ஐயம் உற்றனர் - சந்தேகமடைந்தார்கள். எ - று.

ஏ - அசை. காதலார் வினையெச்சமுற்று. வெய்ய என்பது வெம் என்னும் பண்படியாகத் தோன்றிய பெயரெச்சக்குறிப்பு. வந்தவர் பெயரெச்சமுற்று. நான்கனுருபேற்ற இவன் என்பது அக்கன்னியர் விரும்பிய அரசர்களைத் தனித்தனி உணர்த்திநின்றது. தம்மை வலாற்காரமாகக் கொண்டு செல்லுங் குறிப்பினனாய் வீட்டுமன் நின்ற வீரநிலையைக் கண்ட கன்னியர், நாம் விரும்பிய அரசர்க்கு மாலை சூட்டின் வீட்டுமனால் யாது தீங்கு நிகழுமோ என்று ஐயமுற்றாரென்க. (கஉங)

ஏனைவேந்தரெதிரிவரைப்பெருந்
தானைசூழ்மணிச்சந்தனத்தேற்றியே
சோனைமாமதஞ்சோருங்கடதட
யானையென்னவிளவலொடேகினன்.

(இ - ள்.) ஏனை வேந்தர் எதிர் - (வீடுமனானவன் அவர் குறிப்பைக்கண்டு) மற்றை அரசர்களுக் கெதிரே—இவரைப் பெரும் தானை சூழ் மணிச் சந்தனத்து ஏற்றி - இப்பெண்கள் மூவரையும் பெரிய சேனைகள் சூழ்ந்த இரத்தினங்க ளழுத்திய தேரிலேற்றி—சோனை மாமதம் சோரும் கட தட யானை என்ன - விடாமழைபோல மிக்கமதஞ் சொரியுங் கதுப்பையுடைய பெரிய யானையைப்போல—இளவலொடு ஏகினன் - தம்பி யாகிய விசித்திர வீரியனொடு சென்றான். எ - று.

* *

ஏ - அசை. மதயானை ஒன்றற்கு மஞ்சாது செல்லுமாறுபோல இவனுஞ் சென்றான் என்பார் கட தட யானையென்ன இளவலொடேகினன் எனவும், மாற்றரசர்கவராதபடி காவலான தேர்மீது ஏற்றி என்பார் தானைசூழ் மணிச்சந்தனத் தேற்றி எனவுங்கூறினர். (கஉச)

முறையினாலன்றிமொய்ம்பிற்கவர்வதெக்
குறையினாலெனக்கோக்குலங்கூடிவந்
திறைவனோடெதிரேற்றவில்வீரரைப்
பிறைமுகக்கணையாற்பிளந்தோட்டினான்.

(இ - ள்.) முறையினால் அன்றி - நீதியினாலன்றி—மொய்ம்பில் கவர்வது எக்குறையினால் என-வலியாற் கவர்வது (நம்மிடத்துள்ள) எந்தக் குறைவினாலென்று—கோக்குலம் கூடி வந்து இறைவனோடு எதிர் ஏற்ற - அரச கூட்டஞ் சேர்ந்து வந்து வீடுமனோடு முன்னர் எதிர்த்தன—வில்வீரரைப் பிறைமுகக்கணையால் பிளந்து ஓட்டினான் - (அவ்வாறு எதிர்த்த கூட்டத்திலுள்ள) வில்வீரரை (அவன்) பிறைமுக அம்புகளினாற் பிளந்து துரத்தினான். எ-று.

குலம் என்பதற்கியைய ஏற்ற என அஃறிணைவினை கொடுத்தார். கன்னியர் வரித்து மணமாலை சூட்டாதொழிய அவரை வலிந்து கைக்கொள்ளல் அரச நீதிக் கடாதென்பார் முறையினாலன்றி என்றும், மொய்ம்பாற் கவர்வது தன்னில் வலி குறைந்த அரசர் சமூகத்தன்றோ நாம் தன்னோடொத்த வலியினராகவும் எம்மை ஒருபொருட்படுத்தா திவன் கவர்ந்தது எம்மிடத்து வலியில்லை எனக்கருதியா அதனை அறிகுதுமென வெகுண்டார் என்பார் மொய்ம்பிற்கவர்வதெக்குறையினாலென என்றுங் கூறினர். (கஉரு)

முந்துறப்பெறுமூவரொடாடமர்
விந்தைதன்னையும்வேந்தர்கொடுத்தலாற்
சந்தனுப்பெயர்த்தார்முடிமன்னவன்
மைந்தர்தங்கள்வளநகர்மன்னினார்.

(இ - ள்.) முந்துறப் பெறும் மூவரொடு - முன்னரே கவர்ந்துகொண்ட மூன்று பெண்களோடு—ஆடு அமர் விந்தைதன்னையும் வேந்தர் கொடுத்தலால் - வெற்றியையுடைய யுத்தத்தில் தம்மிடத்திலிருந்த வீரலச்குமி என்னும்பெண்ணையும் அரசர்கள் கொடுத்தலினால்—சந்தனுப் பெயர்த் தார்முடி மன்னவன் மைந்தர் - சந்தனு என்னும் பெயரைப்பெற்ற மாலைபொருந்திய முடியை அணிந்த அரசனுடைய புதல்வரிருவரும்—தங்கள் வளநகர் மன்னினார் - தங்களுடைய வளம்பொருந்திய நகரத்தை அடைந்தார்கள். எ-று.

விந்தைதன்னையும் என்னும் உம்மை எச்சம். வருணனதவதாரத்தனாகிய சந்தனுவின் புதல்வரென்னும் விசிட்டத்தால் வேந்தரைவென்று விந்தையையும் கைக்கொள்ளும் வலி இவர்க்குளதாயிற்றென்பார் வீடுமன் விசித்திர வீரியன் என்னாது சந்தனுப்பெயர்த்தார் முடிமன்னவன் மைந்தர் என்றும், தங்கள் கருத்துத் தடையின்றி முடியவே இனியெமக்குச் செயற்பாலதாகிய வினையொன்

றில்லையெனத் தந்நகர் அடைந்தார் என்பார் தங்கள் வளநகர்மன்னினர் என்றுங் கூறினர். (கஉகூ)

சமரின்முந்தியசாலுவன்மேன்மன
மமரநின்றதறிந்துழியம்பையை
யெமர்களுக்கிஃதியற்கையன்றென்னவே
யமரழிந்தவவனுழைப்போக்கினன்.

(இ - ள்.) சமரின் முந்திய சாலுவன்மேல் - (வீடுமனுனவன்) யுத்தத்தினற் சிறந்த சாலுவன் என்னும் அரசன்மேல்—மனம் அமர நின்றது அறிந்துழி - (அம்பை என்பவள்) மனம் விரும்ப (அதனுற் பிரியமற்று) நின்றதை அறிந்த பொழுது—அம்பையை - அவளை—எமர்களுக்கு இஃது இயற்கை அன்று என்ன - நம்மனோர்க்கு இது முறையல்ல என்று—அமர் அழிந்த அவனுழைப் போக்கினன் - யுத்தத்திலே (தமக்குத்) தோற்ற அவனிடத்தில் அனுப்பினன். எ - று.

ஏ- அசை. அமர என்னுஞ் செயவெனெச்சம் ஏதுப்பொருட்டு. நின்றது, தொழிற்பெயர். அம்பையென்பாட்குச் சாலுவன்மீது மனம் அமர்ந்தது சமரில் முற்பட்ட வீரனென்பதனுல் என ஏதுக்கூறுவார் சமரின் முந்திய சாலுவனென் றடைகொடுத்தார். ஒருவனை விரும்பிய கன்னிகையை விவாகஞ்செய்தல் பிறர்க் குத்தகுமாயினும் நீதிநூலின் வழியொழுகும் நம்மனோர்க்குத் தகாதென்பான் எமர்களுக்கிஃதியற்கையன் றென்றுன். (கஉஎ)

அம்பிகைக்குமம்பாலிகைக்கும்பதி
யெம்பியேயெழிலாலென்றிசைவுறத்
தம்பிதன்னைத்தனஞ்சயன்றன்னெதிர்
வம்பினன்மிகுமாமணஞ்சேர்த்தினன்.

(இ - ள்.) அம்பிகைக்கும் அம்பாலிகைக்கும் எழிலால் பதி எம்பியே என்று- அம்பிகை என்பவளுக்கும் அம்பாலிகை என்பவளுக்கும் அழகால் நாயகனுதற் குரியவன் என் தம்பியே என்று—இசைவு உற - இயைய—தம்பி தன்னை - தம்பி யாகிய விசித்திர வீரியனை—தனஞ்சயன் தன் எதிர் - அக்கினிக்கு முன்னே— வம்பினல் மிகு மாமணம் சேர்த்தினன் - புதுமையினன் மிக்க பெரிய விவாகத் தைச் செய்வித்தான். எ - று.

எம்பியே என்னும் ஏகாரந் தேற்றம். தன் - இரண்டும் இன்னுஞ் சாரியை கள். நாயகன் நாயகிகளாகிய இருபாலாரும் தம்முளொத்த வழகினை யுடைய ரெனக் கருதினன் என்பார் அம்பிகைக்கு மம்பாலிகைக்கும் பதி எம்பியே யெழி லாலென்றெனவும், இதுகாறும் பிறருடையமணங்களில்நிகழா அலங்காரமெல்லா நிகழச்செயப்பட்ட மணம் என்பார் வம்பினன்மிகு மாமணம் எனவுங் கூறி னர். (கஉஅ)

சென்றவம்பையைத்தீமதிச்சாலுவன்
வென்றுதெவ்வர்கவர்ந்தநின்மெய்தொடே
னென்றிகப்பவிவனுழைமீளவு
மன்றல்வேண்டினண்மன்றலங்கோதையாள்.

(இ - ள்.) சென்ற அம்பையை - தன்னிடத்தேசென்ற அம்பையை—தீமதி ச்சாலுவன் - கொடிய புத்தியையுடைய சாலுவன் என்னும் அரசன்—வென்று

தெவ்வர் கவர்ந்த நின் மெய் தொடேன் என்று இகப்ப - (நம்மை) வென்று பகைவர் கவர்ந்த உனது சரீரத்தைத் தீண்டேனென்று நீக்கிவிட—மன்றல் அம் கோதையாள் - வாசனை பொருந்திய அழகிய அளகத்தையுடைய அவள்—இவனுழை மீளவும் மன்றல் வேண்டினள் - இந்த வீடுமனிடத்திலே திரும்பவும்வந்து விவாகத்தை வேண்டிக்கொண்டாள் எ - று.

மீளவும் என்னும் உம்மை எச்சம். வென்று என்னுஞ் செய்தெனெச்சமும் இகப்ப என்னுஞ் செயவெனெச்சமும் ஏதுப்பொருளில் வந்தன. மன்றலங் கோதை என்புழி அம்மைச்சாரியை யாக்கினுமமையும். கற்பிற்றவறாது தன்னை விவாகஞ்செய்தல் வேண்டுமென்னுங் கருத்தோடு தன்மாட்டுவந்தாளை அவள் கருத்தின்படி விவாகஞ்செய்தலே சான்றோர் வழக்கும் நூற்றுணிபுமாகவும் செய்யேனென மறுத்தமைபற்றித் தீமதிச்சாலுவனென்றார். (கஉகூ)

கங்கைமைந்தன்கடிமணங்காதல்கூர்
மங்கைதன்னைமறுத்தபின்மங்கையுஞ்
செங்கணீரெழச்சிந்தைசெந்தீயெழச்
சங்கையோடுதன்றாதையைநண்ணினாள்.

(இ - ள்.) கங்கை மைந்தன் - வீடுமனானவன்—கடிமணம் காதல்கூர் மங்கைதன்னை மறுத்த பின் - புதிய விவாகத்தில் ஆசைமிக்க அம்பையை (அது இனி யியையாதென்று) மறுத்த பின்பு—மங்கையும் - அவளும்—செங்கண் நீர் எழ - (அழுதலாற்) சிவந்த கண் நீர்சொரிய—சிந்தை செம் தீ எழ - மனம் சிவந்த கோபாக்கினிசொலிக்க—சங்கையோடு தன் தாதையை நண்ணினாள் - (இனி எனக்கு மணமுண்டோ இல்லையோ என்னும்) ஐயத்தோடு தன்பிதாவை அடைந்தாள். எ - று.

தன் - சாரியை. மறுத்தபின் என்பது பின்னீற்றுவினையெச்சம். செங்கண் நீரெழ சிந்தை செந்தீயுக என்பன இடத்து நிகழ் பொருளின் றொழில் இடத்தின் மேனின்றன. கூர்மங்கை வினைத்தொகை. மங்கையும் என்னும் உம்மை எச்சம். எழ, எழ என்னுஞ் செயவெனெச்சங்கள் இது நிகழாநிற்க இது நிகழ்ந்ததென்னும் பொருளவாய்நின்றன; "சூரியனுதிக்கவந்தான்" என்புழிப்போல. வீட்டுமன், இவள் சாலுவன்மாட்டன்புடைமையினால் மணஞ்செய்தற் குரியளல்லள் என நீக்கினமையினாலும் சாலுவன், வென்றுதெவ்வர் கவர்ந்த நின்மெய்தொடேனென நீக்கினமையினாலும் இனி மணமுடிதலரிதென்னும் ஐயமுடையளாயினாள் என்பார் சங்கையோடென்றார். (கநூ0)

வேறு.

தாதைதாளினில்விழுந்துசந்தனுவின்மைந்தனின்னலுரைதந்ததுங்
கோதையாலுறவுகொண்டுகைதரல்குறித்தகோமகன்மறுத்ததும்
பேதைகூறமனநொந்திரங்கியவன்மிக்கநண்பினொடுபின்னையுந்
தூதையேவிமணமுற்றிரந்தனன்விசும்புலாவுநதிசுதனையே.

(இ - ள்.) பேதை தாதை தாளினில் விழுந்து - (அடைந்த) அம்பையானவள் பிதாவினுடைய கால்களில் வணங்கி—சந்தனுவின் மைந்தன் இன்னல் உரை தந்ததும் - வீடுமன் (மணம்புரியேன் என்று) வருத்தத்தைத்தருகின்ற

வசனத்தைச் சொன்னமையையும்—குறித்த கோமகன் கோதையால் உறவு கொண்டு கைதரல் மறுத்ததும் - தன்னால் வரிக்கப்பட்ட சாலுவன் என்னும் அரசன் மாலையிடுதலால் நட்பைப்பொருந்தி மணஞ்செய்தற்கு மறுத்தமையையும்—கூற - சொல்ல—மனம் நொந்து இரங்கி மிக்க நண்பினொடு பின்னையும் தூதை ஏவி - (அந்தக் காசிராசன்) மனம் நொந்து உருகி மிகுந்த சினேகத்தோடு பின்னுந் தூதுவரையனுப்பி—விசும்பு உலாவு நதிசுதனை மணம் உற்று இரந்தனன் - ஆகாயத்திலுலாவுங் கங்கையுடைய புதல்வனாகிய அவனிடத்தில் (தன் மகளை) மணஞ்செய்தலை மிக யாசித்தான். எ - று.

உறு என்னும் உரியடியாகப்பிறந்த உற்று என்னுஞ் செய்தெனெச்சஞ் செயவெனெச்சமாகத் திரிக்கப்பட்டது. பின்னையும் என்னும் உம்மை எச்சம். தூது, அரசு என்பதுபோல உயர்திணைப் பொருளை யுணர்த்திநின்றதோரஃறிணைச்சொல். விழுந்துகூறவென்றியையும். மாலையிட்டு இவனே நாயகன் என்று பலரறியவரித்தபின்னரே வேதவிதிப்படி மணஞ்செய்தல் இராசகன்னியர்க்கியல்பாதலிற் கோதையா லுறவுகொண்டு கைதரல் என்றும், வீட்டுமன் மணம்புரியாமல் மறுக்க வரித்தசாலுவனாயினும் மணம்புரிந்திலனே அதனால் என்மகள் பொதுவன்கொன்ற மரம்போலாயினாள் என மனநொந்தமையிற் பேதை கூற மனநொந்திரங்கி என்றும், தன்குலத்திற் கடாப்பழி வந்ததேயெனப் பரிந்து எவ்வாறாயினும் மகட்கு மணமுடித்தல் வேண்டுமென்னும் அவாவின் வயத்தனாயினான் என்பார் தூதையேவி மணமுற்றிரந்தனன் என்றுங் கூறினார். (கஙக)

போனதூதுவர்வணங்கியிம்மொழிபுகன்றபோதுமொழிபொய்யுறா
மீனகேதனனைவென்றுதன்கொடியவிரதமேபுரியும்வீடுமன்
மானவேனிருபன்மகள்குறித்ததிருமன்றல்வன்பொடுமறுத்தலா
னுனவாதரவொடாகுலம்பெருகவம்பைதந்தைதனதருளினால்.

(இ - ள்.) போன தூதுவர் வணங்கி இம் மொழி புகன்றபோது - சென்ற தூதுவர் வணங்கி இவ்வசனத்தைச் சொன்னபொழுது—மொழி பொய் யுறாமீனகேதனனை வென்று தன் கொடிய விரதமே புரியும் வீடுமன் - தன் சபதமொழி பொய்படாமல் மன்மதனை வென்று தனது செயற்கரிய விரதத்தையே அநுட்டிக்கும் வீடுமனானவன்—மானவேல் நிருபன் மகள் குறித்த திரு மன்றல் வன்பொடு மறுத்தலான் - மானம்பொருந்திய வேலையுடைய காசிராசன் மகள் வேண்டிய அழகிய விவாகத்தை உறுதியோடு மறுத்தலினாலே—ஆன ஆதரவொடு ஆகுலம் பெருக - (அவளுக்கு அவனிடத்து) உண்டாகிய ஆசையோடு வருத்தம் மிக—அம்பைதந்தை - (அதைக்கண்ட) பிதாவாகிய காசிராசன்—தனது அருளினால் - தன்னுடைய தயையினால். எ - று.

உறாது என்னும் வினையெச்சம் ஈறுதொக்கது. விரதமே என்னும் ஏகாரந் தேற்றம். மறுத்தலாற் பெருக வென்றியையும். வென்று என்னுஞ் செய்தெனெச்சம் ஏதுப்பொருட்டு. பெருக என்னுஞ் செயவெனெச்சங் காரணகாரியப் பொருட்டு. தூதுவர் தம்மரசியின் கருத்து வாய்க்கும்படி வீட்டுமனைத் தம்வயமாக்கவும் தஞ்சாதி தருமத்தை நிலை பெறுத்தவும் வணங்கினார் என்பார் தூதுவர் வணங்கி என்றும், இவன் மேற்கொண்ட கொடியவிரதம் காமத்தை வேரோடு களைந்தாலன்றி ஏனையுபாயத்தாற் றவறின்றிமுடிதல் மிகவரிதென்பார் மீனகேதனனைவென்று தன் கொடிய விரதமே புரியும் வீடுமன் என்றும், மிக அரிய

பொருளாயினும் அகப்படலெளிதாயின் அதிலாதரங்குறைதலும் மிக எளிய பொருளாயினும் அகப்பட லரிதாயின் அதிலாதரங் கூர்தலும் உலகியல்பாதலின் இவட்கும் தான் பலவழியாலும் பலமுறையும் மணத்தை வீடுமனிடத்துவேண்டவும் அவன் அதனை மறுத்தமையினால் ஆதரமும் எண்ணிய சருமங் கைகூடாமையால் ஆகுலமும் பெருகின என்பார் ஆதரவொ டாகுலம்பெருக என்றுங் கூறினர். (கசஉ)

வரிசையாலுயரநேகமண்டலமகீபர்சொன்னசொன்மறுக்கினும்
பரசுராமனருண்மொழிமறானவனதிருபதத்திடைபணிந்துநீ [யால்
யுரைசெய்தாலவனுரைத்தசொல்லின்வழியொழுகிவந்துநினையுவகை
விரைசெய்மாலைபுனையாதுவீடுமன்மறுத்துமீளவும்விளம்புமேல்.

(இ - ள்.) வரிசையால் உயர் அநேக மண்டல மகீபர் சொன்ன சொல் மறுக்கினும் - வரிசைகளினா லுயர்ந்த அநேக மண்டலங்களுக்கு அரசர்சொன்ன சொல்லைமறுத்தாலும்—பரசுராமன் அருள் மொழிமறான் - பரசுராமன் பணித்த வசனத்தை மறுக்கமாட்டான் (ஆதலால்)—அவனது இருபதத்திடை பணிந்து நீ உரைசெய்தால் - அவனுடைய இருபாதங்களில் வணங்கி மகளே நீ (உன் குறையைச்) சொன்னால்—அவன் உரைத்த சொல்லின் வழி ஒழுகி வந்து - அவன் சொன்ன சொல்லின் வழி அமைந்து வந்து—நினை உவகையால் விரை செய் மாலைபுனையாது - உன்னை மகிழ்ச்சியோடு வாசனை பொருந்திய மாலை சூட்டி மணஞ்செய்யாது—வீடுமன் மீளவும் மறுத்து விளம்புமேல் - வீடுமன் திரும்பவும் மறுத்துச் சொல்வானாயில். எ - று.

விளம்புமேல் என்பது ஏவீற்று வினையெச்சம். உரைசெய்தால் என்பது ஆலீற்று வினையெச்சம். பரசுராமன் வடநூன்முடிபு. மீளவும் என்னும் உம்மை எச்சம். மறுக்கினும் என்னும் உம்மை எதிர்மறை. ஐய உம்மை என்பாரும் உளர். நினை, உவகையால் என்னும் இரண்டாம் மூன்று முருபுகள் புனையாது என்னும் எதிர்மறை வினையெச்சத்திற் புனைதலென்னும் முதனிலையோடு முடிந்தன. அவனதிருபதம் என்புழி அது வுருபு எனதுகைகள் என்பதுபோற் சிறுபான்மை பன்மைப் பொருட்கண்வந்தது. உலகமெல்லாவற்றையுந் தங்குடைக்கீழொரு கோலோச்சி யாளு மரசர் விட்டுணுவின் கூறு யிருத்தலாற் பண்டிதனாகிய வீட்டுமன் அவ்வுண்மையை யறிந்து அவர் சொல்லை மறுத்த லரிதென்பான் உம்மைகொடுத்து மறுப்பினுமென்றும், தெய்வத்தினும் ஆசாரியரே சிறந்தாரென்னு நூற்றுணிபையறிந்தானாகலாற் றனக்குந் தநுர்வேத முதலியவற்றைக் கற்பித்த ஆசாரியருடைய சொல்லை மறானென்பான் பரசுராம னருண்மொழிமறானென்றும், நீபோய் மணஞ்செய்கவென இரந்துழியும் அதற்கியையாதான் ஆசாரியர் வாக்கால் நீயிருந்துழியே வந்து உன்னை மணஞ்செய்வான் என்பான் அவனுரைத்த சொல்லின்வழி யொழுகிவந்தென்றுங் கூறினன். (கசங)

பின்னையெண்ணியபெருந்தவம்புரிதியென்றுகூறியபிதாவையு
மன்னைதன்னையும்வணங்கிநீடுசதுரந்தயானமிசையம்புயப் [ன்
பொன்னைவென்றொளிகொள்சாயலாளிருபுறத்துமாதர் பலர்பொலிவுட
றன்னைவந்துபுடைசூழவேகியமதங்கிமைந்தனகர்சாரவே.

(இ - ள்.) பின்னை எண்ணிய பெரும் தவம் புரிதி என்று கூறிய - அதன்பின் நினைத்த பெரிய தவத்தைச்செய்குதி என்றுசொல்ல—பிதாவையும் அன்னை

தன்னையும் வணங்கி -(அப்படிச்சொன்ன) பிதாவையும் மாதாவையும் வணங்கி— நீடு சதுரந்த யானமிசை - பெரிய சிவிகையின்மேல் (ஏறி)—அம்புயப் பொன்னை வென்று ஒளிகொள் சாயலாள் - இலக்குமியை வென்று ஒளிகொண்ட அழகினை யுடைய அம்பையானவள்—இரு புறத்தும் புடையும் மாதர் பலர் பொலிவுடன் தன்னை வந்து சூழ ஏகி - முன்னும் பின்னும் இருமருங்கும் பெண்கள் பலர் பொலிவோடு தன்னைவந்து சூழச் சென்று—யமதங்கி மைந்தன் நகர்சார - சமதக்கினி முனிவனுடைய புதல்வனாகிய பரசுராமனது நகரத்தையடைய. எ - று.

ஐ, ஏ - அசைகள். கூறிய என்னுஞ் செய்யியவென்னும் வாய்பாட்டு வினையெச்சம் செயவென் வாய்பாட்டு வினையெச்சமாய்த் திரிக்கப்பட்டு, போன தூதுவர் என்னுஞ் செய்யுளில் அருளினால் என்னும் மூன்றும் வேற்றுமைக்கு முடிக்குஞ் சொல்லாயிற்று. வென்று என்னுஞ் செய்தெனெச்சமும் சார என்னுஞ் செயவெனெச்சமும் ஏதுப்பொருள. புறத்தும் என்னும் உம்மை புடைக்குங்கூட்டிப் பொரு ளுரைக்கப்பட்டது. சதுரந்தயானம் - சிவிகை. யமதங்கி என்பது "எட்டேயவ்வும்" என்னும் விதிபற்றி ஜகாரம் யகாரமாயிற்று. கூறிய என்பதைப் பெயரெச்சமாக்கிப் பொருள்கோடல் பொருத்தமின்று. (௧௬௪)

காசிராசன்மகளென்றுவந்தனளோர்கன்னியென்றுகடைகாவலோர்
வாசநாறுதுளவோனுடன்புகலவருகவென்றபின்மடந்தைபோ
யாசினாலுரைவகுத்துமுற்செயலனைத்துமண்ணலடிதொழுதுபின்
பேசினாளவனும்யாமுடிக்குவமிதென்றுமெய்ம்மையொடுபேசினான்.

(இ - ள்.) காசிராசன் மகள் என்று ஓர் கன்னி வந்தனள் என்று - காசிராசன் புதல்வியென ஒரு கன்னிகை வந்தனள் என்று—கடை காவலோர் வாசம் நாறு துளவோனுடன் புகல - வாயிற்காவலாளர் நறுமணங்கமழுந் துழாய் மாலையையுடைய பரசுராமனோடு சொல்ல—வருக என்ற பின் மடந்தை போய் - (அவன்) வருக என்று அழைக்க அம்பையானவள் போய்—அண்ணல் அடி தொழுது பின் - அவனுடைய சால்களை வணங்கிப் பின்பு—முன் செயல் அனைத்தும் ஆசினால் உரை வகுத்துப் பேசினாள் - முன் நடந்த செயல்களனைத்தையும் விரைவோடு சொற்களால் விரித்துச் சொன்னாள்—அவனும் யாம் இது முடிக்குவம் என்று மெய்ம்மையொடு பேசினான் - அவனும் யாம் இதை முடிப்போம் என்று சத்தியத்தோடு சொன்னான். எ - று.

என்றபின் என்பது பின்னீற்று வினையெச்சம். அவனும் என்னும் உம்மை சிறப்பு. முடிக்குவம் என்பது எதிர்கால விடைநிலையாகிய வகரமேற்புழிக்குச் சாரியை பெற்று முடிந்தது. தொழுது பின் என்பதில் பின் பெயர்ச்சொல். வீட்டுமனை விவாகஞ்செய்தல் வேண்டும் என்னும் அவாவின் வயத்தளாய் நின்றாளென்பார் ஆசினால் என்றும், உத்தமனாகிய வீடுமன் ஆசாரியனாகிய தன் சொல்லைச் சிரமேற்றாங்கி யொழுகுவான் என இவன் நெஞ்சிற் றுணிந்து கூறினான் என்பார் அவனும் யாமுடிக்குவமிதென்று மெய்ம்மையொடு பேசினான் என்றுங் கூறினார். (௧௬௫)

வரதன்விரமழுவாலநேககுலமன்னர்வேரறமலைந்தகோ
னிரதமீதவளுடன்கணப்பொழுதினேறியையிருதினத்தினில்
விரதமாபரணமெனவணிந்ததிறல்வீடுமன்பதியின்மேவலுஞ்
சரதமாகவெதிர்கொண்டவன்சிரமிவன்பதத்தினிடைசாத்தினான்.

(இ - ள்.) வரதன் - வரத்தைக் கொடுப்பவனும்—வீர மழுவால் அநேக குல மன்னர் வேர் அற மலைந்த கோன் - வீரத்தையுடைய மழுப்படையினால் அநேக (சூரிய) குல அரசர்கள் வேரறும்படி யுத்தஞ்செய்த தலைவனுமாகிய பரசுராமன்—அவளுடன் இரதமீது கணப்பொழுதில் ஏறி - அந்த அம்பையோடு தேரின் மேலே கணப்பொழுதில் ஏறி—ஐயிரு தினத்தினில் - பத்துநாளில்—விரதம் ஆபரணம் என அணிந்த திறல் வீடுமன் பதியில் மேவலும் - விரதத்தை ஆபரண மாக அணிந்த வலியையுடைய வீடுமனது நகரத்தை அடையவும்—அவன் சரத மாக எதிர்கொண்டு - அவன் உண்மையாக எதிர்கொண்டு—சிரம் இவன் பதத்தி னிடை சாத்தினன் - தன் தலையை இவனுடைய பாதத்திற் சேர்த்தி வணங் கினன். எ - று.

மேவலும் என்பது உம்மீற்று வினையெச்சம். தன்னை யடைந்தோரை யாக் கலும், அடையாதோ ரெத்துணைப்பே ராற்றலுடையாராயினு மவரை யழித்தலு மாகிய பெருந்தகைமை யுடையான், பெண்ணின் றுயரைத் தீர்த்தல்பேரறமெனக் கருதி எளிவந்து அவளுடன் சென்றான் என்பார் வரதன்வீரமழுவா லநேக குல மன்னர்வேரற மலைந்தகோ னிரதமீதவ ளுடன்கணப்பொழுதி னேறி என்றும், உயிரிறவரினுந் தான்கொண்டவிரதத்திற்றவறாத திட்பமுடையான் என்பார் விர தமாபரணமென வணிந்ததிறல் வீடுமன் என்றும், நம்மாசாரியன் நாமிருக்குமிடம் தேடி வரப்பெற்றேமேயென்ற மெய்யன்புடன் சென்றானென்பார் சரதமாக வெ திர்கொண்டு என்றுங்கூறினார். வரதன் என்பதைக் குறிப்புமுற்றுப் பெயரெச்ச மாமென்னும் விதிபற்றி வரதனாகிய வெனக்கொண்டு, கோனோ டியைத்தலு மொன்று. (கருகூ)

தனக்குவின்மைநிலையிட்டகோவையொருதபனியத்தவிசில்வைத்துநீ
யெனக்குநன்மைதரவந்தநற்றவமிருந்தவாவெனவிருந்தபின்
கனக்கும்வெண்டரளவடமுலைப்பெரியகரியகண்ணியிவள்காதலா
லுனக்குமன்றல்பெறவுரியளாகுகெனவுவகையோடவனுரைக்கவே.

(இ - ள்.) தனக்கு வின்மை நிலையிட்ட கோவை ஒரு தபனியத் தவிசில்வை த்து-தனக்கு வில்வித்தை நிலைபெறச்செய்த குருவாகிய பரசுராமனை ஒரு பொன் னாசனத்திலிருத்தி—நீ எனக்கு நன்மைதர வந்த நல்தவம் இருந்தவா என இரு ந்தபின் - தேவரீர் அடியேனுக்கு நன்மையைத்தர எழுந்தருளிவருதற் கேதுவா கிய நல்லதவம் இருந்தபடி என்னை என்று சொல்லி (வீடுமன்) இருந்த பின்பு—கனக்கும் வெண் தரள வடமுலைப் பெரிய கரிய கண்ணி இவள் - பருத்த வெண் மையாகிய முத்துவடங்களையணிந்த முலையையும் பெரிய கரிய கண்ணையுமுடை யவளாகிய இவள்—காதலால் உனக்கு மன்றல் பெற உரியள் ஆகுக என - விருப் பத்தினால் உனக்கு மணஞ்செய்ய உரியவளாகுக என்று—அவன் உவகையோடு உரைக்க - அப்பரசுராமன் மகிழ்ச்சியோடு சொல்ல. எ - று.

ஏ - அசை. இருந்தவாறு என்பது இருந்தவாவென்றாயிற்று: அல்லல்போது மாறு என்பது அல்லல் போதுமா என நின்றவாறுபோல. தரவென்னுஞ் செயவெ னெச்சங் காரண காரியப் பொருட்டு. பெரிய கரியகண்ணி என்பது ஈரடை சினையைவிசேடித்தது. உரைக்க என்னுஞ்செயவெனெச்சம் காரணப்பொருட்டு. ஆகுக என்னும் வியங்கோளீறுதொக்கது. கனக்கும் முலையென வியையும். தேவ சிறியேனிருக்குமிடத்தில் வரப்பெற்றுக்கொண்டது யான் முற்பிறப்பிற் செ

ய்த அருந்தவப் பயனென்பான் வந்த நற்றவ மிருந்தவா என்றுனென்றும், தன் கருத்து வாய்க்கும்படி அவனை முகங்கோடற் குரிய மெய்ப்பாடு தன்னிடத்தி னிகழவுரைத்தான் என்பார் உவகையோ டவனுரைக்க என்றுங் கூறினர். (கஎள)

இன்சொலாலவனிகொண்டவெந்தைமுதலின்பமன்றலினிதெய்தநான்
வன்சொலாலிரதமணமுறேனெனமனத்திஞல்விரதமன்னினே
னின்சொல்யாவருமறுரெனக்கருதிநீயுரைப்பினுநிகழ்ந்தவிப்
புன்சொலானதினிமாதவத்தின்மிகுபுனிதவென்செவிபொறுக்குமோ.

(இ - ள்.) இன்சொலால் அவனி கொண்ட எந்தை - இனியசொல்லினலே பூமியைத் தன் வசமாக்கிய என் பிதாவானவர்—முதல் இன்ப மன்றல் இனிது எய்த - முன்னே இன்பத்தையுடைய மணத்தை நன்மையோடு அடையும்படி—நான் வன்சொலால் இரத மணம் உறேன் என மனத்திஞல் விரதம் மன்னினேன் - நான் உறுதிச் சொல்லால் இனிய விவாகத்தைச் செய்யேன் என்று சொல்லி மனத்தோடியைய விரதத்தைப் பொருந்தினேன்—மாதவத்தின் மிகு புனித - பெரிய தவத்திஞல் மேம்பட்ட பரிசுத்தரே—நின் சொல் யாவரும் மருர் எனக் கருதி நீ உரைப்பினும் - உமது வாக்கை எவரும் மருர் என்று எண்ணி நீர் சொன்ஞலும்—நிகழ்ந்த இப் புன்சொலானது - பேசிய இந்தப் புன்சொல்லே—இனி என் செவி பொறுக்குமோ - இனி அடியேனுடைய காது தாங்குமோ. எ - று.

உரைப்பினும் என்னும் உம்மையும் ஒகாரமும் எதிர்மறைப் பொருளில் வந்தன. புன்சொலானது என்பதில் ஆனது எழுவாயுருபன்றே அது ஆனதை யென ஐயுருபேற்ற தென்னை யெனின் : ஆறனுருபு உருபுக ளேற்குமாறுபோல இவ்வுருபும் உருபேற்கு மென்பது தொல்லாசிரியர்கள் கருத்தென்க. இன்சொல்லிஞலன்றி அதிகார முதலிய வற்றல் அவனி தம்வசப்படுதல் ஒருதலையன் றென்பது உலகமுழுதையு மொரு கோலோச்சி யரசாண்ட மன்னர் கருத்தெ னவறிந்து அதன்வழி யொழுகிஞன் என்பான் இன்சொலா லவனிகொண்ட எந்தை என்றும்,பிதாச் சுகத்தை யடைதற்கே நான் இந்த விரதத்தை மேற் கொண்டதென்பான் இன்பமன்றலினிதெய்தநான் வன்சொலாலிரத மணமுறே னென மனத்திஞல்விரத மன்னினேனென்றும், ஆசாரியரே நீர் கூறுவது இவற் கடாதகாரிமென்றறிந்தும் இங்ஙனங்கூறுதல் நுமது பெருந்தகைமைக்கடாதென் பான் நின்சொல் யாவருமறுரெனக்கருதி நீயுரைப்பினும் என்றுங் கூறிஞன். ()

களம்புகுந்தவரைமீளவேகுதல்கொடாதகார்முகவிஞேதகே
ளுளம்புகுந்தினிதிருக்குநற்கடவுளுன்னையன்றியிலையுண்மையே
வளம்புனைந்தவநுராகபோகமிகுமாதர்மங்கையர்பொருட்டிஞல் [வேன்.
விளம்புமிந்தமொழியொழிகவென்றனுயிர்வேண்டுமென்னினும்வழங்கு

(இ - ள்.) களம் புகுந்தவரை மீள ஏகுதல் கொடாத கார்முக விஞேதகேள்-யுத்தகளத்தில் வந்தவரை உயிரோடு திரும்பிப் போகவிடாத வில்விஞேதரே கேட்டருளும்—உளம் புகுந்து இனிது இருக்கும் நல் கடவுள் உன்னை அன்றி இலை- அடியேனுடைய மனத்திற் குடிகொண்டு இனிமையோடிருக்கும் நல்ல கடவுள் தேவரீரையல்லாமல் வேறில்லை—உண்மையே - இது சத்தியமே—வளம் புனைந்த

அநுராக போகம் மிகு மாதர் மங்கையர் பொருட்டினல் - மாட்சிமை பொருந்திய சாம அநுபவம் மிக்க அழகினையுடைய பெண்கள்பொருட்டால்—விளம்பும் இந்த மொழி ஒழிக - சொல்லும் இந்தவசனத்தை விடுக—என் உயிர் வேண்டும் என்னினும் வழங்குவேன் - (இதுவன்றி) அடியேனுடைய உயிர்வேண்டுமெனினுந் தருவேன். எ - று.

தன் - சாரியை. ஏகாரம் - தேற்றம். என்னினும் என்னும் உம்மை எதிர்மறை ; சிறப்பெனினும் அமையும். ஒழிக என்னும் வியங்கோள் வேண்டிக்கோடற் பொருட்கண்வந்தது. போர்முனையைக்கண்டுழி அஞ்சிமுதுகுதரும் வீரருடன் எதிராமல் உயிரை ஒருபொருட்படுத்தாது மானத்தையேபொருட்படுத்துந் தக்க வீரரையே எதிரிகளாக்கி எதிர்த்துச் சமர்புரிந்து அவரைத் தப்பாமற்கொல்லும் தநுர்வேதசாதுரியன் என்பான் களம்புகுந்தவரை மீளவேகுதல் விடாத கார்முக விநோத என்றும், நீரே என்மனத்திற் குடியிருக்குங்கடவுளென்கை உண்மையேயாயினும் நும்வாய்ச்சொல் என் விரதமழியவருஞ்சொல்லாதலால் அதற்கு உயிரிறவரினு முடன்படேனென்பான் மங்கையர் பொருட்டினல் விளம்புமிந்த மொழியொழிகவென்ற னுயிர்வேண்டுமென்னினும் வழங்குவேன் என்றுங் கூறினன்.

மறுத்திவன்புகலவீரியன் புயமொராயிரந்துணிசெய்மழுவினன்,
வெறுத்தனந்தரமெழுந்திருந்துகரையழியும்வேலைநிகர்வெகுளியன்,கறுத்தநெஞ்சினன்வெளுத்தமேனியனுறச்சிவந்தவிருகண்ணினன், பொறுத்தவில்லினன்விரைந்துதேர்மிசைபுகுந்தனன்பெரிதுபோர்செய்வான்.

(இ - ள்.) மறுத்து இவன் புகல - உடன்படாது இந்த வீமென் இங்ஙனஞ் சொல்ல—வீரியன் புயம் ஓராயிரம் துணிசெய் மழுவினன் - கார்த்தவீரியனுடைய புயமோராயிரத்தையும் வெட்டிய பரசுராமன்—வெறுத்து அனந்தரம் எழுந்திருந்து - (அவனை) வெறுத்து அதன்பின் ஆசனத்தினின்றெழுந்து—கரை அழியும் வேலை நிகர் வெகுளியன் - கரை கடக்குங் கடல்போன்ற கோபத்தையுடையவனய்—கறுத்த நெஞ்சினன்-வைரங் கொண்ட மனத்தினனய்—வெளுத்த மேனியன் - வெளுத்த சரீரத்தையுடையனய்—உறச் சிவந்த இருகண்ணினன் - மிகச் சிவந்த இரண்டு கண்களையுமுடையனய்—பொறுத்த வில்லினன் - ஏந்திய வில்லினனய்—போர் பெரிது செய்வான் விரைந்து தேர்மிசை புகுந்தனன் - போரை மிகச் செய்யும்படி விரைந்து தேரிலேறினன். எ-று.

வெகுளியன், நெஞ்சினன், மேனியன், கண்ணினன், வில்லினன் என்பன குறிப்புவினையெச்சமுற்றுக்கள். செய்வான் என்பது வானீற்று வினையெச்சம் புகல என்னுஞ் செயவெனெச்சம் ஏதுப்பொருட்டு. பெரிதென்னுங் குறிப்பு முற்று வினையெச்சமாயிற்று. வீரியன் என்பது முதற்குறை. கறுத்த, வெளுத்த, சிவந்த என்பன முரண். கோபமுண்டாயின் எத்துணைவலியுடையாரையுங் கொல்லவல்ல பேராற்றலுடையான் என்பார் வீரியன்புயமொ ராயிரந்துணிசெய் மழுவினன் என்றும், ஆசாரியனுகிய தன்சொல்லை உத்தமமாணக்கனுகிய இவன் கடந்தானேயென்றமையினற் பெருங்கோபமுடையனயினர் என்பார் கரையழியும்வேலைநிகர்வெகுளியன் என்றும் யாமிதனை முடிப்பேம் என்று கூறிய உறுதி மொழி பழுதுபட்டதேயென அஞ்சி வெளுத்தானென்பார் வெளுத்தமேனியன் என்றுங் கூறினர். (கசம)

வெருவுடன்றொழுதுகங்கைமைந்தனடிவீழவுஞ்சினமிகுத்தலா
லுருவுடன்றனியிருக்குநீள்விரதம்வழுவிநானரகமுறுவதிற்
குருவுடன்பொருதுமடிதனன்றெனநினைந்துதாலமுயர்கொடியினன்
செருவுடன்றிடுதலுன்னியேறினனமைந்துநின்றதொருதேரின்மேல்.

(இ - ள்.) கங்கை மைந்தன் வெருவுடன் தொழுது அடி வீழவும் - வீடுமன் அச்சத்தோடு அஞ்சலிசெய்து பாதத்தில் வணங்கவும்—சினம் மிகுத்தலால் (பரசுராமனுக்குக்) கோபம் மிகுத்தலால்—தாலம் உயர் கொடியினன் - பனையையுயரச்செய்த கொடியை யுடையவனாகிய அவன்—தனி இருக்கும் நீள் விரதம் - மனைவியின்றித் தனியே யிருக்கும் பெரியவிரதத்தை—நான் உரு உடன் வழிவி நரகம் உறுவதில் - நான் இவ்வுடம்போடு கூடியிருக்கும்பொழுது வழுவி நரகை அடைவதினும்—குருவுடன் பொருது மடிதல் நன்று என நினைந்து - ஆசாரியனோடு யுத்தஞ் செய்திறத்தல் நன்றென்று நினைத்து — செரு உடன்றிடுதல் எண்ணி - போர்செய்ய எண்ணி—அமைந்து நின்றதொருதேரின்மேல் ஏறினன்- பண்ணுறுத்தப்பட்டு நின்ற ஒரு தேரின்மேல் ஏறினான். எ - று.

உறுவதில் இல்லுருபு நீக்கப்பொருட்டு. வீழவும் என்னும் உம்மைசிறப்பு. வழுவி, நினைந்து என்னுஞ் செய்தெனெச்சங்கள் ஏதுப்பொருள. உரு என்பது ஆகுபெயர். ஆசாரியன் கூறியவாக்கைக் கடந்தமையின் அவன் றன்னுயிரை நீக்கிவிடுவானென் றஞ்சினானல்லன், ஆசாரியற்கு முனிவுண்டாம்படி யொழுகினேனே என்னறிவிருந்தபடி என்னையென் றஞ்சினானென்பார் வெருவுடன் என்றும், குருவின்கையாலிறத்தன் மிகமேலாய அறமென்பான் குருவுடன்பொருதுமடிதல் நன்று என்றான் என்றும், பரசுராமன் யுத்த சந்நத்தனாய்த் தேரிற் புகுதவே ஏவலாளரால் இவற்கும் ஒரு தேர் பண்ணுறுத்தப்பட்டு முன்வந்து நின்றதென்பார் அமைந்து நின்றதொரு தேர் என்றுங் கூறினார். (கசுக)

அவ்விராமனுமறுத்தமன்னவனுமையிரண்டுதினமிகலுடன்
வெவ்விராவுமொழியாதுவெஞ்சமர்விளைத்தகாலையடல்வீடுமன்
கைவிராயசிலையோடுமெய்வலிகவர்ந்துமுன்றளர்வுகண்டபோ
ரவ்விராமனிகரென்னுமாறிவனையஞ்சிநின்றெதிரடர்க்கவே.

இ - ள்.) அவ் இராமனும் மறுத்த மன்னவனும் - அந்தப் பரசுராமனும் (அவன் சொல்லை) மறுத்த வீடுமனும்—இகல் உடன் - வலியோடு—ஐயிரண்டு தினம் வெவ் இராவும் ஒழியாது வெம் சமர் விளைத்த காலை - பத்துநாள் ஆசையைத்தரும் இரவிலும் நீங்காது கொடிய யுத்தஞ் செய்தபொழுது—அடல் வீடுமன் - வீரத்தையுடைய வீடுமனானவன்—கை விராய சிலையோடு மெய்வலி கவர்ந்து முன் தளர்வு கண்ட போர் அவ் இராமன் நிகர் என்னுமாறு - (இவன் கையிலேந்திய வில்லினால் (இவனது) சரீரவலிமையைக் கவர்ந்து முன்னே தளர்வைச் செய்த போரையுடைய அந்தத் தசரதராமன் ஒப்பென்றுசொல்லும்படி—இவனை அஞ்சி நின்று எதிர் அடர்க்க - இப்பரசுராமனை (ஆசாரியன் என்னும் மரியாதையினால்) பயந்துநின்று எதிரேபொர. எ - று.

ஏ - அசை. இராவும் என்னும் உம்மை எச்சத்தோடு சிறப்புமாய் நின்றது. கவர்ந்து என்னுஞ் செய்தெனெச்சமும், அடர்க்க என்னுஞ் செயவெனெச்சமும் ஏதுப்பொருள. என்னுமாறு மாறீற்றுவினையெச்சம். இவனையென்னு மிரண்டனுருபு அச்சப்பொருட்டாய் அடர்க்க என்பதனோடு முடிந்தது. இடைவிடா

யுத்த விநோதர்க்கும் அதிலூக்க நிகழவொட்டாது காமவின்பத்திலேயே ஊக்க நிகழச்செய்யும் இரா என்பார் வெவ்விரா என்றும், வில்லைக் கையில் வாங்கி அத னிற்றொடுத்த பாணத்தால் அவன் சரீரவலியைக் கவர்ந்தான் என்பார் கைவிராய சிலையோடு என ஏதுப்பொருட்டாகிய ஒடுவுருபு கொடுத்துங் கூறினார். பகல் புண்ணியகாலம் எனவும் இராப் பாவகாலம் எனவும் நூல்களாலுதலால் வெவ் விரா என்றார் எனினுமமையும். சிலையோடு என்பதற்கு உடனிகழ்ச்சிப் பொரு ளாகப் பொருள்கூறினும் அமையும். (கசஉ)

ஓடிமீளமழுமேவுபாணிதனதூர்புகுந்தனனுவந்துபல்
கோடிபேரரசர்துதியெடுக்கநதிகுமரனுந்தன்னகர்குறுகினு
னாடிமாலையிடவந்தகாசிபதிநல்குமொல்குமிடைநவ்வியும்
வாடிவாடியினியமையுமென்றுதவவனமடைந்தனண்மடங்கியே.

(இ - ள்.) மழு மேவு பாணி மீள ஓடித் தனது ஊர் புகுந்தனன் - பரசுரா மன் பின் ஓடித் தன்னூரை அடைந்தான்—நதி குமரனும் உவந்து பல்கோடி பேர் அரசர் துதியெடுக்கத் தன் நகர் குறுகினன்-வீடுமனும் மகிழ்ந்து பலகோடி பெரிய அரசர்கள் வாழ்த்தத் தன்னகரைச் சேர்ந்தான்—மாலையிட வந்த காசிபதி நல்கும் ஒல்கும் இடை நவ்வியும் நாடி - (வீடுமனுக்கு) மாலையிடும்படி வந்த காசி ராசன்பெற்ற நுண்ணிய இடையையுடைய நோக்கத்தான் மான்போன்ற அம்பை என்பவளும் பார்த்து—வாடி வாடி இனி அமையும் என்று - சோர்ந்து சோர்ந்து (மணஞ்செய்தல்) இனிப் போதுமென்று—மடங்கித் தவ வனம் அடைந்தனள் - (முனைத்த அந்த எண்ணத்தில்) மடங்கித் தவஞ்செய்தற்குரிய காட்டை அடைந் தாள். எ - று.

ஏ - அசை. ஓடிப்புகுந்தா னென்றியையும். குமரனும் நவ்வியும் என்னு மும் மைகள் எச்சத்தோடு முறையே உயர்வுசிறப்பு மிழிவு சிறப்புமாயின. வாடி வாடி யென்னுமடுக்கு ஒருதொழில் பலகா னிகழ்தற்பொருட்டு. மடங்கி யென்னுஞ் செய்தெனெச்சம் ஏதுப்பொருட்டு. எடுக்க என்னுஞ் செயவெனெச்சம் இது நிகழாநிற்க இது நிகழ்ந்ததென்னும்பொருட்டு. நவ்வி - ஆகுபெயர். தன்னிடத் திற் றனுர்வேத முதலியனவற்றைக் கற்ற மாணவகனோடு அடாத காரியத்தைச் செய்க என்று கூறி அவன் அதனைமறுக்கப் போர்புரிந்து அவனஞ்சி நின்றடர்த் தழியும் முன்னிற்றலாற்றாது நாணால் விழுங்கப்பட்டு ஓடினன் என்பார் ஓடி யூர் புகுந்தனன் எனக் கூறினார். மடங்கி யென்பதற்கு மீண்டெனப் பொருள்கோடல் சிறப்பின்று. (கசஙு)

வெம்பையாடரவமாயவென்றிடுவிகங்கராசனெனவீடுமன்
றும்பையாடமரின்மாயவெல்லவலசூரனாகுவனியானெனு
வம்பைமோதுமுலைவம்பைவீசுகுழல்வம்பைமன்னுமெழில்வரிகொள்கூ
ரம்பைமானும்விழியம்பையென்பவளுமரியமாதவமியற்றினள்.

(இ - ள்.) வம்பை மோது முலை - கச்சை மோதும் முலையையும்—வம்பை வீசு குழல் - வாசனையை வீசும் அளகத்தையும்—வம்பை மன்னும் எழில் - புதுமையைப் பொருந்தும் அழகையும்—வரிகொள் கூர் அம்பை மானும் விழி - செவ்வரிபொருந்திய கூரிய அம்புபோன்ற கண்ணையும் உடைய—அம்பை என் பவளும் - அம்பை என்னும் பெண்ணும்—வெம்பை ஆடு அரவம் மாய வென் றிடு விகங்கராசன் என - கொடிய படத்தை விரித்தாடும் பாம்பு அழியும்படி

வெல்லுகின்ற கருடனைப்போல—தும்பை ஆடு அமரில் வீடுமன் மாய வெல்லவல சூரன் ஆகுவன் யான் என - தும்பைமாலையைச் சூடிச் செய்கின்ற போரில் வீடுமன் இறக்கும்படி வெற்றிகொள்ள வல்ல வீரனாகக்கடவேன் யான் என்று—அரிய மாதவம் இயற்றினள் - செய்தற்கரிய பெருந்தவத்தைச் செய்தாள் எ - று.

மாயவென்னுஞ் செயவெனெச்சங்கள் காரியப்பொருள. என்பவளுமென்னுமும்மை எச்சம். வம்பைமோதுமுலை வம்பை வீசுகுழல் வம்பைமன்னுமெழில் என்பன சொற்பின்வருநிலை. ஆகுவன் யானெனத் தவமியற்றினள் என்றியையும். கருடனைக் கண்டபொழுதே பாம்பு கெடுமாறுபோலப் போர் முனையிற் றன்னைக் கண்டவுடனே தன்றெழில் சிறிதுமின்றி வீடுமன் கெடும்படி வல்ல வீரனவேன் என்பாள் அரவமாயவென்றிடு விகங்கராசன் என என்றும், அதிரப்பொரும் பெரும்போர் என்பாள் தும்பையாடமர் என்றுங் கூறினள். "வெட்சி நிரைகவர்தன் மீட்டல் கரந்தையாம் - வட்கார்மேற் செல்வது வஞ்சியாமுட்கா - தெதிரூன்றல் காஞ்சி யெயில்காத்த னொச்சி - யதுவளைத்தலாகுமுழிஞை யதிரப் - பொருவதுதும்பையாம் போர்க்களத்து மிக்கோர் - செருவென்றதுவாகை யாம்" என்னுஞ் செய்யுளால் அதிரப்பொருதற்குச் சூடுவதுதும்பை யென்றறிக.

தாளிரண்டினிலொர்தாண்மடக்கியொருதாளில்வைத்தமை சமைத்தபொற், றோளிரண்டினையுமீதெடுத்துநனிதொழுதியக்கிதுணையடியிலே, வாளிரண்டனையவிழிமலர்த்திநிறைவாவிநீரினிடைவானுளோர்,நாளிரண்டதனொடையிரண்டுமொருநாளெனும்படிநடக்கவே.

(இ - ள். நிறை வாவி நீரினிடை - நிறைந்த தடாகத்தி லுள்ள நீரில்—இரண்டுதாளினில் ஒர் தாள் மடக்கி - இரண்டு கால்களுள் ஒருகாலை மடக்கி (ஒரு காலின்மேல் வைத்து)—அமை சமைத்த பொன் தோள் இரண்டினையும் மீது எடுத்து நனி தொழுது - மூங்கில்போலப் படைக்கப்பட்ட அழகிய தோள்கள் இரண்டையும் மேலே உயர்த்தி மிக அஞ்சலிசெய்து—இயக்கி துணை அடியிலே இரண்டு வாள் அனைய விழி மலர்த்தி - தருமதேவதையினுடைய இரு பர்தங்களிலுமே இரண்டு வாட்படைகளை யொத்த கண்களை விழித்து—வானுளோர் நாள் இரண்டொடு ஐயிரண்டும் - தேவர்களுடைய பன்னிரண்டு நாளாகிய பன்னிரண்டு வருடமும்—ஒரு நாள் எனும்படி நடக்க - ஒருநாட்போலக் கழிய. எ - று.

அது அன் என்பன சாரியைகள். ஏகார மிரண்டனுள் முன்னையதுதேற்றம். பின்னையது அசை. நடக்க என்னுஞ் செயவெனெச்சம் இது நிகழா நிற்க இது நிகழ்ந்ததென்னும் பொருட்டு. தோளிரண்டினையும் என்னுமும்மை முற்று. ஒடு எண். ஐயிரண்டும் என்னுமும்மை எண்ணோடு முற்றுமாய் நின்றது. பிரமன்படைத்தமைபற்றிச் சமைத்தவெனப் பிறவினையாற் கூறினர். துணையடியிலே விழி மலர்த்தி என்பது துணையடியைக் கருதி என்னும்பொருட்டு. அடியில் விழிமலர்த்தி என்பது நோக்கனோக்கம். தொடங்கிய அன்றுபோலப் பன்னிரு வருடங் காறுந் தவஞ்செய்தாள் எனவும், அவள் மனம் இயக்கி துணையடியிலே பதிந்தமையாற் பன்னிரு வருடங்களும் ஒருநாள்போலவே கழிர்தன எனவும் இரு பொருள்பட, நாளிரண்டதனொடையிரண்டுமொரு நாளெனும்படி நடக்கவென்று கூறினர். அமைசமைத்த என்பதற்கு மூங்கிலை வென்ற என்றலும் ஒன்று.

முயலிலாமதிமுகத்தினுளொருவர்முயலருந்தவமுயன்றபின்
புயலிலாதமினலொத்தமெய்யிலொளிபுரியியக்கிதனதருளினுன்
மயிலனுட்னதுவடிவகற்றியிகல்யாகசேனனதுவயினிடைச்,
செயலிலாறுமுகனிகரெனத்தகுசிகண்டியாயினள்சிறக்கவே.

(இ - ள்.) முயல் இலா மதி முகத்தினுள் - களங்கமில்லாத பூரணசந்திரன் போலும் முகத்தையுடைய அம்பையானவள் — ஒருவர் முயல் அரும் தவம் முயன்றபின் - உலகத்தில் ஒருவருஞ் செய்தற்கரிய தவத்தைச் செய்தபின்பு — புயல் இலாத மினல் ஒத்த மெய்யில் ஒளி புரி இயக்கி தனது அருளினால் - மேகத்திற் றோன்றாத மின்னல் உண்டாயின் அதனையொத்த சரீரத்தி லொளியைச் செய்கின்ற தரும தேவதையினுடைய அருளால் — மயில் அனுள் தனது வடிவு அகற்றி - (சாயலான்) மயிலையொத்த அவள் தன் வடிவத்தை நீக்கி — இகல் யாகசேனனது வயினிடை - வலிய யாகசேனனிடத்தில் — சிறக்க - (தன்னெண்ணம்) வாய்க்கும்படி — செயலில் ஆறுமுகன் நிகர் எனத் தகு சிகண்டி ஆயினள் - (வீரச்) செய்கையால் முருகக்கடவுள் நிகரென்று சொல்லத் தக்க சிகண்டியாய் அவதரித்தாள். எ - று.

ஏ - அசை. களங்கம் முயல்வடிவாகத் தோன்றலால் அதனை முயல் என்றது ஆகுபெயர். இலாதவென்னும் பெயரெச்சத் தீறுதொக்கது. முயலிலா மதிமுகம் புயலிலாத மினல் என்பன இல்பொருளுவமை, ஒருவர் என்பதில் முற்றோடு சிறப்புப் பொருடரும் உம்மை விகாரத்தாற் றொக்கது. சிறக்கவென்னுஞ் செயவெனெச்சங் காரியப்பொருட்டு. மயிலனுள் ஆயினளென்றும் மினலொத்த ஒளியென்றுங் கூட்டுக. மடக்கி, வைத்து, எடுத்து, தொழுது, மலர்த்தி, நடக்க, முயன்றபின் என வினைமுடிவுசெய்க. வயின் என்பது ஈண்டேழ னுருபன்று. வயிற்றில் எனப் பொருள்கொள்ளில் உபசாரமாக்குக. வடிவத்தா லொவ்வாச் சிகண்டி யென்பார் செயலிலாறுமுக னிகரெனத்தகு சிகண்டி என்றார். (கசசு)

மணிமுடிக்குரியநிருபனுங்கடிகொண்மாதர்தங்களைமகிழ்ச்சியா
லணிபெறத்தழுவியின்பவேலையினழுந்திநாள்பலகழிந்தபின்
பிணிகளுக்கரசெனும்பெரும்பிணிபிணித்துவாழ்வினிநணித்தெனப்
பணிமுடிப்புவியிரங்கவைகியொருபற்றிலாதநெறிபற்றினுன்.

(இ - ள்.) மணிமுடிக்கு உரிய நிருபனும் - இரத்தினங்க ளழுத்திய முடிக்குரிய விசித்திர வீரியனென்னும் அரசனும் — கடிகொள் மாதர் தங்களை மகிழ்ச்சியால் அணி பெறத் தழுவி - மணஞ்செய்த இருபெண்களையுஞ் சந்தோஷத்தோடு அழகுபொருந்தப் புணர்ந்து — இன்ப வேலையில் அழுந்தி - இன்பக்கடலுள் அமிழ்ந்த — நாள் பல கழிந்த பின் - (அதனுல்) நாள்கள் பல கழிந்தபின்பு — பிணிகளுக்கு அரசு எனும் பெரும் பிணி பிணித்து - நோய்களுக்கெல்லாந் தலையாயதென்று சொல்லப்படும் பெருவியாதியாற் பிணிக்கப்பட்டு — இனி வாழ்வு நணித்து எனப் பணிமுடிப் புவி இரங்க வைகி - இனி இவனுக்கு வாழ்நாட் சுருங்கியதென்று சேடனுடைய முடியிற்பொருந்திய பூமியிலுள்ளோர் இரங்கும்படி சிலநாள் இருந்து — ஒரு பற்று இலாத நெறி பற்றினுன் - ஒருபற்றுமற்ற பதவியை அடைந்தான். எ - று.

முத்திலைய அடைந்தான் என்பது கருத்து. பிணித்து என்பது செயப்பாட்டு வினை யுணர்த்தும் படுவிகுதி தொக்கு நின்றது. ஏதுப்பொருட்கண் வந்த அழுந்தி என்னுஞ் செய்தெனெச்சம் செயவெனெச்சமாகத் திரிக்கப்பட்டது· இனிச் செய்தெனெச்சமாயே நின்று "வினையெஞ்சு கிளவியும்" என்னுஞ் சூத்திரவிதிப்படி கழிந்தபின் என்னும் பிறகருத்தாவின் வினை கொண்டதென்றலும் ஒன்று. நணித்தென என்னுஞ் செயவெனெச்சம் ஏதுப்பொருட்டு. ஒரு பற்றிலாதநெறி பற்றினன் என்பது உபசாரம். தன்குடைக்கீழ் வாழ்வார்க்கு நீதியாகிய நிழலைச் செய்து உவப்பித்தமையினால் இவனிறந்துழி யாம் இவனையொத்த ஓரரசனை என்றுபெறுவேங் கொல்லோ என்றிரங்க இறந்தான் என்பார் வாழ்வினி நணித்தெனப் பணிமுடிப் புவியிரங்க என்றார். (கசஎ)

ஆ செய்யுள் - சஎஅ.

குருகுலச்சருக்க முற்றிற்று.

---

# சம்பவச்சருக்கம்.

அரியகங்குலினன்னை தன்வடிவுகொண்டலகையாகியநங்கை
பரிவுபொங்கவந்தெடுத்தணைத்துவந்துளம்பரிந்துடன்பாராட்ட
வுருகுமாமுலைப்பாலுடனவளுயிருண்டழுமுருகார்மெய்
கரியகோவலன்செய்யதாண்மலர்களென்கருத்தைவிட்டகலாவே.

(இ - ள்.) அலகை ஆகிய நங்கை - (பூதனையென்னும்) பேயாகிய பெண்— அரிய கங்குலின் அன்னைதன் வடிவுகொண்டு - அரிய இராக்காலத்திலே தாயினுடைய வடிவைப்பொருந்தி—உடன் பரிவு பொங்க வந்து எடுத்து அணைத்து - உடனே இன்பம் மிக வந்து தூக்கி அணைத்து—உளம் உவந்து பரிந்து பாராட்ட - மனம் மகிழ்ந்து உருகிப் பாராட்ட—அவள் உருகும் மாமுலைப் பாலுடன் உயிர் உண்டு அழும் - அவளுடைய மனங் கசிதலால் வரும் பெரிய முலைப்பாலோடு உயிரையும் உண்டு அழுத—முருகு ஆர் மெய் கரிய கோவலன் செய்ய தாள் மலர்கள் - இளமைபொருந்திய திருமேனி கரிய கிருட்டிணருடைய சிவந்த பாதங்களாகிய தாமரைமலர்கள்—என் கருத்தை விட்டு அகலா - அடியேனுடைய மனத்தைவிட்டு நீங்கா. எ - று.

ஏ - அசை. உருகும்பாலெனக் காரியங்காரணமாக உபசரிக்கப்பட்டது. பானாள் இரவு என்பார் அரிய கங்குல் என்றும், கிருட்டிணராகிய சிசுவின் அழகிற்கியைந்த வடிவங்கொண்டு சென்றமையால் அசோதை முதலியோர் இச்சிசுவைப்பெற்றதாய் இவளென்று மெய்யாகக் கருதும்படி பூதனைசென்றாள் என்பார் அன்னை தன் வடிவுகொண்டென்றும், அங்ஙனங் கருதினமையின் அவர்களால் ஓர்தடை நிகழாவண்ணம் உடனே சிசுவை எடுத்து முலைகொடுத்தாள் என்பார் உடன் என்றும், பாலுண்ணும் வாயிலாக உயிரையுமுண்டான் என்பார் முலைப்பாலுட னவளுயிருண்டென்றுங் கூறினார். முருகார்மெய்யவள் என இயைத்து கிருட்டிணரைத் தூக்கி மடியில் வைத்து முலைகொடுத்த விசேடத்தாற் புழுகு கஸ்தூரி சந்தன முதலியவற்றின் மணங்கமழும் உடம்பினை யுடையவள் எனக் கதைக்கியையப் பொருள்கோடலு மொன்று. (க)

இறந்தமைந்தனுக்குரியதென்புலத்தவர்யாவருங்களிகூரச்
சிறந்தநான்மறைவிதியினுலகியல்செய்தபின்செழுந்திங்கண்
மறைந்தயாமினிநிகரெனக்குருகுலமன்மயக்குறுமெல்லை
யறந்தவாவகைதுறந்தவாளரசனுக்கன்னைமற்றிதுசொன்னாள்.

(இ - ள்.) குருகுல மன் - குருகுல அரசனாகிய வீடுமன்—இறந்த மைந்தனுக்கு - இறந்த விசித்திர வீரியனுக்கு—தென்புலத்தவர் யாவரும் களி கூர - பிதிரர்களனைவரும் மகிழ்ச்சிமிக—சிறந்த நான் மறை விதியினால் - சிறந்த நான்கு வேதத்தில் விதிக்கப்பட்ட விதியினால்—உரிய உலகியல் செய்த பின் - உரிமையாகிய அபரக்கிரியைகளைச் செய்தபின்பு—செழும் திங்கள் மறைந்த யாமினி நிகர் என மயக்குறும் எல்லை - செழுமையாகிய சந்திரன் மறைந்த இராக்காலம்போல (அரசாளுதற்குரிய புத்திரரின்மையால் அவன்) மயக்கத்தைப் பொருந்தும்பொழுது—அறம் தவாவகை துறந்த வாள் அரசனுக்கு - தருமந் தவறாவண்ணந் துறவியான வாளையுடைய அவ்வீடுமனுக்கு—அன்னை இது சொன்னாள் - தாயாகிய பரிமளகந்தியானவள் இதனைச் சொன்னாள். எ - று.

மற்று - அசை. தவாவகை வகையீற்று வினையெச்சம். அபரக்கிரியை வருணந்தோறும் வேறுபாடுடைமையின் அரசசாதிக்குரிய கிரியை என்பார் உரிய உலகியல் என்றும், நான்மறைவிதியோடு செயப்படாத அபரக்கிரியைகள் பிதிரர்களால் உவர்க்கப்படும் என்பார் தென்புலத்தவர் யாவருங் களிகூரச் சிறந்த நான் மறைவிதியினால் என்றும், அபரக்கிரியை முதலியவற்றோடு வேத விதிக்கு விரோதமின்றி உயர்ந்தோரால் அநுசரிக்கப்பட்ட கிரியைகளும் ஆளப்பட்டு வருதலின் பிதிர்க்கடன் எள்ளாது உலகியல் என்றும், தான் மேற்கொண்ட விரதத்தின் றவறாமை பேரறமாகலின் அதனினின்றுந் தவறாது இல்லறத்தைத் துறந்தான் என்பார் அறந்தவாவகை துறந்த என்றுங் கூறினார். யாமினி நிகரெனக் குருகுலம் மயங்கிற்றெனினு மமையும். உரிய தென்புலத்தவரெனக் கோடல் பொருத்தமின்று. (உ)

மைந்தகேட்டிநின்றுணைவன்வானடைந்தபின்மதிமுதலெனத்தக்க
விந்தமாமரபரும்பனிப்பகைச்சிரத்தெழிலியொத்ததுமன்னோ
முந்தைநான்மறைமுதலியநூல்களின்முறைமைநீயுணர்கிற்றி
யெந்தநீர்மையினுய்வதென்றறிகிலேனிடரினுக்கிருப்பானேன்.

(இ - ள்.) மைந்த கேட்டி - மகனே கேள்—நின் துணைவன் வான் அடைந்த பின் - உன் தம்பி சுவர்க்கத்தை அடைந்தபின்பு—மதி முதல் எனத் தக்க இந்த மா மரபு - சந்திரனை முதலென்று சொல்லுதலாற் றகுதியைப்பெற்ற இந்தப் பெரிய வம்மிசம்—அரும் பனிப்பகைச் சிரத்து எழிலி ஒத்தது - (அரசாளுதற்குரிய புத்திரரின்மையால்) அரிய சூரியனுக்குமேலுள்ள முகிலைப் போன்றது—முந்தை நான்மறை முதலிய நூல்களின் முறைமை நீ உணர்கிற்றி - பழைய நான்குவேதங்கள் முதலிய நூல்களின் விதியை நீ அறியவில்லை—இடரினுக்கு இருப்பு ஆனேன் - துக்கத்துக்கு இருப்பிடமாகிய நான்—உய்வது எந்த நீர்மையின் என்று அறிகிலேன் - (இந்தவம்மிசம்) உய்வது எத்தன்மையினால் என்று அறியேன். எ - று.

மன், ஓ அசைகள். எனஎன்னுஞ் செயவெனெச்சங் காரணப்பொருட்டு. இருப்பானேன் என்பது வினையாலணையும் பெயர். ஒளியைச்செய்யுஞ் சூரியனை முகில்தோன்ற விடாமல் மறைத்தவாறுபோல, இக்குலம் புகழைச்செய்யும் புதல்

வரைத் தோன்றவிடாமல் மறைத்ததென்பது கருத்து. இனி, எழிலிச் சிரத்தரும் பனிப்பகையொத்தது என்றியைத்து, இம்மரபு புதல்வரின்மையால் ஒளிமழுங்கி முகிலால் மறைக்கப்பட்ட சூரியனை யொத்தது எனப் பொருள்கோடலு மொன்று. வேதங்களின் விதியையும் மிருதிகளின் விதியையும் உள்ளபடி அறிந்தும் உன் கொழுந்தியரைப் புணர்ந்து புத்திரரைப் பிறப்பியாது வாளாவிருக்கின்றனையே என்பதைக் குறிப்பால் உணர்த்துவாள் மறைமுதலிய நூல்களின்முறைமை நீ யுணர்கிற்றி என்றும், அங்ஙனம் இருப்பிற் புதல்வர்ப்பேறுவேறொருவழியாலுங் கைகூடாதென்பாள் எந்த நீர்மையினுய்வதென்றறிகிலேன் என்றுங் கூறினாள்.

ஈண்டுதேவரநீதியிற்கொழுந்தியரெழின்மகப்பெறநின்னால்
வேண்டுமாலிதுதாயர்சொற்புரிதலின்விரதமுங்கெடாதென்ன
மூண்டுவானுருமெறிந்தபேரரவெனமுரிந்திருசெவிபொத்தி
மீண்டுமாநதிவயின்மிசைப்புரியினென்விரதமுந்தபுமென்றான்.

(இ - ள்.) ஈண்டு தேவர நீதியில் - (உலகத்தில்) மிக வழங்கிவருகின்ற கணவனுடன் பிறந்தானுக்குரிய ஒழுங்கினால்— நின்னால் கொழுந்தியர் எழில் மகப்பெற இது வேண்டும் - மகனே உன்னால் உன்கொழுந்தியர் அழகிய புதல்வரைப் பெறும்படி இஃதொன்றையுஞ் (செய்தல்) வேண்டும்—தாயர் சொற்புரிதலின் விரதமும் கெடாது என்ன - தாயர்சொல்லைக் கைக்கொண்டு செய்தலினால் விரதமுந்தவறாது என்று பரிமளகந்தி சொல்ல—வான் உரும் மூண்டு எறிந்த பேர் அரவு என முரிந்து - முகிலிலுண்டாகிய இடியேறு கிளர்ந்து தாக்கிய பெரிய பாம்புபோல அவன் நிலைகுலைந்து—இரு செவி பொத்தி - இரண்டுகாதுகளையும் பொத்தி—மீண்டும் மா நதி வயின்மிசைப் புரியின் - (நான்) திரும்பவும் பெரிய கங்கையின்வயிற்றில் அவதரிக்கில்—என் விரதமும் தபும் என்றான் - என்னுடைய விரதமுந் தவறும் என்றான். எ - று.

ஆல் - அசை. விரதமும் என்னும் உம்மை எச்சத்தோடு சிறப்பு. விரதமுந் தபும் என்பதுமது. மீண்டும் என்னும் உம்மை எச்சம். ஈண்டு நீதி என இயையும். முற்செய்யுளிற் குறிப்பாற்கூற அதற்கவன் முகங்கொடாமைகண்டு நின்றாற் கொழுந்தியர் எழின்மகப்பெறவேண்டும் என வெளிப்படையாகக்கூறினாள். புரியின் எனவே புரியாமைபெறப்பட்டது. தேவரன் - கணவனுடன் பிறந்தான். (ச)

மழுவெனும்படையிராமனான்மனுகுலமடிந்துழியவர்தத்தம், பழுதின்மங்கையர்முனிவரரருளினாற்பயந்தனர்மகவென்ப, ரெழுதுநன்னெறிமுறைமையின்விளைப்பதேயியற்கையென்றிருகையாற், றொழுதுசொன்னபின்மனந்தெளிந்தன்னையுந்தோன்றலுக்குரைசெய்வாள்.

, (இ - ள்.) மழு எனும் படை இராமனால் மனுகுலம் மடிந்துழி - பரசுராமனாற் சூரியகுலம் அழிந்தபொழுது—அவர் தத்தம் பழுது இல் மங்கையர் - இறந்த அந்த அந்த அரசர்களுடைய குற்றமில்லாத மனைவியர்கள்—முனிவரர் அருளினால் மகப் பயந்தனர் என்பர் - இருடிகளினுடைய அருளினாலே பிள்ளைகளைப் பெற்றார்கள் என்று பெரியோர் சொல்வர் (அதனால் நாமும் அவ்வாறே)—எழுது நல் நெறி முறைமையின் விளைப்பதே இயற்கை என்று - எழுதப்பட்ட நல்ல நூல்களிற் சொல்லியவிதியினாற்செய்வதே இயல்பென்று—இருகையால் தொழுது சொன்ன பின் - இருகையாலும் அஞ்சலிசெய்து (வீடுமன்) சொன்னபின்பு

அன்னையும் மனம் தெளிந்து தோன்றலுக்கு உரைசெய்வாள் - தாயாகிய பரிமளகந்தியும் மனந்தெளிந்து அவனுக்குச்சொல்லுவாள். எ - று.

அன்னையும் என்னும் உம்மை எச்சம். ஏகாரம் - தேற்றம். நெறி - ஆகுபெயர். தத்தம் மங்கையர் என்புழித்தொக்குநின்ற ஆறும்வேற்றுமை நினதடியார் என்புழிப்போல உரிமைப்பொருட்கண்வந்தது. தம் நாயகரையன்றிப் பிறரைப்புணர்தல் கற்பிற்குவழுவாயினும், காமவின்பங்கருதாது புதல்வர்ப்பேறுகருதி நூல்விதிப்படியே முனிவரைப்புணர்ந்தமையின் வழுவிலர் என்பான் பழுதின்மங்கையர் என்ருன். உன் கொழுந்தியரைச் சேர்ந்து புதல்வரைப்பெறுக எனத் தாய் பணித்த மொழியை மறுத்தமையின் அவட்குண்டாகிய வருத்தந்தீரும்வண்ணம் பரிந்து கூறினன் என்பார் இருகையாற்ருெழுது என்று கூறினர். (ரு)

பரிதிதந்தமாநதிமருங்கொருபகற்பராசரன்மகப்பேறு
கருதிவந்துகண்டென்னையுமெனதுமெய்க்கமழ்புலவையுமாற்றிச்
சுருதிவாய்மையின்யோசனைப்பரப்பெழுசுகந்தமுமெனக்கீந்து
வருதிநீயெனப்பனியினன்மறைத்தொருவண்டுறைக்குறைசேர்ந்தான்.

(இ - ள்.) பராசரன் மகப்பேறு கருதி - பராசரமுனிவன் புதல்வற்பேற்றை எண்ணி—ஒருபகல் பரிதி தந்த மா நதி மருங்கு வந்து கண்டு - ஒருநாள் சூரியன்பெற்ற பெரிய காளிந்திநதிக்கரையில் வந்து என்னைக் கண்டு—என்னையும் எனது மெய்க் கமழ் புலவையும் மாற்றி - என்னெண்ணத்தையும் எனது சரீரத்திற் கமழுகின்ற புலான்மணத்தையும் நீக்கி—சுருதி வாய்மையின் யோசனைப் பரப்பு எழு சுகந்தமும் எனக்கு ஈந்து - வேதம்போலத் தவருத தன்வாக்கினல் ஒரு யோசனைதூரங் கமழுகின்ற பரிமளத்தையும் எனக்குத்தந்து—நீ வருதி எனப் பனியினல் மறைத்து - நீ வருகுதியென்று என்னை அழைத்துச் (சூரியனைப்) பனியினல் மறைத்துப் (பகலை இரவுபோலாக்கி)—ஒரு வண்துறைக் குறை சேர்ந்தான் - ஒரு அழகிய ஆற்றிடைக்குறையில் என்னைப் புணர்ந்தான். எ - று.

என்னையும் என்பதும் புலால் என்பதும் ஆகுபெயர்கள். சுகந்தமும் என்னும் உம்மை எச்சத்தோடு சிறப்பு. சுருதிவாய்மை உவமைத்தொகை- பராசரமுனிவர் உலகத்திற்கு நன்மையைச்செய்யும் ஒரு புதல்வனைத் தோற்றுவித்தற்குத் தாங்குறித்திருந்த சுபமுகூர்த்தஞ்சமீபித்தமையால் நதிக்கப்பாற் செல்லாது என்னிடத்தே வந்தார் என்பாள் மகப்பேறுகருதிவந்து என்றும், விபூதியைத் தூவிச் சூரியனைப் பனியினலேமறைத்துப் பகலை இரவுபோலாக்கிக்கொண்டார் என்பாள் பனியினன் மறைத்து என்றுங்கூறினள். என்னெண்ணம் என்றது கன்னியர்க்குரிய ஒழுக்கத்தினின்றுந் தவறலாகாதென்னுங்கருத்தை. மா நதி கரிய நதி எனினுமமையும். (சு)

முரணிறைந்தமெய்க்கேள்வியோனருளினன்முஞ்சியும்புரிநூலு
மிரணியஞ்செழுங்கொழுந்துவிட்டனவெனவிலங்குவேணியுந்தானுந்
தரணியெங்கணும்வியாதனென்றுரைகெழுதபோதனமுனியப்போ
தரணியின்புறத்தனலெனவென்வயினவதரித்தனனம்மா.

(இ - ள்.) அப்போது - சேர்ந்த அப்பொழுது—முரண் நிறைந்த மெய்க் கேள்வியோன் அருளினல் - வலிமை நிறைந்த மெய்ம்மை யாகிய கல்வியையுடைய பராசரமுனிவனது அருளினல்—முஞ்சியும் புரி நூலும் - முஞ்சிப்புல்

லாலாகிய கயிறும் முப்புரிநூலும்—இரணியம் செழும் கொழுந்து விட்டன என இலங்கு வேணியும் தானும் - பொன் செழுமையாகிய கொழுந்தைவிட்டன என் றுசொல்ல விளங்குகின்ற சடையுந் தானுமாய்—தரணி எங்கணும் வியாதன் என் றுஉரை செழு தபோதன முனி - பூமியெங்கும் வியாதன் என்று பெயர்விளங் குந் தவச்செல்வனாகிய முனிவன்—அரணியின் புறத்து அனல் என என் வயின் அவதரித்தனன் - கடைகோலினின்றும் புறத்திலே வெளிப்படுகின்ற அக்கினி போல என்னிடத்தி லவதரித்தான். எ - று.

அம்மா - அசை. முஞ்சி - ஆகுபெயர். அரணியின் என்பதில் இன்னுருபு நீக்கப்பொருட்டு. புறத்தனல் ஏழாம்வேற்றுமைத்தொகை. முரணிறந்த எனப் பாடமோதி மாறுபாடற்ற எனப் பொருள்கொள்ளுதலுமுண்டு. தபோதன முனி என்பது வடநூன்முடிபு. நிறைந்த என்னும் பெயரெச்சங் கேள்வியோன் என் னும் பெயரின் விகுதியோடு முடிந்தது. மனத்தைப் பொறிவழிபோசாதடக்கு மாற்றலுடையன் என்பாள் முரணிறைந்தமெய்க்கேள்வியோன் என்றும், எளிய என்னிடத்தில் உயர்ந்தமுனி அவதரித்தான் என்பதும் புணர்ந்த அப்பொழுதே தோன்றினன் என்பதும் போதர அரணியின் புறத்தனலென என்றுங் கூறினள். முரணிறைந்தகேள்வியெனினும் அமையும். முஞ்சியென்பது எழுவகைத்தருப் பையுளொன்று. (எ)

சென்னியாலெனைவணங்கியாதொருபகற்சிந்திநீசிந்திக்கு
முன்னியானருகுறுவலென்றுரைசெயமுனிமகன்முனிமீளக்
கன்னியாகெனவிதித்துடன்கரந்தனன்கையறுகனிட்டன்றன்
பன்னியானவரிடத்தினிலவன்வரிற்பலித்திடுநினைவன்றே.

(இ - ள்.) முனி மகன் - (அவதரித்த) வியாதமுனிவன்—சென்னியால் எனைவணங்கி - தலையால் என்னை வணங்கி—நீ யாதொருபகல் சிந்தி - நீஎன்னை எந்தச்சமயத்திலாயினும் நினை—சிந்திக்கும் முன் யான் அருகு உறுவல் என்று உரைசெய - அப்படி நினைக்குமுன் நான் உன் சமீபத்தில் வருவேன் என்று என க்குச் சொல்ல—முனி மீளக் கன்னி ஆக என விதித்து உடன் கரந்தனன் - பரா சரமுனிவன் திரும்பக் கன்னிகையாகக்கடவையென்று எனக்கருள்செய்து புதல் வனோடு மறைந்தான்—கையறு கனிட்டன் பன்னியானவரிடத்தினில் அவன் வரில் - இறந்த உன்தம்பியாகிய விசித்திரவீரியனுடைய மனைவியரிடத்தில் அந்த வியாதமுனிவன் வந்தால்-நினைவு பலித்திடும் - (நம்முடைய) எண்ணம் சித்திக் கும். எ - று.

அன்று, ஏ அசைகள். தன்சாரியை. சிந்திக்குமுன் என்னும் இறந்தகாலம்ப ற்றிவந்த முன்னீற்றுவினையெச்சம் உறுவல் என்னுந் தன்மையொருமை வினை முற்றுக்கொண்டது. முனிமகனுரைசெய முனிவிதித்துக்கரந்தனன் எனமுடிக்க. ஆக என்னும் வியங்கோளீறுதொக்கது. (அ)

எனக்குமைந்தகேணினைவிதுன்றுணைவனென்னேவலுமருனிவ்வா
றுனக்குநெஞ்சுறவருங்கொலோவறிகிலேனுண்மைநீயுரையென்ன
மனக்கிசைந்ததென்றவன்வியந்தேகலும்வழுவற்மனஞ்செய்யக்
கனக்கருங்குழன்மகிழ்வுறமுதற்பெறுகாதன்மைந்தனும்வந்தான்.

(இ - ள்.) மைந்த கேள் எனக்கு நினைவு இது - புதல்வனேகேள் எனக்கு எண்ணம் இது—உன் துணைவன் என் ஏவலும் மருன் - உன் தமையனாகிய

வியாதமுனிவன் என்னுடைய ஏவலையும் மறுக்கமாட்டான்—இவ்வாறு உனக்கு நெஞ்சுற வருங்கொலோ அறிகிலேன் - இத்தன்மை உனக்குப் பிரியமோ அதை யான் அறியேன்—நீ உண்மை உரை என்ன - நீ உண்மையைச்சொல்லெ ன்று பரிமளகந்திசொல்ல—அவன் மனக்கு இசைந்தது என்று வியந்து ஏகலும் - அந்த வீடுமன் இது என்மனத்திற்கியைந்ததென்று (தாயைப்) புகழ்ந்து செல்ல - வழு அற மனஞ் செய் அக்கனக் கருங்குழல் மகிழ்வுற - தவறறத் (தன்னை) நினை த்த அந்த மேகம்போன்ற கரியகூந்தலையுடைய பரிமளகந்தி மகிழும்படி—முதற் பெறு காதல் மைந்தனும் வந்தான் - முன்பெற்ற விருப்பையுடைய புத்திரனாகிய வியாசமுனிவனும் வந்தான். எ - று.

ஏவலும் என்னும் உம்மை சிறப்பு. மைந்தனும் என்னும் உம்மைசிறப்போ டெச்சம். கொல் - அசை. மனக்கு என்பது அத்துச்சாரியை கெட்டு நின்றது. ஏகலும் உம்மீற்றுவினையெச்சம். கனக்கருங்குழல் உவமைத்தொகைப்புறத்துப்பி றந்த அன்மொழித்தொகை. மனஞ்செய்யவந்தான் என முடிப்பினும் அமை யும். நெஞ்சுறவரல் ஒருசொல். முன்னே வீடுமன் முனிவராற் புதல்வற்பேற்றை யடையலாம் எனக் கூறினனாகவும், உனக்கு நெஞ்சுறவருங்கொலோ வறிகிலே னுண்மைநீயுரை என்று பரிமளகந்திவினவியதென்னையெனின், நாயகனுக்குப்பின் தனக்கு அதிகாரியாயிருப்பான் வீடுமனாதலாலும் தன்மதிநுண்ணறிவுடையோர் நூலொடுபழகினும் பேதைமையையுடைய பெண்மதியாதலாலும் இக்கருத்தையும் அவனிடத்தில் வினவினளென்க. (கூ)

தொழுதுநெற்றியில்விபூதியாலன்னை தன்றுணையடித்துகணீக்கி
விழுதுடைத்தனியாலெனவிருந்ததொல்வியாதனைமுகநோக்கிப்
பழுதுபட்டதிக்குருகுலமீளநின்பார்வையாற்கடன்ஞால
முழுதுமுய்த்திடுமகவருளெனப்பெருமுனியுமக்குறைநேர்ந்தான்.

(இ - ள்.) தொழுது - (வந்து) வணங்கி—நெற்றியில் விபூதியால் அன்னை தன் துணை அடித்துகள் நீக்கி - தன் நெற்றியில் விளங்கும் விபூதியினால் தாயி னுடைய இருகால்களிலுமுள்ள புழுதியை நீக்கி [காலில் நெற்றி பொருந்தவண ங்கி என்றபடி]—விழுது உடைத் தனி ஆல் என இருந்த தொல் வியாதனைமுகம் நோக்கி - (சடைகள் தொங்குதலால்) விழுதுகளையுடைய ஒரு ஆலமரம்போல இருந்த பழைய வியாதமுனிவனை முகத்தைப்பார்த்து—இக் குருகுலம் பழுது பட் டது - இந்தக் குருகுலம் (புதல்வர்ப்பேறின்மையாற்) பழுதடைந்தது—மீள நின் பார்வையால் கடல் ஞாலம் முழுதும் உய்த்திடும் மகவு அருள் என - (அப்பழுது) நீங்க உனது அருளுணக்காற் கடல்சூழ்ந்த பூமி முழுதையும் ஆளும்புதல்வனை நீ தருக என்று சொல்ல—பெருமுனியும் அக்குறைநேர்ந்தான் - பெரிய வியாச முனிவனும் அக்குறையை நீக்க உடன்பட்டான். எ - று.

முனியும் என்னும் உம்மை எச்சத்தோடு சிறப்பு. மீள என்னுஞ்செயவெ னெச்சங் காரியப்பொருட்டு. வியாதனைமுகத்தைநோக்கி என்பது பசுவினைப்பா லைக்கறந்தான் என்பதுபோல நின்றது. குறைநேர்ந்தான் என்பது குறையைநீக்க நேர்ந்தான் என நீக்க என்னுஞ் சொற்பெய்து பொருளுரைக்கப்பட்டது; இடுக்க ண்காத்தகழல்வேந்தை" என்பதுபோல. (க0)

அழைத்தமாமகனப்பொழுதவருழையணுகுவமெனப்போகத்
தழைத்தநெஞ்சினளனந்தரமிழந்தபொற்றாலிமாதரைத்தேற்றி
யுழைத்ததுன்பமுமுன்னுளோர்பலருலகியற்கையுமுறக்காட்டி
யிழைத்தபாவையினிருந்தவர்க்கந்நினைவிசையுமாறிசைவித்தாள்.

(இ - ள்.) அழைத்த மாமகன் - அழைக்கப்பட்ட பெரிய புதல்வனாகிய வியாத முனிவன்—அப்பொழுது அவருழை அணுகுவம் எனப் போக - அச்சமயத்தில் அம்பிகை அம்பாலிகை என்னும் அப்பெண்களிடத்திற் போவோம் என்றுசொல் லிப் போக—தழைத்த நெஞ்சினள் - (இனிப் புதல்வர்ப் பேறுண்டென்று) களி த்த மனத்தையுடைய பரிமளகந்தியானவள்—அனந்தரம் - அதன் பின்—இழந்த பொன் தாலி மாதரைத் தேற்றி - நீங்கிய பொன்னாலாகிய மங்கலியத்தையுடைய அவ்விருவரையும் தெளிவித்து—உழைத்த துன்பமும் - (புதல்வர்ப் பேறின்மை யாற்றாம்) அடைந்த துன்பத்தையும்—முன் உளோர் பலர் உலகியற்கையும் - (அமங்கலிகளாயிருந்தும் புதல்வர்ப் பேற்றின் பொருட்டு) முன்னுள்ள பலபெண் கள் செய்த உலகவழக்கத்தையும்—இழைத்த பாவையின் இருந்தவர்க்கு உறக் காட்டி - (கைவல்லோன்) சித்திரித்த பாவையைப்போல இருந்த அவர்க்கு மிக எடுத்துக்காட்டி—அந்நினைவு இசையுமாறு இசைவித்தாள் - அந்நினைவிற்கு உடம் படுமாறு உடம்படுத்தினாள். எ - று.

அழைத்த என்னும் பெயரெச்சம் மகன்என்னுஞ் செயப்படுபொருட் பெயர் கொண்டது. இசையுமாறென்பது மாறீற்றுவினையெச்சம். போக என்னுஞ் செயவெனெச்சமும் காட்டி என்னுஞ்செய்தெனெச்சமும் எதுப்பொருள. நெஞ் சினள் குறிப்பு வினையாலணையும்பெயர். பாவையின் என்னும் இன்னுருபு உவ மப்பொருட்டு. தேற்றிக்காட்டி இசையுமாறிசைவித்தாள் எனமுடிக்க. இழந்த பொற்றாலிமாதர் என்றது "இலாதவெண்கோவணத்தான்" என்பதுபோலநின் றது. பாவை தான் அழியுமளவும் ஒரேநோக்கமா யிருக்குமாறுபோல இவரும் தாபதநிலையராய்த் தம் நாயகனொருவனை நோக்கியபடியே யிருந்தார் என்பார் இழைத்தபாவையி னிருந்தவர்க்கென்றார். (கக)

கனையுநீடிருளணைமிசையிருவருங்கணவனைமறவாது
நினையுநெஞ்சினர்பயின்றுழிப்புன்மணநிறைந்தொளிகுறைந்தொல்கப்
புனையுமெய்யொடும்பொழுதொடும்புரிதவன்போதலுமிகவஞ்சி
யனையகாலையிலம்பிகைமலர்ந்திலளம்பகமொருக்காலும்.

(இ - ள்.) கனையும் நீடு இருள் - நெருங்கும் மிக்க இருட்காலத்தில்—இரு வரும் கணவனை மறவாது நினையும் நெஞ்சினர் அணைமிசைப் பயின்றுழி - அம் பிகை அம்பாலிகை என்னும் இருவரும் தங்கள் நாயகனாகிய விசித்திர வீரியனை மறவாமற் சிந்திக்கும் மனத்தையுடையராய்ச் சயனத்திற் பொருந்தும்பொழுது— புரிதவன் - செய்கின்ற தவத்தையுடைய வியாதமுனிவன்—புல் மணம் நிறைந்து ஒளி குறைந்து ஒல்கப் புனையும் மெய்யொடும் பொழுதொடும் போதலும் - தூர்க் கந்தம் நிறைந்து ஒளி குறைந்து சுருங்கத் (தவக்கோலம்) பொருந்தும் சரீரத் தோடும் காலத்தோடும் போசவும்—அனைய காலையில் அம்பிகை மிக அஞ்சி - அப்பொழுதில் அம்பிகை மிகப் பயந்து—ஒருக்காலும் அம்பகம் மலர்ந்திலள் - சிறிதேனுங் கண்ணைத்திறந்திலள். எ - று.

போதலும் உம்மீற்று வினையெச்சம். நெஞ்சினர் வினைக்குறிப்பெச்சமுற்று. ஒல்கவென்னுஞ் செயவெனெச்சங் காரியப்பொருட்டு. ஏருக்காலும் என்னும் உம்மை முற்று. அஞ்சி என்னுஞ் செய்தெனெச்சம் எதுப்பொருட்டு. பொழுதொடும்போதலும் என்பது பொழுது நிகழா நிற்கப்போதலும் என்பொருடரு தலின், ஒடுவுருபு "தொடியொடு தொல்கவின் வாடியதோள்" என்பதுபோல வேறுவினை யுடனிகழ்ச்சிக்கண்வந்தது. புதல்வர்ப்பேற்றின் பொருட்டுப் பிறரோடு புணர்வுழித் தங்கணவனோடு புணர்வதாகப் பாவித்து அவனை நெஞ்சில்வையாதொழியிற் பிறபுருடரைப் புணர்ந்த பாவமுண்டென்பது நூற்றுணிபாதலாற் கணவனை மறவாதிருந்தார் என்பார் கணவனை மறவாது நினையு நெஞ்சினர் என்றும், மரவுரி மான்றோன் முதலியவற்றை அணிதலானும் உண்டி முதலியவற்றை வெறுத்தலானும் சுகந்தத்தோ டொளிகுறைந்து சுருங்கிய மெய்யென்பார் புன்மணநிறைந்தொளி குறைந்தொல்கப் புனையுமெய் யென்றும், இரவாயினும் புணர்ச்சிக்குரிய காலமல்லாத முற்பொழுதென்பார் பொழுதொடு மென்றுங் கூறினார். (கஉ)

பராசரன் றருமுனி நினைவொடுகருப்பதித்துமீளவுஞ்சென்று
நிராசைநெஞ்சினனவசரத்தவளிடைநிகழ்ந்தமெய்க்குறி தன்னாற்
கராசலம்பதினாயிரம்பெறுவலிக்காயமொன்றினிற்பொற்றோ
ளிராசகுஞ்சரம்பிறந்திடும்விழிப்புலனில்லைமற்றதற்கென்றான்.

(இ - ள்.) பராசரன் தரும் முனி - வியாதமுனிவன்— நிராசை நெஞ்சினன் நினைவொடு கருப் பதித்து - காம இன்பத்தை விரும்பாத மனத்தினனாய்ப் (புதல்வனைப் பெறல் வேண்டும் என்னும்) எண்ணத்தோடு கருப்பத்தை யுண்டாக்கி— மீளவும் சென்று - திரும்பவும் (பரிமளகந்தி யிடத்திற்) போய் — பதினாயிரம் கராசலம் பெறு வலிக் காயம் ஒன்றினில் - பதினாயிரம் யானை கொண்டிருக்கும் வலியையுடைய ஒரு சரீரத்தோடு—பொன் தோள் இராச குஞ்சரம் பிறந்திடும் - அழகிய புயங்களையுடைய ராசயானை பிறக்கும்—அவசரத்து அவளிடை நிகழ்ந்த மெய்க்குறி தன்னால் - (புணர்ச்சிக்) காலத்தில் அவ்வம்பிகை யிடத்தில் உண்டாகிய சரீரக்குறியினால்—அதற்கு விழிப் புலன் இல்லை என்றான் - அதற்குக் கட்புலன் இல்லையென்று சொன்னான். எ - று.

மற்று - அசை. மீளவும் என்னும் உம்மை எச்சம். கராசலம் வடநூன் முடிபு. நெஞ்சினன் வினைக் குறிப்பெச்சமுற்று. ஒன்றினில் என்பதில் இல்லுருபு ஒடுவுருபாகத் திரிக்கப்பட்டது. குஞ்சரம் என்றதற்கியைய அதற்கென்றான். நினைவொடு என்பதற்குப் புதல்வன் கட்புலனின்றி யவதரிப்பானே என்னு நினைவோடு எனப் பொருள்கூறினும் அமையும். புதல்வர்ப்பேறுகருதியன்றிக் காமவின்பங்கருதி மகளிரைப்புணர்தல் பாவமென்னு நூற்றுணி பறிந்தானாகலின், இவளைப்புணர்வுழி ஆசையிலன் என்பார் நிராசைநெஞ்சினன் என்றார். அவசரம் காலம். (கங)

மீளவுந்தலைப்புதல்வனைநோக்கியேமிகமகிழ்வுறாவன்னை
தூளவண்சடைத்தோன்றலம்பாலிகைசுதனொருவனைநல்க
நாளபங்கயப்பதியெனமதியெனநலந்திகழ்கவிகைக்கீ
ழாளவம்புவியவனெனநினைந்தினியளிக்கவென்றருள்செய்தாள்.

(இ - ள்.) மிக மகிழ்வு உறா அன்னை - (விழிப்புலன் இல்லை என்றதனால்) மிக மகிழ்ச்சியடையாத தாயாகிய பரிமளகந்தி—மீளவும் தலைப் புதல்வனை நோ

க்கி - திரும்பவும் மூத்த புதல்வனாகிய வியாத முனிவனைப்பார்த்து—தூளவண் சடைத் தோன்றல் - விபூதியைப்பூசிய அழகிய சடையையுடைய புத்திரனே—அம்பாலிகை சுதன் ஒருவனை நல்க -அம்பாலிகை என்பவள் புதல்வனொருவனைப் பெறும்படி—மதி என நலம் திகழ் கவிகைக் கீழ் - பூரண சந்திரன்போல அழகு விளங்கும் வெள்ளைக் குடைக்கீழ்—அவன் நாள பங்கயப்பதி என - அவன் தண்டையுடைய தாமரைக்கு நாயகனாகிய சூரியனைப்போல—அம்புவி ஆள என நினைந்து - அழகிய பூமியை அரசு செய்யக்கடவன் என்று சிந்தித்து—இனி அளிக்க என்று அருள் செய்தாள் - இனி உண்டாக்குக என்று சொன்னாள். எ-று.

ஏ - அசை. மீளவும் என்னும் உம்மை எச்சம். தோன்றல் அண்மைவிளி. உருத என்னும் பெயரெச்சத் தீறுதொக்கது. தூள என்னுங் குறிப்பு வினைப் பெயரெச்சம் தோன்றல் என்னும் பெயர்கொண்டது; அன்றி, வண்சடையென விசேடிக்கப்பட்ட பெயர்கொண்டதெனினும் அமையும். நல்க என்னுங் காரியப் பொருட்கண்வந்த செயவெனெச்சம் அளிக்க என்னும் வியங்கோள் வினைகொண்டது. நாளபங்கயம் வடநூன்முடிபு. ஆள என்பது அகரவீற்றுவியங்கோள். பங்கயப்பதியென ஆள என்றியையும். சூரியன் இருளை நீக்கி ஒளியைச் செய்யுமாறுபோல இவனும் பகையைநீக்கிப் புகழையாக்கத் தக்கானா யிருத்தல்வேண்டும் என்பாள் பங்கயப்பதியென என்றும், தன்கீழ் வாழுமுயிர்க்கெல்லாம் நிறைந்த தண்ணளி புரிவானா யிருத்தல்வேண்டும் என்பாள் மதியென நலந்திகழ்கவிகைக் கீழம்புவியாள என்றுங் கூறினாள். மகிழ்வுரு என்பதற்கு மகிழ்ந்தெனப் பொருள்கோடல் பொருந்தாது. (கச)

கிளைத்திடுந்துகிர்க்கொடிநிகர்சடையவன்கேட்டுநுண்ணிடையேபோ
லிளைத்திடுங்கவின்மெய்யுடையவண்மனையெய்தலுமிவனைக்கண்
டுளைத்திடுங்கருத்துடன்வெரீஇவருபயனொன்றையுநினையாது
விளைத்திடுங்கருவிளையுமுன்மடவரன்மெய்யெலாம்விளர்த்திட்டாள்.

(இ-ள்.) கிளைத்திடும் துகிர்க் கொடி நிகர் சடையவன் கேட்டு - கிளைகொள்ளும் பவளக்கொடிபோன்ற சடையையுடைய வியாதமுனிவன் அந்த வசனத்தைக் கேட்டு நுண் இடைபோல் இளைத்திடும் கவின் மெய் உடை அவள் மனை எய்தலும் - (விதவை விரதத்தை அனுட்டித்தலால்) நுண்ணிய இடையைப்போல இளைத்த அழகிய சரீரத்தையுடைய அந்த அம்பிகையினது மாளிகையை யடைதலும் - மடவரல் - அவள் - இவனைக்கண்டு உளைத்திடும் கருத்துடன் வெரீஇ - இம் முனிவனைக் கண்டு வருந்தும் மனத்தோடு அஞ்சி வருபயன் ஒன்றையும் நினையாது - பின் தனக்குவரும் பிரயோசனம் ஒன்றையுஞ் சிந்தியாமல்—விளைத்திடும் கரு விளையும் முன்-உண்டாக்கப்பட்ட கருப்பம் வளருமுன்—மெய் எலாம் விளர்த்திட்டாள் - சரீரம் எங்கும் வெளுத்தாள். எ - று.

ஏ-அசை. எய்தலும் உம்மீற்றுவினையெச்சம். ஒன்றையும் என்னும் உம்மை சிறப்போடு முற்று. கிளைத்திடுமுதலிய நான்கினும் இடு பகுதிப்பொருள் விகுதி. இளைத்திடும் மெய்யென்றியையும். உளைந்திடும் என்னுந் தன்வினை எதுகைநோக்கி உளைத்திடும் எனப் பிறவினைபோலக் கூறப்பட்டது. தன்னைவருத்தும் மனம் எனப் பிறவினையாக்கினு மமையும். விளைத்திடும் என்னும் பெயரெச்சம்கருவென்னுஞ் செயப்படுபொருட் பெயர்கொண்டது. மெய்யெலாம் விளர்த்திட்டாள்

என்பது சினைவினை முதன்மேனின்றது. புதல்வற்பேற்றால் இம்மையிற் புகழு மின்பமும் மறுமையில் நற்கதிசேறலும் ஆகிய பயன்கள் உளவாகவும் அவற்றைக் கருதாது அச்சத்தால் விளர்த்தாள் என்பார் பயனொன்றையும் நினையாது மெய் யெலாம் விளர்த்திட்டாள் என்றார். (கடு)

அருந்தபோநிதியவளிடத்தினுங்கருவருளியக்கணத்தேகி
யிருந்தவாறுதன்னன்னையோடினிதுரைத்திமையவனெனச்சென்றான்
பெருந்தராதலந்திறலினலொருதனிபெறுமுறையவன்பெற்ற
முருந்தவாணகைமருட்சியால்விளர்த்திடுமுழுவதுமுடலென்றே.

(இ-ள்.) அரும் தபோநிதி அவளிடத்தினும் கரு அருளி - அரிய தவச்செல்வ ஞகிய வியாதமுனிவன் அந்த அம்பிகையிடத்தினுங் கருவைப்பதித்து—அக் கணத்து ஏகி - அக்கணப் பொழுதிற்போய்—பெரும் தராதலம் திறலினல் ஒருதனி பெறும் முறையவன் - பெரியபூமியை வலிமையினாற் பொது நீக்கிப் பெறும் முறைமையினையுடைய புதல்வன்—பெற்ற முருந்த வாள் நகை மருட்சியால் - தன்னைப்பெற்ற இறகினடிக்குருத்துப்போன்ற ஒளிபொருந்திய பற்களையுடைய தாயினது அச்சத்தினல்—உடல் முழுவதும் விளர்த்திடும் என்று - சரீரம் எங்கும் வெளுப்பான் என்று—இமையவனென இருந்தவாறு தன் அன்னையோடு இனிது உரைத்துச் சென்றான் - தேவனைப்போல நிகழ்ந்தபடியைத் தன்றாயாகிய பரிமள கந்தியோடு நன்றாய்ச் சொல்லிப்போயினான். எ - று.

ஏ - அசை. இடத்தினும் என்னும் உம்மை எச்சத்தோடு சிறப்பு. முருந்த என்பது குறிப்பு வினைப்பெயரெச்சம்; அதுவாணகை என்னும் விசேடிக்கப்பட்ட பெயரோடுதொக்கு உவமைத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை யாயிற்று. முக்காலவுணர்ச்சியுடைய தேவரைப்போல இவனும் பின்னிகழ்வன வற்றைத் தவறின்றி முற்கூறினான் என்பார் இமையவனென உரைத்து என்றும், தாய்க்குரிய மரியாதையோடு பணிந்தமொழியினனாய்க் கூறினான் என்பார் இனி தென்றுங்கூறினார். இமையவனெனச் சென்றான் என இயைப்பிற்பொருட்சிறப் பின்று. (கசு)

வேதபுங்கவனகன்றுழிவலியுடைவிழியின்மைந்தனும்யாரும்
பாதபங்கயந்தொழத்தகுந்திறலுடைப்பாண்டுவென்பவன்றானும்
பூதலம்பெருங்களிப்புறக்குருகுலம்பொற்புறப்பொழுதுற்றுச்
சாதராயினரவ்விருமகவையுஞ்சத்தியவதிகண்டாள்.

(இ - ள்.) வேதபுங்கவன் அகன்றுழி - வேதத்தில் வல்லனாகிய வியாதமுனி வன் நீங்கியபொழுது—வலி உடை விழி இல் மைந்தனும் - வலிமையினையுடைய கண்ணில்லாத புதல்வனும்—யாரும் பாதபங்கயம் தொழத்தகும் திறல் உடைப் பாண்டு என்பவன் தானும் - எவரும் பாததாமரைகளை வணங்கத் தகும் வலிமை யினையுடைய பாண்டு என்பவனும்—பூதலம் பெரும் களிப்பு உற - பூமியிலுள் ளோர் பெரியகளிப்பில் மிகவும்—குருகுலம் பொற்பு உற-குருகுலம் சிறப்பில் மிக வும்—பொழுது உற்றுச் சாதர் ஆயினர் - காலம் நிரம்பப் பிறந்தார்கள்—அவ் இரு மகவையும் சத்தியவதி கண்டாள் - அந்த இரண்டு புதல்வரையும் பரிமளகந்தி கண்டாள். எ - று.

இருமகவையும் என்னும் உம்மை முற்று. உறவென்னுங் காரியப்பொரு ட்டாகிய செயவெனெச்சங்க ளிரண்டும், செயவெனெச்சமாகத் திரிக்கப்பட்ட

உற்று என்னும் எச்சமும் சாதராயினர் என்னும் வினைமுற்ருேடு தனித்தனி முடிந்தன. கண்ணில்லாத தமையன்போலாது கண்ணோடு வலியும் நீதியுமமைந்தவனுதலால் எவரும் அஞ்சி வணங்கத்தக்கான் என்பார் யாரும் பாதபங்கயந் தொழத்தகும் பாண்டு என்றும், இருடிகளின் விந்துவினுற் பிறக்கும் ஏனைமக்கள்போல உடனே அவதரியாமற் பத்துமாதம் நிரம்பி அவதரித்தார் என்பார் பொழுதுற்றுச் சாதராயினர் என்றுங் கூறினுர். (கஎ)

காணலும்பெரிதுவகையற்றின்னமுங்கருதுதுமெனவெண்ணச்
சேணடைந்தமாமுனிவரன்வருதலுஞ்சிந்தனையுறச்சொல்ல
நாணலந்திகழம்பிகையிடத்திவனண்ணலுமவளஞ்சிப்
பூணலம்பெறுதோழிமற்ரெருத்தியைப்பூவணையணைவித்தாள்.

(இ-ள்.) காணலும் பெரிது உவகை அற்று - காணுதலும் (அப்புதல்வர் உடற்குற்றமுடையராதலால்) அதிக சந்தோஷமின்றி—இன்னமும் கருதுதும் என எண்ண - இன்னும் வரும்படி நினைப்போம் என்று (வியாதமுனிவனை) நினைக்க சேண் அடைந்த மா முனிவரன் வருதலும் - தூரத்தையடைந்த பெரிய அம்முனிவன் வரவும்—சிந்தனை உறச் சொல்ல - தன்னெண்ணத்தை அவன் மனத்திலே அமையும்படிசொல்ல—இவன் நாண் நலம் திகழ் அம்பிகையிடத்து நண்ணலும் - இம்முனிவன் வெட்கத்தின் நலம் விளங்கும் அம்பிகையென்பவளிடத்திற் போகவும்—அவள் அஞ்சி - அவள் பயந்து—பூண் நலம் பெறு தோழி ஒருத்தியை - ஆபரணத்தால் அழகைப்பெற்ற தோழி ஒருத்தியை—பூ அணை அணைவித்தாள் - பூஞ்சயனத்தை அடைவித்தாள். எ - று.

மற்று - அசை. வருதலும் நண்ணலும் உம்மீற்று வினையெச்சங்கள். முனிவரன் நான்காம் வேற்றுமைத்தொகை. அவதரித்த புதல்வரிருவரும் உடற்குற்றமுடையராயிருத்தலினுல் அரசுரிமைக்காகாரே, அதனுல் யான் நினைத்த கருமம் வாய்த்திலதே,இனி அக்குற்றமில்லாத புதல்வரைத் தருகவென்று அவன் மனத்திலழுந்தக்கூறினுள் என்பார் சிந்தனையுறச்சொல்ல என்றும், முன்னரே வியாத முனிவர் புணர்வுழி நாணத்தையும் அச்சத்தையுங்கொண்டு கண்மூடினமையினுலும் பின்னும் அவர் போனபொழுதில் அவ்விரண்டனுலும் விழுங்கப்பட்டுத் தோழியைவிடுத்தமையினுலும் நாணலந்திகழம்பிகை என்றும், முனிவர் ஐயுருது தானென்று கருதும்படி தன்னையொத்ததோழியை ஆபரணமுதலியவற்ருல் அலங்கரித்தனுப்பினுள் என்பார் பூணலம்பெறு தோழி மற்ரெருத்தியைப் பூவணையணைவித்தாள் என்றுங்கூறினுர்.விதவைகளாயினும் வேதவிதிப்படியே புதல்வர்ப்பேறுகருதிப் புணர்வுழித் தம்மை ஆடையணிமுதலியவற்ருல் அலங்கரித்துக்கொள்ளுதல் முறையாதல்பற்றி, இவளுந் தானெனக் கருதும்படி அனுப்பிய தோழியை ஆபரணமுதலியவற்ருல் அலங்கரித்தாளென்க. (கஅ)

வந்தகாலையின்மனங்கலந்தநங்கநூன்மரபின்மெய்யுறத்தோய்ந்து
சந்தனுகருப்பரிமளத்தனதடந்தயங்குமார்பினின்மூழ்க
விந்திராதிபர்போகமுற்றிசைதனுமின்பமுற்றியபின்ன
ரந்தணாளனவ்விரவிடைமீளவந்தன்னையோடுரைசெய்வான்.

(இ - ள்.) வந்த காலையில் - அவள் சயனத்தை அடைந்தபொழுது—மனம் கலந்து அநங்கநூல் மரபின் மெய் உறத் தோய்ந்து - இருவரும் மனமொத்து மதன நூன்முறையினுற் சரீரம் அழுந்தக்கலந்து—சந்தன அக

ருப் பரிமளத் தனதடம் - சந்தனமும் அகிலுமாகிய இவற்றின் குழம்பாலாகும் மணத்தையுடைய முலைத்தடம்—தயங்கு மார்பினின் மூழ்க - விளங்குகின்ற மார்பிலே பொருந்த—இந்திராதிபர் போகம் உற்று இசைதலும் - இந்திரர்களுடைய போகத்தைப் பொருந்திச்சேரவும்—இன்பம் முற்றிய பின்னர் - போகம் முடிந்த பின்னர்—அந்தணாளன் அவ் இரவிடை மீள வந்து - வியாதமுனிவன் அந்த இரவில் மீண்டுவந்து—அன்னையோடு உரைசெய்வான் - தாயாகிய பரிமளகந்தியோடு சொல்லுவான். எ - று.

இசைதலும் உம்மீற்றுவினையெச்சம். சந்தனகரு, தனதடம், இந்திராதிபர் என்பன வடநூன்முடிபு. சந்தனம் அகரு என்பன ஆகுபெயர்கள். தனதடம் தனமாகிய உயர்ந்தவிடமெனவும் இந்திராதிபர் இந்திரராகிய அதிபர் எனவும் விரிதலாற் பண்புத்தொகைகள். இந்திரபதம் பெறுவாரனைவரையும் உளப்படுத்தி இந்திராதிபர் எனப் பலர்பாலாற்கூறினர். இவள் தாதியாதலிற் குலமகளிராகிய அம்பிகை அம்பாலிகை என்பார்போல நாண் அச்ச மிரண்டானும் விழுங்கப்படாது மதனநூற்கருத்திற்கியைய மனங்கலந்து புணர்ந்தாள் என்பார் மனங்கலந்தநங்கநூன்மரபின் மெய்புறத்தோய்ந்து என்றும், அவர்கள் அனுபவித்தபோகம் எல்லாப்போகங்களினும் மிகச் சிறந்தபோகம் என்பார் இந்திராதிபர்போகமுற்று என்றுங் கூறினர். உற்றுஎன்பதை உவமவாசகமாக்கி இந்திராதிபர் போகம்போன்றிசைதலும் எனினுமமையும். (கக)

அம்பிகைக்கொடிதோழியைவிடுத்தனளவள்புரிதவந்தன்னா
லும்பரிற்பெறுவரத்தினாற்றருமன்வந்துதித்திடும்பதம்பெற்றாள்
வெம்படைத்தொழில்விதுரனென்றவன்பெயர்மேலினிமகவாசை
யெம்புணர்ப்பினாலொழிகெனவனநெறியேகினன்விடைகொண்டே.

(இ-ள்.) அம்பிகைக்கொடி தோழியை விடுத்தனள் - அம்பிகையென்னும் பெண்ணானவள் தன் தோழியை அனுப்பினாள்—அவள் புரிதவம் தன்னால் உம்பரில்பெறு வரத்தினால் - அவள் தான்செய்ததவங் காரணமாகத் தேவர்களிடத்திலே பெற்றுக்கொண்ட வரத்தால்—தருமன் வந்து உதித்திடும் பதம் பெற்றாள் - யமன்வந்து தன்னிடத்திற்பிறக்கும் நிலைமையைப்பெற்றாள்—வெம்படைத்தொழில் விதுரன் என்று அவன்பெயர் - கொடிய படைக்கலத்தொழிலையுடைய விதுரன் என்று அவன் பெயர் (சொல்லுக)—இனிமேல் எம் புணர்ப்பினால் மகவு ஆசை ஒழிக என - இனிமேல் எம்முடைய புணர்ச்சியினாற் புத்திரரையுண்டாக்க வேண்டும் என்னும் வாஞ்சையை விடுக என்று—விடைகொண்டு வனநெறி ஏகினன் - (பரிமளகந்தியிடத்தில்) விடைபெற்றுக்கொண்டு காட்டுவழியிற்சென்றான். எ-று.

ஏகாரம் - அசை. ஒழிக என்னும் வியங்கோளீறுதொக்கது. தவந்தன்னாற் பெறுவரம் என இயையும். சொல்லுக என்பது அவாய்நிலையான்வந்தது. ஏனை இருவரினும் இவன் படைக்கலப்பயிற்சியிற் சிறந்தமைபற்றி வெம்படைத் தொழில் விதுரன் என்றான். மாண்டவியமுனிவன் சாளுவராசனாலே திருடனென மதித்துக் கழுவேற்றப்பட்டு, பின் அவ்வரசன்வேண்ட அவனை வெகுளாது யமனிடத்திற்போய் எனக்கித்துயர் நிகழ்ந்ததற்குக் காரணம் என்னையென்று வினவ, குழந்தைப்பருவத்தில் நீ தும்பிகளைப்பிடித்து முள்ளாற்குத்திக்கொன்றமையினால் உனக்கித் துயர்வந்ததென்று யமன்கூற, அம்முனிவன் வெகுண்டு அறியாப்பருவத்திற்செய்த தவற்றைப்பொறாது என்னைக் கோபித்

தமையினால்நீ இழிந்தவள்வயிற்றிற் பிறக்கக்கடவை என்றுஅவனைச்சபித்தான்; அதனால் யமன் விதுரனாய்த் தாதிவயிற்றிற்பிறந்தான் என்க. எனத் திருதராட்டிரன் கந்தருவராசனாகிய மீசன் எனவும் பாண்டு இயக்கராசனாகிய குபேரன் எனவும் அறிக. விதுரன் என்பதற்கு உபாயமான புத்தியுடையவன் என்பது பொருளாம். (உ0)

மருவருங்குழற்றாசிபெற்றெடுத்தவிம்மைந்தனுமுதற்பெற்ற
விருவருங்குருகுலப்பெருங்கிரிமிசையிலங்குமுக்குவடென்னப்
பொருவருந்திறற்படைகளுங்களிறுதேர்புரவியும்புவிவேந்தர்
வெருவரும்படி பலகலைவிதங்களும்வீடுமனுடன்கற்றார்.

(இ - ள்.) மரு வரும் குழல் தாசி பெற்றெடுத்த இம்மைந்தனும் - நறுமணம் வீசும் அளகத்தையுடைய தோழிபெற்ற இந்தப்புதல்வனும்—முதல் பெற்ற இருவரும் - முன்னே (அம்பிகை அம்பாலிகை என்னும் இருவரும்) பெற்ற புதல்வரிருவரும்—குருகுலப் பெரும் கிரிமிசை இலங்கும் முக் குவடு என்ன-குருகுலமாகிய பெரிய மலைமீது விளங்கும் மூன்று சிகரங்கள் என்றுசொல்லும்படி—பொருவரும் திறல் படைகளும் - உவமையில்லாத வலிமையினையுடைய படைக்கலத்தொழில்களையும்—களிறு தேர் புரவியும் - யானையேற்றம் தேரேற்றம் குதிரையேற்றங்களையும்—பலகலைவிதங்களும் - பலநூல்களின் பகுதிகளையும்—புவிவேந்தர் வெரு வரும்படி வீடுமனுடன் கற்றார் - பூமியை ஆளும் அரசர்கள் அஞ்சும்படி (பெரிய பிதாவாகிய) வீடுமனிடத்திற் படித்தார்கள். எ - று.

படை, களிறு, தேர், புரவி ஆகுபெயர்கள். பெற்றெடுத்தல் ஒருசொல். குவடென்ன என்னுங் காரியப்பொருட்கண்வந்த செயவெனெச்சம் கற்றார் என்னும் பலர்பாற்படர்க்கைவினைமுற்றுக்கொண்டது. வெருவரும்படி என்பது படியீற்று வினையெச்சம். இருவரும் என்னும் உம்மை எண்ணோடு முற்றுமாய்நின்றது. மூன்றனுருபின்சொல்லுருபாகிய உடனென்பது எழனுருபாகத்திரிக்கப்பட்டது. ாசமாட்டி கருத்தின்படி பூ முதலியவற்றை அணிதலாற் புதிதாய்வரும் நறுமணம் பொருந்திய கூந்தல் என்பார் மருவருங்குழல் என்றும், அசைக்கப்படாததிண்மையும் எல்லாராலும் அறியப்படுந் தோற்றமு முடைத்தென்பார் குருகுலத்தைப் பெருங்கிரி என்றும், மலையைச் சிறப்பிக்குங் குவடுபோல இம்மூவரும் அக்குலத்தைச் சிறப்பித்தார் என்பார் இலங்குமுக்குவடென்ன என்றும், பலகலைவிதங்களோடு படைக்கலப்பயிற்சியுடையாரை வேறலரிதென்றரசரஞ்ச என்பார் வேந்தர் வெருவரும்படி என்றுங் கூறினார். கலைவிதங்களிலும் படைக்கலப்பயிற்சியிலும் வல்லார் அக்காலத்தில் வீடுமனையொழியப் பிறரின்மையின் அவனிடத்திற்கற்றாரென்க. (உக)

ஆனதிக்கிருநாலும்வந்தடிதொழவம்பிகைமகன்றன்னை
வானதித்திருமகனொருதினத்தினின்மங்கலமுடிசூட்டிப்
பானிறப்பெரும்பாண்டுவேசேனையின்பதிமுழுமதிமிக்க
கானிறத்தொடைவிதுரனேயமைச்சனிக்காவலற்கெனவைத்தான்.

(இ - ள்.) வான் நதித் திருமகன் ஒருபகல் - தேவகங்கையின் அழகிய புத்திரனாகியவீடுமன் ஒரு சுபதினத்தில்—ஆன திக்கு இருநாலும் வந்து அடி தொழ - பொருந்திய எட்டுத்திக்கிலுள்ளோரும் வந்து கால்களை வணங்க—அம்பிகை மகன் தன்னை மங்கலமுடிசூட்டி - அம்பிகையினுடைய புதல்வனாகிய

திருதராட்டிரனுக்கு மங்கலம்பொருந்திய முடியைச்சூட்டி—இக் காவலற்கு-இந்த அரசனுக்கு பால்நிறப் பெரும் பாண்டுவே சேனையின் பதி - வெண்மை நிறத்தை யுடைய பெரிய பாண்டு என்பவனே சேனாதிபதி— முழுமதி மிக்ககான் நிறத்தொடை விதுரனே அமைச்சன் என வைத்தான் - பேரறிவில் மிக்க வாசனைபொருந்திய ஒளியையுடைய மாலையை அணிந்த விதுரனே மந்திரி என்று நியமித்தான். எ - று.

ஏகாரம் இரண்டுந் தேற்றம். இருநாலும் என்னும் உம்மை முற்று. திக்கு ஆகுபெயர். மகன்றன்னை என்னும் ஐயுருபு குவ்வுருபாகத்திரிக்கப்பட்டது. தொழ என்னுஞ் செயவெனெச்சங் காரியப்பொருட்டு. பானிறப்பெரும் பாண்டு என்பது "மைத்தழையாநின்ற மாமிடறு" என்பதுபோல நின்றது. அமைச்சர்க்குரிய மதி முழுதுமமைந்தவல்லான் என்பார் முழுமதிமிக்க என்றும், எத்துணைப்பேராற்ற லுடையாராயினு மவரெதிர்ந்துழி முனைமுருக்கி முதுகுதரச்செய்தலிற்புகழும்வா கையும் ஒருங்குசூடவல்லான் என்பார் கானிறத்தொடை என்றுங் கூறினார். திருதராட்டிரன் என்பதற்கு தேசத்தைத்தாங்குபவன் என்பதுபொருளாம். (உஉ)

நதியளித்தவனேவலிற்றூதர்போய்நயந்துடன்காந்தார
பதியளித்தமெய்க்கன்னியைத்தருகபூபதிக்கெனமணநேர்ந்தார்
மதியளித்ததொல்குலத்தவன்விழியிலாமகனெனத்தமர்சொல்ல
விதியளித்ததென்றுளமகிழ்ந்தனள்வடமீனெனத்தகுங்கற்பாள்.

(இ - ள்.) நதி அளித்தவன் ஏவலில் - வீடுமனுடைய கட்டளையினால்— உடன் தூதர்போய் - உடனே தூதுவர்சென்று—காந்தாரபதி நயந்து அளித்த மெய்க் கன்னியை - காந்தார தேசத்தரசனாகிய சௌபலன் விரும்பிப் பெற்ற மெய்ம்மையையுடைய புதல்வியை— பூபதிக்குத் தருக என - நம்மரசனுக்கு மணஞ்செய்து தருக என்று மகட்பேச—மணம் நேர்ந்தார் - (அவ்வரசனோடு அவன் சுற்றத்தாரும்) மணத்திற்குடன்பட்டார்—தொல் மதி அளித்த குலத்தவன் விழி இலா மகன் எனத் தமர்சொல்ல - பழைய சந்திரகுலத்தவனாகிய அவ்வரசன் குருடன் என்று (முன் அறியாதுடன்பட்ட) சுற்றத்தார் (பின் அறிந்து) சொல்லவும்—வடமீன் எனத் தகும் கற்பாள் - அருந்ததி என்று சொல்லத்தக்ககற்பையுடைய சௌபலை —விதி அளித்தது என்று உளம் மகிழ்ந்தனள் - (துன்பப்படாமல்) என்னுடைய ஊழ் (இந்த நாயகனைத் தந்தது என்று மனமகிழ்ந்தாள். எ - று.

இலாத என்னும் பெயரெச்சத்தீறுதொக்கது. சொல்லவும் என்னுஞ் சிறப்பும்மை விகாரத்தாற்றொக்கது. குலத்தவன் கற்பாள் என்பன குறிப்புவினையாலணையும்பெயர்கள். தம்மரசனுக்கு மணமுடிதல்வேண்டும் என்னும் அவாவின்வயத்தராய்ச் சென்றார் என்பார் உடன்போய் என்றும், புத்திரர் பலருளராதலிற் புத்திரி ஒருத்திவேண்டும் என்ற அவாவுடையனாய் அருந்தவஞ் செய்துபெற்ற கன்னி என்பார் நயந்தளித்தஎன்றும், தந்தையுந்தமரும் மணத்திற்குடன்பட்டபொழுதே தான் அவற்குரியளென்னுமுறுதியை, அவர் அவன் குருடனென்றறிந்து கூறிய வழியும் மாறாத திட்பமுடையள் என்பார் வடமீனெனத்தகுங்கற்பாள் என்றுங் கூறினார். விழியில்லாமையன்றி வேறொரு தவறுமிலன் என்னுங் கருத்தினராய் மதியளித்ததொல்குலத்தவனென தமர் விசேடித்துக் கூறினரென்க. (உ௩)

இமைத்தகண்ணிணைமலர்ந்தினிநோக்கிலேன்யானொருவரையென்று
சமைத்தபட்டமொன்றினிற்பொதிபெதும்பையைத்தந்தையுந்தனையோ
மமைத்தருங்குலமுனிவருமறைமுறையருங்கடிவிளைத்திட்டார்  [ரு
சுமைத்தராபதிமதியிவளுரோகிணியென்னவேதொழத்தக்காள்.

(இ - ள்.) யான் இமைத்த கண் இணை மலர்ந்து இனி ஒருவரை நோக்கிலேன் என்று - நான் இமைத்த கண்ணிரண்டையும் விழித்து இனி ஒருவரையும் பாரேன் என்று—சமைத்த பட்டம் ஒன்றினில் பொதி பெதும்பையை—செய்யப்பட்ட புடைவை ஒன்றினால் (தன்கண்ணை) மறைத்துக் கட்டிக்கொண்ட அப்பெண்ணுக்கு—தந்தையும் தனையோரும் - பிதாவும் அவன் புதல்வராகிய சகுனி முதலியோரும்—அமைத்தரும் குல முனிவரும் - அடக்கத்தையுடைய கூட்டமாகிய முனிவர்களும்—மறைமுறை அரும் கடி விளைத்திட்டார் - வேதவிதிப்படி அரிய விவாகத்தைச்செய்தார்கள்—சுமைத்தராபதி மதி - (சேடன்) தாங்குதலையுடைய பூமிக்கதிபனாகிய திருதராட்டிரன் சந்திரன்—இவள் உரோகிணி என்னத் தொழத்தக்காள் - இச்சௌபலை (சந்திரனுக்கியைந்த மனைவியாகிய) உரோகிணி என்று வணங்கத்தக்கவள். எ - று.

ஏ - அசை. அமைதரும் என்பது எதுகைநோக்கி வல்லெழுத்துமிக்கது. தராபதி வடநூன்முடிபு. பெதும்பையை என்னும் இரண்டனுருபு நான்கனுருபாகத் திரிக்கப்பட்டது. பட்டத்தாற்பொதிந்தபின் இமைத்தற் றொழிலின்மையின் இமைத்த கண்ணென இறந்தகாலத்தாற்கூறினாள். விளைத்திட்டார் ஒருசொல். பெதும்பையென்றது ஈண்டுப்பருவத்தையுணர்த்திநின்றது. கட்புலனுமின்பத்தைத் தன்னாயகன் அனுபவியாதவாறுபோலத் தானும் அதனை அனுபவியாதிருத்தல்வேண்டும் என்னும் அறக்கற்பினையுடையளாதலால், சமைத்தபட்டத்தாற் கண்களை மறைத்தாளென்க. தலைமகனினத்தார்வேண்டத் தலைமகளினத்தாருடம்பட்டுத் தீமுன்னர்க்கொடுக்கும் பிரசாபத்தியமாகிய சிறந்த மணம் என்பார் அருங்கடி என்றும், ஒருவரையொருவர் இன்றியமையா அன்பினர் என்பதும் ஏனைமனைவியருள் இவள் சிறந்தாள் என்பதும் போதரத் தராபதிமதி இவளுரோகிணியென்னத்தொழத்தக்காள் என்றுங் கூறினார். அமைத்தருங்குலமுனிவர் என்பதற்குச் சாந்தகுணத்தைத்தரும் முனிவர் எனினுமமையும். (உச)

புந்தியாலருங்கலைமகள்பொற்பினாற்பூந்திருப்புனைகற்பா
லந்திவாயருந்ததிபெரும்பொறையினாலவனிமானிகரென்னக்
குந்திபோசரிற்சூரனென்பவன்மகள்குருகுலந்தழைத்தோங்க
வந்தியாவரும்பிரதையென்றடிதொழமதியெனவளர்கின்றாள்.

(இ - ள்.) குந்திபோசரில் சூரன் என்பவன் மகள் - (அந்தநாளில்) குந்திபோச அரசர்களுட் சூரன் என்பவனுடைய புதல்வி—புந்தியால் அரும் கலைமகள் - அறிவினால் அரிய சரசுவதி—பொற்பினால் பூம் திரு - அழகினால் தாமரைமலரிலிருக்கும் இலக்குமி—புனை கற்பால் அந்திவாய் அருந்ததி - சிறந்த கற்பினால் இரவிற்றோன்றும் அருந்ததி—பெரும் பொறையினால் அவனிமான் நிகர் என்ன - பெரிய பொறுமையினாற் பூமிதேவி நிகர் என்றுசொல்ல—யாவரும் வந்து பிரதை என்று அடி தொழ - எவர்களும் வந்துபிரதையென்று தன்பெயரைச் சொல்லிக் கால்களைவணங்க—குருகுலம் தழைத்து ஓங்க மதி என வளர்கின்றாள் - குருகுலந் தழைத்து வளரப் பிறைபோல நாளொருவண்ணமாய் வளர்கின்றாள். எ-று.

நிகரென்ன, ஒங்க, தொழ என்னுஞ்செயவெனெச்சங்கள் வளர்கின்றாள் என்னும் வினைமுற்றோடு தனித்தனிசென்றியையும். நிகரென்னவென்பதனைக் கலைமகள் முதலியமூன்றனோடுமியைக்க. உருவகத்திற் கோதிய விலக்கண முவமைக் காதலு முளவென்பதனாற் புந்தியா லருங்கலைமகள் பொற்பினாற் பூந்திருப் புனை கற்பா லந்திவாயருந்ததி பெரும்பொறையினு லவனிமானிகரென்ன என்பதனை ஏதுவுவமையென்னு மலங்காரமாகக்கொள்க. இவளிடத்தவதரித்த புதல்வராலேயே குருகுலம் விருத்தியடைந்ததென்பார் குருகுலந்தழைத்தோங்க என்று கூறினர். அந்திவாயருந்ததி என்பதற்கு அந்திக்காலத்திற்றோன்றும் அருந்ததியெனப்பொருள்கூறல் பொருந்தாது. (௨௫)

அந்தமாதிளமடமயிலெனவிளையாடுமெல்லையிலென்று
முந்தமாதவம்புரிதுருவாசமாமுனியுமவ்வுழிவந்தான்
வந்தமாதவனடிபணிந்திவனைநீவழிபடுகெனத்தந்தை
யிந்தமாதவன்மொழிப்படிபுரிந்துகுற்றேவலின்வழிநின்றாள்.

(இ-ள்.) அந்த மாது இளமடமயில் என விளையாடும் எல்லையில் - அந்தப் பிரதையென்பவள் இளைய மென்மையாகிய மயில்போல விளையாடும்பொழுதில் — முந்த என்றும் மா தவம் புரி துருவாச மா முனியும் அவ்வுழி வந்தான் - முதன்மைபெற எப்பொழுதும் சிறந்த தவத்தைச்செய்கின்ற துருவாசன் என்னும் பெரிய முனிவனும் அவ்விடத்தில் வந்தான்—தந்தை - பிதாவாகிய சூரன்—வந்த மாதவன் அடி பணிந்து - வந்த முனிவனுடைய பாதங்களை வணங்கி—நீ இவனை வழிபடுகெ என - மகளே நீ இவனை வழிபடுக என்றுசொல்ல—இந்த மாது அவன் மொழிப்படி - இப்பெண் அந்தப் பிதாவின் சொற்படி—புரிந்து குற்றேவலின் வழி நின்றாள் - விரும்பி அம்முனிவனுடைய குற்றேவலின்வழி யொழுகினாள். எ - று.

முந்த என்னுஞ் செயவெனெச்சம். காரண காரியப்பொருட்டு. வழிபடுக என்னும் வியங்கோளீறு தொக்கது. முனியும் என்னும் உம்மை எச்சத்தோடு சிறப்பு. மடம் ஈண்டு மென்மை. (௨௬)

கழங்குகந்துகமம்மனையாடலுங்கனகமென்கொடியூசல்
வழங்குதண்புனலாடலுந்துறைவரிவண்டலாடலுமாறி
முழங்குசங்கினந்தவழ்தருபனிநிலாமுன்றிலுஞ்செய்குன்றுந்
தழங்குசெஞ்சுரும்பெழுமலர்ச்சோலையுந்தனித்தனிமறந்திட்டாள்.

(இ - ள்.) கழங்கு கந்துகம் அம்மனை ஆடலும் - கழங்கும் பந்தும் அம்மனையுமாகிய இவற்றை விளையாடுதலையும்—கனக மென் கொடி ஊசல் (ஆடலும்) - பொன்னாற்செய்த மிருதுவாகிய கயிற்றூசலாடுதலையும்—வழங்கு தண் புனல் ஆடலும் - பாய்கின்ற குளிர்ந்தநீரில் விளையாடுதலையும்—துறை வரிவண்டல் ஆடலும் மாறி - நீர்த்துறைகளிலுள்ள வரிபொருந்திய மணலில் விளையாடுதலையும் நீங்கி—முழங்கு சங்கு இனம் தவழ்தரு பனி நிலா முன்றிலும்-முழுங்குகின்ற சங்குக்கூட்டங்கள் தவழும் குளிர்ந்த நிலாமுற்றத்தையும்—செய்குன்றும்-செய்குன்றையும்—தழங்கு செம் சுரும்பு எழும் மலர்ச் சோலையும் - ஒலிக்கின்ற ஒழுங்காகிய வண்டுகள் எழும் பூஞ்சோலையையும்—தனித்தனி மறந்திட்டாள் - தனித்தனியே மறந்தாள். எ - று.

வண்டல் ஆகுபெயர். வரியென்பது அதனை விசேடித்தது. ஆடலும் என்பது ஊசல் என்பதனோடுங் கூட்டப்பட்டது. செம்மையென்பது ஈண்டொழுங்கு. நிலநீரினும் பாயுநீரிலாடலுவகைபயக்குமென்பார் வழங்கு தண் புனல் என்றும், இலவயனைத்தையும் ஒருங்கேவிடாடல் ஒவ்வொன்முக விடுத்தாள் என்பார் தனித்தனிமறந்திட்டாள் என்றுங் கூறினர். சங்குகளைத் திரைதாக்கிவீசுதலால் அவைமுழங்கி நிலாமுற்றத்திற்றவழ்ந்தனவென்க. (உஎ)

தொழுதுதாளிணைச்செய்யபஞ்செழுதினுந்தோளிணைச்செழுந்தொய்யி
லெழுதினும்பொருவிளமையண்முதுக்குறைந்தியாதியாதுரைசெய்தா
முழுதுநெஞ்சுறுகோபமேமிகமிகுமுனிவரன்மகிழ்வெய்தப் [ன்
பழுதிலன்புடனியற்றினளொன்றுபோற்பன்னிருமதிசேர.

(இ-ள்.) தொழுது தாளிணைச் செய்ய பஞ்சு எழுதினும் - கும்பிட்டுக் கால்களுக்குச் செம்பஞ் சூட்டினுலும்—தோளிணைச் செழும் தொய்யில் எழுதினும் - தோள்களுக்குச் செம்மையாகிய தொய்யிலை எழுதினுலும்—பொரு இளமையள்- பொருத இளமைப்பருவத்தையுடைய பிரதையானவள்—முதுக்குறைந்து - அறிவில் முதிர்ந்து—நெஞ்சு முழுதும் உறு கோபமே மிக மிகு முனிவரன்—மனம்முழுதும் பெருங்கோபமே மிகுதலாற் (றவத்தில்) மிகுகின்ற துருவாசமுனிவன்—யாது யாது உரைசெய்தான் - எதையெதைச் சொன்னுனே அதை அதை—மகிழ்வு எய்த - அவன் மகிழ்ச்சியடைய—ஒன்றுபோல் பன்னிரு மதி சேர - ஒருமாசம போலப் பன்னிருமாசமும் ஒருசேர—பழுது இல் அன்புடன் இயற்றினள் - குற்றமில்லாத அன்போடு செய்தாள். எ - று.

மிக என்னுஞ் செயவெனெச்சம் ஏதுப்பொருட்டு. எழுதினும் என்னும் உம்மைகள் சிறப்பு. பொருத என்னும் பெயரெச்சத்தீறு தொக்கது. தாளிணை, தோளிணை என்னும் இரண்டனுருபுகள் நான்கனுருபாகத் திரிக்கப்பட்டன. கோபமே என்னும் ஏகாரம் தேற்றம். யாது யாது என்னும் அடுக்குப் பன்மை பற்றிவந்தது. முதுக்குறைந்தியற்றினள் என இயையும். வண்ணஞ்செய்யுமகளிர் அரசகன்னியர்க்கது செய்யும்பொழுது வணங்கிச்செய்தல் அவர் சாதிதருமம் என்பார் தொழுதென்றும், தன்னை வண்ணஞ்செய்யினும் இது நமக்கலங்காரஞ் செய்வதென்று பகுத்தறியாச்சிறுமி என்பார் எழுதினும் பொருவிளமையள் என்றும், அங்ஙனம் இளையளாயினும் கோபியாகிய அம்முனிவன் மகிழ அவன் பணித்த ஏவலைப் பழுதுறாது அன்போடுசெய்தாள் என்பார் முதுக்குறைந்தியற்றினள் என்றும், ஏனைமுனிவர்போற் கோபத்தாற் றவம் அழியாது அதுமிகுதலாற் றவம் வளரும் வரமுடையான் என்பார் கோபமே மிக மிகு முனிவரன் என்றுங் கூறினர். (உஅ)

பிரதைதன்னையத்தபோநிதிவருகெனப்பெரிதுவந்தெண்தேவ
லரிதெனதுநீயியற்றினைநெடுங்கடலவனிமேல்யார்வல்லார்
தெரிவைகேளெனச்செவிப்படுத்தொருமறைதேவரில்யார்யாரைக்
கருதிநீவரவழைத்தனையவரவர்கணத்துநின்கரஞ்சேர்வார்.

(இ - ள்.) பிரதை தன்னை - (அவ்வாறேவல்செய்த) பிரதையென்பவளை—அத் தபோநிதி வருக எனப் பெரிது உவந்து - அந்தத் தவச்செல்வனுகிய துருவாசமுனிவன் வருகவென்று மிக மகிழ்ந்து—நீ எனது ஏவல் அரிது எனுது இயற்றினை - நீ என்பணியை அருமையென்று சொல்லாது செய்தாய்—நெடும் கடல

அவ்னிமேல் யார் வல்லார் - நெடிய கடல்சூழ்ந்த பூமியின்மேல் வேறியாவரிப் படிச் செய்யவல்லவர்—தெரிவை கேள் என ஒரு மறை செவிப் படுத்து - பெண்ணே கேள் என்று ஒருமந்திரத்தை உபதேசித்து—தேவரில் யார் யாரை நீ கருதி வர அழைத்தனை - தேவரில் எவரெவரை நீ நினைத்து வரவழைத்தாயோ—அவரவர் கணத்து நின் கரம் சேர்வார் - அவரவர் நினைத்த அக்கணத்தில் உன்கைப்படுவார். எ - று.

வருக என்னும் வியங்கோளீறு தொக்கது. யார் யார் அவரவர் என்பன பன்மைபற்றிய அடுக்குகள். செவிப்படுத்தல் ஒரு சொல். தபோநிதி வடநூன்முடிபு.()

தம்மையொப்பதோர்மகவையுந்தருகுவர்தவப்பயனெனப்பெற்ற
விம்மறைப்பயனிம்மையினுனக்குவந்தெய்தியதெனக்கூறி
யம்முனிப்பெருங்கடவுளுந்தபோவனமடைந்தனனவளுந்தன்
செம்மனத்தொடுபயின்றரமகளெனச்செல்வமாமனைசேர்ந்தாள்.

(இ - ள்.) தம்மை ஒப்பதோர் மகவையும் தருகுவர் - அவர் தம்மையொத்த பிள்ளைகளையுந் தருவர்—தவப் பயன் எனப் பெற்ற இம் மறைப் பயன் - தவப்பயனைப்போலப் பெற்ற இந்த மந்திரத்தின் பிரயோசனம்—இம்மையில் உனக்கு வந்து எய்தியது எனக் கூறி - இப்பிறப்பில் உனக்கு வந்தடைந்த தென்று சொல்லி—அம் முனிப் பெரும் கடவுளும் தபோவனம் அடைந்தனன் - அந்தப் பெரிய முனிசிரேட்டனும் தவஞ்செய்தற்குரிய வனத்தையடைந்தான்—அவளும் தன் செம் மனத்தொடு பயின்று - அந்தப் பிரதையும் (அம் மந்திரத்தைத்) தனது செப்பமாகிய மனத்தாற் செபித்து—அரமகள் எனச் செல்வ மா மனை சேர்ந்தாள் - தெய்வமகளைப்போலச் செல்வத்தையுடைய பெரிய அந்தப்புரத்தை அடைந்தாள். எ - று.

ஓர் - அசை. மகவையும் அவளும் என்னும் உம்மைகள் எச்சம். கடவுளும் என்னும் உம்மை எச்சத்தோடு சிறப்பு. எய்தியதெனத் தெளிவுபற்றி எதிர்காலமிறந்தகாலமாயிற்று. தபோவனம் வடநூன்முடிபு. மனத்தொடு என்பதில் ஒடுவுருபு கருவிப்பொருட்கண் வந்தது. மானதம் மந்தம் உரை என்னும் மூன்றனுள் மானதம் விசேடித்ததென்னு நூற்றுணிபறிந்து செபித்தாள் என்பார் செம்மனத்தொடு பயின்று என்றும், எவரும் மதித்து வழிபடும்படி சென்றாள் என்பார் அரமகளெனச் சேர்ந்தாள் என்றுங் கூறினர். உவந்து செவிப்படுத்துக் கூறி அடைந்தான் என வினைமுடிவு செய்க. (௩0)

ததையும்வண்டிமிர்கருங்குழற்கன்னியத்தனிமறைப்பயன்காண்பான்
சுதைநிலாவெழுமாளிகைத்தலத்திடைதூநிலாவெழுமுன்றி
லிதையமாமலர்களிக்கநின்றன்பினேடியம்பனுமெதிரோடி
யுதையபானுவுமலர்மிசையளியெனவொருகணந்தனில்வந்தான்.

(இ-ள்.) ததையும் வண்டு இமிர் கருங் குழற் கன்னி - நெருங்கிய வண்டுகள் ஒலிக்குங் கரிய அளகத்தையுடைய பிரதையானவள்—அத் தனி மறைப் பயன் காண்பான் - அந்த ஒப்பற்ற மந்திரத்தின் பிரயோசனத்தைச் சோதித்தறியும்படி—சுதை நிலா எழும் மாளிகைத் தலத்திடை - சுண்ணச்சாந்தால் நிலாவெழுகின்ற மாளிகையினிடத்திற் பொருந்திய—தூ நிலா எழும் முன்

றில் - வெண்மையாகிய நிலாமுற்றத்தில்—மா இதைய மலர் களிக்க நின்று அன்பினேடு இயம்பலும் - பெருமையாகிய இருதயகமலங் களிக்கும்படி நின்று அன்போடு செபிக்கவும்—உதைய பானுவும் மலர்மிசை அளி என ஒரு கணந் தனில் எதிர் ஓடி வந்தான் - உதித்தலையுடைய சூரியனும் பூவில்விழும் வண்டு போல ஒருகணப்பொழுதில் அவளுக்கெதிரே ஓடிவந்தான். எ - று.

காண்பான் பானீற்றுவினையெச்சம். இயம்பலும் உம்மீற்று வினையெச்சம். பானுவும் என்னும் உம்மைசிறப்பு. வண்டு பூவிலுள்ள தேனையுண்டு களித்தற்கு வருமாறுபோல, இவனும் இவளிடத்துள்ள போகங்களை அனுபவித்துக் களிக்கும்படி வந்தான் என்பார் மலர்மிசையளியென வந்தான் என்றூர். (ருக)

செம்பொனுடையுங்கவசகுண்டலங்களுந்திகழ்மணிமுடியாரம்
பைம்பொனங்கதம்புனையவயவங்களும்பவளமேனியுமாகி
வம்பறுதமெய்ப்பதுமினியெனச்செழுமறைநுவன்மடப்பாவை
யம்புயானனமலர்வுறக்கரங்களாலணைத்தனனழகெய்த.

(இ - ள்.) செம் பொன் ஆடையும்-மாற்றுயர்ந்த பொன்வஸ்திரத்தையும்—கவச குண்டலங்களும் - கவசகுண்டலங்களையும்—திகழ் மணி முடி ஆரம் பைம்பொன் அங்கதம் புனை அவயவங்களும் - விளங்கும் இரத்தினங்களழுத்திய முடியையும் பதக்கத்தையும் பசும்பொன்னுலாகிய வாகுவலயத்தையும் அணிந்த அவயவங்களையும்—பவள மேனியும் ஆகி - பவளம்போலும் நிறத்தையும் உடையனுய்ச் (சூரியன் வர)—வம்பு அறுத மெய்ப் பதுமினி என - நறுமணம் நீங்காத சரீரத்தையுடைய பதுமினியைப்போல (நின்று)—செழுமறை நுவல்மடப்பாவை அம்புய ஆனனம் மலர்வுற - வளம்பொருந்திய மந்திரத்தைச் செபிக்கின்ற மடப்பத்தையுடைய பிரதையானவள் தாமரைமலர்போலும் முகம்மலர—கரங்களால் அழகு எய்த அணைத்தனன் - (அவன்) கைகளால் (ஆலிங்கனத்தின்) அழகுபொருந்த அணைத்தான். எ - று.

பாவை ஆகுபெயர். அம்புயானனம் வடநூன்முடிபு. வர, நின்று என்னும் வினையெச்சங்கள் அவாய்நிலையான் வருவிக்கப்பட்டன. முன்னையது காரணப்பொருட்டாய் மலர்வுற என்னும் வினைகொண்டது. பின்னையது நுவல் என்னும் வினைகொண்டது. மலர்வுற என்னுங் காரியப்பொருட்டாய் நின்ற செயவெனெச்சம் அணைத்தலுக்குக் காரணமாயிற்று. பதுமினிச்சாதிப்பெண்களி னுடம்பு நறுமணங்கமழ்தலியற்கை யாதலின் வம்பறுதமெய்யென்றும், வடிவத்தாலுஞ் செயலாலும் இவள் பதுமினியை யொத்தலிற் பதுமினியென என்றும், சூரியனைக்கருதித் தான்பயின்ற மந்திரத்தைச் செபித்தபொழுதே அவன் வந்தமையினுல் எனக் கிம்மந்திரஞ் சித்தியாயிற்றெனு முகமலர்ந்தமையின் அம்புயானனமலர்வுற என்றுங் கூறினர். இங்ஙனம் பொருள்கொள்ளாது சூரியன் அணைத்தமையால் அவள் முகம்மலர்ந்தாள் எனப்பொருள்கொள்ளின், கன்னிகன்னி யென் கைதொடேல் என மறுத்தாள் என்னும் பிற்செய்யுளின் கருத்தோடு முரணுதலால் அது பொருந்தாதென்க. (ருஉ)

கன்னிகன்னியென்கைதொடேன்மடந்தையர்கற்புநீயறிகிற்றி
யென்னமெய்குலைந்தலமரநாணினுளிதயமும்வேறாகி
யன்னயென்னடையஞ்சினளரற்றநனுமருகுறுன்விடப்போய்நின்
றுன்னியென்னைநீயழைத்ததென்பெறவெனவுருத்தனனுரைசெய்வான்

(இ - ள்.) அன்ன மென் நடை - (அப்பொழுது) அன்னம்போன்ற மிருதுவான நடையையுடைய பிரதையானவள்—கன்னி கன்னி என் கைதொடேல் - யான் கன்னிகை கன்னிகை என்கையைத் தீண்டற்க—மடந்தையர் கற்பு நீ அறிகிற்றி என்ன - பெண்களுடைய கற்பை நீ அறியவல்லை என்று—மெய் குலைந்து அலமர நாணினாள் - சரீரங்குலைந்து வருந்த வெட்கித்து—இதயமும் வேறாகி அஞ்சினள் அரற்றலும் - மனமும் வேறுபட்டு அஞ்சி அழவும்—அருகு உறான்விடப்போய் நின்று-சமீபத்தில் நில்லாமற் றூரத்திற்போய் நின்று – நீ என்னை உன்னி அழைத்தது என் பெற என-நீ என்னைச் சிந்தித்தழைத்தது என்னிடத்து என்ன பெற என்று—உருத்தனன் உரைசெய்வான் - கோபித்துச் சொல்லுவான். எ-று.

நாணினாள், அஞ்சினள், அருகுறான், உருத்தனன் என்பன வினையெச்சமுற்றுக்கள். இதயமும் என்னும் உம்மை எச்சத்தோடு சிறப்பு. அரற்றலும் உம்மீற்று வினையெச்சம். அறிகிற்றி என்பது கில் என்னும் ஆற்றலிடைநிலை பெற்றுவந்த முன்னிலை வினைமுற்று. விடப்போதல் ஒருசொல். அன்னமென்னடை உவமைத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. கன்னி கன்னி என்னும் அடுக்கு அச்சப்பொருட்கண்வந்தது. (கக)

உருக்கொள்சாயையுமுழையுமங்கறிவுறாதொளித்துநான்வரவேநீ
வெருக்கொளாவெனைமறுத்தனையுனக்குமுன்மெய்ம்மறையுரைசெய்த
குருக்களென்படானென்படாதரிவைநின்குலமெனக்கொடித்திண்டே
ரருக்கன்மெய்யினுமனமிகக்கொதித்தனனாயிரமடங்காக.

(இ - ள்) அரிவை - பெண்ணே—அங்கு உருக்கொள் சாயையும் உழையும் அறிவுறாது ஒளித்து நான் வர - என்மாளிகையில் அழகினையுடைய என்மனைவிகளாகிய சாயையும் உழையும் அறியாமல் ஒளித்து நான் உன்னிடத்தில் வர—நீ வெருக்கொளா எனை மறுத்தனை - நீ அஞ்சி என்னை வெறுத்தாய்—உனக்கு முன் மெய் மறை உரைசெய்த குருக்கள் என்படான் - உனக்குமுன்னே மெய்ம்மையாகிய மந்திரத்தை உபதேசித்த குருக்கள் என்னபாடுபடான்—நின் குலம் என்படாது என - உன் வம்மிசம் என்னபாடுபடாது என்று—கொடித் திண் தேர் அருக்கன் - கொடிகட்டிய வலிய தேரையுடைய சூரியன்—மெய்யினும் ஆயிரமடங்காக மனம் மிகக் கொதித்தனன் - தன் சரீரத்தினும் ஆயிரமடங்கு அதிகமாக மனம் மிகக் கொதிப்படைந்தான். எ - று.

ஏ - அசை மெய்யினும் என்னும் இன்னுருபு நீக்கப்பொருட்டு. நீ என்னை வரும்படி மந்திரத்தாலழைத்தகாலம் இரவாதலால் என்மனைவியரிருவரும் அறியாதபடி வந்தேன் என்பான் சாயையுமுழையுமறிவுறா தொளித்துநான்வர என்றும், என்மனைவியரை அறியாது வந்தது உன்மேற்கொண்ட அன்பின் மிகுதியேயாகவும் என்னை அஞ்சி நீயிகழ்தல் தவறென்பான் வெருக்கொளாவெனை மறுத்தனை என்றும், எத்துணைப்பேராற்ற லுடையோரையும் பிடர் பிடித்துந்தி அழைத்தோர் மாட்டுவிடவல்ல மறையென்பான் மெய்ம்மறையென்றும், இவ்வாற்றலுடைய மந்திரத்தைத் தக்கார்க் குபதேசியாமையின் அவ்வாசாரியன் நரகயாதனையை அடைவான் என்பான் மறையுரைசெய்த குருக்களென்படான் என்றுங் கூறினான். உருக்கொள்சாயை என்பதற்கு உழை யென்பவளுடைய உருவத்தின் நிழலாகிய சாயையெனினும் பொருந்தும். சூரியனுடைய மனைவியாகிய உழையென்பவள் அவன் வெம்மையைப் பொறுக்கலாற்றாது தன்னிழலைத் தன்னைப்போ

லொரு பெண்ணுக்கி அவனிடம்விட்டு மறைந்தாள் என்னுங் கதைபற்றி இங்ஙனம் பொருளுரைக்கப்பட்டது. (ருச)

உனையளித்தவன் முனியுமென் றஞ்சனீயுடன்படுமுணர்வானல்
வினையளித்ததென் றணைதியேலின்பமுழும்விழைவுறும்படிதுய்த்தி
யெனையளித்ததொல்லதிதியினுனக்கிசையெய்துமாறிகன்மைந்தன்
றனையளித்திமற்றென்னினுமிருநிலந்தாடொழத்தக்கோனே.

(இ- ள்.) உனை அளித்தவன் முனியும் என்று நீ அஞ்சல் - பெண்ணே உன்னைப்பெற்ற பிதா கோபிப்பான் என்று நீ அஞ்சற்க—உடன்படும் உணர்வால் நல்வினை அளித்தது என்று அணைதியேல் - சம்மதித்த மனத்தோடு நல்வினைதந்தது என்று என்னை நீ புணர்வையாயின்—இன்பமும் விழைவு உறும்படி துய்த்தி - இன்பத்தையும் ஆசைமிகும்படி அனுபவிக்குதி (அதுவன்றி)—எனை அளித்த தொல் அதிதியின் உனக்கு இசை எய்துமாறு - என்னைப் பெற்ற பழைய அதிதியிலும் பார்க்க உனக்குப் புகழ்வரும்படி—இகல் மைந்தன்றனை அளித்தி - வலிய புதல்வனையும் பெறுவாய்—என்னிலும் இரு நிலம்தாள் தொழத்தக்கோன் - அவன் என்னிலும்பார்க்கப் பெரிய பூமியிலுள்ளோர்வணங்கத்தக்கவன். எ - று.

மற்று, ஏ - அசைகள். ஆலுருபு உடனிகழ்ச்சிப் பொருட்கண்வந்தது. இன்பமும் என்னும் உம்மை எச்சம். மைந்தன்றனையும் என்னும் எச்சத்தோடு சிறப்புப்பொருடரும் உம்மை விகாரத்தாற்றொக்கது. அதிதியின், என்னினும் என்னும் இன்னுருபுகள் நீக்கப்பொருள. துய்த்தி, அளித்தி என்பன இகரவீறெதிர்காலங் காட்டிய முன்னிலையொருமை வினைமுற்றுக்கள். அஞ்சல் முன்னிலையொருமையேவ லெதிர்மறைத் தெரிநிலை வினைமுற்று. (ருரு)

ஆயிரங்கரத்ததிபதிபுகழ்ந்து நூறுயிரமுமாகப்
போயிரந்திவையுரைத்தபின்மதர்விழிப்புரிவுமூரலுநல்கி
வேயிருந்தடந்தோளிடந்துடித்திடமெல்லியன்மதன்வேதப்
பாயிரங்கொலென்றையுறவவனொடும்பனிமலரணைசேர்ந்தாள்.

(இ - ள்) ஆயிரம் கரத்து அதிபதி - ஆயிரங்கிரணங்களையுடைய சூரியன்—போய் நூறுயிரம் முகம் ஆகப் புகழ்ந்து இரந்து இவை உரைத்தபின் - போய் லக்ஷம் வாயிலாகப் புகழ்ந்து யாசித்து இவ்வசனங்களைச் சொன்னபின்—மெல்லியல் - மெல்லிய இயல்பினையுடைய பிரதையானவள்—மதர் விழிப்புரிவும் மூரலும் நல்கி - மதர்த்த கண்ணினது குறிப்புநோக்கையும் சிரிப்பையும் கொடுத்து—வேய் இரும் தடம் தோள் இடம் துடித்திட - மூங்கில்போன்ற பெரிய விசாலமாகிய இடத்தோள் துடிக்க—மதன் வேதப் பாயிரங்கொல் என்று ஐயுற - மதனசாத்திரத்தின் பாயிரமோ என்று (சூரியன்) சந்தேகிக்கும்படி—அவனொடும் பனி மலர் அணை சேர்ந்தாள் - அவனோடுங் குளிர்ந்த பூவணையிற் புணர்ந்தாள். எ-று.

விழிப்புரிவும் மூரலும் நல்கி என்றதிலக்கணை. தான் புணர்ச்சிக்குடன் பட்டமையை அவன் ஐயுறாது துணியத்தக்க இங்கிதங்களைப்புரிந்தாள் என்பார் மதர் விழிப்புரிவுமூரலுநல்கி என்றும், மதனசாத்திரப் பொருளனைத்தும் இப்புணர்ச்சியி லடங்கிய என்பார் மதன்வேதப்பாயிரங்கொலென்றையுற என்றுங் கூறினார். பிறரையுறச் சேர்ந்தாள் எனப் பொருள்கோடல் சிறப்பின்று. (ருசு)

தினகரன்சுடர்வடிவமுமமிர்தெழுதிங்களின்வடிவாகத்
தனதடந்திருமாபுறத்தழீஇயபின்றையறன்னினைவெய்த
மனமகிழ்ந்ததும்வந்ததுமணந்ததும்வரங்கொடுத்ததுமெல்லாங்
கனவெனும்படிகரந்தனன்பெருந்தகைக்கன்னியுங்கருக்கொண்டாள்.

(இ - ள்.) தினகரன் - சூரியனானவன்—சுடர் வடிவமும் அமிர்து எழு திங்களின் வடிவு ஆக - தனது உஷ்ணகிரணத்தையுடைய சரீரமும் அமிர்தகிரணத்தையுடைய சந்திரனது வடிவம்போலாக—தையல்தன் தனதடம்திருமார்பு உறத் தழீஇய பின் - பிரதையினுடைய முலைத்தடங்கள் அழகிய தன்மார்பிற் பொருந்தச் சேர்ந்தபின்பு—நினைவு எய்த மனம் மகிழ்ந்ததும் - (அவள்தன்னை) நினைக்க மனம் உவந்ததும்—வந்ததும் மணந்ததும் வரம் கொடுத்ததும் எல்லாம் - பின்பு வந்ததும் புணர்ந்ததும் (கன்னிகையாவை என்று) வரங் கொடுத்ததும் ஆகிய எல்லாம்—கனவு எனும்படி கரந்தனன் - அவள் கனவென்றெண்ணும்படி மறைந்தான்—பெரும் தகைக் கன்னியும் கருக்கொண்டாள் - பெருந்தகைமையினையுடைய கன்னிகையாகிய அவளும் கருப்பிணியாயினாள். எ - று.

வடிவமும் கன்னியும் என்னும் உம்மைகள் எச்சத்தோடு சிறப்பு. திங்களின் வடிவாகத் தழீஇயபின் கனவெனும்படி கரந்தனன் என்றியையும். வடிவாக என்பதில் ஆக்கம் உவமைகுறித்து நின்றது; "ஆள்வாரிலிமாடாவேனோ" என்புழிப் போல. தனக்குரிய உஷ்ணத்தோடு புணரில் இவள் சகிக்கமாட்டாள் என்றுதன் மேனியைக் குளிரச்செய்தான் என்பார் சுடர்வடிவமும் அமிர்தெழுதிங்களின் வடிவாக என்றும், தோன்றி உடன்மறையும் கனவுபோல விரைந்து மறைந்தான் என்பார் கனவெனும்படி என்றும், பேதைப்பருவத்தினை யுடையளாகிய தன்னைப் புணர்தற்பொருட்டுச் சூரியன்கொடுத்த பெதும்பைப் பருவத்தை யுடையள் என்பார் பெருந்தகைக்கன்னி என்றுங் கூறினார். தனதடந்திருமார் புறத்தழுவல் கரணவிசேடம். (கூஎ)

அந்தியாரழலெனப்பரிதியினொளியடைந்தபினணிமாடக்
குந்திபோசன்மாமடமகளெழினலங்கொண்டகொள்கையளாகி
யிந்திராதிபரவரவர்முகமலர்ந்திரந்தனதரத்தக்க
மைந்தனானவனொருவனைப்பயந்தனண்மாசிலாமணியென்ன.

(இ - ள்.) அணி மாடக் குந்திபோசன் மா மடமகள் - அழகிய மாடத்திலிருக்குங் குந்திபோசராசனுடைய பெருமையாகிய மடமைபொருந்திய புத்திரியானவள்—அந்தி ஆர் அழல் எனப் பரிதியின் ஒளி அடைந்த பின் - மாலைக்காலத்திற் சுவாலிக்கின்ற அக்கினிபோலச் சூரியனது ஒளியைக்கொண்ட பின்—எழில் நலம் கொண்ட கொள்கையள் ஆகி - பேரழகைக்கொண்ட சுபாவத்தை யுடையளாய்—இந்திராதிபர் அவரவர் முகம் மலர்ந்து இரந்தனதரத்தக்க - இந்திரன் முதலாகிய தலைவர் பலரும் முகமலர்ந்து இரந்தவைகளைக் கொடுக்கத்தக்க—மைந்தனானவன் ஒருவனை - புத்திரனொருவனை—மாசு இலா மணி என்னப் பயந்தனள் - குற்றமில்லாத இரத்தினம்போலப் பெற்றாள். எ - று.

இரந்தன என்பது அஃறிணைப்பலவின்பாற் படர்க்கைத் தெரிநிலைவினையாலணையும்பெயர். மாலைக்காலத்திற் சூரியன் தன்னொளியை அக்கினிக்குக்கொடுக்க அவன் வாங்குமாறுபோல இவளும் சூரியனைப்புணர்ந்தவுடன் அவனொ

ளியைக்கொண்டாள் என்பார் அந்தியாரழலெனப்பரிதியி னொளியடைந்தபின் என்றும், "இன்ன திரக்கப் படுத விரந்தவ ரின்முகங் காணு மளவும்" என்பவாக லின்,இரக்கப்படுவோனுகிய இம்மைந்தனுடைய கொடைவிசேடத்தை யுணர்த்து வார் முகமலர்ச்சியை இரப்பவர்க்கேற்றி முகமலர்ந்திரந்தன என்றுங் கூறினர். இனி இரக்கப்படுவோர்க்கேற்றி இரந்தன முகமலர்ந்துதரத்தக்க என்றியைப்பினும மையும். சூரியன் அஸ்தமயனகாலத்திற் றன்னொளியை அக்கினிக்குக்கொடுத்து உதயகாலத்தில் வாங்கிக்கொள்வன் என்பது நூற்றுணிபென்க. (௩அ)

சூரன்மாமகள்சூரனதருளினுற்றுலங்குகன்னிகையாகி
வாரமாமணிக்கவசகுண்டலத்துடன்வருமகன்முகநோக்கிப்
பாரமாமரபினிற்பிறந்தவர்மொழிப்பழிதினுக்கழுதஞ்சிப்
பூரமாநதிப்பேடகத்திடைநனிபொதிந்தொழுக்கினண்மன்னே.

(இ - ள்.) சூரன் மாமகள் - சூரன் என்னும் அரசனுடைய பெருமைபொரு ந்திய புதல்வியாகிய பிரதையானவள்—சூரனது அருளினுல் துலங்கு கன் னிகை ஆகி - சூரியனது கிருபையினல் விளங்குகின்றகன்னிகையாகி—மாமணிக் கவச குண்டலத்துடன் வரும் வார மகன் முகம் நோக்கி - பெரிய இரத்தினங்க ளழுத்திய கவசகுண்டலங்களோடு பிறந்த அன்பையுடைய புதல்வனது முகத் தைப்பார்த்து—பார மா மரபினில் பிறந்தவர் மொழிப்பழிதினுக்கு அஞ்சி அழுது- உயர்ந்த பெரிய வம்மிசத்திற் பிறந்தவர்களுடைய சொல்லால் வரும் வசைக்குப் பயந்து அழுது—பேடகத்திடை நனி பொதிந்து-பெட்டகத்தில் (அப்புதல்வனை) மிகப் பாதுகாத்துவைத்து—பூர மா நதி ஒழுக்கினள் - நிறைந்தபெரிய கங்கையில் விட்டாள். எ - று.

மன், ஒ - அசைகள். புதல்வற்பெற்றபின்னுங் கன்னியர்க்குரிய இலக்கண மனைத்தும் அமைந்திருந்தாள் என்பார் துலங்குகன்னிகையாகி என்றும், குடிப் பிறந்தார்வாய்ச்சொல்லையே உலகங்கொள்ளுமாதலால் அதற்கஞ்சி அழுதாள் என் பார் பாரமாமரபினிற் பிறந்தவர்மொழிப்பழிதினுக் கஞ்சியழுது என்றும், பேடக த்தைச் சமீபத்தில் விடாது தூரத்திற்போக்குங் கருத்துடையளாய் மிக்க நீர்ப் பெருக்கில் விடுத்தாள் என்பார் பூரமாநதியொழுக்கினள் என்றும், நதியில்விடும் பொழுது புதல்வற்குக் கேடுண்டாகாவண்ணம் பேடகத்தில் நன்றாய்ப்பொதிந் தாள் என்பார் நனிபொதிந்தென்றுங் கூறினர். (௩௯)

குஞ்சரத்திளங்கன்றெனச்சாபவெங்கோளரியெனப்பைம்பொற்
பஞ்சரத்திடைவருதிருமதலையைப்பகீரதியெனுமன்னை
சஞ்சரத்திரைக்கரங்களாலெடுத்தெடுத்தசையவேதாலாட்டி
வெஞ்சரச்சிலைச்சூதநாயகன்பதிமேவுவித்தனளன்றே.

(இ - ள்.) குஞ்சரத்து இளம் கன்று என-யானையி னிளையகன்றுபோலவும்— வெம் கோளரிச் சாபம் என - கொடிய சிங்கக்குட்டிபோலவும்—பைம்பொன் பஞ்சரத்திடை வரு திரு மதலையை - பசிய பொற்பெட்டகத்தில் வருகின்ற அழ கிய புதல்வனை—பகீரதி எனும் அன்னை-கங்கை என்னுந் தாயானவள்—சஞ்சரத் திரைக் கரங்களால் எடுத்து எடுத்து அசையத்தாலாட்டி-அசைகின்றதிரையாகிய கைகளால் தூக்கித்தூக்கி அசையும்படி தாலாட்டி—வெம்சரச் சிலைச் சூதநாயகன் பதிமேவுவித்தனள் - கொடிய அம்புபொருந்திய வில்லையுடைய தேர்ப்பாகர்களுக் கதிபனிருக்கும் இடத்தை அடைவித்தாள். எ - று.

ஏ இரண்டும் அன்றும் அசைகள். எடுத்தெடுத்தென்னும் அடுக்கு ஒருதொழில் பலகால் நிகழ்தல் பற்றிவந்தது. சாபவெங்கோளரி பின்மொழிநிலையல்; மதிநுட்பம் என்பதுபோல. தோற்றப்பொலிவாற் குஞ்சரத்திளங்கன்றையும் வீரத்தாற் சாபவெங்கோளரியையும் உவமை கூறினர். பாகராயினர் தநுர்வேதமுதலியவற்றை நங்கற்று வல்லராயிருத்தல் அவர் சாதிதருமமாதலால், வெஞ்சரச்சிலைச்சூதநாயகன் என்றடைகொடுத்தார். தாலாட்டு ஈண்டுத்திரையொலியென்க. (சo)

கோடகப்படவரும்புனல்விழைவினுற்குளிர்துறைமருங்குற்றோர்
பேடகத்திடையொழுகியதினபதிபெருங்குமரனைக்கண்டு
சூடகக்கையம்புயமலரிராதையுஞ்சூதபுங்கவன்றானு
மாடகக்குலமடைந்ததொத்தரும்பெறலாதரத்தொடுகொண்டார்.

(இ - ள்.) கோடு அகப்பட வரும் புனல் விழைவினால் - கரையுமுட்படப் பெருகுகின்ற நீரில் (முழுகும்) வேட்கையினால்—குளிர் துறைமருங்கு உற்றோர்- குளிர்ந்த கங்கைக்கரையை அடைந்த—சூடகக் கை அம்புய மலர் இராதையும் சூத புங்கவன் தானும் - வளையல்பொருந்திய கையாகிய தாமரை மலரையுடைய இராதை என்பவளும் (அவளுடைய நாயகனாகிய) தேர்ப்பாகர்களுக் கதிபனும்—பேடகத்திடை ஒழுகிய தினபதி பெரும் குமரனைக் கண்டு - பெட்டகத்தினுள் வந்த சூரியனுடைய பெருமையாகிய புத்திரனைக்கண்டு—ஆடகக் குலம் அடைந்தது ஒத்து - (வறிஞர்) பொற்குவை பெற்றதுபோன்று—பெறல் அரும் ஆதரத்தொடு கொண்டார் - பெறுதற்கரிய விருப்போடு எடுத்தார்கள். எ - று.

உற்றோர் தெரிநிலைவினைப்பெயரெச்ச முற்று. கோடும் என்னுஞ் சிறப்பும்மை விகாரத்தாற்றொக்கது. இராதையும் சூதபுங்கவன்றானும் குளிர்துறை மருங்குற்று ஓர்பேடகத்திடை யொழுகிய குமரனைக்கண்டு ஆதரத்தொடுகொண்டார் என்றும், துறைமருங்குற்றோரில் இராதையுஞ் சூதபுங்கவன்றானும் கண்டு ஆதரத்தொடு கொண்டார் என்றும் இயைத்துப் பொருள்கொள்ளினும் பொருந்தும். நெடுங்காலம் புதல்வற்பேறின்றியிருந்த இவர்க்கு அரிதாய் இப்புதல்வன் அகப்பட்டான் என்பார் ஆடகக்குலம் அடைந்ததொத்து என்றார் (சக)

அதிரதன்றிருமனையினில்விழைவுடனரும்பியபனிக்கற்றை
மதியெனும்படிவளர்ந்துதிண்டிறல்புனைமழுவுடைவரராமன்
பதயுகந்தொழூஉவரிசிலைமுதலியபலபடைகளுங்கற்றுக்
கதிரவன்றருகன்னனென்றுலகெலாங்கைதொழுங்கவின்பெற்றான்.

(இ - ள்.) அதிரதன் திருமனையினில் - அதிரதனாகிய பாகனுடைய அழகிய வீட்டில்—பனிக்கற்றை அரும்பிய மதி எனும்படி விழைவுடன் வளர்ந்து - நிலவையரும்பும் பிறையென்று சொல்லும்படி (அப்புதல்வன்) விருப்புடன் வளர்ந்து—திண் திறல் புனை வர மழுவுடை ராமன் பதயுகம் தொழூஉ - மிக்க வலிபொருந்திய மேலான பரசுராமனுடைய இருபாதங்களையும் வணங்கி—வரிசிலை முதலிய பல படைகளும் கற்று - வரிந்த வின்முதலிய பல படைக்கலத் தொழில்களையும் படித்து—கதிரவன் தரு கன்னன் என்று - சூரியன்கொடுத்த கன்னன் என்னும் நாமத்தை யுடையானென்று—உலகு எலாம் கை தொழும் கவின்பெற்றான்-உலகமெல்லாம் வணங்கும் சிறப்பைப் பெற்றான். எ - று.

படைகள் ஆகுபெயர். புனேயென்னும் வினைத்தொகை மழு என்னும் பெயர் கொண்டது. இளம்பிறைபோல நாளொருவண்ணமாய் வளர்ந்தான் என்பார் அரும்பிய பனிக்கற்றை மதியெனும்படி வளர்ந்து என்றும், பெற்ற தாய் தந்தையினுந் தன்னைமிகச் சீராட்டுதலால் அவர்களை மிகவுவந்தான் என்பார் விழைவுடன் என்றும், தநுர்வேத முதலியனவே யன்றி ஏனைக்கலைகளையு மவன் மாட்டுக்கற்ருன் என்பார் முற்ருேடெச்சப்பொருடரும் உம்மை புணர்த்திப் படைகளும் என்றும், இந்நாமம் சூரியனுற் கொடுக்கப்பட்டது என்பார் கதிரவன்றரு கன்னன் என்று என்றும், இந்த மேன்மைகளினுலேயே உலகெலாங் கைதொழுத்ன என்பார் உலகெலாங் கைதொழுங் கவின்பெற்ருன் என்றுங் கூறினுர். அதிரதத்தைப் பாகனுய்ச்செலுத்து முரிமைபற்றி இவனேயும் அதிரதனென்ருர். பனிக்கற்றை என்பது ஈண்டு ஒருசொல்லாய் நிலாவையுணர்த்திற்று. அதிரதனுகிய திருதராட்டிரன் றேர்ப்பாகனை அதிரதன் என்றுபசரித்தார் எனினும் அமையும்.

வேறு.

கன்னற்பயந்தகதிர்வெம்முலைக்கன்னிதன்னை
முன்னர்ப்பயந்தோன்முகவோலையுவகையோடு
மன்னர்க்கெழுதமடப்பாவைவரிக்குமென்று
சென்னற்படைவேன்முடிமன்னவர்சென்றுசேர்ந்தார்.

(இ - ள்.) கன்னற் பயந்த வெம் கதிர்முலைக் கன்னிதன்னை முன்னர்ப்பயந்தோன் - கன்னனைப்பெற்ற விரும்பப்படும் ஒளிசெய்யும் முலைகளையுடைய கன்னிகையை முன்பெற்ற சூரன் என்னும் அரசன்—முக ஓலை உவகையோடு மன்னர்க்கு எழுத - மணத் திருமுகத்தை மகிழ்ச்சியோடு அரசர்களுக்கு எழுத—செல் நற்படை வேல் முடி மன்னவர் - (பகைவர்நெஞ்சிற் றப்பாது) செல்லுகின்ற நல்ல படைக்கலங்களையுடைய முடியையணிந்த அரசர்கள்—மடப்பாவை வரிக்கும் என்று சென்று சேர்ந்தார்-மடமையையுடைய பாவைபோன்ற பிரதையானவள் மணத்திற்கு நம்மை நியமிப்பாள் என்று போய்ச்சேர்ந்தார்கள். எ-று.

பாவை ஆகுபெயர். முகவோலை என்பது திருமுகமாகிய ஓலையென விரிதலிற் பண்புத்தொகை. கதிர்முலை வினைத்தொகை. பெண்கள்மாட் டாடவரையவாவச்செய்யு மவயவம் பலவுளவாயினும் அவற்றுள் முலையுங் கண்ணுமேமிகச் சிறந்தனவாதலின் வெம்முலை என்ருர். செந் நெற்கதிர் வேல் என்று பாடமோதிச் செந்நெற்கதிர்போன்ற வேல் எனப் பொருள்கொள்வதும் ஒன்று.(சந)

உருவஞ்சிறந்துபலகோளுமுதிக்குமேனு
மருவுங்குமுதமதிகண்டுமலருமாபோற்
பருவஞ்செய்பைம்பொற்கொடியன்னவள்பாண்டுவென்னு
நிருபன்றனக்கேமணங்கூர்பெருநேயமுற்ருள்.

(இ - ள்.) உருவம் சிறந்து பலகோளும் உதிக்குமேனும் - அழகுசிறந்து பல கிரகங்களும் உதிப்பினும்—மருவும் குமுதம் மதிகண்டு மலருமா போல் - (அலரும்பருவத்தைப்) பொருந்துங் குமுதம் சந்திரனைக்கண்டு அலருமாறுபோல—பருவம் செய் பைம் பொற் கொடி அன்னவள்-பக்குவத்தையுடைய பசிய பொற்கொடிபோன்ற பிரதையானவள்—பாண்டு என்னும் நிருபன் தனக்கே - பாண்டு என்னும் அரசனையே—மணம் கூர் பெரு நேயம் உற்ருள்-மணஞ்செய்தல்வேண்டும் என்னும் பேராசையைப் பொருந்தினுள். எ.- று.

ஏகாரம் பிரிநிலை. பலகோளும் என்னும் உம்மை முற்று. உதிக்குமேனும் உம்மீற்று வினையெச்சம். மாறு என்பது மா எனக் குறைந்துநின்றது. செய்யென்னும் வினைத்தொகை அன்னவள் என்னுங் குறிப்பு வினையாலணையும் பெயரில் விகுதியோடு முடிந்தது. தனக்கென்னு நான்கனுருபு இரண்டனுரும்பாகத் திரிக்கப்பட்டது. சந்திரனிலுஞ்சிறந்து சூரியன் முதலாகிய பிறகோள்கள் உதிக்குமாயினும், குமுதம் அவற்றின் முன்னலராது சம்பந்தத்தால் அச்சந்திரனைக் கண்டலருமாறுபோல, இவளும் பாண்டுவினுஞ்சிறந்த பல அரசர் சுயம்வரத்திற்கு வந்தாராயினும் அவரை மணஞ்செய்தற் குடன்படாது ஊழ்வயத்தால் இவற்குடன்பட்டாள் என்க. உருவஞ்சிறத்தல் என்றது சந்திரனைப்போலத் தேய்தல் வளர்தல் களங்கமுடைமை முதலிய குற்றமின்மையை யென்றறிக. பலகோளெனப் பொதுப்படக்கூறினரேனும் ஏற்புழிக்கோடலால் இராகு கேது சனி என்னுங் கோள்களை ஈண்டொழிக்க. (சச)

தானேயுவந்துதனித்தார்புனைதையல்வென்றி
யானேறனையானுயிர்க்காரமிர்தானபின்னர்
யானேதருவனெனமத்திரராசனல்க
மானேயனையவிழியாளைவதுவைசெய்தான்.

(இ - ள்.) தானே உவந்து தனித் தார் புனை தையல் - (கொடுப்பாரின்றித்) தானே மகிழ்ந்து ஒப்பற்ற மாலையைச்சூட்டிய பிரதையானவள்—வென்றி ஆன் ஏறு அனையான் உயிர்க்கு ஆர் அமிர்து ஆன பின்னர் - வெற்றியையுடைய இடபேறுபோன்ற பாண்டுமகாராசனது உயிருக்குப் பெறுதற்கரிய அமிர்தம்போலான பின்பு—மத்திரராசன் - மத்திரதேசத்தரசன்—மானே அனைய விழியாளை யானே தருவன் என நல்க - (மருட்சியால்) மானையேயொத்த நோக்கத்தையுடைய என் மகளாகிய மத்திரையை நானே மணஞ்செய்து தருவேன் என்றுதத்தஞ்செய்ய—வதுவை செய்தான் - அவளைக் கலியாணஞ்செய்தான். எ - று.

முன்னைய ஏகாரங்களிரண்டும் தேற்றம். பின்னையது பிரிநிலை. இளநாகைப் புல்லப் பல ஆனேறுகள் ஆசைகொண்டுநெருங்கினும் அதனைப்புல்லி இன்பமனுபவித்தல் வென்றியானேற்றிற்கேயாயவாறுபோல, சுயம் வரத்திற்குவந்த அரசர் பலருளராயினும் இவளைத்தழுவி யின்புறுதல் வல்லனாகிய இவற்கே யுண்டாயிற்றென்பார் வென்றியானேறனையான் என்றும், அமிர்தந் தன்னை யுண்டார்க்குப் பிறசுவைகளினிடத்துச் செல்லும் அவாவைக்கெடுத்துத் தன்சுவைக் கண்ணே அவர்மனமழுந்தச் செய்யுமாறுபோல, இவளும் தன்னையன்றி ஏனைமகளிரை அவன்மனம் அவாவாவண்ணம் காமச்சுவைகள் பலவற்றையும் கொடுத்தாள் என்பார் உயிர்க்காரமிர்தானபின்னர் என்றுங்கூறினர். (சரு)

எண்ணுற்றசூரனிகன்மத்திரராசனென்ன
மண்ணுற்றசீர்த்திவயமன்னர்மகளிரோடுங்
கண்ணுற்றகானில்விளையாடல்கருதியம்பொன்
விண்ணுற்றசாரலிமையப்புறமேவினானே.

(இ - ள்.) எண் உற்ற சூரன் இகல் மத்திரராசன் என்ன மண் உற்ற சீர்த்தி வய மன்னர் மகளிரோடும் - (பாண்டுமகாராசன், எவராலும்) மதிக்கப்பட்ட சூரன் வலிய மத்திரராசன் என்று பூமியில் மிக்க கீர்த்தியையுடைய வெற்றிபொருந்திய அரசர்களுடைய குமாரிகளோடும் — கண் உற்ற கானில்

விளையாடல் கருதி - விசாலித்த காட்டில் வேட்டையாடுதலை நினைத்து—விண் உற்ற அம் பொன் இமயச் சாரற்புறம் மேவினான் - ஆகாயத்தைத் தீண்டிய அழகிய பொன்மயமாகிய இமயமலைச்சாரலிற் சென்றான். எ-று.

ஏ-அசை. புறமென்றது ஈண்டு இடவிசுப்பமுணர்த்தும் பெயராகாது ஏழனுருபாய் நின்றது. வேட்டைவினை செய்தற்குரிய கானம் என்பார் கண்ணுற்றகானம் என்றார். (சசு)

கானத்தினுள்ளகலைமானினங்காட்சியாமா
வேனத்திரள்வெம்புலியெண்குடன்யாளிசிங்கந்
தானப்பகடுமுதலாயசனங்களெல்லா
மானச்சரத்தாற்கொலைசெய்தனன்வாகைவில்லான்.

(இ - ள்.) வாகைவில்லான் - வெற்றிபொருந்திய வில்லையுடைய பாண்டு மகாராசனானவன்—கானத்தில் உள்ள கலைமான் இனம் - காட்டிலுள்ள கலைமான்கூட்டம்—காட்சி ஆமா-சாதுரியத்தையுடைய காட்டா—ஏனத்திரள் - பன்றிக்கூட்டம்—வெம் புலி - கொடியபுலி—எண்கு உடன் யாளி சிங்கம் - கரடியோடு யாளி சிங்கம்—தானப் பகடு முதலாய சனங்கள் எல்லாம் - மதத்தையுடைய யானைமுதலாகிய மிருகத்திரளையெல்லாம்—மானச் சரத்தாற் கொலை செய்தனன் - வலிய பாணங்களாற் கொன்றான். எ-று.

உடன் எண்ணுப்பொருளில்வந்தது. வேட்டையாடும்பொழுது பிணைமான் முதலியவற்றை வதைத்தல் அரசர்க்கறமன்றென விடுத்தான் என்பார் கலைமானினம் என்றும், நக்குங்கால் இன்பமுண்டாக நக்கி உயிர்வாங்குஞ் சாதுரிய முடைத்தென்பார் காட்சியாமான் என்றுங் கூறினார். மானத்தையுடைய சரம் எனினும் அமையும். காட்சியாமா என்பதற்கு அழகையுடைய ஆமா எனப் பொருள் கோடல் சிறப்பின்று. சனம் - திரள். (ச௭)

மெய்யிற்றெறித்தகுருதித்துளிமேருவில்லி
சையத்தலர்ந்தகமழ்குங்குமத்தாதுமானக்
கையிற்சிலையோடுலவுங்கழற்காளைகேதம்
பையத்தணித்தானிமநாகபவனனென்பான்.

(இ - ள்.) மெய்யில் தெறித்த குருதித்துளி - (வெண்மையாகிய தன்) உடம்பிற்றெறித்த இரத்தத்துளிகள்—மேருவில்லி சையத்து அலர்ந்த கமழ் குங்குமத் தாதுமான - சிவபெருமானுடைய கைலாசமலையிற் பரந்த மணங்கமழும் குங்குமப் பூந்தாதை ஒப்ப—கையிற் சிலையோடு உலவும் கழற் காளை கேதம் - கையிலேந்திய வில்லோடு உலாவுகின்ற வீரக்கழலையணிந்த பாண்டுமகாராசனது இளைப்பை—இமநாக பவனன் என்பான் பையத் தணித்தான் - இமயமலையிலிருந்து வருகின்ற வாடை என்னும் வாயுவானவன் மெல்ல வீசி ஆற்றினான். எ - று.

குங்குமம் - ஆகுபெயர். பவனனென்பான் தணித்தான் என்பது "காலமுலகம்" என்னுஞ் சூத்திரவிதிப்படி அஃறிணைமுடிபேற்றல் வேண்டுமாயினும், "இசைத்தலுமுரியவேறிடத்தான." என்னுஞ் சூத்திரவிதியால் உயர்திணை முடிபேற்றதென்க. (ச௮)

பொன்னங்கழலானெதிரவ்விடைபோகம்வேட்டு
மன்னுங்கலையும்பிணைமானுமகிழ்ச்சிகூர
மின்னுங்கணையாலவனெய்துடன்வீழ்த்தபோதின்
முன்னின்றதந்தவுயிர்வந்தொர்முனிவனாகி.

(இ - ள்.) பொன் அம் கழலான் எதிர் - பொன்னாலாகிய வீரக்கழலையணிந்த பாண்டுமகாராசனுக்குமுன்னே—அவ்விடை போகம் வேட்டு மன்னும் கலையும் பிணைமானும் மகிழ்ச்சி கூர - அவ்விடத்திலே போகத்தைவிரும்பிக் (காமத்தில்) நிலையுறுங் கலைமானும் பிணைமானும் (புணர்ச்சியால்) இன்பம் மிக—அவன் உடன் மின்னுங் கணையால் எய்து வீழ்த்தபோதில் - அந்த அரசன் உடனே விளங்கும் பாணத்தால் எய்து விழுத்தினபொழுது—அந்த உயிர் ஓர் முனிவன் ஆகி வந்து முன் நின்றது - அக்கலைமான் வடிவத்தைக்கொண்ட உயிர் ஒரு இருடியாய் அவனுக்கு முன்னே வந்து நின்றது. எ - று.

அம் சாரியை. (சகூ)

நாரிக்கொருகூறரனார்முதனல்கவெய்த
வேரிக்கணையான்மிகநொந்துழிவேடமாறிப்
பூரித்தகாமநலமெய்தும்பொழுதுநின்கைச்
சோரிக்கணையாலறையுண்டுயிர்சோர்ந்துவீழ்ந்தேன்.

(இ - ள்.) அரனார் முதல் நாரிக்கு ஒரு கூறு நல்க எய்த - சிவபெருமான் முன்னே பார்வதிதேவியாருக்கு ஒரு பாகத்தைக்கொடுக்கும்படி (மன்மதன்) எய்த —வேரிக்கணையால் மிக நொந்துழி-தேனையுடைய பூம்பாணத்தால் மிக வருந்தியவிடத்து—வேடம் மாறிப் பூரித்த காமநலம் எய்தும்பொழுது - வடிவம் மாறுதலால் நிறைந்த காம இன்பத்தை நான் அனுபவிக்கும்பொழுது—நின்கைச் சோரிக்கணையால் அறையுண்டு - உன் கையிலிருந்து வந்த இரத்தந் தோய்ந்த பாணத்தால் ஊடுருவப்பட்டு—உயிர் சோர்ந்து வீழ்ந்தேன் - உயிர் தளர்ந்து விழுந்தேன். எ - று.

மாறி என்னுஞ் செய்தெனெச்சம் எதுப்பொருட்கண் வந்தது. சோரிக்கணை சாதியடை. நிராசையுடையாரையும்ஆசையுடையராக்கவல்ல பூம்பாணம்என்பான் நாரிக்கொருகூறரனார் முதனல்கவெய்தவேரிக்கணை என்றும், எவ்வுயிரினும்அதிக காமமுடையது மானேயாதலால் நாம் அதன்வடிவெடுத்தது மிக்க காமமனுபவித்தற்கென்பான் வேடமாறிப்பூரித்தகாமநலமெய்தும்பொழுது என்றும், எவ்வுயிராயினுங் காமத்தையனுபவிக்கும்பொழுது கோறல் பெரும்பாவம் என்பான் காமநலமெய்தும்பொழுது என்றுங் கூறினான். (௫0)

என்போலவின்பத்திடைநீயுமிறத்தியென்னா
வன்போடிறந்தான்முதற்கிந்தமனானபேரோன்
றன்போன்மகிழ்நனுடனேசெந்தழலினெய்திப்
பின்போயினண்மென்பிணையானவப்பேதைதானும்.

(இ - ள்.) என்போல நீயும் இன்பத்திடை அன்போடு இறத்தி என்னா - என்னைப்போல நீயும் இன்பம் அநுபவிக்கும் பொழுதில் அவ்வாசையோடு இறக்கக்கடவை என்று சொல்லி — முதல் இறந்தான் கிந்தமன் ஆனபேரோன் - முன்னமே இறந்தான் கிந்தமன் என்னும் பெயரையுடைய அம்முனிவன்—

மென் பிணை ஆன அப்பேதை தானும் - மென்மையாகிய பிணைமான் வடிவை யெடுத்த அப்பெண்ணும்—தன் போல் மகிழ்நனுடன் செம் தழலின் எய்தி - தன்னைப்போற்றான்பாவிக்கும் நாயகனோடு சிவந்த அக்கினியிற்பிரவேசித்துயிர்துறந்து—பின் போயினள் - அவனுக்குப்பின்னே போயினாள். எ - று.

ஏ - அசை. நீயும், தானும் என்னும் உம்மைகள் எச்சம். தன்னிலுந் தனக்கினியார் பிறரின்மையிற் றன்னைப்போற்பாவிக்கும் நாயகன் என்பார் தன்போன் மகிழ்நன் என்றார். (௫க)

நினைவற்றசாபநிலைபெற்றபினெஞ்சின்வேறோ
ரினைவற்றுநன்மையிதுவேயினியென்றுதேறி
மனைவைத்தகாதன்மடவாருடன்மன்றல்வேந்தன்
முனைவைத்தவாய்மைமுனிக்கானமுயன்றுசேர்ந்தான்.

(இ-ள்.) மன்றல் வேந்தன் - விவாகத்தைச்செய்த பாண்டுமகாராசன்—நினைவு அற்ற சாபம் நிலைபெற்றபின் - அபுத்திபூருவத்தால்வந்த சாபம் நிலையான பின்னர்—நெஞ்சின் வேறு ஓர் இனைவு அற்று - மனசில் வேறொரு வருத்தமும் இன்றி—இனி நன்மை இதுவே என்று தேறி - இனி (நமக்கு) நன்மை இதுவே என்று தெளிந்து—காதல் வைத்த மனை மடவாருடன் - ஆசையைத்தன்மீதுவைத்த மனைவியர் இருவரோடும்—முயன்று - தவத்தை முயன்று—முனைவைத்த வாய்மை முனிக்கானம் சேர்ந்தான்-முதன்மைபொருந்திய மெய்ம்மையையுடைய இருடிகள் வசிக்கும் வனத்தை அடைந்தான். எ-று.

ஏகாரம் தேற்றம். நினைவற்றசாபம் என்பதனை உண்டஇளைப்பு என்பதுபோலக் கொள்க. முனிவனும் பன்னியுமென்றறியாது மானென்றெண்ணி யெய்தமையான்வந்த சாபம் என்பார் நினைவற்றசாபம் என்றும், நாயகனே தவஞ்செய்ய நீ தனியேசென்றுழி உன்னை நாம் பிரிந்துய்யேம் உன்னடித்தொண்டைச்செய்வேமென்றிருவரும் அவன்மீதுவைத்த அன்பினராய்த்தொடர்ந்தார் என்பார் மனைவைத்தகாதன்மடவாரோடும் என்றுங்கூறினார். கேடுபயக்குந்தொழிலைச்செய்யாமை ஆன்றோர்க்குச்சிறப்பாயினும், ஒரோவழி வினைவயத்தான் மயங்கிச்செய்துழி அத்துன்பநோக்கி இரங்காமை பெருந்தகைமையென்றறிந்தானாதலால் நெஞ்சில் இனைவற்றும், முனிவன்சாபம் பலியாமைக்கும் பிரபஞ்சத்திலழுந்தி நரகத்துயரடையாது நற்கதிசெலுத்துதற்கும் ஏதுவாயிற்றே எனத் தவத்தை விரும்பினானாதலால் நன்மையிதுவே யினியென்றுதேறியுங் காட்டையடைந்தானென்க. ()

காண்டற்கரியமணிப்பைம்பொற்கலனோடாடை
வேண்டற்கரியவிடயங்களின்வேடமாற்றித்
தீண்டற்கரியதிருமேனியன்றேவராலும்
பூண்டற்கரியபெருமாதவம்பூண்டுகொண்டான்.

(இ - ள்.) காண்டற்கு அரிய மணிப் பைம்பொற் கலனோடு ஆடை - காணுதற்கும் அரிய இரத்தினங்களிழைத்த பசும்பொன்னாற்செய்த ஆபரணங்களோடு வஸ்திரம் (முதலிய)—வேண்டற்கு அரியவிடயங்களின் வேடம் மாற்றி-பெறுதற்கரிய விஷயங்களாலாகிய அரசவேடத்தைநீக்கி—தீண்டற்கு அரிய திருமேனியன் - எவராலும் பரிசித்தற்கும் அரியதிருமேனியையுடையனாய்—தேவராலும் பூண்டற்கு அரிய பெரு மாதவம் பூண்டுகொண்டான்-தேவர்களாலும் பொருந்துதற்கரிய பெரிய தவத்தைப்பொருந்தினான். எ-று.

தீண்டற்கும் காண்டற்கும் என்னுஞ் சிறப்பும்மைகள் விகாரத்தாற்றொக்கன. தேவராலும் என்னும் உம்மைசிறப்பு. விடயங்களின் என்னும் இன்னுருபு ஏதுப் பொருட்டு. மேனியன் குறிப்புவினைமுற்றெச்சம். பூண்டுகொண்டான்ஒருசொல். வேண்டற்கரிய விடயம் என்பதற்கு ஞானிகளால் விரும்பத்தகாத விஷயம் எனப் பொருள்கூறினும் பொருந்தும். ஒளி மிகுதி பற்றிக் கண்ணுற் காணுதற்குமரிய மணியெனினும் பொருந்தும். (ருங)

உற்றுப்புறத்துப்பகையாடியுடன்றவெல்லாஞ்
செற்றுப்புவியிற்றனியாழிசெலுத்துநீரான்
பற்றற்றயோகப்படையாலுட்பகைகளாறு
முற்றத்துறந்துபெருஞானமுதல்வனானன்.

(இ-ள். புறத்து உற்றுப் பகை ஆடி உடன்ற எல்லாம் செற்று - புறத்துப் பொருந்திப் பகைகொண்டு மாறுபட்ட எல்லாவற்றையும் அழித்து—புவியில் தனி ஆழி செலுத்தும் நீரான் - பூமியில் ஏகசக்கரத்தைச் செலுத்துந்தன்மையையுடைய பாண்டுமகாராசன்—பற்று அற்ற யோகப் படையால் - இருவகைப்பற்றும் அற்றயோகமாகிய படையினால்—உட்பகைகள் ஆறும் முற்றத் துறந்து - காமமுதலிய உட்பகையாறையும் வேரறக்களைந்து—பெருஞானமுதல்வன் ஆனான் - பெரிய ஞானத்தையுடைய தலைவனானான். எ-று.

ஆறும் என்னும் உம்மை முற்று. காமமுதலிய ஆறையும் உட்பகையென்றதற்கியைய அவற்றைக்கெடுக்கும் யோகத்தைப்படையென வுருவகித்தார். இது இயைபுருவகமென்னு மலங்காரம். (ருச)

ஆரக்குழம்பிலளைந்தாரமணிந்துவிம்மும்
பாரக்குசங்கள்பலதைவரும்பான்மைநீங்கி
நாரக்கமலகரசோதிநகங்கண்மீள
வீரக்குசங்கள்கிழிக்குந்தொழிற்கேற்றவாலோ.

(இ-ள்.) நாரக் கமல கரசோதி நகங்கள் - நீரிலுள்ள செந்தாமரைமலர்போலும் கையிற்பொருந்திய ஒளியையுடைய நகங்கள்—ஆரக் குழம்பில் அளைந்து ஆரம் அணிந்து விம்மும் - சந்தனக்குழம்பைப்பூசி முத்துவடங்களை அணிந்து பூரிக்கும்—பாரக் குசங்கள் பல தைவரும் பான்மை நீங்கி - பருத்த தனங்கள் பலவற்றைத் தடவிக் குறிசெய்யுந் தன்மையைநீங்கி—மீள - திரும்ப—ஈரக் குசங்கள் கிழிக்குந் தொழிற்கு ஏற்ற - உலர்தலில்லாத தருப்பைகளைக் கிழிக்குந்தொழிற்கு இயைந்தன. எ-று.

ஆல், ஒ - அசைகள். குழம்பில் என்னும் இல்லுருபு ஐயுருபாகத்திரிக்கப்பட்டது. அளைந்து, அணிந்து எனச் செயப்பாட்டுவினைகள் செய்வினைபோலக்கூறப்பட்டன. தைவரல் ஆகுபெயர். கமலகரசோதி என்பது வடநூன் முடிபு. (ருரு)

நாமக்கலவிநலங்கூரநயந்துநாளுங்
காமக்கனலைவளர்க்கின்றகருத்துமாற்றித்
தாமக்குழலாரிருவோரொடுதானுமொன்றி
யோமக்கனலேவளர்த்தானுணர்வுண்மைகண்டான்.

(இ - ள்.) உண்மை உணர்வு கண்டான் - மெய்புணர்வைத் தலைப்பட்ட பாண்டுமகாராசன்—நாமக் கலவி நலம் கூர - அதிசயத்தைத்தரும் புணர்ச்சியின்பம் மிக—நயந்து நாளும் காமக் கனலை வளர்க்கின்ற கருத்து மாற்றி - விரும்பி நாடோறுங் காமாக்கினியை வளர்க்கின்ற எண்ணத்தை நீக்கி—தாமக் குழலார் இருவோரொடு தானும் ஒன்றி—மாலைபொருந்திய அளகத்தலையுடைய மனைவியர்களிருவரோடுந் தானுங் கூடி—ஓமக் கனலே வளர்த்தான் - ஓமாக்கினியையே வளர்த்தான். எ - று.

ஏகாரம் - தேற்றம். இருவோரொடும் என்னும் முற்றும்மை விகாரத்தாற் றொக்கது. கூரவளர்க்கின்ற கருத்தென்றியையும். (ருசு)

இவ்வாறரியதவநாடொறுமேறுமெல்லைக்
கைவாளொழிந்துசமித்தேந்தியகாவன்மன்னன்
மைவாணெடுங்கண்வரசூரன்மகளைநோக்கிச்
செவ்வாய்மலர்வான்புவிமேலுறைதெய்வமன்னான்.

(இ - ள்.) இவ்வாறு அரியதவம் நாள்தொறும் ஏறும் எல்லை - இப்படி அரிய தவம் நாடோறும் வளருஞ்சமயத்தில்—கை வாள் ஒழிந்து - கையிலே படையை நீங்கி—புவிமேல் உறை தெய்வம் அன்னான் சமித்தேந்திய காவல் மன்னன் - (தானிருத்தற்குரிய விண்ணுலகத்தன்றிப்) பூமியிலிருக்கும் தெய்வத்தை யொத்தவனாகிய சமித்தையேந்திய உலகத்தைக் காக்கும் பாண்டுமகாராசன்—மை வாள் நெடுங் கண் வரசூரன் மகளை நோக்கி - மைதீட்டிய வாள்போன்ற நெடிய கண்ணையுடைய மேலான சூரராசன் மகளாகிய பிரதையைப் பார்த்து—செவ்வாய் மலர்வான் - சிவந்த வாயைத்திறந்து சொல்லுவான். எ - று.

அன்னான் குறிப்புவினைப்பெயரெச்சமுற்று. வரசூரன் வடநூன்முடிபு. தெய்வமன்னான் மன்னன் சமித்தேந்தியமன்னன் எனத் தனித்தனி சென்றியையும். புவிமேலுறை தெய்வமன்னான் இல்பொருளுவமை. மனைவிய ரிருவரோடிருந்தும் காமவிச்சை சிறிதுமின்றிச் செய்த தவம் என்பார் அரியதவம் என்றார். அன்னான் என்பதனை வினையெச்சமாக்கிப் பூதேவனாகிய அந்தணனை யொப்பானாய்ச் சமித்தையேந்திய மன்னன் எனினும் பொருந்தும். சமித்தையேந்துதலாலே அந்தணனையொத்தான் என்பது இதன் கருத்து. "ஐம்மூன்றதாமுடல் நவ்வரின் முன்னழிந்து பின்மிக்கணவ்வாம்" என்னும் வீரசோழிய விதியால் மைவாழ் நெடுங்கண் எனப் பிரித்து, மை தான் சிறப்புற்று வாழ்தற்குக் காரணமாகிய கண்ணெனப் பொருள்கோடலுமொன்று. (ருஎ)

பூந்தார்வியாதமுனிதாளிணைபோற்றியன்பு
கூர்ந்தார்வமுற்றியவன்பால்வரங்கோடலெய்திக்
காந்தாரிநூறுமகவானகருப்பமொன்று
வேந்தாதரிக்கத்தரித்தாள்வடமீனொடொப்பாள்.

(இ - ள்.) வடமீன் ஒடு ஒப்பாள் காந்தாரி - அருந்ததியை யொத்த கற்பினையுடைய காந்தாரியானவள்—பூந்தார் வியாதமுனி தாள் இணை போற்றி - பூமாலையையணிந்த வியாதமுனிவனுடைய இருபாதங்களையும் வழிபட்டு - அன்புகூர்ந்து ஆர்வம் முற்றி - அன்பு மிகுந்து (அது காரணமாகச் செய்யுந்) தொண்டுகளை முடியச்செய்து—அவன்பால் வரங் கோடலெய்தி - அம்முனிவனிடத்தே வரத்தைப் பெற்று—வேந்து ஆதரிக்க - திருதராட்டிரன் அன்பு செய்ய--நூறு மகவு ஆன

கருப்பம் ஒன்று தரித்தாள் - நூறு பிள்ளைகள் அடங்கிய கருப்பம் ஒன்றைத் தரித்தாள். எ - று.

ஈண்டு ஆர்வம் என்றது காரியமாகிய தொண்டை யுணர்த்தி ஆகுபெயராய் நின்றது. ஆதரிக்க என்பது காரியப்பொருட்டாய், கருப்பதிக்க என்னும் பொருளோடு, துறந்தார்ப்பேணிப் பெறுதற்கரிய நூறு மகப்பேற்றிற்குரிய வரத்தை என் நாயகி பெற்றுளே எனத் திருதராட்டிரன் அன்புசெய்ய என்னும் பொருளையும் ஒருங்கு தந்தது. துறந்தார்ப் பேணல் வாழ்க்கைத் துணைக்குச் சிறந்தகுணம் என்பதனை, "மனைத்தக்க மாண்புடையளாகி" என்பதற்குப் பரிமேலழகர் கூறிய உரையானுமுணர்க.

காந்தாரி, பசியினால் இளைப்புற்றுத் தன்னில்லில்வந்த வியாசமுனிவனை நன்குபசரித்து, நூறுபிள்ளைகளைப் பெறும் வரத்தை அம்முனிவனிடத்துப் பெற்றுத் தன் கணவனாகிய திருதராட்டிரனாற் கருத்தரித்தாள் என்பது முதனூற்கதை. தபோதனர் மிக்கிருக்கும் வடதிசைக்கட் டன்மனைவியரோடு தவஞ்செய்யும்படி சென்று அங்கு நின்று முனிவர்களோடு திருக்கைலாசத்துக்குச் செல்ல முயன்ற பாண்டுமகாராசன், புதல்வர்ப்பேறில்லாதார்க்கு ஒருபேறுமில்லை என்று அம்முனிவர்கள் சொல்லக்கேட்டு, அதன்மேலுளதாகிய அவாவினால் தன் மனைவியாகிய பிரதையை நோக்கி இதனைக் கூறினனென்க. (டுஅ)

கல்லாமழலைக்கனியூறல்கலந்துகொஞ்சுஞ்
சொல்லாலுருக்கியழுதோடித்தொடர்ந்துபற்றி
மல்லார்புயத்தில்விளையாடுமகிழ்ச்சிமைந்த
ரில்லாதவர்க்குமனைவாழ்வினினிமையென்னும்.

(இ - ள்.) கனி ஊறல் கலந்து கொஞ்சும் கல்லா மழலைச் சொல்லால் உருக்கி—கனிந்த ஊறலோடு கலந்து கொஞ்சுகின்ற பழகாத மழலைச்சொல்லினாலே உருகச்செய்து—அழுது ஓடித் தொடர்ந்து பற்றி - அழுது ஓடிப்போய்த் தொடர்ந்து பிடித்து—மல் ஆர் புயத்தில் விளையாடும் மகிழ்ச்சி மைந்தர் இல்லாதவர்க்கு - மற்போர்நிறைந்த புயங்களில் விளையாடுகின்ற மகிழ்ச்சியைத் தரும் புதல்வரில்லாதவர்களுக்கு—மனை வாழ்வின் இனிமை என் - இல்லாச்சிரமத்தினால் வருஞ் சுகம் என்னை. எ - று.

ஆம் - அசை. கனியூறல் வினைத்தொகை. மகிழ்ச்சி மைந்தர் என்பது ஆக்கப் பொருளில்வந்த இரண்டாம்வேற்றுமைத்தொகை. ஊறல் வாய்நீருக்கு வந்தமையின் ஆகுபெயர். மழலை - இளஞ்சொல். கொஞ்சுஞ்சொல் - நாப்பற்றாதசொல்; இது திசைமொழி. கற்றல் - பழகல். (டுக)

மெய்தானம்வண்மைவிரதந்தழல்வேள்விநாளுஞ்
செய்தாலுஞாலத்தவர்நற்கதிசென்றுசேரார்
மைதாழ்தடங்கண்மகவின்முகமன்னுபார்வை
யெய்தாதொழியிற்பெறுமின்பமிவணுமில்லை.

(இ - ள்.) ஞாலத்தவர் - பூவுலகத்தோர்—மைதாழ் தடம் கண் மகவின் முகம் மன்னு பார்வை எய்தாதொழியின் - மையெழுதிய விசாலமான கண்களையுடைய தம் பிள்ளைகளின் முகங்களைப்பார்க்கும் பார்வையைப் பொருந்தாவிடின்—மெய் தானம் வண்மை விரதம் தழல்வேள்வி நாளும் செய்தாலும் - சத்தியம்

ானம் வண்மை விரதம் அக்கினியாகம் ஆகிய இவற்றை நாடோறுஞ்செய்தா
லும்—நல் கதி சென்று சேரார் - சுவர்க்கத்தைப்போய்ச்சேரமாட்டார்—இவணும்
பெறும் இன்பம் இல்லை - இவ்வுலகத்திலும் அவர் அடையுமின்பம் ஒன்றுமில்லை.
எ-று.

இவணும் என்னும் உம்மை எச்சத்தோடு சிறப்பு. செய்தாலும் என்னும் உம்மை செய்தலினருமைதோன்றநிற்றலிற்சிறப்பு. தானம் தருமநெறியான் வந்த பொருளைத் தக்கார்க்குக் கொடுத்தல். வண்மை அதனை வரையாது கொடுத்தல். இதனாற் புதல்வர்ப்பேறில்லாதார்க் கிருமையின்பமு மில்லையென்றானென்க. (சுo)

மென்பாலகரைப்பயவாதவர்மெய்ம்மையாகத்
தென்பாலவர்தம்பசித்தீநனிதீர்க்கமாட்டா
ரென்பானிகழ்ந்த வினையாலிடரெய்திநின்றே
னின்பாலருளுண்டெனினுய்வனெடுங்கணல்லாய்.

(இ - ள்.) நெடும் கண் நல்லாய் - நெடுமையாகிய கண்களையுடைய பெண்ணே—மென் பாலகரைப் பயவாதவர் - மென்மையாகிய புதல்வர்களைப்பெறாதவர்கள்—மெய்ம்மை ஆகத் தென்பாலவர்தம் பசித்தீ நனிதீர்க்கமாட்டார் - சத்தியமாகப் பிதிரர்களுடைய உதராக்கினியை மிகத் தீர்க்கமாட்டார்—என்பால் நிகழ்ந்த வினையால் இடர் எய்திநின்றேன் - என்னிடத்தில் நிகழ்ந்த தீவினையாற் (புதல்வர்ப்பேறின்மையாகிய) வருத்தத்தைப் பொருந்தினேன்—நின்பால் அருள் உண்டெனின் உய்வன் - உன்னிடத்தில் அருளுண்டாயின் உய்வேன். எ - று.

எய்திநின்றேன் என்பது ஒருசொல். கண்ணுக்குரிய இலக்கணங்களுள் நீட்சியுமொன்றாதலால் நெடுங்கண் என விசேடிக்கப்பட்டது. புதல்வரல்லாதார்செய்யும் பிதிர்க்கடன்கள் தந்தைதாயரைக்குறித்துப் புதல்வர்செய்யுங் கடன்கள் போலப் பிதிரரை மிக உவப்பியாதாதலின், தென்பாலவர்தம்பசித்தீ நனி தீர்க்கமாட்டார் என்றான். (சுக)

இல்வாழ்பவர்க்குமடவாரலதியாவரின்ப
நல்வாழ்வுதேசுபுகழ்யாவுநடத்துகிற்பார்
தொல்வானவரின்மறையோரிற்றுறக்கபூமி
செல்வார்பெறும்பேறினிநீயருள்செய்தியென்றான்.

(இ - ள்.) இல் வாழ்பவர்க்கு - இல்லறத்தில் வாழுபவர்களுக்கு—இன்பம் நல்வாழ்வு தேசு புகழ் யாவும் நடத்துகிற்பார் மடவார் அலது யாவர் - இன்பம் நல்ல வாழ்வு பெருமை கீர்த்தி ஆகிய எவற்றையும் செய்யவல்லவர்கள் மனைவியர்களல்லாமல் வேறியாவர்—தொல் வானவரில் மறையோரில் துறக்க பூமி செல்வார் பெறும் பேறு - பழைய தேவர்களாலும் முனிவர்களாலுஞ் சுவர்க்க லோகத்தை அடைவார் பெறும்பேற்றை—நீ இனி அருள்செய்தி என்றான் - நீ இனி எனக்குத் தருதி என்றான். எ - று.

இல்லுருபுகள் ஏதுப்பொருட்கண்வந்தன. யாகாதிகருமங்களையேற்றுப் பலங்கொடுத்தலால் வானவரையும், அவற்றைச்செய்வித்தலால் மறையோரையும் துறக்க பூமிசேறற் கேதுவாகக்கூறினான். நீ பிறரைச்சேர்ந்து புதல்வர்ப் பெறுக

வென்றுரெழியின் அவள் அதற்குடன்படாளென்றுகருதி, உடன்படுத்துமாறு நம ருள்ளூங் காந்தாரி பிறர்க்குக் கருப்பந்தரித்தாளென்றதனோடு புதல்வற்பேற்றுல டையும் பயன்களையும் எடுத்துக்கூறி, நின்பாலருளுண்டெனினுய்வனெடுங்கண ல்லாய் இனி நீ யருள்செய்தி என்று பணிந்துங் கூறினனென்க. (சுஉ)

பொற்பாவைகேள்வன்மொழிகேட்டலும்பொன்றநாணிச்
சொற்பாலவல்லாப்பழிகூருரைசொல்வதென்னே
வெற்பார்நதிகள்சிறுபுன்குழிமேவினன்றே
விற்பாலவர்க்குப்பிறர்மேன்மனமேற்பதென்றாள்.

(இ - ள்.) பொன் பாவை - அழகிய பாவைபோன்ற பிரதையானவள்—கே ள்வன் மொழி கேட்டலும் பொன்ற நாணி - தன் நாயகன் சொன்ன வசனங்க ளைக் கேட்டலும் (அறிவு) அழிய வெட்கித்து—சொற்பால அல்லாப் பழி கூர் உரை சொல்வது என் - சொல்லும் பகுதியவல்லாத பழிமிக்க வசனங்களை நீர் சொல்லுவதென்னே—வெற்பு ஆர் நதிகள் சிறு புன்குழி மேவின் அன்றே - மலை யினின்று பெருகும் நதிகள் (கடலில்விழாது) மிகச் சிறிய குழியில்விழினன்றே- இற்பாலவர்க்குப் பிறர்மேல் மனம் ஏற்பது என்றாள் - இல்லறத்திலிருக்கும் பெ ண்களுக்குத் (தம்புருஷர்மேலன்றிப்) பிறபுருஷர்மேல் மனஞ்செல்வது என்று சொன்னாள். எ - று.

ஏ-அசை. பாவை ஆகுபெயர். கேட்டலும் உம்மீற்றுவினையெச்சம். அல்லாத என்னும் பெயரெச்சத்தீறுதொக்கது. அன்றே என்பதில் ஒகாரம் பிரிந்து நில் லாது அன்றென்பதனோடு புணர்ந்து ஒருசொல்லாய் நின்று உடம்படாமைப் பொ ருளுணர்த்திற்று. வெற்பார்நதிகள் ஐந்தாம்வேற்றுமைத்தொகை. இடைவிடாப் பெருக்குடைய என்பாள் வெற்பார்நதிகள் என்றும், அவற்றை ஒரு சிறிதாயினும் ஏற்றல் கூடாத குழி என்பாள் சிறுபுன்குழி என்றுங் கூறினாள். (சுங)

பின்னும்பலகால்வருட்டிப்பிறர்பெற்றிகாட்டி
மன்னன்புகலமடமாதுமறுக்கமாட்டாள்
கன்னன்பிறந்தொழியச்செழுங்கன்னியாகி
முன்னம்பெறுமாமறைமேன்மைமொழிந்திட்டாளே

(இ - ள்.) மன்னன் - (அவ்வசனத்தைக்கேட்ட) பாண்டுமகாராசன்—பின் னும் பலகால் பிறர் பெற்றி காட்டி வருட்டிப் புகல - பின்னும் பலதரம் பிறபெ ண்களுடைய தன்மைகளைத்தெரிவித்து (நுதலுந்தோளுமுதலாயின) தைவந்து சொல்ல—மடமாது மறுக்கமாட்டாள்—மடமையையுடைய பிரதையானவள் மறுக்க இயலாதவளாய்—முன்னம் பெறு மா மறைமேன்மை - முன்னே (துருவா சமுனிவனிடத்திற்றான்) பெற்ற பெருமையையுடைய மந்திரத்தின் மேன்மை யை—செழும் கன்னி ஆகி கன்னன் பிறந்தது ஒழிய மொழிந்திட்டாள் - அழ கிய கன்னிகையாதலினாற் கன்னன் பிறந்தது தவிரச்சொன்னாள். எ-று.

ஏ - அசை. பின்னும் என்னும் உம்மை எச்சம். மறுக்கமாட்டாள் எதிர் மறைவினைமுற் றெச்சம். ஆகி என்னுஞ் செய்தெனெச்சம் ஏதுப்பொருட்டு. வருடி என்பது வருட்டி என நின்றது; "வருட்டிற்றிகைக்கும்" என்பது போல. சுரதன்மனைவியாகிய சுதசேனையும் கன்மிடபாதன் மனைவியாகிய மதயந்தியும் தன்றாயரும் முதலாயினோர், பிறரைச்சேர்ந்து புதல்வரைப் பெற் றார்கள் எனக்கூறினான் என்பார் பிறர்பெற்றிகாட்டி என்றும், அங்ஙனங் கூறிய

வழியும் அதற்குடன்படாமை கண்டு அவளைத் தன்வயமாக்க நுதலுந்தோளுமுத லாயின தைவந்தானென்பார் வருட்டி என்றும், எத்துணை நுண்ணறிவிருப்பினும் பெண்ணறிவாதலின் அவ்வருட்டலாலே அதற்குடன்பட்டாளென்பார் மடமாது மறுக்கமாட்டாள் என்றும், தான் மந்திரோபதேசம்பெற்றமையையும் அதனுல டையும் மேன்மைகளையுமெடுத்துக்கூறி, அம்மந்திரவிசேடத்தாற் கன்னன் பிறந் ததைமாத்திரம் வடுவருமென்றஞ்சி மறைத்தாளென்பார் கன்னன்பிறந்தவொழிய மறைமேன்மைமொழிந்திட்டாள் என்றுங்கூறினர். வருடல் - தடவல். (சுச)

மருமாலைவல்லியுரைகேட்டுமகிழ்ச்சிகூரும்
பெருமாதவத்தோன்பணித்தேவியபின்னர்முன்னர்த்
தருமாதிபனைக்கருத்தான்மடத்தையலுன்னி
யருமாமறையாலழைத்தாண்மற்றவனும்வந்தான்.

(இ-ள்.) மரு மாலை வல்லி உரை கேட்டு - வாசனைபொருந்திய மாலையைய ணிந்த கொடிபோன்ற பிரதையினுடைய வசனத்தைக்கேட்டு—மகிழ்ச்சிகூரும் பெருமாதவத்தோன் பணித்து ஏவிய பின்னர் - மகிழ்ச்சி மிகும் மிகப்பெரிய தவத் தையுடைய பாண்டுமகாராசன் (நீ நினைத்த தேவரைப்புணர்ந்து புதல்வர்ப்பெறுக என்று) கட்டளையிட்டு அனுப்பிய பின்னர்—மடத் தையல் - மடமையையுடைய அப்பெண்ணனவள்—முன்னர்த் தருமாதிபனைக் கருத்தால் உன்னி - முன்னே தருமக்கடவுளை மனத்தாற் சிந்தித்து—அரு மாமறையால் அழைத்தாள் - அரிய பெருமையாகிய மந்திரத்தால் அழைத்தாள்—அவனும் வந்தான் - அவனும் வந் தான். எ-று.

மற்று - அசை. அவனும் என்னும் உம்மை சிறப்போடெச்சம். தருமாதிபன் வடநூன்முடிபு. வல்லி ஆகுபெயர். (சுரு)

வந்தித்ததெய்வமெதிர்வந்துழிமன்னுகேள்வற்
சிந்தித்தசிந்தையினளாய்மலர்ச்சேக்கைசேர்ந்து
குந்தித்தெரிவைநிறைமாமதிக்கூட்டமுற்ற
வந்தித்தெரிவைநிகரென்னவழகின்மிக்காள்.

(இ-ள்.) குந்தித் தெரிவை - குந்திதேவியானவள்—வந்தித்த தெய்வம் எதிர் வந்துழி - தான் வழிபட்ட தருமக்கடவுள் எதிரே வந்தபொழுதில்—மன்னு கேள் வற் சிந்தித்த சிந்தையினளாய் - நிலையான தன் நாயகனை நினைத்த மனத்தையு டையளாய்—மலர்ச் சேக்கை சேர்ந்து - பூவணையிற்சேர்ந்து—நிறை மாமதிக் கூட்டம் உற்ற அந்தித் தெரிவை நிகர் என்ன - பூரணசந்திரனாகிய நாயகனது கூடுதலைப்பொருந்திய மாலைக்காலமாகிய பெண் ஒப்பென்று சொல்ல—அழகின் மிக்காள் - அழகில் மேம்பட்டாள். எ - று.

குந்தித்தெரிவை இருபெயரொட்டுப் பண்புத்தொகை. ஏனைக்காலத்துமதி யைக் கூடுதலினும் உவாமதியைக் கூடுதலால் அந்தி பெரிதும் அழகுறுதலின் நிறைமாமதிக்கூட்டமுற்றவந்தித்தெரிவை என்றார். இது ஏகதேசவுருவகம். (சுசு)

வேறு.

சிவமுறமுகூர்த்தம்வாரந்தினந்திதிகரணம்யோக
நவமெனவழங்குகோளுநன்னிலைநின்றபோதி
லவனியையொருகோலோச்சியாளுமென்றறிவின்மிக்க
தவநெறிமுனிவர்கூறப்பிறந்தனன்றருமன்மைந்தன்.

(இ - ள்.) முகூர்த்தம் வாரம் தினம் திதி கரணம் யோகம் சிவம் உற - இலக்கினம், வாரம், நக்ஷத்திரம், திதி கரணம், யோகம் ஆகிய இவைகள் நன்மை மிக—நவம் என வழங்கு கோளும் நல் நிலை நின்றபோதில்—ஒன்பதென வழங்கப்படும் கிரகங்களும் நல்ல இடங்களில் நின்ற பொழுதில்—அவனியை ஒருகோல் ஓச்சி ஆளும் என்று அறிவின்மிக்க தவநெறி முனிவர் கூற - (இப்புதல்வன்) பூமியை ஒரு செங்கோலைச்செலுத்தி அரசாளுவான் என்று அறிவின்மேற்பட்ட தவவழியையுடைய முனிவர்கள் சொல்ல—தருமன் மைந்தன் பிறந்தனன் - தருமபுத்திரன் அவதரித்தான். எ - று.

கோளும் என்னும் உம்மைமுற்றுடு எச்சப்பொருட்டு. நின்றபோதிற் பிறந்தனன் முனிவர்கூறப்பிறந்தனன் எனத் தனித்தனிகூட்டிமுடிக்க. இது நிகழாநிற்க இது நிகழ்ந்ததென்னும் பொருட்கண்வந்த உற என்னுஞ் செயவெனெச்சம் நின்றவென்னும் பெயரெச்சங்கொண்டது. (கூள)

உதிட்டிரன்பிறந்தகாலையுலகினிலுயர்ந்தோர்யாரும்
வதிட்டனைமுதலாவெண்ணுமுனிவரும்வானுளோரு
நிதிப்பயன்பெற்றார்போலநேயமோடுவகைகூர்ந்தார்
மதித்தநன்னிமித்தம்யாவுமங்கலநிகழ்ந்தவன்றே.

(இ - ள்.) உதிட்டிரன் பிறந்த காலை - தருமன் பிறந்தபொழுதில்—உலகினில் உயர்ந்தோர்யாரும் - உலகத்திலுயர்ந்தோரெவரும்—வதிட்டனை முதலா எண்ணும் முனிவரும் - வசிட்டமுனிவனை முதலாகவைத்தெண்ணப்படும் இருடிகளும்—வானுளோரும் - தேவர்களும்—நிதிப்பயன் பெற்றார்போல நேயமோடு உவகை கூர்ந்தார்—திரவியமாகிய பிரயோசனத்தைப்பெற்ற வறிஞர்போல அன்போடு மகிழ்ச்சி மிகுந்தார்கள்—மதித்த நல் நிமித்தம் யாவும் மங்கலம் நிகழ்ந்த - மதிக்கப்பட்ட நன்னிமித்தமெவையும் மங்கலங்களுமுண்டாயின. எ - று.

அன்று, ஏ - அசைகள். மங்கலமும் என்னும் எண்ணும்மை விகாரத்தாற்றொக்கது. யாவும் என்னும் உம்மை முற்றுடெச்சப்பொருட்டு. நல் நிமித்தம்யாவும் மங்கல நிகழ்ந்த எனப் பிரித்து, நன்னிமித்தங்களெல்லாம் மங்கலத்தோடு நிகழ்ந்தன எனப் பொள்கோடலும் பொருந்தும். (கூஅ)

தண்பிறையெழுச்சிகண்டசலநிதியெனவேமைந்தன்
பண்புடைவதனநோக்கிப்பார்த்திவன்பாண்டுவென்பான்
கண்பனிதுளிப்பநெஞ்சங்கனிந்தினிதுருகமேனி
வண்புளகரும்பமேன்மேல்வரம்பிலாமகிழ்ச்சிகூர்ந்தான்.

(இ - ள்.) பார்த்திவன் பாண்டு என்பான்- அரசனாகிய பாண்டு என்பவன்—தண்பிறை எழுச்சி கண்ட சலநிதி என - குளிர்ந்த சந்திரனது வரவைக்கண்ட கடல்போல—மைந்தன் பண்புடை வதனம் நோக்கி -புதல்வனது தகுதிபொருந்திய முகத்தைப் பார்த்து—கண்பனி துளிப்ப - கண்கள் உவகைநீரைச்சொரிய—நெஞ்சம் கனிந்து இனிது உருக - மனம்நெக்கு நன்றாயுருக—மேனி வண்புளகு அரும்ப - சரீரம் அழகிய ரோமாஞ்சங்கொள்ள—மேன்மேல் வரம்பு இலா மகிழ்ச்சி கூர்ந்தான் - மேலும்மேலும் எல்லையில்லாத மகிழ்ச்சி மிக்கான். எ-று.

ஏ - அசை. அப்பொழுதவதரித்த புத்திரனது முகத்தைக்கண்டு மகிழ்ந்தமையினால் நிறைமதியெழுச்சிகண்ட சலநிதியென்றது தண்பிறையெழுச்சி கண்ட சலநிதியென்றும், தந்தைதாயரை உவப்பித்தலிற் பண்புடைவதனம் என்றுங் கூறினார். (சுகூ)

அற்றனடியரமெல்லாமருந்தவப்பயனான்மைந்தற்
பெற்றனள்குந்தியென்னும்பேருரைகேட்டவன்றே
யுற்றனள்பொறுமைகல்லாலுதரமுட்குழம்புமாறு
செற்றனடனதுகேடுமாக்கமுஞ்சிந்தியாதாள்.

(இ - ள்.) குந்தி - குந்திதேவியானவள்—அரும் தவப்பயனால் மைந்தற் பெற்றனள் - அரிய தவப்பயனாற் புதல்வனைப்பெற்று—துயரம் எல்லாம் அற்றனள் என்னும் பேர் உரை கேட்ட அன்றே - துன்பம் எல்லாவற்றையும் நீங்கினாள் என்னும் பெருமையாகிய வசனத்தைகேட்ட அப்பொழுதே—தனதுகேடும் ஆக்கமும் சிந்தியாதாள் - தன் கேட்டையும் பெருக்கத்தையும் சிந்தியாதவளாகிய காந்தாரி—பொறுமை உற்றனள் - பொறுமைகொண்டு—உதரம் உள் குழம்புமாறு கல்லால் செற்றனள் - தன்வயிறு உள்ளே கலங்கும்படி கல்லாற்குத்தினாள்.எ-று.

பெற்றனள், உற்றனள் என்பன வினையெச்சமுற்றுக்கள். சிந்தியாதாள் வினைபாலணையும்பெயர். குழம்புமாறு மாறீற்றுவினையெச்சம். அரிதாய்ப்பெற்றமையின் எங்கும் பரந்தவுரையென்பார் பேருரை என்றும், புதல்வ ரின்மையால் வருங்கேட்டையும் உண்மையால் வரும் ஆக்கத்தையும் நினைத்திலள் என்பார் தனது கேடுமாக்கமுஞ் சிந்தியாதாள் என்றுங் கூறினார். (எ0)

மையறுசுபலன்கன்னிவயினிடைக்கருப்பஞ்சேரப்
பையொடுகுருதிபொங்கப்பார்மிசைவிழுந்ததாகச்
செய்யவன்விழுந்ததிக்கிற்செக்கர்வானெனச்சென்று
மெய்யுடையரியகேள்விவேள்விகூர்வியாதன்கண்டான்.

(இ - ள்.) மை அறு சுபலன் கன்னி வயினிடைக் கருப்பம் - குற்றமில்லாத சௌபலையினுடைய வயிற்றிலுள்ள கருப்பமானது—செய்யவன் விழுந்ததிக்கிற் செக்கர்வான் என்ன - சூரியன் அத்தமித்த மேற்றிசையிலுண்டாகிய செவ்வானம்போல—சேரப் பையொடு குருதி பொங்கப் பார்மிசை விழுந்ததாக - ஒருசேரப் பையோடு இரத்தம்மிகப் பூமியில் விழ—மெய் உடை அரிய கேள்வி வேள்விகூர் வியாதன் சென்று கண்டான் - மெய்ம்மையாகிய அரிய கல்வியையுடைய யாகஞ் செய்தலின் மிக்க வியாதமுனிவன் போய் அதனைக் கண்டான். எ - று.

கோபத்தினும் பொறுமையினும் மிக்காளாயினும் பதிவிரதத்திற் சிறந்தமைபற்றி மையறுசுபலன்கன்னி என்றார். செக்கர்வானென்ன விழுந்ததாக, வியாதன் சென்றுகண்டான் என்றியையும். வியாதமுனிவன் தன்றாயாகிய பரிமளகந்தியின் சொற்படி போய்க்கண்டானென்க. (எக)

சஞ்சலமானகோசத்தசையினைத்தாழிதோறு
மெஞ்சலவாகநூறுகூறுசெய்திழுதிலேற்றி
நெஞ்சலர்கருணையாளனின்றவக்குறையுஞ்சேர்த்தி
யஞ்சில்வார்குழலியாகென்றுங்கொருகடத்தில்வைத்தான்.

(இ - ள்.) நெஞ்சு அலர் கருணையாளன் - மனத்தில் விரிந்த கிருபையையுடைய வியாதமுனிவன்—சஞ்சலம் ஆன கோசத் தசையினை - பழுதடைந்த கருப்பையிலுள்ள தசையை—எஞ்சல ஆக நூறு கூறு செய்து - குறையாதனவாக நூறுபங்காக்கி—தாழி தோறும் இழுதின் எற்றி - குடங்கடோறும் நெய்யில் வைத்து—நின்ற அக்குறையும் சேர்த்தி - நூறுகப்பங்கிட்டவற்றிற் சேடமாயிருந்த அர்தத் தசையையும் சேர்த்து—அம் சில் வார்குழலி ஆக என்று - அழகிய சில்லுப்போல முடிக்கும் நீண்ட அளகத்தையுடைய பெண்ணாகுக என்று—ஆங்கு ஒரு கடத்தில் வைத்தான் - அப்பொழுது ஒரு குடத்தில் வைத்தான். எ-று.

குறை - ஆகுபெயர். ஆக என்னும் வியங்கோளீறு தொக்கது. குறையும் என்னும் உம்மை எச்சம். கருச்சிதைத்தலாகிய பெரும்பழியை அவள் செய்துழியும் முனிவடையாது, அவட்கப்பழிவந்துசூழாமலும் சிதைந்தகருவெல்லாம் உயிர் பெற்றெழுமாறும் வல்ல சூழ்ச்சியைச்செய்த பெருங்கருணையாளன் என்பார் நெஞ்சலர்கருணையாளன் என்றார். அஞ்சில் என்பதற்கு அழகிய பொன்வட்டத்த கட்டணியெனினும் அமையும். (எஉ)

கருவுறுதாயைநோக்கிக்கையறுமென்றுகன்றி
வெருவுறல்கற்பின்மிக்காய்வேறுசெய்தசைகள்யாவு
முருவுறநிரம்பித்தாமேயுற்பவிப்பளவுங்கையான்
மருவுறல்வழுவுறாதென்வரமெனவரதன்போனான்.

(இ - ள்.) வரதன் - வரங்களைக் கொடுப்பவனாகிய வியாதமுனிவன்—கரு உறு தாயை நோக்கி - கருப்பத்தைக்கொண்ட மாதாவைப் பார்த்து—கற்பின் மிக்காய் - கற்பில் மேம்பட்டவளே—வேறுசெய் தசைகள் யாவும் கையறும் என்று கன்றி வெருவுறல் - என்னாற் பகுக்கப்பட்ட தசைகளெல்லாம் (சிசுக்களாகாமல்) அழிந்துவிடும் என்று நீ இரங்கி அஞ்சாதே—உரு உற நிரம்பித்தாமே உற்பவிப்பளவும் கையால் மருவுறல் - அவயவங்கள் நன்றாய் வளர்ந்து தாமாகவே தோன்றுதலுண்டாமளவும் கையாற்றீண்டாதே—என் வரம் வழு உறாது எனப் போனான் - என்வரந் தவறாதென்று சொல்லிப் போயினான். எ - று.

வெருவுறல் மருவுறல் என்பன அல்லீற்று முன்னிலையேவலொருமை எதிர்மறை வினைமுற்றுக்கள். இவற்றை வியங்கோளெனக் கொள்ளற்க கருவுறுதாய் இறந்தகாலவினைத்தொகை. காந்தாரி துயருறாதிருத்தற்கும், தாங்கூறியபடி கடங்கடோறும் வைக்கப்பட்ட தசைகளை அவள் புத்திரவாஞ்சையினால் இடையிற் கையாற்றீண்டிப்பார்க்கில் அவை பழுதுபடுமென்று கருதி அங்ஙனந்தீண்டிப் பாராவண்ணம் யாப்புறுத்தற்கும் வெருவுறல் கையான் மருவுறல் வழுவுறாதென் வரம் என்று கூறினனென்க. (எங)

காம்பெனநிறத்ததோளாள்கருவயிற்றிருப்பதொப்பத்
தேம்பயினறுநெய்பெய்தகலங்களைச்சேமமாக
வாம்பரிவுடனேயாற்றியீற்றளையடைந்துவைகும்
பாம்பெனப்பருவநோக்கியிருந்தனள்பழுதிலாதாள்.

(இ - ள்.) காம்பு என நிறத்த தோளாள் - மூங்கில்போல அழகிய தோள்களையுடைய சௌபலையானவள்—பழுது இலாதாள் - தவறில்லாதவளாய்—

கரு வயிற்று இருப்பது ஒப்ப - கருப்பந் தன்வயிற்றிலிருப்பதை நிகர்க்க—தேம் பயில் நறு நெய் பெய்த கலங்களை - நறுமணம்பொருந்திய புத்துருக்கு நெய்யைச் சொரிந்த குடங்களை—ஆம் பரிவு உடன் சேமம் ஆக ஆற்றி - மிக்க அன்போடு காவல்செய்து—ஈற்று அளை அடைந்து வைகும் பாம்பு எனப் பருவம்நோக்கி இருந்தனள் - முட்டைகளிருக்கும் அளையையடைந்து அடை கிடக்கும் பாம்பைப் போல உற்பவிக்குங் காலத்தைப் பார்த்திருந்தாள். எ - று.

ஏ - அசை. நிறத்த என்பது குறிப்புவினைப்பெயரெச்சம். பழுதிலாதாள் வினையெச்சமுற்று. ஈற்று - ஆகுபெயர். பாம்பு தானீன்ற முட்டைகளிருக்கும் அளையைப் பிரியாது குறிக்கொண்டுகாத்து அம்முட்டைகள் தாமாய் விள்ள அவற்றுளிருக்குங் கருத்தோன்றுங்காலத்தை யுற்றுநோக்கியிருக்குமாறுபோல, இவளுங் கடங்களுட்செறித்த தன் கருவாகிய தசைகளிருக்குமிடத்தை நீங்காது குறிக்கொண்டுகாத்து அவை தாமாயுருவெடுத்துத் தோன்றுங்காலத்தை யுற்றுநோக்கியிருந்தாள் என்பார் ஈற்றளையடைந்துவைகும் பாம்பெனப்பருவ நோக்கி யிருந்தனளென்றும், வியாதமுனிவன் கூறியபடி யொழுகினாள் என்பார் பழுதிலாதாள் என்றுங்கூறினார். (எச)

ஈண்டுறுநிகழ்ச்சிகேட்டேயாதவன்மகளைநோக்கிப்
பாண்டுமெனிரந்துபல்காற்பணித்தலும்பவனன்றன்னை
மீண்டுமம்மறையாலுன்னியழைத்தனள்விரைவினோடி
யாண்டுவந்தவனும்பூத்தகொடியனாளாகந்தோய்ந்தான்.

(இ - ள்.) பாண்டுமென் - பாண்டுமகாராசன்—ஈண்டு உறு நிகழ்ச்சி கேட்டு - இங்கே நிகழ்ந்த சம்பவத்தைக் கேள்வியுற்று—யாதவன் மகளை நோக்கி இரந்து பல்காற் பணித்தலும் - குந்திதேவியைப் பார்த்து இரந்து பலதரம் கட்டளையிடுதலும்—பவனன்றன்னை உன்னி மீண்டும் அம்மறையால் அழைத்தனள் - அவள் வாயுதேவனைச் சிந்தித்துத் திரும்பவும் அந்த மந்திரத்தால் அழைத்தாள்—அவனும் விரைவின் ஒடி ஆண்டு வந்து - அவனும் விரைந்து ஓடி அவ்விடத்தில் வந்து பூத்த கொடி அனாள் ஆகம் தோய்ந்தான் - பூவைப்பூத்த கொடியையொத்த அவளுடைய முலையைச் சேர்ந்தான். எ - று.

ஏ - அசை. மீண்டும் என்னும் உம்மை எச்சம். அவனும் என்னும் உம்மை எச்சத்தோடு சிறப்பு. பணித்தலும் உம்மீற்றுவினையெச்சம். போசர் யாதவருள் ஒருபகுப்பாராதல்பற்றிப் போசராசனாகிய சூரனை யாதவன் என்றும், முன்னே தருமனைப் பெற்றமையாற் குந்திதேவியைப் பூத்தகொடியனாள் என்றுங் கூறினார். கன்னனைப் பெற்றபின்னருங் கன்னிகையாயினமையின், அவன் பிறப்பைக் குறித்திவ்வடைகொடுத்தாரெனக் கோடல்பொருந்தாதென்க. பூத்தகொடியனாள் என்பதற்குப் பூப்பையடைந்தகொடிபோல்வாள் எனப் பொருள் கொள்ளுதலுமொன்று. இதற்கு, கருத்தங்குங்காலம் பூப்படைந்த ஐந்தாநாண்முதலாகப் பதினைந்துநாளாதலா லங்ஙனங் கூறினாரென வகலங்கூறுக. இப்பொருட்குப் பூத்த என்னும் பெயரெச்சம் அன்னாள் என்னுங் குறிப்புவினையாலணையும் பெயரில் விகுதியோடுமுடிந்தது. ஆகம் - ஆகுபெயர். (எரு)

நெஞ்சுறமணந்துமீளநெடுங்கலைவாகனேகச்
செஞ்சுடருச்சியெய்திச்சிறந்ததோர்முகூர்த்தந்தன்னி
லஞ்சனையளித்தபொற்றோளனுமனேயுவமையென்ன
வெஞ்சினவீமன்றன்னைப்பயந்தனள்விரதமிக்காள்.

(இ-ள்.) நெடும் கலைவாகன் - நெடிய கலைமான் வாகனத்தையுடைய வாயு தேவன்—நெஞ்சு உற மணந்து மீள ஏக - மனம் இயையப் புணர்ந்து மீண்டு போக—விரதம் மிக்காள் - விரதத்தில் மேம்பட்ட குந்திதேவியானவள்—செம் சுடர் உச்சி எய்திச் சிறந்ததோர் முகூர்த்தந்தன்னில் - சிவந்த சூரியன் மத்தியானத்தை அடைதலாற் சிறந்த ஒப்பில்லாத முகூர்த்தத்தில்—அஞ்சனை அளித்த பொன் தோள் அனுமனே உவமை என்ன - அஞ்சனைபெற்ற அழகிய புயங்களையுடைய அனுமனே நிகர் என்று சொல்ல—வெம் சின வீமன்றன்னைப் பெற்றனள்- வெம்மையாகிய கோபத்தையுடைய வீமனைப் பெற்றாள். எ - று.

அனுமனே என்னும் ஏகாரம் பிரிநிலை. எய்தியென்னுஞ் செய்தெனெச்சம் ஏதுப்பொருட்டு. புதல்வர்ப்பேற்றிற்கு உச்சிப்பொழுது ஏனைப்பொழுதுகளிற் சிறந்தமைபற்றி அதனைச் சிறந்ததோர் முகூர்த்தம் என்றும், அது உருப்பகால மாதலால் அதனிற்பிறந்த வீமனை வெஞ்சின வீமன் என்றும் விசேடித்துக் கூறினாரென்க. (எசு)

தண்பரிமளமென்சாயற்றந்தையுந்திசைகடோறு
மெண்பெறுமுயிர்கட்கெல்லாமிதமுறுபொலிவின்வீச
நண்புடையனலன்றானுநலமிகுநண்புதோன்றப்
பண்புறவலம்வந்தோங்கிப்பரிவுடன்விளக்கஞ்செய்தான்.

(இ - ள்.) தண் பரிமள மென் சாயல் தந்தையும் - குளிர்ந்த நறுமணஞ் செறிந்த மென்மையான அழகையுடைய பிதாவாகிய வாயுவும்—திசைகள் தோறும் - திக்குகள்தோறும்—எண்பெறும் உயிர்கட்கு எல்லாம் இதம் உறு பொலிவின் வீச - எண்ணப்படும் ஆன்மாக்களுக்கெல்லாம் இன்பம்மிகும் பொலிவோடு வீச—நண்பு உடை அனலன் தானும் - (அவனோடு) நண்பையுடைய அக்கினிதேவனும்—நலம் மிகு நண்பு தோன்ற - விருப்பம்மிக்க சினேகம் வெளிப்பட—பண்பு உற வலம் வந்து ஓங்கிப் பரிவுடன் விளக்கம் செய்தான் - தகுதிபொருந்த வலஞ்சுழித்துச் சுவாலித்து அன்போடு பிரகாசித்தான். எ - று.

தந்தையும் அனலன்றானும் என்னும் உம்மைகள் எச்சத்தோடு சிறப்பு. வீமன் பிறந்தபொழுது நற்சகுனமாக இளந்தென்றல்வீச அக்கினி வலஞ்சுழித்துத் தானெரிந்ததென்பது கருத்து. மைந்தன்பிறந்தானெனத் தந்தையுவக்க அவன் நண்பனுமுவந்தான் என வேறுமொருபொருடோன்றிற்று. (எஎ)

அன்னநாளனிலன்மைந்தன்பிறந்தனனாகவற்றை
முன்னைநாளருக்கன்வேலைமுழுகியமுகூர்த்தந்தன்னி
லின்னநாளுருவமுற்றியெழில்பெறுமென்றுமுன்னோன்
சொன்னநாள்வழுவுறாமற்சுயோதனன்றோன்றினானே.

(இ - ள்) அன்ன நாள் அனிலன் மைந்தன் பிறந்தனன் ஆக - அந்தநாளில் வீமன் பிறந்தானாக—அற்றை முன்னை நாள் அருக்கன் வேலை முழுகிய முகூர்த்தந்தன்னில் - அத்தினத்திற்கு முதனாட் சூரியன் கடலில் அத்தமித்த முகூர்த்தத்தில்—இன்ன நாள் உருவம் முற்றி எழில் பெறும் என்று முன்னோன் சொன்ன நாள் வழு உறாமல் - (கருப்பம்) இன்னநாளில் அவயவம் வளர்ந்து அழகு

பெறும் என்று வியாதமுனிவன் சொன்னநாள் தவறுதபடி—சுயோதனன் தோன்றினன் - துரியோதனன் பிறந்தான், எ - று.

ஏ - அசை. பிறந்தனனாக என்பது பிறந்தனன் என்னும் முற்றுச்சொல்லோடு ஆக என்னும் எச்சம்புணர்ந்து ஒரு சொன்னீர்மைப்பட்டுநின்ற செயவென்வாய்பாட்டுவினையெச்சம். அற்றை முன்னைநாள் நான்காம்வேற்றுமைத்தொகை. முன்னைநாள் என்பதில் ஐ சாரியை. மாலையாகிய பாவகாலத்திற் புத்திரர் அவதரிக்கின் அவர் துட்டகுணமுடையராவராதலின் அக்காலத்திற் பிறந்த துரியோதனனுந் துட்டகுணமுடையனாயினனென்க. (எ௮)

வாரியினதிர்ந்துவிம்முமங்கலமுழவமேன்மே
லோரியின்குரலாலோதையடங்கினவிடங்கடோறும்
பாரியகுலத்தோர்கண்ணினுவகைநீர்பனிக்குமுன்னே
சோரியந்தரத்தினின்றுஞ்சொரிந்ததுசோனைமேகம்.

(இ-ள்.) இடங்கள் தோறும் - இடங்களெங்கும்—வாரியின் அதிர்ந்து விம்மும் மங்கல முழவம் - கடலினும்பார்க்க அதிர்ந்தொலிக்கும் மங்கலமுரசங்கள்—மேன்மேல் ஓரியின் குரலால் ஓதை அடங்கின - மேலும் மேலும் (எழுகின்ற) நரிகளுடைய கூக்குரலால் ஒலியடங்கின—பாரிய குலத்தோர் கண்ணின் உவகைநீர் பனிக்கும் முன்னே - உயர்ந்த வம்மிசத்திலுள்ளோருடைய கண்களினின்று இன்பநீர் சொரிதற்குமுன்னரே—சோனைமேகம் அந்தரத்தில் நின்று சோரி சொரிந்தது—விடாமழையைப்பொழிகின்ற மேகம் ஆகாயத்தினின்று இரத்தமழையைப் பொழிந்தது. எ - று.

வாரியின் என்னும் இன்னுருபு நீக்கப்பொருட்டு. எழுகின்ற என்னுஞ்சொல் அவாய்நிலையான் வருவிக்கப்பட்டது. அரசர்க்குப் புதல்வரவதரிக்கில் அதனாற் சகலசீவராசிகளும் இன்புறும் என்று அருளின்வயத்தராய் உவகைக் கண்ணீர் சொரிதற்குரியார் உயர்குடிப்பிறந்தார் என்பார் பாரியகுலத்தோர் கண்ணினுவகை நீர்பனிக்குமுன் என்றார். (எ௯)

கோள்களினிலையாற்றீமைகொண்டனமுகூர்த்தந்தன்னிற்
றேள்களிற்கொடியமற்றைச்சிறுவருஞ்சேரவோரோர்
நாள்களிற்பிறந்தபின்னர்நங்கையுமொருத்திவந்தா
டோள்களிற்கழையைவென்றதுச்சளையென்னும்பேராள்.

(இ - ள்.) கோள்களின் நிலையால் தீமைகொண்டன முகூர்த்தந்தன்னில் - கிரகங்களினுடைய நிலையினாற் கொடுமையைப் பொருந்திய முகூர்த்தங்களில்—தேள்களில் கொடிய மற்றைச் சிறுவரும் - தேள்களிலுங் கொடிய மற்றைப் புதல்வர்களும்—ஓரோர் நாள்களில் சேரப் பிறந்தபின்னர் - ஒவ்வொருநாளிலொவ்வொருவராக அனைவரும் பிறந்தபின்பு—தோள்களில் கழையைவென்ற துச்சளை என்னும் பேராள் நங்கையும் ஒருத்தி வந்தாள் - தோள்களினால் மூங்கிலைவென்ற துச்சளையென்னும் பெயரையுடைய பெண்ணும் ஒருத்தி பிறந்தாள். எ-று.

சிறுவரும் என்னும் உம்மை முற்றும்மை எச்சம். நங்கையும் என்னும் உம்மை எச்சம். தேள்களில் என்னும் இல்லுருபு நீக்கப்பொருட்டு. இதற்கிழிவு சிறப்பு

ம்மை வருவித்துரைக்கப்பட்டது. கொண்டன தெரிநிலைவினைமுற்றுப் பெயரெச்சம். பேராள் குறிப்புவினைமுற்றுப்பெயரெச்சம். மிகக் கொடியர் என்பார் தேள்களிற் கொடிய என்றும், தொண்ணூற்றென்பதின் மரும் தொண்ணூற்றென்பதுநாளில் அவதரித்தார் என்பார் ஒரோர்நாள்களிற் பிறந்தபின்னர் என்றும், நூற்றுப்பகிர்ந்த தசைகளின் குறையாயினும் அதினின்றும் அவதரித்த புதல்வி அங்கபங்கமின்றிப் பேரழகியாயிருந்தாள் என்பார் தோள்களிற் கழையைவென்ற துச்சளை என்றுங் கூறினர். (அ0)

பின்னியபுதல்வராலும்பிறந்தமென்புதல்வியாலுந்
துன்னியமகிழ்நனாலுந்துலங்கியசுபலன்பாவை
தன்னிகர்பரிதியாலுஞ்சதவிதழாலுஞ்செம்பொற்
கன்னிகையாலுஞ்சோதிகலந்தசெங்கமலம்போன்றாள்.

(இ - ள்.) துன்னிய மகிழ்நனாலும் - (தன்னோடு) கலந்த நாயகனாலும்—பின்னிய புதல்வராலும் - நெருங்கிய புத்திரர்களாலும்—பிறந்த மென் புதல்வியாலும்-(தன்னிடத்தில்) அவதரித்த மென்மையாகிய புத்திரியாலும்—துலங்கிய சுபலன் பாவை - விளங்கிய சௌபலையானவள்—தன் நிகர் பரிதியாலும் - தனக்குத் தானே ஒப்பாகிய சூரியனாலும்—சத இதழாலும் - நூறிதழ்களாலும்—செம்பொன் கன்னிகையாலும்-சிவந்த பொன்போலும் பொகுட்டினாலும்—சோதிகலந்த செங்கமலம் போன்றாள்-ஒளிபொருந்திய செந்தாமரைமலரை யொத்தாள். எ-று.

பாவை - ஆகுபெயர். நாயகனாலும் நூறுபுதல்வர்களாலும் புதல்வியொருத்தியாலும் விளங்கிய சௌபலை, தனக்கு நாயகனாகிய சூரியனாலும் நூறிதழ்களாலும் பொகுட்டினாலும் விளங்கிய செந்தாமரைமலரையொத்தாள் என்பது கருத்து. இது எதுவுவமை என்னும் அலங்காரம். உவமைக்கியைய உவமேயம்மாறிப் பொருளுரைக்கப்பட்டது. செம்பொற்கன்னிகை என்பதற்குச் சிவந்த பொன்னையுடைய இலக்குமி என்று பொருள் கோடலு மொன்று. பொன்னாகிய கன்னிகையென இருபெயரொட்டாகப் பொருள்கொள்ளினும் பொருந்தும். சுபலனுடைய கண்மணிப்பாவைபோல் வாளென்பார் சுபலன்பாவை என்றார். (அக)

பான்மொழிக்குந்திமீண்டும்பாண்டுவினேவல்பெற்று
வான்மொழிமறையானுன்னிவானவர்க்கரசைநோக்க
மேன்மொழிவதுமற்றென்கொல்விடுவனோவிரைவின்வந்து
தேன்மொழித்தெரிவைமெய்யுஞ்சிந்தையுங்களிக்கச்சேர்ந்தான்

(இ - ள்.) பால் மொழிக் குந்தி - பால்போலும் இனிய சொல்லையுடைய குந்திதேவியானவள்—மீண்டும் பாண்டுவின் ஏவல் பெற்று - திரும்பவும் பாண்டு மகாராசனுடைய அனுமதியைப்பெற்று—உன்னி - இனி எத்தேவரையழைப்போம் என்று) எண்ணி—வானவர்க்கு அரசை வால் மறை மொழியால் நோக்க - இந்திரனைப் பரிசுத்தமாகிய மந்திரத்தாற்றியானிக்க—மேல் மொழிவது மற்று என் - அதன்பின் நாம்சொல்லுவது வேறென்னை—விடுவனோ - அவன் விடுவானோ—விரைவின் வந்து தேன் மொழித் தெரிவை மெய்யும் சிந்தையும் களிக்கச் சேர்ந்தான் - விரைவோடுவந்து தேன் போலும் இனிய சொல்லையுடைய அவள் சரீரமும் மனமுங் களிப்படையப்புணர்ந்தான். எ - று.

கொல் - அசை. மீண்டும் என்னும் உம்மை எச்சம். மொழிமறை - பின்மொரிநிலையல். நோக்க என்பது நோக்கனேக்கம். தேன்மொழித்தெரிவை என்றது சுட்டின்பொருளாய்நின்றது. தான் முயன்று புணர்தற்பாலளாகிய பேரழகி தன்னைப்புணரும்படி கருதுதல் தனக்குக் கிடையாப்பேறெனக் கருதினன் என்பார் விடுவனே என்றும், உண்டபின்னும் ஒரேபெற்றித்தாயிருக்கும் பால்போலத் தன்னையகனுக்கு என்றும் ஒரேபேற்றித்தா யின்பந்தருதலின் முன்னர்ப் பான்மொழிக்குந்தி யென்றும் உண்ணும்பொழுது தித்தித்துப் பின்னர்ப் புளிக்குந்தேன் போலப் புதல்வற்பேற்றின்பொருட்டு இந்திரனைச்சேரும்பொழுது அவனுக்கினியளாய்ப் பின் வெறுப்பைத்தந்தமையின் பின்னர்த் தேன்மொழித்தெரிவையென்றும் அடைகொடுத்துங் கூறினர். மறைமொழி - மந்திரம். (அஉ)

எங்குநன்னிமித்தஞ்செல்லவிருநிலமகிழ்ச்சிகூரப்
பங்குனிநிறைந்ததிங்களாதபன்பயிலுநாளில்
வெங்குனிவரிவில்வாழ்க்கைவிசயனும்பிறந்தான்வென்றிப்
பங்குனனென்னுநாமம்பகுதியாற்படைத்திட்டானே.

(இ - ள்.) எங்கும் நல் நிமித்தம் செல்ல - எவ்விடங்களிலும் நற்சகுனங்கள் நிகழ—இரு நிலம் மகிழ்ச்சிகூர - பெரிய நிலவுலகத்தோர் மகிழ்ச்சிமிக—பங்குனி நிறைந்த திங்கள் ஆதபன் பயிலும் நாளில் - பங்குனிமாசத்துப் பூரணையோடுகூடிய உத்தரநக்ஷத்திரத்தில்— வெம் குனி வரிவில் வாழ்க்கை விசயனும் பிறந்தான் - கொடிய வளைந்த வரிந்த வில்வாழ்வையுடைய அருச்சுனனும் அவதரித்தான்—பகுதியால் வெற்றிப் பங்குனன் என்னும் நாமம் படைத்திட்டான் - அவ்வுரிமையினல் அவன் வெற்றியையுடைய பங்குனன் என்னும் பெயரைப் பெற்றான். எ - று.

ஏ - அசை. விசயனும் என்னும் உம்மை எச்சம். நிலம், நிறைந்ததிங்கள் என்பன ஆகுபெயர்கள். வில்வாழ்க்கை விசயன் என்றது வில்வினேதன் என்றபடி. பங்குனி என்பது உத்தரநக்ஷத்திரத்திற்கும் பெயராதலால் அதிற்பிறந்த உரிமை பற்றி இவனுக்குப் பங்குனன் என்னும் பெயருண்டாயிற்றென்பார் பங்குனனென்னுநாமம் பகுதியாற்படைத்திட்டான் என்றார். (அங)

கற்பகமலர்கள்சிந்திக்கடவுளர்கணங்களாட
வெற்பகமுனிவரீண்டிமங்கலவேதம்பாடப்
பொற்பகமுழவுவிம்மப்புரிவளைமுழங்கியார்ப்ப
நற்பகலிதுவென்றெல்லாவுலகமுநயந்தவன்றே.

(இ - ள்.) கடவுளர் கணங்கள் கற்பக மலர்கள் சிந்தி ஆட - அப்பொழுது தேவர் கூட்டம் கற்பகப்பூக்களைச் சொரிந்து கூத்தாட—வெற்பக முனிவர் ஈண்டி மங்கல வேதம் பாட - மலையிலிருக்கின்ற முனிவர்கள் நெங்கி மங்கலத்தையுடைய வேதங்களைப்பாட—பொற்பு அக முழவு விம்ம - அழகைத் தம்மிடத்துடைய முரசங்கள் ஒலிக்க—புரிவளை முழங்கி ஆர்ப்ப - புரிகளையுடைய சங்கங்கள் முழங்கி ஆரவாரிக்க—எல்லா உலகமும் இது நற்பகல் என்று நயந்த - எல்லாவுலகங்களும் இது நற்றினம் என்று புகழ்ந்தன. எ - று.

ஏ - அசை. உலகம் ஆகுபெயர். வெற்பகம் ஒருசொல். ஆட, பாட, விம்ம, ஆர்ப்ப என்னுஞ் செயவெனெச்சங்கள் ஏதுப்பொருள. முழவுஞ்சங்கும் தாமே

முழங்குதல் சிறந்த மங்கலமாதலால், அவை படுப்பாரின்றித் தாமே முழங்கின வென்க. (அச)

இறைவனுமகிழ்ந்துபின்னும்யாதவிக்குரைப்பவந்த
மறையினைமுறையிற்பெற்றமத்திரராசன்கன்னி
குறைவறவிருவர்வேண்டுங்குமரரென்றுன்னிநின்றா
ணிறையுடையிரவிமைந்தரிருவருநினைவின்வந்தார்.

(இ - ள்.) இறைவனும் மகிழ்ந்து பின்னும் யாதவிக்கு உரைப்ப-பாண்டு மகாராசனும் சந்தோஷங்கொண்டு பின்னும் குந்திதேவிக்கு (உன் தங்கையாகிய மத்திரையும் புதல்வரைப் பெறவிரும்புகின்றாள் அவ்விருப்பை நிறைவேற்றுதல் உன் கடமை என்று) சொல்ல—அந்த மறையினை முறையின் பெற்ற மத்திரராசன் கன்னி - (அதனால்) அந்த மந்திரத்தைக் (குந்திதேவியிடத்தில்) முறைமையோடு பெற்றுக்கொண்ட மத்திரையானவள்—குறைவு அறக் குமரர் இருவர் வேண்டும் என்று - தன்குறைதீரப் புதல்வரிருவர் வேண்டும் என்று—உன்னிநின்றாள் -(தேவமருத்துவரைச்) சிந்தித்தாள்—நிறை உடை இரவி மைந்தர் இருவரும் நினைவின் வந்தார் - நிறையையுடைய சூரியனுடைய புதல்வர்களாகிய அம்மருத்துவரிருவரும் அவள் நினைத்தபொழுதில் வந்தார்கள். எ-று.

உன்னிநின்றாள் என்பது ஒருசொல். நினைவு - ஆகுபெயர். இறைவனும், பின்னும் என்னும் உம்மைகள் எச்சம். நினைவின் வந்தார் என்பதற்கு நினைத்தபடி வந்தார் எனினும் அமையும். குறையென்றது ஈண்டு இருமையின்பமு மின்மையை. நிறை ஆடவர்களுச்குரிய ஐந்துகுணங்களுள் ஒன்று. ஐந்துகுணங்களாவன: நிறை, பொறை, தேற்றம், நீதி, சால்பு என்பன. (அரு)

மருவருங்குழலியாயுமறையினால்வரிசைபெற்ற
விருவருமொருவர்போலவின்புறமணந்தபோதிற்
பருவரலியாதுமில்லாப்பாலகரிருவர்சேரக்
கருவிளைந்துதித்தார்யாருங்கண்ணெனக்காணுநீரார்.

(இ - ள்.) மருவரும் குழலி - வாசனைபொருந்திய அளகத்தையுடைய மத்திரையை —ஆயுமறையினால் வரிசைபெற்ற இருவரும் - ஆயுள்வேதத்தால் மேன்மையைப்பெற்ற இருவரும்—ஒருவர்போல இன்பு உற மணந்தபோதில் - ஒருவரைப்போல இன்பம் மிகப் புணர்ந்தசமயத்தில்—பருவரல் யாதும் இல்லாப் பாலகர் இருவர் - வருத்தஞ் சிறிதுமில்லாத புதல்வரிருவரும்—சேரக் கருவிளைந்து உதித்தார் - ஒருங்கே கருப்பம்முதிர்ந்து பிறந்தார்கள்—யாரும் கண் எனக் காணுநீரார்-அவர்கள் எவருந் தங்கண்களைப்போல மதிக்குங்குண முடையர்கள். எ - று.

குழலியை என்னும் இரண்டனுருபும் இருவரும் என்னும் முற்றும்மையும் விகாரத்தாற்றொக்கன. சேரவிளைந்தென இயையும். ஆயுஸ் என்னும் வடமொழி ஆயுவெனத் தற்பவமாயிற்று. இருவர் மனமொத்து ஒருபெண்ணைப்புணர உடன்படாராயினும் இவர்கள் ஒருப்பட்டுப்புணர்ந்தார் என்பார் இருவரு மொருவர்போல என்றும், எவற்றினுங் குறைவற்றவர் என்பார் பருவரல் யாதுமில்லா என்றும், ஒருவரையொருவர் பிரியாமையால் ஒன்றையொன்றுபிரியாது இணையாகிய கண்கள்போல எவராலும் குறிக்கொண்டு மதிக்கப் படுவோர் என்பார் யாருங்

ண்ணெனக்காணுநீரார் என்றுங் கூறினார். மருவருங் குழலி ஆராய்ந்தமந்திரத் ால் இருவரும் மணந்தபோதிலெனப் பொருள்கோடலுமொன்று. (அசு)

சசிகுலநகுலனென்றுந்தம்பிசாதேவனென்றும்
விசயனோடெண்ணும்வீமன்மேதகுதருமனென்று
மசைவறுசிங்கசாபமனையவரைவராலும்
வசையறுதவத்தின்மிக்கான்மகிழ்ச்சியால்வாழ்வுபெற்றான்.

(இ-ள்.) சசிகுல நகுலன் என்றும் - சந்திரகுலத்தையுடைய நகுலன் என் றும்— தம்பி சாதேவன் என்றும் - அவன்றம்பி சாதேவன் என்றும்—விசயனோடு ண்ணும் வீமன் மேதகு தருமன் என்றும் - அரிச்சுனனும் மதிக்கப் படும் வீமனு மேன்மை மிக்க தருமனும் என்றும்—அசைவு அறு சிங்கசாபம் அனையவர் ஐவ ாலும் - கலக்கமில்லாத சிங்கக்குட்டிகளையொத்தவர்களாகிய ஐந்து புதல்வர்களா லும்—வசை அறு தவத்தின் மிக்கான் - குற்றமில்லாத தவத்தின்மேம்பட்ட பா ண்டுமகாராசன்—மகிழ்ச்சியால் வாழ்வு பெற்றான் - சந்தோஷத்தோடு வாழ்வை பொருந்தினான். எ-று.

ஒடு எண்ணுப்பொருட்கண்ணும் மகிழ்ச்சியால் என்னும் ஆலுருபு உடனிகழ்ச் ப்பொருட்கண்ணும் வந்தன. ஐவராலும் என்னும் உம்மை முற்று. உம் பெற்று ந்த என்றென்னும் இடைச்சொற்கள் அனையவர் என்னுங் குறிப்பு வினைமுற்று கொண்டன. சசிகுலம் வடநூன்முடிபு. இவ்வடையை ஏனை நால்வர்க்குங் கூட் க. செய்யுளாதலின் முறைபிறழவைத்தார். (அஎ)

தாதியர்மருங்குந்தந்தைதடமணிமார்பும்பெற்ற
பேதையர்கரமுநீங்காப்பெற்றியின்வளர்ந்தபின்னர்ப்
போதகமடங்கல்புல்வாய்புலிமுதல்விலங்கொடோடி
வேதியர்முன்றிறோறும்விழைவிளையாடலுற்றார்.

(இ-ள்.) தாதியர் மருங்கும் - (அப்புதல்வரைவரும்) செவிலித்தாயருடைய க்கலைகளையும்—தந்தை தடமணிமார்பும் - பிதாவினுடைய விசாலித்த அழகிய ார்பையும்—பெற்ற பேதையர்கரமும் - நற்றாயர்களுடைய கைகளையும்—நீங் ாப் பெற்றியின் வளர்ந்த பின்னர் - நீங்காததன்மையோடு வளர்ந்த பின்பு—வே யர் முன்றில் தோறும் - இருடிகளுடைய முற்றங்கடோறும்—போதகம் மடங் ல் புல்வாய் புலிமுதல் விலங்கொடு ஓடி - யானை சிங்கம் மான் புலி முதலிய வில குகளோடு ஓடி—விழை விளையாடல் உற்றார் - விரும்பும் விளையாடல்களைச்செய் ார்கள். எ - று.

விழைவிளையாடல் என்பது வினைத்தொகை. தோறும் என்பது இடப் பன் மைகுறித்துநின்றது. ஒன்றற்கொன்று பகையுடையனவாகிய யானைமுதலிய வில குகள் வேதியர்முன்றிலாதலாற் றம்முட் பகையின்றி யிருந்தனவென்க. பாலிய சையின்கண்ணுஞ் சிறந்தவீரமும் வேகமுமுடையரென்பார் போதகமடங்கல்புல் ாய் புலிமுதல்விலங்கொடோடி விழைவிளையாடலுற்றார் என்றார். (அஅ)

செய்தவமுனிவர்தம்மாற்சிகையுடன்புரிநூல்சாத்திக்
கைதவமின்றியெண்ணெண்கலைக்கடற்கரையுங்கண்டு
மெய்தவம்விளங்கவேழவில்லியும்விழைந்துநோக்க
மைதவழ்சிகரியன்னவளர்ச்சியின்வனப்பின்மிக்கார்.

(இ-ள்.) செய்தவ முனிவர் தம்மால் சிகையுடன் புரிநூல் சாத்தி - செய்கின்ற தவத்தையுடைய இருடிகளாற்சிகையோடு பூணூல் சேர்த்தப்பட்டு—மெய் தவம் விளங்கக் கைதவம் இன்றி எண்ணெண் கலைக்கடற்கரையுங் கண்டு-(முற்பிறப்பிற்செய்த) மெய்ம்மையாகிய தவப்பயன் எவர்க்குந் தோன்றும்படி துன்பமின்றி அறுபத்துநான்கு கலைகளாகிய கடலின் கரையையுங் கண்டு—வேழ வில்லியும் விழைந்து நோக்க - கருப்புவில்லையுடைய மன்மதனும் விரும்பிப்பார்க்க—மைதவழ் சிகரி அன்ன வளர்ச்சியின் வனப்பின் மிக்கார் - முகில்படிகின்ற மலையையொத்த வளர்ச்சியையுடைய அழகில் மேம்பட்டார்கள். எ-று.

மெய்தவம் என்பது எதுகைநோக்கி வல்லினம் மிகாதுநின்றது. தவம் - ஆகுபெயர்.கரையும் என்னும்உம்மை எச்சத்தோடு சிறப்பு. வில்லியும்என்னும் உம்மை சிறப்பு. சேர்த்தி யென்பது செயப்பாட்டுவினை விகுதி தொக்குநின்றது. சிகரியன்னவளர்ச்சியையுடைய வனப்பென்க. "உருவின்மிக்க தோருடம்பதுபெறுதலு மரிதே" என்பவாகலின், அழகின்மிக்கவுடம்பும் முற்செய்தவத்தாற் பெறவேண்டுதலின், மெய்தவம்விளங்க என்பதனை வனப்பின்மிக்கார் என்பதனோடுங்கூட்டுக. முற்செய்தவத்தாற் கலைகளனைத்தையும் எளிதிற்கற்றார் என்பார் மெய்தவம்விளங்கக் கைதவமின்றிக் கலைக்கடற்கரைகண்டென்றார். இனி மிக்கார் என்பதனை வளர்ச்சியின் என்பதனோடுங்கூட்டி, வேழவில்லியும் விழைந்துநோக்க வனப்பின் மிக்கார், சிகரியன்ன வளர்ச்சியின் மிக்கார் எனப் பொருள் கூறினும்பொருந்தும். கைதவம் - துன்பம். (அகூ)

மார்பினுமகன்றகல்விவனப்பினுநிறைந்தசீர்த்தி
போர்வருதெரியன்மாலைப்புயத்தினுமுயர்ந்தகொற்றஞ்
சீர்தருவாய்மைமிக்ககண்ணினுஞ்செங்கைவண்மை
பார்வளஞ்சுரக்குஞ்செல்வப்பரப்பினும்பரந்தவன்றே.

(இ-ள்.) கல்வி மார்பினும் அகன்ற-(அந்த ஐந்துபுதல்வர்க்கும்) கல்வி அவர் மார்பகங்களைக் காட்டிலும் விசாலித்தன—சீர்த்தி வனப்பினும் நிறைந்த - கீர்த்தி அவர் அழகைக்காட்டினும் நிறைந்தன—கொற்றம் போர்வருதெரியல் மாலைப் புயத்தினும் உயர்ந்த - வெற்றிபோர்தோற்றும் பூமாலையையும் மணிமாலையையும் அணிந்த அவர் புயங்களைக்காட்டிலும் உயர்ந்தன—சீர்தரு வாய்மை கண்ணினும் மிக்க - சிறப்பைத் தரும் உண்மை அவர் கண்ணினும்மேம்பட்டன—செங்கை வண்மை பார்வளம் சுரக்கும் செல்வப்பரப்பினும் பரந்த - சிவந்த கையாற் கொடுக்குங் கொடை அவருடைய பூமியினது வளத்தைக் கொடுக்குஞ் செல்வம் மிக்க பரப்பைக்காட்டிலும் பரந்தன. எ-று.

அன்று, ஏ - அசைகள். பாரினது பரப்பென்றியையும். தெரியன்மாலை உம்மைத்தொகை. இருபெயரொட்டாக்கித் தெரியலாகியமாலையெனினும் பொருந்தும். ஐவரும் கல்வி கீர்த்தி வெற்றி உண்மை கொடை என்னும் இவற்றின் மேம்பட்டோராயினர் என்பது இதன்கருத்து. கல்விமுதலிய ஐந்தும் ஒவ்வொன்று பலதிறப்படுதலிற் பன்மைவினைகொடுத்தார். மற்றையுறுப்புக்க ளெல்லாவற்றினும் கண்ணை மிகமேலாகமதித்துப் பாதுகாக்குமாறுபோல இவரும்வாய்மையை எவற்றினும் மிக மேலாகமதித்துப் பாதுகாத்தாரென்பார் வாய்மை கண்ணினும் மிக்க என்றும், வரையாது கொடுக்கும் பெருங்கொடையென்பார் வண்மை பாரினது பரப்பினும் பரந்த என்றுங் கூறினார். (கூ0)

ண்ணோட்டத்தினும் வாய்மை மிக்க எனப் பொருள்கொள்ளினும் பொருந்தும். இப்பொருட்கு கண்ணென்பது ஆகுபெயர். (கூ0)

ஆரமுமாரச்சேறுமரும்பனிநீரும்பூவு
மீரவெண்மதிநிலாவுமிதம்பெறுதென்றற்காலு
மோருயிரிரண்டுமெய்யாயுருகுவாருருகும்வண்ண
மாரனைமகுடஞ்சூட்டவந்ததுவசந்தகாலம்.

(இ - ள்.) ஓர் உயிர் இரண்டு மெய்யாய் உருகுவார் உருகும்வண்ணம் - ஒரு உயிர் இரண்டு சரீரத்தின்கண்ணும் பொருந்தப்பெற்று உருகுகின்ற ஆடவர்களும் பெண்களும் (புணர்ச்சிவேட்டு) உருகும்படி—மாரனை மகுடம் சூட்ட - மன்மதனுக்கு முடிசூட்ட—வசந்தகாலம் - இளவேனிற்காலமானது—ஆரமும் - முத்துவடமும்—ஆரச்சேறும் - சந்தனக்குழம்பும்—அரும் பனி நீரும்-அரிய பனிநீரும்—பூவும் - பூக்களும்—ஈர வெண்மதிநிலாவும்-குளிர்ச்சியையுடைய வெண்மையாகிய சந்திரனது நிலவும்—இதம் பெறு தென்றற் காலும் - இன்பத்தை யடைதற்கேதுவாகிய தென்றற்காற்றும் (ஆகிய இவற்றோடு)—வந்தது - சேர்ந்தது. எ-று.

ஆரம் ஆகுபெயர். மாரனை என்னும் ஐயுருபு குவ்வுருபாகத்திரித்துப் பொருளுரைக்கப்பட்டது. உருகும்வண்ணம் என்னும் வினையெச்சம் சூட்ட என்பதனோடு முடிந்தது. இதம்பெறுதற்குக் காரணமாகிய தென்றலை இதம் பெறுதென்றலென் றுபசரித்தார். ஆகிய இவற்றோடு என்னுஞ் சொற்கள் அவாய் நிலையான் வருவிக்கப்பட்டன. ஆரமுதலியன ஒருயிரிரண்டுமெய்யா யுருகுவார்க்கு வேனிற் காலத்தானிகழும் வெம்மை தணித்தற்குரியன வாதலின், அவற்றோடு வந்ததென்றார். (கூக)

விதுநலம்பெறுகாவெங்குமெய்சிவப்பேறவண்டு
புதுமையின்முரன்றுமொய்ப்பப்புதுமணம்பரந்துலாவக்
கதுமெனத்தலைநடுங்கக்காறடுமாறிற்றம்மா
மதுவயர்ந்தவரில்யாவர்மண்ணின்மேன்மயக்குறாதார்.

(இ - ள்.) விது நலம் பெறு கா - சந்திரனாற் (குளிர்ச்சியாகிய) சுகத்தைப் பெறுஞ் சோலையானது—மெய் எங்கும் சிவப்பு ஏற - தன்வடிவமெங்குஞ் செந்நிறம் மிக—வண்டு புதுமையின் முரன்று மொய்ப்ப - வண்டுகள் புதிதாய் ஒலித்து மொய்க்க—புது மணம் பரந்து உலாவ - புதிய மணம் பரம்பிக் கமழ—கதுமெனத் தலை நடுங்க - விரைவாய்த் தலை நடுங்க—கால் தடுமாறிற்று - கால் தடுமாறிற்று—மது அயர்ந்தவரில் - மதுவயர்ந்தவர்களில்—மண்ணின்மேல் மயக்குறாதார் யாவர் - பூமியின்மேல் மயக்கத்தை யடையாதவ ரெவர். எ-று.

அம்மா வியப்பின்கட்குறிப்பு. சோலைக்கேற்றும்பொழுது மதுவயர்தல் என்பதனை மதுவைச்செய்தல் என்றும், மெய் சிவப்பேற என்பதனைத் தளிரால் வடிவஞ்சிவக்க என்றும், தலைநடுங்க என்பதனைத் தலையசைய என்றும், கால் தடுமாறிற்று என்பதனை இளந்தென்றலா லசைந்தது என்றும் பொருள் கொள்க. கள்ளுண்போர்க்கியையப் பொருள் கொள்ளுங்கால், அயர்தல் - குடித்தல். காவானது ஏற, மொய்ப்ப, உலாவ, நடுங்கத் தடுமாறிற்றென்றியையும். மதுவயந்தன்னில் என்றும் பாடம். இதற்கு மதுவின் வசத்தால் எனப் பொருள்கொள்க. விது

நலம்பெறுகா என்பதற்குச் சந்திரன் தவழ்ந்து இன்பத்தைப் பெறுதற்கேதுவாகிய சோலை எனப் பொருள்கொள்ளுதலு மொன்று. (கஉ)

பைந்தடந்தாளான்முன்னம்பருகியபுனலைமீளச்
செந்தழலாக்கியந்தண்சினைதொறுங்காட்டுஞ்சீரான்
முந்தியவசோகுசூதமுதலியதருக்களெல்லா
மிந்திரசாலம்வல்லோரியற்கையினியற்றுமாலோ.

(இ - ள்.) முந்திய அசோகு சூதம் முதலிய தருக்கள் எல்லாம் - வளர்ந்த அசோகு மா முதலிய மரங்களெல்லாம்—பைம் தடம் தாளால் முன்னம் பருகிய புனலை - பசுமையாகிய பெரிய அடியினாலே முன்னே தாம் உண்ட நீரை—மீளச் செம் தழல் ஆக்கி - திரும்பச் சிவந்த அக்கினியாக்கி—அம் தண் சினைதொறும் காட்டும் சீரால் - அழகிய குளிர்மையாகிய கொம்புகடோறும் காட்டுஞ் சிறப்பினால்—இந்திரசாலம் வல்லோர் இயற்கை இயற்றும் - இந்திரசால வித்தையில் வல்லோர்களுடைய இயல்பைச் செய்வனவாம். எ - று.

இயற்கையின் என்புழி இன்னும், ஆலும், ஓவும் அசைகள். தருக்களெல்லாம் சினைதொறுங்காட்டுஞ் சீரால் இந்திரசாலம் வல்லோரியற்கையை யியற்றுமென முடிக்க. செந்தழலாக்குதல் சிவந்த தளிரை ஈனுதல். மன்மதபாணங்களைத் தருதலால் ஏனைமரங்களில் மேற்பட்ட அசோகு சூதம் எனப் பொருள்கொள்ளினும் பொருந்தும். (கங)

பரந்தெழுசூதபுட்பபராகநல்லிராகமிஞ்ச
முரண்படுசிலைவேள்விட்டமோகனச்சுண்ணம்போன்ற
புரிந்ததொல்யோகமாக்கள்புந்திநின்றுருகத்தொட்ட
வருந்தழற்கணைகள்போலவலர்ந்தனவசோகசாலம்.

(இ - ள்.) பரந்து எழு சூதபுட்ப பராகம் - பரம்பி மேலே எழுகின்ற மாம் பூக்களிலுள்ள மகரந்தம்—நல் இராகம் மிஞ்ச - நல்ல ஆசை அதிகப்பட—முரண் படு சிலைவேள் விட்ட மோகனச் சுண்ணம் போன்ற - வலிமைபொருந்திய வில்லையுடைய மன்மதன் சொரிந்த மயக்கப்பொடியை யொத்தன—அசோகசாலம் - அசோகமரங்கள்—தொல் யோகம் புரிந்த மாக்கள் புந்தி நின்று உருகத்தொட்ட - பழைய யோகத்தைச் செய்கின்ற முனிவர்களுடைய மனம் மிக உருகும்படி (அவன்) தூண்டிய—அரும் தழற்கணைகள்போல அலர்ந்தன-அரிய அக்கினியம்புகளைப் போலப் பூக்களை மலர்ந்தன. எ - று.

புரிந்த என்பது காலமயக்கம். சூதபுட்பபராகம், அசோகசாலம் என்பன வடநூன்முடிபு. மோகனச் சுண்ணம் எனச் சிறுபான்மை வடசொன் முன்னும் வல்லெழுத்து மிக்கது. மன்மதன் யோகமாக்களுடைய புந்தியாகிய இரும்பைத் தனக்குரிய பூம்பாணங்கள் உருக்கும் ஆற்றலிலவெனக்கருதி, அதனை உருக்குமாறு அரிதாய் முயன்றுபெற்ற தழற்கணை என்பார் அருந்தழற்கணை யென்றார். அசோகினது தளிரேயன்றி மலருஞ் செந்நிறமுடைமையிற் றழற்கணை யுவமையாயிற்று. இது இல்பொருளுவமை. (கச)

வேனிலின்விளைவினாலும்வேனிலான்விழவினாலு
மானலந்திகழுமூரன்மாத்திரிவனப்பினாலுந்
தானலமுறுதலெண்ணிச்சாபமுமறந்துமற்றப்
பானலங்கண்ணாளோடும்பாண்டுவும்பரிவுகூர்ந்தான்.

(இ - ள்.) பாண்டுவும் - பாண்டுமகாராசனும்—வேனிலின் விளைவினுலும்—வேனிற்காலத்தின் நிகழ்ச்சியினுலும்—வேனிலான் விழவினுலும் - மன்மதனுடைய விழாவினுலும்—மா நலம் திகழும் மூரல் மாத்திரி வனப்பினுலும் - பேரழகு விளங்குஞ் சிரிப்பையுடைய மத்திரையினது அழகினுலும்—தான் நலம் உறுதல் எண்ணி - தான் இன்பத்தை அனுபவித்தலை நினைத்து—சாபமும் மறந்து - (கிந்தமமுனிவனிட்ட) சாபத்தையும் மறந்து—அப் பானல் அம் கண்ணுளோடும் - அந்தக் கருங்குவளை மலர்போன்ற கண்களையுடையாளோடும்—பரிவுகூர்ந்தான் - ஆசை மிகுந்தான். எ - று.

மற்று - அசை. அம் அல்வழிக்கட்சாரியை. சாபமும், பாண்டுவும் என்னும் உம்மைகள் சிறப்பு. ஆடவரைப் பெண்கள் தம்மாட்டவாவச் செய்யும் இங்கிதங்கள் பலவற்றுள்ளும் சிரிப்புமொன்ருதலால் அதுவும் இவன் பரிவுகூர்தற்கோர் கருவியாயிருந்ததென்பார் மாநலந்திகழுமூரலென் றுடம்பொடு புணர்த்தியும், மாத்திரி பரிவுகூர இவனும் பரிவுகூர்ந்தான் என்பார் பானலங் கண்ணுளிற் பரிவுகூர்ந்தானென்னுது உடனிகழ்ச்சிப் பொருடரும் ஒடுக்கொடுத்துக் கண்ணுளோடு என்றுங் கூறினுர். (கூடு)

அருந்தளிர்நயந்துநல்கியலகுடனலகுசேரப்
பொருந்துமுன்னவசமாகிப்போகமென்குயிலும்பேடு
மிருந்துமெய்யுருகுங்காவிலிரதியுமதனுமென்ன
வருந்தியகாதலோடுமாதவிப்பந்தர்சேர்ந்தார்.

(இ - ள்.) போகமென் குயிலும் பேடும் - புணர்ச்சியையுடைய மென்மையாகிய குயிற்சேவலும் பேடும்—அலகுடன் அலகு சேர அரும் தளிர் நயந்து நல்கிப் பொருந்துமுன் - அலகோடலகு பொருந்த அரிய தளிரை விரும்பிக் கொடுத்துச் சேர முன்னே—அவசம் ஆகியிருந்து மெய் உருகும் காவில் - பரவசப்பட்டு உடம்பு உருகுகின்ற சோலையில்—வருந்திய காதலோடும் - (அவ்விருவரும் நெடுங்காலம் புணர்ச்சியின்மையால்) வருந்திய ஆசையோடும்—இரதியும் மதனும் என்ன மாதவிப் பந்தர் சேர்ந்தார் - இரதியையும் மன்மதனையும்போலக் குருக்கத்திப் பந்தரை அடைந்தார்கள். எ - று.

பொருந்துமுன் என்பது இறந்தகாலம்பற்றி வந்த முன்னீற்று வினையெச்சம். வருந்துதற் கேதுவாகிய காதலை வருந்திய காதலெனக் காரியமாக வுபசரித்தார். காவில் மாதவிப்பந்தரென் றியையும். அவசமாகி யிருந்தென்பது எழுந்திருந்தென்பதுபோல ஒருசொல். காமத்தைத் தாமாகவளர்க்குமிடமாகிய சோலை என்பார் போகமென் குயிலும் பேடுமிருந்து மெய்யுருகுங்கா என்றும், குருக்கத்தி மரங்கள் பந்தர்போற் செறிந்தமைபற்றிப் பந்தர் என்றுங் கூறினுர். மாதவி ஓர் சாதிக் கொடியென்பாரு முளர். (கூசு)

பஞ்சின்மெல்லடியினுளுங்கணவனும்பழங்கண்ணோட்ட
நெஞ்சினைநலியமேன்மேனையமுற்றுருகியாங்க
ணெஞ்சியகாலமெல்லாமென்செய்தோமென்றென்றெண்ணி
வெஞ்சிலையநங்கவேதமுறைமையான்மேவினுரே.

(இ - ள்.) பஞ்சின் மெல் அடியினுளும் கணவனும் - செம்பஞ்சையூட்டிய மென்மையாகிய கால்களையுடைய மத்திரையும் நாயகனுகிய பாண்டுமகாராசனும்—பழம் கண்ணோட்டம் நெஞ்சினை நலிய - பழைய ஆசை தம் மனத்தினை

வருத்த—மேன்மேல் நேயம் உற்று உருகி - மேலும் மேலும் அன்புமிக்குருகி—எஞ்சிய காலம் எல்லாம் என்செய்தேம் என்று என்று எண்ணி - கழிந்த காலங்களி லெல்லாம் என்ன செய்தேம் என்றென்று சிந்தித்து—வெம் சிலை அநங்கவேத முறைமையால் - கொடிய வில்லையுடைய மன்மதனது நூலின் முறைமையால்—ஆங்கண் மேவினர் - அக்குருக்கத்திப் பந்தரிற் சேர்ந்தார்கள். எ - று.

ஏ - அசை. பஞ்சின் மெல்லடி யென்பதற்குச் சுகிர்ந்த பஞ்சினும் பார்க்க மெல்லிய அடியெனினும் பொருந்தும். மேன்மேல், என்றென்று என்னும் அடுக்குகள் முறையே மிகுதி பற்றியும் அவலம் பற்றியும் வந்தன. கண்ணோட்டம் - ஆசை. (கூஎ)

பூவியலமளிபொங்கப்புணர்முலைபுளகமேற
மேவியகலவியின்பமெய்யுறுமகிழ்ச்சிமுற்றிக்
காவியங்கண்ணிகேள்வன்கமழ்வரைமார்பினன்போ
டோவியமெனவேயுள்ளமுருகினளயர்ந்துவீழ்ந்தாள்.

(இ - ள்.) காவி அம் கண்ணி - கருங்குவளை மலர்போன்ற கண்ணையுடைய மத்திரையானவள்—பூ இயல் அமளி பொங்க - பூவாற்செய்த சயனம் பொலிவடைய—புணர்முலை புளகம் ஏற - நெருங்கிய முலை ரோமாஞ்சங்கொள்ள—மேவிய மெய் உறு கலவி இன்ப மகிழ்ச்சி முற்றி - பொருந்திய மெய்யுறு புணர்ச்சி யின்பத்தாலாகிய சந்தோஷத்தை முடித்து—அன்போடு உள்ளம் உருகினள் - அன்போடு மனமுருகி—கேள்வன் கமழ் வரை மார்பின் ஓவியம் என அயர்ந்து வீழ்ந்தாள் - நாயகனுடைய நறுமணங்கமழும் மலைபோன்ற மார்பில் சித்திரப்பாவையைப்போல ஒரு செயலுமற்றுச் சோர்ந்து விழுந்தாள். எ - று.

ஏ - அசை. அம் - அல்வழிச்சாரியை. இன்பமகிழ்ச்சி இன்பத்தாலாகிய மகிழ்ச்சியென விரியும். உருகினள் வினையெச்சமுற்று. இவர் செய்த கரணபேதத்தா லமளிபொங்கிற்றென்க. இவள் செய்த சுரதம் உபரிசுரதம் என்பார் கேள்வன் கமழ்வரை மார்பின் அயர்ந்து வீழ்ந்தாள் என்றார். மாத்திரி போக முற்றி மார்பில் வீழ்ந்தாள் எனவே பாண்டு போகமுற்றப் பெற்றிலன் என்பது பெறப்பட்டது. (கூஅ)

அரும்பியவிழியுந்தொண்டையமுதுறுபவளவாயும்
விரும்பியசுரதபோகமேவருகுறிப்புமாகிப்
பொரும்படைமதனனம்பாற்பொன்றினன்போலமன்றற்
சுரும்பினமிரங்கியார்ப்பத்தோன்றலுஞ்சோர்ந்துவீழ்ந்தான்.

(இ - ள்.) தோன்றலும் - பாண்டுமகாராசனும்—அரும்பிய விழியும் - (புணர்ச்சியின்பமிகுதியாற்) சிறிது விழித்த கண்ணும்—தொண்டை அமுது உறு பவள வாயும் - (மத்திரையினுடைய) கொவ்வைக்கனிபோன்ற அதரத்திலுள்ள அமிர்தம் பொருந்திய பவளம்போலும் வாயும்—விரும்பிய சுரத போகம் மேவரு குறிப்பும் ஆகி - எவராலும் விரும்பப்பட்ட புணர்ச்சியாலாகிய போகத்திலே ஆசைகொண்ட குறிப்புமுடையனாய்—பொரும் படை மதனன் அம்பால் பொன்றினன் போல - போரைச்செய்யும் படைக்கலங்களையுடைய மன்மதனது பாணத்தாலிறந்தவனைப்போல—மன்றல் சுரும்பினம் இரங்கி ஆர்ப்பச்

சோர்ந்து வீழ்ந்தான் - நறுமணத்தை விரும்பும் வண்டின் கூட்டங்கள் மிக ஒலிக்கச் சோர்ந்து இறந்தான். எ - று.

தொண்டை - இருமடியாகுபெயர். தோன்றலும் என்னும் உம்மை எச்சம். ஆகி, போல ஆர்ப்ப என்னும் எச்சங்கள் தனித்தனி வீழ்ந்தான் என்னும் வினைமுற்றுக்கொண்டன. இவன் சோர்ந்துயிர் விட்டமையிற் பூவணையசைய அதிற்படிந்த சுரும்பினமிரங்கிக் கதறினவென வேறுமொருபொருடோன்றிற்று. வீழ்தல்-மண்டிறத்தல். இதற்குச் சோர்ந்து விழுந்தான் எனப் பொருள்கோடல் பொருத்தமின்று. போகத்தைமுற்றுரு து, என்போலநீயும் இன்பத்திடை அன்போடிறத்தி என முனிவன் கூறிய சாபத்தின்படி ஆசையோடிறந்தான் என்பார் சுரதபோகமேவருகுறிப்புமாகி என்றும், மதனனம்பாற் பொற்றினன் போல என்றுங் கூறினார். (கூகூ)

வேறு

கொஞ்சுகிளியன்னமொழிகுமுதவிதழமுதா
லெஞ்சினனராதிபதியீதெனவியப்போ
வஞ்சுதருதீவினையினலமுதுநஞ்சா
நஞ்சுமமுதாமுரியநல்வினையின்மாதோ.

(இ - ள்.) நராதிபதி - பாண்டுமகாராசன்—கொஞ்சுகிளி அன்னமொழிகுமுத இதழ் அமுதால் எஞ்சினன் - கொஞ்சுகின்ற கிளியின் மொழிபோன்ற சொல்லையுடையாளது செவ்வாம்பற்பூவையொத்த அதரத்திலுள்ள அமிர்தத்தினல் இறந்தான்—ஈது என வியப்போ - இது என்ன ஒரு வியப்போ—அஞ்சுதரு தீவினையினல் அமுதும் நஞ்சாம் - அஞ்சுதலைத்தருந் தீவினையினலே அமுதமும் நஞ்சாகும்—உரிய நல்வினையின் நஞ்சும் அமுது ஆம் - (இன்பத்தைத்தருதற்) குரிய நல்வினையினலே நஞ்சும் அமுதமாகும். எ-று.

மாது, ஓ - அசைகள். வியப்போ என்பதில் ஓகாரம் எதிர்மறை. கிளி ஆகுபெயர். என்ன என்பது என எனக் குறைந்துநின்றது. அஞ்சு முதனிலைத் தொழிற்பெயர். அமுதும், நஞ்சும் என்னும் உம்மைகள் சிறப்பு. கிளியன்னமொழி அன்மொழித்தொகை; "குடங்கையினகன்றவிழி" என்பது போல. இங்ஙனம் வருவனவற்றை வெகுபதவெகுவிரீகி என்பர் பிரயோக விவேகநூலார். "நல்வினையுடையநீரார் நஞ்சுணினமிர்தமாகு - மில்லையேலமுதுநஞ்சாம்" எனச் சிந்தாமணியினும் இனங்கூறுதல் காண்க. (௧00)

சித்திரைவசந்தன்வருசெவ்வியுடன்மகிழா
மத்திரியெனுங்கொடியவாட்கண்விடமன்னண்
முத்திரையுணர்ந்திலண்முயக்கமுறுமின்ப
நித்திரைகொலாமெனநினைந்தருகிருந்தாள்.

(இ - ள்.) மத்திரி எனும் கொடிய வாள் கண் விடம் அன்னாள் - மத்திரியென்கின்ற கொடிய வாள் போன்ற கண்ணையுடைய நஞ்சையொத்தவள்—வசந்தன் வரு சித்திரைச் செவ்வியுடன் மகிழா - மன்மதன் (அரசாய்) வருதற்குரிய இளவேனிற் காலத்தால் மகிழ்ந்து—முயக்கம் உறும் இன்ப நித்திரை என நினைந்து-புணர்ந்தமையால்வந்த இன்பநித்திரை என்று நினைந்து—முத்திரைஉணர்ந்திலள்-

(மரணக்) குறியை அறியாதவளாய்—அருகு இருந்தாள் - அவன் பக்கத்திலிருந்தாள். எ-று.

கொல், ஆம் என்பன அசைகள். சித்திரை - ஆகுபெயர். உணர்ந்திலள் வினையெச்சமுற்று. உடனென்னும் மூன்றும் வேற்றுமையுருபிடைச் சொற் கருவிப் பொருட்கண் வந்தது. வாட்கண் என்பது அன்னாள் என்பதில் விகுதியோடு முடிந்தது. வாள்போலுங்கண்ணையுடைய விடம் என இல்பொருளுவமையாக்கினும் பொருந்தும். மகிழ்ந்து என்னுஞ் செய்தெனெச்சம் முயக்கமுறும் என்பதனோடு முடிந்தது. உண்டவுடனே கொல்லும் நஞ்சுபோலப் போகநுகர்ந்த வுடனே கொன்றமையின் விடமன்னாள் என்றார். (க0க)

செயிர்த்தவரையாவிகவர்தீயுமிழும்வேலா
னுயிர்த்திலன்விழித்திலனுணர்ந்துமிலனென்னா
வயிர்த்தனளழைத்தனளரற்றினளிரங்கா
வயிர்த்தனணிலத்தினுயர்வானமினிதென்பாள்.

(இ - ள்.) செயிர்த்தவரை ஆவிகவர் தீ உமிழும் வேலான் - (அருகிருந்த அவன்) பகைத்தவரை உயிர்கவருகின்ற நெருப்பைக் கக்கும் வேற்படையையுடைய பாண்டுமகாராசன்—உயிர்த்திலன் விழித்திலன் உணர்ந்துமிலன் என்னா - மூச்சுவிட்டிலன் கண்ணைவிழித்திலன் உணர்ச்சியையும் பொருந்திலன் என்று—அயிர்த்தனள் அழைத்தனள் அரற்றினள் இரங்கா - சந்தேகப்பட்டுப் (பலகால்) அழைத்து (அவன் வாளாகிடந்தமையின்) அழுது இரங்கி—நிலத்தின் உயர் வானம் இனிது என்பாள் வயிர்த்தனள் - பூலோக வாழ்வினும் உயர்ந்த சுவர்க்கலோகவாழ்வு இனி எனக்கு நன்றென்பவளாய் மனவைரங்கொண்டாள். எ - று.

இறக்கத்துணிந்தாள் என்பதாம். உணர்ந்தும் என்னும் உம்மை எச்சம். நிலம் வானம் என்பன ஆகுபெயர்கள். அயிர்த்தனள், அழைத்தனள், அரற்றினள், என்பாள் என்பன வினையெச்சமுற்றுக்கள். தீயுமிழும்வேலென்பது வினைக்கண்வந்த சமாதி. (கOஉ)

புந்தியிலண்மன்றல்பெறுபூவைகுரல்கேளா
முந்தியகடும்பழிமுடிந்ததுகொலென்னாக்
குந்தியும்விரைந்துதன்குமாரரொடுபுக்கா
ளந்தியரவிந்தமெனவணிகுலைமுகத்தாள்.

(இ - ள்.) குந்தியும் - குந்திதேவியும்—புந்தி இலள் மன்றல் பெறு பூவைகுரல் கேளா - அறிவுசிறிதுமின்றி நாயகனோடு புணர்ச்சியைப்பெற்ற மத்திரியினுடைய அழுகுரலைக்கேட்டு—முந்திய கடும்பழி முடிந்ததுகொல் என்னா - பழையகடிய சாபம் முடிந்ததோ என்று—அந்தி அரவிந்தம் என அணிகுலை முகத்தாள்- மாலைக்காலத்திற் றாமரைமலர்போல அழகுநீங்கிய முகத்தையுடையளாய்—விரைந்து தன் குமாரரொடு புக்காள் - விரைந்து தன் புதல்வர்களோடு போயினாள். எ - று.

பூவை, அரவிந்தம் என்பன ஆகுபெயர்கள். இலள், முகத்தாள் என்பன வினையெச்சமுற்றுக்கள். குந்தியும் என்னும் உம்மை எச்சம். நாயகன் புணர்ச்சியினாலிறந்து படுவனென்னுமறிவு சிறிதுமில்லாளாய் அதற்குடன்பட்டாள் என்பார் புந்தியிலள் மன்றல்பெறு பூவை என்றார். (கOங)

உற்றதுமருங்கொழுநனுயிருறுநலத்தா
லிற்றதுமுணர்ந்திவளிரங்கியழுமெல்லைக்
குற்றமகலும்படிகுணங்களைநிறுத்து
நற்றவர்புகுந்துருகிநைந்துளநெகிழ்ந்தார்.

(இ - ள்.) இவள் - (வந்த) குந்திதேவியானவள்—உற்றதும் - (அங்கே) சம்பவித்ததையும்—அரும் கொழுநன் உயிர் உறு நலத்தால் இற்றதும் - அரிய நாயகனுடைய உயிர் அனுபவித்த புணர்ச்சியின்பத்தால் நீங்கினமையையும்—உணர்ந்து இரங்கி அழும் எல்லை - அறிந்து உருகி அழும்பொழுதில்—குற்றம் அகலும்படி குணங்களை நிறுத்தும் நல் தவர் புகுந்து - குற்றங்கள் நீங்கும்படி குணங்களை நிலைபெறச்செய்யும் நல்ல முனிவர்கள் வந்து—உளம் உருகி நைந்து நெகிழ்ந்தார்—மனமுருகி வருந்திக் குழைந்தார்கள். எ - று.

குற்றமகலும்படி குணங்களைநிறுத்தும் நற்றவராயினும் ஒழுக்கத்தையுடைய அவன்மேற்கொண்ட பரிவால் மனங்கலங்கினரென்க.　　　　(க0ௐ)

அழுகுரல்விலக்கியபினைம்மகவையுங்கொண்
டெழுகடனிலத்தரசையீமவிதிசெய்யப்
புழுகுகமழ்மைக்குழலிபொற்புடைமுகத்தாண்
முழுகினளனற்புனலின்மொய்ம்பனைவிடாதாள்.

(இ - ள்.) அழுகுரல் விலக்கிய பின் - (அம்முனிவர்கள்) அழுகைக்குரலை விலக்கின பின்பு—ஐம் மகவையும் கொண்டு எழுகடல் நிலத்து அரசை ஈமவிதி செய்ய - ஐந்துபுத்திரர்களையுங்கொண்டு எழுகடல்சூழ்ந்த பூமிக்கரசனாகிய பாண்டுமகாராசனுக்குத் தீக்கடனைச் செய்விக்க—புழுகு கமழ் மைக்குழலி-நாவிநெய்கமழுகின்ற கரிய அளகத்தையுடைய மத்திரியானவள்—பொற்பு உடைமுகத்தாள் - அழகுபொருந்திய முகத்தையுடையளாய்—மொய்ம்பனை விடாதாள் அனற்புனலின் முழுகினள் - தன் நாயகனைப்பிரியாத அக்கினியாகிய நீரில் முழுகினாள். எ - று.

அரசை என்னும் இரண்டனுருபு நான்கனுருபாகத் திரிக்கப்பட்டது. செய்ய என்பதிற் பிறவினையுணர்த்தும் விவ்விகுதி தொக்குநின்றது. முகத்தாள், விடாதாள் என்பன வினையெச்சமுற்றுக்கள். நாயகனைப்பிரியாதுடன்செல்கின்றமையின் மகிழ்ச்சியையுடையளாயினாள் என்பார் பொற்புடைமுகத்தாள் என்றும், சிறந்த கற்புடைமகளிர்க்குச் சகமரணஞ் செய்யும்பொழுது நெருப்பும் நீர்போலத் தட்பந்தருலின் அனலைப் புனல் என்றும் கூறினார்.　　　　(க0ரு)

தங்கையவள்வானுலகுதலைவனுடனெய்திக்
கங்கைவனமூழ்கியுயர்கற்பவனம்வைகப்
பங்கயநெடுத்துறைபடிந்துதன்மகாரான்
மங்கையிவளுங்கடன்முடித்தனள்வனத்தே.

(இ - ள்.) தங்கையவள் தலைவனுடன் வான் உலகு எய்தி - தங்கையாகிய மத்திரியானவள் நாயகனோடு விண்ணுலகை அடைந்து—கங்கைவனம்மூழ்கி உயர் கற்பவனம் வைக - கங்கைநீரில் முழுகி உயர்ந்த கற்பகச்சோலையிலிருக்க—மங்கை இவளும் - இந்தக் குந்திதேவியும்—வனத்து - காட்டில்—பங்கய நெடும் துறை படிந்து-தாமரைபொருத்திய நெடிய நீர்த்துறையில் முழுகி—தன் மகாரால்

கடன் முடித்தனள் - தன் புதல்வர்களைக்கொண்டு பிதாவுக்கு நீர்க்கடனைச் செய்வித்தாள். எ - று.

ஏ - அசை. இவளும் என்னும் உம்மை எச்சம். முடித்தாள் என்பதிற் பிறவினையுணர்த்தும் பிவ்விகுதி தொக்குநின்றது. கற்பம் - கற்பகச்சோலை. "கற்பத்திந்திரன்முதலினோர்" எனப் பிறருங்கூறுதல்காண்க. (கOசு)

காசிபன்முதற்கடவுள்வேதியர்கருத்தா
லாசிபெறுமப்புதல்வரைவரொடுமன்றே
யேசில்பிரதைக்கொடியையிறைநகரினுய்த்தார்
தேசிகரின்முற்றொழுதகுஞ்சதசிருங்கர்.

(இ - ள்.) தேசிகரில் முன் தொழுதகும் சதசிருங்கர் - ஆசாரியர்களுள் முன்வணங்கத்தகும் சதசிருங்கமுனிவர்—காசிபன் முதல் கடவுள் வேதியர் கருத்தால் - காசிபன்முதலிய தெய்வ முனிவர்களுடைய எண்ணத்தால்—ஆசிபெறும் அப்புதல்வர் ஐவரொடும்-ஆசிகளைப்பெறும் அந்தப் புத்திரரைவரோடும்—ஏசு இல் பிரதைக் கொடியை இறை நகரில் உய்த்தார் - குற்றமில்லாத பிரதையென்னும் பெண்ணைத் திருதராட்டிரமகாராசனுடைய நகரத்தில் விடுத்தார். எ - று.

ஐவரொடும் என்னும் உம்மை முற்று. அன்றே என்னும் ஏகாரம் தேற்றம். சதசிருங்கர் வேதியர்கருத்தால் உய்த்தார் என முடிக்க. காசிபன்முதலிய முனிவர்கள்வந்து குந்திதேவியைத் தேற்றிப், புத்திரர்களையுங்கொண்டு அத்தினபுரிக்குச் செல்லும்படி சதசிருங்கமுனிவரோ டவளையனுப்பினரென்க. (கOஎ)

இறந்ததுணைவற்குளமிரங்குநிலமன்னன்
சிறந்தசரணத்தில்விழுசிறுவரையெடுத்துப்
புறந்தழுவியப்பொழுதுபுண்ணியநலத்தாற்
பிறந்தபொழுதொத்துமகிழ்பெற்றியினனானான்.

(இ - ள்.) இறந்த துணைவற்கு உளம் இரங்கு நிலமன்னன் - இறந்த தம்பிக்காக மனமுருகுகின்ற திருதராட்டிரமகாராசன்—சரணத்தில் விழு சிறந்த சிறுவரை எடுத்து - தன்கால்களில் வணங்குகின்ற சிறந்த புதல்வர்களைத்தூக்கி – புறம் தழுவி - (அன்பைப் புலப்படுத்தும்) புறத்தொழிலாகிய தழுவுதலைச்செய்து—அப்பொழுது - தழுவிய அப்பொழுதில்—புண்ணிய நலத்தால் பிறந்தபொழுது ஒத்து மகிழ் பெற்றியினன் ஆனான் - புண்ணியவிசேடத்தால் (அப்புதல்வர்கள்) பிறந்த பொழுதில் மகிழ்ச்சியையொத்து மனம்மகிழுந்தன்மையை யுடையவனாயினான்.எ-று

புறம், பொழுது என்பன ஆகுபெயர்கள். அப்பொழுது மகிழ்பெற்றியினனானான் என வியையும். புறத்தொழிலாகிய தழுவுதலென்க. உடம்பைத்தழுவி எனினும் அமையும். இப்பொருட்குப் புறம்-உடம்பு. சிறந்த என்னும் அடையைச் சரணத்திற்கேற்றிப் பகையரசருடைய முடிகள் தாழ்தலிற் சிறந்த கால்கள் எனப் பொருள்கூறினும்பொருந்தும். (கOஅ)

வியனதிமகன்சிலைவல்விதுரன்முதலுள்ளோர்
பயனுடைவிசும்புபயில்பாண்டுவைநினைந்துஞ்
சயநிலைபெறுந்தகையதனயரையுகந்து
நயனமிருபைம்புனலுகல்கினர்நயந்தார்.

(இ - ள்.) வியன் நதிமகன் சிலைவல் விதுரன் முதல் உள்ளோர் - சிறந்த வீடு ன் விற்றொழிலில் வல்ல விதுரன் முதலானோர்கள்— பயன் உடை விசும்பு பயி ் பாண்டுவை நயந்தார் நினைந்தும் - பல போகங்களையுடைய சுவர்க்கத்திலிருக் தம் பாண்டுமகாராசனை விரும்பி நினைந்தும்—சயம் நிலைபெறும் தகைய தனயரை கந்தும் - வெற்றி நிலைபெறுந்தகைமையையுடைய (அவன்) புதல்வர்களை விரும் பியும்—நயனம் இரு பைம்புனலும் நல்கினர் - கண்களாற் சோகபாஷ்பம் ஆனந்த பாஷ்பம் என்னும் இரண்டையுஞ் சொரிந்தார்கள். எ-று.

சிலை - ஆகுபெயர். இருபைம்புனலும் என்னும் உம்மை முற்று. நயனத்தால் என்னும் மூன்றனுருபு விகாரத்தாற்றொக்கது. நயந்தார் வினையெச்சமுற்று. விது ரன்முதலுள்ளோர் நயனங்கள் இருபுனலும் நல்கினர் எனச் சினைவினையை முத ன்மேலேற்றிக் கூறினும் பொருந்தும்; அவர் கண்சிவந்தார் என்பதுபோல. தான் மேற்கொண்ட அரிய விரதத்திற்றவறாத மனத்திட்பமுடையானென்பார் வியனதி மகன் என்றார். (க0கூ)

அநுசநிருபன்புதல்வரைவருமகீபன்
றனயரொருநூற்றுவருமன்பினொடுதழுவிக்
கனகுலமுகந்துபெய்கருங்கயநெருங்கும்
வனசமலருங்குமுதமலருமெனவளர்வார்.

(இ - ள்.) அநுச நிருபன் புதல்வர் ஐவரும் - பாண்டுமகாராசன் புதல்வ ரைவரும்—மகீபன் தனயர் ஒரு நூற்றுவரும் - திருதராட்டிரமகாராசன் புதல்வர் ஒருநூற்றுவரும்—அன்பினொடு தழுவி - அன்போடு கலந்து—கனகுலம் முகந்து பெய் கருங்கயம் நெருங்கும் - முகிற்கூட்டங்கள் (கடலென்றெண்ணி நீரை) மொ ண்டு மழையைப்பொழிதற்குக் கருவியாகிய பெரிய பொய்கையில் நெருங்குகி ன்ற—வனசமலரும் குமுதமலரும் என வளர்வார் - தாமரைமலரையும் ஆம்பன் மலரையும்போல வளர்வாராயினர். எ-று.

இது முறைநிரனிறை. ஐவரும் நூற்றுவரும் என்னும் உம்மைகள் எண் ணோடு முற்றுப்பொருடந்துநின்றன. பெய்யென்னும் வினைத்தொகை கயம் என் னுங் கருவிப்பெயர்கொண்டது. கனகுலம் வடநூன்முடிபு. ஐவரும் நற்குண முதலியவற்றால் எவராலும் மதித்துக் கைக்கொள்ளப்படுவார் என்பார் அவரை வனசமலரென வளர்வாரென்றும், நூற்றுவரும் தூர்க்குணமுதலியவற்றால் எவ ராலும் வெறுத்து நீக்கப்படுவார் என்பார் அவரைக் குமுதமலரென வளர்வா ரென்றுங் கூறினார். (கக0)

வேறு.

இன்னணம்வளருங்காலையெறிகடலுடுத்தவல்குன்
மின்னெனுமருங்குற்கொங்கைவெற்புடைவேய்கொண்மென்
பொன்னெனுநிறத்தினோடும்பொறப்பழியாகுலத்தா [ரோட்
டன்னெனமுடிப்பான்வந்ததலைவனைத்தந்தகோமான்.

(இ - ள்.) இன்னணம் வளரும் காலை - இப்படி நூற்றைந்துபுதல்வர்களும் வளரும்பொழுதில்—எறிகடல் உடுத்த அல்குல் - திரையெறிகின்ற கடலை உடை யாக உடுத்த (கரையாகிய) அல்குலையும்—மின் எனும் மருங்குல் - மின்னலாகிய இடையையும்—உடை வெற்புக் கொங்கை -(பலவளங்களை) யுடைய மலையாகிய தனத்தையும்—வேய் கொள் மெல் தோள் - மூங்கிலாகிய மென்மையைக்கொ

ண்ட தோளையுமுடைய—பொன் எனும் நிறத்திேைடும் பொற்பு அழி ஆகுலத்தாள் தன் எணம் முடிப்பான் வந்த - பொன்மயமாகிய நிறத்தோடும் அழகழிதற்குக்காரணமாகிய வருத்தத்தையுடைய பூமிதேவியினது எண்ணத்தை முடிக்கும் படியவதரித்த—தலைவனைத் தந்த கோமான் - கிருட்டிணரைப்பெற்ற பிதாவாகிய வசுதேவனும். எ - று.

அல்குலையும் மருங்குலையும் கொங்கையையும் தோளையுமுடையாள் எனவும், பொன்னெனு நிறத்திேைடு பொற்பழியாகுலம் எனவும் இயைக்க. அழிதற்குக் காரணமாகிய ஆகுலத்தை அழியாகுலம் எனக் காரியமாகவுபசரித்தார். எண்ணம் என்பது எணமெனக்குறைந்துநின்றது. கோமானும் என்னும் எண்ணும்மை விகாரத்தாற்ெறுக்கது. பலவளங்களும் என்பது அவாய்நிலையான் வருவிக்கப்பட்டது. "வைகைத்தடங்கரையெக்கரல்குல்" எனப் பிறருங் கூறுதல் காண்க. பிருதுவிக்குப் பொன்னிறமுடைமையிற் பொன்னெனு நிறம் என்ருர். ஆகுலத்தாள்தன்னெணமுடித்தல் பூபாரந் தீர்த்தல். (கககூ)

குந்திபோசன் றன்றெய்வக்குலத்துளோர்களுமநேக
விந்திரரவனிதன்னிலெய்தினராகுமென்னக்
கந்தவான்கொன்றைதோயுங்கங்கையாள்குமரன்வைகு
மந்தமில்சுவர்க்கமன்னவத்திஞபுரிவந்துற்ருர்.

(இ - ள்.) குந்திபோசன் தன் தெய்வக்குலத்துளோர்களும் - குந்திபோசராசனுடைய தெய்வத்தன்மையாகிய குலத்தவர்களும்—அநேக இந்திரர் அவனிதன்னில் எய்தினர் ஆகும் என்ன - அநேக இந்திரர்கள் பூமியில் வந்தனர்போலும் என்று சொல்ல—கந்த வான் கொன்றை தோயும் கங்கையாள் குமரன் வைகும் - வாசனையையுடைய பெருமையாகிய கொன்றைமலர் பொருந்தும் கங்கையின் புதல்வனுகிய வீடுமனிருக்கும்—அந்தம் இல் சுவர்க்கம் அன்ன அத்திஞபுரி வந்து ற்ருர் - அழிவில்லாத சுவர்க்கத்தையொத்த அத்திஞபுரியை வந்தடைந்தார்கள். எ - று.

கொன்றை - ஆகுபெயர். கிருட்டிணர் முதலாயினோர் அவதரித்தமையிற் போசகுலத்தைத் தெய்வக்குலம் என்றும், சிவபெருமானுக்குத் திருவுடையாளமாலையாதலாற் கொன்றையைக் கந்தவான்கொன்றை என்றும் விசேடித்துக் கூறினர். தலைவனைத்தந்த கோமானும், குந்திபோசன்றன்றெய்வக்குலத்துளோர்களும் அத்திஞபுரிவந்துற்ருர் எனமுடிக்க. (ககஉ)

வெண்ணிறமதியமன்னவிடலையுங்கரியமேக
வண்ணனும்வள்ளறன்னைத்திருவயிற்றுயிர்த்தமாது
மெண்ணிலாவுவகையோடுங்குந்தியையெய்தியெல்லாப்
புண்ணியநலமுமெண்ணிப்பூமியாண்முறையுங்கோத்தார்.

(இ - ள்.) வெண் நிற மதியம் அன்ன விடலையும் - வெண்மையாகிய சந்திரனையொத்த நிறத்தையுடைய பலராமனும்—கரிய மேக வண்ணனும் - கரிய முகில்வண்ணராகிய கிருட்டிணரும் — வள்ளல் தன்னைத் திருவயிற்று உயிர்த்த மாதும் - அவரை அழகிய வயிற்றினின்றும் பெற்ற தாயாகிய தேவகியும்— எண் இலா உவகையோடும் குந்தியை எய்தி - அளவற்ற மகிழ்ச்சியோடுங் குந்திதேவியை அடைந்து—எல்லாப் புண்ணிய நலமும் எண்ணி - சகல தருமநூல்

விதிகளையும் ஆராய்ந்து—பூமி ஆள் முறையும் கோத்தார் - பூமியை ஆளுதற்குரிய முறைமைகளையும் ஒழுங்குபடுத்தினார்கள். எ - று.

புண்ணியும், நலம் என்பன ஆகுபெயர்கள். நெருங்கிய கிளைஞராகிய குந்தி போசன் முதலாயினோர் இவளை நெடுங்காலங் காணாமையினா லெழுந்த அவாவோடு காணவந்தார் என்பார் எண்ணிலா வுவகையோடு குந்தியையெய்தி என்றும், ஐவரும் நூற்றுவரும் தருமநூல் விதிப்படி தத்தமக்குரிய தாயபாகங்களைப் பெற்று ஆளுதற்குரியார் எனக் கோவைசெய்தார் என்பார் எல்லாப் புண்ணிய நலமு மெண்ணிப் பூமியாண்முறையுங் கோத்தார் என்றுங் கூறினார். (ககங)

எம்பிரானாதிமூலமிந்திரன்முதலோர்க்கொல்லாந்
தம்பிரான்பாண்டுவீன்றதருமதேவதையைநோக்கி
யம்புராசிகளுட்பட்டவவனிகளனைத்துநாமே
யிம்பரேயகற்றியெல்லாவெண்ணமுமுடித்துமென்றான்.

(இ - ள்.) எம்பிரான் - எங்கள் கடவுளும்—ஆதிமூலம் - முதற்காரணரும்—இந்திரன் முதலோர்க்கு எல்லாம் தம்பிரான் - இந்திரன் முதலிய தேவர்களுக்கெல்லாந் தேவரும் ஆகிய கிருட்டிணர்—பாண்டு ஈன்ற தரும தேவதையை நோக்கி - பாண்டுமகாராசன் பெற்ற தருமனைப்பார்த்து—அம்புராசிகளுட்பட்ட அவனிகள் அனைத்தும் - கடலாற் சூழப்பட்ட பூமிக ளனைத்தையும்—நாமே இம்பர் அகற்றி - நாமே பிற்காலத்திற் (பொது) நீக்கி [உன்னுடையனவாக்கி என்றபடி]—எல்லா எண்ணமும் முடித்தும் என்றான் - சகல எண்ணங்களையும் முடிப்போம் என்று சொன்னார். எ - று.

இம்பரே என்னும் ஏகாரம் அசை. நாமே என்னும் ஏகாரம் பிரிநிலை. "தங்கண்மக்களே தாங்கள் வேறிலரெனச் சாற்றிடு மறையெல்லாம்" என்றபடி தருமக் கடவுளின் புதல்வனைத் தருமதேவதை என்றார். பூபாரம் தீர்த்தலாகிய தன் கருமத்தையும் துரியோதனன் முதலிய பகைவரை வதைத்தலாதியாகிய தருமன் கருமத்தையும் உளப்படுத்தி எல்லாவெண்ணமு முடித்தும் என்று கிருட்டிணர் கூறினாரென்க. (ககச)

முகுரவானனனும்வேத்துமுனிவனுமனஞ்சொற்காயம்
பகிர்விலாவிதுரன்றானும்பாந்தளேறுயர்த்தகோவு
நிகரிலாத்துணைவர்தாமுநீரொடுநீர்சேர்ந்தென்னத்
தகைவிலாவன்பினோடுந்தழுவினர்கெழுமினாரே.

(இ - ள்.) முகுர ஆனனனும் - (இரசம்பூசாத) கண்ணாடிபோன்ற முகத்தையுடைய திருதராட்டிரனும்—வேத்து முனிவனும்-ராசமுனிவனாகிய வீடுமனும்—மனம் சொல் காயம் பகிர்வு இலா விதுரன் தானும் - மனம் வாக்குக் காயங்கள் வேறுபடாத விதுரனும்—பாந்தள் ஏறு உயர்த்த கோவும் - சர்ப்ப ஏற்றைக் (கொடியாகக்கொண்டமையினால்) உயரச்செய்த துரியோதனனும்—நிகர் இலாத் துணைவர் தாமும் - ஒப்பில்லாத தருமன் முதலிய துணைவர்களும்—நீரொடு நீர் சேர்ந்து என்ன-நீரோடு நீர்சேர்ந்தாற்போல (வேற்றுமையின்றி)—தகைவு இலா அன்பினோடும் தழுவினர் கெழுமினார்-தடுத்தற்கரிய அன்போடுந்தழுவி மனங்கலந்தார்கள். எ - று.

ஏ - அசை. வேத்துமுனிவன் விகாரம். இலாத என்னும் பெயரெச்சத் தீறு தொக்கது. தழுவினர் வினையெச்சமுற்று. "ஆற்றலொடு புணர்ந்தவாண் பாற் கெல்லா - மேற்றைக் கிளவி யுரித்தென மொழிப." என்னும் விதிபற்றி நாகமும் ஏறெனப்பட்டது. இரசம் பூசாத கண்ணடி முகமுதலியவற்றைப் பார்த்தற்கு உபயோக மாகாதவாறுபோல, தமக்குரிய விடயங்களைக் கவருமொளி யில்லாத வடிவ மாத்திரையேயாயுள்ள கண்கள் பொருந்திய முகத்தையுடையான் என்பது கருத்து. இனி இதற்கு, கட்பொறி யின்மையிற் கண்ணடிபோல ஏற்றிழிவின்றி ஒரேபெற்றித்தாயிருக்கும் முகத்தையுடையான் என்றும், தன் குருட்டுக்கண் பிற ர்க்குக் கண்போ லழகாய்த் தோன்றும்படி கண்ணடியை யிட்ட முகத்தையுடை யான் என்றும் பொருள்கொள்வாரு முளர். திரிகரண சுத்தியுடையான் என்பார் மனஞ்சொற்காயம் பகிர்விலா விதுரன் என்றார். (ககரு)

தன்பதிவந்தோர்தம்மைத்தாதைதன்றாதையான
முன்புடைக்கங்கைமைந்தன்முதலியமுதல்வரெல்லா
மன்பொடுகண்டுகண்டுகண்களித்தார்வமிஞ்சி
மன்பதைமகிழ்ச்சிகூரவரம்பிலாவிருந்துசெய்தார்.

(இ - ள்.) தாதைதன் தாதை ஆன முன்பு உடைக் கங்கை மைந்தன் முத லிய முதல்வர் எல்லாம் - பாட்டனாகிய வலிமையினையுடைய வீடுமன் முதலாகிய தலைவர்களெல்லாரும்—தன்பதி வந்தோர் தம்மை - தம்முடைய நகரத்திற்கு வந் தவர்களை—அன்பொடு கண்டு கண்டு கண்களித்து ஆர்வம் மிஞ்சி - அன்போடு எதிர்கொண்டு எதிர்கொண்டு கண்களித்து விருப்பம்மிக்கு—மன்பதை மகிழ்ச்சி கூர வரம்பு இலா விருந்து செய்தார் - பூமியிலுள்ளோர் மகிழ்ச்சிமிக அளவில் லாத விருந்தைச் செய்தார்கள். எ - று.

தன்பதி என்பது பன்மையி னொருமை மயங்கிற்று. கண்டு கண்டென்பது ஒருதொழில் பலகானிகழ்தற் பொருள்பற்றி வந்த அடுக்கு. இலாத என்னும்பெய ரெச்சத்தீறு தொக்கது. (ககசு)

நூற்றுவரைவரென்னுநுதியுடைச்சமரவைவேற்
கூற்றுவரனையோர்க்கியாருங்கொடுங்கடும்போரிலாற்றா
ராற்றுவரேனுமுங்களுதவியுண்டருளுமுண்டு
தோற்றமுமுண்டுநுங்கள்சுமையிவர்சுமையுமென்றார்.

(இ - ள்.) நூற்றுவர் ஐவர் என்னும் வைநுதி உடைச்சமரவேல் கூற்றுவர் அனையோர்க்கு-நூற்றுவரும் ஐவரும் என்றெண்ணப்படும் கூரிய நுதியையுடைய யுத்தஞ்செய்யும் வேலை ஏந்திய கூற்றுவர்களை ஒப்பவர்களுக்கு—யாரும் கொடும் கடும் போரில் ஆற்றார் - எவரும் கொடிய கடிய யுத்தத்தில் எதிர் நிற்கமாட்டார் கள்—ஆற்றுவரேனும் - ஒருவாறு எதிர்நிற்பராயினும்—உங்கள் உதவி உண்டு - உங்களுடைய உதவியுண்டு—அருளும் உண்டு - கிருபையுமுண்டு—தோற்றமும் உண்டு - உயர்ச்சியுமுண்டு—இவர் சுமையும் நுங்கள் சுமை என்றார்—இவர்களைத் தாங்குதலும் உங்கள் பாரம் என்றார்கள். எ - று.

நுங்கள்சுமை என்பதிற் சுமை ஆகுபெயர். ஆற்றுவரேனும் என்னும் உம்மை எதிர்மறை. அருளும், தோற்றமும், சுமையும் என்னும் உம்மைகள் எச்சத்தோடு சிறப்பு. (ககஎ)

இனிமையிற்பலவுமாற்றம்யாவர்க்குமியாவுஞ்சொல்லித்
தினகரற்றொழுதபின்னர்த்தேர்பரிகரிகடோறு
மனனுறத்தக்கசெல்வம்வகைதொறும்வழங்கியன்றே
தனதனைப்போல்வார்தம்மைத்தம்பதியடைவித்தாரே.

(இ - ள்.) தினகரன் தொழுத பின்னர் - (காலையிலே) சூரியனை வணங்கின பின்—அன்றே - அன்றைக்கே—யாவர்க்கும் இனிமையின் பலமாற்றம் யாவும் சொல்லி - (வீமன் முதலியோர், வந்தவர்) அனைவர்க்கும் இனிமையையுடைய பலவகைப்பட்ட வசனங்களனைத்தையுஞ் சொல்லி—மனன் உறத் தக்க செல்வம் வகைதொறும் வழங்கி - (அவரவர்) மனங்களிக்கத்தக்க செல்வங்களை ஒவ்வொரு வகைகளிலுங் கொடுத்து—தனதனைப் போல்வார் தம்மை - (செல்வத்தாற்) குபேரனை யொத்த அவர்களை—தேர் பரி கரிகள் தோறும் தம்பதி அடைவித்தார் - தேர் குதிரை யானை ஆகிய இவைகளில் (ஏறும்படிசெய்து) தத்தம் நகரங்களை அடையச்செய்தார். எ - று.

பலவும் என்னும் உம்மையும் ஏகாரமும் அசை. அன்றே என்னும் ஏகாரம் தேற்றம். நித்தியகரும முடித்தபின் என்பார் தினகரற்றொழுத பின்னர் என்றும், வந்த அரசர்க்கெல்லாம் செல்வத்தையும் தேர் பரி கரிகளையும் அவர்க்கின்மையிற் கொடுத்தாரல்லர், உபசாரந் தோன்றக்கொடுத்தார் என்பார் தனதனைப்போல் வார் தம்மை என்றுங் கூறினர். (கக அ)

வேறு.

எயினலம்புனைகோபுரமாபுரத்தெழுதுமாளிகைதோறும்
வெயினிலாவுமிழ்கனகநீள்வீதியில்விலாசமுற்றிடுநாளிற் [ன்
பயினன்மேல்வருகல்லெனச்செறிந்தமெய்ப்பவனன்மைந்தனுமொத்தா
வயினதேயனைக்காத்திரவேயரைமன்னன்மைந்தருமொத்தார்.

(இ - ள்.) எயில் நலம் புனை கோபுர மா புரத்து எழுதும் மாளிகை தோறும் - மதிலையும் அழகைப் பொருந்திய கோபுரத்தையுமுடைய பெரிய நகரத்தி லுள்ள சித்திரங்கள் எழுதப்பட்ட மாளிகைகள் தோறும்— வெயில் நிலா உமிழ் கனக நீள் வீதியில் விலாசம் உற்றிடு நாளில் - (தன்னிடத்துள்ள மணிகளால்) வெய்யிலையும் நிலாவையும் வீசுகின்ற பொன்மயமாகிய நீண்ட வீதியில் விளையாடும் நாளில்—பயினன் மேல் வரு கல் எனச் செறிந்த மெய்ப் பவனன் மைந்தனும் - சேஷன்மேலேவந்து தன் படங்களால் மூடிய மேருமலையைப்போல இறுகிய சரீரத்தையுடைய வீமனும்—வயினதேயனை ஒத்தான் - கருடனை ஒத்தான்—மன்னன் மைந்தரும் காத்திரவேயரை ஒத்தார் - திருதராட்டிரனுடைய புதல்வர் நூற்றுவரும் சர்ப்பங்களை ஒத்தார்கள். எ - று.

உம்மைகளிரண்டுஞ் சிறப்பு. பையினன், வைனதேயன் என்பன, பயினன் வயினதேயன் எனப் போலியாய் நின்றன. பையினன் - படத்தையுடையவன். இவ்வுவமையினால் வீமனும் நூற்றுவரும் பகையுடையராயினர் என்பதனோடு வீமனை இவர் வெல்லும் வன்மையிலராயினர் என்பதும் பெறப்படும். (கககூ)

ஆ செய்யுள் - உகூஎ.

சம்பவச்சருக்க முற்றிற்று.

---

## வாரணாவதச்சருக்கம்.

அருமறைமுதல்வனையாழிமாயனைக், கருமுகில்வண்ணனைக்க மலக்கண்ணனைத், திருமகடலைவனைத்தேவதேவனை, யிருபதமுளரிகளி றைஞ்சியேத்துவாம்.

(இ - ள்.) அருமறை முதல்வனை - அரிய வேதங்களுக்குத் தலைவரை—ஆழி மாயனை - சக்கரத்தை ஏந்திய மாயத்தையுடையவரை—கரு முகில் வண்ணனை - கரிய மேகவண்ணரை—கமலக் கண்ணனை - செந்தாமரைமலர்போலுங் கண்ணை யுடையவரை—திருமகள் தலைவனை - இலக்குமிக்கு நாயகரை—தேவ தேவனை - தேவர்களுக்குந் தேவரை—இரு பத முளரிகள் இறைஞ்சி ஏத்துவாம் - இரண்டு பாதங்களாகிய செந்தாமரைமலர்களில் வணங்கித் துதிப்பாம். எ - று.

அருமறை முதல்வன் என்பது முதலாக ஒருபொருண்மேல் வந்த பலபெயர் களுக்கும் இறுதியில் இறைஞ்சி என ஒருவினை கொடுத்தார். (க)

ஆங்கவரம்முறையயருமாயிடைத், தீங்கொருவடிவமாந்திறற் சுயோதனன், பாங்கிவனமக்கெனப்பரிதிமைந்தனை, வாங்குபுதழீஇ யினன்வலிமைகூரவே.

(இ - ள்.) ஆங்கு அவர் அம்முறை அயரும் ஆயிடை - அங்கே அவர்கள் அப் படி விளையாடுங்காலத்தில்—தீங்கு ஒரு வடிவம் ஆம் திறல் சுயோதனன் - தீமை யே ஒரு உருவாகிய வலிமையினையுடைய துரியோதனன்—இவன் நமக்குப் பாங்கு என - இவன் நமக்கு நண்பன் என்று—பரிதி மைந்தனை வாங்குபு வலிமை கூரத் தழீஇயினன் - கன்னனை ஏனையரினின்றும் பிரித்துத் (தனக்கு) வலிமை மிகும்படி சேர்த்துக்கொண்டான். எ - று.

ஏ - அசை. பாங்கு எனக் குணத்தின்பெயர் குணிமேனின்றது; "இல்லவண் மாண்பானல்" என்புழிப்போல. ஆயிடையென்பது ஈண்டுக் காலத்தை யுணர்த் திற்று. வாங்குபுதழீஇயினன் என்பதற்கு எடுத்துத் தழுவிக்கொண்டான் எனப் பொருள்கொள்ளுதல் சிறப்பின்று. (உ)

ஒருபகனிலமகளுய்யமங்குலின், வருபகீரதிநதிவாசநீர்படிந், திரு திறப்புதல்வருமியைந்தகேண்மையாற்,கரையடைந்தனரிளங்கடவுளோ ரனார்.

(இ - ள்.) இளங்கடவுளோர் அனார் இருதிறப் புதல்வரும் - தேவகுமாரர் களையொத்த இருபகுதிப் புதல்வர்களும்—இயைந்த கேண்மையால் - இயைந்த நண்போடு—ஒருபகல் - ஒருநாள்—நிலமகள் உய்ய மங்குலின் வரு பகீரதி நதி வாசநீர் படிந்து - பூமிதேவி வளர்ந்தழைக்கும்படி முகில்போல முழங்கிப் பெருகு கின்ற கங்கைநதியின் வாசனை பொருந்திய நீரிலே முழுகி—கரை அடைந்தனர் - கரையை அடைந்தார்கள். எ - று.

அன்னார் என்பது குறிப்பு வினைப்பெயரெச்சமுற்று. புதல்வரும் என்னும் உம்மை முற்று. ஆனுருபு உடனிகழ்ச்சிப் பொருளில் வந்தது. நிலமகளுய்ய என் பதற்குப் பூமியிலுள்ளார் ஸ்நானஞ்செய்து பாவங்களைநீக்கி ஈடேற எனவும் பொருள்கொள்க. (ங)

தைவருநவமணிச்சயிலமென்னவே, யைவகைநிறங்களுமமைத் தியற்றிய, தெய்வவாடகமனைச்செல்வப்போனகங், கைவரநுகர்ந்தபின் கண்ணுந்துஞ்சினர்.

(இ - ள்.) தைவரும் நவமணிச் சயிலம் என்ன - (அழுக்கறத்) துடைக்கப் பட்ட நவரத்தினமலைபோல—ஐவகை நிறங்களும் அமைத்து இயற்றிய - ஐந்து வகை நிறங்களையும் ஊட்டிச் செய்யப்பட்ட—தெய்வ ஆடகமனை - தெய்வத் தன் மையினையுடைய பொன்னாலாகிய வீட்டில்—செல்வப் போனகம் கைவர நுகர்ந்த பின் - செல்வத்தையுடைய அன்னத்தைக் கையார உண்டபின்—கண்ணுந் துஞ் சினர் - நித்திரையையுஞ் செய்தார்கள். எ - று.

ஏ - அசை. கண்ணும் என்னும் உம்மை எச்சம். ஐவகை நிறங்களும் அமை த்து என்பதற்கு ஐவகை நிறங்களையுடைய மணிகளை அழுத்தி யெனப்பொருள் கொள்ளுதலும் பொருந்தும். இப்பொருட்கு ஐவகைநிறம் அன்மொழித்தொகை.

கண்படைக்கங்குலிற்கன்னசௌபல, ரெண்படைக்குமரனோடெ ண்ணிப்பாவக, னண்பன்மெய்ப்புதல்வனைநார்கொள்வல்லியாற், றிண் பதத்தொடுபுயஞ்சிக்கவார்த்தபின்.

(இ - ள்.) கண்படைக் கங்குலில் - நித்திரைசெய்கின்ற இரவில்—கன்ன சௌபலர் - கன்னனுஞ் சகுனியும்—எண் படைக் குமரனோடு எண்ணி - எண் ணத்தக்க படைகளையுடைய துரியோதனனோடு ஆலோசித்து—பாவகன் நண்பன் மெய்ப் புதல்வனை - வாயுவினுடைய மெய்ம்மைபொருந்திய புத்திரனாகிய வீம னை—நார்கொள் வல்லியால் திண் பதத்தொடு புயம் சிக்க ஆர்த்தபின் - கயிற்றின் தன்மையைக்கொண்ட கொடிகளால் வலிய கால்களோடு புயங்களை இறுகக் கட் டிய பின்பு. எ - று.

நார் - ஆகுபெயர். கன்னசௌபலர் உம்மைத்தொகை; நகுலவிபுலர் என் பதுபோல. இளவரசனென்பதுபற்றி எண்படைக்குமரன் என்றார். (ரு)

அரவினிற்பிணித்தெழுமரவம்பொங்கிட, வுரனுடைப்பொருப்பை யன்றும்பர்நாயகன், பரவையிற்செறித்தெனப்பயனில்செய்கையால், விரவுமப்பெருநதியூடுவீழ்த்தினர்.

(இ - ள்.) உம்பர் நாயகன் - தேவநாயகராகிய விட்டுணு—அன்று உரன் உடைப் பொருப்பை அரவினிற் பிணித்து-முற்காலத்தில் வலிய மந்தரமலையைச் சேடனாற் கட்டி—எழும் அரவம் பொங்கிடப் பரவையிற் செறித்தென - உண் டாகும் ஆரவாரம் மிகப் பாற்கடலில் இட்டாற்போல—பயன் இல் செய்கையால் விரவும் அப் பெருநதி ஊடு வீழ்த்தினர் - பிரயோசனம் அற்ற செயலால் (கரை யோடு) பொருந்துகின்ற அந்தப் பெரிய கங்கைநதியின் நடுவில் விழுத்தினார் கள். எ - று.

ஊடு என்பது ஈண்டு இடவிகற்பத்தையுணர்த்தும் பெயர். வீமன் நதியிற் றப்பியெழுதலின் இவர் நினைத்தகருமம் வாய்த்திலதென்பதும், தமக்கிருமையி னும் உறுதிபயவாத செயலைச்செய்தார் என்பதும் போதரப் பயனில் செய்கை யால் என்றும், கொல்லத்தக்க ஆழமாகிய நீரையுடைய நதி என்பார் விரவு மப் பெரு நதி என்றுங் கூறினர். (சு)

வீழ்ந்தவனனந்தரநிமிர்ந்துமெய்யுறச், சூழ்ந்தனபிணிகளைத்துணி களாக்கியே, யாழ்ந்திலனேறிமீண்டவசத்தோடவட், டாழ்ந்திலனிராக வன்றம்பிபோன்றுளான்.

(இ - ள். வீழ்ந்தவன் அனந்தரம் நிமிர்ந்து - வீழ்ந்த வீமன் பின்பு உடம்பு நிமிர்ந்து—மெய் உறச் சூழ்ந்தன பிணிகளைத் துணிகள் ஆக்கி - தன்னுடம்பை மிகச்சுற்றிய கட்டுக்களைத் துண்டுகளாக்கி—இராகவன் தம்பிபோன்றுளான்- இலக்குமணனை யொத்தவனாய்—ஆழ்ந்திலன் ஏறி மீண்டு அவசத்தோடு அவண் தாழ்ந்திலன் - ஆழாமற் கரையேறித் திரும்பிப் பரவசத்தோடு அங்கே தங்காதவனாய்ச் சென்றான். எ - று.

ஏ - அசை. சூழ்ந்தன பெயரெச்சமுற்று. ஆழ்ந்திலன், போன்றுளான் வினையெச்சமுற்றுக்கள். நிமிர்ந்து துணிகளாக்கி எனவியையும். இராகவன் தம்பி தன் மெய்யைச்சூழ்ந்த நாகபாசத்தைத் துணித்துப் பின் எழுந்த இயைபுபற்றி அவனை இவற்குவமை கூறினார். (எ)

வாளிரவியையொளிமறைக்கும்வெஞ்சினக், கோளரவினையன கொடியநெஞ்சின, னீளரவினங்களானித்திராலுவை, மீளவுங்கொல்லுவான்வீரனேவினன்.

(இ - ள்.) வாள் இரவியை ஒளி மறைக்கும் வெம் சினக்கோள் அரவினை யன- கிரணங்களையுடைய சூரியனது ஒளியை மறைக்கின்ற கொடிய கோபம் பொருந்திய கிரகமாகிய கேது என்னும் பாம்பை ஒத்த—கொடிய நெஞ்சினன் வீரன் - கொடிய மனத்தையுடையனாகிய துரியோதனன்—நித்திராலுவை மீளவும் கொல்லுவான் ஏவினன் - நித்திரைசெய்கின்ற வீமனைத் திரும்பவுங் கொல்லும்படி (பிடாரர்களை) அனுப்பினான். எ - று.

வாள் - ஆகுபெயர். மீளவும் என்னும் உம்மை எச்சம். நெஞ்சினன் பெயரெச்சமுற்று. எதிர்த்துக்கொல்லும் வீரமின்றி வஞ்சத்தாற் கொல்லத் துணிந்தானை வீரனென்றது புகழ்வதுபோலப்பழித்தது. நித்திராலு - நித்திரைசெய்பவன். கல்வியறிவொழுக்கமுதலியவற்றாற் சிறந்த பாண்டவரைக் கெடுக்கவல்ல சூழ்ச்சிகளையுடைய கொடிய மனத்தினனென்பார் வாளிரவியையொளிமறைக்கும் வெஞ்சினக் கோளரவினையன கொடியநெஞ்சினன் என்றார். துரியோதனன் வீமனை யழைத்துக்கொண்டுபோய்ச் சோலையில் விளையாடி, அன்றிரவு அவனை அங்கே தனித்துறங்குமாறு செய்து, பின் பிடாரர்களைக் கொண்டு பாம்புகளாற் கடிப்பித்தானென்க. (அ)

கடித்தனபன்னகங்கொள்கைகளாற், றுடித்திடமற்குணத் தொகுதிபோற்பிசைந், திடித்திடுமுகிலெனவெழுந்துமாநகர், வடித்த வேற்றுணைவரோடெய்திமன்னினான்.

(இ - ள்.) பன்னகம் கடித்தன - (பிடாரர்களால் ஏவப்பட்ட) பாம்புகள் கடித்தன—இடித்திடும் முகில் என எழுந்து - (அப்பொழுது வீமன்) முழங்குகின்ற முகிலைப்போல ஆரவாரித்தெழுந்து—நகம் கொள் கைகளால் துடித்திடமற்குணத் தொகுதிபோற் பிசைந்து - நகம்பொருந்திய கைகளால் துடிக்கும்படி மூட்டைப் பூச்சித் திரளைப்போல அவைகளைப் பிசைந்து—மா நகர் எய்தி - பெரிய மாளிகையை அடைந்து—வடித்த வேல் துணைவரோடு மன்னினான் - வசப்படுத்திய படைக்கலங்களையுடைய துணைவர்களோடு சயனித்தான். எ - று.

பாம்புகளைக்கோறற்கியைந்த கருவியுடையவென்பார் நகங்கொள்கை யென்றும், நித்திரை செய்யும் பொழுதில் அவைகள் கடித்தமையாற் றிடுக்கிட் டதிர்ந்தெழுந்தானென்பார் இடித்திடுமுகிலென வெழுந்தென் றுங் கூறினார். மற்குணம்- மூட்டைப்பூச்சி. (க)

வேறொருபகற்கழுநிரைத்துவீமனோ, டாறுபாய்ந்திருவருமாடும் வேலையிற்,றேறலான்வஞ்சகந்தேறிவண்டினா, லேறினான்கடந்தரியேறு போன்றுளான்.

(இ - ள்.) தேறலான் - பகைவனாகிய துரியோதனன்—வேறு ஒரு பகல்கழு நிரைத்து-வேறொருநாள் (ஆற்றினுள்ளே பிறர்க்குத்தெரியாதபடி) கழுவை நிரைத்து—வீமனோடு ஆறு பாய்ந்து - வீமனோடு அவ்வாற்றிற்பாய்ந்து—இருவரும் ஆடும் வேலையில்-இருவரும் விளையாடும்பொழுதில்—வஞ்சகம் வண்டினால் தேறி-(அவன்செய்த) வஞ்சகத்தைக் (கிருட்டிணராகிய) வண்டினால் அறிந்து—அரி ஏறு போன்றுளான்-சிங்கேற்றையொத்த வீமன்—கடந்து ஏறினான்-அக்கழுவைக் கடந்து கரையேறினான். எ - று.

பாய்ந்தாடுதலாகிய வினை துரியோதனனுக்கும் எய்துதலின், நிரைத்தென் னுஞ் செய்தெனெச்சந் தன்கருத்தாவின் வினை கொண்டதேயாமென்க. துரி யோதனன் நீருள் நிரைத்த கழுவிலே கிருட்டிணர் வண்டாயிருந்து தெளிவித் தமைபற்றி வண்டினாற்றேறி என்றார். (௧0)

பின்னருமொருபகற்பெற்றம்பெற்றவன், றன்னையம்மகீபதிதன யனாதரித், தின்னமுதருத்துவான்போலயாவையுந், துன்னியவிடங்களா ற்றுய்ப்பித்தானரோ.

(இ - ள்.) பின்னரும் ஒருபகல் - பின்னும் ஒருநாள்—பெற்றம் பெற்றவன் தன்னை - வாயுகுமாரனாகிய வீமனை—அம் மகீபதி தனயன் ஆதரித்து - அந்தத் துரியோதனன் உபசரித்து—இன் அமுது அருத்துவான் போல - இனிமையாகிய அன்னத்தை யூட்டுபவன்போல—யாவையும் துன்னிய விடங்களால் துய்ப்பித் தான் - எல்லாவுணவுகளையும் செறிந்த நஞ்சுகளோடு உண்பித்தான். எ - று.

அரோ - அசை. பின்னரும் என்னும் உம்மை எச்சம். விடங்களால் என் னும் ஆலுருபு ஒடுவுருபின் பொருளில் வந்தது. அன்னங்கறிமுதலிய எல்லாவற்றி லும் வீமனுக்குத் தெரியாதபடி நஞ்சுகலந் தூட்டினானென்பார் யாவையுந் துன் னிய விடங்களாற்றுய்ப்பித்தா னென்றார். இவனுயிர் விரைவிற்கழியுமாறு பல வகைப்பட்ட நஞ்சங்களைக் கலந்தானென்பது விடங்கள் என்னும் பன்மையீற் றுற் பெறப்பட்டது. அமுதை அன்போடருத்துவான்போல விடத்தை யூட்டினா னென்க. பெற்றம் - வாயு. (௧௧)

விடத்திலேயழிந்தறிவொழிந்தவீமனை, வடத்திலேபிணித்தனன் கங்கைவாரியி, னிடத்திலேயமிழ்த்தினனிதயமொத்தவர், திடத்திலே முதிர்ந்தகிங்கரர்திறங்களால்.

(இ - ள்.) விடத்தில் அறிவு அழிந்து ஒழிந்த வீமனை - நஞ்சினால் அறிவு அழிந்துபோன வீமனை — வடத்தில் பிணித்தனன் - (துரியோதனன்) கயி ற்றாற் கட்டி—இதயம் ஒத்தவர் திடத்தில் முதிர்ந்த கிங்கரர்திறங்களால் - மனம் ஒத்தவராகிய வலிமையில் மேம்பட்ட கிங்கரருடைய கூட்டங்களைக் கொண்டு— கங்கை வாரியினிடத்தில் அமிழ்த்தினன்-கங்கை நீரில் அமிழ்த்துவித்தான். எ-று.

ஏகாரம் நான்கும் அசைகள். பிணித்தனன் வினையெச்ச முற்று. ஒத்தவர் பெயரெச்ச முற்று. பிணித்தனன், அமிழ்த்தினன் என்பவைகளிற் பிறவினைவிகு திகள் தொக்குநின்றன. இவற்றை அந்தர்ப்பாவிதணிச்சென்பர் வடநூலார். தாஞ் செய்யும் அந்தரங்க விஷயங்களைப் புறத்தார்க்குமிழாமையின் ஒத்த மனமுடைய ரென்பார் இதயமொத்தவர் என்றார். (௧௨)

ஓதவான்கடலிடையொளித்தவெற்பெனப், பாதலந்தனில்விழும்ப வனகுனுவை, வேதனைப்படுத்தினர்விடங்கொள்கூரெயிற், றாதவப்பண மணியரவினஞ்சிறார்.

(இ - ள்.) ஓத வான் கடலிடை ஒளித்த வெற்பு என - திரையையுடைய பெரிய பாற்கடலில் அமிழ்ந்திய மந்தரமலையைப்போல—பாதலம் தனில் விழும் பவனகுனுவை - பாதாளத்தில் விழுகின்ற வாயு குமாரனாகிய வீமனை—விடம் கொள் கூர் எயிற்று ஆதவப் பண மணி அரவின் அம் சிறார் - நஞ்சுபொருந்திய கூரிய பற்களையும் ஒளியை வீசுகின்ற சிரமணியையு முடைய நாகர்களின் அழ கிய பிள்ளைகள்—வேதனைப்படுத்தினர் - கடித்தார்கள். எ - று.

பாற்கடலைக்கடைய மத்தாக நாட்டியபொழுது விநாயகருக்குப் பூசை செய் யாமையாற் பாதலத்தி லமிழ்ந்தினமைபற்றி மந்தரத்தைக் கடலிடையொளித்த வெற்பென்றார். இந்திரனுக்கஞ்சிக் கடலிலொளித்த மைநாகம்போல எனப் பொருள்கோடலும் ஒன்று. (கங)

முற்படுகொடுவிடமுளையெயிற்றுகும், பிற்படுவிடத்தினாற்பெயர் ந்துபோதலின், மற்படுபுயகிரிவடப்பிணிப்புமற், றற்படுமிருள்புலரலரி யாயினான்.

(இ - ள்.) முன் படு கொடு விடம் - முன்னே உண்ட கொடிய நஞ்சு— முளை எயிற்று உகும் பின் படு விடத்தினால் பெயர்ந்து போதலின் - முளைத்த பற் களினின்று சொரியும் பின் கடித்த நஞ்சால் நீங்குதலினால்—மல் படுபுயகிரிவடப் பிணிப்பும் அற்று - மல்யுத்தம் உண்டாகின்ற புயமலையிற் கயிற்றாற் கட்டிய கட் டையும் அறச்செய்து—அல் படும் இருள் புலர் அலரி ஆயினான் - இரவில் உண் டாகும் இருளைக் கெடச்செய்த சூரியனை யொத்தான். எ - று.

பிணிப்பும் என்னும் உம்மை எச்சத்தோடு சிறப்பு. முளையெயிறு வினைத் தொகை. முளைபோன்ற எயிறெனினுமமையும். அற்று, புலர் என்பன அந்தரப் பாவிதணிச்சுக்கள். மல்யுத்தத்தி லடிப்பட்ட புயகிரி என்பார் மற்படுபுயகிரி என் றும், நஞ்சினது வெம்மைநீங்கித் தோட்பிணிப்பறச்செய்து விளங்கினமையின் இருள்புலரலரியாயினான் என்றுங் கூறினார். (கச)

வாசுகிதனக்கிவன்வரவுணர்த்தலு, மாசுகன்மதலையென்றறிந்தும ற்றவன், றேசுறுபொற்குடந்தெரிந்துபத்தினு, லேசறுமமுதெலாமினி தினூட்டினான்.

(இ - ள்.) வாசுகி தனக்கு இவன் வரவு உணர்த்தலும் - வாசுகிக்கு இந்த வீமனது வரவை (நாகர்கள்) அறிவிக்கவும்—அவன் ஆசுகன் மதலை என்று அறி ந்து - அந்த வாசுகி இவனை வாயுவின் புதல்வன் என்று அறிந்து—தேசு உறு பொன் குடம் தெரிந்து - ஒளிபொருந்திய பொற்குடங்களைத் தெரிந்து—பத்தின் ஏசு அறும் அமுது எலாம் இனிதின் ஊட்டினான் - பத்துக்குடங்களிலுள்ள குற்ற மில்லாத அமுதையெல்லாம் மகிழ்ச்சியோடு உண்பித்தான். எ - று.

மற்று, ஆல் - அசைகள். தன்னிடத்துள்ள அமிர்தகடங்கள் பலவற்றுள்ளும் அமிர்தங் குறைவற நிறைந்த கடங்களைத் தெரிந்தானென்பார் பொற்குடந்தெரிந் தென்றார். விடத்தை நீக்குதற்குரிய அமிர்தகடங்களைத் தெரிந்தென்பாருமுளர். தன்சாதியாகிய பாம்புகளுக்கு உணவாய்நின்று அவற்றை வளர்க்கும் வாயுவின் புதல்வனென்ற சம்பந்தத்தால் வீமனுக்குத் தானும் அமிர்தத்தை யூட்டினனெ

ன்க. திக்குப்பாலகரெண்மரு ளொருவன் மகனென்ற விசேடத்தால் அமிர்தூட் டினனெனினு மமையும். (சரு)

வெங்கனல்கொளுந்தலின்வெந்தவான்புல, மங்குல்பெய்மாரியால் வயங்குமாறுபோ, லங்கெரிவிடநுகர்ந்தழிந்தபேருட, லிங்கமுதருந் தலாலெழில்புரிந்ததே.

(இ - ள்.) வெம் கனல் கொளுந்தலின் வெந்த வான் புலம்-(சூரியனுடைய) உஷ்ண கிரணங்கள் சுடுதலினால் எரிந்த பெரிய வயலிலுள்ள பயிர்கள்--மங்குல் பெய் மாரியால் வயங்கு மாறுபோல் - முகில்கள் பொழிகின்ற மழையாற்றழைத்து விளங்குந் தன்மைபோல—அங்கு எரிவிடம் நுகர்ந்து அழிந்தபேர் உடல் - அம்மண்டபத்திலே கனலுகின்ற நஞ்சையுண்டு தன்றன்மை அழிந்த பெரிய உடம்பு—இங்கு அமிர்து அருத்தலால் எழில் புரிந்தது - (வாசுகியானவன்) இவ்விடத்தில் அமிர்தத்தை யுண்பித்தலால் அழகைச்செய்தது. எ-று.

ஏ - அசை. கனல் - ஆகுபெயர். வெந்தவான்புலம் என்பது இடத்து நிகழ் பொருளின் றொழிலிடத்தின்மேனின்ற வாகுபெயர்; "எந்திரமொழுகும் பொற்பிற்றே" என்றாற்போல. வெம் கனல் கொளுந்தலின் வெந்த வான் புலம் என்பதற்கு வெவ்விய அக்கினி பற்றுதலினாலே கரிந்த பெரிய காட்டின்கணுள்ள மர முதலியன எனப் பொருள்கோடலு மொன்று. இப்பொருட்கு, புலம் காட்டை யுணர்த்திற்று. இதுவும் அவ்வாகுபெயர். (கசு)

ஆயிரம்பதின்மடங்கரசுவாக்களின், மாயிருந்திறல்வலிமலிந்தமேனியா, னேயிருந்தவப்பயனென்னவெண்பகன், மேயிருந்தனன்பணிவேந்தன்கோயிலே.

(இ - ள்.) பதின்மடங்கு ஆயிரம் அரசு உவாக்களின் மா இரும் திறல்வலி மலிந்த மேனியான் - பதினாயிரம் ராசயானைகளுடைய மிகப் பெரிய போர்வலி நிறைந்த சரீரத்தையுடைய வீமன்—ஏய் இரும் தவப்பயன் என்ன - இவனடைந்த பெரிய தவப்பயனென்று பிறர் சொல்ல—பணி வேந்தன் கோயில் எண்பகல் மேய் இருந்தனன் - நாகராசனாகிய வாசுகியினுடைய கோயிலில் எட்டுநாள் விரும்பி யிருந்தான், எ - று.

ஏ - அசை. மே - விருப்பம்; அது யகரமெய் விகுதி பெற்றுச் செய்தென் வாய்பாட்டு வினையெச்சமாய் நின்றது. மாயிரும் என உரிச்சொல்லாகார வீற்றின் வழி யகரவுடம்படுமெய் தோன்றிற்று. அமிர்துண்டு விஷவருத்தந் தீர்ந்தமையும் அதனாற் பதினாயிரம் யானைப்பல முண்டானமையும்பற்றி ஏயிருந்தவப்பயனென் னவென்றார். (கஎ)

இவனையந்நதியிடையிட்டபாவியுந், தவனனையுததியிற்சாய்த்தமாலைபோ, லவனிபனகரியினரசவெள்வளைத், துவனிசெந்தழல்விளக்கெடுப்பத்துன்னவே.

(இ - ள்.) இவனை அந் நதியிடை இட்ட பாவியும்-வீமனை அந்நதியில் இட்ட பாவியாகிய துரியோதனனும்—தவனனை உததியில் சாய்த்த மாலைபோல் - சூரியனைக் கடலில் வீழ்த்திய மாலைக்காலம்போல—அவனிபன் நகரியில் - திருதராட்டிர மகாராசனுடைய நகரத்தில்—அரச வெள் வளைத் துவனி செம் தழல் விளக்கு எடுப்ப - அரசர்களுக்குரிய வெண்மையாகிய சங்கினொலியோடு சிவந்த அக்கினியாலாகிய தீபத்தை (நகரத்திலுள்ளோர்) எடுக்க—துன்ன - அப்பொழுது போக, எ - று.

ஏ - அசை. எடுக்க என்னுஞ்செயவெனெச்சம் இது நிகழாநிற்க இது நிகழ்ந்ததென்னும்பொருட்டு. பாவியும் என்னும் உம்மை எச்சத்தோடு சிறப்பு. இட்ட பாவி என்பதனை அரசன்செய்ததேர் என்பதுபோலக்கொள்க. தவனனை யுததியிற் சாய்த்தமாலை என்பது வினைக்கண்வந்த சமாதி. மாலை சூரியனைச் சாய்த்துச் சிறிதுபொழுதுமாத்திரம் மேற்பட்டுத்தோன்றிப் பின்னழியுமாறுபோல, இவனும் வீமனை நதியிலாழ்த்தி அதனாற் சிறிதுபொழுதுமாத்திரம் பெருமிதத்தோடு தோன்றிப் பின் அதனையிழந்தானென்பார் தவனனையுததியிற் சாய்த்தமாலைபோ லென்றார். காலைமாலையாகிய இருபொழுதினும் அரசநகரிற் சங்கொலித்தலியல்பென்க.

கண்டிலளுதிட்டிரன்கனிட்டற்கண்ணுற, வுண்டிலடரித்திலளோரிராவினுங், கொண்டிலடுயிலிளங்குமரர்தம்மொடும், விண்டிலளுரையுளம்விம்முகுந்தியே.

(இ - ள்.) உதிட்டிரன் கனிட்டற் கண் உறக் கண்டிலள்—தருமனுடைய தம்பியாகிய வீமனைத் தன்முன் வரக்காணாதவளாய்—உளம் விம்மு குந்தி - மனமேங்குங் குந்திதேவியானவள்—உண்டிலள் - போசனஞ்செய்திலள்—தரித்திலள்-(துயரைச்) சகித்திலள்—ஓர் இராவினும் துயில் கொண்டிலள் - ஒரு இராவிலாயினும் நித்திரைகொண்டிலள்—இளம் குமரர் தம்மொடும் உரை விண்டிலள்-(தான் மிகப் பற்றுவைத்திருக்கும் நகுல சகாதேவர்களாகிய) இளங் குமாரர்களோடும் ஒன்றும் பேசிற்றிலள். எ - று.

கண்டிலள் - வினையெச்சமுற்று. குமரர்தம்மொடும், ஓரிராவினும் என்னும் உம்மைகள் சிறப்பு. மிக்க இளமைப்பருவத்தை யுடையராதலினாலும் தாயில்லாப் புதல்வராதலினாலும் நகுல சகாதேவர்மேற் பேரன்பு வைத்திருந்தாளாயினும் அவர்களையும் மறந்தாள் என்பார் இளங்குமரர் தம்மொடும் உரைவிண்டிலள் என்றார். தருமன்முதலிய நால்வரோடும் உரைவிண்டிலள் எனப் பொருள்கொள்ளுதல் சிறப்பின்று. (கக)

வீடினனாமெனத்துணைவர்வேறுவே, றோடினர்கானதியோடையெங்கணுந், தேடினர்காண்கிலஞ்செய்வதென்னென, நாடினர்நடுங்கினர்நடுக்கில்சிந்தையார்.

(இ - ள்.) நடுக்கு இல் சிந்தையார் துணைவர்-கலக்கமற்ற மனத்தையுடைய துணைவர்கள்—வீடினன் ஆம் என வேறு வேறு ஓடினர் - (வீமன்) இறந்தான் போலும் என்று வெவ்வேறாய் ஓடி—கால் நதி ஓடை எங்கணும் தேடினர் - வாய்க்கால் நதி ஓடை ஆகிய எவ்விடங்களினுந் தேடி—காண்கிலம் செய்வது என் என நாடினர் நடுங்கினர் - காண்கின்றிலேம் இனிச் செய்வது என்னை என்று யோசித்து நடுங்கினார்கள். எ - று.

ஓடினர், தேடினர், நாடினர் என்பன வினையெச்சமுற்றுக்கள். சிந்தையார் பெயரெச்சமுற்று. பிறிதொன்றானும் நடுக்கில் சிந்தையராயினும் இவனைக்காணாமையால் நடுங்கினாரென்க. (உ0)

கூற்றனசுயோதனகுமரனேயிவ, னாற்றலின்வெரீஇயழுக்கற்றசிந்தையா, னேற்றதையுணர்கிலமென்றுதந்தையாங், காற்றினுமலமருங்கருத்தராயினர்.

(இ - ள்.) கூற்று அன சுயோதன குமரனே - யமனையொத்த துரியோதனனாகிய இராச குமாரனே—இவன் ஆற்றலின் வெரீஇ அழுக்கற்ற சிந்தையான் - இவ் வீமனுடைய வலிமையினாலஞ்சிப் பொறாமைப்பட்ட மனத்தை யுடைய

ன்—ஏற்றதை உணர்கிலம் என்று - (ஆதலினால் அவனுக்குச்) சம்பவித்ததை றியேம் என்று— தந்தை ஆம் காற்றினும் அலமரும் கருத்தர் ஆயினார் - அவன் தாவாகிய வாயுவைப்பார்க்கினுஞ் சுழலுகின்ற மனத்தையுடையவ ராயினார். - று.

ஏகாரம் பிரிநிலை. அழுக்கற்ற என்பது அழுக்கறுதல் என்னுந் தொழிற் யரடியாகப் பிறந்த பெயரெச்சம். அழுக்கறல் - பொறாமை. துரியோத னே இவன்மேற் பொறாமையுடையனாதலால் என்ன செய்தானோ என்று அவ ரிற் சந்தேகமுற்றாரென்க. (உக)

ஊதையில்பூதமொத்துள்ளம்வெம்பிய, தாதையில்சிறுவரைத்தா தாதைபாற், கோதையில்குழலினாள்கொண்டுசேறலும்,வாதையின் வற்கெனவருத்தமாற்றினான்.

(இ-ள்.) கோதை இல் குழலினாள் - மாலையில்லாத அளகத்தையுடைய குந்தி தவியானவள்—ஊதை இல் பூதம் ஒத்த உள்ளம் வெம்பிய தாதை இல் சிறு ரை - வாயுவையொழிந்த ஏனைப்பூதங்கள் நான்கையும் ஒத்த மனம்வருந்திய தாவையிழந்த புதல்வர் நால்வரையும்—தாதைதாதைபால் கொண்டுசேறலும் - ட்டனாகிய வீடுமனிடத்தில் அழைத்துக்கொண்டுபோதலும்—அவற்கு வாதை ன்று என வருத்தம் மாற்றினான் - அவனுக்கு வருத்தமொன்றுமில்லை என்று வர்களுடைய துன்பத்தை அவ்வீடுமன் நீக்கினான். எ - று.

ஒத்த என்னும் பெயரெச்சத் தீறு தொக்கது. ஒத்தசிறுவர் உள்ளம் வெம்பிய றுவரெனத் தனித்தனி கூட்டுக. ஐம்பெரும்பூதங்களும் வாயுவொழிந்தால் நான் யிருக்குமாறுபோலப் பாண்டவரைவரும் வீமனையிழந்து நால்வராயிருந்தாரெ பார் ஊதையில் பூதமொத்த சிறுவரென்றும்; அமங்கலியாதலிற் கோதையில் ழலினாள் என்றுங்கூறினார். ஊதையில் பூதம்போல மனம் வெம்பிய புதல்வரெ று பொருள்கூறின் உவமைக்கும் உவமேயத்திற்கும் ஓர் சம்பந்தமின்றென ணர்க. (உஉ)

தருமமன்னனுநகர்ச்சனங்கள்யாவையுந், தெருமரறேற்றவுந்தெய் ங்கூறவும், பெருமிதநிமித்தங்கள்பெற்றிபேசவும், வரும்வருமென னமறுகிவைகினாள்.

(இ-ள்.) வரும் வரும் என - (வீமன்) வருவான் வருவான் என்று—தருமம ன்னனும் நகர்ச் சனங்கள் யாவையும்—விதுரராசனும் நகரத்திலுள்ள சனங்கள் வையும்—தெருமரல் தேற்றவும் - மனக்கலக்கத்தைத் தெளிவிக்கவும்—தெய்வம் றவும் - தெய்வங்கள் (ஆவேசப்பட்டுச்) சொல்லவும்—பெருமித நிமித்தங்கள் பெற்றி பேசவும் - நற்சகுனங்கள் வரவுக்குரிய) அடையாளங்களைக் காட்டவும் - னம் மறுகி வைகினாள் - குந்திதேவி மனம் மறுகியிருந்தாள். எ-று.

தேற்றவும், கூறவும், பேசவும் என்னும் உம்மைகள் எண்ணோடு சிறப்புமாய் ன்றன. வரும் வரும் என்பது தெளிவுபற்றிய அடுக்கு. பெற்றிபேச என்பது னைக்கண்வந்த சமாதி. யமனுடைய அவதாரத்தனாதலின் விதுரனைத் தருமம ன்னன் என்றார். இங்ஙனங் கூறவும், தன் புதல்வன் உடனே வரப்பெறாமை ன், அவற்கென்ன நிகழ்ந்ததோ என மனம் மறுகினாளென்க. (உங)

இருந்திளைப்பகன்றபினிவனைமற்றைநா, ளருந்திறற்போகிகளரச னேவலால், வருந்தியுற்றெடுத்துமுன்வந்தநீர்வழிப், பொருந்திரைக்கங் கையின்கரையிற்போக்கவே.

(இ - ள்.) இருந்து இளைப்பு அகன்ற பின் - (வீமன் வாசுகியினுடைய கோயிலில் எட்டுநாள்) இருந்து இளைப்பாறியபின்—மற்றை நாள் - அடுத்த நாளில்—அரசன் ஏவலால் அரும் திறல் போகிகள் இவனை வருந்தி உற்று எடுத்து - தங்களரசனாகிய வாசுகியினது கட்டளையினால் அரிய வலிமையையுடைய நாகர்கள் இவனை வருந்திச் சுமந்தெடுத்து—முன் வந்த நீர்வழி - முன்னே இவன் வந்த நீரின்வழியே (கொண்டுவந்து)—பொரும் திரைக் கங்கையின் கரையில் போக்க-மோதுகின்ற திரையையுடைய கங்கைக்கரையில் விட. எ-று.

ஏ-அசை. இவன் பதினாயிரம் அரசுவாக்களின் வலியையுடையனாதலின் அருந்திறற்போகிகளும் வருந்தியுற்றெடுத்தனவென்க. (உச)

பாழியம்புயகிரிப்பாண்டவன்றனைச், சூழிகற்பணிக்குலஞ்சுமக்க வல்லவோ,வாழியக்குலங்களின்மன்னனல்லனோ,வேழிருபுவனமுமினிதினேந்துவான்.

(இ-ள்.) பாழி அம் புயகிரிப் பாண்டவன் தனை -பெரிய புயமலைகளையுடைய வீமனை—சூழ் இகல் பணிக்குலம் சுமக்க வல்லவோ—மண்டலமிடுகின்ற வலியினையுடைய பாம்புக்கூட்டங்கள் சுமக்க வல்லனவோ—ஏழிரு புவனமும்இனிதின் ஏந்துவான் - பதினான்கு புவனங்களையும் மகிழ்ச்சியோடு தாங்குகின்ற சேடன்—அக் குலங்களின் மன்னன் அல்லனோ - அந்தச் சர்ப்பகுலங்களின் அரசனல்லனோ. எ-று.

ஆதலால் அவைகளும் இவனைத் தாங்கவல்லனவாயின என்பது குறிப்பெச்சம். அம் - அல்வழிச்சாரியை. வாழி - அசை. ஓகாரங்களிரண்டில் முன்னையது வினாவுதற்பொருளினும் பின்னையது அதற்கு இறைபயப்பதாய் வினாவெதிர் வினாவுதற்பொருளினும் வந்தன. தேவநாகங்கள் உயர்திணைப்பொருளவாயினும் "காலமுலகம்" என்னுஞ் சூத்திரவிதிபற்றி அஃறிணையாய் வழங்கப்படுதலிற் பணிக்குலஞ்சுமக்கவல்லவோ என அஃறிணையாற் கூறினார். "இசைத்தலுமுரியவேறிடத்தான." என்னுஞ் சூத்திரவிதிபற்றி இவற்றையே யுயர்திணையாயுங்கூறுப. ஏழிருபுவனமுமினிதினேந்துவான் என்பதனாற் சேடன் பதினாலுலகையும் ஓர் பொருட்படுத்தாது பராமுகமாய்த் தாங்குமாற்றலுடையனென்பது பெறப்பட்டது. சூழிகற்பணிக்குலம் என்பதற்கு சூழ்ந்த பணிக்குலமெனினுமமையும். (உரு)

விதியினாலொளித்தலினுயங்கிமீளவு, நதியினால்வருதலினலங்கொண்மேனியான், பதியினால்விளங்குமென்பங்கயங்களு, மதியினாற்குளிர்நெடுவானுமாயினான்.

(இ - ள்.) ஒளித்தலின் உயங்கி - (நஞ்சூட்டி ஆற்றினுள்) வீழ்த்தினமையினால் வாடி—மீளவும் நதியினால் வருதலின் நலம் கொள் மேனியான்-(பாதலத்தில் அமுதுண்டு) திரும்பவும் அந்நதியின்வழியால் வருதலினால் அழகைக் கொண்ட உடம்பையுடைய வீமன்—விதியினால் - இந்த முறைமையினால்—பதியினால் விளங்கும் மென் பங்கயங்களும் - தம் நாயகனாகிய சூரியன்(மறைதலாற் கூம்பி) உதித்தலாலலருகின்ற மென்மையாகிய தாமரைமலர்களும்—மதியினால் குளிர் நெடு வானும் ஆயினான் - (சூரியனால் வெப்பமடைந்து) சந்திரனாற் குளிர்ச்சியையடைகின்ற நெடிய ஆகாயமும்போலானான். எ - று.

ஒளித்தல் ஈண்டுப்பிறவினைமேனின்றது. உவமேயத்திற்குக் கூறிய ஒளித்தலினுயங்கி என்னும் அடைக்கியைய, உவமைகளிரண்டிற்கும் வேண்டுஞ் சொற்

ள் வருவித்துரைக்கப்பட்டன. இது பலபொருளுவமை. விஷந்தீர்ந்தமிர்தநுகர்து விளங்கியெழுந்த வீமன் சூரியனலலரும் தாமரைமலரையும் சந்திரனற்குளிநம் வானத்தையுமொத்தான் என்பது கருத்து. இனி இச்செய்யுளை விதியனொளித்தலி னுயங்கி மீளவு - நதியினல் வருதலி னலங்கொள்மேனியாள் - பதினல் வெம்பிமென் பங்க யங்களின் - மதியினற் குளிர்நெடுவானெ டேயினன்ன்று பாடமோதுவாருமுளர். இதற்கு முறைமையினையுடைய குந்திதேவியானவள், வீமனொளித்தலால் வாடி அவன் மீளவும் நதியினல் வருதலினல் அழகைக்கொண்ட மேனியளாய், சூரியனல் வெம்பிச் சந்திரனற் குளிருகின்ற ஆகாயத்தையொத்தாள் எனப் பொருள்கொள்க. இதில், பதியினல் வெம்பிமென் பங்கயங்களின் என்பதனை மென்பங்கயங்களின் பதியினல் வெம்பி என மாற்றுக.(உசு)

வேதியர்குரவர்வில்விதுரன்வீடும, னுதியர்துணைவரந்நகருளார்களென்; றோதியசனங்களுக்குவகைநல்கினன், ஞாதியர்கிளைக்கெலாநடுக்கநல்கியே.

(இ-ள்.) ஞாதியர் கிளைக்கு எலாம் நடுக்கம் நல்கி - (இவ்வியல்பினையுடையனாகிய வீமன்) தாயத்தாராகிய துரியோதனன் முதலியோர்களுக்கெல்லாம் நடுக்கத்தைக் கொடுத்து—வேதியர் குரவர் வில்விதுரன் வீடுமன் ஆதியர் - பிராமணர்கள் குருமார்கள் வில்லையுடைய விதுரன் வீடுமன் முதலானோர்களுக்கும்—துணைவர்-துணைவர்களுக்கும்—அந் நகருளார்கள் என்று ஓதிய சனங்களுக்கு-அந்த நகரத்திலுள்ளவர்கள் என்று சொல்லப்பட்ட சனங்களுக்கும்—உவகை நல்கினன் - சந்தோஷத்தைக் கொடுத்தான். எ-று.

சனங்களுக்கு என்னுங் குவ்வுருபை ஆதியர் துணைவர் என்பவற்றோடுங் கூட்டி எண்ணும்மைகள் விரித்துப் பொருளுரைக்கப்பட்டது. வேதியர் முதலாயினோரையும் துணைவரையும் நகருளாருடன் சேர்த்துச் சனங்களெனப் பொருள் கூறுதல் சிறப்பின்று. (உஎ)

குந்தியைமகிழுரைகூறிக்கற்பினு, லந்திமீனனையவளருளின்வாழ்த்தவே, செந்திருமகளுறைசெல்வமாநகர், வந்திவன்முன்புபோல்வளருநாளிலே.

(இ-ள்.) இவன் குந்தியை மகிழுரை கூறி - இந்த வீமன் குந்திதேவிக்கு மகிழ்ச்சியைத்தரும் வசனங்களைச் சொல்லி—கற்பினல் அந்தி மீன் அனையவள் அருளின் வாழ்த்த - கற்பினல் அருந்ததியையொத்த அவள் அருளோடு வாழ்த்த-செம் திருமகள் உறை செல்வ மாநகர் வந்து - செம்மையாகிய இலக்குமி வசிக்கின்ற செல்வத்தையுடைய பெரிய நகரில் வந்து—முன்பு போல் வளரும் நாளில் - முன்போல வளருகின்ற நாளில். எ-று.

ஏ இரண்டும் அசைகள். குந்தியையென்னும் ஐயுருபு குவ்வுருபாகத் திரிக்கப்பட்டது. தன்னைக்காணமையால் வருந்திய தாயைத் தேற்றினனென்பார் குந்தியைமகிழுரைகூறி என்றும், கற்புடைமகளிர்வாய்ச்சொற்கேடுமாக்கமும் பயத்தற்கேதுவாதலின் இனித் தன்மகனுக்கு ஒரு தீங்கும் நிகழாதிருக்க வாழ்த்தினளென்பார் அந்திமீனனையவளருளின்வாழ்த்த என்றுங் கூறினர். (உஅ)

கோதமன்மகன்மகன்குனிவிலாதியா, மேதகுபடைக்கலம்யாவும்வீறுடம், மாதவன்வயிற்பயில்வரதன்வன்றிறற்,கேதமில்சிந்தையான்கிருபனென்றுளான்.

(இ - ள். கோதமன் மகன் மகன் - கௌதமுனிவன் மகனாகிய சரத்து வந்தமுனிவனுடைய புதல்வன்—குனி வில் ஆதியாம் மேதகு படைக்கலம் யாவும் - வளைந்த வில்முதலாகிய மேம்பட்ட படைத்தொழில்களையெல்லாம்—வீறொடு அம் மாதவன் வயின் பயில் வரதன் - பெருமையோடு அந்தச் சரத்துவந்த முனிவனிடத்திற் பழகிய மேன்மையையுடையவன்—வன் திறல் கேதம் இல் சிந்தையான் - மிக்க வலிமைபொருந்திய குற்றமில்லாத மனத்தையுடையான்—கிருபன் என்று உளான் - கிருபன் என்று ஒருவன் உளன். எ - று.

படை - ஆகுபெயர். வருத்தமின்றிப் பயின்றானென்பார் வீறொடம்மாதவன்வயிற்பயில்வரதன் என்றார். "வீற்றிருந்தவருங்கற்றார்" என்றார் சிந்தாமணியும். சரத்துவந்தனென்னும் முனிவன் காட்டிலிருந்து தவஞ்செய்யும்பொழுது, இந்திரன் அவன்றவத்தை அழிக்கும்படி ஓரரம்பையை விடுக்க, அவன் அவளைக்கண்டு மோகித்துத் தன் வீரியத்தை அப்பாருத்தூணியில் விடுத்து, அத்தூணியையும் வில்லையும் அவ்விடத்தில் வைத்து வேறோரிடத்திற்சென்றுதவஞ்செய்திருந்தான். அவ்வீரியம் தூணியினின்றும் ஆணும் பெண்ணுமாகிய இருபிள்ளைகளாக உதித்தது. வேட்டையாடும்படி வனத்துக்குச்சென்ற சந்தனுமகாராசன் அப்பிள்ளைகளையுந் தூணியையும் வில்லையுங் கண்டெடுத்துக்கொண்டுபோய்ப் பிள்ளைகளை வளர்க்க, சரத்துவந்தமுனிவன் வந்து தன் மகனுக்குப் படைக்கலப் பயிற்சிசெய்து அவனை அவ்விடத்திற்றானே விடுத்துச்சென்றான். இவனேகிருபாசாரியன். இவன் அந்நாட்டொடங்கி அத்தினபுரியிலிருந்தான். இவனுடன் பிறந்தாள்பெயர் கிருபி. இவள் துரோணாசாரியன் மனைவியென்றறிக. (உக)

மற்றிவன்சந்தனுமைந்தனேவலாற், கொற்றவரருள்குருகுலகுமாரரை, வெற்றிகொள்சிலையும்வெவ்வேலும்வாளமும், பற்றலர்வெருவரும்படிபயிற்றினான்.

(இ-ள்.) இவன் சந்தனு மைந்தன் ஏவலால் - இந்தக் கிருபன் வீடுமனுடைய கட்டளையினால்—கொற்றவர் அருள் குருகுல குமாரரை - திருதராட்டிரன் பாண்டு என்னும் அரசர்கள் பெற்ற குருகுலகுமாரர்களுக்கு—வெற்றிகொள் சிலையும் வெவ்வேலும் வாளமும் - வெற்றியைப்பொருந்தும் வில்லும் கொடிய வேலும் வாளும் (முதலிய) படைத்தொழில்களை—பற்றலர் வெருவரும்படி பயிற்றினான் - பகைவர் அஞ்சும்படி கற்பித்தான். எ-று.

மற்று - அசை. சிலை, வேல், வாளம் ஆகுபெயர்கள். வெற்றிகொள் என்னும் அடையை வேல் வாளிற்கும் ஏற்றுக. (௩0)

பரிவுடனிவன்படைபயிற்றப்பின்னரும், குருபதிவேறொருகுருவைத்தேடினா, னிருளறமதிநிலவெறித்ததாயினும், பரிதியைநயக்குமிப்பரவைஞாலமே.

(இ-ள்.) இவன் பரிவுடன் படை பயிற்ற - இந்தக் கிருபன் விருப்பத்தோடு படைத்தொழிலைக் கற்பிக்க—பின்னரும் குருபதி வேறு ஒரு குருவைத் தேடினான் - பின்னும் குருகுலாதிபனாகிய வீடுமன் (இவனிற்சிறந்த) வேறொரு ஆசிரியனைத்தேடினான்—இப் பரவை ஞாலம் - இந்தக் கடல்சூழ்ந்த நிலவுலகம்—மதி இருள் அற நிலவு எறித்தது ஆயினும் - சந்திரன் இருள் நீங்க நிலாவையெறித்ததானாலும்—பரிதியை நயக்கும் - (அந்தச் சந்திரனின் மிக்க ஒளியையுடைய) சூரியனையே விரும்பும். எ-று.

ஏ - அசை. ஞாலம் - ஆகுபெயர். உம்மைகளிரண்டின் முன்னையது எச்சம் ன்னையது சிறப்பு. இது வேற்றுப்பொருள்வைப்பென்னுமலங்காரம். தான் கற் க்கும் படைக்கலவிஞ்சைகளை இவர் எளிதிற்கற்றமையின் இவர்மீது விருப்புடை ஞயினனென்பார் பரிவுடனென்றார். வருத்தத்தோடு பயிற்றினன் எனப் பொ ள்கொள்கொள்ளுதல் சிறப்பின்று. இருளற மதிநிலவெறித்ததாயினும் என்றத )ற் கிருபன் பகைவரை முற்றவடர்த்தற்குரிய படைத்தொழில் பயிற்ற வல்லன லன் என்பது பெற்றாம். (நக)

வேறு.

பரதநாதவேதபரத்துவாசனென்பான்
விரதவேள்விதன்னின்மேனகையாலான
சுரததாதுவீழ்ந்ததுரோணகும்பந்தன்னில்
வரதனொருவன்வந்தான்வசிட்டமுனியையொப்பான்.

(இ - ள்.) பரத நாத வேத பரத்துவாசன் என்பான் விரத வேள்விதன்னில்- ாளத்தோடுகூடிய ஓசைபொருந்திய வேதத்தில் வல்ல பரத்துவாசமுனிவன் )யற்றிய விரதத்தையுடைய யாகத்திலுள்ள—மேனகையால் ஆனசுரத தாது வீழ் த துரோணகும்பம் தன்னில் - மேனகையென்பவளா லுண்டாகிய ஆசையினால் அம்முனிவனது) வீரியம் விழுந்த துரோணகும்பத்தில்—வசிட்ட முனியை ஒப் ான் வரதன் ஒருவன் வந்தான்-வசிட்டமுனிவனை யொப்பவனாய் முனிவனொரு ன் அவதரித்தான். எ-று.

வேள்விதன்னிற் றுரோணகும்பம் என இயையும். ஒப்பான் வினையெச்ச ற்று. சுரததாது மூன்றாம் வேற்றுமைத்தொகை; வடமொழி யாதலின் வல் லெழுத்தியல்பாயிற்று. தவத்தினுந் தனுர்வேதத்தினுஞ் சிறந்தமைபற்றி வசிட்ட னியை யொப்பான் என்றார். துரோணகும்பம்-பதக்கென்னும் அளவுகொண்ட ீர்நிறைந்த கும்பம். "துரோணநீர்க்கும்பம்" என்றார் பிறரும். (நஉ

ஈரேழ்விஞ்சைத்திறனுமீன்றோன்றன்பாலெய்தி
நீரேழென்னயாவுநிறைந்தகேள்விநெஞ்சன்
பாரேழெண்ணும்படைகள்பரசிராமன்றன்பா
லோரேழ்பகலினுலகுக்கொருவனென்னக்கற்றான்.

(இ - ள்.) ஈரேழ் விஞ்சைத் திறனும் ஈன்றோன் தன்பால் எய்தி - பதினான்கு வித்தைகளின் பகுதிகளையும் தன்பிதாவாகிய பரத்துவாச முனிவனிடத்திற் கற் று—நீர் ஏழ் என்னக் கேள்வி யாவும் நிறைந்த நெஞ்சன்-ஏழுகடல்களையும்போலக் கல்வி முழுதும் நிறைந்த மனத்தையுடையனாய்—பரசிராமன் தன்பால் - பரசுராம னிடத்தில்—பார் ஏழ் எண்ணும் படைகள்-ஏழுலகத்தோரும் மதிக்கத்தக்க படை த்தொழில்களை—ஓர் ஏழ் பகலின் உலகுக்கு ஒருவன் என்னக் கற்றான் - ஏழு ாளில் உலகத்திற்கு இவனொருவனே என்றுசொல்லப் படித்தான். எ - று.

நெஞ்சன் குறிப்புவினையெச்சமுற்று. திறனும் என்னும் உம்மை முற்று. ஏழுமென்னும் முற்றும்மைகள் விகாரத்தாற்றொக்கன. நீர், பார், படை ஆகு பெயர்கள். (நங)

வெற்பின்வலியதிண்டோள்வேந்தனேவுந்தூதா
லற்பின்மிக்கசிந்தையறஞ்சான்மொழியவ்வாசான்
கற்பின்பன்னியோடுங்கையின்மதலையோடும்
பொற்பினமராவதியேபோலுநகரிபுக்கான்.

(இ - ள்.) அற்பின் மிக்க சிந்தை அறம் சால் மொழி அவ் ஆசான் - அன்பில் மேம்பட்ட மனத்தையும் தருமத்தில் மிக்க வாக்கையுமுடைய அந்தத் துரோணா சாரியன்—வெற்பின் வலிய திண் தோள் வேந்தன் ஏவும் தூதால் - மலையினும் பார்க்க வலிய திண்மையாகிய புயங்களையுடைய வீடுமன் அனுப்பியதூதுவனால்—கற்பின் பன்னியோடும் - கற்பினையுடைய தன்மனைவியோடும்—கையின் மதலை யோடும் - கையிற் குழந்தையோடும்—பொற்பின் அமராவதியேபோலும் நகரி புக்கான்-அழகினாற் சுவர்க்கத்தையே யொக்கும் அத்தினபுரியை யடைந்தான். எ-று.

கற்பின்பன்னி என்பதில் னகரம் எதுகைநோக்கி இயல்பாயிற்று. அன்பு அற்பென வன்றொடராயிற்று. பொற்பின் என்னும் இன்னுருபு ஏதுப்பொருட்டு. ஏகாரம் பிரிநிலை. தான்கற்ற கல்விக்குத்தக்க ஒழுக்கமுடைய னென்பார் அற்பின் மிக்க சிந்தையறஞ்சான் மொழியவ்வாசான் என்றும், மிக இளைய குழந்தை என்பார் கையின்மதலை என்றுங் கூறினார். (௩௪)

வந்தான்வரதனெனலுமந்தாகினியாண்மைந்தன்
பைந்தாரசையவெதிர்போய்ப்பணிந்துபூசைபண்ணிச்
சிந்தாசனத்தோடொக்குஞ்சிங்காசனத்தினேற்றி
யெந்தாய்வரநீயடியேனென்னதவத்தேனென்றான்.

(இ - ள்.) வரதன் வந்தான் எனலும் - துரோணாசாரியன் வந்தான் என்று (தூதுவன்) சொல்லவும்—மந்தாகினியாள் மைந்தன்-வீடுமன்—பைந்தார் அசைய எதிர் போய்ப் பணிந்து - பசிய மாலையசைய எதிர்கொண்டு சென்று வணங்கி—சிந்தாசனத்தோடு ஒக்கும் சிங்காசனத்தின் ஏற்றிப் பூசைபண்ணி - தன் மனமாகிய ஆசனத்தோடொத்த சிங்காசனத்தில் அவனை இருத்திப் பூசித்து—எந்தாய் நீவர அடியேன் என்ன தவத்தேன் என்றான் - எம்பெருமானே தேவரீர் இங்கே எழுந்தருளிவருதற்கு அடியேன் என்னதவத்தைச் செய்திருந்தேன் என்று (உப சாரவசனங்களைச்) சொன்னான். எ-று.

சிந்தா என்பது ஐயீறுகாதியல்பாய் நின்றது. சிந்தாசனத்தோடொக்கும் என்பதில் ஒடுவுருவுபு மதியோடொக்குமுகம் என்பதுபோல உவமைப்பொருளில் வந்தது. தனுர்வேத சாமர்த்தியத்தாலும் சகல கலைஞான வுணர்ச்சியினாலும் துரோணன் வீட்டுமனது நெஞ்சில் நீங்காதிருந்தானென்பார் அவன் நெஞ்சை ஆசனமென்றும், அந்நெஞ்சை நீங்காதிருக்குமாறுபோல அன்றுமுதற் சிங்காசனத்திற் குரியனாய் அதை நீங்காதிருக்குமா றிருத்தினானென்பார் சிந்தா சனத்தோடொக்குஞ் சிங்காசனத்தினேற்றி என்றுங் கூறினார். பெரியோருடைய இருதயம்போன்ற பரிசுத்தமாகிய ஆசனம் எனவும், சிந்து ஆசனம் எனக் கண்ணழித்துப் பாற் கடலிலுள்ள சேடனையொத்த பரிசுத்தமாகிய ஆசனம் எனவும் பொருள் கூறுவாருமுளர். (௩௫)

மூசிவண்டுமொய்க்குமுருகார்செவ்விமாலை
வாசிமான்றேர்வெம்போர்மன்னர்மன்னன்றன்னை
யேசில்கடவுள்வாய்மையிருக்காலெண்ணில்கோடி
யாசியன்பாலோதியருள்செய்திருந்தபின்னர்.

(இ - ள்.) வண்டு மூசி மொய்க்கும் முருகு ஆர் செவ்விமாலை - வண்டுகள் நெருங்கி மொய்க்கின்ற தேன் நிறைந்த அழகிய மாலையையணிந்த—வாசிமான் தேர் வெம்போர் மன்னர்மன்னன் தன்னை-குதிரைபூண்ட பெரிய தேரினையுடைய

ாடிய போரைச் செய்கின்ற அரசர்க்கரசனாகிய வீடுமனுக்கு—ஏசு இல் கடவுள் ாய்மை இருக்கால் - குற்றமில்லாத சிவவாக்காகிய வேத இருக்கினால்—எண் ில் கோடி ஆசி அன்பால் ஓதி-அளவற்ற கோடி ஆசிகளை அன்போடுசொல்லி— ருள்செய்து இருந்த பின்னர் - கிருபைசெய்து (துரோணாசாரியன்) இருந்த ன்பு எ - று.

மன்னன் றன்னை என்னும் ஐயுருபு குவ்வுருபாகத் திரிக்கப்பட்டது. அன்பா லன்னும் ஆலுருபு உடனிகழ்ச்சிப்பொருட்டு. மொய்க்கும் என்னும் பெயரெச் ் மாலையென்னும் நிலப்பெயர் கொண்டது. இருக்குக்களோடு ஆசியோதி ரினும் பொருந்தும். (௩௬)

வேதமுனிவனிருந்தவேத்துமுனியைநோக்கிப்
பூதந்தன்னினிகழ்ந்தபுன்மைமொழியொன்றுரைப்பா
னேதமெய்பெற்றனையயாகசேனனென்பான்
போதமில்லானென்பாற்பூட்டுநண்புபூண்டான்.

(இ - ள்.) வேதமுனிவன் இருந்த வேத்துமுனியை நோக்கி - பிரம இருடி ாகிய துரோணாசாரியன் அங்கிருந்த இராச இருடியாகிய வீடுமனைப்பார்த்து— தம் தன்னில் நிகழ்ந்த புன்மை மொழி ஒன்று உரைப்பான் - சென்ற காலத் ல் நடந்த எளிமையைப் புலப்படுத்தும் வசனமொன்றைச் சொல்லுவான்— தம் மெய் பெற்று அனைய யாகசேனன் என்பான் போதம் இல்லான் - தீமையே ருவடிவெடுத்தாற்போன்ற யாகசேனன் எனப்படும் அறிவில்லாதவன்—என்பால் ட்டும் நண்பு பூண்டான் - என்னிடத்திலே தொடர்பை யுண்டாக்கும்நட்பைப் பாருந்தினான். எ - று.

என்பான் பெயரெச்சமுற்று. புன்மையைப் புலப்படுத்துதற்குக் காரண ாகிய மொழியைப் புன்மைமொழியென்றது காரணங் காரியமாக உபசரிக்கப் ட்டது. பூதம் - இறந்தகாலம். வேத்துமுனி விகாரம். என்பான் என்பதனை இல்வாழ்வானென்பான்" என்பதுபோற்கொள்க. தன்னை வஞ்சித்தா னென் ன் ஏதமெய்பெற்றனையயாகசேனன் என்றும், ஒருவரையொருவர் சம்பந்தப் டுத்தும் நட்பென்பான் பூட்டுநண்பு என்றுங் கூறினார். (௩௭)

யானுமவனுமுறையாலிளையோமானவெல்லைப்
பானுநிகர்தொல்லங்கிவேசன்பாதம்பணிந்து
வானுமண்ணும்வியக்கமறவெம்படைகள்கற்றுத்
தானும்வல்லனாகித்தன்போலென்னைவைத்தான்.

(இ - ள்.) யானும் அவனும் இளையோம் ஆன எல்லை - நானும் அந்த யாக சனனும் பாலியதசையை யுடையோமான காலத்தில்—பானு நிகர் தொல் அங் வேசன் பாதம் முறையால் பணிந்து-சூரியனையொத்த பழையபரசுராமனுடைய ாதங்களை முறைமையினால் வணங்கி—வானும் மண்ணும் வியக்க மறவெம்படை ள் கற்று - விண்ணுலகத்தோரும் மண்ணுலகத்தோரும் புகழ வலிய வெவ்விய டைத்தொழிலைப் பயில—தானும் வல்லன் ஆகி - தானும் (என்னைப்போல) வல் வனாய்—தன் போல் என்னை வைத்தான் - (இராசகுமாரனாகிய) தன்னைப்போல ன்னையும் பாவித்தான். எ - று.

கற்று என்னும் செய்தெனெச்சம் செயவெனெச்சமாகத் திரிக்கப்பட்டது. ான், மண், படை என்பன ஆகுபெயர்கள். என்னையும் என்னும் இழிவுசிறப்

பும்மை விகாரத்தாற்றெக்கது. தானும் என்னும் எச்சவும்மையால் துரோணன் வல்லனுதல் தானே பெறப்பட்டது. தன்னை யடைந்தோ ருடைய அகவிருளைக் கெடுத்தலினலும் மெய்ம்மை யுடைமையினலும் பானுநிகர் தொல்லங்கிவேசன் என்றார். அங்கிவேசன் - பரசுராமன். அங்கிவேசன் என்ற முனிவனென்றும், அக்கினிகோத்திர முனிவன் என்றும் பொருள்கொள்வாருமுளர். (௩அ)

பின்னையிரவும்பகலும்பிரியேமாகித்திரியத்
தன்னையடைந்தநண்பின்றகவான்மிகவாதரியா
வென்னைவானமெய்தியானேயிறைவனுனு
னுன்னையாளவைப்பேனுலகிற்பாதியென்றான்.

(இ - ள்.) பின்னை இரவும் பகலும் பிரியேம் ஆகித் திரிய - அதன்பின்பு இரவும் பகலும் ஒருவரையொருவர் பிரியேமாகி நாம் ஒழுக—தன்னை அடைந்த நண்பின் தகவால் மிக ஆதரியா - (அவன்) தன்னை நான் அடைந்த நண்பின் விசேடத்தால் என்னை மிக ஆதரித்து—என் ஐ வானம் எய்தி யானே இறைவன் ஆனல்- என்பிதாச் சுவர்க்கத்தையடைய நானே அரசனுனல்—உலகில் பாதி உன்னை ஆளவைப்பேன் என்றான் - என்னுடைய தேசத்திற் பாதியை உன்னை அரசாள வைப்பேன் என்று சொன்னன். எ - று.

எய்தி என்னுஞ் செய்தெனெச்சஞ் செயவெனெச்சமாகத் திரிக்கப்பட்டது. ஏகாரம் பிரிநிலை. (௩கூ)

நன்றுநன்றுன்வாய்மைநன்றாநண்புக்கினியா
யென்றுபோந்துநானுமியன்றதவத்தினிருந்தேன்
வென்றுகொண்டபுவியைவேந்தன்மகவுக்களித்துச்
சென்றுவானம்புகுந்தான்சிறுவன்றலைவனானன்.

(இ - ள்.) நானும் - (அப்பொழுது) யானும்—நன்று ஆம் நண்புக்கு இனியாய்-நன்மையாகிய சினேகிதத்திற்கு இனியவனே—உன் வாய்மை நன்று நன்று என்று போந்து - உன்வசனம் நல்லது நல்லது என்று சொல்லிப் போய்—இயன்ற தவத்தின் இருந்தேன் - இசைந்த தவத்தைச் செய்தலிலிருந்தேன்—வேந்தன் - யாகசேனனுடைய பிதாவானவன்—வென்று கொண்ட புவியை மகவுக்கு அளித்து - பகைவரைவென்று அடிப்படுத்திய பூமியைப் புத்திரனுக்குக் கொடுத்து—சென்று வானம் புகுந்தான் - போய்ச் சுவர்க்கத்தை யடைந்தான்—சிறுவன் தலைவன் ஆனன் - புத்திரனுகிய யாகசேனன் அரசனுயினன். எ-று.

உம்மை எச்சம். நன்று நன்று என்னும் அடுக்கு உவகைபற்றி வந்தது. தவம் - ஆகுபெயர். தவத்தின் என்னும் இன்னுருபு ஏழனுருபாதல் புறனடையாற் கொள்ளப்பட்டது. தவத்தினிருந்தேன் என்பது தொழிலிடமாயிற்று. இவற்குத் தாதை மூதாதை முதலாயினோரா லடிப்படுத்தியாளப்பட்டுரிமையாய் வந்த பூமியினும் பகைவரைவென் றடிப்படுத்திய பூமி பெரிதாகலின் வென்றுகொண்டபுவியென்றான். (௪0)

தனத்திலாசையின்றித்தவமேதனமென்றெண்ணி
வனத்திலுண்டிகொண்டேமகிழ்வுற்றொருசார்வைகிச்
சனத்திலருளாலில்வாழ்தருமந்தவறாவண்ண
மினத்தின்மிக்ககிருபற்கிளையாளிவளைவேட்டேன்.

(இ - ள்.) தனத்தில் ஆசை இன்றித் தவமே தனம் என்று எண்ணி - செல்வத்தி லாசையில்லாமல் தவமே செல்வம் என்று நினைத்து—வனத்தில் உண்டி கொண்டு - காட்டிலுள்ள உணவுகளை உண்டு—மகிழ்வு உற்று ஒருசார் வைகி - மகிழ்ந்து (அக்காட்டில்) ஓரிடத்திலிருந்து—சனத்தில் அருளால்-பிரசைகளில் வைத்த அருளினால்—இல்வாழ் தருமம் தவறுவண்ணம் - இல்லறந் தவறுதபடி—இனத்தின் மிக்க கிருபற்கு இளையாள் இவளை வேட்டேன் - குலத்தால் மிக்க கிருபனுடைய தங்கையாகிய இவளை விவாகஞ்செய்தேன். எ - று.

ஏகாரங்களிரண்டில் முன்னையது பிரிநிலை. பின்னையது அசை. தவறுத என்னும் பெயரெச்சத்தீறு தொக்கது. துறந்தார் வறிஞர் முதலாயினோரை உபசரித்தல் இல்வாழ்வார்க்கே யுரித்தாகலின் அவ்வறங்காரணமாக இதனை மேற்கொண்டேன் என்பான் சனத்திலருளாலென்றும், பிரமசரியத்தை அநுட்டித்தோர் சோபானக்கிரமமாய் ஏனையாச்சிரமங்களையும் அநுட்டித்தல்வேண்டுமென்பது அறநூற்றுணிபென்பான் இல்வாழ்தருமந்தவறுவண்ணம் என்றும், அந்நூல்விதிப்படியே தன் வருணத்திற்கொத்த வருணத்தாளை மணஞ்செய்தேன் என்பான் இனத்தின்மிக்ககிருபற்கிளையாளிவளைவேட்டன் என்றுங்கூறினான். (சுக)

கந்தமகவையீன்றகாளகண்டனருளால்
வந்தமகவிம்மகவும்வறுமைவளரவளர்ந்தா
னிந்தமகவுமையாண்டிளமையறியாதெனலாற்
றந்தமகவைநோக்கித்தாயும்பெருகத்தளர்ந்தாள்.

(இ - ள்.) இம் மகவும் - இந்தப் புத்திரனும்—கந்த மகவை ஈன்ற காளகண்டன் அருளால் வந்த மகவு - குமாரக்கடவுளாகிய புதல்வரைப்பெற்ற சிவபெருமானுடைய கிருபையினாற் பிறந்த பிள்ளை—வறுமை வளர வளர்ந்தான் - தரித்திரம் வளரத் தானும் வளர்ந்தான்—இந்த மகவும் - இங்ஙனம் வளர்ந்த புத்திரனும்—ஐயாண்டு இளமை அறியாது எனலால் - ஐந்துவயசாகிய இளமைப்பருவத்தைத் தானும் அறியாது [ஐந்துவயசுஞ் செல்லப்பெறாது என்றபடி] என்பதனால்—தந்த மகவை நோக்கித் தாயும் பெருகத் தளர்ந்தாள் - தான்பெற்ற பிள்ளையைப் பார்த்து (உவத்தற்குரிய) மாதாவும் மிக வருந்தினாள். எ - று.

மகவும் என்னும் உம்மைகளிரண்டில் முன்னையது எச்சம். பின்னையது உயர்வுசிறப்பு. தாயும் என்னும் உம்மை இழிவுசிறப்பு. இளமையும் என்னும் உம்மை விகாரத்தாற்றொக்கது. இந்த என்னுஞ் சுட்டு வறுமைவளர வளர்தலாகிய அதனையுணர்த்திற்று. இளமையில்வறுமை மிகக்கொடிதாதலின் ஐயாண்டிளமையறியாதெனலாற்றளர்ந்தாளென்றான். இனி, இந்தமகவும் ஐயாண்டு - இந்தப்பிள்ளையும் ஐந்துவயசுடையது—இளமை அறியாது எனலால் - அதற்குரிய வளர்ச்சியையடையாது என்பதனால் எனப் பொருள்கொள்வாருமுளர். இப்பொருட்கு இளமை ஆகுபெயர். (சுஉ)

மாவின்பாலேயன்றிமரபுக்குரியமைந்த
னாவின்பால்கண்டறியானதனால்வருந்தியந்தக்
கோவின்பாலெய்துதலுங்கோமான்யார்நீயென்ன
நாவின்பாலானடுங்கிநானுன்னண்பனென்றேன்.

(இ - ள்.) மரபுக்கு உரிய மைந்தன் - வம்மிசத்திற்குரிய புதல்வன்—மாவின் பாலே அன்றி ஆவின் பால் கண்டு அறியான் - மாப்பாலையே யன்றிப் பசுவின் பாலைக் கண்டுமறியான்—அதனால் வருந்தி அந்தக் கோவின் பால் எய்துதலும் -

அதனால் வருத்தப்பட்டு நான் அந்த யாகசேனன் என்னுமரசனிடத்திற் போக வும்—கோமான் நீ யார் என்ன - அவ்வரசன் நீ யார் என்று என்னை வினவ—நடு ங்கி - யான் நடுங்கி—நாவின் பாலால் நான் உன் நண்பன் என்றேன் - நாவினால் நான் உன் சிநேகன் என்று சொன்னேன். எ - று.

ஏகாரம் பிரிநிலை. கண்டும் என்னும் உம்மை விகாரத்தாற்றொக்கது. மாப்பால என்றது சலத்திற் கரைத்த மாவை. குதிரைப்பால் என்றல் சிறப்பின்று. நாவின் பால் ஒருசொல். உயிரினுஞ்சிறந்த நண்பனாயிருந்தும் தன்னையொருசிறிதும் அறி யாதானைப்போல நீயார் என்றமையின் நடுங்கி என்றும், இவன் நண்பைநினையாது இங்ஙனங்கூறும்பொழுதும் தன் நா அதனைச் சகித்துப் பழைய நண்பின்கிழமை யையே அவற்குப் புலப்பட, நானுன்னண்பனெனக் கூறிற்றென அதன் சிறப்பு ணர்த்துவானாய் நாவின்பாலால் என வேண்டாதுங் கூறினான். நாவின்பாலால் நடுங்கிஎன்பதற்கு நாவிலிருந்து வந்த சொல்லால் நடுங்கி எனப் பொருள்கோடலு மொன்று. சொல் ஆகுபெயர். உணவின்மையால் நடுங்கி என விதப்புக்கூறல் சிறப்பின்று. (சஙு)

மன்னன்யானீமுனிவன்மரபாலெனக்குமுனக்கு
மென்னநண்புண்டென்னவேசிநகைசெய்திகழ்ந்தா
னன்னதுருபன்றன்னையவையிலரசர்கேட்பச்
சொன்னவாய்மைநீயேசோர்ந்தாயானேசோரேன்.

(இ - ள்) யான் மன்னன் - நானரசன்—நீ முனிவன் - நீ இருடி—மரபால் எனக்கும் உனக்கும் என்ன நண்பு உண்டு என்ன - இந்த முறைமையினால் எனக் கும் உனக்கும் என்ன நண்புண்டென்று—எசி நகைசெய்து இகழ்ந்தான் -என்னை வைது சிரித்துப் பரிகாசஞ் செய்தான்—அன்னதுருபன் தன்னை - அவ்வியல்பி னையுடைய யாகசேனனை—அவையில் அரசர் கேட்ப - அவன்சபையிலுள்ள அரச ர்கள் கேட்கும்படி—நீயே சொன்ன வாய்மை சோர்ந்தாய் - நீயே சொன்னவாக் குத் தவறினாய்—யானே சோரேன் - நானோ தவறேன். எ - று.

ஏகார ஓகாரங்கள் பிரிநிலை. அந்தணர், அரசர்க்கு அமைச்சர் சேனாதிபதிய ராதற்குரியரன்றி நட்பினராதற்குச் சிறிது முரிமையுடையரன்மையின் மன்னன் யானீமுனிவன் மரபாலுனக்குமெனக்கு மென்ன நன்புண்டென்ன வேசி நகை செய்திகழ்ந்தானென்க. (சச)

புகன்றபடிநீயாளும்புவியும்பாதிகொள்வே
னிகன்றசமரிலுன்னையிரதத்துடனேகவர்வே
னகன்றமெய்ம்மையுடையாயறிதியென்றேனென்று
சுகன்றன்ஞானம்பெற்றதுரோணன்சொல்லக்கேட்டான்.

(இ-ள்.) புகன்றபடி நீ ஆளும் புவியும் பாதி கொள்வேன் - முன் எனக்கு ச்சொல்லியபடி நீ அரசாளும் பூமியிலும் பாதியைக் கைக்கொள்வேன்—இகன்ற சமரில் உன்னை இரதத்துடன் கவர்வேன் - பகைத்த யுத்தத்தில் உன்னைத் தேரு டன் (கட்டிக்) கவருவேன்—அகன்ற மெய்ம்மை உடையாய் - நீங்கிய மெய்ம்மை யையுடையவனே—அறிதி என்றேன் என்று - இதனையறிகுதியென நான் சொன் னேனென்று—சுகன் தன் ஞானம் பெற்ற துரோணன் சொல்ல - சுகப்பிரமமுனி

னுடைய ஞானத்தையொத்த ஞானத்தையுடைய துரோணாசாரியன் சொல்ல—கேட்டான் - வீமன் அதனைக் கேட்டான். எ - று.

ஏ - அசை. உம்மை எச்சம். அவையிலரசர்கேட்ப அறிதியென்றேனென்று துரோணன்சொல்ல வீமன் கேட்டான் எனமுடிக்க. சுகப்பிரமர்போலச் சீவனுடனிருக்கும் பொழுதே முத்தியடைந்திருப்பவனென்பார் சுகன்றன் ஞானம்பெற்றதுரோணன் என்றார். முத்தியாவது எங்குமொக்க வியாத்தியையடைந்திருத்தல். சுகப்பிரமமுனிவனிடத்து ஞானோபதேசம்பெற்ற துரோணன் என்பாருமுளர். (சரு)

கேட்டவரசனழைக்கக்கிருபனுடன்வந்திறைஞ்சும்
பூட்டுவரிவிற்றடக்கைப்புதல்வர்புதல்வர்தம்மைக்
காட்டிநீயேயிவரைக்கடிதிற்படைமைக்கல்வி
மூட்டிநின்வஞ்சினமுமுடித்தியென்றுமொழிந்தான்.

(இ - ள்.) கேட்ட அரசன் - (துரோணாசாரியன் சொல்ல அக்கதையைக்) கேட்ட வீமன்—அழைக்க - விளிக்க—கிருபனுடன் வந்து இறைஞ்சும் - (ஆசிரியனாகிய) கிருபனோடு வந்து வணங்கும்—பூட்டு வரி வில் தடக் கைப் புதல்வர் புதல்வர் தம்மை - நாண்பூட்டிய வரிந்த வில்லையேந்திய நீண்ட கையையுடைய பேரப்பிள்ளைகளை—காட்டி - (அத்துரோணாசாரியனுக்குக்) காண்பித்து—நீயே இவரைக் கடிதில் படைமைக் கல்வி மூட்டி - நீரே இப்பிள்ளைகளுக்கு விரைவிற் படைக்கலவித்தையைப் பயிற்றி—நின் வஞ்சினமும் முடித்திஎன்று மொழிந்தான்- உமது சபதத்தையும் முடிக்குதிர் என்று வீமன் சொன்னான். எ-று.

ஏகாரம் பிரிநிலை. உம்மை எச்சம். இவரை என்னும் ஐயுருபு குவ்வுருபாகத் திரிக்கப்பட்டது. துரோணாசாரியனைக்கொண்டு கல்விகற்பித்தற்கண் முந்திய ஆசாரியனாகிய கிருபனதுடன்பாடும் வேண்டப்படுவதென்னும் முறைமைகருதி அவனையும் வீமனழைக்க அவனும் வந்தானென்பார் கிருபனுடன் வந்திறைஞ்சும் என்றும், இடைவிடாது படைக்கலப்பயிற்சி செய்யுமியல்பினர் என்பார் பூட்டுவரிவிற்றடக்கைப் புதல்வர் புதல்வர் என்றுங் கூறினர். (சசு)

முனிநீயையாவிதற்குமுன்னமின்றுமுதலா
வினியிவ்வுலகுக்கரசாயெம்மிலொருவனாகிக்
குனிவில்வலியாலமருங்கோடியென்றுகொடுத்தான்
பனிவெண்குடையுநிருபர்க்குரியவரிசைபலவும்.

(இ - ள்.) ஐயா இதற்கு முன்னம் நீ முனி - சுவாமீ! இதற்கு முன்பு நீர் இருடி—இன்று முதலா இனி இவ்வுலகுக்கு அரசாய் - இன்றுமுதலாக இனி இந்தவுலகத்திற்கு அரசராய்—எம்மில் ஒருவன் ஆகி-எங்களுள் ஒருவராய்—குனி வில் வலியால் அமரும் கோடி என்று - வளைந்த வில்வலியினாலே யுத்தத்தையுஞ் செய்குதிர் என்று சொல்லி—பனி வெண் குடையும் நிருபர்க்கு உரிய வரிசை பலவும் கொடுத்தான் - குளிர்ந்த வெண்கொற்றக்குடையையும் அரசர்களுக்குரிய ஏனைவரிசைகள் பலவற்றையும் அவ்வீமன் கொடுத்தான். எ-று.

அமரும் என்னும் உம்மை எச்சம். முதலாக என்பது ஈறுதொக்கது. அரசனாகி அவர்க்குரிய சாதிதருமத்தையுஞ் செய்க என்பான் அரசாய்க் குனிவில் வலியாலமருங்கோடியென்றான். என்க. (சஎ)

வேறு.

அன்றுமுதலாக வரிவெஞ்சிலை முதற்படைகளானவையனைத்துமடைவே, தொன்றுபடு நூன்முறையின்மறையினொடுதிட்டிரசுயோதனர்களாதியெவரு, மொன்றியதுரோணனருளாலும்வலியாலுமுயலுணர்வுடைமையாலுமுதலே, நின்றகுறையாலுமொருவர்க்கொருவர்கல்வியினிரம்பினர்வரம்பினிதியோர்.

(இ - ள்.) வரம்பு இல் நிதியோர் உதிட்டிர சுயோதனர்கள் ஆதிஎவரும்-அளவற்ற திரவியங்களையுடையராகிய தருமனும் துரியோதனனும் முதலானவரனைவரும்—அன்று முதலாக - அந்தநாண்முதலாக—ஒன்றிய துரோணன் அருளாலும்- (தங்களிடத்திற்) பொருந்திய துரோணாசாரியனுடைய கிருபையினாலும்—வலியாலும் - (தங்கள்) வலிமையாலும்—முயல் உணர்வு உடைமையாலும்-ஊக்கமான அறிவுடைமையினாலும்—முதலே நின்ற குறையாலும் -முற்பிறப்பிலே கற்றதனால் நின்ற சேடத்தாலும் [விட்டகுறை என்றபடி]—வரி வெம் சிலை முதல்படைகளானவைஅனைத்தும் - வரிந்த கொடிய வில் முதலிய படைத்தொழில்களெவற்றையும்—அடைவே - முறையாக—தொன்றுபடு நூல் முறையின்-பழமைபொருந்திய சாத்திர விதிப்படியே—மறையினொடு - மந்திரங்களோடு (கற்று)—ஒருவர்க்கு ஒருவர் கல்வியில் நிரம்பினர் - ஒருவருக்கொருவர் கல்வியில் நிறைந்தார்கள். எ - று.

நிதியோர் பெயரெச்சமுற்று. முதல் - ஆகுபெயர் ஒன்றிய அருளெனவியையும். கற்று என்னுஞ்சொல் அவாய்நிலையான் வருவிக்கப்பட்டது. ஒருவர்க்கொருவர் என்பதிற் குவ்வுருபு சிறப்புப்பொருளில் வந்தது. பெருஞ்செல்வராயுள்ளோர் ஆசிரியர்முன் உடையார்முன் இல்லார்போல் ஆசையாற் றாழ்ந்துநின்று வருந்திக் கற்றலரிதாயினும், இக்குமாரர்கள் கல்வியருமை தெரிந்த சாதுரியராதலின் ஆசானுள்ளத்தருள்வர வழிபட்டு வருந்திக்கற்றாரென்பார் வரம்பினிதியோரென்றும், துரோணனருளாலும் முயலுணர்வுடைமையாலும் ஒருவர்க்கொருவர் கல்வியினிரம்பினர் என்றுங் கூறினார். முதலே நின்ற குறையாலும் என்பதற்கு முன்னரே (கிருபாசாரியரிடத்திற் கற்றதனால்) நின்ற சேடத்தாலும் எனப் பொருள் கோடலு மொன்று. [தொட்டகுறை என்றபடி]. (சஅ)

வெஞ்சிலையினாலிவனிராகவனையொக்குமென விசயன்விசயத்தின்மிகவே,யெஞ்சியகுமாரர்கள்பொறாமையின்மிகுத்தனர்களிரவியெதிர்மின்மினிகள்போ, லஞ்சொன்முனிதானுமிவன்மேலெவரினும்பெருகவன்புடையனாகியகலா, னெஞ்சுறவருங்கலைகள்கற்குமவர்தம்மளவினேயமகிழாதவர்கள்யார்.

(ள் - ள்.) விசயன் - அருச்சுனனானவன்—வெம் சிலையினால் இவன் இராகவனை ஒக்கும் என விசயத்தின் மிக - கொடிய வில்வித்தையினால் இவன் இராமனையொப்பான் என்று சொல்லும்படி வெற்றியில்மேம்பட—எஞ்சிய குமாரர்கள்- ஒழிந்த துரியோதனாதியர்கள்—இரவி எதிர் மின்மினிகள் போல் பொறாமையின் மிகுத்தனர்கள் - சூரியனை எதிர்க்கின்ற மின்மினிகளைப்போலப் பொறாமையிலதிகப்பட்டார்கள்—அம் சொல் முனிதானும் - அழகிய புகழினையுடைய துரோணாசாரியனும்—இவன்மேல் எவரினும் பெருக அன்புடையன் ஆகி அகலான் - இந்த அருச்சுனன்மேல் மற்றைமாணாக்கரெவரினும்பார்க்க மிக அன்புடையனாகிப் பிரிகின்றிலன்—நெஞ்சு உற அரும் கலைகள் கற்குமவர் தம்மளவில் - மனத்திலழுந்த அரிய நூல்களைப் படிக்குமவரளவில்—நேயம் மகிழாதவர்கள் யார் - அன்போடு மகிழ்ச்சியைப்பொருந்தாதவர்கள் எவர்கள் எ-று.

ஏ - அசை. சில - ஆகுபெயர். முனிதானும் என்னும் உம்மை சிறப்போ
டெச்சம். எற்புழிக்கோடலால் எஞ்சியகுமாரர்கள் என்றது துரியோதனாதியரை.
கல்வித்திறமையில் அருச்சுனனைச் சிறிதும் ஒவ்வாதிருந்தும் அவனிற் பொறாமை
ப்பட்டார் என்பார் இரவியெதிர்மின்மினிகள்போல் என்றார். தனுர் வேதத்தில்
ஸ்ரீராமனுக்கு மேற்பட்டார் நிலவுலகத்தின்மையின் வில்வீரர் எவர்க்கும் அவனை
யேயுவமைகூறல் தொன்றுதொட்ட வழக்கமென்க. (சுக)

ஏகலைவனென்றொருகிராதன்முனியைத்தனியிறைஞ்சியிவனேவ
லின்வழா, னாகலையடைந்துமிகுபத்தியொடுநாடொறுமருச்சுனனையொ
த்துவருவான், மேகலைநெடுங்கடல்வளைந்ததரணிக்கணொருவில்லியென
வின்மையுடையான், மாகலைநிறைந்துகுருதக்கிணைவலக்கையினில்வல்
விரல்வழங்கியுளனால்.

(இ - ள்.) ஏகலைவன் என்ற ஒரு கிராதன்-ஏகலைவனென்ற பெயரையுடைய
ஒரு வேடுவன்—முனியைத் தனி இறைஞ்சி - துரோணாசாரியனை (மாணக்கர்க
ளாகிய குருகுலகுமாரர்களில்லாமல்) தனியேயிருந்தபொழுது வந்து வணங்கித்
(தனக்கு வில்வித்தை கற்பிக்கும்படி வேண்டிக் கொண்டபொழுது அவன் உடன்
படானாக)—மிகு பத்தியொடு இவன் ஏவலின் வழான் ஆகலை அடைந்து - அவன்
மிகுந்த சிரத்தையோடு (துரோணாசாரியனைப்போல ஒருவடிவத்தை உண்டாக்கி)
இவனுக்குச்செய்யுமேவலிற் றவறாதவனாதலைப் பொருந்தி—நாடொறும் அருச்
சுனனை ஒத்துவருவான் - (அதனால்) நாடோறும் அருச்சுனனை யொத்து வருப
வன்—மேகலை நெடும் கடல் வளைந்த தரணிக்கண் - மேகலையாக நெடிய கடல்
சூழ்ந்த பூமியின்கண்—ஒரு வில்லி என வின்மை உடையான் - ஒரு வில்வீரன்
என்றுசொல்ல விற்றொழிலின் வன்மையுடையனாய்—மாகலை நிறைந்து-பெரிய
தனுர்வேதத்தில் நிறைந்து—குருதக்கிணை வலக்கையினில் வல்விரல் வழங்கி
யுளன் - குருதக்கிணையாகத் தன் வலக்கைப் பெருவிரலைக் கொடுத்தான். எ-று.

ஆல் - அசை. என்ற என்னும் பெயரெச்சத் தீறுதொக்கது. உடையான்
என்பது வினையெச்சமுற்று. வழங்கியுளன் ஒரு சொல். துரோணனைப்போலச்
செய்த வடிவை அவனாகப்பாவித்து அவனிடத்திற் கற்குமாறுபோல அதன்முன்
கற்றான் என்பார் இவனேவலின்வழானாகலை யடைந்து என்றார். இங்ஙனந் தனுர்
வேதமெல்லாம் பயின்ற ஏகலைவன் பின்னொருநாள் துரோணன் தன்னிடத்து
வரக் கண்டு, சுவாமீ குருதக்கிணை பெற்றுக்கொள்ளல்வேண்டும் என்று வேண்
டிக்கொள்ள, ஏகலைவன்மேற் பொறாமையுற்றிருந்த அருச்சுனன் உவக்குமாறு
அவன் வலக்கைப் பெருவிரலைத் துரோணன் தக்கிணையாக வாங்கினானென்க. ()

அங்குலிகமொன்றுபுனலாழ்தருகிணற்றில்விழவந்தமுனிதேடுமி
னெனப், புங்கமொடுபுங்கமுறவெய்திவனெடுத்தமைபுகன்றருகுநின்ற
வரைநீ, ரிங்கிதனிலைத்தொகைகள்யாவுமுருவப்பகழியேவுமினெனாமுன்
விசயன், றுங்கவில்வளைத்தொருகணத்தினில்வடத்திலைதுளைத்தனனில
க்கிறொடையால்.

(இ-ள்.) அங்குலிகம் ஒன்று புனல் ஆழ்தரு கிணற்றில் விழ-மோதிரமொன்று
நீரையுடைய ஆழமாகிய கிணற்றில் விழ - அந்த முனி தேடுமின் என - அந்தத்
துரோணாசாரியன் (குருகுலகுமாரரை நோக்கி அதைத்) தேடி யெடுங்கள் என்று
சொல்ல—இவன் புங்கமொடு புங்கம் உற எய்து எடுத்தமை புகன்று-இந்த அருச்
சுனன் அம்புடனம்பு பொருந்தும்படிசெய்து (அந்த மோதிரத்தை) யெடுத்த

மையை வியந்துபேசி—அருகு நின்றவரை - அருகில்நின்ற மாணுக்கரை—நீர் இங்கு இதன் இலைத் தொகைகள் யாவும் உருவப் பகழி ஏவுமின் எனுமுன் - நீர் இங்கே இந்த ஆலமரத்தினுடைய இலைத் தொகைகளெல்லாம் உருவும்படி (ஒரு) அம்பைச் செலுத்துங்கள் என்று சொல்ல முன்னமே—விசயன் துங்க வில் வளைத்து - அருச்சுனன் உயர்ந்த வில்லை வளைத்து—இலக்கில் தொடையால் ஒருகணத்தினில் வடத்து இலை துளைத்தனன் - நிகரில்லாத (ஒரு) பாணத்தால் அவ்வால மரத்தின் இலைத்தொகை முழுதையுந் துளைத்தான். எ - று.

எனுமுன் என்பது இறந்தகாலம்பற்றிவந்த முன்னீற்றுவினையெச்சம். தனுர்வேதத்தில் வல்ல அருச்சுனனுடைய அரிய தொடை விசேடங்கட் கெல்லாமியைந்த வில்லென்பார் துங்கவில்லென்று கூறினர். இலக்கில்தொடை என்பதற்கு அளவிறந்தபாணம் எனப் பொருள்கொள்ளிற் கதையோடு முரணுமென்க.

முத்திமுனிதாளிணையைநீர்படிதடந்துறையின்முதலைகவர்வுற்றதெனவுஞ், சித்திரவில்வீரர்பலருந்தமவெறுங்கையொடுசென்றருகுநின்றுவிடவே, பத்தியின்விரைந்துபொதுவேயிபமழைக்கவொருபறவைமிசைவந்தநெடுமால், கைத்திகிரிபோல்கணையின்விசயனதனைப்பழையகார்முதலையிற்றுணிசெய்தான்.

(இ - ள்.) முத்தி முனி தாள் இணையை - சீவன்முத்த தசையை யடைந்த துரோணசாரியனுடைய கால்களிரண்டையும்—நீர்படி தடம் துறையில் முதலை கவர்வுற்றது எனவும் - ஸ்நானஞ்செய்கின்ற பெரிய நீர்த்துறையில் முதலை பிடித்ததென்று (சிலர்) சொல்லவும்—சித்திர வில் வீரர் பலரும் - அழகினையுடைய வில்லையேந்தும் வீரர்கள் பலரும்—தம வெறும் கையொடு சென்று அருகு நின்று விட - தங்கள் வெறுங்கைகளோடு சென்று பக்கத்திலே சும்மாநின்றுவிட—விசயன் - அருச்சுனன்—இபம் பத்தியின் விரைந்து பொதுவே அழைக்க - யானையானது அன்பினேடு விரைந்து (ஆதிமூலமே என்று) பொதுவிலழைக்க—ஒரு பறவை மிசை வந்த நெடுமால் கைத்திகிரி போல் கணையின் - ஒப்பற்ற கருடவாகனத்தின்மீது ஏறிவந்த நெடிய உருவத்தையுடைய விஷ்ணுவினது கையிற்பொருந்திய சக்கரத்தைப்போன்ற பாணத்தினல்—அதனைப் பழைய கார்முதலையில் துணி செய்தான் - அம்முதலையை விட்டுணு பிளந்த பழைய கரிய முதலையைப் போலப் பிளந்தான். எ - று.

ஏ - அசை. போல்கணை வினைத்தொகை. முதலையில் என்னும் இல்லுருபு உவமப்பொருட்கண் வந்தது. நின்றுவிட ஒருசொல். ஏனைக்குமாரர்களும் அம்முதலையைப் பிளக்கவல்ல தனுர்வேத சாமர்த்தியமுடையர் என்பார் சித்திரவில் வீரர் என்ருர். துரோணசாரியன் சீவன்முத்தன் என்பதுபற்றியே ''சுகன்றன் ஞானம்பெற்ற துரோணன்'' என்றும் ''சுகனிகர்துரோணன்'' என்றும் ஆசிரியர் பலவிடங்களிலுங் கூறுதல் காண்க. முத்திமுனி என்பதற்குப் பாவத்தை நீக்கிய முனியெனப் பொருள் கூறுவாருமுளர். முத்தி - விடுதல். (௫௨)

ஒருதனுவினலிதயமகிழ்குருவினுக்கிவனுமுயிருதவினனுதவலுங், குருவுமிவனுக்கு நிலையாலுமறையாலும் வலிகூர்பகழியொன்றுதவின, னிருவருநயந்தருளும் வினயமுமிகுந்தனர்களின்னுயிரு மனமுமெனமேன், மருவிவருநல்வினைவயத்தின் வழிவந்தபயன்மற்றொருவருக்கு வருமோ.

(இ - ள்.) இவனும் - இந்த அருச்சுனனும்—ஒரு தனுவினால் இதயம் மகிழ் குருவினுக்கு உயிர் உதவினான் - ஒப்பற்ற வில்வித்தையினால் (தன்மாட்டு) மனம் கிழுகின்ற குருவாகிய துரோணாசாரியனுக்கு (முதலையினின்று நீக்கி) உயிரைக் கொடுத்தான்—உதவலும் - கொடுக்கவும்—குருவும் - துரோணாசாரியனும்—இவனுக்கு நிலையாலும் மறையாலும் வலிகூர் பகழிஒன்று உதவினான் - இந்த அருச்சுனனுக்கு நிலையினாலும் மந்திரத்தினாலும் வலிமைமிகுந்த அம்பொன்றைக்கொடுத்தான்—இருவரும் - துரோணாசாரியனும் அருச்சுனனுமாகிய இவ்விருவரும்—இன் உயிரும் மனமும் என நயந்து அருளும் வினயமும் மிகுந்தனர்கள் - இனிய உயிரையும் மனத்தையும்போல (ஒருவரையொருவர்) விரும்பி (முறையே) அருளிலும் பணிவிலும் மிகுந்தார்கள்—மேல் மருவிவரும் நல்வினை வயத்தின்வழி வந்த பயன் - தொன்றுதொட்டுத் தொடர்ந்து வரும் நல்வினை வயத்தின்வழியே வந்த பிரயோசனம்—மற்றொருவருக்கு வருமோ - அஃதில்லாதார்க்கு வருமோ! எ - று.

இவனும் குருவும் என்னும் உம்மைகள் எச்சத்தோடு சிறப்பு. ஓகாரம் எதிர்மறை. தனு - ஆகுபெயர். நிலையென்றது வில்லிற்றொடுத்து அம்பினை யெய்வார்க்குரிய நிலைகளாகிய ஆலீடம், பிரத்தியாலீடம், பைசாசம், மண்டலம் என்னும் நான்கனுள் இப்பாணத்திற்குரிய நிலையையென்க. ஒருவரை யொருவர் இன்றியமையாத்தொடர்புடையர் என்பார் இன்னுயிருமனமுமென என்றும், தொன்று தொட்டுமருவிய இத்துணை நல்வினைப்பயன் மற்றை நூற்றுநால்வர்க்கு மின்றி அருச்சுனற்கே யுளதாயினமையிற் குருவுயிரைப் பாதுகாத்தலும் அதற்குப்பரிசாக அவன் பாணங்கொடுத்தலுமாகிய பேறு அவற்குளதாயிற்றென்பார் மேல்மருவிவருநல்வினைவயத்தின் வழிவந்தபயன் மற்றொருவருக்கு வருமோ என்றுங்கூறினார். இதயமகிழ் குருவினுக்கு ஒருதனுவினா லுயிருதவினான் எனப் பொருள்கூறுதலுமொன்று. (ருங)

சிலைக்குருவிறற்குருகுலக்குமரருக்குவருசிரமநிலைகாண்மினென வே, யலைத்தலைநிலாவெழுசரிற்புதல்வனுக்குநல்றக்கடவுளுக்குமுரையா, நிலைப்படுவிசாலமணியணிதிகழரங்கின்மிசைநிகழ்பலிகொடுத்தரியுடன், கலைப்புரவியூர்திருவையுந்தொழுதுபுக்கனனகத்துணர்வுமிக்ககலையோன்.

(இ - ள்.) அகத்து உணர்வு மிக்க கலையோன் சிலைக்குரு - மனத்தில் அறிவு மேம்பட்ட பண்டிதனாகிய துரோணாசாரியன்—விறற் குருகுலக் குமரருக்கு வரு சிரமநிலை காண்மின் என - வலிய குருகுலகுமாரர்களுக்குக் கைவந்த யுத்தப்பயிற்சியைப் பாருங்கள் என்று—அலைத்தலை நிலா எழு சரிற்புதல்வனுக்கும் நல் அறக்கடவுளுக்கும் உரையா - திரையில் நிலாவுண்டாகின்ற கங்கையின் புதல்வனாகிய வீடுமனுக்கும் நல்ல யமனுடைய அவதாரத்தனாகிய விதுரனுக்குஞ் சொல்லி—நிகழ் பலி கொடுத்து - செயற்பாலதாகிய பலியைக் கொடுத்து—அரியுடன் கலைப் புரவி ஊர் திருவையும் தொழுது-சிங்கத்தோடு கலைமானாகிய வாகனத்தை ஏறிச் செலுத்தும் வீரலக்குமியையும் வணங்கி—நிலைப்படு விசால மணி அணி திகழ் அரங்கின் மிசை புக்கனன் - நிலையான பரந்த இரத்தினங்களி னழகு விளங்கும் அரங்கத்திற் புகுந்தான். எ - று.

ஏ - அசை. திருவையும் என்னும் உம்மை சிறப்பு; தன்னாசாரியர் முதலியோரையன்றிக் கலைப்புரவியூர் திருவையுந் தொழுது என எச்சவும்மையாக்கினும்

பொருந்தும். கலையோன் பெயரெச்சமுற்று. குருகுலக்குமரர் என்பதில் ககரம் சந்தவின்பநோக்கி மிக்கது. கலைப்புரவி "தோகைப்புரவி" என்பதுபோல நின்றது. சிரமம் - யுத்தப்பயிற்சி. சரித் - நதி. வெண்ணிறமுடைமையிற் கங்கையை அலைத்தலை நிலாவெழுசரித்தென்றும், யுத்தப்பயிற்சி செய்யுமரங்கத்திற் புகும்பொழுது வேண்டிய பலிகொடுத்து விந்தையையும் வணங்கியேகுதல் வேண்டுமென்பது நூற்றுணிபாகலின் அதன்வழி யொழுகினான் என்பதும்போதரத்துரோணனை அகத்துணர்வுமிக்ககலையோன் என்றுங் கூறினர். (௫௪)

புரியிலறிவோர்சனபதத்திலறிவோர்புவிபுரக்குமவர்தம்மிலறிவோர்
வரிபடவயங்குகொடிமஞ்சவிதமெங்கணும்வனப்புறவிருந்தபொழுதிற்
றெரிவுறுவிமானமனைதோறுமுறைதேவர்பலர்சித்தர் முதலோர்பரனொ
கரியநெடுமால்பிரமனிந்திரன்முதற்பலர்கலந்தவகல்வானிகருமே. [டுங

(இ - ள்.) புரியில் அறிவோர் - நகரத்திலுள்ள அறிஞர்கள்—சனபதத்தில் அறிவோர் - நாட்டிலுள்ள அறிஞர்கள்—புவி புரக்குமவர் தம்மில் அறிவோர்-பூமியைக்காக்கு மரசர்களுள் அறிஞர்களாயுள்ளோர்கள் ஆகிய எவரும்—வரிபட வயங்கு கொடி மஞ்சவிதம் எங்கணும் வனப்பு உற இருந்த பொழுதில் - நிரைபொருந்த விளங்குங் கொடியையுடைய பலவகைப்பட்ட மஞ்சங்கள்தோறும் அழகுற இருந்த சமயத்தில் (அச்சபையானது)—தெரிவு உறு விமான மனைதோறும் உறை தேவர் பலர் - மதிக்கப்படுகின்ற விமானங்களாகிய மாளிகைகடோறும் இருக்கின்ற தேவர்கள் பலரும்—சித்தர் முதலோர் - சித்தர்கள் முதலானோர்களும்—பரனொடும் கரிய நெடு மால் பிரமன் இந்திரன் முதற் பலர் - உருத்திரனோடுகரிய நெடிய விஷ்ணு பிரமன் இந்திரன் முதலானோர் பலரும்—கலந்த அகல் வான் நிகரும் - செறிந்த அகன்ற ஆகாயத்தை யொக்கும். எ - று.

ஏ - அசை. பலருமென்னும் முற்றும்மை விகாரத்தாற்றொக்கது. விமான மனை இருபெயரொட்டுப்பண்பு. தெரிவு - மதிப்பு. புரியிலறிவோர் சனபதத்திலறிவோர் எனப் பொதுப்படக்கூறினரேனும், ஏற்புழிக்கோடலால் அரசரேயன்றி அந்தணரும் வணிகரும் தனுர்வேதமுதலியன கற்றற்குரியராதலின் அவருளறிவோரெனக்கொள்க. (௫௫)

ஆற்றின்வழுவாமனுமுறைத்தருமன்மைந்தன்முதலாகியகுமாரரடைவே, போற்றியடலாசிரியரிருவரையுமன்பினுயர்பூசைபலசெய்துபுரிநா, ணேற்றியசராசனம்வணக்கிவடிவாளியினிலக்கமவைநாலுவகையான், மாற்றினர்பிளந்துபெருவண்மைசிறுநுண்மைசலநிச்சலமெனச்சொல்வகையே.

(இ - ள்.) ஆற்றின் வழுவா மனுமுறைத் தருமன் மைந்தன் முதலாகியகுமாரர் - நன்னெறியில் வழுவாத நீதியையுடைய தருமபுத்திரன் முதலாகிய குருகுலகுமாரர்கள்—அடைவே - முறையே—அடல் ஆசிரியர் இருவரையும் போற்றி - வலிமையினையுடைய கிருபன் துரோணன் என்னும் ஆசிரியரிருவரையும் துதித்து—அன்பின் உயர் பூசை பல செய்து - அன்பினால் உயர்ந்த பூசனைகள் பலவற்றைச் செய்து—புரி நாண் ஏற்றிய சராசனம் வணக்கி-புரியையுடைய நாணையேற்றும்படி வில்லைவளைத்து — வடிவாளியின் - கூரிய அம்புகளால் — பெருவண்மை சிறுநுண்மை சலம் நிச்சலம் எனச் சொல் நாலுவகை இலக்கமவை - பெருவண்மை சிறுநுண்மை சலம் நிச்சலம் என்று சொல்லும் பகுப்பையுடைய நான்கு இலக்கங்களையும்—வடி வாளியின் வகையால் பிளந்து மாற்றினர் - கூரிய

பாணங்களைக்கொண்டு (அதற்குரிய மூன்று) வகைகளாற் பிளந்து நீக்கினார்கள். எ - று.

ஏ - அசை. எற்றிய என்பது செய்யியவென்னும் வாய்பாட்டு வினையெச்சம். இலக்கமவையும் என்னும் முற்றும்மை விகாரத்தாற்றொக்கது. கிருபனைமுன்னுந் துரோணனைப் பின்னும் போற்றினாரென்பார் முறையே என்றார். பெருவண்மை முதலிய நான்கும் இலக்குக்களை விசேடித்தன. பெருவண்மை - பெரிய இலக்கு. சிறுநுண்மை - சிறிய இலக்கு. சலம் - அசையுமிலக்கு. நிச்சலம் - அசையாத இலக்கு என்பர். வகைமூன்றாவன: கெசமுட்டியும், சிரோமுட்டியும், கணமுட்டியுமாம். இவற்றைத் தமிழ்நூலார் மேனோக்கியெய்தல், கீணோக்கியெய்தல், நேரேயெய்தலென்ப. இந்நான்கும் பாணங்களைத் தொடுத்தற்குரிய வகையெனின், அவை தொடையும் விலக்கும் செலவும் சேமமும் தவறறுத்து வினைசெய்தலும் என ஐவகையாதலின் அது பொருந்தாதென்க. இவ்வைந்தனையும் வடநூலார் பஞ்சகிருத்தியமென்பர். எற்றிய என்பதனைப் பெயரெச்சமாக்கிப் பொருள்கொள்ளுதல் சிறப்பின்று. (ருசு)

ஆயுதமநேகவிதமானவையெனப்பலவுமழகுறவியற்றியுமதம்
பாயுமிபமாவிரதம்வாசியொருவர்க்கொருவர்பலகதிவரக்கடவியுஞ்
சேயுயருமாடநிலைதெற்றியினிருந்தவர்தெளிந்துளமகிழ்ந்துநவைதீர்
வாயுகதியல்லதுமனித்தர்கதியல்லவெனவல்லனபுரிந்தனரரோ.

(இ - ள்.) அநேகவிதமானவை ஆயுதம் எனப்பலவும் - அநேகவிதமாகிய படைக்கலத்தொழில்களென்று சொல்லப்பட்ட பலவற்றையும்—அழகு உற இயற்றியும் - அழகுமிகச் செய்தும்—மதம் பாயும் இபம் மா இரதம் வாசி - மதஞ்சொரியும் யானை பெரிய தேர் குதிரை ஆகிய இவற்றை—ஒருவர்க்கு ஒருவர் பலகதி வரக் கடவியும்-ஒருவருக்கொருவர் அநேக கதிகளுண்டாகச் செலுத்தியும்—சேய் உயரும் மாடநிலை தெற்றியின் இருந்தவர் - மிக உயர்ந்த மண்டபங்களிலுஞ் சித்திரகூடங்களிலும் இருந்து கண்டவர்கள்—உளம் மகிழ்ந்து - மனம்மகிழ்ந்து—தெளிந்து நவைதீர் வாயுகதி அல்லது மனித்தர் கதி அல்ல என - (இக்கதி என்ன கதி விசேடமோ என்று சந்தேகமுற்றவர்) தெளிந்து குற்றமில்லாத வாயுகதியேயல்லாமல் மனிதர்களுடைய கதியல்ல என்று சொல்ல—வல்லனபுரிந்தனர் - வல்லனவற்றைச் செய்தார்கள். எ - று.

அரோ - அசை. ஆயுதம் - ஆகுபெயர். ஆனவை வினைமுற்றுப் பெயரெச்சம். வாயுகதியே என்னும் பிரிநிலை ஏகாரம் விகாரத்தாற்றொக்கது. ஒருவர்க்கொருவர் என்பதில் நான்கனுருபு சிறப்புப்பொருளில் வந்தது. யுத்தநூலிற்கூறிய இலக்கணங்களிற் சிறிதாயினும் வழுவாமலியற்றினாரென்பார் அழகுறவியற்றியும் என்றார். (ருஎ)

ஒத்தவலியோர்வலியுமொத்ததிறலோர்திறனுமொத் தவினையோர் வினையும்வன், சித்தமனன்மூளமுகவம்புயமலர்ந்தரசன்மகனுமனிலன் சிறுவனுங், கைத்தலமமர்ந்தகதைகொண்டெதிர்நடந்தனர்களிப்புடனிரண்டுதறுகண், மத்தகயம்வேறொடுமொராமரமெடுத்தமர்மலைந்தனையகோலமறவோர்.

(இ - ள்.) வலியும் ஒத்த வலியோர் - வலியிலும் ஒத்தவலியினையுடையோரும்—திறலும் ஒத்த திறலோர் - சாமர்த்தியத்திலும் ஒத்த சாமர்த்தியத்தையுடை

யோரும்—வினையும் ஒத்த வினையோர் - (போர்த்) தொழிலிலும் ஒத்த போர்த் தொழிலையுடையோரும் ஆகிய—அரசன் மகனும் அனிலன் சிறுவனும்-திருதராட்டிரமகாராசனுடைய குமாரனாகிய துரியோதனனும் வாயுகுமாரனாகிய வீமனும்—களிப்புடன் இரண்டு தறுகண் மத்த கயம் - தருக்கோடு இரண்டு வன்கண்மையினையுடைய மதம்பொருந்திய யானைகள்—வேரொடு மராமரம் எடுத்து அமர் மலைந்தனைய கோல மறவோர் - வேரோடு மராமரத்தைப் பிடுங்கியெடுத்து யுத்தஞ்செய்தாலொத்த தோற்றத்தையுடைய மறத்தன்மையராய்—வன் சித்தம் அனல் மூள முக அம்புயம் மலர்ந்து-(தம்முடைய) வலிய மனத்திற் கோபாக்கினிமூள முகமாகிய தாமரைமலர்கள் மலர்ந்து—கைத்தலம் அமர்ந்த கதைகொண்டு எதிர் நடந்தனர் - கையிற்பொருந்திய தண்டப்படையைக்கொண்டு (ஒருவரையொருவர்) எதிர்த்துச் சென்றார்கள். எ - று.

வலியும், திறலும், வினையும் என்னும் உம்மைகள் எண்ணோடு சிறப்புப்பொருடந்து நின்றன. மறவோர் வினையெச்சமுற்று. வலியோர், திறலோர், வினையோர் என்பன பெயரெச்சமுற்றுக்கள். எதிர் என்னும் முன்னிலைத்தனிவினை எதிர்ந்து என வினையெச்சமாய் நின்றது. மலைந்தனைய என்பது "மீன்விழுங்கியற்று" என்பதுபோல நின்றது. வலி - சரீரவலி. திறல் - அதுகொண்டுசெய்யுஞ் சாதுரியம். இந்த அரசகுமாரரிருவருந் தனுர்வேதத்திலும்பார்க்கத் தண்டயுத்தத்தைத் துரோணனிடத்தில் நன்றாய்க் கற்றுச் சாமர்த்தியமுடையரானமையின், அதனை அரங்கிலுள்ளார்க்குக் காட்டத் தண்டங்கொண்டு சென்றனரென்க. ()

தண்டின்முனையொன்றினுடனொன்றுருமெறிந்தனையதன்மையொடுடற்றவிலகு, மண்டலவிதங்களும்வியப்புறநடந்தபின்மறத்தொடுசெயிர்த்துவயிரங், கொண்டிருவரும்பொருதலுன்னுபொழுதத்தவர்குறிப்பினையிமைப்பளவையிற், கண்டுகுருவின்சிறுவன்வன்பொடுவிலக்கினன்மெய்கல்விகரைகண்டபெரியோன்.

(இ - ள்.) தண்டின் முனை ஒன்றினுடன் ஒன்று - தண்டின்னுனியொன்றோடொன்று—உரும் எறிந்து அனைய தன்மையொடு உடற்ற - இடியிடித்தாற்போன்ற தன்மையோடு தாக்க—விலகும் மண்டல விதங்களும் வியப்பு உற நடந்த பின் - (அத்தண்டங்களுக்கு) விலகுகின்ற மண்டலவகைகளும் யாவரும் வியக்கும்படி நிகழ்ந்தபின்பு—இருவரும் மறத்தொடு செயிர்த்து வயிரம் கொண்டு பொருதல் உன்னுபொழுதத்து - இருவரும் வீரத்தோடு கோபித்து வயிரங்கொண்டு யுத்தஞ்செய்ய எண்ணும்பொழுதில்—அவர் குறிப்பினை - அவர்களுடைய குறிப்பை-மெய் கல்வி கரைகண்ட பெரியோன் குருவின் சிறுவன் இமைப்பளவையில் கண்டு - மெய்ம்மையாகிய கல்வியைக் கரைகண்ட பெரியோனாகிய அசுவத்தாமன் நொடிப்பொழுதினுட் கண்டு—வன்பொடு விலக்கினன் - வலிமையோடு விலக்கினான். எ - று.

பெரியோன் பெயரெச்சமுற்று. விதங்களும் என்னும் உம்மை எச்சம். சந்தவின்பநோக்கி மெய்கல்வி என வல்லினம் இயல்பாயிற்று. வீமனுந் துரியோதனனுஞ் செயிர்த்து வைரங்கொண்டு பொரக்கருதினமையைக் குறிப்பாலறிந்து, அவ்விருவரும்அஞ்சுமாறு நடுவிற்புகுந்து கடுஞ்சொற்கூறிப் பகையுண்டாகாவண்ணம் விலக்கினானென்பார் அசுவத்தாமனைக் கல்விகரை கண்டபெரியோன் என்றும் வன்பொடுவிலக்கினன் என்றுங் கூறினார். (௬௯)

மீளிமகவான்மதலையாயுதபுரோகிதன்விலோசனமுணர்ந்தவன்மலர்த்
தாளின்முடிவைத்தெதிர்தரித்தனனிடங்கைவரிசாபகவசத்தினனிபம்
யாளியரவங்கருடன்வன்னிசலிலந்திமிரமிரவியிவையேகடவுளாம் [யே.
வாளியின்விநோதமுறவெய்தனனிருந்தமுடிமன்னவர்மதிக்கும்வகை

(இ - ள்.) மீளி மகவான் மதலை - வீரனாகிய அருச்சனன்—ஆயுத புரோகிதன் விலோசனம் உணர்ந்து - துரோணாசாரியனுடைய கண்ணின் குறிப்பை அறிந்து—அவன் மலர்த் தாளின் முடி வைத்துத் தரித்தனன் - அவனுடைய தாமரைமலர்போலுங் கால்களைத் தன்றலைமேல்வைத்துச் சுமந்து—எதிர் இடங்கை வரி சாப கவசத்தினன் - அவனெதிரே இடக்கையில் வரிந்த வில்லையும் (மெய்யிற்) கவசத்தையு முடையனாய்—இருந்த முடி மன்னவர் மதிக்கும்வகை-அவ்வரங்கத்திலிருந்த முடியையுடைய அரசர்கள் மதிக்கும்படி—இபம் யாளி அரவம் கருடன் - யானையுஞ் சிங்கமும் பாம்புங் கருடனும்—வன்னி சலிலம் திமிரம் இரவி - அக்கினியும் நீரும் இருளுஞ் சூரியனும் ஆகிய—இவையே கடவுள் ஆம் வாளியின்-இவைகளையே அதிதேவதைகளாகவுடைய (ஒன்றற்கொன்று பகையாகிய) பாணங்களினால்—விநோதம் உற எய்தனன் - விநோதமுண்டாக எய்தான். எ - று.

ஏ-அசை. இவையே என்னும் ஏகாரம் தேற்றம். தரித்தனன், கவசத்தினன் வினையெச்சமுற்று. ஆசாரியனாகிய துரோணன் பலருங் குழுமிய அரங்கிற்றன் மாணவகனை நோக்கி உன் தனுர்வேதசாமார்த்தியத்தைக் காட்டுகவென வாயாற் கூறல் மரபன்மையின், அதனைக் கட்குறிப்பாலுணர்த்தினனென்க. (சு0)

வேறு.

மங்குல்சூழ்விமானமுன்றின்மஞ்சகோடிதிகழுவே
யங்கண்வானமீனமென்னவவையிருந்தவரசர்முன்
சிங்கமென்னுமாறெழுந்துசிங்கநாதமுஞ்செய்தான்
பங்கசாதபரிமளங்கொள்பானுராசசூனுவே.

(இ - ள்.) மங்குல் சூழ் விமான முன்றில் மஞ்ச கோடி - மேகங்கள்படிகின்ற கோயிலினது முன்றிலிலுள்ள கோடி மஞ்சங்களில்—திகழ் அம் கண் வான மீனம் என்ன அவை இருந்த அரசர் முன்-விளங்க அழகிய இடத்தையுடைய ஆகாயத்திற்பொருந்திய நக்ஷத்திரங்கள்போலத் திரளாயிருந்த அரசர்களுக்குமுன்னே—பங்கசாத பரிமளம் கொள் பானு ராச சூனு - தாமரை மலர்களை அலரச்செய்கின்ற சூரியன் என்னுந் தலைவனுக்குப் புத்திரனாகிய கன்னன்—சிங்கம் என்னுமாறு எழுந்து சிங்கநாதமும் செய்தான் - சிங்கம் என்று சொல்லும்படி எழுந்து சிங்கநாதத்தையுஞ் செய்தான். எ - று.

ஏ - இரண்டும் அசைகள். சிங்கநாதமும் என்னும் உம்மை எச்சத்தோடு சிறப்பு. பரிமளங்கொள் என்பதில் விவ்விகுதி தொக்கு நின்றது. அலர்த்தலாகிய காரணம் பரிமளங்கொள்ளெனக் காரியமாக உபசரிக்கப்பட்டது. மஞ்சகோடிகளில் இருந்த அரசரென வியையும். சிங்கநாதம் வீராவேசத்தாலாரவாரித்தல். பங்கசாதத்தின் பரிமளத்தைக்கொள்ளுகின்றவெனப் பொருள்கூறுவாருமுளர்.

சிந்தையன்புடன்பணிந்துதேசிகேசனருளினால்
வந்துவெஞ்சராசனம்வணக்கிவீரவாளியா
லிந்திரன்குமாரன்முன்னியாதியாதியற்றினா
னந்தவந்தநிலையுமேவுமவனின்விஞ்சலாயினான்.

(இ - ள்.) சிந்தை அன்புடன் பணிந்து - (அந்தக்கன்னன் தன் குருவாகிய பரசுராமனை) மன அன்போடு வணங்கி—தேசிகேசன் அருளினால் வந்து வெம் சராசனம் வணக்கி-அக்குருசிரேட்டனருளினால் அரங்கில் வந்து கொடிய வில்லை வளைத்து—இந்திரன் குமாரன் முன் வீர வாளியால் யாது யாது இயற்றினான் - அருச்சுனன் முன்னே வீரத்தையுடைய பாணங்களினால் எதை யெதைச் செய் தானோ—அந்த அந்த நிலையும் ஏவும் அவனின் விஞ்சல் ஆயினான் - அதததற்குரிய நிலையிலும் அதையதைச் செலுத்துதலிலும் அவ்வருச்சுனனிலும் மேம்படுநிலையு டையனாயினான். எ - று.

தேசிகேசன் வடநூன்முடிபு. யாது யாது என்னும் அடுக்குப் பன்மைபற்றி வந்தது. தேசிகேசனருளினால் என்பதற்குத் துரோணனருளாலெனப் பொருள் கூறி, அவனே அரங்கத்திற்கதிகாரியாதலின் அவ்வரங்கிற்றனுர்வேத சாமர்த்தியங் காட்டப் புகுங் கன்னனுக்கும் அவனருள்பெறுதலொருதலையாகவேண்டிற்றென அகலங் கூறுவாருமுளர். (௬௨)

கணைகள்போயிலக்கடைந்தவுறுதிகண்டுகண்களித்
திணையில்வீரனென்றதன்றிருந்தராசமண்டலம்
பிணையன்மாலைவிசயனண்ணல்பெற்றிபற்றிநாணினான்
றுணைவரோடுவரிகழற்சுயோதனன்களிக்கவே.

(இ - ள்.) அன்று இருந்த ராச மண்டலம் - அன்றைக்கு (அரங்கத்தி)லிருந்த இராசசமூகம்—கணைகள் போய் இலக்கு அடைந்த உறுதி கண்டு - (கன்னனு டைய) பாணங்கள் போய் இலக்கிற்பட்ட உறுதியைப் பார்த்து—கண் களித்து இணை இல் வீரன் என்றது - கண்கள் களித்து இவன் நிகரற்ற வீரன் என்று கூறியது—துணைவரோடு வரி கழல் சுயோதனன் களிக்க - (அப்பொழுது) தன் தம்பியர்களோடு கட்டிய வீரக்கழலையுடைய துரியோதனன் களிப்படைய—பிணை யல் மாலை விசயன் - பிணையல்மாலையையணிந்த அருச்சுனன்—அண்ணல் பெ ற்றி பற்றி நாணினான் - கன்னனுடைய சாமர்த்தியத்தைக் குறித்து வெட்கம டைந்தான். எ - று.

ஏ - அசை. பிணையன்மாலை - மாலைவிசேடம். தனுர்வேதத்திற்றனக்கொப் பாரு மிக்காருமிலரென்றிருந்த அருச்சுனன் கன்னன் றன்னிலும் அதில் மேற்ப ட்டமைபற்றி நாணுற்றானென்பார் அண்ணல்பெற்றிபற்றி நாணினானென்றும், அருச்சுனனை வெல்ல வல்ல வீரன் நமக்குளனாயினனெனத் தம்பியருந் துரி யோதனனுமுவப்புற்றாரென்பார் துணைவரோடுவரிகழற் சுயோதனன் களிக்க என்றுங் கூறினார். (௬௩)

மருவநின்றருக்கன்மைந்தன்வானநாடன்மகனைநா
மிருவருந்தனுக்கொள்போரியற்றவம்மினென்றலுங்
குருகுலந்தழைக்கவந்தகுமரனன்புகூரவே
யுருகிநன்றெனத்தழீஇயுகந்துளந்தருக்கினான்.

(இ - ள்.) அருக்கன் மைந்தன் மருவ நின்று - கன்னன் சமீபமாய் நின்று —வானநாடன் மகனை - அருச்சுனனை—நாம் இருவரும் தனுக்கொள் போர் இய ற்ற வம்மின் என்றலும் - நாங்களிருவரும் விற்போரைச்செய்ய வருக என்று சொல்லவும்—குருகுலம் தழைக்க வந்த குமரன் - குருகுலந் தழைக்கும்படி அவ தரித்த துரியோதனனானவன்—அன்புகூர உருகி நன்று எனத்தழீஇ உளம்உகந்து

தருக்கினான் - அன்புமிக உருகி இது மிக நன்றென்று அவனைத் தழுவி மனம்மகிழ்ந்து செறுவங்கொண்டான். எ - று.

ஏ - அசை. வம்மின் என்பது ஒருமைப்பன்மை மயக்கம். அரசன்மகனென்னும் மரியாதையின்றி நெருங்கிநின்றழைத்தானென்பார் மருவநின்று என்றும் அருச்சுனனைச்சிறிதும் மதியாது கன்னன் எதிர்நின்று விற்போர்செய்யவருகவென்றழைத்த துணிவுபற்றி அவனைப் பாகன்மகனெனக் கருதாது நன்றெனத் தழுவித் தருக்கினனென்பார் நன்றெனத்தழீஇயுகந்துளந்தருக்கினனென்றுங் கூறினர்.

அனந்தரம்பொரற்குநீகொலந்தரம்மெனக்கெனாத்
தனஞ்சயன்செயிர்த்தல்கண்டுதபனன்மைந்தன்மீளவு
முனைந்தபோரின்முடிதுணித்துன்முகசரோருகத்தினாற்
சினந்தணிந்தரங்கபூசைசெய்வனென்றுசீறினான்.

(இ - ள்.) அனந்தரம் தனஞ்சயன் - பின்பு அருச்சுனனானவன்—பொரற்கு நீகொல் எனக்கு அந்தரம் எனாச் செயிர்த்தல் - பொருதற்கு நீயா எனக்கு நிகர் என்று கோபித்தலை—தபனன் மைந்தன் கண்டு - கன்னன் கண்டு—மீளவும் - திரும்பவும்—முனைந்த போரில் முடி துணித்துச் சினம் தணிந்து - பகைத்த யுத்தத்தில் உன் தலையை வெட்டிக் கோபமாறி—உன் முக சரோருகத்தினால் அரங்க பூசை செய்வன் என்று சீறினான் - உன் முகமாகிய தாமரைப்பூவினால் அரங்க பூசையைச் செய்வேன் என்று சொல்லிக் கோபித்தான். எ-று.

அந்தரம் - ஒப்பு. மீளவும் என்னும் உம்மை எச்சம்; அது என்றென்பதனோடியையும். முகசரோருகம் வடநூன்முடிபு. அரங்கபூசை அரங்கத்திற் செய்யும் பூசையெனவிரியும்; அரங்கத்திற்குச்செய்யும் பூசையென விரித்தல் பொருத்தமின்று. (கூரு)

அதிருகின்றவெழிலிபோலருச்சுனன்றனைக்குறித்
தெதிருகின்றவின்மைகண்டியாவருந்திகைக்கவே
முதிருகின்றமெய்யனாகிமுன்னிருந்தகௌதம
னுதிருகின்றவமுதவிந்துவொக்குமென்னவுரைசெய்வான்.

(இ - ள்.) அதிருகின்ற எழிலிபோல் - முழங்குகின்ற முகிலைப்போல—அருச்சுனன் தனைக் குறித்து எதிருகின்ற வின்மை - அருச்சுனனைக்குறித்துக் (கன்னன்) எதிர்க்கின்ற வில்வலிமையை—யாவரும் கண்டு திகைக்க - எவர்களும் பார்த்துத் திகைப்படைய—முதிருகின்ற மெய்யன் ஆகி முன் இருந்த கௌதமன் - (வயசு) முதிருகின்ற சரீரத்தையுடையனாய் எதிரே இருந்த கிருபாசாரியன்—உதிருகின்ற அமுத விந்து ஒக்கும் என்ன உரைசெய்வான் - சொரிகின்ற அமிர்தத் துளிபோலும் என்று(கேட்டோர்)கூறச்(சிலவசனங்களைச் சொல்லுவானாய்,எ-று.

ஏ-அசை உரைசெய்வான் வினையெச்சமுற்று. கிருபாசாரியன் கூறிய வசனங்கள் நீதியுடையார் செவிக்கெல்லாம் இன்பஞ்செய்தமையின் அவற்றை உதிருகின்ற வமுதவிந்து வொக்குமென்ன என்றார். இங்கே கௌதமன் என்றது கௌதமனுடைய பௌத்திரனாகிய கிருபனை. (கூசு)

சூதன்மைந்தன்வேலையேழுசூழுமேதினிக்கெலா
நாதன்மைந்தனுடன்வெகுண்டுநவிலுதற்குநண்ணுமோ
வேதமுண்டுசாலவென்னராசராசனிகலியக்
கோதமன்றனக்குளங்கொதிக்குமாறுகூறுவான்.

(இ - ள்.) சூதன் மைந்தன் - தேர்ப்பாகனுடைய புதல்வனும்—வேலை எழு சூழும் மேதினிக்கு எலாம் நாதன் மைந்தனுடன் - ஏழுகடல்சூழும் பூமிமுழு வதிற்கும் அரசனுடைய குமாரனோடு—வெகுண்டு நவிலுதற்கு நண்ணுமோ- கோபித்துப் பேசுதற்கு இயலுமோ—சால ஏதம் உண்டு என்ன - (இப்பேச்சில்) மிகக் குற்றம் உண்டென்று கூற—ராசராசன் இகலி - அரசர்க்கரசனாகிய துரியோதனன் கோபித்து—அக் கோதமன் தனக்கு உளம் கொதிக்குமாறு கூறுவான் - அந்தக் கிருபாசாரியனுக்கு மனங்கொதிக்கும்படி சொல்லுவான் எ - று.

மைந்தனும் என்னும் இழிவுசிறப்பும்மை விகாரத்தாற்றொக்கது. ஓகாரம் எதிர்மறை. உரைசெய்வான் என்ன என்றியையும். சூதன்மைந்தனும் வெகுண்டு நவிலுதற்கு வருவானோ எனினுமமையும். மிக இழிந்த சூதன்மகன் மிகவுயர்ந்த அரசன் மகனை வெகுண்டுபேசல் தகாதென்றானென்க. (சுஎ)

கற்றவர்க்குநலனிறைந்தகன்னியர்க்கும்வண்மைகை
யுற்றவர்க்கும்வீரரென்றுயர்ந்தவர்க்கும்வாழ்வுடைக்
கொற்றவர்க்குமுண்மையானகோதின்ஞானசரிதரா
நற்றவர்க்குமொன்றுசாதிநன்மைதீமையில்லையால்.

(இ - ள்.) கற்றவர்க்கும் - படித்தவர்களுக்கும்—நலம் நிறைந்த கன்னியர்க்கும் - அழகுநிறைந்த கன்னிகைகளுக்கும்—வண்மை கையுற்றவர்க்கும் - கொடையையுடையோர்க்கும்—வீரர் என்று உயர்ந்தவர்க்கும் - வீரரென்று மதிக்கப்பட்டவர்களுக்கும்—வாழ்வு உடைக் கொற்றவர்க்கும் - வாழ்வையுடைய அரசர்களுக்கும்—உண்மையான கோது இல் ஞானசரிதர் ஆம் நல் தவர்க்கும் - உண்மை பொருந்திய குற்றமில்லாத ஞானவொழுக்கத்தையுடைய நல்ல தவத்தைச் செய்பவர்களுக்கும்—சாதி ஒன்று - சாதி ஒன்றே—நன்மை தீமை இல்லை - அதில் உயர்வு தாழ்வு என்னும் பகுப்பில்லை. எ - று.

ஆல் - அசை. நன்மை, தீமை என்பன ஆகுபெயர்கள். சாதியொன்று நன்மைதீமையில்லையெனக் கூட்டி, சாதியேதுவாக வரும் உயர்வு தாழ்வுகளில்லை எனப் பொருள்கூறினும் பொருந்தும். கொற்றவர் என்பது அரசவம்மிசத்தையுடையாரை உணர்த்தாமல் அரசாளுவாரை உணர்த்திநின்றது. இதுபற்றியே வாழ்வுடைக்கொற்றவர் என்றார். வண்மை பெரும்பான்மையுங் கையானிகழ்தல்பற்றி வண்மைகையுற்றவர் என்றார். (சுஅ)

அரிபிறந்ததன்றுதூணிலரனும்வேயிலாயினன்
பரவையுண்டமுனியுமிப்பரத்துவாசன்மைந்தனு
மொருவயின்கண்முன்பிறந்ததொண்சரத்தினல்லவோ
வரியவென்றிமுருகவேளுமடிகளும்பிறந்ததே.

(இ - ள்.) அன்று அரி பிறந்தது தூணில் - முற்காலத்தில் விஷ்ணு பிறந்தது தூணின்கண்—அரனும் வேயில் ஆயினன் - சிவபெருமானும் மூங்கிலிற்றோன்றினார்—பரவை உண்ட முனியும் இப் பரத்துவாசன் மைந்தனும் - சமுத்திரத்தை உண்ட அகத்தியமுனிவனும் இந்தப் பரத்துவாசமுனிவனுடைய புதல்வனாகிய துரோணாசாரியனும்—முன் பிறந்தது ஒரு வயின்கண் - முன்னே அவதரித்தது (கும்பமாகிய) ஓரிடத்தில்—அரிய வென்றி முருகவேளும் அடிகளும் பிறந்தது ஒண் சரத்தின் அல்லவோ - அரிய வெற்றியையுடைய முருகக் கடவுளும் எங்கள் பாட்டனாரும் அவதரித்து அழகிய நீரிலல்லவா. எ-று.

ஏ - அசை. அரனும் என்னும் உம்மை சிறப்போடெச்சம். முனியும், மைந்தனும், முருகவேளும், அடிகளும் என்னும் உம்மைகள் எண்ணோடு சிறப்பு. ஓகாரம் வினா. மேன்மையையுடைய இவர்களும் பிறந்த இடங்களைக் கருதி இழிக்கப்படாதவாறுபோல, இக்கன்னனும் வளர்ந்த இடத்தால் இழிக்கப்படானென்பது கருத்து. (சுகூ)

என்றுநல்லவுரையெடுத்தியம்பியேனையிழிவினோ
டொன்றிநின்றவாடகத்தையோடவைக்குமாறுபோ
லன்றுசூதன்மதலைதன்னையங்கராசனாக்கினான்
மின்றயங்குமுடிகவித்துவேந்தெலாம்வியக்கவே.

(இ - ள்.) என்று நல்ல உரை எடுத்து இயம்பி - என்று நல்ல வசனங்களைத் (துரியோதனன்) எடுத்துச் சொல்லி—ஏனை இழிவினோடு ஒன்றி நின்ற ஆடகத்தை - மற்றையிழிந்த லோகங்களோடு கலந்துநின்றபொன்னை—ஓடவைக்குமாறுபோல் - புடம்வைக்குந் தன்மைபோல—சூதன் மதலைதன்னை - தேர்ப்பாகன் மகனாகிய கன்னனை—வேந்து எலாம் வியக்க அன்று மின் தயங்கு முடி கவித்து - அரசரெல்லாம் புகழ அன்றைக்கே ஒளிவிளங்கும்முடியைச் சூட்டி—அங்கராசன் ஆக்கினான் - அங்கதேச அரசனாகச்செய்தான், எ - று.

ஏ - அசை. இழிவு ஆகுபெயர். கற்றோரும் மற்றோரும் அங்கீகரிக்கத்தக்கவுரையைத் தன் யுத்தியாலாராய்ந்து சொன்னானென்பார் நல்லவுரையெடுத்தியம்பி என்றார். இழிந்த லோகங்களோடு கலந்த பொன்னை அவை கெடப் புடம்வைக்குமாறுபோலத் தேர்ப்பாகன் மகனாகிய கன்னனை அவ்விழிவுதீர முடிசூட்டி அங்கராசனாக்கினானென்க. (எ0)

தானிருந்தவரிமுகஞ்செய்தாள்சுமந்ததவிசின்மே
லூனிருந்தபடையினானையுடனிருத்திவண்டுசூழ்
தேனிருந்தமாலைவாகுசிகரமீதுதெண்டிரைக்
கானிருந்தமண்டலங்கருத்தினாலிருத்தினான்.

(இ - ள்) ஊன் இருந்த படையினானை - தசைபொருந்திய படைக்கலத்தையுடைய கன்னனை—தான் இருந்த அரிமுகம் செய் தாள் சுமந்த தவிசின் மேல் உடன் இருத்தி - (துரியோதனன்) தானிருந்த சிங்கமுகஞ்செய்யப் பட்ட கால்கள் சுமந்த ஆசனத்தின்மேற்றன்னோடொருங்கிருத்தி—வண்டு சூழ் தேன் இருந்த மாலை வாகு சிகர மீது - வண்டுகள் சூழும் தேன்பொருந்திய மாலையையணிந்த (அவனுடைய) புயமலையின்மேல்—தெண் திரைக்கான் இருந்த மண்டலம்-தெளிவுபொருந்திய கடலின்னடுவிலிருந்த பூமியை—கருத்தினால் இருத்தினான் - எண்ணத்தோடு சுமத்தினான். எ-று.

தெண்டிரைக்கான் - கடல். எதிர்ந்த பகைவரை மீளவிடாது கொல்லுமாற்றலுடையனென்பார் ஊனிருந்தபடையினானென்றும், பூமியைத் தாங்கவல்ல புயமென்பார் வண்டுசூழ்தேனிருந்தமாலைவாகுசிகரம் என்றும், இவனைக்கொண்டு பாண்டவரை வெல்லுவித்தல்வேண்டும் என்னும் எண்ணத்தோடுசுமத்தினானென்பார் கருத்தினாலிருத்தினான் என்றுங் கூறினார். (எக)

தவனன்மைந்தனுஞ்சுயோதனனுமிசைந்துதனதனுஞ்
சிவனுமென்னநண்புகொண்டுதிறலுடன்சிறந்துளார்
பவனனும்பர்நாயகன்பயந்தவீரரஞ்சவே
யவனியெங்குநமதெனக்கொள்பெருமிதத்தராயினார்.

(இ - ள்.) தவனன் மைந்தனும் சுயோதனனும் இசைந்து - கன்னனுந் துரியோதனனுங் கலந்து—தனதனும் சிவனும் என்ன நண்பு கொண்டு - குபேரனையுஞ் சிவபெருமானையும்போலச் சிநேகங்கொண்டு—திறலுடன் சிறந்துளார் - வலியிற் சிறந்தோராய்—பவனன் உம்பர்நாயகன் பயந்த வீரர் அஞ்ச - வாயுவும் இந்திரனும் பெற்ற வீமன் அருச்சுனன் என்னும் இருவீரரும் பயப்பட—அவனி எங்கும் நமது எனக்கொள் பெருமிதத்தர் ஆயினர் - பூமிமுழுதும் நம்முடையதென்றதனால் அடைந்த செருக்கையுடையராயினர்கள். எ - று.

எ - அசை. சிறந்துளார் வினையெச்சமுற்று. எனவென்னுஞ் செயவெனெச்சங் காரணப்பொருட்டு. துரியோதனனுங் கன்னனும் முறையே வீமனுக்கும் அருச்சுனனுக்கும் பகைஞராதலால் ஏனைமூவரையுமொழித்துப் பவனனும்பர்நாயகன் பயந்தவீரரஞ்சவென்றார். நண்பிலே எவரினுஞ் சிறந்தோராகிய கோட்பெருஞ்சோழனும் பிசிராந்தையு முதலியோருடைய நண்பையுவமைகூறாது, தனதனையுஞ் சிவனையும் உவமைகூறியது துரியோதனன் செல்வத்திற் சிறந்தானென்பதுங் கன்னன் வலியிற் சிறந்தானென்பதும் போதருதற்கு மென்க. (எஉ)

ஆனகாலையெண்ணுகின்றவாயுதங்கள்யாவையும்
யானைவாசியிரதமானயானமுள்ளயாவையுஞ்
சேனையோடுதெவ்வரைச்செருக்கவல்லவீரமு
மானவீரர்வல்லரென்றுமறைவலாளன்மகிழ்வுறா.

(இ - ள்.) மறைவலாளன் - துரோணாசாரியன்—ஆனகாலை-அப்பொழுது—எண்ணுகின்ற ஆயுதங்கள் யாவையும் - எண்ணப்படுகின்ற படைக்கலத்தொழில்களெவைகளினும்—யானை வாசி இரதம் ஆன யானம் உள்ள யாவையும் - யானை குதிரை தேர் ஆகிய வாகனத்தொழில்களாயுள்ளவைக ளனைத்தினும்—தெவ்வரைச் சேனையோடு செருக்க வல்ல வீரமும் - பகைவரை (அவர்) சேனையோடு கொல்லவல்ல வீரத்தினும்—மான வீரர் வல்லர் என்று மகிழ்வு உறா - மானத்தையுடைய (இந்த) வீரர்கள் வல்லர் என்று மகிழ்ந்து. எ - று.

ஆயுதங்கள், யானம் என்பன ஆகுபெயர்கள். படைக்கலத்தொழிலும் வாகனத்தொழிலும் நன்றாய்க் கைவரினும் வீரமின்றாயின் அவற்றாற் பகைவரைச் சேனையோடு செருக்கவல்ல தன்மை ஒருவற்குளதாகாவென்பார் ஏனையிரண்டையும் வாளாகூறி வீரத்தைச் சேனையோடுதெவ்வரைச் செருக்கவல்ல வீரமென அடைபுணர்த்திக் கூறினர். மானவீரமாவது அழிபுநர்புறக்கொடையயில்வேலோச்சாமை முதலியன. (எங)

வம்மினாதிகுருகுலந்தழைக்கவந்தமைந்தர்கா
டம்மினாளையேயெமக்களிக்கநின்றதக்கிணை
யெம்மினானொருத்தன்வேறியாகசேனனென்றுளா
னும்மினாடியவனையிம்பர்தோதல்செய்துகொணர்மினே.

(இ - ள்.) ஆதி குருகுலம் தழைக்க வந்த மைந்தர்காள் - முதன்மையாகிய குருகுலந் தழைக்க அவதரித்த புதல்வர்களே—வம்மின் - வாருங்கள்—எமக்கு அளிக்க நின்ற தக்கிணை நாளை தம்மின் - எமக்கு நீங்கள் தரும்படியுள்ள தக்கிணையைப் பின்பு தாருங்கள்—வேறு - (இப்போ எனக்குத் தருந் தக்கிணை) வேறொன்று (உண்டு: அது என்னையெனின்)—யாகசேனன் என்று எம் இனான் ஒருத்தன் உளான் - யாகசேனென்று நமது பகைவனொருவனிருக்கின்

ரன்—அவனை நும்மில் நாடி நோதல் செய்து இம்பர் கொணர்மின் - அவனை உங்களுள்ளே தேடித் (தேருடன் பிணித்து) வருத்தி இவ்விடத்திற் கொண்டுவாருங்கள். எ - று.

ஏ இரண்டும் அசைகள். ஆதிகுருகுலம் - வடநூன்முடிபு. இன்றனென்பது இறனெனக் குறைந்து நின்றது. மைந்தர்கள் என்னும் ளகரவீற்று உயர்திணைப் பெயர் அயனீட்சியாகிய விளியுருபேற்று மைந்தர்காளென்றாயிற்று. நாளை என்பது பின் என்னும் பொருட்டாய் நின்றது. தானினைத்த கருமத்தை அக்குமாரரால் விரைவிற் பழுதற முடிப்பித்தற்காக முகங்கோடற்பொருட்டு ஆதிகுருகுலந்தழைக்கவந்த மைந்தர்காளென அடைபுணர்த்தி விளித்தானென்க. யாகசேனனென்று வேறாயொருபகைவனுளன் எனப் பொருள்கோடல் சிறப்பின்று. (எச)

என்றுதஞ்சிலைப்புரோகிதன்கனன்றியம்பவே
யன்றவன்பதம்பணிந்தளித்தசொற்றலைக்கொளா
வென்றிநீடுபடைகளோடும்விரவுமங்கநாலொடுஞ்
சென்றுதங்கணாடகன்றுதெவ்வுநாடுகுறுகினர்.

(இ - ள்.) என்று தம் சிலைப் புரோகிதன் கனன்று இயம்ப - என்று தங்களுடைய வில்லாசிரியனாகிய துரோணன் (யாகசேனன்மீது) கோபங்கொண்டு சொல்ல - அன்று அவன் பதம் பணிந்து - (குருகுலகுமாரர்கள்) அன்றைக்கே அவன் பாதங்களை வணங்கி—அளித்த சொல் தலைக்கொளா - (அவன்) கற்பித்த சொல்லைத் தலைமேற்கொண்டு—வென்றி நீடு படைகளோடும் - வெற்றி மிக்க ஆயுதங்களோடும் - விரவும் அங்கம் நாலொடும் சென்று - நெருங்கிய (யானை முதலிய) நால்வகைச் சேனைகளோடும் போய்—தங்கள் நாடு அகன்று தெவ்வு நாடு குறுகினர் - தங்கள் தேசத்தை நீங்கிப் பகைவனாகிய யாகசேனனது தேசத்தை யடைந்தார்கள். எ - று.

ஏ - அசை. அன்றே சென்றென இயைக்க. தெவ் என்னும் பெயர் தொழிற்பெயர்போல உகரச்சாரியை பெற்று ஆகுபெயராய் நின்றது. போர்க்கு ஆயுதங்களும் நாலங்கமுஞ் சிறந்தமைபற்றி அவை உயர்வின்வழித்தாகிய ஒருவினையொடுச்சொற் புணர்த்திக் கூறப்பட்டன. (எரு)

ஆளிமொய்ம்பரம்முனைக்கணனபோதனீகினித்
தூளிகண்புதைத்தசென்றுசெவிபுதைத்தததுவனிபோ[போல்
யோளிகொண்டசெம்பொன்வெற்பினுடல்புதைத்தவெழிலி
வாளிகொண்டவிருதர்மாமதிற்புறம்புதைக்கவே.

(இ - ள்.) செம்பொன் வெற்பின் உடல் புதைத்த ஒளிகொண்ட எழிலி போல் - மேருமலையின் வடிவைமூடிய நிரையையுடைய முகில்களைப்போல—வாளி கொண்ட விருதர் மா மதிற் புறம் புதைக்க - அம்புகளையுடைய வீரர்கள் (யாகசேனனது நகரத்தின்) பெரிய மதிற்புறத்தைச் சூழ்ந்து மறைக்கும்படி—ஆளி மொய்ம்பர் அம் முனைக்கண் ஆன போது - சிங்கேறுபோலும் வலிமையையுடைய குருகுலகுமாரர்கள் அந்த யுத்தமுனையிற் சென்றபொழுது—அனீகினித் தூளி சென்று கண் புதைத்த - சேனைகளாலுண்டாகிய பூதூளி போய் (யாகசேனனுடைய) கண்ணை மறைத்தன—துவனி போய்ச்செவி புதைத்த - ஒலிசென்று அவன் காதைப் பொத்தின. எ-று.

ஏ - அசை. புதைக்க என்னுஞ் செயவெனெச்சங் காரியப்பொருட்டு. ஒளி என்பதனைச் செம்பொன் வெற்புக்கடையாக்கி ஒளியையுடைய மேரு எனப் பொருள்கொள்ளுதலும் பொருந்தும். இப்பொருட்கு ஒளி நீட்டல்விகாரம். சிகரங்களின் நிரையையுடைய மேருமலை எனினுமமையும். (எசு)

வளைத்தசேனையானைவாசிவாயினின்றுகுமிறவே
யுளைத்தெழுந்துமுழையைவிட்டுடன்றசிங்கவேறுபோற்
றிளைத்ததன்பதாதியோடுமோகயாகசேனனு
மிளைத்தநெஞ்சனன்றிநீடுபுரிசைவாயிலெய்தினான்.

(இ - ள்.) வளைத்த சேனை யானை வாசி வாயில் நின்று குமிற-(மதிலை) வளைத்த காலாள் யானை குதிரை ஆகிய இவைகள் வாயிலில் நின்று முழங்க—முழையைவிட்டு உளைத்து எழுந்து உடன்ற சிங்க ஏறுபோல் - (தானிருக்கும்) முழைஞ்சைவிட்டுக் கெர்ச்சித்தெழுந்து கோபித்த சிங்கேறுபோல—மோக யாகசேனனும் - (போரில்) ஆசையை யுடையனாகிய யாகசேனனென்பவனும்—இளைத்த நெஞ்சன் அன்றி - இளைத்த மனத்தினனல்லனாய்—திளைத்ததன் பதாதியோடு நீடு புரிசை வாயில் எய்தினான் - நெருங்கிய தன் சேனைகளோடு உயர்ந்த மதில் வாயிலை அடைந்தான். எ - று.

ஏ - அசை. ஈண்டுச் சேனை பதாதி என்பன முறையே காலாட்களையும் நால்வகைச்சேனைகளையு முணர்த்தி நின்றன. நின்றுகுமிறல் தேர்க்கியையாமையின் அதனையொழித்துச் சேனையானைவாசிவாயில் நின்றுகுமிற என்றும், நகரினின்று பெருங்கோபத்தோ டெழுந்து வந்தமைபற்றி உளைத்தெழுந்துமுழையைவிட்டுடன்ற சிங்கவேறுபோல் என்றுங் கூறினார். மோகயாகசேனன் என்பதற்கு, முன்னே தான் துரோணாசாரியனுக்குக் கொடுத்தற்குடன்பட்ட பூமியைக்கொடாதவன் என்பதுபோதரப் பூமியில் ஆசையையுடைய யாகசேனன் எனப் பொருள் கூறுதலும் பொருந்தும். (எஎ)

சோமகர்க்குமுடுகுசேனைசூழவந்தகுருகுலக்
கோமகர்க்கும்வெஞ்சமர்விளைந்ததாண்மைகூரவே
பூமகற்குமிக்கமாமுனிக்குவாய்மைபொய்த்தவம்
மாமகற்கும்விசயனுக்குமன்னுபோர்வயங்கவே.

(இ - ள்.) பூ மகற்கும் மிக்க மா முனிக்கு வாய்மை பொய்த்த அம் மாமகற்கும் - பிரமனுக்கும் மேற்பட்ட பெருமையையுடைய துரோணாசாரியனுக்குச் சொல்லிய வாக்குப் பொய்த்த அந்தப் பெருமையையுடைய யாகசேனன் என்னும் அரசனுக்கும்—விசயனுக்கும் - அருச்சுனனுக்கும்—மன்னு போர் வயங்க - நிலையான போருண்டாக—சோமகர்க்கும் - பாஞ்சாலருக்கும்—முடுகுசேனை சூழ வந்த குருகுலக் கோமகர்க்கும் - நெருங்கிய சேனைகள் சூழ வந்த குருகுலகுமாரர்களுக்கும்—ஆண்மை கூர வெம் சமர் விளைந்தது - வலிமைமிகக் கொடிய யுத்தமுண்டாயது. எ - று.

ஏ இரண்டும் அசைகள். பூமகற்குமிக்கமாமுனி என்புழி நான்கனுருபு சிறப்புப்பொருளில் வந்தது. வாய்மைபொய்த்தவம்மாமகன் என்றது புகழ்வதுபோலப் பழித்தது. வயங்கல் ஈண்டு உண்டாதலென்னும்பொருட்டு. சரசுவதியை நாவிலுடைமையிற் பேரறிஞனாய் விளங்கும் பிரமனுக்கு மேற்பட்ட அறிஞன் என்பார் பூமகற்குமிக்கமாமுனி என்றார். (எஅ)

தூறுகொண்டுகணைபொழிந்துசோமகேசர்பொருதலா
னூறுகொண்டகுமரர்தங்கணகரிமீளநோக்கினார்
மாறுகொண்டுவிசயன்வீசுவண்ணவாளிவலையினால்
வீறுகொண்டெதிர்ந்தமன்விலங்கரீடுபட்டதே.

(இ - ள்.) சோமகேசர் தூறு கொண்டு கணை பொழிந்து பொருதலால் - பாஞ்சாலதேசத்தரசர்கள் மழையைப்போலப் பாணங்களைப் பொழிந்து யுத்தஞ் செய்தலால்—நூறு கொண்ட குமரர் - நூறென்னும் எண்ணைக்கொண்ட துரியோதனன் முதலிய குமாரர்கள்—தங்கள் நகரி மீள நோக்கினார் - தங்கள் நகர்க்குத் திரும்பிப் போயினார்கள்—வீறு கொண்டு எதிர்ந்த மன் விலங்கர் - பெருமையைக்கொண்டு வந்தெதிர்த்த யாகசேனனாகிய சிங்கேறு—மாறு கொண்டு விசயன் வீசும் வண்ண வாளி வலையினால் - மாறுபட்டு அருச்சுனன் வீசும் பலதிறப்பட்ட அம்பாகிய வலையினால்—ஈடு பட்டது - பெருமையழிந்தது. எ - று.

ஏ - அசை. அகப்பட்டதென்பது கருத்து. மன்விலங்கர் என்றதனாற் சிங்கேறென்பது பெற்றாம். விலங்கர் என்றது சுரும்பர் என்பதுபோல இறுதிப்போலியாய் நின்றது. கொண்டு - உவமவாசகம். மீளநோக்கல் ஒருசொல். முழையைவிட்டெடன்ற சிங்கவேறுபோ லென்றதற்கியைய ஈண்டும் மன்விலங்க ரென்றார்.

தகப்படுஞ்சராசனத்தனஞ்சயன்கைவாள்வெரீஇ
யகப்படுந்தராதிபன்றனற்றவில்லினாணினான்
மிகப்படுந்தடங்கொடேர்மிசைப்பிணித்துவிசையுட
னகப்படுஞ்செயற்கைசெய்துகுருவின்முன்னர்நணுகினான்.

(இ-ள்.) தகப்படும் சராசனத் தனஞ்சயன் - பெருமைபொருந்திய வில்லையுடைய அருச்சுனனானவன்—கை வாள்வெரீஇ அகப்படும் தராதிபன்றன் அற்ற வில்லின் நாணினால் - தன் கையிலுள்ள அம்புகளுக்கு அஞ்சி அகப்பட்ட யாகசேனனது வெட்டுண்ட வின்னாணியினால்—மிகப்படும் தடங்கொள் தேர்மிசைப் பிணித்து - அவனை உயர்ந்த விசாலித்த தேரின்மேலே கட்டி—நகப்படும் செயற்கை செய்து - (எவராலுஞ்) சிரிக்கப்படுஞ் செய்கையைச் செய்து—விசையுடன் குருவின் முன்னர் நணுகினான் - வேகத்தோடு குருவின் முன் வந்தான். எ - று.

பிணித்தென்னுஞ் செய்தெனெச்சம் ஏதுப்பொருட்டு. வாள் படைப்பொதுவாதலால் ஈண்டு அம்பையுணர்த்திற்று. தகவுபடும் என்பது தகப்படுமென்றாயிற்று. மிகப்படல் ஒருசொல். ஆசாரியனை உவப்பித்தல்வேண்டும், என்னும் அவாவின்வயத்தனாய் வந்தானென்பார் விசையுடன் நணுகினான் என்றும், வன்மை சிறிதுமில்லாத மென்மையரும் மாற்றார்க்குப் புறந்தரலன்றி அவராற் கட்டுண்டால், வல்லார் அல்லாராகிய இருபாலார்க்கும் நகைவிளைக்குமென்பார் பொதுப்பட நகப்படுஞ் செயற்கைசெய்து என்றுங் கூறினார். (அ௦)

முறுவல்கொண்டுகண்டசாபமுனியுநாணவெம்மைநீ
யுறுவதொன்றுமுணர்கலாதுரைத்தபுன்சொலறிதியே
மறுவிலந்தணாளன்யானுமன்னனீயும்வாசவன்
சிறுவன்வென்றுனைப்பிணித்தசிறுமையென்னபெருமையோ.

(இ - ள்.) நாண - (அப்பொழுது யாகசேனன்) வெட்கமடைய — கண்டசாப முனியும் முறுவல் கொண்டு - அதனைக்கண்ட வில்லையுடைய துரோணசாரியனும் சிரித்து—உறுவது ஒன்றும் உணர்கலாது நீ எம்மை உரைத்த புன்சொல் அறிதியே - (பின்) சம்பவிப்பதொன்றையும் அறியாமல் நீ (முன்னே) நம்மைப் பேசிய எளிய சொற்களையறிவாயே—யானும் மறு இல் அந்தணாளன் - நானும் குற்றமில்லாத பிராமணன்—நீயும் மன்னன் - நீயும் க்ஷத்திரியன்—வாசவன் சிறுவன் வென்று உனைப் பிணித்த சிறுமை - இந்திரனுடைய புதல்வனாகிய அருச்சுனன் வென்று உன்னைக் கட்டின எளிமையானது—என்ன பெருமையோ - உனக்கு என்ன பெருமையோ! எ - று.

முனியும் என்னும் உம்மை எச்சத்தோடுயர்வுசிறப்பு. யானும் என்னும் உம்மை இழிவுசிறப்பு. நீயும் என்னும் உம்மை உயர்வுசிறப்பு. ஏகாரம் வினா. ஓகாரம் எதிர்மறை. சிறுவன் என்றது ஈண்டுப் பருவத்தையும் உணர்த்தி நின்றது. துரோணன் தான்கூறிய சபதத்தைத் தவறாது முடித்தமையின் மகிழ்ந்தான் என்பார் முறுவல்கொண்டு என்றும், இத்துரோணன் தன்மனைவியோடும் மகனோடும் வந்து யாசித்தபொழுதே வாக்குத்தத்தம்பண்ணியபடி பூமியைக் கொடாது இவன் மாணாக்கனாகிய இச்சிறுவனாற் கட்டுண்டு பூமியையும் இழந்து என் பகைவனாகிய இவன்முன் இங்ஙனம் வரப்பெற்றேனே எனத் தன் பேதைமையையும் வலியின்மையையும் நினைத்து வெள்கினனென்பார் நாணி என்றுங் கூறினார். நான் உனக்குச் செய்வித்த இது நீதியின்வழிப்பட்டதே என்பான் துரோணன் தன்னை மறுவிலந்தணாளன் என்றும், யான் எளிய அந்தணனாயிருந்தும் உயர்ந்த அரசனாகிய உன்னை இத்துணை அவமானஞ் செய்வித்தேனே என்பான் அந்தணாளன்யானு மன்னனீயும் என்றுங் கூறினான். (அக)

அன்றெனக்குநீயிசைந்தவவனிபாதியமையுமற்
றின்றுனக்குநின்றபாதியான்வரைந்துதருகுவன்
குன்றெனக்குவிந்திலங்குகொற்றவாகுவீரனே
யுன்றனக்குவேண்டுமென்னவுயிரும்வாழ்வுமுதவினான்.

(இ - ள்) குன்று எனக் குவிந்து இலங்கு கொற்ற வாகு வீரனே - மலைபோலத் திரண்டு விளங்குகின்ற வெற்றிபொருந்திய புயங்களையுடைய வீரனே நீ அன்று எனக்கு இசைந்த பாதி அவனி அமையும் - நீ முற்காலத்தில் எனக்குத் தருவேன் என்று உடன்பட்ட பாதித்தேசம் எனக்குப் போதும்—இன்று உனக்கு மற்று நின்ற பாதி யான் வரைந்து தருகுவன் - இன்றைக்கு உனக்கு எஞ்சிநின்ற பாதித்தேசத்தை யான் பிரித்துத் தருவேன்—உயிரும் வாழ்வும் உன்றனக்குவேண்டும் என்ன - (அதுவன்றி உன்) உயிரும் வாழ்வும் உனக்கு வேண்டும் என்று சொல்லி—உதவினான் - (அம்மூன்றையும் அவனுக்குக்) கொடுத்தான். எ - று.

சாபமுனியும் என்ன உதவினான் என முடிக்க. மற்று என்பது பிறிதென்னும் பொருட்டு. அசைச்சொல்லாக்கினும் பொருந்தும், சிறுவனாலுங் கட்டுண்ட புயங்களையுடைய வலியில்லாதானே என இழித்துக்கூறுவானாய்க் குன்றெனக்குவிந்திலங்குகொற்றவாகு வீரனே என விளித்தான், பழைய நண்புகருதி அவன்மீது கண்ணோடி வருத்தந்தீர இங்ஙனம் விளித்தானெனினும் அமையும். (அஉ)

வேறு.

புயங்கம்பருகியுமிழ்மதியம்போல்வான்மீண்டும்பூசுரன்றன்
வயங்குஞ்சுருதிவாய்மையினன்மன்னுங்குருக்கள்பதிநீங்கித்
தயங்குஞ்சிலைக்கைவாள்விசயன்சயமும்பிறர்முன்றனகப்பட்
டுயங்குஞ்செயலுநினைந்துநினைந்துள்ளஞ்சுடப்போயூர்சேர்ந்தான்.

(இ-ள்.) புயங்கம் பருகி உமிழ் மதியம் போல்வான் - இராகு என்னும் பாம்பு விழுங்கியுமிழ்ந்த சந்திரனையொத்த யாகசேனன்—மீண்டும் - திரும்பவும்—பூசுரன்றன் வயங்கும் சுருதி வாய்மையினால் - துரோணாசாரியனுடைய விளங்குகின்ற வேதம்போலுந் (தவறாத) வாக்கினால்—மன்னும் குருக்கள் பதி நீங்கி - நிலைபெற்ற குருநிலத்தை நீங்கி—தயங்கும் சிலைக்கை வாள் விசயன் சயமும் - பிரகாசிக்கின்ற வில்லைக் கையிலேந்திய கொலைத்தொழிலையுடைய அருச்சுனனது வெற்றியையும்—பிறர் முன் தான் அகப்பட்டு உயங்கும் செயலும் நினைந்து நினைந்து - பிறருக்குமுன்னே தான் (அவனிடத்தில்) அகப்பட்டு வருந்துஞ் செயலையும் நினைத்து நினைத்து—உள்ளம் சுடப் போய் ஊர் சேர்ந்தான் - (அந்நினைவு தன்) நெஞ்சைச் சுடப் போய் ஊரையடைந்தான். எ - று.

நினைந்து நினைந்து என அவலம்பற்றி அடுக்கிக் காரணப்பொருளில் வந்த செய்தென்வாய்பாட்டுவினையெச்சத்தில் முதனிலை பிரிந்து நினைவென எழுவாயாய் நின்றது. மீண்டும் என்னும் உம்மை எச்சத்தோடிழிவுசிறப்பு. வாள் - கொலை. விசயனாற் கட்டுண்டு பின்னது நீக்கிச் சென்றமைபற்றிப் புயங்கம் பருகியுமிழ்மதியம்போல்வானென்றார். (அ௩)

மறுகிற்பணிலந்தவழ்பழனவளநாடுடையானெதிர்வணங்கி
முறுகிப்புரிவெங்கலைக்கோட்டுமுனியேபோலுமுனிவரரைத்
தறுகட்குருவின்றலைதுணிக்கத்தகவோர்மகவுந்தனஞ்சயன்றோ
ளுறுகைக்கொருபூங்கன்னியையும்பெறுவான்வேண்டியுற்றிரந்தான்.

(இ - ள்.) மறுகில் பணிலம் தவழ் பழன வளநாடு உடையான் - வீதிகளிற் சங்குகள் தவழ்கின்ற வயல்சூழ்ந்த வளஞ்செறிந்த நாட்டையுடைய யாகசேனன்-முறுகிப் புரி வெம் கலைக்கோட்டு முனியே போலும் முனிவரரை எதிர்வணங்கி-மிகமுறுகிய வேகம்பொருந்திய கலைக்கோட்டு முனிவனையே யொத்த முனிவர்களையெதிரே வணங்கி—தறுகண் குருவின் தலை துணிக்கத்தக ஓர் மகவும் - வன்கண்மையினையுடைய துரோணாசாரியனது தலையை வெட்டத்தக்க ஒரு புதல்வனையும்—தனஞ்சயன் தோள் உறுகைக்கு ஒரு பூம் கன்னியையும் - அருச்சுனனுடைய புயங்களை அணைதற்கு ஒரு அழகிய பெண்ணையும்—பெறுவான் வேண்டி உற்று இரந்தான் - பெற விரும்பி மிகவும் இரந்தான். எ-று.

ஏகாரம் பிரிநிலை. உறுகைக்கு என்னும் நான்கனுருபு தகுதிப்பொருட்கண் வந்தது. தக்க என்னும் பெயரெச்சம் தக என விகாரப்பட்டு நின்றது. புரி என்பது வினைத்தொகை. பெறுவான் என்பதை வினையெச்சமாக்காது தொழிற்பெயராக்கி, பெறுதலைவிரும்பி எனப் பொருள்கூறினும் பொருந்தும். வான் - தொழிற்பெயர்விகுதி. ஒருபொருண்மேல்வந்த முறுகிப்புரி என்னும் அடை கோட்டையும், வெம் என்னும் அடை கலையையும் விசேடித்தன. நீர்வளத்தான் மிகச் செழிப்புற்ற நாடென்பார் மறுகிற்பணிலந்தவழ்பழனவளநாடென்றும், சிறந்த

பிள்ளைகளைத் தவருது தோற்றுவிக்கும் யாகத்திற் கைவந்த முனிவர் என்பார் கலைக்கோட்டு முனியேபோலும் முனிவரர் என்றுங் கூறினர். முனிவரர் என்றது உபயாசன் யாசன் என்னும் இருவரையுமென்க. (அச)

ஆறுமுகனைப்பயந்தநதியலையாற்குளிர்வதொருகானி
லீறிறவத்தோருபயாசன்யாசனெனும்பேரிருவோருங்
கூறுமுறையிற்சடங்கியற்றிக்கோவின்வழக்கப்பெருவேள்வி
நூறுமகத்தோனிகரரசைநோன்மைக்கிசையப்புரிவித்தார்.

(இ - ள்.) ஈறு இல் தவத்தோர் உபயாசன் யாசன் எனும் பேர் இருவோரும்- அழிவில்லாத தவத்தராகிய உபயாசன் யாசன் என்னும் பெயரையுடைய இரண்டு முனிவர்களும்—ஆறுமுகனைப் பயந்த நதி அலையால் குளிர்வது ஒருகானில் - சுப்பிரமணியக்கடவுளைப் பெற்ற கங்கைநதியினலையினற் குளிருகினற ஒரு காட்டில்—கூறும் முறையின் சடங்கு இயற்றி - (வேதத்தில்) விதிக்கப்பட்ட முறைமையினல் சடங்குகளைச் செய்து—கோவின் வழக்கப் பெருவேள்வி - அரசருக்குரிய வழக்கமாகிய பெரிய புத்திரகாமேஷ்டியை—நூறு மகத்தோன் நிகர் அரசை- இந்திரனையொத்த யாகசேனன் என்னும் அரசனைக்கொண்டு—நோன்மைக்கு இசையப் புரிவித்தார் - அவனுடைய பெருமைக்குத் தக்கபடி செய்வித்தார்கள் எ - று.

குளிர்வது, தவத்தோர் என்பன வினைமுற்றுப்பெயரெச்சம். முறையில் என்னும் இல்லுருபு ஏதுப்பொருளில் வந்தது. புத்திரகாமேஷ்டி பெரும்பான்மையும் அரசர்க்குரித்தாதல்பற்றி அதனைக் கோவின்வழக்கப்பெருவேள்வியென்றும், மிகச் சிறப்பாகச் செய்வித்தாரென்பார் நூறுமகத்தோனிகரரசை நோன்மைக்கிசையப் புரிவித்தார் என்றுங் கூறினர். (அரு)

புரிந்தமகப்பேற்றழல்வேள்விப்பொன்ருேமப்பொருண்மிச்சில்
பரிந்துவிபுதரமுதேய்ப்பப்பைம்பொற்கலத்தினிறைத்தாங்குத்
தெரிந்தமணிப்பூணவன்றேவிக்களிக்கத்தீண்டாளாகியபின்
சொரிந்துகனலினுபயாசனிமைப்பிற்சுதனைத்தோற்றுவித்தான்.

(இ - ள்.) புரிந்த அழல் மகப் பேற்று வேள்விப் பொன்ருேமப்பொருள் மிச்சில் - செய்யப்பட்ட அக்கினியையுடைய புத்திரகாமேஷ்டியில் ஆகுதிசெய்த குறைவில்லாத ஓமப்பொருட் சேடத்தை—பரிந்து - அன்புசெய்து—விபுதர் அமுது ஏய்ப்பப் பைம் பொற் கலத்தில் நிறைத்து - தேவருடைய அமுதையொக்கப் பசுமையாகிய பொற்பாத்திரத்தில் நிறைத்து—ஆங்கு - அப்பொழுது—தெரிந்த மணிப் பூண் அவன் தேவிக்கு அளிக்க-ஆராயப்பட்ட இரத்தினுபரணங்களையணிந்த அந்த யாகசேனனுடைய மனைவிக்குக் கொடுக்க—தீண்டாள் ஆகிய பின் - (அப்பொழுது அவள்) பூப்படைந்தாளாக—உபயாசன் கனலில் சொரிந்து - (அதனல்) உபயாசனென்னும் முனிவன் (அந்த ஓமசேடத்தை) அக்கினியில் ஆகுதி செய்து—இமைப்பில் சுதனைத் தொற்றுவித்தான் - ஒருமாத்திரைப்பொழுதிற் புத்திரனைப் பிறப்பித்தான். எ - று.

புரிந்தவேள்வியென வியையும். பொன்ருே என்னும் ஈறுதொக்க பெயரெச்சம் பொருள் என்னும் பெயர்கொண்டது. தீண்டாள் வினையாலணையும் பெயர். ஆகியபின் என்பது பின்னீற்றுவினையெச்சம். குற்றங்கணீக்கிக் குண

முடையனவாக ஆராயப்பட்ட மணியென்பார் தெரிந்தமணியென்றார். ஓமசேடத்தைக் கொடுக்குஞ் சமயத்தில், அவள் பூப்படைந்தமையால் அதனைவாங்கியுண்ணுதற்குத் தகாதவ ளாயினளென்க. (அசுா)

வலயம்பிறழமுடி தயங்கமணிக்குண்டலம்பேரழகெறிப்பச்
சிலையுங்கையுமெய்யும்வயந்திகழ்போர்வயிரக்கவசமுமாய்க்
கொலைவெஞ்சிங்கக்குருளைபொலங்குன்றின்புறத்துக்குதிப்பதுபோற்
றலைவன்களிக்கத்தடந்தேர்மேற்றனயனொருவன்றலைப்பட்டான்.

(இ - ள்.) தனயன் ஒருவன் - (அப்பொழுது) புதல்வனொருவன்—வலயம் பிறழ - (புயங்களில்) வாகுவலயம் விளங்க—முடி தயங்க - (தலையிற்) கிரீடம் பிரகாசிக்க—மணிக் குண்டலம் பேர் அழகு எறிப்ப - (காதுகளில்) இரத்தினம் அழுத்திய குண்டலங்கள் பேரழகைச் செய்ய—கையும் சிலையும் - கையும் வில்லும்—மெய்யும் வயம் திகழ் போர் வயிரக் கவசமும் ஆய் - சரீரமும் வீரம் விளங்கும் போர்க்குரிய வச்சிரகவசமும் பொருந்தி—பொலங் குன்றின் புறத்துக் குதிப்பது கொலை வெம் சிங்கக் குருளை போல் - பொன்மலைமீது குதிக்குங் கொலைத்தொழிலையுடைய கொடிய சிங்கக்குட்டிபோல—தடம் தேர்மேல் தலைவன் களிக்கத் தலைப்பட்டான் - விசாலமாகிய தேரின்மீது யாகசேனன் களிப்படைய வெளிப்பட்டான். எ - று.

குதிப்பது பெயரெச்சமுற்று. இங்கே பொலங்குன்று போன்றிருந்தது இவனோடு தோன்றிய தேரென்க. பிறழ, தயங்க, எறிப்ப, ஆய்த் தலைப்பட்டானென்றியையும். கையிற்சிலையும் மெய்யிற் கவசமுமுடையனையென்பார் சிலையுங்கையும் மெய்யுங்கவசமுமா யென்றார். குதிப்பதென்பதைத் தொழிற் பெயராக்கிப் பொருள்கோடல் பொருத்தமின்று. (அள)

தேரோடருக்கனருணமணிச்சிமையத்துதிப்பச்செவ்வியுட
னீரோடையிற்செந்தாமரைகணிறம்பெற்றலர்ந்துநின்றனபோல்
வீரோதயன்வந்துதிப்பளவின்மேன்மேன்மகிழ்ந்துமெய்களித்துப்
பாரோர்கண்கள்களித்தனவாற்பார்க்குந்தோறும்பரிவுற்றே.

(இ - ள்.) அருக்கன் தேரோடு அருண மணிச் சிமையத்து உதிப்ப - சூரியன் தேருடனே சிவந்த அழகிய உதயகிரியில் உதிக்க—செந்தாமரை நீர் ஓடையில் செவ்வியுடன் நிறம் பெற்று அலர்ந்து நின்றனபோல் - செந்தாமரைமலர்கள்நீரையுடைய ஓடைகளில் அழகுடன் நிறத்தைப்பெற்று அலர்ந்து நின்றனபோல—வீரோதயன் வந்து உதிப்பளவில் - வீரம் உதித்தற்கிடமாயுள்ள புதல்வன் (தேரோடு) வந்து அவதரித்தலைச் செய்யுமளவில்—பாரோர் பார்க்குந்தோறும் பரிவு உற்று - பூமியிலுள்ளோர் (அப்புதல்வனைப்) பார்க்குந்தோறும் (அவர்களுக்கு)அன்புமிக்கு—மேன்மேல் மகிழ்ந்து மெய் களித்துக் கண்கள் களித்தன - மிகமகிழ்ந்து உடம்பு தழைத்துக் கண்கள் களித்தன. எ - று.

ஆல், ஏ அசைகள். வீரோதயன் வடநூன் முடிபு. உதிப்பு - தொழிற்பெயர். மேன்மேலென்பது மிகுதிபற்றிய அடுக்கு. தோறும் என்பது காலப்பன்மைபற்றிவந்தது. புதல்வனவதரித்தபொழுதில் இங்ஙனம் அனைவருங் களிப்புற்றா ரென்க. (அஅ)

சங்கச்சங்கமிகமுழங்கச்சாந்தும்புழுகுமெறிந்தார்த்துப்
துங்கக்கொடியுந்தோரணமுந்தொடையும்பரப்பிச்சோமகனு
டங்கட்சயந்தனவதரித்தவமராவதிபோலார்வமெழத்
திங்கட்குழவியுற்பவித்ததிசைபோன்றனவெண்டிசையெல்லாம்.

(இ - ள்.) சோமகன் நாடு - யாகசேனனுடைய தேசத்திலுள்ளார்—சங்கச் சங்கம் மிக முழங்க - கூட்டமாகிய சங்குகள் மிக ஒலிக்க—சாந்தும் புழுகும் எறிந்து ஆர்த்து - சந்தனக்குழம்பையும் புழுகையும் வீசி ஆரவாரித்து—துங்கக்கொடியும் தோரணமும் தொடையும் பரப்பி - பெருமையினையுடைய கொடிகளையும் தோரணங்களையும் மாலைகளையும் பரம்பச்செய்து—சயந்தன் அவதரித்த அங்கண் அமராவதி போல் ஆர்வம் எழ - சயந்தன் பிறந்த அழகிய இடத்தையுடைய சுவர்க்கலோகத்தி லுள்ளாரைப்போல அன்பு மிக—எண் திசை எல்லாம்திங்கள்குழவி உற்பவித்த திசைபோன்றன - எட்டுத்திசைகளும் இளம்பிறை உதித்த திக்குப் போலத் (தாமாக) விளங்கின. எ-று.

நாடு, அமராவதி என்பன ஆகுபெயர்கள். திக்குகள் மலினமின்றித் தாமாக விளங்குதலும் மங்கலமென்க. (அகூ)

பின்னுங்கடவுளுபயாசன்பெருந்தீப்புறத்துச்சுருவையினன்
மன்னுங்கடலாரமுதென்னவழங்குசுருதியவிநலத்தான்
மின்னுங்கொடியுநிகர்மருங்குல்வேய்த்தோண்முல்லைவெண்முறுவற்
பொன்னும்பிறந்தாள்கோகனதப்பூமீதெழுந்தபொன்போல்வாள்.

(இ - ள்.) பின்னும் கடவுள் உபயாசன்-அதன்பின்னும் தெய்வத்தன்மையையுடைய உபயாசமுனிவன்—பெரும் தீப்புறத்து - பெரிய யாகாக்கினியில்—கடல் மன்னும் ஆர் அமுது என்னச் சுருவையினால் வழங்கு சுருதி அவிநலத்தால் - பாற்கடலிற் பொருந்திய பெறுதற்கரிய அமுதம்போல நெய்த்துடுப்பினால் ஆகுதி செய்த வேதத்தில் விதிக்கப்பட்ட அவிப்பாகத்தின் நலத்தினால்—மின்னும்கொடியைநிகர் மருங்குல் - மின்னலையுங் கொடியையுமொத்த இடையையும்—வேய்த்தோள் - மூங்கில்போலுந் தோள்களையும்—முல்லை வெண் முறுவல் - முல்லையரும்புபோலும் வெண்மையாகிய பற்களையுமுடைய—பொன்னும் - ஒரு பெண்ணும்—கோகனதப் பூமீது எழுந்த பொன்போல்வாள் பிறந்தாள் - செந்தாமரை மலரிலெழுந்த இலக்குமியை யொப்பாளாய்த் தோன்றினாள். எ-று.

பின்னும் என்னும் உம்மை எச்சம். பொன்னும் என்னும் உம்மை எச்சத்தோடு சிறப்பு. புறம் ஏழாம்வேற்றுமையுருபு. போல்வாள் வினையெச்சமுற்று. மின்னுங்கொடியுநிகர் மருங்குல் என்பது பலபொருளுவமை. சுருதியோடு வழங்கும் அவியெனினும் பொருந்தும். (கூ0)

மண்மேலொருத்தியரக்கர்குலமாளப்பிறந்தாள்வாமனுதற்
கண்மேலின்றுமிவள்பிறந்தாள்கழற்காவலர்தங்குலமுடிப்பா
னெண்மேலென்கொலினியென்றுங்கெவருங்கேட்பவொருவார்த்தை
விண்மேலெழுந்ததவன்புரிந்தவேள்விக்களத்தினிடையம்மா.

(இ - ள்.) மண்மேல் ஒருத்தி அரக்கர் குலம் மாளப் பிறந்தாள் - (முன்னே பூமியினின்றும் (சீதையென்னும்) ஒருபெண் இராக்கதர்குலம் அழியும்

டி தோன்றினாள்—இன்றும் - இன்றைக்கும்—இவள் கழல் காவலர்தம் குலம் மடிப்பான் வாமன் நுதற்கண்மேல் பிறந்தாள் - இவள் வீரக்கழலையணிந்த அரச களுடைய குலத்தை அழிக்கும்படி சிவபெருமானுடைய நெற்றிக்கண்ணாகிய அக்கினியின்மேனின்றும் பிறந்தாள்—இனிமேல் எண் என்கொல் என்று ஒரு வார்த்தை - இனிமேல் ஆலோசனை எவ்வினை என்று ஒரு அசரீரிவாக்கு—அவன் வேள்வி புரிந்த களத்தினிடை எவரும் கேட்ப - அந்த யாக சேனன் வேள்விசெய்த சாலையிலுள்ள எவருங் கேட்க—ஆங்கு விண்மேல் எழுந்தது - அப்பொழுதில் ஆகாயத்திலுண்டாயது. எ-று.

அம்மா வியப்பின்கட்குறிப்பு. கொல்-அசை.இன்றும் என்னும் உம்மை எச்சம். மண்மேல் கண்மேல் என்புழி மேனின்றென்பது மேல் எனக் குறைந்துநின்றது.. மேனின்றென்பதனை நீக்கப்பொருடரும் ஐந்தாம்வேற்றுமைச் சொல்லுருபென்பர் பிரயோக விவேகநூலார். வாமனுதற்கண் என்பது அக்கினியையுணர்த்திற்று. மாரகாகளம் என்பது குயிலையுணர்த்துமாறுபோல. (கூக)

முற்றோன்றிய தன்குலமுதலான்முரட்போர்முனிக்குமுடிவுமவன்
பிற்றோன்றியவக்கன்னிகையால்விசயன்றனக்குப்பெருநலமு
முற்றோர்ந்துள்ளமிகத்தருக்கியுவந்தாங்கமைந்தானுயர்மகத்தாற்
பெற்றோன்பெற்றபேறுமகப்பெற்றார்தம்மிற்பெற்றார்யார்.

(இ - ள்.) உயர் மகத்தாற் பெற்றோன் - உயர்ந்த யாகஞ்செய்தலாற் (பிள்ளைகளைப்) பெற்ற யாகசேனன்—முன் தோன்றிய தன் குலமுதலால் முரண்போர் முனிக்கு முடிவும் - முன்பு பிறந்த தன் புத்திரனால் வலிய போரையுடைய துரோணாசாரியனுக்கு அழிவுண்டாதலையும்—அவன்பின் தோன்றிய அக்கன்னிகையால் விசயன் தனக்குப் பெருநலமும் - அவனுக்குப் பின்பு பிறந்த அப்பெண்ணால் அருச்சுனனுக்குப் பெருமையாகிய இன்பமுண்டாதலையும்—உற்று ஓர்ந்து உள்ளம் மிகத் தருக்கி உவந்து அமைந்தான் - சிந்தித்து ஆராய்ந்து மனம் மிகக்களித்து மகிழ்ந்து நிறைந்தான்—பெற்ற பேறு-(அவன் பிள்ளைகளாற்) பெற்ற பேற்றை—மகப் பெற்றார் தம்மிற் பெற்றார் யார் - பிள்ளைகளைப் பெற்றவர்களுள்ளே அடைந்தவரெவர். எ-று.

ஆங்கு - அசை. தான் நினைத்தபடி புத்திரனும் புத்திரியும் யாகாக்கினியிற் றோன்றுதலாகிய அது கைகூடவே, அருச்சுனனுக்காக்கமுந் துரோணனுக்கழிவுமாகிய வினையவுந் தன்கருத்தின்படி முடிதலொருதலையெனச் சிந்தித்து மகிழ்ந்தானென்பார் உற்றோர்ந்துள்ளமிகத்தருக்கி யுவந்தாங்கமைந்தான் என்றார். (கூஉ)

கரணமறுவற்றிலங்குதிறற்கலைசொல்பவன்பாற்கனல்பயந்தோன்
சரணமலர்தன்றலைக்கொண்டுதனுநூலெனக்குத்தருகென்றான்
மரணமிவனாற்றனக்கென்பதுணர்ந்துங்குருவுமாறுதளித்தா
னரணியிடத்திற்செறிந்தன்றோவதனைச்செகுப்பதழலம்மா.

(இ - ள்.) கனல் பயந்தோன் - அக்கினிபெற்ற திட்டத்துய்மன்—கரணமறு அற்று இலங்கு திறல் கலை சொல்பவன்பால்-அந்தக்கரணசுத்தியுடையனாய் விளங்குகின்ற வலிமையினையுடைய தனுர்வேதத்தைக் கற்பிக்குந் துரோணாசாரியனிடத்திற் (சென்று)—சரணமலர் தன் தலைக்கொண்டு - அவருடைய பாததாமரைகளைத் தன்றலைமேற்கொண்டு வணங்கி—தனுநூல் எனக்குத் தருக என்றான் -

தனுர்வேதத்தை எனக்குக் கற்பித்தருளுக என்று வேண்ட—குருவும்-துரோணசாரியனும்—இவனால் தனக்கு மரணம் என்பது உணர்ந்தும் மறுது அளித்தான்-இவனாற்றனக்கு மரணம் நிகழும் என்பதனை அறிந்தும் மறுமற் கற்பித்தான்—அழல் அரணியிடத்தில் செறிந்து அன்றோ அதனைச்செகுப்பது - அக்கினியானது கடைகோலிற் பிறந்தன்றோ அதனைக்கெடுப்பது. எ - று.

அம்மா - வியப்பின்கட்குறிப்பு. சென்றெென ஒருசொல் வருவிக்கப்கட்டது. தருக என்னும் வியங்கோளீறு தொக்கது. உணர்ந்தும் குருவும் என்னும் உம்மைகள் சிறப்பு. இது வேற்றுப்பொருள்வைப்பென்னு மலங்காரம். அந்தக்கரண சுத்தியுடையனாதலின், வினைப்போகத்தை மறுத்தல் கூடாதென்பதனை உள்ளபடியறிந்து, தனக்குக் கேட்டைச்செய்யுமிவற்குந் தனுர்வேதத்தைக் கற்பித்தானென்க. (கூ௩)

இவ்வாறமைந்தாங்கைவருடனீரைம்பதின்மர்நனிவளர, மைவான் மீனிற்பல்கோடிமன்வந்திறைஞ்சிப்புடைசூழத், தெவ்வாறியவெப்பெருஞ்சேனைத்திருதராட்டிரனுந்தம்பியுமற், றெவ்வாரிவற்கென்றுதிட்டிரனையொழுக்கத்தழகாலுட்கொண்டார்.

(இ - ள்.) இவ்வாறு அமைந்த - (யாகசேனனுடைய செயல்கள்) இவ்வாறு நிகழ்ந்தன (அது நிற்க)—ஆங்கு - அத்தினாபுரியில்—ஐவருடன் ஈரைம் பதின்மர் - ஐவரோடு நூற்றுவரும்—மை வான் மீனில் பல்கோடி மன் வந்திறைஞ்சிப் புடைசூழ நனி வளர - நீலநிறத்தையுடைய ஆகாயத்திலுள்ள நக்ஷத்திரங்களைப்போலப் பலகோடி அரசர்கள்வந்து வணங்கிப் பக்கங்களிற் சூழும்படி நன்றாய் வளர—தெவ் ஆறிய வெம் பெருஞ் சேனைத் திருதராட்டிரனும் தம்பியும் - பகையை அடங்கச்செய்த வெவ்விய பெரிய சேனைகளையுடைய திருதராட்டிரனும் அவன்றம்பியாகிய விதுரனும்—ஒழுக்கத்து அழகால் இவற்குமற்று ஒவ்வார் என்று - ஒழுக்கத்தினழகினால் வேறு (ஒருவரும்) இவனுக் கொப்பாகாரென்று—உதிட்டிரனை உட்கொண்டார். தருமனை (இளவரசனுக்குமாறு) மதித்துக்கொண்டார். எ - று.

அமைந்த என்னும் பன்மைவினைமுற்றினீறும் ஆறிய என்பதில் விவ்விகுதியும் தொக்குநின்றன. பெருஞ்செல்வத்தோடு வளர்ந்தாரென்பார் நனிவளரவென்றார். ஒழுக்கத்தழகால் என்பதற்கு ஒழுக்கத்தாலும் அழகாலும் எனப் பொருள்கொள்ளினும் அமையும். இவ்வாறமைந்து வளர என வினையெச்சமாக்கிப் பொருள்கூறில், முற்செய்யுளோடு சிறிதுஞ் சம்பந்தமின்மையால் அது பொருத்தமின்றென்க. (கூ௪)

வேறு.

பூதிநலந்திகழ்பூருகுலத்திற், காதிபனாகியநங்கனைவென்றோ,
னீதியினாலுநிறைந்தனனுண்ணூ, லோதியகேள்வியுதிட்டிரனென்னா.

(இ - ள்.) பூதி நலம் திகழ் பூருகுலத்திற்கு ஆதிபன் ஆகி-செல்வத்தின் நலம் விளங்குகின்ற பூருவம்மிசத்திற்குத் தலைவனாகி—அநங்கனை வென்றோன் - மன்மதனைவென்ற வீமெனனவன்—நுண் நூல் ஓதிய கேள்வி உதிட்டிரன் - நுட்பமாகிய நூல்களைக்கற்ற கல்வியையுடைய தருமன்—நீதியினாலும் நிறைந்தனன் என்னா - நீதியினாலும் நிறைவடைந்தவன் என்று. எ - று

நீதியினாலும் என்னும் உம்மை எச்சம். பூதி - செல்வம். செல்வத்தின் நல தோடு விளங்குவார் காமவின்பத்தை வெறுத்தன் மிகவரிதாயினும் வீடுமென் அங் ஙனமன்றி அதனை முற்றவெறுத்த பெருமையுடையானென அவனுயர்ச்சி தோ றப் பூதிநலந்திகழ்பூருகுலத்திற் காதிபனாகி யநங்கனைவென்றோ னென்றார். தான்றுதொட்டுச் சிவபெருமானையே வழிபடுங் குலமென்பார் பூதிநலந்திகழ் ருகுலமென்றாரெனினும் அமையும். இப்பொருட்கு பூதி - விபூதி. இப்படி நிக ங்காலத்தில், வியாசமுனிவர் தாயாகிய பரிமளகந்தியை வணங்கித் திருதராட் ரனுடைய புதல்வர்களும் பாண்டுவின் புதல்வர்களும் போர்புரியப் போகின்றா கள், ஆதலால் நீ உன் மருகிமாரோடும் இதனைப்பாராது வனத்திற் போய்த் தவ செய்குதியென்றுகூற, அவளும் அவருடன் வனத்திற்போய்த் தவஞ்செய்து ற்கதியடைந்தாளென்க. (கூரு)

மைந்தருடன்செயல்வழுவறவெண்ணிக், குந்திபயந்தருள்குரிசிலை வனே, யிந்தநிலக்கினியிளவரசென்றாங், கந்தண்மதிக்குடைமுடியொ ளித்தான்.

(இ - ள்.) மைந்தருடன் செயல் வழு அற எண்ணி - புதல்வர்களாகிய திருத ாட்டிரன் விதுரன் என்பவர்களோடு செயற்பாலனவற்றைத் தவறற ஆராய்ந்து- ந்தி பயந்தருள் குரிசிலை - தருமனை—இவனே இனி இந்த நிலக்கு இளவரசு ன்று - இவனே இனி இந்தத் தேசத்திற்கு இளவரசனென்று—அம் தண் மதிக் டை முடியொடு அளித்தான் - அழகிய குளிர்மையாகிய பூரணசந்திரன்போ ங் குடையை முடியோடு அவனுக்குக் கொடுத்தான். எ-று.

செயல் - ஆகுபெயர். இவனே என்னும் ஏகாரம் பிரிநிலை. என்று, எண்ணி, ன்று குடையை முடியொடளித்தான் எனஇயையும். நிலத்துக்கு என்பது நிலக் கென விகாரப்பட்டது. முடியுங்குடையும் இளவரசர்க்குரித்தன்றாகவும் இளவர சென்றாங் கந்தண்மதிக் குடைமுடியொ டளித்தானென்ற தென்னை யெனின், ருமன் இறந்த பிதாவினுரிமையான நிலத்திற்கரசனாகின்றமையின் அவற்கவை ரித்தாதலியையுடைத்தென்க. அங்ஙனமாயின், இவனை இளவரசென்பது வழுவா மெனின், இவனரசனாயினும் பெரியபிதாவின்கீ ழமைந்து ஆளுதலாகியவதுபற்றி ளவரசெனப் பட்டானென்றறிக. (கூசு)

சந்தனுவின்றிருமரபுதயங்கச், செந்திருமேவருசிறுவனுமப்போ, இந்துவொடாதபனிருவருமன்பால், வந்துதழீஇமெய்வயங்கினனொத் தான்.

(இ - ள்.) சந்தனுவின் திரு மரபு தயங்க - சந்தனுமகாராசனுடைய அழ கிய வம்மிசம் விளங்க—செம் திரு மேவரு சிறுவனும் - (இளவரசாதலினால்) இல க்குமிவசிக்கப்பெற்ற ராசகுமாரனும்—அப்போது - அப்பொழுது—இந்துவொடு ஆதபன் இருவரும் அன்பால் வந்து தழீஇ மெய் வயங்கினன் ஒத்தான் - (குடை யையும் முடியையும் பெறுதலாற்) சந்திரனுஞ் சூரியனுமாகிய இருவரும் அன்பி னால் வந்து தன்னைச்சேர உடம்பு பிரகாசித்தவனைப் போன்றான். எ - று.

தழீஇ என்னுஞ் செய்தெனெச்சம் செயவெனெச்சமாகத் திரிக்கப்பட்ட து. நீதியுடைய சந்தனுவின்றிருமரபு அநீதியுடைய திருதராட்டிர குமாரனாகிய துரியோதனனால் விளங்காது, பாண்டுபுதல்வனாகிய இவற்கு முடிசூட்டுதலாலே யே மிகவிளங்கிற்றென்பார் சந்தனுவின்றிருமரபுதயங்கச் செந்திருமேவரு சிறு வன் என்றார். (கூஎ)

துன்மதியானசுயோதனன்மாழ்கித், தன்மதியாலருடந்தையையெ
ய்திப், புன்மதியாமுரைசிற்சில்புகன்றான், மன்மதியாதுமதித்தலிலா
தான்.

(இ - ள்.) துன்மதி ஆன சுயோதனன் மாழ்கி - துர்ப்புத்தியையுடைய துரி யோதனன் (அதற்கு) மயங்கி—அருள் தந்தையை எய்தி - பெற்ற பிதாவைஅடை ந்து—மன் மதி யாவும் மதித்தல் இலாதான் - அரசநீதியைச் சிறிதுஞ் சிந்தியாதவ னாய்—தன் மதியால் புன் மதி ஆம் உரை சிற்சில் புகன்றான் - தன்னெண்ணத்தி னால் எளியபுத்தியோடு பொருந்திய சிலசில வார்த்தைகளைச் சொன்னான். எ-று.

இலாதான் வினையெச்சமுற்று. மன்மதி என்பதில் மதி ஆகுபெயர். நீதி நூலின்வழியொழுகும் மதிநுட்பமுடையாரோடுசோராது, பாண்டுவி னுரிமை அவன்புதல்வர்க்கின்றித் தனக்கென வழக்குரைக்கின்றமைபற்றித் தன்மதியால் என்றும், மன்மதியாதுமதித்தலிலாதானென்றும், புன்மதியாமுரைசிற்சில் புகன் றானென்றுங் கூறினார். (கூஅ)

உன்பதம்யாவுமுதிட்டிரனுக்கே, மன்பதையோடுவழங்கினையெந்தா
யன்பதிலாவவனநுசர்மதத்தா, லென்பதமம்மவிறந்ததையின்றே.

(இ - ள்.) எந்தாய் - என்பிதாவே—உன் பதம் யாவும் உதிட்டிரனுக்கே மன்பதையோடு வழங்கினை - உன்னுடைய தேசம்முழுவதையும் தருமனுக்கே மக்கட்பரப்போடு கொடுத்தாய்—அன்பது இலா அவன் அநுசர் மதத்தால் - (என் மீது) அன்பில்லாத அவன்றம்பியருடைய கோட்பாட்டினால்—இன்றே என்பதம் அம்ம இறந்தது - இன்றைக்கே என்னுடைய தேசம் எனக்குரிமையின்றி நீங்கி யது. எ - று.

ஐ - அசை. அம்ம - இரக்கத்தின்கட்குறிப்பு. என்பது என்பதில் அது பகு திப்பொருள் விகுதி. ஏகாரங்களிரண்டில் முன்னையது பிரிநிலை; பின்னையது தே ற்றம். ஈறுதொக்க இலாத என்னும் பெயரெச்சம் அநுசர் என்னும் பெயர்கொ ண்டது. தருமன் என்மீது சிறிதன்புடையனாய்க் கண்ணோடினும், அவன்றம்பி யர் அங்ஙனமன்றி என்னரசுரிமையையுந் தாமே கைக்கொள்ளுங் கருத்தினர் என்பான் அன்பதிலாவவனநுசர்மதத்தா லென்பதமிறந்ததென்றான். (கூகூ)

என்றலுமைந்தனையிந்துகுலத்தோய், நின்றிலையான்மனுநீதியிலையா
பொன்றியவெம்பிபதம்புதல்வர்க்கே, யன்றிநுமக்கரசாளுதலாமோ.

(இ - ள்.) என்றலும் - என்று துரியோதனன் சொல்லலும்—மைந்தனை - புதல்வனாகிய அவனை—இந்து குலத்தோய் ஐயா மனு நீதியில் நின்றிலை - சந்திர குலத்தவனே என்னப்பனே நீ மனுநீதியில் நின்றாயல்லை—பொன்றிய எம்பிபதம் புதல்வர்க்கே அன்றி - இறந்த என்றம்பியினுடைய தேசம் அவன் புதல்வர்க்களு கேயல்லாமல்—நுமக்கு அரசாளுதல் ஆமோ - உங்களுக்கரசாளுதல் தகுமோ. எ - று.

ஆல் - அசை. ஏகாரம் - தேற்றம். ஓகாரம் - எதிர்மறை. ஐயா என்பது உவப்பின்கண் மரபுமயங்கிற்று. நீதியின் வழியொழுகுஞ் சந்திரகுலத்தி லவதரி த்த நீ அதனில் வழுவியொழுகல் முறையன்றென்பான் இந்துகுலத்தோய் என் றும், தன்வழியொழுகுமாறு முகங்கோடற்கு அவனை ஐயாவென்றும் விளித்தா னென்க. (க00)

நீதியிலாநெறியெண்ணினைநீயிங், கோதியவாய்மையினுறுபொருளின்று
ஆதிபராயவரைவருநீரு, மேதினியாளுதல்வேத்தியல்பென்றான்.

(இ - ள்.) நீ நீதி இலா நெறி எண்ணினை - மகனேநீ நீதியில்லாத வழியை நினைத்து—இங்கு ஓதிய வாய்மையின் உறுபொருள் இன்று - எனக்குச்சொன்ன இவ்வசனத்தால் அடையும் பயன் ஒன்றுமில்லை—ஆதிபர் ஆயவர் ஐவரும் நீரும் - (இத்தேசத்துக்குத்) தலைவர்களாகிய பாண்டவரைவரும் நீங்களும் (கலந்து)—மேதினி ஆளுதல் வேத்தியல்பு என்றான் - பூமியையாளுதலே அரசநீதி என்று (திருதராட்டிரன்) சொன்னான். எ - று.

ஆல் - அசை. ஐவரும் என்னும் உம்மை முற்றுமையெண்ணுப் பொருடந்து நின்றது. எண்ணினை வினையெச்சமுற்று. இங்கு என்பது தன்மையிடத்தை யுணர்த்துதல் "செலவினும்வரவினும்" என்னுஞ் சூத்திரத்தாற் கொள்ளப்பட்டது. ஐவரும் நும்மைப்போ லித்தேயத்திற்கு அதிகாரிகளாமுரிமையுடைய ரென்பதை வலியுறுத்துங் கருத்தினனாய் ஆதிபராயவரைவரும் என்றான். ஆதிபராய் அவர் ஐவரும் எனக் கண்ணழித்துப் பொருள்கோடலு மொன்று. (கoக)

இகன்மிகுகன்னனுமென்னிளையோருஞ், சகுனியுமுண்டுதகுந்துணை
நெஞ்சி, லுகவையிலாரொடுறேனினியென்றே, முகமுகுரம்புரை
முதலொடுசொன்னான்.

(இ - ள்.) இகல் மிகு கன்னனும் என் இளையோரும் சகுனியும் - (அதைக்கேட்ட துரியோதனன்) வலிமையில் மிக்க கன்னனும் என்னுடைய தம்பிமார்களும் (மாமனாகிய) சகுனியும்—தகும் துணை உண்டு - எனக்குத் தகுந்ததுணையாயுண்டு—நெஞ்சில் உகவை இலாரொடு இனி உறேன் என்று - மனத்தில் (என்மேல்) நட்பில்லாத பாண்டவர்களோடு இனி நான் சேரமாட்டேன் என்று—முகம் முகுரம் புரை முதலொடு சொன்னான் - முகங் கண்ணாடியையொத்த முதல்வனாகிய திருதராட்டிரனோடு சொன்னான், எ - று.

ஏ - அசை. உவகை உகவை என எழுத்துமாறிநின்றது. உண்டு என்பது இருதிணையம்பான் மூவிடத்திற்கும் பொதுவாய்வந்த வினைக்குறிப்பு முற்றுச்சொல். முதல் என்னும் பண்பு பண்பியை யுணர்த்தி நின்றது. முகமுகுரம்புரை என்பதன் விதப்பு மேலே கூறப்பட்டது. பகைவரையடர்க்கக் கன்னனும் அதற்குத்தக்கதுணை தன் றம்பியரும் அரசவுரிமையாக்கற்குரிய தக்கமதிகளை விரகுபடஓதற்குச் சகுனியும் ஆகிய தக்கதுணையுண்டென்பான் இகன்மிகு கன்னனுமென்னிளையோருஞ் சகுனியுமுண்டு தகுந்துணையென்றான். (கoஉ)

பாதகனன்றுபகர்ந்தமொழிக்கே, பேதகனானபிதாமருளெய்தா
மேதகவாழ்வுறுவில்விதுரற்கு, நாதகுநல்லுரைநதிமகனுக்கும்.

(இ - ள்.) பாதகன் அன்று பகர்ந்த மொழிக்கு-பாதகனாகிய துரியோதனன் அன்றைக்குச் சொன்ன சொல்லுக்கு—பேதகன் ஆன பிதா மருள் எய்தா - கருத்து வேறுபட்ட பிதாவாகிய திருதராட்டிரன் மயங்கி—மேதக வாழ்வு உறு வில் விதுரற்கும் - மேன்மைதக வாழுகின்ற வில்லையுடைய விதுரனுக்கும்—நா தகுநல் உரைநதிமகனுக்கும்-நாவில் தக்க நல்ல வசனங்களை யுடைய வீடுமனுக்கும்.எ-று.

ஏ - அசை. மொழிக்கென்னும் நான்கனுருபு கருவிப்பொருளில் வந்தது; கண்ணிற்குக் காணலாம் என்பதுபோல. நீதிநூல்வழி யொழுகும் அமைச்சருள்

மிக்காரென்பது போதர மேதகவாழ்வுறுவில் விதுரன் என்றும், தமக்குற்றார் மீதுங் கண்ணோடாது நடுவுநிலைமையாகிய மொழிகளைப் பேசு மியல்புடையான் என்பது போதர நாதருநல்லுரைநதிமக னென்றுங் கூறினர். (கoரு)

ஈண்டினியென்செய்வதெண்ணுமினிங்ஙன், பாண்டவரோடுபயின் றுறையாது, தூண்டுபரித்துரியோதனன்முதலோர், பூண்டனர்வெம் பகைவாழ்வுபொறாதார்.

(இ - ள்.) தூண்டு பரித் துரியோதனன் முதலோர் - செலுத்தப்படுங் குதிரையையுடைய துரியோதனன் முதலியோர்கள்—இங்ஙன் பாண்டவரோடு பயின்று உறையாது - இங்கே பாண்டவர்களோடு கலந்திராமல்—வாழ்வு பொறாதார் வெம் பகை பூண்டனர் - அவர்கள் வாழ்வைச் சகிக்க மாட்டாதவர்களாய்க் கொடிய பகையைக் கொண்டார்கள்—ஈண்டு இனிச் செய்வது என் எண்ணுமின் - நாமினிச் செய்வதென்னை ஆலோசனை செய்யுங்கள். எ - று.

ஈண்டென்பது தன்மை யிடத்தை யுணர்த்திற்று. பொறாதார் வினையெச்சமுற்று. சகுனி கன்னன் முதலியோரால் ஏவப்பட்டு அவர் துர்ப்புத்தியின்வழி யொழுகுவான் என்பதும்போதரத் தூண்டுபரித்துரியோதனன் என்றான். (கoசு)

ஒருதிறலிந்நகருறைதரினென்று,இருதிறன்மைந்தருமிகலுவர்மேன்மே லருகணுகாவகையகலவிருந்தான், மருவுறுநண்புவளர்ந்திடுமென்றே.

(இ - ள்.) இரு திறன் மைந்தரும் - இருபகுதிப் புதல்வர்களும்—ஒரு திறல் இந் நகர் உறைதரின் - ஒப்பற்ற பகையோடு இந்த நகரத்திலிருந்தால்—மேன்மேல் இகலுவர் - மேலும்மேலுஞ் சண்டையிடுவர் — அருகு அணுகாவகை அகல இருந்தால் - சமீபத்திலிராமற் றூரத்திலிருந்தால்—மருவுறு நண்பு வளர்ந்திடும் என்று-கலத்தலையுடைய நட்பு வளரும் என்று. எ - று.

ஏ - அசை. அகலவிருக்கிற்பகையு முறவாம் என்னும் பழமொழிபற்றி இங்ஙனங் கூறினன். ஒருதிறல் இருதிறன்மைந்தரும் என்றியைத்து, ஒப்பற்ற வலிமையுடைய இருபகுதிப்புதல்வரும் எனப் பொருள்கோடலும் ஒன்று. திறலை நகர்க்கேற்றிப் பொருள்கொள்ளுதல் சிறப்பின்று. (கoரு)

இம்மொழிகூறலுமிருவருமெண்ணித், தெம்முறையாயினர்சிறுபருவத்தே, யெம்முரைகொள்கலரினியவர்மதியே, தம்மதியேமதியாகுவதென்றார்.

(இ - ள்.) இம்மொழி கூறலும்-இந்த வசனத்தைத் திருதராட்டிரன் சொல்லவும்—இருவரும் எண்ணி - வீடுமன் விதுரன் ஆகிய இருவரும் ஆலோசித்து—சிறுபருவத்தே தெம்முறை ஆயினர் - அப்புதல்வர்கள் இளமைப்பருவத்திற்றானே பகையைப் பொருந்தினார்கள்—இனி அவர் எம் உரை கொள்கலர் - இனிமேல் அவர்கள் எங்கள் வசனத்தைக் கைக்கொள்ள மாட்டார்கள்—மதி - அரசனே இதைச் சிந்திக்குக—மதி ஆவது தம்மதியே என்றார் - அவர்களுக்குப் புத்தியாவது தங்கள் புத்தியே வேறில்லை என்றார்கள். எ - று.

ஏகாரமிரண்டனுள் முன்னையது அசை ; பின்னையது தேற்றம். தெவ்வென்னும் பெயர்ச்சொல்லினீற்று வகரம் மகரமெய்வந்தமையின் மகரமாயிற்று. இளம்பருவத்தி லுள்ளகுணம் எவர் தெருட்டினும் நீங்காதென்பான் தெம்முறையாயினர் சிறுபருவத்தே யெம்முரைகொள்கலர் என்றான். (கoசு)

விதுரனும்வார்கழல்வீடுமனுந்தம், மிதயநிகழ்ந்ததியம்பியபின்னர்ப்
பொதுமையிலாதபுரோசனனென்னு,மதியுடைமந்திரிவருகெனவந்தான்.

(இ - ள்.) விதுரனும் வார்கழல் வீடுமனும் - விதுரனும் நீண்ட வீரக்கழலை யுடைய வீடுமனும்—தம் இதயம் நிகழ்ந்தது இயம்பிய பின்னர் - இங்ஙனம் தம் மனத்தில் நிகழ்ந்ததைச் சொன்னபின்பு—பொதுமை இலாத புரோசனன் என்னும் மதியுடை மந்திரி - நடுவுநிலைமையில்லாத புரோசனனென்னும் புத்தியை யுடைய மந்திரியானவன்—வருக என வந்தான் - வருக என்று (திருதராட்டிரன்) அழைக்க வந்தான். எ - று.

வருக என்னும் வியங்கோளீறு தொக்கது. வார்கழல் வினைத்தொகை. புரோசனனுடைய மதிநுட்பத்தாலும் நடுவுநிலைமையாலும் விதுரன் முதலாயினார், பாண்டவர்க்கு இவனையே மந்திரியாக்க எண்ணியிருந்தார்கள்; இதனை யறிந்த துரியோதனன் அரக்குமாளிகையை யுண்டாக்கி அதில் இவர்களைக் கொன்று விடின் இவர்களுடைய பூமியை உனக்குத்தருவேன் என்று புரோசனனை மருட்டினான். முன்னே நடுவுநிலைமையை யுடையனாயினும் இங்ஙனம் மருட்டிய துரியோதனன் வழிப்பட்டுப் பாண்டவர்க்குத் தீங்குபுரிந்தான் என்பார் பொதுமை யிலாத புரோசனன் என்றார். வார்கழல் என்பதற்கு வாரினாற் கட்டப்பட்ட கழல் எனப் பொருள்கொள்ளுதல் சிறப்பின்று. (கoஎ)

வந்தவமைச்சனுமைந்தனுமற்றத், தந்தையுமங்கொருதனிவயினெய்திச்
சிந்தனைசெய்தனர்தீமைமனத்தோர், குந்திமகாருயிர்கோடல்புரிந்தே.

(இ - ள்.) வந்த அமைச்சனும் - வந்த மந்திரியும்—மைந்தனும் அத் தந்தையும் - துரியோதனனும் அவன்வழிப்பட்ட பிதாவாகிய திருதராட்டிரனும்—தீமை மனத்தோர் - தீமைமிக்க மனத்தினராகி—அங்கு ஒருதனி வயின் எய்தி - அங்கே மிகத் தனிமையாகிய ஓரிடத்தையடைந்து—குந்தி மகார் உயிர்கோடல் புரிந்து - பாண்டவர்களுடைய உயிரைக் கொள்ளுதலை விரும்பி—சிந்தனை செய்தனர் - யோசனை செய்தார்கள். எ - று.

ஏ, மற்று - அசைகள். மனத்தோர் வினையெச்சமுற்று. அத்தந்தை என்புழி அகரம், முன்னே துரியோதனன் கருத்துக் குடன்படாது நீதிவழிநின்று பின் னுடன்பட்ட அநீதியுடையானென்பதை யுணர்த்திநின்ற பண்டறிசுட்டு. தந்தையும் என்னும் உம்மை எண்ணோடு இழிவுசிறப்புமாய் நின்றது. ஒருதனி என்பது ஒருபொருட்பன்மொழி. தம்முயிரினுஞ் சிறந்தாரும் அறியாது யோசிக்கத்தக்க இடமென்பார் ஒருதனிவயின் என்றார். (கoஅ)

வேறு.

ஆரணதிபராரும்புகழ்வது, நாரணதியர்நண்ணுஞ்சிறப்பது
தோரணதிதுலங்குபொற்கோபுர, வாரணாவதமாநகரங்கணே.

(இ - ள்.) ஆரணதிபர் ஆரும் புகழ்வது - பிராமணர் எவராலும் புகழப்படுவது—நாரணதியர் நண்ணுஞ் சிறப்பது - விஷ்ணுமுதலிய தேவர்கள் வரப்பெறுஞ் சிறப்பையுடையது—தோரணதி துலங்கு பொற் கோபுர வாரணாவதமாநகர் - தோரணம் முதலியன விளங்கும் அழகிய கோபுரங்களையுடைய வாரணாவதம் என்னும் பெரிய நகரம்—அங்கண் - அந்நகரத்தில். எ - று.

ஏ - அசை. புகழ்வது, நண்ணும் என்னுஞ் சொற்கள் படுவிகுதிதொக்கு நின்றன. வேதப்பொருளை யுள்ளபடி அறிந்த பிராமணராற் புகழப்படுவதென்பார் ஆரணுதிபராரும் புகழ்வது என்றார். விட்டுணுமுதலான தேவர்கள் அங்கெழுந் தருளி யிருக்குஞ் சிவபெருமானைத் தரிசித்தற்கு வருவாரென்க. தோரணுதியென்பதனுற் கொடிமுதலியனவுங் கொள்க. (க0௬)

சென்றிருக்கத்திருவாய்மலர்கென, வொன்றுபட்டுமகன்றொழுதோதினு னன்றுதொட்டுயிரன்னவமைச்சனு, னன்றுபட்டதந்நன்னகரெங்குமே.

(இ - ள்.) சென்று இருக்கத் திருவாய் மலர்க என - (பாண்டவர்) போயிருக்கத் திருவாய்மலர்ந்தருளுக என்று—ஒன்றுபட்டு மகன் தொழுது ஓதினுன் - மனம் உடன்பட்டுப் புத்திரனுகிய துரியோதனன் வணங்கிச் சொன்னுன்—அன்று தொட்டு - அன்றுமுதல்—அந் நல் நகர் எங்கும் உயிர் அன்ன அமைச்சனுல் நன்றுபட்டது - அந்த நல்ல நகரமெங்கும் அவ்விருவர்க்கும் உயிரையொத்த புரோசனன் என்னும் மந்திரியினுற் புதுக்குவிக்கப்பட்டது. எ - று.

ஏ - அசை. மலர்கவென்னும் வியங்கோளீறு தொக்கது. புரோசனனுடன் தான் முன் கூறிவைத்தபடி அரக்குமாளிகை அமைப்பித்து அதிற் பாண்டவரைப் புகச்செய்து கொல்லுவித்தலாகிய இக் கொடுஞ்செயலுக் குடன்பட்டவனுய்த் துரியோதனன் இங்ஙனங் கூறினுனே என்பார் ஒன்றுபட்டு மகன்றொழுதோதினுன் என்றார். (கக0)

சிற்பநூலிற்றிருந்தியமாக்களாற், பொற்பமைந்துபொலிந்ததப்பொன்னகர் கற்பகாடவியல்லதுகண்டவ, ரற்பமென்னவமராவதியையே.

(இ - ள்.) அப் பொன் நகர் - அந்த அழகிய வாரணுவதநகரமானது—கண்டவர் அமராவதியைக் கற்பக அடவி அல்லது அற்பம் என்ன - பார்த்தவர்கள் தேவருலகத்தைக் கற்பகச்சோலை யொன்றாலன்றி (ஏனையவற்றால் இதில்) தாழ்ந்ததென்று சொல்ல—சிற்பநூலில் திருந்திய மாக்களால் - சிற்பசாத்திரத்திற் றிருத்தமுற்றோர்களால்—பொற்பு அமைந்து பொலிந்தது - அழகமைந்து பொலிந்தது. எ - று.

ஏ - அசை. கற்பகாடவி வடநூன்முடிபு. அமராவதி கற்பகாடவி யொன்றாலன்றி ஏனையவற்றா லிழிந்ததென்னும்படி அந்நகர் பொலிந்ததென்பது கருத்து.

அறத்தின்மைந்தனுக்காங்கொருநாளவைப், புறத்திருந்துபுகன்றனன்காவலன், றிறத்துநின்னிளையோரொடுஞ்சென்றுதோண், மறத்தினுற்றனிவாழுதியென்னவே.

(இ - ள்.) காவலன் - திருதராட்டிர மகாராசன்—ஒருநாள் அவைப்புறத்து இருந்து - ஒருநாட் சபையிலிருந்து—திறத்து நின் இளையோரொடும் சென்று - வீரத்தையுடைய உன் தம்பியரோடும் (வாரணுவதத்திற்) போய்—தோள் மறத்தினுல் தனி வாழுதி என்ன-புயவலிமையினுற்றனித்து வாழுதியென்று—அறத்தின் மைந்தனுக்குப் புகன்றனன் - தருமபுத்திரனுக்குச் சொன்னுன். எ - று.

ஆங்கு, ஏ - அசைகள். புறம்-எழனுருபு. உன்றம்பியர் வலியும் உன் புய வலி மே உனக்குத் துணையமையும் ; ஆதலாற்றனித்திருக்கலாமோ வென்றஞ்சற்க வன்பான் திறத்துநின்னிளையோரொடுந் தோண்மறத்தினாற் றனிவாழுதியென் ான். (கசஉ)

புகன்றகேள்விப்புரோசனன்றன்னையிம், மகன்றனக்குநீமந்திரியா கியே, யிகன்றவர்ச்செற்றினியோர்க்கினிமைசெய், தகன்றஞாலமிவன் வழியாக்குவாய்.

(இ - ள்.) புகன்ற கேள்விப் புரோசனன்றன்னை - கற்ற கல்வியையுடைய புரோசனன் என்னும் மந்திரியைப் பார்த்து—இம் மகன்றனக்கு நீ மந்திரியாகி - இப்புதல்வனுக்கு நீ மந்திரியாகி—இகன்றவர்ச் செற்று - இவனோடு பகைத்தவரைக் கொல்லுவித்து—இனியோர்க்கு இனிமை செய்து - நண்புடையோர்க்கு இன்பத்தைச் செய்வித்து—அகன்ற ஞாலம் இவன்வழி ஆக்குவாய் - அகன்ற பூமியை இவன் வழிப்படுத்துவாய். எ - று.

செற்று, இனிமைசெய்து என்பனவற்றிற் பிறவினை விகுதி தொக்கு நின் றது. நட்டாரையாக்கலும் நள்ளாரை அழித்தலும் ஆகிய இரண்டனையும் அமைச் சன் அரசனைக்கொண்டு செய்விக்கவே உலகம் அவ்வரசன் வழியாகுமென்னும் நீதிநூற்றுணிபு பற்றி இங்ஙனங் கூறினனென்க. (கசந)

என்னவாங்கணிறைஞ்சியனந்தரஞ், சொன்னசொற்படிசூழ்படை வேண்டுவ, வென்னவுங்கொண்டிளவரசோடுமப், பொன்னகர்க்கொடு போயினனென்பவே.

(இ - ள்.) என்ன - என்றுசொல்ல—ஆங்கண் இறைஞ்சி - அப்பொழுதில் வணங்கி—அனந்தரம் - பின்னர்—சொன்ன சொற்படி சூழ் படை வேண்டுவ என்னவும் கொண்டு - அரசன் சொன்ன சொல்லின்படி சூழுகின்ற படைகளை யும் வேறும் வேண்டிய எவைகளையும் பெற்று—இளவரசோடும் அப் பொன் நக ர்க் கொடுபோயினன் - இளவரசாகிய தருமனோடு அந்த அழகிய வாரணாவதமென் னும் நகரத்தில் (அவற்றைக்) கொண்டு போயினன். எ - று.

என்ப, ஏ - அசைகள். கொண்டு கொடுபோயினன், இளவரசோடும் போயி னன் என்றியையும். இளவரசோடும் என்னும் ஒருவினையொடுச்சொல் உயர்வின் கண் வந்தது. இளவரசோடும் எனத் தலைமைப்பொருளைக் கூறவே தலைமையில் பொருளாகிய தம்பியர் நால்வரும் தாயும் உடன் சென்றாரென்பதுந் தாமே போதரும். (கசச)

ஆரமார்புடையைவருங்குந்தியும், பூரஞானபுரோசனநாமனுஞ் [னார். சேரவெண்பிறைச்செஞ்சடைவானவன், வாரணாவதஞ்சென்றுவணங்கி

(இ - ள்.) ஆர மார்பு உடை ஐவரும் குந்தியும் - பதக்கத்தை யணிந்த மார் பையுடைய பாண்டவரைவருங் குந்திதேவியும்—பூர ஞான புரோசன நாமனும் - நிறைந்த அறிவையுடைய புரோசனன் என்னும் பெயரையுடைய மந்திரியும்— வெண் பிறைச் செஞ் சடை வானவன் வாரணாவதம்-வெண்மையாகிய பிறையை யணிந்த சிவந்த சடையையுடைய சிவபெருமான் வீற்றிருக்கும் வாரணாவதத்தை —சேரச் சென்று வணங்கினார் - ஒருங்கு சென்று வணங்கினார்கள். எ - று.

ஞானபுரோசன நாமன் என்பது வடநூன்முடிபு. பெரிய பிதாவினுற்றந்தை கிழமை முழுவதும் பெற்றமையின், அரசகுமரார்க்குரிய செல்வத்தையுடையராயி னுரென்பார் ஆரமார்புடையைவரென்றும், மதிநுட்பத்தோடு நூலறிவிலும் வல்ல னென்பார் பூரஞான புரோசன நாமன் என்றுங் கூறினுர். சந்தனக்குழம்பணிந்த மார்பையுடைய ஐவரென்பாருமுளர். தருமனுதியர் பங்குனிமாசத்துப் பூருவபக் கத்தட்டமியிலே வாரணுவதத்திற்கு வந்தாரென்க. (கக௫)

அங்கவன் றனருள்பெற்றமைச்சனங். கிங்கிதத்தொடியற்றியநீள்கொடி மங்குறோய்மணிமாளிகையெய்தினுர், சங்கம்விம்மமுரசந்தழங்கவே.

(இ - ள்.) அங்கவன்றன் அருள் பெற்று - அவ்வாரணுவதத்திலெழுந்தருளி யிருக்குஞ் சிவபெருமானுடைய கிருபையைப் பெற்று—அமைச்சன் அங்கு இங்கி தத்தோடு இயற்றிய - மந்திரியாகிய புரோசனன் அவ்விடத்தில் (தம்மைக் கொல் லவேண்டுமென்னும்) எண்ணக் குறிப்போடு செய்த—நீள் கொடி மங்குல் தோய் மணி மாளிகை - நீண்ட கொடிகளையுடைய முகில்கள் படிகின்ற இரத்தினங்க ளழுத்திய மாளிகையை—சங்கம் விம்ம முரசம் தழங்க எய்தினுர் - சங்குகள் முழங்க முரசங்கள் ஒலிக்க அடைந்தார்கள். எ - று.

கொடியை எழுவாயாக்கிப் பொருள்கூறினும் பொருந்தும். (ககசு)

ஆவியன்னவமைச்சன்மொழிப்படி, மேவியத்திசைவேந்தர்குழாந் தொழக், கோவினுணைநடத்திக்குவலயத், தேவிமெய்களிக்கச்சிறந்தா ரரோ.

(இ - ள்.) மேவி - அந்நகரை அடைந்து—அத்திசை வேந்தர் குழாம் தொழ - அந்தத் திக்கிலுள்ள அரசர் கூட்டம் வணங்க—ஆவி அன்ன அமைச்சன் மொழிப் படி கோவின் ஆணை நடத்தி - ஆன்மாவை யொத்த புரோசனன் என்னும் மந்திரி யினுடைய சொற்படி அரச ஆணையைச் செலுத்தி—குவலயத் தேவி மெய் களிக் கச் சிறந்தார் - பூமிதேவி உடம்பு களிப்படைய ஐவரும் சிறந்திருந்தார்கள். எ-று.

அரோ - அசை. அகத்தாற் பாண்டவருக்குக் கேடு சூழ்கின்றானுயினும், அக் கருத்தெளிதில் வாய்ப்புற அவர் தன்னை அயிராது உயிர்போற் சிறந்தானுகக்கொ ண்டொழுகுமாறு புறத்தான் மருட்டியொழுகினுனென்பார் ஆவியன்னவமைச் சன் என்றுர். (ககஎ)

வேறு.

மன்னரைவரும்வாரணுவதந்தனின்மருவித்
துன்னலார்தொழத்தொன்னிலம்புரந்திடுநாளிற்
பின்னநெஞ்சுடைப்புரோசனன்பேதுறுமதியான்
முன்னமேயினிதமைத்திடுமணைச்செயன்முன்னு.

(இ - ள்.) மன்னர் ஐவரும் வாரணுவதந்தனில் மருவி - அரசரைவரும் வார ணுவதத்திலிருந்து—துன்னலார் தொழத் தொல் நிலம் புரந்திடும் நாளில் - பகை வர்கள் வணங்கப் பழைய பூமியை யரசாளும் நாளில்—பின்ன நெஞ்சு உடைப் புரோசனன் - தவறு பொருந்திய மனத்தையுடைய புரோசனன் என்னும் மந்திரி யானவன்—பேதுறு மதியால் முன்னமே இனிது அமைத்திடும் மனைச் செயல்

மன்று - வேறுபட்ட புத்தியினால் முன்னே அழகுபொருந்த உண்டாக்கிய மாளிகையின் அமைவைச் சிந்தித்து. எ - று.

தன் வஞ்சனை பாண்டவர்க்குத் தெரியா வண்ணம் புறத்தில் மிக அழகுறச் செய்த மனையென்பார் இனிதமைத்திடு மனையென்றார். துரியோதனன் புரோசனனைத் தனியே யழைத்து யோசித்ததைக்கண்ட விதுரன், இத்துரியோதனனால் உமக்குத் தீங்கு நிகழ்தல் நிச்சயம் இதனை நீரறிந்துய்ம்மின் எனப் பாண்டவர்க்கு முன்பு சொல்லிவைத்தானாதலின், புரோசனன் செய்த வஞ்சனையை இவர் ஊகித்துணர்ந்தாரென்க. (ககஅ)

மெழுகினாலமக்காலயம்வகுத்ததும்விரகே
யொழுகுகின்றதன்னொழுக்கமும்வஞ்சனையொழுக்கே
யெழுகடற்படையாவையுமிவன்வழியனவே
தொழுதகையுளும்படையுளசூழ்ச்சியும்பெரிதால்.

(இ - ள்.) நமக்கு மெழுகினால் ஆலயம் வகுத்ததும் விரகே - (இவன்) நமக்கு மெழுகினாலே மாளிகையை உண்டாக்கியதும் உபாயமே—ஒழுகுகின்ற தன் ஒழுக்கமும் வஞ்சனை ஒழுக்கே - ஒழுகுகின்ற இவனுடைய ஒழுக்கமும் வஞ்சகமான ஒழுக்கமே—எழு கடல் படை யாவையும் இவன் வழியனவே - ஏழுகடல்களையும் ஒத்த சேனைகளெல்லாம் இவன் வசப்பட்டனவே—தொழுத கையுளும் படை உள - (பகைவர்களுடைய) வணங்கிய கையுள்ளும் ஆயுதங்களுள்ளன (ஆதலால் நமக்கு வணங்கி ஒழுகுகின்றானென்றல் கூடாது)—சூழ்ச்சியும் பெரிது - (இவன்கண்) ஆராய்ச்சியும் மிகவுளது. எ - று.

ஐ, ஆல் - அசைகள். வகுத்ததும், ஒழுக்கமும் என்னும் உம்மைகள் எண்ணோடு சிறப்பு- கையுளும் என்னும் உம்மை இழிவு சிறப்பு. ஏகாரங்கள் தேற்றம். தாம் நட்பென்பதனைத் தொழுத தங்கையாற்றேற்றிப் பின் கோறற்கு வாங்கவிருக்கின்ற படைக்கலம், உய்த்துணர்வுழி அதனுள்ளே தோன்றுமென்பார் தொழுத கையுளும் படையுள என்றார். அத்தினாபுரத்தினின்று வந்தபொழுது துரியோதனனது கருத்தின்படியே தன்வழி யமைந்தொழுகற்குரிய சேனைகளைத் தெரிந்து கொடுவந்தானாகலின் அப்படைகள் புரோசனன் வழிப்பட்டிருந்தனவென்க. ()

சங்கையுண்டினியுண்டியுஞ்சாந்தமும்பூணும்
பொங்குநுண்ணிழைத்துகிலுமந்தாமமும்பூவு
மிங்கிவன்பரிந்தியற்றியகோடலமென்றார்
கங்கைநீர்தவழ்கழனிசூழ்பழனநாடுடையார்.

(இ - ள்.) இனிச் சங்கை உண்டு - இனி (இவனில் நமக்கு) ஐயமுண்டு (ஆதலால்)—இங்கு இவன் பரிந்து இயற்றிய - நமக்கு இவன் அன்புடையவன் போன்று அமைத்த—உண்டியும் சாந்தமும் பூணும் - உணவையுஞ் சந்தனத்தையும் ஆபரணத்தையும்—பொங்கு நுண் இழைத் துகிலும் - உயர்ந்த நுண்ணிய நூலாலாகிய வஸ்திரத்தையும்—அம் தாமமும் பூவும்-அழகிய மாலையையும் பூவையும்—கோடலம் என்றார் - (ஆராயாது) கொள்ளோம் என்றார்கள்—கங்கை நீர் தவழ் கழனி சூழ் பழன நாடு உடையார்-கங்கைநீர் பாய்கின்ற வயல்சூழ்ந்த மருதநிலம் பொருந்திய நாட்டையுடைய பாண்டவர்கள். எ - று.

இங்கு என்பது தன்மையிடத்தை யுணர்த்திற்று. உண்டி முதலியவற்றை ஆராய்தலாவது, உண்டியைக் கருங்குரங்கிற் கிட்டும் சாந்த முதலியவற்றை அன்னத்தின் கண்ணிலும் சக்கரவாகப் புள்ளின் மூக்கிலும் உறுத்தியும் பரீக்ஷித்தல். இவற்றில் நஞ்சு செறிந்திருப்பிற் கருங்குரங் குண்ணாது. அன்னத்தின்கண் குருதி காலும். சக்கரவாகப் புள்ளின் முகங் கடுக்கும். (கஉ0)

ஐயமுற்றிவரிருப்புழிமயனினுமதிகன்
சையமொத்ததோள்வலனுடைத்தபதியனொருவன்
வையமுற்றுடைவீமனையொருதனிவணங்கி
யையபட்டதையறிந்தருளாமுறையென்றான்.

(இ - ள்.) இவர் ஐயம் உற்று இருப்புழி - பாண்டவர்கள் (இவ்வாறே புரோசனன் என்னும் மந்திரியிற்) சந்தேகங்கொண்டிருக்கும் பொழுது—மயனினும் அதிகன் சையம் ஒத்த தோள் வலன் உடைத் தபதியன் ஒருவன் - (சிற்பநூலில்) மயனிலும் மேம்பட்ட மலையை யொத்த புயவலிமையையுடைய தச்சன் ஒருவன்—வையம் முற்று உடை வீமனை ஒருதனி வணங்கி—பூமிமுழுதையுமுடைய வீமனை மிகத் தனியிடத்திற் கண்டு வணங்கி—ஐயபட்டதை ஆம் முறை அறிந்தருள் என்றான் - அரசனே முன் சம்பவித்ததை வரன்முறையே அறிந்தருளுக என்றான். எ - று.

மயனினும் என்னும் உம்மை உயர்வு சிறப்பு. அதிகன் பெயரெச்சமுற்று. அறிந்தருள் என்பது ஒருசொல். வையமுற்றுடை வீமன் என்றது உபசாரம். தான் எளிய தபதியாயினும் வலிய அரசகுமரனாகிய வீமன் முன் சிறிது மச்சமின்றி நின்று முன்னிகழ்ந்ததை வரன்முறையே கூறுந் திட்பமுடையானென்பார் சையமொத்த தோள்வலனுடைத் தபதியனென்றார். பாண்டவரைவருள்ளுந் தருமன் முதலிய நால்வரும் போர்வலியிற் சிறந்தாரன்றி வீமனைப்போற் சரீரவலியிற் சிறந்தாரல்லரெனக் கருதி, வீமன் பறிக்கத்தக்கதாக ஒரு தூணைத்தான்மைத்தமையின் அவற்கறிவித்தான் என்க. (கஉக)

நுந்தையேவலிற்கம்மியர்நூதனமாக
விந்தமாநகர்த்திருமனையியற்றிடுநாளின்
வந்தமந்திரிவஞ்சனையறிந்தறன்வடிவாந்
தந்தையென்னையுமேவினன்றன்மையினுணர்ந்தே.

(இ - ள்.) நுந்தை ஏவலில் - உம்முடைய பெரிய பிதாவினது பணியினால்—கம்மியர் நூதனமாக இந்த மாநகர்த் திருமனை இயற்றிடும் நாளில் - கம்மாளர் புதுமையாக இந்தப் பெரிய நகரத்தில் அழகிய மாளிகையைச் செய்யும் பொழுதில்—அறன் வடிவு ஆம் தந்தை - தருமமே வடிவாகிய விதுரராசர்—வந்த மந்திரி வஞ்சனை அறிந்து - (உங்களுடன்) வந்த புரோசனன் என்னும் மந்திரியுடைய வஞ்சனையை யறிந்து—என்னையும் தன்மையின் உணர்ந்து ஏவினன் - அடியேனையும் என் குணத்தால் (நம்பத்தக்கான் என்று) அறிந்து அனுப்பினார். எ - று.

ஏ - அசை. என்னையும் என்னும் உம்மை எச்சத்தோடு சிறப்பு. துரியோதனாதியரில் மாத்திரங் கண்ணோடாது நும்முயிர்க் கிறுதிவருமென்றஞ்சி முற்பட்டென்னை யனுப்பிய நடுவுநிலையுடைய ரென்பான் அறன் வடிவாந் தந்தை என்றான். யமனுடைய அவதாரத்தனாகிய தந்தையெனப் பொருள்கோடல் ஈண்டுச் சிறப்பின்று. (கஉஉ)

அடியனேனுமற்றவருடனரக்குமாளிகையிப்
படியினாலியற்றியதொழிற்பயனெலாங்குறித்து
நெடியகானகத்தளவுநீணிலவறைநெறிபோய்
முடியுமாறொருமண்டபங்கோட்டினேன்முழைபோல்.

(இ - ள்.) அடியனேனும் - அடியேனும்—அவருடன்-அந்தக் கம்மாளரோடு—அரக்கு மாளிகை இப் படியினால் இயற்றிய தொழிற் பயன் எலாம் குறித்து-மெழுகு மாளிகையை இந்தத் தன்மையினாற் செய்த தொழிலால் வரும் பிரயோசனத்தையெல்லாஞ் சிந்தித்து—நெடிய கானகத்து அளவும் நீள் நில அறை நெறி முழைபோல் போய் முடியுமாறு - நெடிய காட்டினிடம் வரையும் நீண்ட நிலவறைவழி முழைஞ்சுபோற்சென்று முடியும்படி—ஒரு மண்டபம் கோட்டினேன் - ஒரு மண்டபத்தைச் செய்து. எ - று.

மற்று - அசை. கோட்டினேன் வினையெச்சமுற்று. அடியனேனும் என்னும் உம்மை எச்சத்தோடு சிறப்பு. அடியனேனும் இயற்றிய தொழிலென இயையும். தொழிற்பயன் என்றதுபாண்டவர் ஐயுறாது அதிற்புகுந்திறத்தலை. (௧௨௩)

வேறொருத்தருமறிவுறாவிரகினாலொருதூண்
மாறுபட்டுநீபறிக்கலாம்வகைவழிவகுத்தேன்
றேறுதற்கிதுதகுமெனத்திருவுளத்தடக்கி
யூறுபட்டபோதெழுந்தருள்கெனப்பணிந்துரைத்தான்.

(இ - ள்.) வேறு ஒருத்தரும் அறிவுறா விரகினால் - வேறொருவரும் அறியாத உபாயத்தினால்—ஒரு தூண்-ஒரு தூணை - நீ மாறுபட்டுப் பறிக்கலாம் வகை வழி வகுத்தேன் - நீ மாறுகொண்டு பிடுங்கும்படி அம்முழைஞ்சுவழியிற்செய்துவைத்தேன்—இது தேறுதற்குத் தகும் எனத் திருவுளத்து அடக்கி - இது தெளியத்தகும் என்று திருவுளத்திற்கொண்டு—ஊறுபட்டபோது எழுந்தருள்க எனப் பணிந்து உரைத்தான் - தீங்குநிகழ்ந்தபொழுது எழுந்தருளுக என்று வணங்கிச் சொன்னான். எ-று.

ஒருத்தரும் என்னும் உம்மை முற்று. எழுந்தருள்க என்னும் வியங்கோளீறு தொக்கது. எளிதிற்பறிக்குமாறுவைப்பிற் புரோசனன் ஐயுறுவானென்று கருதி நிலைபெற நாட்டிவைத்தேனென்பான் மாறுபட்டு நீபறிக்கலாம் வகை என்றும், எளிய தபதியின்சொல்லிதுவென்றையுற்றிகழற்கவென்பான் தேறுதற்கிது தகுமென என்றும், பிறரறியில் அதுவாயிலாக நுமக்குமெனக்குந் தீங்குநிகழுமென்பான் திருவுளத்தடக்கி என்றுங் கூறினான். (௧௨௪)

தச்சரிற்பெருந்தலைவனுக்குரிமையிற்றனங்கள்
பிச்சரிற்கொடுத்தவன்விடைகொண்டதன்பின்ன
ரச்சமற்றிவனம்மனைக்கம்மனைவழங்கு
நிச்சமின்றுகொலென்றுகொலெனநினைந்திருந்தான்.

(இ - ள்.) தச்சரிற் பெரும் தலைவனுக்கு - தச்சருட் பெரிய தலைவனாகிய அவனுக்கு—உரிமையில் தனங்கள் பிச்சரிற் கொடுத்து - உரிமையினால் திரவியங்களைப் பித்தர்களைப்போலக் கொடுத்து—அவன் விடை கொண்டதன் பின் - அத்தச்சன்விடைபெற்றுக்கொண்டு சென்றபின்பு—இவன் அச்சம் அற்று - இந்த வீமன் பயமின்றி—அம்மனைக்கு அம்மனை வழங்கும் நிச்சம் - (புரோசனன்)அக்கினிக்கு அந்த மாளிகையை ஒப்புவிக்கும் மெய்ம்மை—இன்றுகொல் என்று

சொல் என நினைந்து இருந்தான் - இன்றைக்கோ வேறென்றைக்கோ என்றுஎண்ணிக்கொண்டிருந்தான். எ - று.

பித்தர் பிச்சர் என்றும், நிச்சயம் நிச்சம் என்றுந் திரிந்தன. தம்முயிரைப் பாதுகாத்தற்குரிய உபாயத்தை அறிவித்த கிழமையென்பார் உரிமையில் என்றும், தமக்கென வறிவில்லாத பித்தர்போல இவனுங் கொடுக்கற்பாலதித்துணைத்தென வரையறைப்படுத்தாது கொடுத்தானெனன்பார் பிச்சரிற்கொடுத்தென்றுங்கூறினார். இவன் அச்சம் அற்று என்பதனைப் புரோசனனுக்கேற்றுதல் சிறப்பின்று. அம்மனை - அக்கினி. நீர்பிறத்தற்குக் காரணமாயுள்ளது என்றபடி. கிருபீடயோனியென்னும் வடமொழியைநோக்கி இங்ஙனங் கூறினார். அம்மனைக்கம்மனைவழங்கி எனப் பாடமோதி, தாய்க்கு அவ்வீட்டைக்கொடுத்துத் தீக்கொளுவ நியமித்தகாலம் இன்றோ என்றோ என நினைந்திருந்தானெனப் பொருள்கொள்ளலுமொன்று. இப்பொருட்கு நிச்சம் ஆகுபெயர். (கஉரு)

விடவிவன்சினைநெடுங்கொடிதழுவலின்மிடைந்த
வடவியெங்கணும்வேட்டையாற்றங்கள்பேராண்மை
நடவிநன்பகலிரவுகண்டுயிலலர்நடந்தார்
புடவிதங்கள்வெண்குடைநிழற்குளிருமாபுரப்போர்.

(இ - ள்.) புடவிதங்கள் வெண்குடை நிழல் குளிருமா புரப்போர்-பூமியைத் தங்களுடைய வெண்மையாகிய குடைநிழலாற் குளிரும்படி காக்கின்ற பாண்டவர்கள்—நன்பகல் - நல்ல பகற்காலத்தில்—விடவி வன்சினை நெடுங்கொடி தழுவலின் மிடைந்த அடவி எங்கணும் - மரங்களினுடைய வலிய கோடுகளில் நெடிய கொடிகள் தழுவிப் படர்தலினால் நெருங்கிய காடுகளெங்கும்—வேட்டையால் தங்கள் பேராண்மை நடவி - வேட்டையாடுதலாற் றங்களுடைய பெருமையாகிய ஆண்டன்மையை நடாத்தி—இரவு கண்துயிலலர் நடந்தார் - இரவில்நித்திரை செய்யாதவர்களா யொழுகினார். எ - று.

குளிருமாறு என்பது குளிருமா என ஈறு குறைந்து நின்றது. நன்பகல் கடும்பகலெனினுமாம். முற் செய்யுளில் 'இன்றுகொ லென்றுகொ லென நினைந்திருந்தான்' என்றதனாலும் இச்செய்யுளில் நடந்தார் என்றதனாலும் பகலில் வேட்டையாடியும் இரவில் நித்திரை யின்றியும் பலநா ளொழுகினார்கள் என்பது பெறப்பட்டது. கடுங்காமம் கடுவேட்டமுதலியன பிறவுயிர்களைப் பாதுகாக்கும் அரசர்க்கு இடையீடாகலின், இவை ஆகாவென நீதிநூல்கள் விலக்கி இருக்கவும், பாண்டவர்கள் அந்நூற் கருத்திற்குமாறாய்ப் பல பகலெல்லாம் வேட்டையாடினாரெனவே, பிறவுயிர்களைப்பாது காத்தலிற் பராமுகராய் ஒழுகினாரென்று தவறுண்டாதலைக் கருதி, தம்முயிரைப்பாதுகாத்தற்குப் பகலெல்லாம் வேட்டமாடினும் அதுபற்றிப் பிறவுயிர்களைப்பாதுகாத்தலையும் ஒழிந்தார் அல்லரென்பார் புடவிதங்கள் வெண்குடை நிழற்குளிருமாபுரப்போரென்றார். (கஉசு)

பார்த்தனோடொருமனைவயிற்பயில்பவர்போல
வேந்தரைவருமந்திரவலியினான்மிக்கோர்
காந்துநெஞ்சுடையமைச்சனைக்கைவிடாரணுகித்
தாந்தமெய்யெனவுயிரெனத்தனித்தனிசார்ந்தார்.

(இ - ள்.) மந்திர வலியினால் மிக்கோர் வேந்தர் ஐவரும் - ஆலோசனைவலியினால் மேம்பட்ட பாண்டவரைவரும்—பார்த்தனோடு ஒரு மனைவயின் பயில்பவர்

போல-பாம்போடு ஒரு வீட்டிலிருப்பவரைப்போல—காந்து நெஞ்சு உடை அமைச்சனை - அழலுகின்ற மனத்தையுடைய மந்திரியை—தாம் தனித்தனி தம் மெய் என உயிர் எனக் கைவிடார் அணுகிச் சார்ந்தார்-தாம் தனித்தனி தம்முடம்பைப் போலவும் உயிரைப்போலவும் பிரியாதவராய்க் கிட்டிச் சேர்ந்தார்கள். எ - று.

மிக்கோர் பெயரெச்சமுற்று. பாந்தளோடொருமனைவயிற் பயில்வர்போலச் சார்ந்தார், தாம் தனித்தனி தம்மெய்யெனவுயிரெனச்சார்ந்தாரென்றியையும். தீய பாந்தளோடொருமனைவயிற் பயில்வோர் அது எங்ஙனமாயினுந் தம்முயிர்க்குக் கேடுபயக்குமென்ற பேரச்சத்தோடு தம்மைக் குறிக்கொண்டு காத்தொழுகிப் பயிலுமாறுபோல இவருந் தீய புரோசனனோடொருமனைவயிற் பயிலுதலால் அவன் எங்ஙனமாயினுந் தம்முயிர்க்குக் கேடுபயக்குமென்ற பேரச்சத்தோடு தம்மைக் குறிக்கொண்டு காத்தொழுகிப் பயின்றார் என்பார் பாந்தளோடொருமனைவயிற்பயில்பவர்போல என்றும், ஐவரும் புரோசனனாற்றீமை நிகழாதபடி தனித்தனியே அவனைப் பிரியாதிருந்து தம்மைக் காத்துக்கொண்டார் என்பார் தாம் தனித்தனி தம்மெய்யெனவுயிரெனக்கைவிடாரணுகிச்சார்ந்தார் என்றுங் கூறினார். (கஉஎ)

ஆங்கொர்கங்குலினழைத்துநீடரசியலுசாவி
யீங்குநீதுயில்வைகுதியெம்முடனென்னப்
பாங்கர்மெல்லணைப்பள்ளியும்பரிவுறவழங்கித்
தாங்களும்பொலஞ்சேக்கையிற்றங்கினரன்றே.

(இ - ள்.) ஆங்கு ஓர் கங்குலின் அழைத்து-அவ்விடத்தில் ஒரு இராத்திரியிற் (புரோசனனை) அழைத்து—நீடு அரசியல் உசாவி-பெரிய அரசியலை விசாரித்து—நீ ஈங்கு எம்முடன் துயில் வைகுதி என்ன - நீ இவ்விடத்தில் எங்களோடு நித்திரைசெய்குதியென்று—பாங்கர் மெல் அணைப் பள்ளியும் பரிவு உற வழங்கி - தங்கள் பக்கத்தில் மெல்லியமெத்தையாகிய படுக்கையையும் அன்புமிகக்கொடுத்து—தாங்களும் பொலம்சேக்கையில் தங்கினர் - தாங்களும் அழகிய படுக்கையிற் படுத்தார்கள். எ - று.

அன்று, ஏ - அசைகள். பள்ளியும், தாங்களும் என்னும் உம்மைகள் எச்சம். துயில்வைகுதி ஒருசொல். அணைப்பள்ளி இருபெயரொட்டுப் பண்புத்தொகை. பாங்கர் இறுதிப்போலி. புரோசனனைத் தாமாயழைத்து நமக்கருகிற் பள்ளிகொள்ளுகவெனின் அவன் ஐயுறுவனெனக்கருதி, அவன் ஐயுறாதபடி அரசியலுசாவுவார்போலழைத்துப் பானாள்யாமம்வரைக்கும் உசாவித், தங்கருத்தெளிதில் வாய்க்க அவன்மீது அன்புடையார்போலத் தம்மருகிற் பள்ளிகொள்ளுகவென அணையை வழங்கினாரென்க. (கஉஅ)

உணர்வறத்துயிலுற்றபோதற்றமங்குணராத்
துணைவரைத்திருத்தாய்பதந்தொழுகெனச்சொல்லி
யணிகொள்கோயிலைத்தாதைநண்பனுக்கிரையளித்தா
னிணையிலாவமுதுரகர்கோனிடைநுகர்ந்திருந்தான்.

(இ - ள்.) உணர்வு அறத் துயில் உற்றபோது - புரோசனன் உணர்ச்சி நீங்க நித்திரைசெய்தபொழுது—இணை இலா அமுது உரகர்கோனிடை நுகர்ந்து இருந்தான் - ஒப்பில்லாத அமிர்தத்தைச் சேடனிடத்தே உண்டு அவன் நகரத்திலிருந்த வீமன்—அங்கு அற்றம் உணரா - அப்பொழுது சமயத்தை அறிந்து—துணைவ

ரைத் திருத் தாய் பதம் தொழுக எனச் சொல்லி - துணைவர்களை அழகிய தாயினுடைய கால்களை வணங்குக என்று சொல்லி—அணிகொள் கோயிலை - அழகுபொருந்திய அரக்குமாளிகையை—தாதை நண்பனுக்கு இரை அளித்தான் - (தன்) பிதாவினுடைய சினேகிதனாகிய அக்கினிக்கு உணவாகக் கொடுத்தான். எ - று.

தொழுக என்னும் வியங்கோளீறு தொக்கது. அமிர்தையுரசர்கோனகரிலுண்டு எட்டுநாள்வசித்த சாதுரியனுதலிற் புரோசனன் உணர்வறத் துயில்கொள்ளுமற்றமுணர்ந்து எவருஞ் செயற்கரிய செய்கையைச் சாதுரியமாய்ப் பதருது முடித்தானென்பார் இணையிலாவமுதுரகர் கோனிடை நுகர்ந்திருந்தானென்ருர். அரசகுமரனுகிய வீமன் தானும் துணைவருங் குடியிருந்த மாளிகையை எரித்தானெனக்கூறல் மங்கலமன்மையின், அணிகொள்கோயிலைத்தாதை நண்பனுக்கிரையளித்தானென மங்கலமாகக் கூறினர்; "கொல்லக்கோலிளகிற்றன்றே." என்பது போல. இவ்வரக்குமாளிகையைக் கழிந்து தாம்போதற்காகத் துணைவரை ஒருசேரத் தாயிருக்குமாளிகையிற் புகுத்துங் கருத்தினனாய் அவரைத் தாய்பதந்தொழுக எனச் சொன்னானென்க. (கஉகூ)

முடியுடைத்தடங்கிரியினைமுளிகழைதொறுமுற்
றடிநிலத்துறச்சூழ்வருமாறுபோலழலோன்
கொடிநிரைத்தபொற்கோபுரப்புரிசைசூழ்கோயி
லிடியிடித்தெனவெடிபடச்சிரித்தெழுந்தெரித்தான்.

(இ - ள்.) அழலோன் - அக்கினிதேவன்—முடி உடைத் தடம் கிரியினை - சிகரத்தையுடைய விசாலமாகிய மலையை—முளி கழைதொறும் உற்று அடி நிலத்து உறச் சூழ்வருமாறுபோல் - அதிலுள்ள காய்ந்த மூங்கில்கடோறும் பற்றி அடிப்பரப்பிற்பொருந்தச் சூழுமாறுபோல—கொடி நிரைத்த பொன் கோபுரப் புரிசைசூழ் கோயில் - கொடிகள் நிரைக்கப்பட்ட அழகிய கோபுரத்தையுடைய மதில்சூழ்ந்த மாளிகையை—இடி இடித்தென வெடிபடச் சிரித்து எழுந்து எரித்தான் - இடியிடித்தாற்போலப் பேரொலியுண்டாக நகைத்து எழுந்து எரித்தான். எ - று.

இடியிடித்தென்பதனை அணியலுமணிந்தென்ருற்போற் கொள்க. சூழ்வரல் ஒருசொல். வீமன் கொளுவிய தீ மாளிகையின்மீதுள்ள மென்மையான கொடிகளில் முன்பற்றிப் பின் கீழுள்ள அரக்குமாளிகையின்புடையிற் பற்றிற்றென்பார் முடியுடைத்தடங்கிரியினைமுளிகழைதொறுமுற்றடிநிலத்துறச்சூழ்வருமாறுபோல் என்ருர். "கொடியைப்பற்றிவிதானங்கொளுத்தி" என்ருர் ஆசிரியர் கம்பருமென்க. (கஙூ0)

அக்கணத்திடையன்னையிலனுகியாங்கவரைத்
தொக்கசித்திரத்தூணடித்துவாரமேவழியாப்
பொக்கெனக்கொடுபோயசல்வனத்திடைப்புகுந்தான்
முக்கணற்புதன்முனிந்தவூர்மூவரோடொப்பான்.

(இ - ள்.) அக்கணத்திடை - அந்தக் கணப்பொழுதில்—முக்கண் அற்புதன் முனிந்த ஊர் மூவரோடு ஒப்பான் - மூன்று கண்களையுடைய ஞானசொரூபியாகிய சிவபெருமான் எரித்த திரிபுரத்தில் எரியாது தப்பிய வாணாசுரன்முத

லிய மூவரையும் ஒத்த வீமன்—அன்னை இல் அணுகி-தாயினுடைய மாளிகையை அடைந்து—அவரை - அவரனைவரையும்—தொக்க சித்திரத் தூண் அடித்துவாரமே வழியா - திரளான சித்திரங்களையுடைய தூணின்கீழுள்ள முழைஞ்சே வழியாக—பொக்கெனக் கொடுபோய் அகல் வனத்திடைப் புகுந்தான் - விரைவாய்க் கொண்டுபோய் அகன்ற இடிம்பவனத்தைச் சேர்ந்தான். எ-று.

ஆங்கு - அசை. ஏகாரம் பிரிநிலை. பொக்கெனல் விரைவுக்குறிப்பு. புரோசனன் முதலியோரெரியத் துணைவரோடு தானுமெரியாது தப்பிக்கொண்டமையின் முக்கணற்புதன்முனிந்தவூர் மூவரோடொப்பான் என்றார். திரிபுரத்தில் எரியாது தப்பினார் வாணாசுரன்முதலாகிய மூவரென்பது கல்லாடர் கருத்தென்க) அற்புதம் - ஞானம். (௧௩௧)

புரிந்ததீயினைக்கண்ணினீரவித்திடப்புகுந்து
பரிந்தநெஞ்சினைமீண்டுமப்பாவகன்சுடவே
கரிந்தகோயிலிற்காரிருள்புலர்ந்தபின்கண்டோ
ரெரிந்துவீழ்ந்தனரைவரும்யாயுமீண்டென்றார்.

(இ - ள்.) கார் இருள் புலர்ந்தபின் கண்டோர் - கரிய இருள் விடிந்தபின் கண்டவர்கள்—கரிந்த கோயிலில் - எரிந்த மாளிகையில்—புரிந்த தீயினைக் கண்ணில் நீர் அவித்திடப் புகுந்து - சுவாலித்த அக்கினியைத் தங் கண்ணினின்று புறப்பட்ட நீர் தணிக்கப் பிரவேசித்து – அப் பாவகன் - அந்த அக்கினி தேவன்—மீண்டும் - (மாளிகையைச் சுட்டதன்றித் திரும்பவும்—பரிந்த நெஞ்சினை சுட - வருந்தின தம்மனத்தைச் சுட—ஐவரும் யாயும் ஈண்டு எரிந்து வீழ்ந்தனர் என்றார் - பாண்டவரைவருந் தாயும் இவ்விடத்தில் எரிந்து வீழ்ந்தார் என்றார்கள். எ - று.

ஏ - அசை. மீண்டும் என்னும் உம்மை எச்சம். கண்ணில் என்பதில் இல்லுருபு நீக்கப்பொருட்டு. வேடரைவருந் தாயும் எரிந்துகிடந்தமை கண்டோர் பாண்டவரைவருந் தாயும் எரிந்துகிடந்தாரெனக் கருதினாரென்க. (௧௩௨)

விருந்தராய்விடமிடச்செலைவேடருந்தாயு
மிருந்ததீமதியமைச்சனோடிறந்தமையுணரார்
திருந்துமாமதிப்பாண்டவர்செயலுமற்றறியார்
வருந்தினார்தமதுயிரிழந்தெனப்புவிமன்னர்.

(இ - ள்) புவி மன்னர் - பூமியிலுள்ள அரசர்கள்—விருந்தராய் விடம் இடச் செல் ஐ வேடரும் தாயும் - (துரியோதனனுடைய அனுமதிப்படி) புதியோராய்ப் பாண்டவர்களுக்கு நஞ்சூட்டச் சென்ற ஐந்து வேடுவர்களும் அவர்களுடைய தாயும்—இருந்த தீமதி அமைச்சனோடு இறந்தமை உணரார் - முன்றொட்டிருந்த துட்டபுத்தியையுடைய மந்திரியோடு இறந்தமையை யறியாதவராய்—திருந்து மாமதிப் பாண்டவர் செயலும் மற்று அறியார் - திருந்திய பெருமையாகிய புத்தியையுடைய பாண்டவரது செயலையும் அறியாதவராய்—தமது உயிர் இழந்து என வருந்தினார் - தம்முயிரிழந்தாற்போல வருந்தினார்கள். எ-று.

மற்று - வினைமாற்று. செயலும் என்னும் உம்மை எச்சம். உணரார், அறியார் என்பன வினையெச்சமுற்றுக்கள். பாண்டவர்க்கு விஷங்கலந்த தேனைக்

கொளுக்க ஐந்துவேடரையும் அவர் தாயையுந் துரியோதனன் அனுப்ப அவர்கள் அம்மாளிகையில் வந்திருந்தாரென்க. (சகூ)

போதுபட்டிருள்புகுந்தொளிபோனவானகம்போன்
மாதுபட்டபார்மடந்தைதன்மதிமுகமழுங்கத்
தீதுபட்டதுகுருகுலச்செல்வமென்றிரங்கி
யேதுபட்டனமுனிவரர்முதலினோரிதயம்.

(இ - ள்.) போது பட்டு இருள் புகுந்து ஒளிபோன வானகம் போல் - சூரியன் அஸ்தமிக்க அதனால் இருள்வர ஒளிநீங்கிய ஆகாயத்தைப்போல—மாது பட்டபார் மடந்தைதன் மதிமுகம் மழுங்க-அழகுபொருந்திய பூமிதேவியினுடைய சந்திரனையொத்த முகம் (ஒளி) மழுங்க—முனிவரர் முதலினோர் இதயம் - இருடிகள் முதலாயினோருடைய மனங்கள்—குருகுலச் செல்வம் தீதுபட்டது என்று இரங்கி ஏதுபட்டன - குருகுலச் செல்வம் பழுதுபட்டதென்று இரங்கி என்ன பாடுபட்டன ! எ - று.

அதிக வருத்தமுற்றன என்பது குறிப்பெச்சம். பட்டு, புகுந்து என்னுஞ் செய்தெனெச்சங்கள் செயவெனெச்சங்களாகத் திரிக்கப்பட்டன. மாது - அழகு. செல்வம் எவராலுங் கொண்டாடப்படுந் தன்மை. செல்வம் தன்னையாக்குதற்குரிய பாண்டவரழியவே தானுமழிந்ததென்பார் தீதுபட்டது குருகுலச் செல்வம் என்றார். (கூச)

கொட்பனற்சுடவிறந்தமைகேட்டலுங்குருக்க
டொட்பதத்துடனழுதிடுஞ்சுயோதனன்முதலோ
ருட்பனித்துமேல்வெயிலுறவெதும்புநீரொத்தார்
பெட்புறப்புவிமுழுவதும்பெறுங்கருத்துடையோர்.

(இ - ள்.) கொட்பு அனல் சுட இறந்தமை கேட்டலும் - சுழுதலையுடைய அக்கினி சுடப் பாண்டவர் அரக்குமாளிகையில் இறந்தமையைக் கேட்டலும்—துட்பதத்துடன் அழுதிடும் சுயோதனன் முதலோர் குருக்கள் - தீமையாகிய வியாசத்தோடு அழுகின்ற துரியோதனன் முதலிய குருகுலகுமாரர்கள்—பெட்பு உறப்புவி முழுவதும் பெறும் கருத்து உடையோர் - ஆசைமிகப் பூமி முழுவதையும் பெறும் எண்ணத்தையுடையோராய்—வெயில் உற உட் பனித்துமேல் வெதும்பு நீர் ஒத்தார் - தன்மீது வெய்யில்பட உள்ளே குளிர்ந்து மேலே சுடுகின்ற நீரையொத்தார்கள். எ - று.

முதலோர் பெயரெச்சமுற்று. உடையோர் வினையெச்சமுற்று. கொட்பு தொழிற்பெயர். துரியோதனாதியர் பாண்டவ ரிறந்தா ரென்றமையின் நடிப்பு மாத்திரையாகக் காட்டிய செயற்கையாகிய துன்பத்தைப் புறத்தும் இயற்கையாகிய மகிழ்ச்சியை அகத்துமுடையராயினமையின், செயற்கையாகிய வெம்புதலை மேலுடைத்தாய் இயற்கையாகிய பனித்தலைத் தன்னுள்ளேயுடைய வெயிலுற்ற நீர் அவர்க்குவமையாயிற்று. வியாசம் - சாட்டு. (கூரு)

பொன்னலங்கொளமெழுகினாலாலயம்புனைந்து
துன்னுவெங்கதைப்படைமருச்சுதனையேசுடுவா
னென்னவாண்மைகொலெண்ணினுனெண்ணினுஞ்சுடுமோ
வன்னிதன்பெயர்மருச்சகனென்பதுமறந்தே.

(இ - ள்.) பொன் நலம் கொள மெழுகினல் ஆலயம் புனைந்து - (புறத்தே) பொன்னினழகு விளங்க அரக்கினாலே மாளிகையைச் செய்து—துன்னு வெம் கதைப்படை மருச் சுதனையே சுடுவான் எண்ணினன் - கொடுமைபொருந்திய தண்டப்படையையுடைய வாயுகுமாரனாகிய வீமனையே சுடும்படி (துரியோதனன்) நினைத்தான்—என்ன ஆண்மைகொல் - என்ன ஆண்டன்மையோ—எண்ணினும்- அவ்வாறவன் சிந்திப்பினும்—வன்னி - அக்கினி—தன்பெயர் மருச் சகன் என்பது மறந்து சுடுமோ - தன்பெயர் காற்றின்சகாயன் என்பதனை மறந்து சுடுமோ. எ - று.

ஏகாரங்கள் இரண்டில் முன்னையது வினா; பின்னையது அசை. ஓகாரம் எதிர் மறை. எண்ணினன் என்பதற்குப் புரோசனனை வினைமுதலாக்குதல் சிறப்பின்று. இது கவிகூற்று. (கஙஎ)

ஆ செய்யுள் - சஙஙஉ.

வாரணாவதச்சருக்க முற்றிற்று.

---

# வேத்திரகியச்சருக்கம்.

சீதநாண்மலர்க்கோயின்மேவுசெந்திருவினாயகன்றேவநாயகன்
வேதநாயகன்பூதநாயகன்விரதநாயகன்விபுதநாயகன் [நினைந்
போதகாதிபன்முதலைவாயிடைப்பொறைதளர்ந்துமுன்பொதுவிலே
தாதிமூலமேயென்னமுன்வருமாதிநாயகனடிவணங்குவாம்.

(இ - ள்.) சீத நாள் மலர்க்கோயில் மேவு செந் திருவின் நாயகன் - குளிர்ந்த புதிதாகிய தாமரைப்பூங்கோயிலில் வீற்றிருக்கும் இலக்குமிக்கு நாயகரும்— தேவ நாயகன் - தேவர்களுக்குத் தலைவரும்—வேத நாயகன் - வேதங்களுக்குத் தலைவரும்—பூத நாயகன் - ஆன்மாக்களுக்குத் தலைவரும்—விரத நாயகன் - விரதங்களுக்குத் தலைவரும்—விபுத நாயகன் - முனிவர்களுக்குத் தலைவரும்—முன் போதகாதிபன் முதலை வாயிடைப் பொறை தளர்ந்து - முற்காலத்திற் கசேந்திரனென்னும் யானையானது முதலைவாயி லகப்பட்டு வலிமை தளர்ந்து—பொதுவிலே நினைந்து ஆதிமூலமே என்ன - பொதுவாக நினைந்து ஆதிமூலமே என்றழைக்க—முன் வரும் ஆதி நாயகன் அடி வணங்குவாம் - அந்த யானைக்கு முன் வந்தருள்செய்த முதலாயுள்ள தலைவரும் ஆகிய விட்டுணுவினுடைய பாதங்களை வணங்குவாம். எ - று.

மூலமே என்னும் ஏகாரம் விளியுருபு. போதகாதிபன் வடநூன்முடிபு. இது "ஆனையுளரசன்" என்பதுபோல வடமொழிமுறைமைபற்றி உயர்திணை யாண்பாலாகக் கூறப்பட்டது. சந்திரகுலத்தரசன் யானையாக வந்தமைபற்றிப் போதகாதிபன் என்றார் என்பாருமுளர். (க)

தோள்கரம்புறந்தன்னிலன்னையுந்துணைவர்நால்வருந்தொக்குவைகவே
கோள்கரந்தபஃறலையராவெனக்குகரநீணெறிக்கொண்டுபோயபின்
றாள்களின்கதித்தாள்பறிந்துவீழ்தருவனத்ததோர்சாரன்மன்னினான்
மூள்கடுங்கொடுஞ்சினவனற்கண்மாமும்மதக்களிறனையமொய்ம்பினான்.

(இ - ள்.) மூள் கடும் கொடும் சின அனற் கண் - மூளுகின்ற மிகக்கொடிய கோபாக்கினிபொருந்திய கண்ணையும்—மா மும்மதக் களிறு அனைய மொய்ம்பி

ஞன் - கரிய மும்மதங்களையுடைய ஆண்யானையை யொத்த வலியினையுமுடைய னாகிய வீமன்—தோள் கரம் புறந்தன்னில் அன்னையும் துணைவர் நால்வரும் தொக்கு வைக - புயம் கை முதுகு ஆகிய இவைகளில் தாயும் துணைவராகிய நால் வருங் கூடியிருக்க—கோள் கரந்த பல் தலை அரா என- (இரையைக்) கவர்தலோடு (புற்றில் விரைந்து) மறைந்த பலதலையையுடைய பாம்பைப்போல—நீள் குகர நெறிக் கொண்டு போயபின் - நெடிய நிலவறை வழியாற் கொண்டு சென்றபின் னர்—தாள்களின் கதித் தாள் பறிந்து வீழ் - தன் கால்களின் விசைக்காற்றினால் அடிபாறி விழுகின்ற—தரு வனத்தது ஓர் சாரல் மன்னினான் - விருக்ஷங்களையு டைய காட்டின் ஒருபக்கத்தை யடைந்தான். எ - று.

ஏ - அசை. கதி - ஆகுபெயர். கோள்கரந்த அரா, பஃறலையரா எனத் தனித் தனியியையும். இரைகவர்ந்த பாம்பு புற்றிற்புகுமாறுபோல இவனும் இவரைக் கொண்டு முழைஞ்சிற் புகுந்தான் என்பார் கோள்கரந்த என்றும், துணைவர்தாயா கிய இவர்தலைகளும் வீமன் றலையும் ஒருசேர விளங்கினமையிற் பலதலையாயின வென்பார் பஃறலை என்றுங் கூறினார். கோள்கரந்த பஃறலையரா வென்பதற்குச் சந்திர சூரியராகிய கிரகங்களை விழுங்கிய பலதலையையுடைய பாம்பெனப் பொரு ள்கூறுவாருமுளர். உவமேயத்தோடு உவமை சம்பந்தப்படாது முரணுதலின் அதுபொருந்தாதென்க. (உ)

அவ்வனத்தில்வாழரமடந்தையென்றையமெய்தவோரடலரக்கிவந்
திவ்வனத்திலிந்நள்ளியாமநீயென்கொல்வந்தவாறிவர்களியாரெனச்
செவ்வனத்திதழ்க்கூரெயிற்றெழுந்தெண்ணிலாவினிற்றிமிரமாறவே
வெவ்வனற்சுடர்க்கொத்தவோதியாள்வீமசேனனோடுரைவிளம்பினாள்.

(இ - ள்.) வெவ் அனற் சுடர்க்கு ஒத்த ஓதியாள் ஓர் அடல் அரக்கி-கொடிய அக்கினிச் சுவாலையை யொத்த அளகத்தையுடைய ஒரு வலிய இராக்கதப் பெண் ணாணவள்—அவ் வனத்தில் வாழ் அரமடந்தை என்று ஐயம் எய்தவந்து - அந்தக் காட்டில்வாழுந் தெய்வமகளென்று சண்டோரையமடைய வந்து—நீ இவ்வனத் தில் இந் நள்ளியாமம் வந்த வாறு என் - நீ இக்காட்டில் இந்நடுயாமத்தில் வந்த வாறென்னை—இவர்கள் யார் என - இவர்கள் யாரென்று—செவ் வனத்து இதழ்க் கூர் எயிற்று எழும் தெள் நிலாவினில் திமிரம் மாற - செந்நிறத்தையுடைய அத ரத்தின்மேல் விளங்கும் கூரிய வக்கிரதந்தங்களில் எழுகின்ற தெளிந்த நிலவால் இருள் கெட—வீமசேனனோடு உரை விளம்பினாள் - வீமசேனனோடு பேசினாள். எ - று.

கொல், ஏ - அசைகள். ஓதியாள் பெயரெச்சமுற்று. சுடர்க்கு என்னும் நான் கனுருபு இரண்டனுருபாகத்திரித்துப்பொருளுரைக்கப்பட்டது. இவர்கள்யாரென உரைவிளம்பினாள் என்றியையும். வன்னம் வனமென்றாயிற்று. உருவமுதலியவற் றால் எவரும் அரமடந்தையென்றையுறற்பாலள் என்பார் அரமடந்தையென்றைய மெய்த என்றார். (ந)

யானும்வந்தவாறுரைசெய்கேனினக்குரைசெய்நீயெனக்கியார்கொ லென்னனுங், தானுமங்கவன்றன்னொடோதுவாடழுவுமாதரந்தங்குசிந் தையா, ளூனுகந்துதின்றிடுமிடிம்பனென்றொருவனிங்கிராவணியை யொத்துளான், மானுடங்கொண்மெய்க்கந்தமூர்தலால்வரவறிந்தனன் வாளரக்கனே.

(இ - ள்.) யானும் வந்தவாறு நினக்கு உரைசெய்கேன் - நானும் இங்கே வந்தபடியை உனக்குச் சொல்லுவேன்—நீ யார் எனக்கு உரைசெய் என்னலும் - நீயார் எனக்கு அதனை முன்னே சொல்லுக என்று (வீமன்) சொல்லவும்—தழ்வும் ஆதரம் தங்கு சிந்தையாள் தானும் - அவனைப் புணரும் விருப்பம்பொருந்திய மனத்தையுடைய அவளும்—அவன்றன்னொடு ஓதுவாள் - அவ் வீமனோடு சொல்லுவாள்—ஊன் உகந்து தின்றிடும் இடிம்பன் என்று ஒருவன் - தசையை விரும்பி உண்கின்ற இடிம்பனென்று ஒருவன்—இராவணியை ஒத்து இங்கு உளான் - இராவணன் மகனாகிய இந்திரசித்தையொத்து இங்கேயிருக்கின்றான்—வாள் அரக்கன் - கொலைத்தொழிலையுடைய அந்த இராக்கதன்—மானுடம் கொள் மெய்க் கந்தம் ஊர்தலால் வரவு அறிந்தனன் - மனுடசரீரத்தின்மணம் வீசுதலால் (நும்) வரவையறிந்தான். எ - று.

கொல், ஆங்கு, ஏ அசைகள். யானும், தானும் என்னும் உம்மைகள் எச்சம். சிந்தையாள் பெயரெச்சமுற்று. வாளரக்கன் சுட்டுப்பொருள்பட நின்றது. மாயத்தினும் வீரத்தினுஞ் சிறந்தானென்பாள் இராவணியையொத்துளான் என்றாள்.

எம்முனேவலால்யான்மலைந்திடற்கெய்தினேனினைக்கொன்று மென்பய, னம்மவெற்பிரண்டனையபொற்புயத்தழகெறிக்குநீடாரமார்ப கேள், கொம்மைவெம்முலைத்தெரிவையர்க்குளங்கூசுமாசைநோய்கூறு கிற்பதென், றெம்மனோர்களுஞ்சொல்வர்யானுனக்கெங்ஙனேகொலாமிறுதிகூறுகேன்.

(இ - ள்.) எம் முன் ஏவலால் யான் மலைந்திடற்கு எய்தினேன் - என் தமையனுடைய கட்டளையினால் யான் யுத்தஞ்செய்யவந்தேன்—நினைக் கொன்றும் என் பயன் - உன்னைக்கொன்றும் என்னபிரயோசனம்—வெற்பு இரண்டு அனைய பொன் புயத்து - மலைகளிரண்டையொத்த ஆபரணங்களையணிந்த புயங்களில்—அழகு எறிக்கும் நீடு ஆர மார்ப கேள் - அழகாக ஒளியை வீசுகின்ற பெரிய பதக்கமணிந்த மார்பையுடையவனே கேள்—கொம்மை வெம்முலைத் தெரிவையர்க்கு - வட்டமாகிய விரும்பப்படும் முலைகளையுடைய பெண்களுக்கு—ஆசைநோய் கூறுகிற்பது உளம் கூசும் என்று - தம்முடைய காமநோயைப் பிறர்க்குச் சொல்லுதற்கு மனம் நாணும் என்று—எம்மனோர்களும் சொல்வர் - (நாணஞ் சிறிதும் இல்லாத)நம்மவர்களுஞ் சொல்லுவார்கள்—யான் உனக்கு எங்ஙன் இறுதி கூறுகேன் - (அங்ஙனமாக) நான் உனக்கு எப்படி (என் கருத்தின்) முடிவைச் சொல்லுவேன். எ - று.

அம்ம, ஏ, கொல், ஆம் அசைகள். பொன் - ஆகுபெயர். கொன்றும் என்னும் உம்மை சிறப்பு. எம்மனோர்களும் என்னும் உம்மை எச்சத்தோடு இழிவு சிறப்பு. மலைந்திடற்கென்பது செயவென்வாய்பாடுபெற்றிவர்த வினையெச்சம். எறித்தற்கு வினைமுதல் ஆரம். கூறுகிற்பது தொழிற்பெயர். பெண்கள் ஆடவரில் எத்துணைப்பேராசையுறினும் அவர்க்கதனை வெளிப்படக்கூறாமை அவர் சாதிதருமமென்க. "தாமுறுங்காமத்தன்மை தாங்களேயுரைப்பதென்ப - தாமெனலாகாதன்றூலருங்குலமகளிர்க்கம்மா" என்றார் ஆசிரியர் கம்பருமென்க. பொற்புயத்து அழகெறிக்கும் நீடாரமார்ப என்பதற்குப் புயத்தையும் மார்பையுமுடையவனே எனப் பொருள்கூறினும் அம்ம என்பதனைக் கொன்றும் என்பதனோடியைத்து இரக்கத்தின் கட்குறிப்பாக்கினும் அமையும். (ரு)

பெருஞ்சுழிப்படக்கரைபுரண்டெழப்பெருகும்யாறுபின்பிறழ் கலங்கல்போ, யருஞ்சுவைப்படுந்தெளிவிஞேடுசென்றாழிவேலைவாய ணையுமாறெனப், பெருஞ்சினத்துடன்கொன்றுதின்றிடப்போதருந் தொழிற்பேதைநான்மெலிந், திருஞ்சிறைச்சுரும்பிசைகொண்மாலையா யின்பமாலுழந்துன்னையெய்தினேன்.

(இ - ள்.) இரும் சிறைச் சுரும்பு இசைசொள் மாலையாய் - பெரிய சிறகை டைய வண்டுகள் இசைபாடும் மாலையையுடையவனே—பெருஞ்சுழிப்படக் கரை புரண்டெழப் பெருகும் யாறு - பெரிய சுழியுண்டாகவும் கரைகள் புரண்டெழவு பெருகுகின்ற யாருனது—பின் பிறழ் கலங்கல் போய் - பின்பு வேறுபட்ட கலங் கல்நீங்கி—அரும் சுவைப்படும் தெளிவிஞேடு சென்று - அரிய சுவையையுடைய தெளிதலோடுபோய்—ஆழி வேலைவாய் அணையுமாறு என - ஆழமாகிய கடலிற் பாயுந்தன்மைபோல—பெருஞ் சினத்துடன் கொன்று தின்றிடப் போதரும் தொ ழிற் பேதை நான் - பெருங் கோபத்துடன் கொன்று தின்னும்படிவருந் தொழி லையுடைய பெண்ணுகிய நான்—மெலிந்து இன்பமால்உழந்து உன்னைஎய்தினேன் வருந்திக் காமவிகாரத்தைப்பொருந்தி உன்னை யடைந்தேன்- எ - று.

கரைபுரண்டெழக்கலங்கிப் பெருகும்யாறு பின் அக்கலங்கனீங்கித் தெளி ந்து கடலிற்புகுமாறுபோலக் கோபத்தோடுன்னைக் கொன்றுதின்னும்படிவந் நானும் உன்மேற்கொண்ட ஆசையால் அக்கோபந்தணிந்துன்னையடைந்தேனெ ன்று இங்ஙனம் தன்காமத்தை வெளிப்படக்கூறிஞள், தன்னுயிர் இறந்துபடுமெ என்றமையானும் தன்விரகத்தைக் கூறுதற்குரிய தோழியர் முதலாயிஞர் தன்ன ருகில் இன்மையானும் என்க. பசிமயல்பிணித்த எளிய பறைவையாகியவண்டுக ளுக்கும் தேனையூட்டி இளைப்பாற்றும் மாலையையுடைய நீ இன்பமாலுழந்துன் னையெய்திய எனக்கும் இம்மையலை நீக்கியருள்புரிவை என்பாள் சுரும்பிசைகொ ண்மாலையாய் என இங்ஙனம் அடைகொடுத்துக் கூறிஞள். (சு

நீடியிங்குநானிற்கின்மாரனுநிருதனிற்கவந்நிருதன்வெம்மையோ டோடிவந்தெனைக்கொல்லுமும்மையுமொருகணத்திலேயுயிர்செகுத்திடு நாடியென்கொன்மற்றுய்ந்துபோகலாநம்பியென்னைநீநலனுறத்தழீஇக் கோடியம்பரத்திடையெழுந்துனைக்கொண்டுபோவலோர்குன்றிலென் னவே.

(இ - ள்.) நான் இங்கு நீடிநிற்கில் - நான் இங்கே நீடித்துநிற்கில்—மாரன்ஆம் நிருதன் நிற்க-மன்மதனுகிய இராக்கதன் (கொல்லுதற்கமைந்து) நிற்க—அந் நிரு தன் வெம்மையோடு ஓடி வந்து எனைக் கொல்லும் - (அதற்குமுன்) அந்த இடிம் பன் என்னும் இராக்கதன் வேகத்தோடு ஓடிவந்து என்னைக் கொல்லுவான்—உம் மையும் ஒரு கணத்தில் உயிர் செகுத்திடும் - உங்களையும் ஒரு கணப்பொழுதில் உயிர் நீக்குவான்—நாடி என்-சிந்தித்தாவதென்—மற்று உய்ந்துபோகலாம் - நாம் இனி உய்ந்துவிடலாம்—நம்பி என்னை நீ நலன் உறத் தழீஇக் கோடி - நம்பியே என்னை நீ இன்பம்மிகத் தழுவிக்கொள்ளுதி—அம்பரத்திடை எழுந்துஉனை ஓர்குன் றில் கொண்டு போவல் என்ன - நான் ஆகாயத்திலெழுந்து உன்னை ஒருமலையி லே கொண்டுபோவேன் என்றுசொல்ல. எ - று.

ஏ இரண்டும் கொல்லும் அசைகள். மற்று - வினைமாற்று. உம்மை எச் சத்தோடு சிறப்பு. மன்மதன் சிறிதுமிரங்காது தன்னைவருத்துதலின் அவனை

ருதன் என்றுள். மாரனுநிருபன் என்ற பாடத்திற்கு மாரனுகிய அரசன் என்று பொருள்கூறுக. (எ)

இரக்கமின்றியேதனிவனத்திலேயிளைஞரெம்முன்யாயிவரைவிட்டெமைப், புரக்கவல்லளென்றொருமடந்தைபின்போவதாடவர்க்காண்மைபோதுமோ, வரைக்கண்வாழ்வுகூர்நம்முனெம்முனேமலையவெண்ணிமேல்வந்தபோதுபா, ரரக்கனுகிலென்னவுணனுகிலென்னவனையோர்கணத்தாவிகொள்வனே.

(இ - ள்.) வனத்தில் - காட்டில்—இரக்கம் இன்றி இளைஞர் எம்முன் யாய் இவரைத் தனிவிட்டு - இரக்கமில்லாமல் தம்பியர் தமையன் தாய் ஆகிய இவர்களைத் தனியேவிட்டு—எமைப் புரக்க வல்லள் என்று ஒரு மடந்தைபின் போவது- நம்மைக் காக்கவல்லள் என்று ஒருபெண்ணின் பின்போதல்—ஆடவர்க்கு ஆண்மை போதுமோ - ஆடவர்க்குரிய ஆண்மைக்கு ஏற்குமோ—வரைக்கண் வாழ்வுகூர் நம்முன் - மலையில் வாழ்கின்ற உன்தமையனுனவன்—எம்முன் மலைய எண்ணி மேல்வந்தபோது பார் - நமக்குமுன்னே யுத்தஞ்செய்யவெண்ணி எதிர்த்துவந்த பொழுது காணுதி—அரக்கன் ஆகில் என் அவுணன் ஆகில் என் - இராக்கதனுனலென்ன அசுரனுனலென்ன—ஓர் கணத்து அவனை ஆவி கொள்வன்-ஓர், கணப்பொழுதில் அவனுடைய ஆன்மாவைக் கவருவேன். எ -று.

ஏகாரம் நான்கும் அசைகள். ஈற்றில் ஏகாரத்தைத் தேற்றமாக்கினும் அமையும். ஓகாரம் - எதிர்மறை. ஆண்மைபோதுமோ என்பதில் நான்கனுருபு தொக்கது. (அ)

இடிம்பைதன்மனங்கொண்டகாளையிங்கிவையியம்பலுநவையிடிம்பனுங்
கொடும்பெருஞ்சினங்கதுவுகண்ணினன்குருதிநாறுபுன்கூரெயிற்றின
னுடம்புபெற்றதோரிருண்முகத்திலேயோரிரண்டுவெஞ்சுடருதிக்கவு
நெடும்பிறைக்கொழுந்தோரிரண்டுவானிலவெறிக்கவுநின்றநீர்மையான்.

(இ - ள்.) இடிம்பைதன் மனம் கொண்ட காளை இங்கிவை இயம்பலும் - இடிம்பையினுடைய மனதைக் கவர்ந்த வீமன் இவைகளைச் சொல்லுதலும் - நவை இடிம்பனும் - குற்றத்தையுடைய இடிம்பனென்பவனும்—கொடும் பெரும் சினம் கதுவு கண்ணினன் - கொடிய பெரிய கோபம்பொருந்திய கண்களையுடையனுதலினுலும்—குருதி நாறு புன் கூர் எயிற்றினன் - இரத்தங்கமழும் எளிய கூரிய வக்கிரதந்தங்களையுடையனுதலினுலும்— உடம்பு பெற்றது ஓர் இருள் - (கரசரணுதியவயவங்களைப்பெற்ற) உடம்பை யெடுத்த ஓரிருளானது—முகத்தில் தன் முகத்தில்—ஓர்இரண்டுவெஞ்சுடர்உதிக்கவும்-இரண்டுசூரியர்கள்உதிக்கவும்- நெடும் பிறைக் கொழுந்து ஓர் இரண்டு வால் நிலவு எறிக்கவும் - நெடிய இளம்பிறைகளிரண்டு வெண்மையாகிய நிலாவை வீசவும்—நின்ற நீர்மையான் - நின்றாற்போன்ற தன்மையையுடையனுய். எ - று.

தன், ஏ - அசைகள். இடிம்பனும் என்னும்உம்மை எச்சம். கண்ணினன், எயிற்றினன் என்பன வினையாலணையும்பெயர்கள். நீர்மையான்வினையெச்சமுற்று. ()

இடிபடுத்தெழுந்தெழிலிமின்னுமாறென்னநீடுகுன்றெதிரொலிக்கவே
வெடிபடச்சிரித்திருபுறத்துநாமிளிரவுட்புகைந்தொளிரும்வாயினு
னெடில்படுத்தவெங்கானமெங்கணுநிழல்படுத்திவானுறநிமிர்ந்துளான்
கொடிபடுத்தநுண்ணிடையிடிம்பையைக்கூவியவ்விடைக்குறுகினனரோ

(இ - ள்.) உட் புகைந்து - மனமழன்று—எழிலி எழுந்து இடி படுத்து மின்னுமாறு என்ன - முகில் எழுந்து இடியைக்கக்கி மின்னுந்தன்மைபோல—நீடு குன்று எதிர் ஒலிக்க வெடிபடச் சிரித்து - பெரிய மலை பிரதித்தொனிசெய்யும்படி பேரொலியுண்டாகச் சிரித்து—இரு புறத்தும் நா மிளிர - இருகடையிலும் நாக்கு விளங்க—ஒளிரும் வாயினன் - பிரகாசிக்கும் வாயையுடையனாய்—நெடில் படுத்த வெம் கானம் எங்கணும் நிழல் படுத்தி வான் உற நிமிர்ந்துளான் - மூங்கில்கள்செறிந்த வெம்மையாகிய காடெங்கும் நிழலையுண்டாக்கி ஆகாயத்தைப்பொருந்த உயர்ந்தவனாய்—கொடி படுத்த நுண் இடை இடிம்பையைக் கூவி - கொடியைவென்ற நுண்ணிய இடையையுடைய இடிம்பையைக் கூப்பிட்டுக்கொண்டு—அவ்விடைக் குறுகினன் - அவ்விடத்தில் வந்தான். எ - று.

ஏ, அரோ அசைகள். வாயினன், நிமிர்ந்துளான் என்பன வினையெச்ச முற்றுக்கள், கூவிக்குறுகினன் என்பது துணைவினை; ஓடிவந்தான் என்பதுபோல. நீர்மையனாய்ப் புகைந்து சிரித்து வாயினனாய் நிமிர்ந்துளானாய்க் கூவிக் குறுகினன் என வினைமுடிவுசெய்க. வானுறநிமிர்ந்தமையாற் கானமெங்கும் நிழலுண்டாயிற்றென்க. (௧0)

உணவினாசையாற்கொல்லவந்தநீயுவகையாசையாலுள்ளழிந்திவன்
கணவனாமெனக்காதலிப்பதேகங்குல்வாணர்தங்கடனிறப்பதே
யணவுவெம்பசிக்கனலவிந்துபோயநங்கவெங்கனற்கொளுமடற்புலிப்
பிணவையன்பினிற்கலைநயப்பதேபேதைமானுடன்பேசுகிற்பதே.

(இ - ள்.) பேதை - பேதாய்—உணவின் ஆசையால் கொல்லவந்த நீ-உணவில் விருப்பத்தினாற் கொல்லும்படி வந்தநீ—உவகை ஆசையால் உள் அழிந்து-காமவிருப்பினால் மனமழிந்து—இவன் கணவன் ஆம் எனக் காதலிப்பதே - இவன் நாயகனாம் என்று ஆசைப்படலாமா—கங்குல்வாணர் தம் கடன் இறப்பதே - இராக்கதர்களுக்குரிய முறையிற்றவறலாமா—மானுடன் பேசுகிற்பது - இந்த மானுடன் உன்னோடு (விரும்பிப்) பேசுதல்—அணவு வெம் பசிக்கனல் அவிந்துபோய் அநங்க வெங்கனற் கொளும் அடற் புலிப்பிணவை - பொருந்திய கொடிய உதராக்கினிதணிந்து வெம்மையாகிய காமாக்கினியைக்கொண்டபுலிப்பிணவை—அன்பினில் கலை நயப்பதே - அன்பினாலே கலைமான் விரும்புதலேயாம். எ-று.

ஏகாரம் நான்கனுள் முன்னையவிரண்டும் எதிர்மறை; நயப்பதே என்பது தேற்றம்; பேசுகிற்பதே என்பது அசை. பேதையென்பது அண்மைவிளியாதலின் இயல்பாய், அது ஈண்டுஅறியாமையுடையாள் என்றதனையுணர்த்திற்று. பசிப்பிணி முற்றக்கெட்டதென்பான் அவிந்துபோய் என்றான். கங்குல்வாணர் என்பது நிசிசரர் என்னும்பொருட்டு. பேதைமையை மானுடனுக்கேற்றிப் பொருள்கொள்ளினும் அமையும். (௧௧)

வாரடாவுனக்கியாது தானர் தம்மகளடுக்குமோவானமாதர்தோள்
சேரடாமலைந்துயிரை மெய்யினைத்தின்றுதேவரூர்சேருவிப்பன்யான்
போரடாதுன்னோடாளியேறுபுன்பூனைதன்னுடன்பொரநினைக்குமோ
பாரடாவெனாண்மையையரக்கர்கைப்பட்டபோதில்யார்பாரில் வைகினார்.

(இ - ள்.) வார் அடா உனக்கு - (இராக்கதப்பெண்ணை மானுடன் விரும்பல் தகாது என்னும்) முறைமையைப் பொருந்தாத உனக்கு—யாது தானர்தம்மகள் அடுக்குமோ-இராக்கதப்பெண் இயைவாளா—யான் மலைந்து மெய்யினைத்தின்று-பான் யுத்தஞ்செய்து உன்னுடம்பைத் தின்று—உயிரினைத் தேவரூர் சேருவிப்பன் - உயிரைத் தேவருலகத்திற் சேர்த்துவேன்—வானமாதர் தோள்சேர் அடா-(அப்பொழுது உனக்கியைந்த) தெய்வப் பெண்களுடைய தோளைத் தழுவடா—உன்னோடு போர் அடாது - உன்னோடு போர்செய்தல் (என் பெருமைக்குத்) தகாது—ஆளி ஏறு புன் பூனைதன்னுடன் பொர நினைக்குமோ - சிங்கேறு எளிய பூனையோடு போர்செய்ய நினைக்குமா—என் ஆண்மையைப் பாரடா - என்னுடைய வீரத்தைப் பாரடா—அரக்கர் கைப்பட்ட போதில் பாரில் வைகினர் யார்-இராக்கதர்களுடைய கையிலகப்பட்டபொழுதுபூமியில் உயிரோடிருந்தவர்யாவர். எ - று.

ஓகாரங்கள் இரண்டும் எதிர்மறை. யார் என்னும் வினாப்பெயர் ஈண்டின்மை குறித்துநின்றது. அடாத என்னும் பெயரெச்சத்தீறு தொக்கது. உயிரை மெய்யினைத்தின்று தேவரூர் சேருவிப்பன் என்பது எதிர்நிரனிறை. வார்தல்-நேர்மை. அது ஈண்டு முறைமையையுணர்த்தி நின்றது. இடிம்பையை வீமனும் விரும்பினானாகக் கருதினமையின் வாரடாவுனக்கென்றான். வா அடா என்பனஎதுகை நோக்கி இடையில் ரகரமெய்விரிந்து வாரடாவென நின்றனவெனப் பொருள் கொள்வாருமுளர். (சஉ)

என்றுசீறிமற்றிவனடுத்தல்கண்டிணையிலாவிறற்றுணைவர்நால்வரு
நின்றயாயுமற்றொருபுறத்திலேநிற்கமையல்கூர்நிருதவல்லியும்
வென்றிநல்குமாவந்தவிந்தைபோல்விழிபரப்பமேல்வீமசேனனுஞ்
சென்றுகைகளாற்பற்கணாவுடன்சிதறவாயினிற்சென்றுகுத்தினான்.

(இ - ள்.) என்று சீறி இவன் அடுத்தல் கண்டு - என்றுசொல்லிக் கோபித்து இந்த இடிம்பன் தன்னைச் சமீபித்தலைக் கண்டு—இணை இலா விறல் துணைவர் நால்வரும் - நிகரில்லாத வலிமையினையுடைய துணைவர்கள் நால்வரும்—நின்ற யாயும் - (கலங்கி) நின்ற தாயும்—மற்றொரு புறத்தில் நிற்க- வேறொரு பக்கத்தில் நிற்க—மையல் கூர் நிருதவல்லியும் - காமமயக்கம்மிக்க இடிம்பையும்—சென்று வென்றி நல்குமா வந்த விந்தைபோல் விழிபரப்ப - (சமீபத்திற்) சென்று (தனக்கு) வெற்றியைத் தரும்படிவந்த வீரலக்குமியைப்போலப் பார்க்க—மேல் வீமசேனனும் சென்று - அவன்மீது வீமனுஞ் சென்று—பற்கள் நாவுடன் சிதறக் கைகளால் வாயினில் குத்தினான் - பற்கள் நாவோடு சிதறும்படி கைகளால் அவனுடைய வாயினிற் குத்தினான். எ - று.

மற்று, ஏ - அசைகள். நிருதவல்லியும், வீமசேனனும் என்னும் உம்மைகள் எச்சத்தோடு சிறப்பு. நல்குமாறென்பது நல்குமாவென நின்றது. இவள்போர்க்கஞ்சி யொதுங்கி நில்லாது, வீமன் வெல்லல்வேண்டும் என்னுங் கருத்தோடு எதிர்நின்று பார்த்தமையின் வென்றிநல்குமாவந்த விந்தைபோல் விழிபரப்ப என்றார். (சங)

குத்தினனிவன்குணபவல்சிதன்கூர்நகக்கரங்கொண்டுவீமன்மேன்
மொத்தினன்முனைந்திருவரும்பொரூஉர்முரணுடன்சினமூளமூளவே
தத்தினர்பிடுங்கியமரங்களாற்சாடினர்புயசயிலமொன்றொடொன்
றொத்தினரிரண்டம்புதங்கள்வானுருமெறிந்ததொத்தோசைமிஞ்சவே.

(இ - ள்.) இவன் குத்தினன் - இந்த வீமன் (இங்ஙனம்) குத்தினன்—குண பவல்சி தன்கூர் நகக் கரம் கொண்டு வீமன்மேல் மொத்தினன் - பிணத்தையுண வாகவுடைய இடிம்பன் தன்னுடைய கூரிய நகங்களையுடைய கையினால் வீமன் மேல் அடித்தான்—இருவரும் பொரூஉர் முரணுடன் முனைந்து சினம் மூள மூளத் தத்தினர் - இவரிருவரும் பொருதவராய் வலிமையோடு பொருது கோபம் மூள மூளப் பாய்ந்து—பிடுங்கிய மரங்களாற் சாடினர் - பிடுங்கின மரங்களால் அடித்து—இரண்டு அம்புதங்கள் வான் உரும் எறிந்தது ஒத்து ஓசை மிஞ்ச - இரண்டு முகில்கள் ஆகாயத்தில் இடியைக்கான்றதை யொத்து ஒலிமிக—புயசயிலம் ஒன்றொடு ஒன்று ஒத்தினர் - புயமலைகளை யொன்றோடொன்றுபடத் தாக்கினார்கள், எ - று.

ஏ இரண்டும் அசைகள். பொரூஉர், தத்தினர், சாடினர் என்பன வினையெச்ச முற்றுக்கள். "நேமியோ குலிசியோ நெடுங்கணிச்சியோ" என்னுஞ் செய்யுளில் நேமி கணிச்சி என்பன அவற்றை யுடையாரை யுணர்த்துமாறுபோலக் குணப வல்சியென்பது அதனையுடையானை யுணர்த்தி நின்றது. மூளமூள என்னும் அடுக்கு மிகுதிபற்றி வந்தது. (கச)

வளர்ந்ததிண்கருங்குன்றுகாந்தளைமலர்வதென்னவேவானகம்படக்,
கிளர்ந்தசெம்புணீர்பொசியுமெய்யினன்கேதநெஞ்சினன்கோதவாய்மை
யன், றளர்ந்துவீழ்நிசாசரனுமாடகன்றன்னையொத்தனன்பின்னைமுன்
னுறப், பிளந்தகோளரிதன்னையொத்தனன்பிரதையென்னுமின்பெற்ற
காளையே.

(இ - ள்.) வளர்ந்த திண் கரும் குன்று - வளர்ந்த திண்ணிய கரியமலை—காந்தளை மலர்வது என்ன - செங்காந்தட்பூவை மலர்தல்போல—வானகம் படக் கிளர்ந்த செம்புணீர் பொசியும் மெய்யினன் - ஆகாயத்திற்படக் கிளருகின்ற இரத்தம் பொசியுஞ் சரீரத்தை யுடையனாய்—கேத நெஞ்சினன்-கலக்கம் பொருந்திய மனத்தை யுடையனாய்—கோத வாய்மையன் - பயனற்ற வார்த்தையை யுடையனாய்—தளர்ந்து வீழ் நிசாசரனும் ஆடகன் தன்னை ஒத்தனன் - வருந்தி விழுகின்ற இராக்ஷதனும் இரணியனை யொத்தான்—பிரதை என்னும் மின் பெற்ற காளை - பிரதையென்னும் பெண் பெற்ற வீமன்—பின்னை - அவனைப் பிளந்தபின்பு—முன் உறப் பிளந்த கோளரிதன்னை ஒத்தனன் - முற்காலத்திலே மிக (அந்த இரணியனைப்) பிளந்த நரசிங்கத்தை யொத்தான். எ - று.

தன் இரண்டும் சாரியைகள். ஏ இரண்டும் அசைகள். நிசாசரனும் என்னும் உம்மை எச்சம். மெய்யினன், நெஞ்சினன், வாய்மையன் என்பன வினையெச்ச முற்றுக்கள். குன்று காந்தளைமலர்வது என்பது இடத்தினிகழ் பொருளின்வினை இடத்தின்மே லேற்றப்பட்டது. காந்தள்-ஆகுபெயர். கோதுகோதம் எனநின்றது.

வேறு.

வன்றிறலிடிம்பனைவயக்கையாலுட
லொன்றிரண்டாகுமாறுடன்றமைந்தனை
யன்றுகண்டனளியாயரியின்பேடுதன்
கன்றுதிண்கரிபொரக்கண்டதென்னவே.

(இ - ள்.) வன் திறல் இடிம்பனை - மிக்க வீரத்தையுடைய இடிம்பன் என்பவனை—வயக் கையால் உடல் ஒன்று இரண்டு ஆகுமாறு உடன்ற மைந்தனை - வலிய கையால் உடம்பொன்று இரண்டாகும்படி பொருத புதல்வனை—அரியின் பேடு - சிங்கப்பெட்டை—தன் கன்று திண் கரி பொரக் கண்டது என்ன - தன் கன்றானது வலிய யானையைப் பொருது அழிக்கக் கண்டதுபோல—யாய் ஆன்று கண்டனள் - தாயாகிய குந்திதேவி அன்றைக்குக் கண்டாள். எ-று.

ஏ - அசை. "யானையுங்குதிரையும்" என்னுஞ் சூத்திரத்தில் உரிய என்பதனால் அரியின்கன்றென்றாயிற்று. வன்றிறல் - ஒருபொருட்பன்மொழி. திறல் வலியினொரு கூறென்றலுமொன்று. இடிம்பனது வயிரித்த உடம்பைப் பிளந்த வலியுடைய கையென்பார் வயக்கை என்றும், கன்றும் பருவங்கடந்த யானை யென்பார் திண்கரி என்றுங் கூறினார். (கசு)

இளைஞருந்தம்முனுமிவனரும்பகை
களைகுவனினியெனக்கண்களித்தனர்
விளைவுறுகாதலான்மெலிந்தபாவையு
முளைவுடனுவகையுமொருங்கினெய்தினாள்.

(இ - ள்.) இளைஞரும் தம்முனும் - தம்பிமாரும் தமையனும்—இவன் இனி அரும்பகை களைகுவன் எனக் கண்களித்தனர் - இவன் இனி அரிய பகைகளைக் கெடுப்பன் என்று கண்களிப்படைந்தார்கள்—விளைவு உறு காதலால் மெலிந்த பாவையும் - முதிர்ந்த ஆசையினால் மெலிவடைந்த இடிம்பையும்—உளைவுடன் உவகையும் ஒருங்கின் எய்தினாள் - வருத்தத்தையும் மகிழ்ச்சியையும் ஒருசேர அடைந்தாள். எ - று.

இன் - சாரியை. பாவையும் என்னும் உம்மை எச்சம். ஒடுவின்பொருள்பட வந்த உடன் என்பது எண்ணுப்பொருளில் வந்தது. தமையன் இறந்தமையினால் வருத்தத்தையும், இனி வீமனைத் தழுவலாம் என்பதனான் மகிழ்ச்சியையும் அடைந்தாளென்பார் உளைவுடனுவகையு மொருங்கி னெய்தினாளென்றார். இளம்பருவத்தே வலியிற் சிறந்தானைக் கொன்றமையின் இனி இவன் பெரும் பகைவரைக் கோறலிலையமில்லையெனக் களித்தனரென்க. (கஎ)

பெருந்திறனிசாசரப்பிணத்தையவ்வனத்
திருந்துளபறவைகட்கிருள்செய்கங்குலின்
விருந்திடக்கொளுத்தியவிளக்கெனும்படி
யருந்திசைபொலிவுறவருக்கன்றோன்றினான்.

(இ - ள்.) பெரும் திறல் நிசாசரப் பிணத்தை-பெரிய வலிமையினை யுடைய இராக்கதப் பிணத்தை—அவ் வனத்து இருந்துள பறவைகட்கு - அக்காட்டிலிருக்கின்ற பட்சிகளுக்கு—இருள்செய் கங்குலின் விருந்திடக் கொளுத்திய விளக்கு எனும்படி-இருளைச்செய்கின்ற இராக்காலத்தில் விருந்துசெய்யுமாறு கொளுத்திய தீபம் என்று சொல்லும்படி—அரும் திசை பொலிவு உற அருக்கன் தோன்றினான் - மேன்மையாகிய கிழக்குத்திசை பொலிவடையச் சூரியன் உதித்தான். எ - று.

இருந்துள என்பது ஒருசொல். சூரிய னுதிக்குந் திசையாதலினாலும் மங்கல கருமஞ் செய்வார்க்குரிய திசையாதலினாலும் கீழ்த்திசையை அருந்திசை என்றார். இது என்னவென்னும் உவமைச் சொல்லோடுவந்த பெயர்பொருட்டற் குறிப்பேற்றம் என்னும் அலங்காரம். (கஅ)

கரங்களானிசாசரவிருளைக்காய்ந்துகொண்
டிரங்கிநீள்வனத்திடையிரவின்மாழ்கிய
வரங்கொடாமரைமுகமலர்த்துநீர்மையர்
உரங்கொள்வீமனுக்கெதிருதயபானுவே.

(இ - ள்.) கரங்களால் நிசாசர இருளைக் காய்ந்துகொண்டு - கைகளால் இராக்கதனாகிய இருளைக்கெடுத்து [கிரணங்களால் இரவிற் சஞ்சரிக்கும் இயல்பினையுடைய இருளைக் கெடுத்து]—இரங்கி நீள் வனத்திடை இரவின் மாழ்கிய வரம்கொள் தாமரை முகம் மலர்த்தும் நீர்மையால்-பரிதபித்து நீண்டகாட்டில் இராக்காலத்திலே மயங்கிய (துணைவர்தாய் என்னும் இவர்களுடைய) மேன்மையைக் கொண்ட தாமரைமலர்போன்ற முகத்தை மலரச்செய்யுந் தன்மையினால் [இரங்கி ஆழமாகிய நீரிலே இரவிற் குவிந்த மேன்மையைக் கொண்ட தாமரை மலர்களின் முகத்தை மலர்த்துந் தன்மையினால்]—உதயபானு உரம்கொள் வீமனுக்கு எதிர்-பாலசூரியன் வலிமையைப் பொருந்திய வீமனை நிகர்ப்பன். எ - று.

ஏ - அசை. தாமரை - ஆகுபெயர். நேர் என்பது முதனிலைத் தனிவினை. அது முற்றாய்நின்றது. காய்ந்துகொண் டென்பது ஒருசொல். வீமனுக்கு ஏற்றிப் பொருள் கூறுங்கால் வரம் கொள் தாமரை என்பதற்கு இடிம்பையுடைய முகமாகிய தாமரைமலர் எனப் பொருள்கூறல் சிறப்பின்று. (கக)

எண்டகுகவர்மனத்திடிம்பைமன்மதன்
மண்டெரிசுடுதலின்வாடுமேனியள்
கொண்டவெங்காதலின்குறிப்பையவ்வழி
கண்டனன்காணலற்செற்றகாளையே.

(இ - ள்.) மண்டு மன்மதனெரி சுடுதலின் வாடும் மேனியள் - நெருங்கிய காமாக்கினி சுடுதலினால் வாடுகின்ற மேனியையுடையளாகிய—எண் தகு கவர் மனத்து இடிம்பை - யோசனைமிக்க கவர்த்த மனத்தையுடைய இடிம்பை யென்பவள்—கொண்ட வெங் காதலின் குறிப்பை - மனத்திற்கொண்ட வெவ்விய ஆசையினது குறிப்பினை—காணலற் செற்ற காளை அவ்வழி கண்டனன் - பகைவனாகிய இடிம்பனைக்கொன்ற வீமன் அப்பொழுது பார்த்தான், எ - று.

ஏ - அசை. மண்டெரி - வினைத்தொகை. மேனியள் - பெயரெச்சமுற்று. பொறுத்தற்கரிய உருப்பமுடைய எரி என்பார் மண்டெரி என்றும், என்னை மணம்புணர்வானோ அன்றி ஒழிவானோ என்றமையின் எண்ணம்மிக்கு ஒருவழிப்படாது கவர்த்தமனம் என்பார் எண்டகுகவர்மனம் என்றுங் கூறினார். (உ0)

மாய்ந்தவன்றுணைவிகேள்வதுவையின்னமு
மேய்ந்திலனெம்முனும்யாங்கண்மானுட
ராய்ந்துகொண்முறைமையாலரக்கர்பாவைநீ
காய்ந்தமையறிதிமுன்கணையிராமனே.

(இ - ள்) மாய்ந்தவன் துணைவி கேள் - இறந்த இடிம்பனுடைய தங்கையே கேள்—எம்முனும் இன்னமும் வதுவை எய்ந்திலன் - என் தமையனும் இன்னும் மணஞ்செய்திலன்— யாங்கள் மானுடர் - நாங்கள் மனுடர் - நீ அரக்கர் பாவை - நீ இராக்கதப்பெண்—முறைமையால் ஆய்ந்து கொள் - இவற்றை

முறைமையினாலாராய்ந்து நான் உன்னை மணஞ்செய்தல் தகாதென்பதனைக் கைக்கொள் — சனை இராமன் முன் காய்ந்தமை அறிதி - (அதுவன்றிப்) பாணங்களையுடைய இராமசுவாமி முற்காலத்திலே (சூர்ப்பனகையென்னும் இராக்கதப் பெண் தன்னை மணஞ்செய்யும்படி வேண்டியபொழுது அம்மணத்தை) வெறுத்தமையை யறியக்கடவை. எ - று.

எ - அசை. உம்மைகளிரண்டும் எச்சம். தமையன் மணம் புரியாதிருக்கத் தம்பி மணம்புரிதல் தகுதியன்றென்பதை முன்னரும், மானுடகணத்தார்க்கும் இராக்கதகணத்தார்க்கும் மணப்பொருத்தமின்றென்பதைப் பின்னரும் ஆராய்ந்து என்சொல்லைக் கைக்கொளென்பான் முறைமையாலாய்ந்துகொள் என்றான். ராமன்மறுத்தமையை "வருத்தநீங்கரசக்கர் தம்மின் மானுடர் மணத்தை நங்காய் பொருத்தமன்றென்றுசாலப்புலமையோர் புகல்வரன்றே" என்பதனாலறிக. சனை இராமன் முன் காய்ந்தமை என்பதற்கு இராமன் முற்காலத்தில் அவளை மூக்கு முலைகளை அரிவித்து வருத்தினமையை எனப் பொருள் கூறல் பொருந்தாது. ()

ஆசைகொளரக்கியோடனிலன்காதலன்
பேசியகட்டுரைகேட்டபெற்றதா
யோசைகொண்மைந்தரோடுசாவிநண்பினா
லேசறவுரைத்தனளினிமைகூரவே.

(இ - ள்.) ஆசைகொள் அரக்கியோடு - தன்மீது ஆசையைக்கொண்ட இடிம்பையோடு—அனிலன் காதலன் பேசிய கட்டுரை கேட்ட பெற்றதாய் - வீமன் பேசிய உறுதி மொழிகளைக் கேட்ட பெற்ற தாயாகிய குந்திதேவி—ஓசைகொள் மைந்தரோடு உசாவி - மகிழ்ச்சியைக்கொண்ட ஏனைப்புதல்வரோடு ஆராய்ந்து—நண்பினால் - உறவினால்—ஏசு அற இனிமைகூர உரைத்தனள் - குற்றம் நீங்க இனிமைமிக (வீமனுக்குச்) சொன்னாள். எ - று.

எ - அசை. ஓசை ஆகுபெயர் இடிம்பனைத் தந்தையனவன் வதைத்தானென்றமையினாலும் அவன் இடிம்பைமீது கண்ணோடாது உறுதிபயக்கு மொழிகளைக் கூறினமையினாலும் உவப்புற்றமைந்தர் என்பார் ஓசைகொண் மைந்தர் என்றும், தன்மீ தாசைகொண்ட கன்னிகை புணரவர்துழி அதனைமறுத்தல் ஆடவர்க்குக் குற்றமாய் முடியுமாதலின் அக்குற்றந் தன் மகற்கிலதாக உரைத்தாள் என்பார் ஏசற என்றும், இனி என் கருத்து வாய்த்ததென்று அவள் மகிழ உரைத்தாள் என்பார் இனிமைகூர என்றுங் கூறினார். ஓசை கீர்த்தியெனினும் அமையும். (உஉ)

மறுத்துரைப்பதுகடனன்றுமாந்தருக்
கறத்தியலார்கணுமமைதல்வேண்டுமோ
யுறத்தருமிவளைநீயும்முன்வாய்மையாற்
கறுத்தவருயிர்கவர்காளையென்னவே.

(இ - ள்.) கறுத்தவர் உயிர் கவர் காளை - பகைவருடைய உயிரைக் கவருகின்ற மகனே—மறுத்து உரைப்பது கடன் அன்று - (ஒருவர் தம்மிடத்துக் குறையிரந்தவழி அக்குறையைமுடியாது) மறுத்துச்சொல்வது முறையன்று—மாந்தருக்கு ஆர்கணும் அறத்தியல் அமைதல்வேண்டும் - அறிவுடையோர்க்கு எவரிடத்துந் தருமத்தினியல்பு பொருந்தல்வேண்டும்—உம்முன் வாய்மையால் இவளை நீ உறத்தரும் என்ன - (அதனால்) உன் தமையன் சொற்படி நீ இவளை மணஞ்செய்தல் வேண்டும் என்று சொல்ல. எ - று.

ஆல், ஏ அசைகள். வேண்டும் தகும் என்னும் பொதுவினைக்குறிப்புக்கள் தேற்றப்பொருடந்து நின்றன. யாவர் என்னும் பலர்பாற்பெயர் வகரங்கெட்டு ஆரென மரீஇயிற்று. பகைவர் நொதுமலர் நட்பினர் என்னும் மூவரிடத்தும் என்பாள் யார்கணும் என்றும், தந்தைக்குப்பின்றமையனையே பிதாவாகக் கொண்டொழுகல்வேண்டும் என்னும் நீதி நூற்றுணிபின்படி உன்றமையன் வாக்கை உன்பிதாவாக்காகச் சிரமேற்கொண்டொழுகுக என்பாள் உறத்தகுமிவனை நீ உம்முன்வாய்மையால் என்றும், கறுத்தவருயிரைக்காய்ந்து கருது புகலடைந்தவரைக் காத்தல் அரசதருமமெனக்கருதி அவற்றுள் ஒன்றனை நீ மேற்கொண்டொன்றனை யொழித்தல் நீதியன்றென்பாள் கறுத்தவருயிர்கவர்காளை மறுத்துரைப்பது கடனன்றென்றுங் கூறினுள். மாந்தர் என்பது ஈண்டறிவுடையாரை யுணர்த்திற்று. (உங)

அன்னையுந்தம்முனுமறைந்தவாசக
முன்னையின்மறையெனமுடியிற்சூடினன்
மின்னையுமுடன்கொடுபோந்துமேவுநீர்
தன்னையுங்கண்டதிற்றுளைந்துதங்கினர்.

(இ - ள்) அன்னையும் தம்முனும் அறைந்த வாசகம் - தாயும் தமையனுஞ் சொல்லிய வசனத்தை—முன்னையின் மறை என முடியில் சூடினன் - (வீமன்) பழமையையுடைய வேதவசனம்போலத்தலைமேற்றாங்கினன்—மின்னையும் உடன்கொடுபோந்து - (அப்பொழுது அனைவரும்) இடிம்பையையும் அழைத்துக் கொண்டுபோய்—மேவு நீர் தன்னையும் கண்டு அதில் துளைந்து தங்கினர் - அவ்விடத்திற்பொருந்திய நதியையுங்கண்டு அதில் மூழ்கிக் (கரையில்) இருந்தார்கள். எ-று.

மின்னையும் என்னும் உம்மை எச்சம். தன்னையும் என்னும் உம்மை எச்சத்தோடு சிறப்பு. மின், நீர் ஆகுபெயர்கள். இந்நதி வியாசமுனிவரால் உண்டாக்கப்பட்டது. இதில் மூழ்கினர்க்கு அவர் வெளிப்பட்டருள்செய்வரென்க. (உச)

அத்தினத்தவர்வயினவலநீக்குவான்
மெய்த்தவப்பழமறைவியாதன்வந்தனன்
பத்தியிற்சிறுவரும்பணிந்துபோற்றினர்
முத்திபெற்றவரினுமுற்றுஞ்சிந்தையார்.

(இ - ள்.) அத்தினத்து - அப்பொழுதில்—அவர்வயின் அவலம் நீக்குவான் மெய்த்தவப் பழமறை வியாதன் வந்தனன் - அவரிடத்துளதாகும் வருத்தத்தை நீக்கும்படி மெய்மையாகிய தவத்தையுடைய பழையவேதங்களையறிந்த வியாத முனிவர் வந்தார்—சிறுவரும் - பாண்டவரும்—முத்தி பெற்றவரினும் முற்றும் சிந்தையார் - மோட்சத்தைப்பெற்றோரினும்பார்க்க (ஆனந்தம்) முதிர்ந்த மனத்தினையுடையராய்—பத்தியிற் பணிந்து போற்றினர் - அன்போடு அவரை வணங்கித் துதித்தார்கள். எ - று.

சிறுவரும் என்னும் உம்மை எச்சம். பெற்றவரினும் என்னும் உம்மை சிறப்பு. சிந்தையார் வினையெச்சமுற்று. பாண்டவரும் அந்நதியில் மூழ்கிய

பொழுதில் வியாதமுனிவர் தம் வாக்கின்படி வெளிப்பட்டார் என்பார் அத்தின த்து வியாதன்றோன்றினன் என்றார். அவலநீக்குதலை வருஞ்செய்யுளால் விதந்து கூறுகின்றார். (உடு)

தனிவனமிகந்துநீர்சாலிகோத்திர
முனிவனஞ்சிலபகல்வைகிமுந்துற
மனனுறப்பார்ப்பனமாக்களாகியே
யினிமையின்வேத்திரகீயமெய்துவீர்.

(இ - ள்.) நீர் தனிவனம் இகந்து - நீங்கள் தனிமையாகிய இந்தக்காட்டைக் கடந்து—முந்துற - முன்னரே—சாலிகோத்திர முனிவனம் சிலபகல் வைகி-சாலி கோத்திரமுனிவனுடைய காட்டிற் சிலநாளிருந்து—மனன் உறப் பார்ப்பன மாக்கள் ஆகி - (எவரும்) மனத்தால்விரும்பப் பிராமணராகி—இனிமையின் வேத்திர கீயம் எய்துவீர் - மகிழ்ச்சியோடு வேத்திரகீயம் என்னும் நகரத்தை யடையக்கட வீர். எ - று.

ஏ - அசை. தனிவனம் பண்புத்தொகை. மனன் உற என்பதற்கு ஐம்புலங்க ளையும் ஆரவனுபவிக்கும் அரசகுமரராகிய நாம் அங்ஙனமனுபவித்தலில்லாத பார் ப்பனமாக்களாதல் எங்ஙனமென வருந்தாது பிரியமாக எனப்பொருள்கோடலும், முந்துறவேத்திரகீயமெய்துவீரென்றியைத்து அதற்கு எவரினும் மேற்படும்படி வேத்திரகீயத்தையடையக்கடவீர் எனப்பொருள்கோடலும் பொருந்தும். (உகூ)

எனத்தமபடரொழித்திமையவன்செல
வனத்தைவிட்டவ்வனமருவிவைகினர்
வினைப்படுத்தியாழினோர்முறையின்வேள்விசெய்
கனக்குழற்கன்னிதன்காதலானொடே.

(இ - ள்.) எனத் தம படர் ஒழித்து இமையவன் செல - என்று கூறித் தங் கள் வருத்தத்தை நீக்கி வியாதமுனிவர்போக—வினைப் படுத்து - (பாண்டவர்கள் அவரைத் தரிசித்தமையினாலே தங்கள்) பாவங்களைக் கெடுத்து—யாழினோர் முறையின் வேள்விசெய் கனக்குழற் கன்னிதன் காதலானொடு - காந்தருவமுறை ப்படி மணஞ்செய்த பாரமாகிய அளகத்தையுடைய இடிம்பையின் நாயகனாகிய வீமனோடு—வனத்தைவிட்டு அவ்வனம் மருவி வைகினர் - (முன்னிருந்த) காட் டைவிட்டு அந்தச் சாலிகோத்திர முனிவனுடைய காட்டைச் சேர்ந்திருந்தார்கள். எ - று.

ஏ - அசை. கனக்குழல் பண்புத்தொகை. வனத்தைக்கழிதற்குத் துணையாத லாகிய உயர்வுபற்றி ஒருவினையொடுவை வீமனுக்கேற்றினர். வினைப்படுத்து என்புழிப் பகரஞ் சந்தவின்பநோக்கி மிக்கது. கனக்குழல் என்பதற்குச் செவ்வா னம் போலும் அளகம் எனினும் அமையும். (உஎ)

குந்தியையிரவுநன்பகலுங்கோதிலா
வந்தனைபுரிதலின்மகிழிடிம்பையும்
வெந்திறல்வீமனும்விழைந்துவள்ளியுங்
கந்தனுமெனப்பெருங்காதல்கூரவே.

(இ - ள்.) குந்தியை - (மாமியாகிய) குந்திதேவியை—இரவும் நன்பகலும் கோது இலா வந்தனை புரிதலின் மகிழ் இடிம்பையும் - இரவிலும் நல்ல பகற்கால த்திலும் குற்றமில்லாத வழிபாட்டைச் செய்தலினாலே மகிழ்ச்சியைப் பொருந்

தும் இடிம்பையும்—வெந்திறல் வீமனும் - மிக்க வலிமையினையுடைய வீமனும் —வள்ளியும் கந்தனும் என விழைந்து பெரும் காதல்கூர - வள்ளிநாயகியாரை யும் சுப்பிரமணியக்கடவுளையும்போல (ஒருவரையொருவர்) விரும்புதலாற் பேரா சைமிக. எ - று.

ஏ - அசை. இன்னுருபு ஏதுப்பொருட்டு. வீமன்முனிந்து நின்னைப்புணரே னெனப் பல நீதிகூறி மறுத்தபொழுது, குந்திதேவி நீ இவளை உம்முன் வாய்மை யால் உறத்தகும் என்று அவனைக்கடிந்து தன்னைப்புணர உடன்படுத்திய நன்றி கருதி அவளுக்கிடைவிடாது தொண்டுசெய்தலின் மகிழ்கின்றவள் என்பார் குந்தி யை யிரவுநன்பகலுங்கோதிலா வந்தனைபுரிதலின் மகிழிடிம்பை என்றும், இழிகுல த்தாளாகிய இடிம்பையை வனத்திலே காந்தருவவழக்காற் கூடினமையின் வள்ளி யுங் கந்தனுமெனப் பெருங்காதல்கூர என்றுங்கூறினர். (உஅ)

மான்மதங்கமழ்கொடிமந்தரந்தொறுங்
கான்மணங்கமழ்தடங்காவகந்தொறுந்
தேன்மிகுசுனைநெடுஞ்சிலம்பகந்தொறு
மேன்மணம்புரிந்தனர்வேட்கைவிஞ்சவே.

(இ - ள்.) மான்மதம் கமழ் கொடி மந்தரம் தொறும் - கஸ்தூரி கமழ்கின்ற கொடிகளாலாகிய மறைவிடங்கடோறும்— கான் மணம் கமழ் தடம் கா அகம் தொறும் - மிக்க மணங்கமழுகின்ற விசாலமாகிய சோலைகளினிடங்கடோறும்— தேன் மிகு சுனை நெடும் சிலம்பு அகம் தொறும் - தேன்மிகுந்த சுனைகளையுடைய நெடிய மலைகளினிடங்கடோறும்—வேட்கை விஞ்ச மேல் மணம்புரிந்தனர் - விருப்பம்மிக மேலாகிய புணர்ச்சியைச் செய்தார்கள். எ - று.

ஏ - அசை. தொறும் என்பன இடப்பன்மைகுறித்துநின்றன. மிகு என்னும் வினைத்தொகை சுனை என்னும் இடப்பெயர்கொண்டது. கான்மணம் ஒரு பொ ருட்பன்மொழி. கஸ்தூரிமான்கள் கொடிகளாலாய மறைவிடங்களிற் பெரும்பா ன்மையுஞ் சஞ்சரித்தலால் அவற்றின் மதங்கமழ்கின்ற மறைவிடம் என்பார மான் மதங்கமழ்கொடிமந்தரம் என்றும், இறால்கிழிந்துதேன்சொரிதலால்நிறைந்த சுனை என்பார் தேன்மிகுசுனை என்றும், கொடுப்பாரும் அடுப்பாருமின்றித் தெய்வத்தா லாய காந்தருவப்புணர்ச்சி என்பார் மேன்மணம் என்றுங் கூறினர். (உகூ)

நிறந்திகழிருட்பிழம்பென்னநீண்டறப்
புறந்தருமுரோமமும்பொருப்புத்தோள்களு
மறந்தருகனைகுரல்வாயுமாகவே
பிறந்தனன்கடோற்கசனென்னும்பேரினன்.

(இ - ள்.) அறநீண்டு புறம் தரும் உரோமமும் - மிகநீண்டு புறத்திலே விளங் கும் உரோமமும்—பொருப்புத் தோள்களும் - மலைபோன்ற புயங்களும்—மறம் தரு கனைகுரல் வாயும் ஆக - மறத்தைத்தரும் பேரொலியையுடைய வாயும் பொ ருந்த—கடோற்கசன் என்னும் பேரினன்-கடோற்கசன் என்னும் பெயரையுடைய வன்—நிறம் திகழ் இருட்பிழம்பு என்னப் பிறந்தனன் - கருநிறம் விளங்கும் இருட் பிழம்புபோலப் பிறந்தான். எ - று.

ஏ - அசை. கேட்டார் அஞ்சத்தக்க ஒலி என்பார் மறக்தருகனேகுரல் என்ருர். இராக்கதருக்குச் செந்நிறவுரோமமேயன்றிக் கருநிற வுரோம மின்மையால், நிறந்திகழ் இருட்பிழம்பு என்பதனை உரோமத்துக்கு விசேடணமாக்கிப் பொருள் கொள்ளுதல் பொருந்தாது. (௩௦)

காதியதிறனரகாசுரன்றனை
யாதிவெங்கோலமன்றளித்தவாறுபோல்
மேதினிமதித்தபோர்வீமனல்கிய
சோதியம்புதல்வனுந்தொழுதுசொல்லுவான்.

(இ - ள்.) ஆதி வெம் கோலம் - விட்டுணுவாகிய வெவ்விய பன்றி—காதிய திறல் நரகாசுரன்றனை அன்று அளித்தவாறுபோல் - (தான்) கொன்ற வலிமையினையுடைய நரகாசுரன் என்பவனை முற்காலத்திற் பெற்றவாறுபோல—மேதினி மதித்த போர் வீமன் நல்கிய சோதி அம் புதல்வனும் - பூமியிலுள்ளோர் மதித்த போரையுடைய வீமன்பெற்ற ஒளியையுடைய புத்திரனும்—தொழுது சொல்லுவான் - வணங்கிச் சொல்லுவான். எ-று.

தன், அம் சாரியைகள். மதித்தபோர் உண்டசோறு என்பதுபோல நின்றது. புதல்வனும் என்னும் உம்மை சிறப்போடெச்சம். விஷ்ணு வராகரூப மெடுத்த பொழுது தன்னைக்கண்டுமயங்கிய பூமிதேவியைப் புணர்ந்து நரகாசுரனைப் பெற்ருர் என்னுங் கதையை யுட்கொண்டு நரகாசுரன்றனை ஆதிவெங்கோலம் அளித்த தென்ருர். காதியதிறனரகாசுரன் என்பதற்குப் பகைவரை யழித்த வலியுடைய நரகாசுரனெனப் பொருள்கூறினும் அமையும். (௩க)

நிறையுடைத்தந்தையர்நீர்நினைத்தபோ
துறைவிடத்தெய்தியாங்குரைத்தசெய்குவே
னிறைவவிப்பணிவிடைதருகென்றேகினன்
பிறையெயிற்றியாயொடும்பெற்றபிள்ளையே.

(இ - ள்.) இறைவ - என்பிதாவே—நிறை உடைத் தந்தையர் நீர் நினைத்த போது - நிறையையுடைய தந்தையர்களாகிய நீங்கள் நினைத்தபொழுது—உறைவிடத்து எய்தி உரைத்த செய்குவேன் - இருக்குமிடத்தில்வந்து நீங்கள் கூறியவற்றைச் செய்வேன்—இப் பணி விடை தருக என்று - இந்தப் பணியையும் விடையையும் எனக்குத்தருக என்று—பிறை எயிற்று யாயொடும் பெற்ற பிள்ளை ஏகினன் - பிறைபோன்ற வக்கிரதந்தங்களையுடைய தாயாகிய இடிம்பையோடும் பெற்ற புதல்வனாகிய கடோற்கசன் போயினன். எ - று.

ஆங்கு, ஏ அசைகள். தருக என்னும் வியங்கோளீறு தொக்கது. தந்தையர் அண்மைவிளியாதலின் இயல்பாயிற்று. பணிவிடை உம்மைத்தொகை. நிறை என்றது ஆடவர்க்குரிய நிறையை. இதன்விரி முன்கூறப்பட்டது. தந்தையை நோக்கி இறைவ என விளித்துப் பின் மற்றைத் தந்தையர் நால்வரையு முளப்படுத்தித் தந்தையர் நீர் என்ருன். நினைத்தபொழுதே வந்து நீருரைத்தவற்றைச் செய்தலாகிய பணியையும் விடையையும் என்க. பணிவிடையென்பதை ஒரு சொல்லாக்கிப் பணியெனப் பொருள்கூறின் அது ஈண்டுச் சிறப்பின்று. (௩உ)

சாத்திரமறைதெரிமுனிவர்தன்மையிற்
காத்திரமாறியக்காவல்வேந்தருங்
கோத்திரஞ்சூத்திரங்குடியுரைத்துளார்
வேத்திரகீயமாநகரின்மேயினர்.

(இ - ள்.) அக் காவல் வேந்தரும்-அந்த உலகத்தைக்காக்கும் அரசர்களும்—காத்திரம் மாறி-உருவம் மாறி—சாத்திர மறைதெரி முனிவர் தன்மையிற் கோத்திரம் சூத்திரம் குடி உரைத்துளார் - வேதாந்தமுதலிய ஆறுசாத்திரங்களையுடைய வேதத்தை யறிந்த பிராமணருடைய தன்மையைப்போலக் கோத்திரத்தையுஞ் சூத்திரத்தையுங் குடியையுஞ் சொல்லி—வேத்திரகீய மாநகரில் மேயினர் - வேத்திரகீயமென்னும் பெரியநகரிற் போனார்கள். எ - று.

வேந்தரும் என்னும் உம்மை எச்சத்தோடு சிறப்பு. உரைத்துளார் வினையெச்சமுற்று. தன்மையில் என்னும் இல்லுருபு உவமப்பொருட்டு. ஆறுசாத்திரமாவன : வேதாந்தம், வைசேடிகம், பாட்டம், பிரபாகரம், பூருவ மீமாஞ்சை, உத்தரமீமாஞ்சை என்பனவாம். கோத்திரம், சூத்திரம் என்பன வெளிப்படை. குடியாவது மாத்தியர், மாமாத்தியர், காப்பியர் என்றாற்போல்வன. (௩௩)

அந்தணரைவரும்யாயுமந்நகர்
வந்துழியதிதியர்வரவுகாண்டலு
முந்துபுமுந்துபுமுகமன்கூறினார்
செந்தழல்வேள்விகூராதிதேயரே.

(இ - ள்.) அந்தணர் ஐவரும் யாயும் அந்நகர் வந்துழி - பிராமணராகிய பாண்டவரைவரும் தாயும் அந்த நகரில் வந்தபொழுது—செந்தழல் வேள்விகூர் ஆதிதேயர் - சிவந்த அக்கினியாகஞ் செய்தலில் மேம்பட்ட விருந்தினரை யுபசரிக்கும் பிராமணர்கள்—அதிதியர் வரவு காண்டலும் - விருந்தினருடைய வரவைக் காணுதலும்—முந்துபு முந்துபு முகமன் கூறினார் - முந்திமுந்திவந்து முகமன் வார்த்தைகளைப் பேசினார்கள். எ - று.

ஏ - அசை. ஐவரும் என்னும் உம்மை முற்றும்மை. அடுக்கு உவகை பற்றிவந்தது. அவ்வந்தணர் விருந்தினரை யுபசரித்தலிற் பேராசைகொண்டு அதிற்கிழமைபூண் டொழுகுவார் என்பார் முந்துபுமுந்துபு முகமன்கூறினார் என்றார். ஆதிதேயர் - விருந்தினரை யுபசரிப்போர். (௩௪)

நன்மனைவாழ்க்கையினயந்தசிந்தையான்
மன்மனையனையதன்மனையிலோர்முனி
தன்மனையம்மனை தம்பிமாரொடு
மென்மனைவருகெனவெதிர்கொண்டேகினன்.

(இ - ள்.) நல் மனை வாழ்க்கையின் நயந்த சிந்தையான் ஓர் முனி - நல்ல இல்லாச்சிரமத்தில் விரும்பிய மனத்தையுடைய ஒரு பிராமணன்—மன் மனை அனைய தன்மனையில் - அரசமாளிகையை யொத்த தன்வீட்டில்—தன்மனை அம்மனை தம்பிமாரொடும் - தருமனைத் தாயோடுந் தம்பியரோடும்—என்மனை வருக என எதிர்கொண்டு ஏகினன்-என்வீட்டில் வருக என்று எதிர்கொண்டு (அழைத்துச்) சென்றான். எ - று.

சிந்தையான் பெயரெச்சமுற்று. வருக என்னும் வியங்கோளீறு தொக்கது. தருமன் தன்மன் என்முயிற்று. இவரைக் குறைவற உபசரிக்கத்தக்க பெருஞ் செல்வமுடைய மனை என்பார் மன்மனையனையதன்மனை என்முர். இவன் மனைவியைக் குழுவுநிதியினள் எனப் பின்னருங் கூறுதல்காண்க (௩௫)

ஒருதினத்தமிழ்தெனவுள்ளநாளெலாம்
வருமுறைப்படிவிருந்தாகிவைகினு
ரருநெறிக்கடவுளர்க்கமுதமூட்டுத
லிருபிறப்பாளருக்கென்றுந்தன்மையே.

(இ-ள்.) வரு முறைப்படி - வருகின்ற முறைப்படி—ஒரு தினத்து அமிழ்து என - ஒருநாளையிலுணவுபோல—உள்ளநாள் எலாம் விருந்தாகி வைகினர் - ஒழிந்தநாளெலாம் (ஊட்ட உண்டு) விருந்தினரா யிருந்தார்கள்—அரு நெறிக் கடவுளர்க்கு அமுதம் ஊட்டுதல் - அரிய வழிப்போக்கர்களாகிய பிராமணர்களுக்கு அன்னத்தை யூட்டுதல்—இருபிறப்பாளருக்கு என்றும் தன்மையே - பிராமணர்களுக்கு என்றும் உள்ளகுணமே. எ-று.

ஏகாரம் தேற்றம். விருந்து என்றது "குடிமையாண்மை" என்னுஞ் சூத்திர விதிப்படி உயர்திணைப்பொருளை யுணர்த்திநின்றதோ ரஃறிணைச்சொல். என வென்னுஞ் செயவெனெச்சம் ஊட்ட என வருவித்த வினையெச்சங் கொண்டது. ஆன்முேர் தொன்றுதொட்டு விருந்தினரை யுபசரிக்கும் முறையென்பார் வருமுறைப்படி, என்றும், தம்மில்லில் விருந்தினராய் இவர்வந்துழி இவர்க்கு அற்றைநாளில் உணவுகளை விசேடம்பட ஊட்டியவாறுபோல இருந்தநாளெல்லாம் ஊட்டினுரென்பார் ஒருதினத்தமிழ்தென உள்ளநாளெலாம் என்றும், அங்ஙனமூட்டுதலாற் பழமைபடாது என்றும் விருந்தினரா யிருந்தா[illegible]கிவைகினுர் என்றுங் கூறினுர். அருநெறிக் கடவுளர்க் கமுதமூ[illegible]பிறப்பாளருக் கென்றுந்தன்மை என்பது, மேன்மையாகிய மு[illegible] தேவர்களுக்கு அவிப்பாகமூட்டுதல் பிராமணருக்கு என்றுங் [illegible] வேறுமொரு பொருடோன்ற நின்றது. (௩௬)

பொன்னகரணுகினர்போலநெஞ்சுறத்
தங்நகரெனும்படிதாயுமைந்தரு
மிந்நகரநேகநாளிருந்தவெல்லையி
லந்நகர்புரிந்ததோராண்மைகூறுவாம்.

(இ-ள்.) தாயும் மைந்தரும் - தாயும் புதல்வரைவரும்—தம் நகர் எனும்படி - தங்களுடைய நகரம் என்று சொல்லும்படி—இந்நகர் - இந்த நகரத்தில்—பொன் நகர் அணுகினர்போல நெஞ்சு உற அநேகநாள் இருந்த எல்லையில் - சுவர்க்கவுலகத்தை யடைந்தவர்களைப்போல மனம் உவப்ப அநேகநாள் இருந்த காலத்தில் — அந்நகர் புரிந்தது ஓர் ஆண்மை கூறுவாம் - அந்நகரத்தின்கட் செய்த ஒரு வீரத்தை யாம் சொல்வோம். எ - று.

அணுகினர் வினையாலணையும்பெயர். புரிந்தது பெயரெச்சமுற்று. பொன்னகரணுகினுர் வேண்டிய போகங்களை ஐம்புலமார அனுபவிக்குமாறுபோல இவரும் இந்நகரணுகி வேண்டிய போகங்களை ஐம்புலமார வனுபவித்தாரென்க. (௩௭)

வேறு.

மறையுமுருவினொடரியகுருகுலமகிபர்நெடுவனசரிதரா
யுறையும்வளமனையுடையமடவரலுருகுபிரதைதனுயிரனாள்
குறைவில்பொலிவினள்விரதநெறியினள்குழுவுநிதியினள்கொடுமையா
லிறையுமொழிவறவிருகணறல்வரவெரிகொள்கொடியெனவினையினாள்.

(இ-ள்.) அரிய குருகுல மகிபர் - அரிய குருகுலராசர்கள்—மறையும் உருவினொடு - மறைந்த வடிவோடு—நெடுவன சரிதராய் - நெடியவனத்திற் சஞ்சரிப்பவர்களாய்—உறையும் வளமனை யுடைய மடவரல் - வந்திருக்கின்ற வளஞ்செறிந்த வீட்டையுடைய பெண்ணானவள்—உருகு பிரதைதன் உயிர் அனாள் - (தன்னிடத்தில்) மனமுருகுகின்ற பிரதையினுடைய உயிர்போன்றவள்—குறைவு இல் பொலிவினள் - நிறைந்த அழகினை யுடையவள்—விரத நெறியினள் - விரதவொழுக்கத்தை யுடையவள்—குழுவு நிதியினள் - மிக்க செல்வத்தை யுடையவள்—கொடுமையால் இறையும் ஒழிவு அற இருகண் அறல்வர - (அவள் தனக்கு நிகழ்ந்த) கொடுமையினாற் கணப்பொழுதினும் நீச்சமில்லாமல் இருகண்களினின்றும் நீர்சொரிய—எரிகொள் கொடி என இனையினாள் - அக்கினிபற்றிய கொடிபோல வாடினாள். எ-று.

இனையினாள் என்பதில் இன் இறந்தகாலவிடைநிலை. இறையும் என்னும் உம்மை சிறப்பு. விரும்பிய போகங்களை யனுபவித்துக்கொண்டு அரசமாளிகையிற் சுகத்தோடிருப்பவர் மறையுமுருவோடு வனசரிதராய் இங்ஙனம் இருந்தாரென்பார் மறையுமுருவினொடரிய குருகுலமகிபர் நெடுவனசரிதராய் என்றும், எத்துணைப் பெருமை யுடையார்க்கும் வினை வயத்தால் வந்த துன்பத்தைத் தவிர்த்தலரிதென்பார் குறைவில்பொலிவினள் விரதநெறியினள் குழுவுநிதியினள் இனையினாள் என்றுங் கூறினார். கொடுமை பகன் என்பவனால் நிகழ்ந்த கொடுமையென்க. (௩அ)

மறுகியழுவதெனென்மொழிகமுனிவரன்மனைவியெனவிவள்வினவலுங்
குறுகியவளுடனுரைசெய்குவளுறுகுறையையுளநனிகுறையவே
முறுகுசினவனல்பொழியும்விழியினன்முகனில்பகனெனுமுரணுடைத்
தறுகணிசிசரனுளனிவ்வளநகர்தழுவும்வனனுறைதகுதியான்.

(இ-ள்.) இவள் - இந்தப் பிரதையானவள்—முனிவரன் மனைவி மறுகி அழுவது என் மொழிக என வினவலும் - அந்தணனுடைய மனைவியே நீ மனஞ்சுழன் றழுவதென்னை சொல்லுக என்று கேட்கவும்—உறு குறையை - (அப்பார்ப்பனி தனக்கு) வந்த குறையை—குறுகி அவளுடன் உளம் நனி குறைய உரை செய்குவள் - சமீபித்து அப்பிரதையோடு மனம் மிகச் சோர்வடையச் சொல்லுவாள்—முறுகு சின அனல் பொழியும் விழியினன் - முதிர்ந்த கோபாக்கினி பொழியுங் கண்களை யுடையனாகிய—முகன் இல் பகன் எனும் முரண் உடைத் தறுகண் நிசிசரன் உளன் - கண்ணோட்டமில்லாத பகன் என்கின்ற வலியினை யுடைய வன்கண்ணனாகிய இராக்கதன் ஒருவன் உளன்—இவ் வள நகர் தழுவும் வனன் உறை தகுதியான் - (அவன்) இந்த வளஞ்செறிந்த நகரைச் சேர்ந்த காட்டிலிருக்குந் தகுதியையுடையவன். எ-று.

ஏ-அசை. விழியினன் பெயரெச்சமுற்று. முகன் என்பது போலியாய் இருமடியாகுபெயராய் நின்றது. மனைவி அண்மைவிளியாதலின் இயல்பாயிற்று.

தானுமோரிடுக்க ணுடையார் தம்மாட்டன்புடைய பிறர்க்கதனைக் கூறுங்கால் வ்விடுக்கண்மிதூர்த லியல்பாதலின் உளநனிகுறைய உரைசெய்குவள் என்றார்.

ருளிலிதயமுநெறியில்சரிதமுமழகிலுருவமுமதிர்குரற்
பாருளிலுரைகளுமுடையன்முழுதுடல்புலவுகமழ்தருபொறியினன்
ருளுநரியொடுகழுகுதொடர்தரவலியபிணநுகர்சுவையறு
ருளின்மிசையிருபிறைகளெனவளையெயிறுநிலவெழுமிதழினன்.

(இ - ள்.) அருள் இல் இதயமும் - அருளில்லாத மனத்தையும்—நெறி இல் ரிதமும் - தீயொழுக்கத்தையும்—அழகு இல் உருவமும் - அழகில்லாத வடிவத் தயும்—அதிர் குரற் பொருள் இல் உரைகளும் உடையன் - அதிருகின்ற ஒலி பாடுகூடிய பய[illegible] வசனங்களையுமுடையவன்—உடல் முழுது புலவு கமழ் ரு பொறியினன் - [illegible] முழுதும் புலான்மணங்கமழும் அடையாளத்தையுடை வன்—மருளும [illegible] கழுகு தொடர்தர - வெருளுகின்ற நரிகளோடு கழுகு ள் தொடர—வலிய [illegible] சுவை அறுது - வலிய பிணங்களை யுண்ணுஞ் வை நீங்காமல்—இ[illegible] இரு பிறைகள் என - இருளின்மேல் இரண்டு றைகள் (உள்ளன) [illegible]—வளை எயிறு நிலவு எழும் இதழினன்-வளை த தந்தங்கள் நிலாவை [illegible] அ[illegible]த்தையுடையவன். எ - று.

அறுது என்னும் எதிர்ம[illegible]யெச்சம் வளையென்னும் வினைத்தொகை யாடுமுடிந்தது. இருளின்ம[illegible] பிறைகள் என்பது இல்பொருளுவமை. கம தரு, தொடர்தர என்பன ஒரு[illegible]ருகங்களினும் எளிமையும் அச்ச மும் உடைமையால் வெருட்சியு[illegible] மருளுநரி என்றார். உடம்புமுழு தும் புலான்மணங்கமழும் பொறி என்[illegible]களைப் புசிக்கும்பொழுது அவ றி லுள்ள இரத்தம் மூளை வசை கீச[illegible] தெறித்தலா லுளவாம் அடை யாளம் என்க. முழுதுடல்புலவு கமழ்த[illegible]யினன் என்பதற்கு முழுவுடலி த புலான்மணங்கமழும் வாயையுடையவன் எனப் பொருள்கூறி, முழுவுடலைக் கூறுசெய்யாது விழுங்குபவன் என்பதை அதன்குறிப்பரியமாக்கினும் பொருந்தும். இப்பொருட்கு முழுதுடல் என்பதைப் பண்புத் தொகையாகவும் சந்தவின்ப நோக்கி உடல்புலவு என லகரந்திரியாது நின்றதாகவுங் கொள்க. மருளும் என் பதை நரிக்கடையாக்காது பேயும் எனக்கொண்டு கழுகும் என உம்மைவிரித் தலும் ஒன்று. பொறியிலன் எனப்பாடமோதி, அறிவிலான் எனப்பொருள்கொள் வாருமுளர். (சo)

அந்தகனுமிகவஞ்சிமுதுகிடுமந்தநிசிசரனிந்தவூர்
வந்துகுடியொடுகொன்றுபலரையுமன்றமறுகிடைதின்றநா
ளெந்தைமுதலியவந்தணருமவனிங்குவருதொழிலஞ்சியே
சிந்தைமெலிவுறநொந்துதலைமிசைசென்றுகுவிதருசெங்கையார்.

(இ - ள்.) அந்தகனும் மிக அஞ்சி முதுகிடும் அந்த நிசிசரன் - யமனும் மிகப் பயந்து புறந்தருதற் கேதுவாகிய அந்த இராக்கதன்—இந்த ஊர் வந்து - இந்த ஊரில்வந்து—பலரையும் குடியொடு மன்றக் கொன்று மறுகிடை தின்றநாள் - பலரையும் அவர்குடியிலுள்ளாரோடும் மிகக்கொன்று வீதியிலே தின்றநாளில்—எந்தை முதலிய அந்தணரும் - என் பிதாமுதலிய பிராமணரும்—அவன் இங்கு வருதொழில் அஞ்சி - அவன் இங்கே வருதற்குப் பயந்து—சிந்தை மெலிவு உற

நொந்து - மனம் இளைப்படைய வருந்தி—சென்று - அவன்முன்போய்—தலைமிசை குவிதரு செங்கையார் - தலையின்மீது குவித்த சிவந்த கைகளை யுடையராய். எ - று.

ஏ - அசை. அந்தகனும் என்னும் உம்மை சிறப்பு. அந்தணரும் என்னும் உம்மை சிறப்போடெச்சம். முதுகிடும் என்னும் பெயரெச்சம் நிசிசரன் என்னும் கருவிப்பெயர் கொண்டது. செங்கையார் வினையெச்சமுற்று. எத்துணைப் பேராற்றலுடையோராலுஞ் சகித்தற்கரிய கொடுமையை யுடையவன் என்பாள் அந்தகனுமிகவஞ்சிமுதுகிடுமெந்த நிசிசரன் என்றாள். (சுக)

ஒன்றுபடவெதிர்கொன்றுபலருயிருண்பதறநெறியன்றுனீ [யோர்
யின்றுமுதலினியென்றுமுறைமுறையெங்கண்மனைதொறும்விஞ்சை
குன்றமெனவொருபண்டியறுசுவைகொண்டடிசினுங்குலந்
துன்றுநரபலியொன்றுமிவைதிறைதொண்டுபுரிகுவமென்றலும்.

(இ - ள்.) நீ ஒன்றுபட எதிர் கொன்று - நீ ஒருசேர நமக்கெதிரே கொன்று—பலர் உயிர் உண்பது அறநெறி அன்று - பலருயிரை நீக்குவது தருமநெறியன்று—இனி இன்றுமுதல் என்றும் - இனி இன்றுமுதலாக என்றைக்கும்—முறை முறை எங்கள் மனைதொறும்-முறைமுறையாக எங்கள் வீடுகள்தோறும்—விஞ்சையோர் குன்றம் என அறுசுவைகொண்ட ஒருபண்டி அடிசிலும் - வெள்ளிமலை யென்றுசொல்ல அறுசுவைகளைப்பொருந்திய ஒருபண்டிசோறும்—நம்குலம் துன்றும் நரபலி ஒன்றும் இவை - எங்கள் குலத்திற் பொருந்திய நரபலியொன்றுமாகிய இவற்றை—திறை தொண்டு புரிகுவம் என்றலும் - திறைதருதலாகிய ஏவலைச் செய்வோம் என்று சொன்னவுடன். எ - று.

செங்கையராய் என்[illegible] இயையும். முறைமுறை என்னும் அடுக்குப் பன்மைபற்றிவந்தது. திறைதொண்டு என்னும் இருபெயரொட்டுப் பண்புத்தொகை சந்தவின்பம்நோக்கித் தகரம் மிகாதுநின்றது. வெள்ளிமலை யென்றது ஈண்டுக் கைலாசத்தையன்று; விஞ்சையரிருத்தற்குரிய வெள்ளிமலையையென்க. திறைதொண்டுபுரிகுவம் என்பதற்குத் திறையாகத்தந்து உன் குற்றேவலைச் செய்வோம் எனப்பொருள்கூறினும் பொருந்தும். (சஉ)

அன்றுமுதலடல்வஞ்சகனுமிறையன்பினொடுபெறுவன்பினு
லென்றுநிலைபெறவுண்டியுடன்மனையெங்குமிடுபலியெஞ்சுறத்
தின்றுதிரிகுவனின்றென்மனைமுறைசென்றுபணிகவர்திங்கள்போ
லின்றுதளர்வுறுகின்றதெனதுயிர்நெஞ்சமிலதொருதஞ்சமே.

(இ - ள்) அன்றுமுதல் அடல் வஞ்சகனும் - அன்றுமுதலாக வலிய வஞ்சகத்தை யுடைய இராக்கதனும்—இறை அன்பினொடு - சிறிது அன்பினோடு—பெறுவன்பினால் என்றும் நிலைபெற - தான்பெற்ற வலிமையினாலே எப்பொழுதும் நிலைபெற—மனை எங்கும் இடு உண்டியுடன் பலி எஞ்சுறத் தின்று திரிகுவன் - வீடுகடோறும் இடுகின்ற உணவோடு (நர) பலியைக் குறையும்படி தின்று திரிவான்—இன்று என் மனைமுறை - இன்றைக்கு என்வீட்டின்முறை (அதனால்)—எனது உயிர் பணி சென்று கவர் திங்கள்போல் நின்று தளர்வுறுகின்றது - என

தான்மாப் பாம்புபோய்ப் பிடிக்குஞ் சந்திரனைப்போல நின்று தளர்வைப் பொருந்துகின்றது—நெஞ்சம் ஒரு தஞ்சம் இலது - என்மனம் ஒரு துணையுமில்லாதிருக்கின்றது. எ - று.

ஏ - அசை. வஞ்சகனும் என்னும் உம்மை சிறப்போடெச்சம். இராச்சதர் அன்புகுடிபோய நெஞ்சராயினும் இவன் அவ்வந்தணருடைய வேண்டுகோட்குச் சிறிதிரங்கி அங்ஙனம் உடன்பட்டமையின் அடல்வஞ்சகனும் இறையன்பினொடு என்றாள். பணிகவர் திங்கள் அதன்வாய்ப்பட்டழியாது வருந்துமாறுபோல என்னுயிரும் இத்துயரால் உடம்பினின்று நீங்காது தளர்வடைகின்றதென்பாள் பணிகவர்திங்கள்போ னின்று தளர்வுறுகின்ற தெனதுயிர் என்றாள். குறைதல், வேத்திரகீய நகரில் வசிக்கும் பிராமணர் இவன் இங்ஙன முண்ணுதலால் நாடோறுங் குறைதலென்க. (சுரு)

கன்னியிவள் [illegible] யென்றிருகண்ணின்மணிநிகர்சன்மனு
மன்னுகுலமு[illegible]யொருவருமண்ணினுறுதுணையின்மையா
லின்னல்பெரிதுள[illegible]ரிகுவதென்னவறிகிலனன்னைகேண்.
முன்னைமனைநிகழ்[illegible]முனிவனைமுன்னிலிடர்நனிதுன்னுமால்.

(இ - ள்.) கன்னி [illegible] பிறர் பன்னி - இந்தப்பெண் வேறொருவருடைய மனைவி—எனது இரு க[illegible]ன் மணிநிகர் சன்மனும் மன்னு குலமுதல் - என்னுடைய இரண்டு கண்ணின் மணிபோன்ற சருமனும் நிலையான வம்மிசத்திற்கு ஒரு அடியாயுள்ளான்—மண்[illegible]துணை பின் ஒருவரும் இன்மையால் இன்னல் பெரிது உளது - பூமியிற்பொரு[illegible]துணை வேறொருவரும் இல்லாமையினால் எனக்குத் துன்பம் மிக உண்டாகின்ற[illegible]புரிகுவது என்ன என்ன அறிகிலன் - செயற்பாலதென்னை யென்று அறி[illegible]—அன்னை கேள் - தாயே கேள்—முன் மனைநிகழ் தன்மமுனிவனை முன்னில் - மு[illegible]மையாகிய கிருகத்தாச்சிரமத்தையுடைய என் நாயகனைப் (பலிகொடுக்க) [illegible]தால்—இடர் நனி துன்னும் - (எனக்குத்) துன்பம் மிகவுண்டாகும். எ - று.

ஐ இரண்டும் சாரியை. ஆல் - அசை. சன்மனும் என்னும் உம்மை எச்சம். கன்னி என்பது ஈண்டுப் பருவங்குறியாது பெண்[illegible]த்தி நின்றது. அன்னை என்பது ஈண்டு முறைப்பெயர்பற்றிவந்த வழுவமைதியாய் நின்றது. மனைவியாகிய யான் உயிரோடிருந்து நாயகனைப் பலிகொடுக்கின் அதனாற் பழியும் பாவமுமுண்டாமென்றமையால் என்மனம் மிகவருந்துகின்றதென்பாள் மனைநிகழ்தன்மமுனிவனை முன்னிலிடர்நனிதுன்னும் என்றாள். சருமன் என்பது பிராமணனுக்கும், வருமன் என்பது க்ஷத்திரியனுக்கும், குத்தன் என்பது வைசியனுக்கும், தாதன் என்பது சூத்திரனுக்கும் உரியபெயர்கள். (சுச)

ஏதமறவுறவானமனைமகள்யாவுமுரைசெயயாதவன்
றீதில்குலமகளார்வமுடனவடேறவொருமொழிகூறுவா
ளாதியனுமனொடோதுமுவமையனுடல்வலியுடையாண்மையாள்
மோதியிடையிருள்யாமசரிதனைமுளையுகவுடல்கீழுமே.

(இ - ள்.) உறவு ஆன மனைமகள் - தன்னோடுறவான வீட்டிற்குரிய பார்ப்பனியானவள்—ஏதம் அற யாவும் உரைசெய - தன்வருத்தந் தீரும்படி எல்லாவற்றையுஞ் சொல்ல—யாதவன் தீது இல் குலமகள் - சூரனுடைய குற்றமில்லாத குலமகளாகிய குந்திதேவி—ஆர்வமுடன் அவள் தேற ஒருமொழி கூறுவாள் -

அன்போடு அப்பார்ப்பனி தெளியும்படி ஒருவசனத்தைச் சொல்லுவாள்—ஆதி அனுமனொடு ஓதும் உவமையன் - முதன்மைபொருந்திய அனுமனைச் சொல்லத் தகும் உவமையாக வுடையவன்—ஆடல் வலி உடை ஆண்மையான் - போர்வலி மையை யுடைய ஆண்டன்மையில் மிக்கவன்—இருள் இடையாம சரிதனை - (அவன்) இருளையுடைய நடுயாமத்திற் சஞ்சரிக்கும் (அந்த) இராக்கதனை—மோதி மூளை உக உடல் கீழும் - அடித்து மூளைசொரிய உடலைக்கிழிப்பான். எ-று.

ஏ - அசை. அனுமனொடு என்னும் ஒடுவுருபு ஐயுருபாகத் திரித்துப் பொருளுரைக்கப்பட்டது. ஏதமற என்பதற்கு நிகழ்ந்த சம்பவங்களி[illegible] சிறிதுந் தவறற வெனப் பொருள்கோடலும் உடை என்பதை வினைத்தொ[illegible] ஆடல்வலி யுடையாண்மையான் என்பதற்குப் பகைவருடைய போ[illegible] கெடுக்கும் ஆண்மையை யுடையான் எனப்பொருள்கோடலும் பொ[illegible] (௬௫)

கொவ்வையிதழ்மடநவ்வியலமரல்குவ்வினனல்[illegible]வியோ
ரைவருளர்சுதர்கைவில்விறலினரவ்வியமுமி[illegible]யோ
ரிவ்விவரிலெமையுய்வுகொளுமவனெவ்வெ[illegible]மவவ்வுதிண்
பௌவமெனநனிதெய்வமுனிவரர்பைத[illegible]ய்வனே.

(இ - ள்.) கொவ்வை இதழ் மடநவ்வி [illegible] கொவ்வைக் கனிபோலும் அதரத்தையுடைய (நோக்கத்தால்) மட[illegible] மானையொத்தவளே நீ மனஞ் சுழலற்க—அனலினும் வெவ்வியோர் [illegible] உளர் - அக்கினியிலுங் கொடியோராகிய புதல்வரைவருளர்—குக[illegible] விறலினர் - பூமியில் (அவர்) கையிலேந்திய வில்வலியை யுடை[illegible]—அவ்வியமும் இலர் - அழுக்காறுமில்லாதவர்கள்—செவ்வியோர் - [illegible]முடையோர்—இவ்விவரில் - இந்தக் குணங்களையுடைய இவர்[illegible] எம்மை உய்வுகொளும் அவன் - எம்மை உய்யச்செய்யும் அப்புதல்வன்—[illegible] முனிவரர் - தெய்வத்தன்மை பொருந்திய பிராமணர்களுடைய—எ[illegible] உலகையும் வவ்வு திண் பௌவம் என நனி பைதல் அற - எந்த எந்[illegible]த்தையுங் கவருகின்ற வலிய சமுத்திரம்போல மிகுகின்ற வருத்தம்நீங்க—[illegible] செய்வன் - அதற்குரிய முறைசெய்வன். எ - று.

ஏ - அசை. உலகையும் என்னும் உம்மை முற்றோடு சிறப்பு. அவ்வியமும் என்னும் உம்மை சிறப்பு. வெவ்வியோர் பெயரெச்சமுற்று. நவ்வி ஆகுபெயர். நனிபைதல் வினைத்தொகை. இவ்விவர் என்பது ஒருசொல்லாய் இவரென்னுஞ் சுட்டுப்பொருடந்து நின்றதெனினுமமையும். பகைவரை எஞ்சாமற் கொல்லும் வெம்மையும் அங்ஙனங்கோறற்குரிய படைக்கலப் பயிற்சியுமுடையர் என்பாள் அனலினும் வெவ்வியோர் கைவில்விறலினர் என்றும், இவ்வாறாகிய பெருமையுடையாரும் கல்வி செல்வம் ஆற்றன்முதலியவற்றாற் றம்மிற் பிறர் மேம்படுதலைக் காணின் அதுபற்றி அழுக்காறடைதலும் நடுவுநிலைமையிற் றிறம்புதலும் இயல்பாமாயினும் இவர் அவையும் இலர் என்பாள் அவ்வியமுமிலர் செவ்வியோர் என்றுங் கூறினாள். (௬௬)

அவனையிடுபலியருளுகெனமொழியளவின்மறலியுமுளைவுறச்
சிவனைவழிபடுமகவையருளியசெனகசெனனியர்நிகரெனத்
தவனின்முதிர்தருமுனியும்வழுவறுதனதிலறனுடைவனிதையுந்
துவனியறமனமகிழ்வொடினிதறுசுவைகொளமுதடுதொழிலராய்.

(இ - ள்.) அவனை இடுபலி அருளுக என மொழி அளவில் - அப்புதல்வனைக் கொடுக்கவேண்டிய பலியாகக் கொடுக்கக்கடவை என்று சொல்லுமளவில்—மறலியும் உளைவு உறச் சிவனை வழிபடு மகவை அருளிய செனகசெனனியர் நிகர் என - இயமனும்வருந்தச் சிவபெருமானைப் பூசித்த மார்க்கண்டேயர் என்னும் புதல்வரைப்பெற்ற தந்தைதாயரைப்போல—தவனில் முதிர்தரு முனியும் வழு அறு தனது இல் அறன் உடை வனிதையும் - தவத்தில் முதிர்ந்த பார்ப்பானும் தவறில்லாத அவனது இல்லறத்தையுடைய மனைவியும்—துவனி அற - (அழுகை) யொலிநீங்க—மன [illegible]கிழ்வொடு அறுசுவைகொள் அமுது இனிது அடுதொழிலராய்-மனமகிழ்ச்சி[illegible] அறுசுவைகளையும் பொருந்திய அமுதை நன்றாய்ச் சமைக்குந் தொழிலையு[illegible] எ-று.

மறலியு[illegible]ம்மை சிறப்பு. அருளுக என்னும் வியங்கோளீறு தொக்கது. தவன் [illegible]என என்பது அற என்பதனோடு முடிந்தது. தம் புதல்வன் பகனென்[illegible]னல் இறப்பான் என்று வருந்தி யழுதவர் என் புதல்வனைப் பலியிடுகெ[illegible]கூறிய கூற்றாற் பிழைத்தானென மகிழ்ந்தவ்வழுகையொழிந்தமைபற்[illegible]ாவுறச்சிவனை வழிபடுமகவை யருளிய செனகசெனனியர் நிகரெனத் [illegible]ன்றார். அமுதென்பது அன்னத்தையுங் கறிகளையுமுணர்ந்திநின்ற பெ[illegible] செனகன் - தந்தை. செனனி தாய். (சஎ)

தண்டரளமலைவெண்கயிலை[illegible]லையெனநங்கைமார்
மொண்டுசொரிதருகின்றவ[illegible]கறிகளும்வெந்தபான்
மண்டுநறுநெயொடந்தவிடலை[illegible]னவருமுண்டுதம்
பண்டிநிறைவுறுபின்புபிறிதொ[illegible]கெழுமியபண்டமே.

(இ - ள்.) தண் தரள மலை - குளிர்[illegible] முத்துமலை—வெண் கயிலை மலை - வெண்மையாகிய கைலாயமலை—ச[illegible] - சங்குமலையென்று (கண்டோர்) சொல்ல—நங்கைமார் மொண்டு [illegible] அடிசிலும் - பெண்கள் அள்ளிச் சொரிகின்ற அன்னத்தையும்—பால் [illegible] முந்து கறிகளும் - பாலோடு சமைத்த மேலான கறிகளையும்—மண்டு நறுநெ[illegible] அந்த விடலையும்மைந்தர் அனைவரும் உண்டு - அதிகமான புத்துருக்கு நெய்யோடு அந்த வீமனும் ஒழிந்த புதல்வரனைவரும் உண்டு—தம் பண்டி நிறைவுறு பின்பு - தங்கள் வயிறு நிறைந்தபின்பு—பண்டம் பிறிதொரு பண்டி கெழுமிய - அவ்வுணவுப் பொருள்கள் வேறொருபண்டியில் நிறைந்தன. எ - று.

எ - அசை. உண்டு பண்டி நிறைவுறு பின்பு என்பது முதல்வினை சினையொடு முடிந்தது. சொரிதரல் ஒருசொல். நறுநெய் போசனத்திற்குச் சிறந்தமையின் அதற்கு உயர் பின் வழித்தாகிய ஒருவினையொடுச்சொற் கொடுத்தும், பால்சேர்ந்தகறி ஏனைக்கறிகளிற் சிறந்தமையின் முந்துகறி என்றுங் கூறினார். தண்டரளமலை வெண்கயிலைமலை சங்கமலையென என்பது வெண்மையென்னும் பண்பு பற்றிவந்த பலபொருளுவமை. இவருண்டது பகற்காலமாதலின், கறிகளையும் வெந்தபாலையும் எனப் பொருள்கூறல் இராத்தயிரும் பகற்பாலும் போசனத்திற் காகாவென்னும் நூல்வழக்கோடு முரணுதலாற் பொருந்தாதென்க. (சஅ)

வையமுழுதுடையயனிளவலும்வைகலுடன்மனைவைகுவோ
ருய்யும்வகைபுகலையயுரையினையொய்யென்விரைவொடுகைகொளா
வெய்யபகனுடல்பெய்தகுருதியின்மெய்யையெழிலணிசெய்தனன்
செய்யமலர்கொடுசெய்யதுகில்கொடுசெய்யகலவையின்மொய்கொடே.

(இ - ள்.) வையம் முழுது உடை ஐயன் இளவலும் - பூமிமுழுதையுமுடைய தருமனது தம்பியாகிய வீமனும்—மனை வைகுவோர் உய்யும்வகை புகல் ஐயை உரையினை - வீட்டிலிருப்போர் உய்யும்படி சொன்ன தாயின் வசனத்தை—வைகலுடன் - உதயகாலத்தில்—ஒய்யென் விரைவொடு கைகொளா - மிக்க விரைவோடு அங்கீகரித்து—வெய்ய பகன் உடல் பெய்த குருதியின் - கொடிய பகன் என்னும் இராக்கதனுடைய உடல்சொரிந்த இரத்தத்தாற் (சிவக்கச்செய்யுமாறு) போல—செய்ய மலர்கொடு - சிவந்த பூவினாலும்—செய்ய துகில்கொடு - சிவந்த வஸ்திரத்தினாலும்—செய்ய கலவையின் மொய்கொடு-சிவந்த கலவை[illegible] மிகுதியினாலும்—மெய்யை எழில் அணி செய்தனன் - தன்னுடம்பை[illegible]டைய அழகுசெய்தான். எ - று.

ஏ - அசை. இளவலும் என்னும் உம்மை எச்சத்[illegible]. மலர்கொடு முதலியவற்றில் எண்ணும்மைகள் தொக்குநின்றன. [illegible] விரைவு என்பது ஒருபொருட்பன்மொழி. ஒடுவுருபின் பொருள் பட[illegible] என்னு மூன்றும் வேற்றுமைச் சொல்லுருபு ஏழனுருபாகத்திரித்துப்[illegible] ருரைக்கப்பட்டது. பெய்தகுருதி என்பது தெளிவுபற்றி எதிர்காலம் [illegible]மாயிற்று. வீமனுடல் நனைதலாகிய தொழிற்குப் பெய்தல் முன்னிக[illegible]ய்த்குருதியென இறந்தகாலத்தாற் கூறினாரெனினுமமையும். கை[illegible]ன்பது சந்தவின்பநோக்கி வல்லொற்று மிகாதுநின்றது. குருதியின் என்னும் இன்னுருபு உவமப்பொருட்டு. செய்யமலர்கொடு செய்யதுகில்கொடு செ[illegible]யின் மொய்கொடே என்பது சொற்பொருட்பின்வருநிலை. எழிலாவ[illegible]ளர்ந்தமைந்த பருவத்தும் இதுவளர்ந்து மாறியதன்றி இன்னும் வள[illegible]போன்றுகாட்டுதல். தாய்பணித்த பணியை விரையாதேற்கிற்றன்ப[illegible]கமாயினனெனயென அவள் மனங்கோடுவள் என்றமையினாலும் [illegible]தடுதென்றமையினாலும் மிகவிரைந்தேற்றான் என்பார் ஐயைபணியி[illegible]ன்விரைவொடுகைகொளா என்றார். ()

துற்றபலகறிசெற்றிய[illegible]ப்பொரிமகிரியொப்பெனச்
சற்றுமிடனறமொய்[illegible]சக்கிரவுருளைகளுய்க்கவே
யுற்றநிரைநிரைபத்[illegible]யாத்தபகடுகள்கட்டினு
னெற்றிமிசையொ[illegible]வட்லரிநிற்பதெனவொளிர்பொற்பினன்.

(இ - ள்.) நெற்றிமிசை ஒரு கொற்ற அடல் அரி நிற்பது என ஒளிர் பொற்பினன் - (அப்பண்டியின்) முற்பக்கத்தில் ஒரு வெற்றிபொருந்திய வலியினையுடைய சிங்கேறுநிற்றல்போலப் பிரகாசிக்கும் அழகையுடைய வீமன்—துற்ற பலகறி செற்றிய மலைசெய் துப்பு - தாம் உண்டு எஞ்சிய பலகறிகள் நெருங்கிய மலைபோலக் குவித்த அன்னம்—ஒரு இமகிரி ஒப்பு எனச் சற்றும் இடன் அற மொய்த்த - நிகரற்ற இமயமலையை யொக்கும் என்று கண்டோர்சொல்லச் சிறிதுமிடமின்றி நெருங்கிய—சகடு இரு சக்கிர உருளைகள் உய்க்க-பண்டியினுடைய வட்டமாகிய இரண்டு உருளைகளையியக்கும்படி—பத்திபட நிரைநிரை உற்ற வலி ஒத்த பகடுகள் கட்டினன் - ஒழுங்குபட நிரைநிரையாய்நின்ற வலிமை நிகர்த்த கடாக்களை (அப்பண்டியிற்) கட்டினான். எ - று.

ஏ - அசை. சகடு என்பது சந்தவின்பநோக்கி டகரம் இரட்டாது நின்றது. நிரைநிரை என்னும் அடுக்கு மிகுதிபற்றி வந்தது. செய் வினைத்தொகை. நிற்பது தொழிற்பெயர். மொய்த்த என்னும் பெயரெச்சம் சகடு என்னும் இடப்பெயர்

கொண்டது. துற்றதுப்பு எனவும், உய்க்கக்கட்டினுன் எனவும் இயைக்க. பகனு க்கு முன்படைத்துப் பின் தாம் உண்ணின் அவ்வுணவு நிஷேதமாமெனக் கருதி முன்னுண்டு எஞ்சியவுணவென்பார் துற்றதுப்பு என்ருர். (௫௦)

வேறு.

மண்டலங்கொள்வடிவுடனடற்பரிதிமண்ணில்வந்ததெனமறுகினிற்
கண்டகண்டமுனிகுலமடங்கவிருகண்களிக்கவருகாட்சியான்
வெண்டரங்கமெனவீசுபேயிரதமிஞ்சுகானநெறிமீதுபோ
யண்டரண்டமுகடுறவளர்ந்தனனரக்கனின்றவுழியறியவே.

(இ - ள்.) அடற் பரிதி மண்டலம் கொள் வடிவுடன் மண்ணில் வந்தது என- வலியசூரியன் தன் மண்டலத்திலுள்ள வடிவத்தோடு பூமியில் வந்தமைபோல— மறுகினில் கண்ட கண்ட முனிகுலம் அடங்க இருகண் களிக்கவரு காட்சியான்- வீதியிற் பார்த்தபார்த்த பிராமணகுலம் முழுதும் இரண்டுகண்களுங் களிப்படைய வருகின்ற தோற்றத்தையுடைய வீமன்—வெண் தரங்கம் என வீசு பேய் இரதம் மிஞ்சு கான நெறிமீது போய் - வெண்மையாகிய திரையைப்போல வீசுகின்ற கானல்மிகுந்த காட்டுவழியிற்போய்—அரக்கன் நின்ற உழி அறிய - பகன் என்னு மிராக்கதன் நின்றவிடத்தையறிய—அண்டரண்ட முகடு உற ,வளர்ந்தனன் - அண்டமுகட்டின் உச்சியைப்பொருந்த நிமிர்ந்தான். எ - று.

ஏ - அசை. மீது என்பது ஏழனுருபின் பொருள்படவந்த இடைச்சொல். முனிகுலம் வடநூன்முடிபு. காட்சியான் வினையாலணையும் பெயர். கண்ட கண்ட என்னும் அடுக்கு ஒருதொழில் பலகானிகழ்தல்பற்றி வந்தது. பரிதிமண்ணில் வந்தது இல்பொருளுவமை. தனக்குரிய செவ்வொளிசெறிந்த வடிவென்பார் மண்டலங் கொள்வடிவென்றும், இருளைக்கெடுக்கு மாற்றலுடைய பரிதி என்பார் அடற் பரிதி என்றுங்கூறினர். ஒருசொன்னீர்மைத்தாய் நின்ற அண்டரண்டம் - அண்டமுகடு. அது முகடென்பதனேடுதொக்கு ஒருபொருட்பன் மொழியாய் அண்ட முகட்டினுச்சியை யுணர்த்தி நின்றது. (௫௧)

களிந்தவெற்புதவுநீலமாநதியடுத்தகுன்றிலொருகழிமுழைத்
தெளிந்தபற்களொடுநாவைமென்றுநனிதின்றுவெம்பசிகொடீயினுன்
முளிந்துமுற்றுமனம்வேவவேவநெடுமூச்செறிந்துபுகைமுகனுடன்
விளிந்ததொத்துவழிகுழியநின்றுசுழல்விழிநிரைத்தயரும்வெகுளியான்.

(இ - ள்.) களிந்த வெற்பு உதவு நீல மாநதி அடுத்த குன்றில் ஒரு கழிமுழை - களிந்தமலைதரும் பெருமையாகிய காளிந்திநதியை அடுத்தமலையில் ஒரு பெரிய முழைஞ்சினின்றும் (வெளிப்பட்டு)—வெம் பசிகொள் தீயினுல் - கொடிய உதராக்கினியினுல்—தெளிந்த பற்களொடு நாவை மென்று நனிதின்று - வெள்ளியபற்களோடு நாக்கைமென்று மிகத்தின்று—மனம் முற்றும் முளிந்து வேவ வேவ நெடுமூச்சு எறிந்து - மனம் முழுதுங்காய்ந்து வேகவேகப் பெருமூச்செறிந்து—புகை முகனுடன் - அழலுகின்ற முகத்தோடு—வழி குழியநின்று - வழியுங் குழிந்துபோம்படி நின்று—சுழல் விழி நிரைத்து - சுழலுகின்ற கண்ணை (ஒரேபக்கத்தில்) நிறுத்தி—விளிந்தது ஒத்து அயரும் வெகுளியான் - இறந்தமையையொத்துச் சோகிக்குங் கோபத்தையுடையனுய். எ - று.

வேவவேவ என்னும் அடுக்கு ஒருதொழில் பலகாலிகழ்தல்பற்றி வந்தது. விளிந்தது தொழிற்பெயர். அயரும்என்னும் பெயரெச்சம் வெகுளியான் என்னும் வினையெச்சமுற்றில் விகுதியோடு முடிந்தது. முகன் போலி. இடைவிடாது நிற்றலின் வழிகுழிய என்றும், தனக்கெப்பொழுதும் பலிவருந்திசையையே நோக்கி நின்றமையின் விழிநிரைத்து என்றுங் கூறினர். (ருஉ)

வெற்றெனும்பினுயராசனந்தனில்விகங்கநீழலிடைமேவரச்
சுற்றுநின்றுபலசம்புகங்கடுதிசொல்லவல்லன்மிகுதுன்முக
னுற்றுநின்றநிலைகண்டுகந்திவனையுயிரொழிந்திடவுடற்றினு
லிற்றையுண்டிகெடுமென்றுபண்டியிலெடுத்தவல்சிநுகரிச்சையான்.

(இ - ள்.) வெற்றெனும்பின் உயர் ஆசனம் தனில் - மாமிசப்பற்றில்லாத எலும்பினாலாய உயர்ந்த ஆசனத்தில்—விகங்க நீழலிடை-(கழுகுமுதலிய) பறவைகளின் நிழலின் கீழே—பல சம்புகங்கள் மேவரச் சுற்று நின்று துதி சொல்ல - பலநரிகள் விருப்பமுண்டாகச் சூழ்ந்துநின்று துதிகளைச் சொல்ல—அல்லல் மிகு துன்முகன் உற்று நின்றநிலை கண்டு-(பார்த்தவர்கள்) துன்பம் மிகுதற்குக் காரணமாகிய கெட்டமுகத்தையுடைய பகன் என்பவன் பொருந்தி நின்ற நிலையை வீமன்கண்டு—உகந்து - மனமகிழ்ந்து—இவனை உயிர் ஒழிந்திட உடற்றினால் இற்றை உண்டி கெடும் என்று - இவனை உயிர் நீங்கும்படி கொன்றால் இன்றைக்கு (இந்த) வுணவு கெட்டுப்போம் என்று—பண்டியில் எடுத்த வல்சிநுகர் இச்சையான் - பண்டியிலேற்றிய உணவையுண்ணும் ஆசையையுடையனாய். எ - று.

இச்சையான் வினையெச்சமுற்று. மிகு என்னும் வினைத்தொகை முகம் என்னுங் கருவிப்பெயர்கொண்டது. தசைப்பற்றுமிலதாக இவனுண்டமை தோன்ற வெற்றெலும்பென்றும், இவனுண்டெஞ்சிய புலவைப் புசிக்கலாமென்ற விருப்போடு நரிகள்சூழ்ந்துளையிட்டனவென்பார் மேவரச்சுற்றுநின்றுபல சம்புகங்கடுதி சொல்ல என்றும், தனக்கியைந்த வலியுடையான் எதிரியானமையின் மகிழ்ந்தானென்பார் உகந்தென்றுங் கூறினர். (ருங)

வன்பினுலுரகபதியளித்தநெடுவாரியாரமுதமுண்டகோ
முன்பினுகவுயர்சகடிருந்தெதிர்முகந்துகொண்டுவரைமுழையுளே
யன்பினலடையுமன்னமென்னநிறையன்னமுற்றவுமருந்தினன்
பின்பினுகவிதுகண்டுவெம்பசிகொள்பகனுமெய்தியிவைபேசுவான்.

(இ - ள்.) வன்பினால் உரகபதி அளித்த நெடு வாரி ஆர் அமுதம் உண்ட கோ-தன்வலிமையைக் கண்டமையினாற் சர்ப்பராசனாகிய வாசுகிகொடுத்த நெடியபாற்கடலிற்றோன்றிய பெறுதற்கரிய அமுதத்தையுண்ட வீமன்—உயர் சகடு முன்பின் ஆக இருந்து - உயர்ந்த பண்டியில் முன்பின்னாக மாறியிருந்து—நிறை அன்னம் முற்றவும் - (அதில்) நிறைந்த அன்னம் முழுதையும்—வரை முழையுள் அன்பினால் அடையும் அன்னம் என்ன - மலைமுழைஞ்சினுள் விருப்போடு புகும் அன்னப்பக்ஷிபோல—எதிர் முகந்துகொண்டு அருந்தினன் - எதிரே அள்ளிக் கொண்டு போசனஞ்செய்தான்—பின் - அதன்பின்—வெம் பசிகொள் பகனும் - வெவ்விய பசியையுடைய பகனென்பவனும்—இது கண்டு பின் ஆக எய்தி இவை பேசுவான் - இதனைக்கண்டு பின்னாகவந்து இவற்றைக் கூறுவான். எ - று.

ஏ - அசை. பகனும் என்னும் உம்மை எச்சம். பண்டியில் முன்பின்னாக மாறியிருந்து உண்கின்றமையின் எதிர்வந்தபகன் வீமனுக்குப்பின்னாக வந்தானென்க. வரைமுழையுள் அன்பினாலடையும் அன்னம் என்றது இல்பொருளுவமை. வீமன்வாயுள் அன்னந் தடையின்றிச் செல்கின்றமையின் வரைமுழையுளே அன்பினாலடையும் அன்னமென்ன என்றும், வாசுகிகொடுத்த பத்துக்குடங்களிற் பூரித்த அமிர்தையுண்ட வலியுடையான் இப்பண்டியில் நிறைத்த அன்னமுழுதையும் உண்டல் அருமையன்றென்பார்உரகர்பதியளித்த அமுதமுண்டகோ நிறையன்ன முற்றவுமருந்தினான் என்றுங் கூறினார். ஆர் - அருமை. (௫௪)

புலிதனக்கிடுவிடக்கைநின்றதொருபூனைதின்னுமதுபோலநீ
பலியனைத்தையும்விழுங்கினாலிதுபலிக்குமோவெளிமைபாரெனா
வொலிபடக்கிரியிலுருமெறிந்ததெனவோடிவந்துபிடரோடியவே
வலிபடப்பணைவிறற்றடக்கைகொடுமாறிமாறிமுறைசீறினான்.

(இ - ள்.) புலி தனக்கு இடு விடக்கை-புலி தனக்கிட்டுவைத்த தசையை— நின்றது ஒரு பூனை தின்னும் அதுபோல - (அயலில்) நின்ற ஒருபூனை தின்னும் அத்தன்மைபோல—நீ பலி அனைத்தையும் விழுங்கினால் - நீ (எனக்குரிய) உணவு முழுதையும் உண்டால்—இது பலிக்குமோ - இது பலிக்குமா—எளிமை பாரெனா - எனது எளிமைத்தன்மையைப் பார் என்று—ஓடிவந்து - ஓடிவந்து—ஒலி படக் கிரியில் உரும் எறிந்தது என - ஒலியுண்டாக மலையில் இடி விழுந்தது போல—பிடர் ஒடிய - வீமனுடைய பிடர்முரிய—பணை விறல் தடக் கைகொடு - பருத்த வலிய வளைவாகிய கையினால்—வலிபட மாறிமாறி முறை சீறினான் - வலிமையுண்டாக மாறி மாறி முறையாகக் குத்தினான். எ - று.

ஏ - அசை. தட என்னும் உரிச்சொல் வளைவாகிய பண்பையுணர்த்திற்று. ஓகாரம் எதிர்மறை. நின்றது பெயரெச்சமுற்று. குத்துதற்கு வளைந்தகையென்க. மாறிமாறி யென்னும் அடுக்கு ஒருதொழில் பலகானிகழ்தல்பற்றி வந்தது. புலி மிருகங்களைக் கொன்றவுடன் தின்னாது வைத்துப் பின்பு தின்னுத லியல்பாதலின் புலிதனக்கிடுவிடக்கை என்றார். எளிமைபார் என்பதுநீகருதிய எளிமையை என்செய்கையால் எளிமையன்றெனக் காட்டுகின்றேன் என்பதனையுணர்த்திநின்ற குறிப்புச்சொல். (௫௫)

பக்கமும்பிடருமொக்கமுட்டிகள்படப்படக்கவளபாரமாய்
விக்கநின்றனவயிற்றிரண்டருகும்வீழவீழமுன்விழுங்கலும்
புக்கபண்டமுடனுனுடற்றசைபுசிப்பனெங்ஙனிவைபோவதென்
றக்கடுங்கையுமிளைத்துவெஞ்சினமுமாறிநின்றனனரக்கனே.

(இ - ள்.) முட்டிகள் பக்கமும் பிடரும் ஒக்கப் படப்பட - முட்டியாகப்பிடித்த கைக்குத்துக்கள் இருபக்கங்களினும் பிடரினும் ஒருநிகரனவாகப் படப்பட— முன் பார கவளமாய் விக்க நின்றன - முன்னே பருத்த கவளங்களாய் விக்க (உட்புகாது) நின்றவைகள்—வயிற்று இரண்டு அருகும் வீழ வீழ விழுங்கலும் - வயிற்றி னிரண்டருகும் விழ விழ வீமன் அவற்றை விழுங்குதலும்—அரக்கன் - அவ் விராக்கதனானவன்—புக்க பண்டமுடன் உன் உடல் தசை புசிப்பன் - (வயிற்றிற்) புக்க உணவோடு உனது உடம்பின்தசையைப் புசிப்பேன்—இவைபோவது எங்ஙன் என்று - இவை வீண்போவ தெவ்வாறென்று—அக் கடும் கையும் இளைத்து வெம் சினமும் ஆறி நின்றனன் - குத்திய அந்தக் கடியகையும் இளைத்து வெம்மையாகிய கோபமும் ஆறி நின்றான். எ - று.

ஏ - அசை. படப்பட, வீழ வீழ என்னும் அடுக்குக்கள் ஒருதொழில் பலகாணிகழ்தல்பற்றி வந்தன. அருகும் என்னும் உம்மை முற்று. கையும், சினமும் என்னும் உம்மைகள் சிறப்போ டெச்சம். முட்டி ஆகுபெயர். போவது தொழிற்பெயர். விக்க என்னுஞ் செயவெனெச்சம் ஏதுப்பொருட்டு. (ருசு)

அச்சகட்டினிலொரெட்டுணைச்சுவடுமற்றபின்சிறிதுமச்சமற்
றுச்சமுற்றவெயிலர்க்கனொத்திவனொடுத்தரித்துரைசெய்தொட்டினான்
மெச்சமெச்சுமுலகத்தரக்கர்களில்விக்கிரமத்திறலின்மிக்கநீ
கச்சகச்சபலகத்தைவிட்டுனதுகட்டுரத்தினொடுகட்டுவாய்.

(இ - ள்.) அச் சகட்டினில் ஓர் எள்துணைச் சுவடும் அற்றபின் - அப்பண்டியில் ஒரு எள்ளளவு அன்னத்தி னடையாளமும் இல்லாது கழிந்தபின்பு—சிறிதும் அச்சம் அற்று - வீமனானவன் சிறிதும் பயமின்றி—உச்சம் உற்ற வெயில் அர்க்கன் ஒத்து - உச்சியில்வந்த கிரணங்களையுடைய சூரியனைப்போல உக்கிரங்கொண்டு—இவனொடு உத்தரித்துரைசெய்து ஒட்டினான் - இந்தப்பகன் பேசியவைகளுக்கு விடைகூறி எதிர்த்து—மெச்ச மெச்சும் உலகத்து அரக்கர்களில்-பலருங் கொண்டாடும்படி வியக்கப்படும் உலகத்திலுள்ள இராக்கதர்களில்—விக்கிரமத் திறலில் மிக்க நீ - ஆண்டன்மையினை யுடைய வலியில் மேம்பட்ட நீ—கச்ச கச்ச பல கத்தை விட்டு - கைப்பான கைப்பான பல பயனில் சொற்களைப் பேசுதலைவிட்டு—உனது கட்டு உரத்தினொடு கட்டுவாய் - உனது உடையை வலிமையோடு கட்டுதி. எ - று.

சுவடும் என்னும் உம்மை சிறப்பு. ஒட்டினான் வினையெச்சமுற்று. உத்தரித்துரைசெய்தல் என்பது ஒருசொல்லாய் விடைகூறுதலை யுணர்த்திற்று. கச்சகச்ச என்னும் அடுக்கு மிகுதிபற்றிவந்தது. கச்ச என்பது போலி. ஒடுவுருபு குவ்வுருபாகத் திரித்துப் பொருளுரைக்கப்பட்டது. இவனைக் கொன்றபின் இவ்வன்னம் உண்ணத் தகாதெனக் கருதி உண்டபின் எதிர்த்தானென்க. இனியுத்தசன்னத்தருகுதி யென்பான் கட்டுரத்தினொடு கட்டுவாய் என்றான். மெச்ச மெச்சும் என்பதற்கு அதிகமாக மெச்சப்படும் எனப்பொருள்கொண்டு,கைத்த என்பது கைச்ச எனநின்றவாறுபோல மெத்த என்பது மெச்ச எனநின்றதெனினு மமையும். கச்ச கச்ச என்பதற்குப் போ போ எனப்பொருள் கூறுவாருமுளர். (ருஎ)

சொல்லியென்பயனரக்கனீமனிதன்யானுனக்குரியதொழில்களா
மல்லினும்படைவிதத்தினுஞ்செருவில்வல்லவல்லனபுரிந்துபோர்
வெல்லநெஞ்சமுளதாகில்வந்துபொருவிறலிடிம்பனையும்வென்றுனைக்
கொல்லவந்தனெனெனப்புகுந்திருகைகொட்டிமார்பின்மிசைகுத்தினான்.

(இ - ள்.) நீ அரக்கன் யான் மனிதன் - நீ இராக்கதன் நான் மனிதன்—செருவில் - போரில்—உனக்கு உரிய தொழில்களாம் மல்லினும் படைவிதத்தினும் - உனக்குரிய தொழில்களாகிய மற்றொழிலினும் பலபடைக்கலத்தொழிலினும்—வல்ல வல்லன புரிந்து - வல்லனவற்றை வல்லனவற்றைச் செய்து—போர் வெல்ல நெஞ்சம் உளதாகில் வந்து பொரு - போரைவெல்ல மனமுண்டாயின் வந்துபோர்செய்—விறல் இடிம்பனையும் வென்று உனைக் கொல்லவந்தனன்-நான் வலிய இடிம்பன் என்பவனையும் வென்று உன்னைக்கொல்ல வந்தேன்—சொல்லி என்பயன் எனப் புகுந்து - இவைகளைச் சொன்னதனால் என்ன பிர

யோசனம் என்று வீமன் சொல்லிப்போய்—இருகை கொட்டி மார்பின்மிசை தத்தினன் - இரண்டு கைகளையுந் தட்டிப் பகனுடையமார்பிற் குத்தினன். எ-று.

இடிம்பனையும் என்னும் உம்மை சிறப்பு. வல்லவல்லன் என்னும் அடுக்கு மிகுதிபற்றிவந்தது. ஒட்டிப் புகுந்து கொட்டிக் குத்தினனென்றியையும். இராக்கதர்கள் பெரும்பான்மையும் விற்போர் முதலியவற்றைப் பயிலாது மற்போர் கண்டப்போர் முதலியவற்றைப்பயின்றிருத்தல் வழக்காதலின் அவற்றாற்பொருக வென்பான் உனக்குரிய தொழில்களாம் மல்லினும்படைவிதத்தினும் என்றான். மற்போர்புரிவார் முன்பு கைதட்டிப் பின்பொருதல் வழக்காதலின் கைகொட்டிக் குத்தினனென்க. இருகைகொட்டி என்பதற்கு இருகைகளையும் வளைத்து எனப் பொருள்கோடலும் ஒன்று. இப்பொருட்குக் கோட்டி என்பது கொட்டி எனக் குறுகிற்று. (ருஅ)

பட்டவர்த்தனர்கள்பொற்சிரத்தின்மலர்பொற்புடைச்சரணபற்பனு
நெட்டிருட்சரனும்வெற்புவெற்பினொடுநிச்சயித்துடலநிற்பபோல்
வட்டம்வட்டம்வரவொட்டியொட்டியுறுமற்றொழிற்செருவின்மட்டியா
முட்டியுத்தநிலைகற்றகற்றவகைமுற்றமுற்றவெதிர்முட்டினார்.

(இ - ள்.) பட்டவர்த்தனர்கள் பொற்சிரத்தின் மலர் - பட்டவர்த்தன ராசர்களுடைய அழகிய தலைகளாகிய தடாகங்களில் மலர்கின்ற—பொற்பு உடைச் சரணபற்பனும் - அழகுபொருந்திய காலாகிய தாமரை மலரையுடைய வீமனும்—நெட்டு இருட்சரனும் - நெடிய நிசிசரனாகிய பகனும்—வெற்பு வெற்பினொடு உடல நிச்சயித்து நிற்பபோல் - மலை மலையோடு போர்செய்ய நிச்சயித்து நிற்பது போல—வட்டம் வட்டம் வர ஒட்டி ஒட்டி உறு மல் தொழில் செருவில் - மண்டலம் மண்டலமாக ஒருவரோ டொருவர் கலந்து கலந்து செய்கின்ற மற்றொழிலாகிய யுத்தத்தினுள்ளே—முட்டி யுத்தநிலை - முட்டிப்போரின் நிலைகளில்—கற்ற கற்ற வகை முற்ற முற்ற - தாம்படித்த படித்த வகை முதிர முதிர—மட்டியா எதிர் முட்டினர்-மதித்து (ஒருவருக்கொருவர்) எதிரே குத்தினார்கள்.எ-று.

வட்டம் வட்டம் என்பது முதலிய அடுக்குக்கள் மிகுதிப்பொருள் பற்றிவந்தன. நிற்பது என்னுந் தொழிற்பெயர் ஈறுகெட்டது. பத்மம் என்னும் வடமொழி பற்பமெனத் தற்பவமாயிற்று; ஆற்பனேபதம் என்பதுபோல. பற்பம் ஆகுபெயர். பொற்சிரத்தின்மலர் சரணபற்பன் என்பது ஏகதேச வுருவகம். வெற்புவெற்பினொடுடல நிற்பதென்றது இல்பொருளுவமை. பட்டவர்த்தனராகிய வீரரையும் வென்று தன்னடியின் கீழ்ப்படுத்திய வீரனாதலின் வலியுடைய இராக்கதனோ டெதிர்ந்து யுத்தஞ்செய்தா னென்பார் பட்டவர்த்தனர்கள் பொற்சிரத்தின்மலர் பொற்புடைச்சரணபற்பன் என்றும், குத்துதற்குரிய தானங்களைக் கருதிக்குத்தின ரென்பார் மட்டியாமுட்டினர் என்றுங்கூறினர். முட்டியுத்தமாவது கைவிரலைந் தையுஞ் செறியப்பொத்திக் குத்தும்போரென்க. (ருகூ)

கரங்கரத்தொடுபிணங்கவுந்தமதுகால்கள்கால்களொடுகட்டவுஞ்
சிரஞ்சிரத்தினொடுதாக்கவுங்கொடியசிங்கவேறனையதிறலின
ரரங்களிட்டும்வளர்தோள்களிட்டுமெதிரொத்திமற்சமருடன்றபின்
மரங்களிட்டுமுயர்கற்களிட்டுநெடுவாதினேடிகலிமோதினர்.

(இ - ள்.) கொடிய சிங்க ஏறு அனைய திறலினர் - கொடிய ஆண்சிங்கத்தினை யொத்த வலியினையுடையோ ரிருவரும்—தமது கரம் கரத்தொடு பிணங்கவும் - தங்களுடைய கைகள் கைகளோடு பின்னவும்—சிரம் சிரத்தினொடு தாக்கவும் - தலை தலையோடு மோதவும்—உரங்கள் இட்டும் வளர் தோள்கள் இட்டும் - மார் பகங்களைச் சேர்த்தும் வளரும் புயங்களைச் சேர்த்தும்—எதிர் ஒத்தி மற்சமர் உடன்றபின் - எதிரே தாக்கி மல்யுத்தத்தைச் செய்தபின்பு—மரங்கள் இட்டும் உயர் கற்கள் இட்டும் - மரங்களைவீசியும் பெரிய கற்களையெறிந்தும்—நெடு வாதினொடு இகலி மோதினர் - மிக்கசபதத்தோடு மாறுபட்டுச் சண்டை செய்தார்கள். எ-று.

உலாவருந்தனதுதாதையொத்தவலியுடையகாலைகழலுதையினால்
விலாவொடிந்துதடமார்பொடிந்துமிடல்வெரிநொடிந்துபடுவெம்பிணப்
புலாலளைந்தவிருகவுளொடிந்துபொருபுயமொடிந்துகடையொத்தவாய்
நிலாவெழுங்கொடியவெயிறொடிந்துசெயலின்றிவாணிருதனிற்கவே.

(இ - ள்.) வாள் நிருதன் - கொலைத் தொழிலையுடைய இராக்கதன்—உலா வரும் தனது தாதை ஒத்த வலி உடைய காலை கழல் உதையினால்-இயங்குகின்ற தன் பிதாவாகிய வாயுவையொத்த வலிமையையுடைய வீமனதுகாலுதையினால்— விலா ஒடிந்து - விலாமுரிந்து—தட மார்பு ஒடிந்து - விசாலமாகிய நெஞ்சுமுரிந்து—மிடல் வெரிந் ஒடிந்து - வலிமைபொருந்திய முதுகுமுரிந்து—படு வெம் பிணப் புலால் அளைந்த இரு கவுள் ஒடிந்து - உயிர் நீங்கிய வெவ்விய பிணத்தின் புலான்மணஞ் செறிந்த இரண்டு கதப்புக்களும் ஒடிந்து—பொரு புயம் ஒடிந்து - யுத்தஞ் செய்கின்ற புயங்களும் முரிந்து—கடைவாய் ஒத்த நிலா எழும் கொடிய எயிறு ஒடிந்து - கடைவாயிற் பொருந்திய தம்மில் ஒத்த நிலா வீசும் வக்கிரதந்தங்களும் முரிந்து—செயல் இன்றி நிற்க - ஒருசெயலு மில்லாமல் நிற்க. எ - று.

ஏ - அசை. கழல் ஆகுபெயர். (௬௧)

உண்டியற்றயரும்யாதுதானனடியுண்டுமெய்த்தளர்வொழிந்தபின்
மண்டியிட்டெதிர்விழுத்திமார்பினிபமத்தகத்திடைமடங்கலிற்
றிண்டிறற்பெருமிடற்றைவன்பினொடுதிருகிவீசியொருசெங்கையாற்
பண்டியிற்கடிதினிட்டுமாருதிபுகுந்தனன்பழையபதியிலே.

(இ - ள்.) மாருதி - வீமனானவன்—உண்டி அற்று அயரும் யாதுதானன் அடி உண்டு - உணவின்மையாற் சோரும் இராக்கதனாகிய பகனது அடியைப் பட்டு—மெய்த் தளர்வு ஒழிந்தபின் - தன் சரீர வருத்த நீங்கியபின்பு—இப மத்தகத்திடை மடங்கலின் - யானையின் மத்தகத்திற் பாய்ந்த சிங்கத்தைப்போல— எதிர் விழுத்தி மார்பின் மண்டியிட்டு - அவனைத் தனக்கெதிரே விழுத்தி அவன் மார்பில் மண்டியிட்டு—திண் திறற் பெரு மிடற்றை வன்பினொடு திருகி வீசி— மிகுந்த வலிமையினையுடைய பெரியகழுத்தை வீரத்தோடு திருகி வீசி—ஒருசெங்கையால் கடிதிற் பண்டி இட்டு - ஒரு சிவந்தகையினால் விரைவிற் (பிணத்தைப்) பண்டியில் இட்டு—பழைய பதியில் புகுந்தனன் - பழைய நகரத்திற் போயினன். எ - று.

ஏ - அசை. நிற்கவிழுத்தியெனவிியையும். உண்டியற்றயரும்யாதுதானனென்றடைகொடுத்தார், உண்வொழிந்தயர்வாளுயினும் வீமன்றளர அடித்தானென அவனாற்றலைவிளக்குதற்கென்க. (சுஉ)

ஏகசக்கிரவனத்திருந்ததிறல்யாதுதானனையிமைப்பினிற்
சாகமுட்டியினடர்த்துமாமுனிவர்தம்பதிப்புறனடுத்ததோர்
வேகரிக்கடுவனத்திலிட்டுமலரோடைமூழ்கவிறல்வீமனு
மோகரித்தவுணரைத்தடிந்துகடன்முளரிநாயகனுமூழ்கினன்.

(இ - ள்.) விறல் வீமனும் - வலிமையினையுடைய வீமனும்—ஏகசக்கிர வனத்து இருந்த திறல் யாதுதானனை - ஏகசக்கிரமென்னும் பெயரைப் பொருந்திய காட்டிலிருந்த வீரத்தையுடைய இராக்கதனாகிய பகனை—இமைப்பினில் முட்டியிற் சாக அடர்த்து - ஒருமாத்திரைப் பொழுதில் முட்டியினால் இறக்கும்படி யுத்தஞ்செய்து—மா முனிவர்தம் பதிப்புறன் அடுத்தது ஓர் வே கரிக் கடு வனத்தில் இட்டு - பெருமையாகிய பிராமணர்களுடைய நகர்ப்புறத்தையடுத்த (பிணங்கள்) வேகின்ற கரிந்த கொடிய ஒரு மயானத்திலிட்டு—மலர் ஓடை மூழ்க - பூக்களையுடைய ஓடையிலே முழுக—முளரி நாயகனும் - தாமரைக்கு நாயகனாகிய சூரியனும்—அவுணரை மோகரித்துத் தடிந்து கடல் மூழ்கினன் - மந்தேகர் என்னும் அசுரரை வீராவேசங்கொண்டு வதைத்துக் கடலில் முழுகினன். எ - று.

இது பெயர்பொருட்டற் குறிப்பேற்ற மென்னும் அலங்காரம். வீமனும் முளரிநாயகனும் என்னும் உம்மைகள் சிறப்பு. வே என்னும் முதனிலைத் தனிவினை பெயரெச்சமாய் நின்றது. வேத்திரகீய நகரிலுள்ளார் கண்டு துயரநீங்கி மகிழுமாறு அவனுடலைப் பண்டியிற் கொடுவந்து அந்நகர்ப் புறத்திலுள்ள மயானத்தி விட்டானென்க. (சுங)

வாசம்ாமணிவிளக்கெடுப்பவிவன்வந்துதாமுறையுமனைபுகுந்
தீசனோடுமையெனத்தவம்புரியுமிருவர்தாள்களுமிறைஞ்சியே
நேசமானவருளன்னையைத்தொழுதுதம்முனைத்தொழுதுநெஞ்சுறத்
தேசினோடிளைஞர்தொழமகிழ்ச்சியொடுதழுவினன்முறைமைதிகழவே.

(இ - ள்.) இவன் - இந்தவீமன்—மா மணி வாச விளக்கு எடுப்ப வந்து - (நகரத்திலுள்ளார்) பெருமைபொருந்திய அழகிய நெய்விளக்கையேற்ற வந்து—தாம் உறையும் மனை புகுந்து - தாமிருக்கும் வீட்டிற்புகுந்து—முறைமை திகழ-முறைமைவிளங்க—ஈசனோடு உமை எனத் தவம் புரியும் இருவர் தாள்களும் இறைஞ்சி - சிவபெருமானோடு பார்வதியார் என்று சொல்ல இல்லறத்தை நடாத்தும் அந்தணனும் மனைவியுமாகிய இருவருடைய கால்களையும் வணங்கி—நேசம் ஆன அருள் அன்னையைத் தொழுது - அன்புமுதிர்ந்த அருளையுடைய தன் தாயாகிய குந்திதேவியை வணங்கி—தம்முனைத் தொழுது - தமையனை வணங்கி—இளைஞர் தேசினோடு நெஞ்சு உறத் தொழ - தம்பியர் பெருமையோடு மனம்பொருந்த வணங்க—மகிழ்ச்சியொடு தழுவினன் - சந்தோஷத்தோடு அவரைத் தழுவினன். எ-று.

ஏ இரண்டும் அசைகள். வாசவிளக்கென விதந்தமையிற் புத்துருக்கு நெய்யாலேற்றிய தீபம் என்பது போதரும். ஈண்டுத் தவம் என்றது இல்லறத்தை. ஈசனும் உமையுஞ்சேர்ந்து உலகைநடாத்துமாறுபோல இவரிருவருஞ் சேர்ந்து துறந்தார் முதலியோரை யுபசரித்து அவ்வவ் வொழுக்கநெறிகளிற் றவறாது நடத்துப

வர் என்பார் ஈசனேடொன்மையெனத் தவம்புரியுமிருவர் என்றும், அந்தணரை முன்வணங்கிப் பின் தாய்தந்தை தம்முன் முதலியோரை முறையே வணங்கல் வேண்டுமென்னும் நூல்வழக்குப்பற்றி வணங்கினுன் என்பார் முறைமைதிகழ என்றும், தொடர்புடையார் மாட்டுநிகழும் அன்பு முதிர்ந்துழியே தொடர்பில்லார் மாட்டு நிகழும் அருள்பிறத்தலின் நேசமான அருள் என்றுங் கூறினர். நேசமானவருள் என்பதற்குத் தான் பற்றுவைத்தோருள் எனப் பொருள்கோடலும் ஒன்று. (௬௪)

அகமலர்ந்துமுனியாசிசொற்றிடவுமன்னையாரவுரைகூறவு
முகமலர்ந்துரியதுணைவராண்மைநிலைமொழியவுஞ்சமரமொய்ம்பனைச்
சகமலர்ந்ததிருவுந்திமால்கொலிவனென்றுமற்றுளசனங்களு
மிகமலர்ந்துபுனலோடையிற்குழுமிநனிவியந்திசைவிளம்பினர்.

(இ - ள்.) சமர மொய்ம்பனை - யுத்தவலிமையினையுடைய வீமனை—முனி அகம் மலர்ந்து ஆசி சொற்றிடவும் - (வீட்டிற்கதிகாரியாகிய) பிராமணன் மனமகிழ்ந்து ஆசிசொல்லவும்—அன்னை ஆர உரை கூறவும் - தாயாகிய குந்திதேவி மிக வாழ்த்துக்களைச் சொல்லவும்—உரிய துணைவர் முகம் மலர்ந்து ஆண்மை நிலை மொழியவும் - உரிமையையுடைய துணைவர்கள் முகமலர்ச்சிகொண்டு ஆண்டன்மையின் நிலையைச் சொல்லவும்—மற்று உள் சனங்களும் - வேறுயுள்ள சனங்களும்—மிக மலர்ந்து - (மயானத்திற் பகனுடைய பிரேதத்தைக்கண்டு) மிகமனமகிழ்ந்து—புனல் ஓடையில் குழுமி - (வீமன்முழுகுகின்ற) நீரையுடைய ஓடையிற் கூடி—இவன் - இந்தப்பிராமணன்—சகம் மலர்ந்த திரு உந்திமால்கொல் என்று- உலகத்தைத் தோற்றுவித்த அழகிய நாபியையுடைய விட்டுணுவோ என்று - நனி வியந்து இசை விளம்பினர் - மிகவியந்து அவனுடைய கீர்த்திகளைப் பேசினர்கள். எ - று.

சனங்களும் என்னும் உம்மை எச்சம். இவன்செய்த ஆண்மை உலகுள்ளளவுமழியாது நிலைபெறுதலின் ஆண்மை நிலையென்றூர். துட்டர்களாகிய இராக்கதரையும் அவுணரையுங்கொன்று உலகத்தைக் காத்த விட்டுணுவைப்போல இவனும் பகன் என்னும் இராக்கதனைக்கொன்று தம்மைக்காத்தமையின் சகமலர்ந்த திருவுந்திமால்கொல் என்றூரென்க. (௬௫)

ஆ செய்யுள் - ௬௧௮.

வேத்திரகீயச்சருக்க முற்றிற்று.

---

# திரௌபதிமாலையிட்டசருக்கம்.

இங்கிவரிவ்வாறிந்தவிருக்கையிலிருக்குநாளி
லங்கண்மாஞாலமெங்குமரக்குமாளிகையின்வீந்தார்
பங்கமில்குணத்தான்மிக்கபாண்டவரென்றுமாழ்கத்
துங்கவேற்றுருபதன்றன்சூழ்ந்ததுசொல்லலுற்றாம்.

(இ - ள்.) இவர் - இப்பாண்டவர்கள்—இவ்வாறு இங்கு இந்த இருக்கையில் இருக்கும் நாளில் - இந்தப்பிரகாரம் இவ்வேத்திரகீய நகரத்திலுள்ள இந்தப் பிராமணனுடைய வீட்டில் இருக்கும்நாளில்—அம் கண் மா ஞாலம் எங்கும் - அழகிய இடத்தையுடைய பெருமையாகிய பூமியிலுள்ளோரனைவரும்—பங்கம் இல் குணத்தான் மிக்க பாண்டவர் - குற்றமில்லாத குணத்தான் மேம்பட்ட பாண்டவர்கள்—அரக்குமாளிகையில் வீந்தார் என்று மாழ்க - அரக்குமாளிகையில் இறந்தார்கள் என்று மனம்வருந்த—துங்க வேல் துருபதன் - உயர்ச்சிபொருந்திய வேலையுடைய யாகசேனன்—சூழ்ந்தது சொல்லலுற்றாம் - எண்ணிச் செய்ததைச் சொல்லத் தொடங்கினோம். எ - று.

தான் - அசை. ஞாலம் ஆகுபெயர். துரியோதனாதி நூற்றுவரைப்போலத் துர்க்குணங்களானிறையாது நற்குணங்களானிறைந்து உலகைத் தம் வெண் கொற்றக்குடைக்கீழோம்பவல்ல சாதுரியத்திற் சிறந்தாரென் றுலகம் மாழ்கிற்றென்பார் வீந்தார் பங்கமில்குணத்தான் மிக்க பாண்டவரென் றுமாழ்க என்றார். (க)

வரத்தினாற்பிறந்தவாறும்வான்மொழிபுகன்றவாறுஞ்
சிரத்தினால்வணங்கிக்கேட்பத்தேசிகனுரைத்தவாறு
முரத்தினார்கெடாதவாறுமுணர்ந்துதன்பேதையின்னஞ்
சரத்தினாலுயர்ந்தவின்மைத்தனஞ்சயற்குரியளென்னா.

(இ - ள்.) வரத்தினால் பிறந்தவாறும் - (யாகசேனனானவன் தான்கேட்ட) வரத்தினால் (திரௌபதி) பிறந்ததன்மையையும்—சிரத்தினால் வணங்கிக் கேட்பத் தேசிகன் உரைத்தவாறும் - தலையால்வணங்கிக் கேட்பத் தன்குருவாகிய உலூக முனிவன் சொல்லிய தன்மையையும்—வான்மொழி புகன்றவாறும் - அசரீரிவாக்குச்சொல்லிய தன்மையையும்—உரத்தினார் கெடாதவாறும் உணர்ந்து - வலிமையினையுடைய பாண்டவர்கள் இறவாததன்மையையும் அறிந்து—தன் பேதை - தன்மகள்—இன்னம் - இன்னும்—சரத்தினால் உயர்ந்த வின்மைத் தனஞ்சயற்கு உரியள் என்னா - அம்பினாலுயர்ந்த விற்றொழிலையுடைய அருச்சுனனுக்கே உரியவள் என்று கருதி. எ - று.

தனஞ்சயற்கே என்னும் பிரிநிலையேகாரம் விகாரத்தாற்றொக்கது. பேதை என்பது ஈண்டுப் பருவங்குறியாதுநின்றது. யாகசேனன் அருச்சுனனுக்கு மணம் புணர்த்தற்குந் துரோணாசாரியனைக் கோறற்கும் புத்திரியையும் புத்திரனையும் பெறவேண்டுமெனத் தபோவனஞ்சென்று உபயாசன் யாசன் என்னுமுனிவரர்கண் மாட்டிரந்துழி அவ்விருவருங்கொடுத்த வரத்தாற் பிறத்தமையின் வரத்தினாற் பிறந்தவாறும் என்றும், உலூகமுனி என்னுந் தன்னாசாரியனை நோக்கி அரக்கு மாளிகையிற் பாண்டவரிறந்தாரே இனி யானென் செய்வேனெனக் கவலையுற்றுழி

அவன் அவரிறந்திலரென அப்பாஞ்சாலராசனுக்குத் தெளிவுபெறவுரைத்தமையிற் சிரத்தினல்வணங்கிக்கேட்பத் தேசிகனுரைத்தவாறும் என்றும், அவ்வாசாரியன் யாகசேனனுக்கு உறுதியுண்டாகப் பாண்டவர் அரக்குமாளிகையி லிறந்திலரென அசரீரியைக்கொண்டு கூறுவித்தமையின் வான்மொழி புகன்றவாறும் என்றும், இம்மூன்றனுலும் பாண்டவரிறந்திலரென அவன் றுணிந்துகொண்டமையின் உரத்தினர்கெடாதவாறும் உணர்ந்து என்றுங்கூறினர். (௨)

தான்வரித்தவற்கேயெய்தவுரியளென் றனையையென்று
கான்வரிச்சுரும்புண்மாலைக்காவலர்க்கோலைபோக்க
மான்வரிக்கண்ணிக்கேற்றவதுவைநாண்மலர்பூவொன்றைத்
தேன்வரித்தென்னவந்துதிரண்டதுகுமரர்சேனை.

(இ - ள்.) என் தனயை - என்புத்திரியானவள்—தான் வரித்தவற்கே எய்த உரியள் என்று - தானய் (வேண்டுமென்று) நியமிக்கப்பட்டவனுக்கே பெற வுரியள் என்று—வரிச் சுரும்பு உண் கான் மாலைக் காவலர்க்கு ஓலை போக்க - இராகங்களைப்பாடும் வண்டுகள் (தேனை) உண்கின்ற மணம்பொருந்திய மாலையையணிந்த அரசர்களுக்கு (யாகசேனன்) திருமுகம் அனுப்ப—மான் வரிக்கண்ணிக்கு ஏற்ற வதுவைநாள் - மான்போலுஞ் செவ்வரிபரந்த கண்களையுடைய திரௌபதிக்கு இயைந்த கல்யாணநாளில்—குமரர் சேனை-அரசகுமாரருடையகூட்டம்—மலர் பூ ஒன்றைத் தேன் வரித்து என்ன வந்து திரண்டது - மலரும்பக்குவத்தையுடைய பேரரும்பொன்றை வண்டுகள் (தனித்தனியே தத்தமக்கென்று) நியமித்துவந்து மொய்த்தவாறுபோல வந்துகூடியது. எ - று.

ஏகாரம் பிரிநிலை. சேனை என்னும் அஃறிணைச்சொற்கியையத் திரண்டது என்னும் அஃறிணைவினைகொடுத்தார். என்ன ஓலைபோக்கவென் றியையும். நாயகன் நாயகி என்னும் இருவர்க்குமியைய நாள்குறித்து மணம்புணர்த்தல் வழக்காயினும் ஈண்டு நிகழும்மணம் ஏனைமணம்போலன்றி வில்வளைத்திலக்கு வீழ்த்துக் கைப்பிடித்தலாகிய ஆசுரமாதலின்.அங்ஙனம் இலக்குவீழ்ப்பானை முன்றெரிந்துணர்தலருமைபற்றி இவட்குமாத்திரமியையக் கணிகுறித்தநாள் என்பார் மான்வரிக்கண்ணிக்கேற்றவதுவை நாள் என்றும், போகநுகரும் மங்கைப் பருவமுடையள் என்பார் மலர்பூ என்றும், அம்மலர்பூவை ஒருவண்டே நுகர்தற்குரித்தாயிருக்கவும் அதனையறியாது பலவண்டுகள் தனித்தனியே தாம்நுகருமாறு தத்தமக்கென வரித்துவந்து மொய்க்குமாறுபோல இவளை அருச்சுனனே நுகர்தற்குரியவனயிருக்கவும் அதனையறியாது குமரர்சேனை தனித்தனி தாம் நுகருமாறு வரித்துவந்து திரண்டனவென்பார் பூவொன்றைத் தேன்வரித்தென்னவந்து திரண்டது குமரர் சேனை என்றுங் கூறினர். (௩)

ஆங்கதுநிகழ்ந்தமாற்றமந்தணனொருவன்வந்தோ
னீங்கிவர்க்குரைப்பமைந்தரைவரும்யாயுங்கேட்டுப்
பாங்குடைப்பதியில்வாழும்பார்ப்பனமாக்களோடுந்
தாங்கருங்கொடியகானந்தம்மனத்தேரிற்போனர்.

(இ - ள்.) ஆங்கு அது நிகழ்ந்த மாற்றம் - அந்தப் பாஞ்சால நகரில் அம்மணம் நிகழ்ந்த வசனத்தை—வந்தோன் அந்தணன் ஒருவன் ஈங்கு இவர்க்கு உரைப்ப - வந்தவனுகிய பிராமணனொருவன் இவ்வேத்திரகீய நகரிலிருக்கின்ற இவர்களுக்குச் சொல்ல—மைந்தர் ஐவரும் யாயும் கேட்டு - அதனைப் புதல்வ

ரவருந் தாயுங் கேட்டு—பதியில்வாழும் பாங்கு உடைப் பார்ப்பனமாக்களோடும்-நகரில் வாழும் நட்பையுடைய பிராமணர்களோடும்—தாங்க அரும் கொடிய கானம் - பொறுத்தற்கரிய கொடுமையையுடைய காட்டில்—தம்மனத் தேரில் போனார் - தம்மனமாகிய தேரிலேறிப் போயினார்கள். எ - று.

வந்தோன் பெயரெச்சமுற்று. தாங்க என்னும் வினையெச்சத் தீறுதொக்கது. தாங்கு என முதனிலைத்தொழிற்பெயராக்கினுமமையும். பாஞ்சாலனுடைய நகர்க்குச் செல்லல்வேண்டுமென்னும் மனவூக்கமே தாங்கருங் கொடியகானில் வருத்தமின்றிச் சேறற்குக் கருவியாயிருந்ததென்பார் தாங்கருங் கொடிய கானந் தம்மனத்தேரிற்போனார் என்றார். (ச)

சாரதந்திரத்தின்மிக்கதபோதனன்சதுர்வேதங்கள்
பாரதந்தன்னோடைந்தாம்படியினாற்பகர்ந்தமூர்த்தி
நாரதமுனியையொப்பானராதிபர்நடந்துசெல்லு
நீரதநெறியில்வாவிநிறைந்தநீரென்னநின்றான்.

(இ - ள்.) சார தந்திரத்தின் மிக்க தபோதனன் - பொருளையுடைய நூலறிவில் மேற்பட்ட தவச்செல்வனும்—சதுர் வேதங்கள் பாரதந் தன்னோடு ஐந்தாம்படி பகர்ந்த மூர்த்தி - நான்குவேதங்கள் பாரதத்தோடு சேர்ந்து ஐந்தாகும்படி (அப்பாரதத்தைச்) சொன்ன தலைவனும்—நாரதமுனியை ஒப்பான் - நாரதமுனிவனை யொப்பவனுமாகிய வியாதமுனிவன்—நராதிபர் நடந்து செல்லும் நீரத நெறியில் - அரசர்களாகிய பாண்டவர்கள் நடந்து செல்லும் நீரற்றவழியில்—வாவி நிறைந்த நீர் என்ன நின்றான் - வாவியில்நிறைந்த நீரைப்போல நின்றான். எ - று.

இன், ஆல் அசைகள். தந்திரம் ஆகுபெயர். தபோதனன் வடநூன்முடிபு. நீரதம் என்பது கேடு என்னும் பொருடந்துநின்ற தற்பவச்சொல். முனிவரரெழுவரினுந் தவத்தான்மேற்பட்டுத் தோன்றுந் தேவ இருடியாகிய நாரதன்போல இவனும் ஏனைமுனிவரரெவரினுந் தவத்தான் மேற்பட்டுத் தோன்று மியல்பினன் என்பார் நாரதமுனியையொப்பான் என்றும், நீரதநெறியிற் செல்லும் இவர்க்கு வாவிநிறைந்தநீர் இன்பம் பயக்குமாறுபோல இம்முனிவரவு இன்பம் பயந்ததென்பார் நராதிபர் நடந்துசெல்லு நீரதநெறியில் வாவிநிறைந்த நீரென்ன நின்றான் என்றுங்கூறினார். (ரு)

வணங்கலும்வாழ்த்திமுந்தவந்துநீர்வாழ்வுசெய்தீ
ரிணங்கிநுங்கேண்மைகொள்வானிச்சையால்யாகசேன
னணங்கினையன்றுவேள்வியழலிடையளித்தானந்தச்
சுணங்கணிமுலையாணாளைச்சூட்டுவடொடையன்மாதோ.

(இ - ள்.) வணங்கலும் - (அப்பொழுது பாண்டவர்கள்) வணங்குதலும்—வாழ்த்தி - வியாதமுனிவன் ஆசிகூறி—நீர் முந்த வந்து வாழ்வு செய்தீர் - நீர் முன்னேவந்து வாழ்வைப் பெற்றீர்கள்—யாகசேனன் இச்சையால் இணங்கி நும் கேண்மை கொள்வான் - யாகசேனன் விருப்பத்தினாற் கலந்து உங்கள் நட்பைக் கொள்ளும்படி—அன்று வேள்வி அழலிடை அணங்கினை அளித்தான் - அக்காலத்தில் யாகாக்கினியில் திரௌபதியென்னும்) பெண்ணைத் தோற்றுவித்தான்—அந்தச் சுணங்கு அணி முலையாள் - அந்தத் தேமல்பொருந்திய முலையினையுடையாள்—நாளைத் தொடையல் சூட்டுவள் - நாளைக்கு மணமாலையைச் சூட்டுவாள். எ - று.

மாது, ஓ அசைகள். கொள்வான் வினையெச்சம். நீர் முந்தவராதொழியிற் றிரௌபதியை மணஞ்செய்தல் தவறும்; தவறவே அவளாலடையும்பேறெல்லாம் ஒருங்கிழப்பீரென்பான் முந்தவந்து நீர்வாழ்வு செய்தீர் என்றான். வாழ்வுசெய்தீர் என்பதற்கு யாகசேனனுக்கு வாழ்வைக்கொடுத்தீரெனப் பொருள் கோடலும், பூமிதேவிக்குப் பாரந்தீர்தலாகிய வாழ்வைச்செய்தீரெனப் பொருள் கோடலும் பொருந்தும். (சு)

இப்பகலிரவும்வைகாதேகியாங்கெய்துமங்க
ணப்பகன்மன்றல்பெற்றாற்றோற்றுதலாண்மையென்று
செப்பியேமுனிவன்போகச்சிறுவரும்பெரியகங்குன்
மைப்புறப்பார்த்தன்செங்கைமணிவிளக்காரப்போனார்.

(இ - ள்.) இப்பகல் இரவும் வைகாது ஏகி ஆங்கு எய்தும் - இன்றைக்கு இரவும் தங்காதுபோய் அவ்விடத்தை அடையுங்கள்—அப்பகல் மன்றல் பெற்றால் அங்கண் தோற்றுதல் ஆண்மை என்று - அத்தினத்தில் விவாகத்தைப் பெற்றால் அப்பாஞ்சால நகரத்தில் (உங்கள் சுயவடிவத்தோடு) தோன்றுதல் ஆண்டன்மை என்று—முனிவன் செப்பிப் போக - வியாசமுனிவன் சொல்லிப்போக—சிறுவரும் - பாண்டவரும்—பெரிய கங்குல் - இருள்மிக்க இராக்காலத்தில்—மைப் புறப்பார்த்தன் செங்கை மணிவிளக்கு ஆரப்போனார் - கரிய சரீரத்தையுடைய அருச்சுனனது சிவந்தகையில் அழகிய விளக்குப்பொருந்தப் போனார்கள். எ - று.

ஏ - அசை. இரவும் என்னும் உம்மை எச்சத்தோடு சிறப்பு. சிறுவரும் என்னும் உம்மை எச்சம். இரவில் அருச்சுனனே விளக்குப்பிடித்து வழிகாட்டிச் சென்றானென்க. நீவிர் சுயவடிவோடு செல்லில் அரசரனைவரும் இவள் அருச்சுனற் கேயுரியளென யாகசேனன்கொண்ட கருத்தையும் நும்வலிமையையும் அறிந்து தாமாக அஞ்சி நீங்கி விடுவர்; விடவே நுமதாண்டன்மை பிறர்க்குப் புலப்படாதாதலின் அந்தணராய்ச்சென்று வில்வளைத்திலக்கு வீழ்த்து அரசகன்னி பார்ப்பாருக்குரியளாவளோவென்று நும்மோடு முரண்டு போர்புரியும் அரசரை வென்றபின் அவளை விவாகஞ்செய்து வெளிப்படில் நுமதாண்டன்மை பிறர்க்குப் புலப்படுமென்பான் மன்றல்பெற்றாற்றோற்றுதலாண்மை என்றான். மைப்புறப்பார்த்தன் செங்கை மணிவிளக்காகப்போனார் எனப்பாடமோதிப் பார்த்தனது கையிலுள்ள மோதிரத்திற் பதித்த மாணிக்கமணியே விளக்காகச் சென்றாரெனப் பொருள் கூறுவாருமுளர்; அது முதனூலோடு முரணுதலாற் பொருந்தாதென்க. (எ)

புத்திரன்பேரர்கங்கைப்பூந்துறையடைந்தபோதிற்
குத்திரவிஞ்சைவேந்தன்குறுகிவெங்கொடும்போர்செய்யச்
சித்திரத்தேரோன்றன்னைத்தேவர்கோன்மதலைசெந்தீ
யத்திரத்திருந்தைத்தேரோனுக்கினனிமைப்பினம்மா.

(இ - ள்.) புத்திரன் பேரர் - புதல்வனாகிய வீடுமனுடைய பேரர்கள்—கங்கைப் பூந்துறை அடைந்தபோதில் - கங்கையினது பொலிவாகிய கரையை அடைந்தசமயத்தில்—குத்திர விஞ்சைவேந்தன் குறுகி வெம் கொடும் போர் செய்ய - வஞ்சகத்தையுடைய விஞ்சையராசனாகிய (சித்திராங்கதன்) சமீபித்து மிகக்கொடிய போரைச்செய்ய—சித்திரத் தேரோன் தன்னை - அழகுபொருந்

தியதேரையுடைய அவனை—தேவர்கோன் மதலை - இந்திர குமாரனாகிய அருச்சுனன்—செம் தீ அத்திரத்து - (தன்கையிலுள்ள தீபமாகிய) சிவந்த அக்கினியம்பினால்—இமைப்பின் இருந்தைத் தேரோன் ஆக்கினினன் - ஒரு மாத்திரைப் பொழுதிற் கரித்தேரையுடையவனாக்கினான். [தேரை எரித்தான் என்றபடி.] எ - று.

அம்மா-அசை. வியப்பின்கட்குறிப்பெனினுமமையும். வெங்கொடும் என்பது ஒருபொருட்பன்மொழி. தன்னோடு பகைசிறிதுமின்றி வழிபோவாரைப் போர் புரிந்தடர்க்கக்கருதின வஞ்சகமுடையனென்பார் குத்திர விஞ்சை வேந்தன் என்றார். அருச்சுனன் றன்கையிலிருந்த தீபத்தை அக்கினியம்பாகப் பாவித்துச் செலுத்தி அவன்றேரை எரித்தானென்க. அருச்சுனன் றன்கையிலிருந்த நெருப்புக்கொள்ளியை அக்கினியம்பாகப்பாவித்துச் செலுத்தினனென்பாருமுளர். குத்திர விஞ்சைவேந்தன் என்பதற்கு வெள்ளிமலையில் வசிக்கும் விஞ்சையராசன் எனப் பொருள்கோடலும் ஒன்று. இப்பொருட்குக் குத்திரம் - மலை. (அ)

தோற்றவன்றிரிந்துமீண்டுதோழனவ்விசயற்காக
வாற்றரும்புனலும்யாறுமவன்றுணையாகநீந்திச்
சாற்றுமுற்கசதீரத்துத்தௌமியமுனியைக்கண்டு
போற்றிமற்றவன்றனோடும்புன்னெறிப்புறம்விட்டாரே.

(இ - ள்.) தோற்றவன் - தோற்ற சித்திராங்கதன்—திரிந்து - பகைநீங்கி—மீண்டு அவ் விசயற்குத் தோழன் ஆக - திரும்பிவந்து அவ்வருச்சுனனுக்குச் சிநேகனாக—ஆற்று அரும் புனலும் யாறும் அவன் துணை ஆக நீந்தி - நிலைத்தலில்லாத நீர்நிலைகளையும் யாறுகளையும் அந்தச் சித்திராங்கதனைத் துணையாகக் கொண்டு பாண்டவர் கடந்து—சாற்றும் உற்கச தீரத்து - எவராலும் வியந்து பேசப்படும் உற்கசதீர்த்தக்கரையிலே—தௌமியமுனியைக் கண்டு போற்றி - தௌமிய முனிவனைக்கண்டு துதித்து—அவன்றனோடும் புன் நெறிப்புறம் விட்டார் - அவனோடுஞ்சென்று சிறிய வழியினெல்லையைக் கடந்தார்கள். எ - று.

மற்று, ஏ அசைகள். ஆகவென்னுஞ் செயவெனெச்சங்கள் ஏதுப்பொருள. ஆற்று முதனிலைத்தொழிற்பெயர். எற்றிழிவுமுதலிய குற்றமுடையதும் அச்சத்தைத் தருவதுமாகிய வழியென்பார் புன்னெறி என்றார். சித்திராங்கதனென்னும் விஞ்சையனது சொற்படியே தௌமியமுனியைக் கண்டாரென்க. (கூ)

புலர்ந்தனகங்குற்போதும்பொழிதருபனியுஞ்சேர
மலர்ந்தனமனமுங்கண்ணும்வயங்கினதிசையும்பாரு
மலர்ந்தனதடமுங்காவுமார்த்தனபுள்ளுமாவுங்
கலந்தனகுருகும்பேடுங்கலித்தனமுரசுஞ்சங்கும்.

(இ - ள்.) கங்குற்போதும் பொழிதரு பனியுஞ் சேரப் புலர்ந்தன - இராக்காலமும் சொரிகின்ற பனியும் ஒருங்கே நீங்கின—மனமும் கண்ணும் மலர்ந்தன - (அப்பொழுது பூமியிலுள்ளோருடைய) மனங்களுங் கண்களும் மலர்ச்சியைப்பொருந்தின—திசையும் பாரும் வயங்கின - திசைகளும் பூமியும் பிரகாசித்தன—தடமும் காவும் அலர்ந்தன - தடாகங்களும் சோலைகளும் (புஷ்பங்கள்) அலர்ந்தன—புள்ளும் மாவும் ஆர்த்தன - பக்ஷிகளும் விலங்குகளும் ஒலித்தன—குருகும் பேடும்

கலந்தன - சேவல்களும் பேடுகளும் நெருங்கின—முரசம் சங்கும் கலித்தன - முரசங்களும் சங்கங்களும் முழங்கின. எ-று.

மலர்ந்தனதடமுங்காவும் என இடத்தினிகழ்பொருளின்றொழில் இடத்தின் மேலேற்றிக் கூறப்பட்டது. புட்சேவல்களும் பெடைகளும் உதயத்திலிரைகவரச் செல்கின்றன ஒன்றையொன்று பிரியாதிருந்தன என்பார் கலந்தன குருகும்பேடும் என்றார். கலந்தனகுருகும்பேடும் என்பதற்கு இராமுழுதும் பிரிந்திருந்து உதயகாலத்திற் சக்கரவாகப்புள்ளும் பேடும் புணர்ந்தன எனப்பொருள்கோடலும் ஒன்று. இங்ஙனமன்றிப் பொதுப்படச் சேவல்களும் பெடைகளும் புணர்ந்தன எனப் பொருள்கோடல் பொருத்தமின்று. (௧0)

குன்றமுங்கொடியகானுங்கூரிருட்கங்குனீங்கி
நன்றுநன்றுதவவந்தீர்நடந்துநீரிளைத்தீர்போலு
மென்றுகொண்டுவகையோடுமின்மலர்க்கழுநீர்வாச
மன்றலந்தென்றல்வீசிவழிவிடாய்தணித்ததன்றே.

(இ - ள்.) இன் கழுநீர்மலர் வாச மன்றல் அம் தென்றல் - இனிய செங்கழு நீர்மலரின் வாசனையையளாவிய புதிய தென்றற்காற்றானது—நீர் கூர் இருட் கங்குல் குன்றமும் கொடிய கானும்நீங்கி-நீங்கள் மிக்கஇருளையுடையஇராக்காலத்தில் மலைகளையுங் கொடியகாடுகளையுங் கடந்து—உதவ வந்தீர் - (என் நண்பன் மகளை மணம்புரிந்து) உதவிசெய்யும்படி வந்தீர்—நன்று நன்று - இது நன்று நன்று—நடந்து இளைத்தீர்போலும் என்று கொண்டு - வழி நடந்து இளைப்படைந்தீர் போலும் என்று உணர்ந்து—உவகையோடு வீசி வழிவிடாய் தணித்தது-மகிழ்ச்சியோடு வீசி அவருடைய வழி நடந்த இளைப்பைத் தணியும்படி செய்தது. எ - று.

இது பெயர்பொருட்டற் குறிப்பேற்றமென்னுமலங்காரம். அம் சாரியை. அன்று, ஏ அசைகள். போலும் ஒப்பில்போலி. நன்று நன்று என்னும் அடுக்கு உவகைபற்றி வந்தது. நறுமணத்தாலும் சீதளத்தாலும் சிறந்தமையின் இன்மலர்க் கழுநீரென்றார். நன்று நன்று உதவ கூர் இருட்கங்குல் குன்றமும் கொடியகானும் நீங்கி வந்தீர் எனக் கொண்டுகூட்டி நீவிர்நும் புண்ணியம் நன்மை பயக்கக் கங்குலிற் குன்றமுதலியவற்றை இடையூறின்றிக் கடந்து வந்தீர் எனப் பொருள் கோடலு மொன்று. (௧௧)

வெறிபடுமுளரிமொக்குள்விரிபதனோக்கிச்சுற்றும்
பொறிவரிவண்டினீட்டம்புறத்திருந்திரங்கவண்டொன்
றிறகரால்வீசியுள்புக்கின்மதுநுகர்தல்கண்டு
நெறியினன்னிமித்தமாகநெஞ்சுறநினைந்துசென்றார்.

(இ - ள்.) சுற்றும் பொறி வரி வண்டின் ஈட்டம் - சூழ்கின்ற புள்ளிகளையுடைய இராகத்தைப்பாடும் வண்டின் கூட்டங்கள்—வெறிபடு முளரி மொக்குள் விரிபதன் நோக்கி - தேன்பொருந்தும் தாமரையரும்பு விரியுங்காலத்தைப் பார்த்து—புறத்து இருந்து இரங்க - புறத்தே இருந்து ஒலிக்க—வண்டு ஒன்று - வண்டொன்றானது—இறகரால் வீசி உள் புக்கு இன்மது நுகர்தல் கண்டு - தன் சிறகுகளால் (அவ்வண்டுகளை) வீசி உள்ளே புகுந்து இனியதேனை உண்ணுதலைப் (பாண்டவர்கள்) கண்டு—நல் நிமித்தம் ஆக நெஞ்சு உற நினைந்து நெறியில் சென்றார் - அதனை நற்சகுனமாக மனசிலழுந்த நினைத்து வழியிற் போயினார்கள். எ - று.

பதன், இறகர் என்பன போலி. "வண்டெம்பெண்டு மின்னொடு சிவணும்" ன்பதனால் வண்டினிட்டம் என இன்சாரியை பெற்றது. இவ்வாறே நாமுந் ரௌபதியின் போகத்தை அனுபவிப்பமென்று மனத்தில் நிச்சயித்தாரென்க. நெறியி னன்னிமித்தமாக என்பதற்கு வழியில் எதிர்ப்பட்ட நன்னிமித்தமாக னப் பொருள்கோடலும் ஒன்று. (௧௨)

வண்டுறைமருங்கினங்கோர்மாங்கனிவீழ்தல்கண்டே
தண்டுறைமீன்களெல்லாந்தத்தமக்கிரையென்றெய்த
விண்டுறைகிழியவோடிவென்றொருவாளைதன்வாய்க்
கொண்டுறைவலிமைநோக்கிக்குறிப்பினுவகைகூர்ந்தார்.

(இ - ள்.) தண் துறை மீன்கள் எல்லாம் - குளிர்ந்த நீர்த்துறைகளிலுள்ள மீன்களெல்லாம்—வண் துறை மருங்கின் ஓர் மாங்கனி வீழ்தல் கண்டு - அழகிய அந்நீர்க்கரைப் பக்கத்தில் ஒருமாம்பழம் விழுதலைக்கண்டு — தத்தமக்கு இரை என்று எய்த - (அதனைத்) தத்தமக்கு இரையென்றெண்ணி வர—ஒருவாளை-ஒரு வாளைமீன்—உறை விண்டு கிழிய ஓடி வென்று - நீர்பிரிந்து கிழிய ஓடிப்போய் (அவைகளை) வென்று—தன்வாய்க் கொண்டு உறை வலிமை நோக்கி - தன்வா யாற் கவர்ந்து (வருத்தமின்றி) இருக்கும் வலிமையைப் பாண்டவர்கள் பார்த்து— குறிப்பினால் உவகை கூர்ந்தார்-அந்தக் குறிப்பினாலே மகிழ்ச்சி மிக்கார்கள், எ-று.

ஆங்கு, ஏ அசைகள். வாளை வாய்க்கொண்டபின் அக்கனியையுண்டு கவலை யின்றி யிருக்குமாறுபோல இவரும் அவளைக் கைக்கொண்டபின்பு இன்ப நுகர்ந்து கவலையின்றி யிருப்பார் என்பார் கொண்டென்னாது கொண்டுறை யென்றும், பாஞ்சாலன் மகளைக்கருதி அநேக அரசர்வந்து திரண்டிருப்பினும் அவரெல்லாம் நம்மாற் றோல்வியடைய நாமேயவளைக் கைக்கொள்வமென்பதனை இக்குறிப்பினா லறிந்து மகிழ்ந்தார் என்பார் குறிப்பினு லுவகை கூர்ந்தார் என்றுங் கூறினார். ()

மாக்குரலளகவல்லிவதுவையினழகுகாணத்
தாக்குரலடிகொள்யானைத்தரணிபரெவரும்வந்தார்
வீக்குநன்மிளிர்பொற்பூணீர்விரைவுடன்வம்மினென்று
கூக்குரல்விளிப்பபோலுங்கோகிலக்குரலுங்கேட்டார்.

(இ - ள்.) மாக்குரல் அளக வல்லி வதுவையின் அழகு காண - கரிய அளகத்தையுடைய திரௌபதியினது விவாகத்தின் அழகைக்காண—தாக்கு உரல் அடி கொள் யானைத் தரணிபர் எவரும் வந்தார் - தாக்கப்படும் உரல்போன்ற அடியைக் கொண்ட யானைப்படையை யுடைய இராசரனைவரும் வந்தார்கள்—வீக்கு நன் மிளிர் பொன் பூணீர் - கட்டப்படும் நல்ல விளங்குகின்ற பொன்னாபரணத்தை யுடையீர்—விரைவுடன் வம்மின் என்று - (நீங்களும்) விரைவோடு வாருங்கள் என்று—கூக்குரல் விளிப்பபோலும்-கூவுகின்றசத்தத்தால் அழைப்பனபோலும்— கோகிலக் குரலும் கேட்டார்-குயிற்குரலையும் (பாண்டவர்கள்) கேட்டார்கள்.எ-று.

குரலும் என்னும் உம்மை எச்சம். தாக்குரல் சாதியடை. குரலளகம் இருபெய ரொட்டு. வல்லி ஆகுபெயர். இதுவும் மேலையலங்காரம். மா - கருமை. மாக்குர லளகம் என்பதற்கு நறுமணத்தால் வண்டுகள்விழுந்து ஒலியைச்செய்யும் அளகம் எனப் பொருள்கொள்ளினு மமையும். (௧௪)

நீடுதலில்லையின்றேநிருபதிகன்னிமன்றல்
கூடுதலிவர்க்குண்டாகுங்கொற்றவர்குறைபொருதே
யோடுதலுண்மையென்னுத்தோகைகளோகையோடு
மாடுதனோக்கிநோக்கியகமகிழ்ந்தேகினரே.

(இ - ள்.) நிருபதி கன்னி மன்றல் நீடுதல் இல்லை - பாஞ்சால ராசனுடைய புதல்வியின் விவாகம் நீட்டித்தலில்லை—இன்றே - இன்றைக்கே—இவர்க்குக் கூடுதல் உண்டாகும் - (அது) இவர்களுக்குக் கைகூடுத லுண்டாகும்—கொற்றவர் குறை பொருது ஓடுதல் உண்மை என்னு - (அதனல்) அரசர்கள் இக்குறையைப் பொருது ஓடுதல் சத்தியம் என்று—தோகைகள் ஓகையோடும் ஆடுதல் நோக்கி நோக்கி - மயில்கள் மகிழ்ச்சியோடு கூத்தாடுதலைப் பார்த்துப் பார்த்து—அகம் மகிழ்ந்து ஏகினர் - மனம்மகிழ்ந்து (பாண்டவர்கள்) போயினர்கள். எ - று.

ஏ இரண்டும் அசை. இன்றே என்னும் ஏகாரந் தேற்றம். நோக்கி நோக்கி என்னும் அடுக்கு ஒருதொழில் பலகானிகழ்தல்பற்றி வந்தது. இதுவும் மேலே யலங்காரம். (௬௫)

பூவெலாஞ்சுரும்புமொய்ப்பப்புனலெலாம்புள்ளுவைக
மாவெலாந்துணையின்மேவமரனெலாம்வல்லிபுல்ல
வேவெலாம்பயின்றவிற்கையேற்றிளஞ்சிங்கம்போல்வார்
காவெலாமருங்குதோறுங்கண்டுகண்களித்துநின்றார்.

(இ -ள் .) கா எலா மருங்குதோறும் - சோலையின் எப்பக்கங்கடோறும்—பூ எலாம் சுரும்பு மொய்ப்ப - பூக்களிலெல்லாம் வண்டுகள்மொய்க்க—புனல் எலாம் புள்ளு வைக-நீரிலெல்லாம் பக்ஷிகள் இருக்க—மா எலாம் துணையின் மேவ - விலங்குக ளெல்லாம் தத்தமக்குரிய துணைகளோடு பொருந்த—மரன் எலாம் வல்லி புல்ல - மரங்களெல்லாங் கொடிகளைத் தழுவ—ஏ எலாம் பயின்ற வில் கை ஏற்று இளம் சிங்கம் போல்வார் - ஏத்தொழில்களை யெல்லாம் பழகிய வில்லையேந்திய கையையுடைய இளைய ஆண் சிங்கத்தை யொத்த பாண்டவர்கள்—கண்டு கண் களித்து நின்றார்-அவற்றைப்பார்த்துக் கண்கள் களிப்படைந்துநின்றார்கள்.எ-று.

மரன் போலி. ஏ ஆகுபெயர். பயின்ற என்னும் பெயரெச்சம் போல்வார் என்னும் வினையாலணையும் பெயரின் விகுதியோடு முடிந்தது. பயின்றகை எனினும் அமையும். அமோகவாசானென்று எவரும்மதித்த துரோணசாரிய னிடத்திற் றனுர்வேதத்தை முற்றக்கற்ற சாதுரியர் என்பார் ஏவெலாம் பயின்றவிற்கையேற்றிளஞ்சிங்கம் போல்வார் என்றார். (௬௬)

வாரணமாயைசூழ்ந்தமாயவன்றோற்றம்போலப்
பேரொளிபம்பியார்க்கும்பேசருஞ்சிறப்பிற்றாகிப்
பூரணகும்பம்பொற்கோபுரங்களாற்பொலிந்துதோன்று
மாரவமிகுந்தபல்புள்ளகழிசூழ்புரிசைகண்டார்.

(இ - ள்.) மாயை வாரணம் சூழ்ந்த மாயவன் தோற்றம் போல - மாயையாகிய சட்டையை யணிந்த விட்டுணுவினது தோற்றத்தைப்போல—பேர் ஒளி பம்பி - பெரிய ஒளிமிக்கு—யார்க்கும் பேச அரும் சிறப்பிற்று ஆகி - எவர்க்கும்

சொல்லுதற்கரியசிறப்பினையுடைத்தாய்—பூரண கும்பம் பொன் கோபுரங்களால் பொலிந்து தோன்றும் - பூரண கும்பங்களினாலும் அழகிய கோபுரங்களினாலும் பொலிவடைந்து தோன்றுகின்ற—பல் புள் ஆரவம் மிகுந்த அகழிசூழ் புரிசை கண்டார் - பலபட்சிகளினுடைய ஒலிமிகுந்த அகழ்க்கிடங்குசூழ்ந்த மதிலைக்கண்டார்கள். எ-று.

பேச என்னும் எச்சம் ஈறுதொக்கது. பேசு என முதனிலைத் தொழிற்பெயராக்கினுமமையும். போலச் சிறப்பினை யுடைத்தாய் என இயைக்க. அரவம் ஆரவமென முதனீண்டது. மாயவன் என்பது ஈண்டு வாளாபெயராய் நின்றது. பலபுள்ளின் அரவமிகல் அகழிற் கலங்காரமாதலின் ஆரவமிகுந்தபல்புள்ளகழி என்றார். "உன்னுநாரைமகன்றில் புதாவுளி - லன்னங்கோழி வண்டானங்களாழிப் புள் - கின்னரங்குரண்டங்கிலுக் கஞ்சிரல் - சென்னங்காகங் குணலஞ்சிலம்புமே." என்றார்பிறரும். மாயஞ்செய்தலிற் சிறந்த விட்டுணுவை வாரணமாயை சூழ்ந்தமாயவன் என்றார்; "ஞானகஞ்சுக விதுரன்" என்றதுபோல. வாரணம் - சட்டை. ()

மங்கலமுழவம்விம்மமன்னுபல்லியங்களார்ப்பச்
சங்கினமுழங்கவெல்லாத்தானையும்பரந்துசூழ
வெங்கணுநெருங்கிவைகுமிராசமண்டலங்களோடுந்
துங்கவேற்றுருபதன்றன்றொல்லைமாநகரிபுக்கார்.

(இ - ள்.) மங்கல முழவம் விம்ம - மணமுரசம் ஒலிக்க—மன்னு பல்லியங்கள் ஆர்ப்ப - நிலையாகிய வாத்தியங்கள் இயம்ப—சங்கு இனம் முழங்க - சங்குக் கூட்டங்கள் முழங்க—எல்லாத் தானையும் பரந்து சூழ - நால்வகைச்சேனையும் பரம்பிச் சூழ – எங்கணும் நெருங்கி வைகும் இராச மண்டலங்களோடும் - எவ்விடத்திலும் நெருங்கி யிருக்கின்ற அரச கூட்டத்தோடும்—துங்க வேல் துருபதன் தன் தொல்லை மா நகரி புக்கார் - உயர்ச்சி பொருந்திய வேலையுடைய யாகசேனனது பழைய பெரிய நகரை அடைந்தார்கள். எ - று.

தானையும் என்னும் உம்மை முற்று. விம்ம, ஆர்ப்ப, முழங்க, சூழ, வைகும் ராசமண்டலங்கள் என்க. ஈண்டு நிகழும்மணத்திற்கு அரசர் சிறந்தமையின் ராசமண்டலங்களோடும் என உயர்பின்வழித்தாகிய ஒரு வினையொடுச்சொற் கொடுத்தும், பகைவரைவதைத்து வீராபிடேகஞ் செய்யப்பெற்ற வேலென்பார் துங்கவேல் என்றுங் கூறினார். "நீரேந்தி நெய்மிதந்து நிணம்வாய்ப்பில்கும்" என்னுஞ் சிந்தாமணிச் செய்யுளால் இக்கருத்தை யுணர்க. பல்லியமெனப் பொதுப்படக் கூறினாரேனும் மணத்திற்குரிய பல்லியங்களே ஈண்டுக்கொள்க. (கஅ)

தொடங்கியுந்தொடக்கந்தொட்டுத்துகளறவளர்ந்துமீள
மடங்கியுஞ்செல்லுகின்றமன்னுயிருலகமெல்லா
முடங்கியசார்ங்கச்செங்கைமுகுந்தன்வாய்ப்புகுந்தகாலத்
தடங்கியவுதரம்போன்றதந்தமாநகரியம்மா.

(இ - ள்) அந்த மா நகரி - அந்தப் பெரிய பாஞ்சாலநகரம்—தொடங்கியும் - சிருட்டிக்கப்பட்டும்—தொடக்கம் தொட்டுத் துகள் அற வளர்ந்தும் - சிருட்டிக்கப்பட்ட நாண்முதற் குற்றமறத் திதிக்கப்பட்டும்—மீள மடங்கியும் - திரும்பச் சங்கரிக்கப்பட்டும்—செல்லுகின்ற மன் உயிர் உலகம் எல்லாம் - நடைபெறுகின்ற நிலைபெற்ற உயிர்கள்செறிந்த உலகங்கள் எல்லாம்—முடங்கிய சார்ங்கச் செங்கை

முகுந்தன்வாய்ப் புகுந்த காலத்து - வளைந்த சார்ங்கமென்னும் வில்லை யேந்திய சிவந்த கையையுடைய விட்டுணுவினது வாயிற்புகுந்த பொழுது—அடங்கிய உதரம் போன்றது - அடங்கப்பெற்ற (அவருடைய) வயிற்றைப்போன்றது. எ - று.

அம்மா - அசை. தொடங்கியும், வளர்ந்தும், மடங்கியும் என்பன படுவிகுதி தொக்குநின்றன. உயிர்ப் பொருள்களையும் உயிரல் பொருள்களையும் அடக்கிய விட்டுணுவினுதரம்போல இந்நகரியும் எவரையும் எவற்றையும் அடக்கிற்றென்க. துகளறவென்பதைத் தொடங்குதற்கும் மடங்குதற்குங் கூட்டுக. உயிர்கள் தங்கள் கன்மங்களைப் புசித்துத் தொலைத்துச் சுத்தமுடையனவாதற்கே படைத்தல் காத்தல் அழித்தல் என்னு முத்தொழிலுஞ் செய்யப்படுவனவென்பார் அவற்றிற்கு துகளறவென்றடைகொடுத்துக் கூறினர். (௧௯)

குழைப்புறங்கடந்தசெங்கட்குறுநகைக்கொவ்வைச்செவ்வா
யிழைப்பொலிமுலையினுளுக்கிற்றைநாள்வதுவையென்று
மழைப்புறமாடமேறிவருநரைமலர்க்கைகாட்டி
யழைப்பனபோன்றவீதியணிகொடியாடையெல்லாம்.

(இ-ள்.) வீதி அணி கொடி ஆடை எல்லாம் - அந்நகரத்து வீதிகளில் அலங்கரிக்கப்பட்ட கொடிப்புடைவைகளெல்லாம்—குழைப் புறம் கடந்த செம் கண் - காதின்புறத்தைக் கடந்த கடைசிவந்த கண்களையும்—குறு நகை - சிறிய பற்களையும்—கொவ்வைச் செவ்வாய் - கொவ்வைக் கனிபோன்ற சிவந்த வாயையும்—இழைப் பொலி முலையினுளுக்கு - ஆபரணம் பொலிதற்கேதுவாகிய தனங்களையுமுடைய திரௌபதிக்கு—இற்றைநாள் வதுவை என்று - இன்றைக்கு விவாகம் என்று—மழைப்புற மாடம் ஏறி - முகிலைப் புறத்திலுடைய மேல் மாடத்திலேறி—வருநரை மலர்க்கை காட்டி அழைப்பன போன்ற - விவாகத்தின்பொருட்டு வருபவர்களைத் தாமரை மலர்போன்ற கைகளைக் காட்டி (விரைந்து வருக என்று) அழைப்பனவற்றைப் போன்றன. எ-று.

இது போலும் என்னும் உவமைச்சொல்லோடு வந்த அல்பொருட்டற் குறிப்பேற்றமென்னும் அலங்காரம். கொவ்வை ஆகுபெயர். அழைப்பன வினையாலணையும் பெயர். இழைப்பொலி என்பதில் பகரம் சந்தவின்பநோக்கி மிக்கது. பொலி என்னும் வினைத்தொகை முலை என்னுங் கருவிப்பெயர் கொண்டது. இழையாற் பொலிந்த முலை எனப் பொருள்கோடல் சிறப்பின்று. (௨0)

விண்டலம்புதைத்தபைம்பொற்றுகிலிடுவிதானநீழன்
மண்டகிற்புகையின்மூழ்கியாவணமறுகிற்செல்வங்
கண்டுகொண்டரியேறானின்கவினுடைநெடுந்தோல்போர்த்துக்
கொண்டனசெயலாராங்கோர்குலாலனதிருக்கைசேர்ந்தார்.

(இ-ள்.) அரியேறு ஆனின் கவின் உடை நெடும் தோல் போர்த்துக் கொண்டன செயலார் - ஆண்சிங்கம் பசுவினது அழகையுடைய நெடிய் தோலைப் போர்த்துக்கொண்டாற்போன்ற செய்கையை யுடையராகிய பாண்டவர்கள்—விண் தலம் புதைத்த பைம்பொன் துகில் இடு விதான நீழல் - ஆகாயத்தை மூடிய பசும்பொற் புடைவையினால் இடப்பட்ட மேற்கட்டியின் நிழலின் கீழ் (நடந்து)—மண்டு அகிற் புகையின் மூழ்கி - நெருங்கிய அகிற் புகையில்

மூழுகி—ஆவண மறுகிற் செல்வம் கண்டு கண்டு - கடைவீதியிலுள்ள செல்வங்களைப் பார்த்துப்பார்த்து—ஆங்கு ஓர் குலாலனது இருக்கை சேர்ந்தார் - அவ்விடத்தில் ஒரு குயவனுடைய வீட்டை அடைந்தார்கள். எ - று.

கண்டுகண்டு என்னும் அடுக்கு ஒருதொழில் பலகானிகழ்தல் பற்றி வந்தது. வீரமுடைய அரசர் சாந்தமுடைய பிராமணர் வடிவங்கொண்டமையின் இவ்வுவமை கூறினர். அந்தணர்முதலியதுவிசர், குயவர் இடையர் என்னும் இவரில்விற்றங்கலாம் என்னும் நூல்வழக்குப்பற்றி இவருங் குலாலனிருக்கையையடைந்தாரென்க. விதானநீழன் மண்டகிற்புகையெனினுமமையும். (உக)

ஆங்கணற்றவத்தான்மிக்கவன்னையையிருத்திமைந்தர்
தாங்கண்முற்றுணையாய்வந்ததாபதர்தம்மோடெய்தித்
தூங்கணங்குரீஇயின்மஞ்சத்தலந்தொறுந்தூங்குகின்ற
தேங்கண்மாத்தெரியல்வேந்தர்சேர்ந்தபேரவையிலானூர்.

(இ - ள்). மைந்தர் - புதல்வர்களாகிய பாண்டவர்கள்—ஆங்கண் நல் தவத்தால் மிக்க அன்னையை இருத்தி - அந்தக் குலாலனுடைய வீட்டில் நல்ல தவத்தான்மேம்பட்ட தாயாகிய குந்திதேவியை யிருத்தி—முன் துணையாய் வந்த தாபதர் தம்மோடு தாங்கள் எய்தி - முன்னே தமக்குத்துணையாய்வந்த தவத்தையுடைய பிராமணர்களோடு தாங்கள் கூடி—தூங்கணம் குரீஇயின்-தூக்கணங்குருவிபோல—மஞ்சத் தலம் தொறும் தூங்குகின்ற - தூங்குமஞ்சங்கடோறும் இருந்தசைகின்ற—தேம் கள் மாத் தெரியல் வேந்தர் சேர்ந்த பேர் அவையில் ஆனூர் - மணங்கமழ்கின்ற தேன்பொருந்திய வண்டுகள் விழும் மாலையையணிந்த அரசர்கள் நெருங்கின பெரியசபையிற் சென்றார்கள். எ - று.

தூக்கணங்குரீஇ என்பது எதுகைநோக்கித் தூங்கணங்குரீஇயென்றாயிற்று. இன்னுருபு உவமப்பொருட்டு. இருத்தி, எய்தி ஆனூர் என்றியையும். குரீஇ என்பது குற்றெழுத்து நெட்டெழுத்தாய் அளபெடுத்துநின்றது. இந்திரர்களாகிய பாண்டவரைவுரையும் இம்மைமறுமைப் பயனிரண்டையும் ஒருங்கு தரவல்ல புதல்வராகவும் பூபாரந்தீர்க்க விட்டுணுவினவதாரமாகவந்த கிருட்டிணரைத் தனச்குமருகராகவும் முற்செய்நற்றவத்தாற் பெற்றுக்கொண்டவளென்பார் நற்றவத்தான் மிக்க அன்னை என்றும், அப்பாண்டவர் தம்மோடுகொண்ட நட்பினுல் வேத்திரகியநகரினின்றும் உயிர்த்துணையாய்வந்த பிராமணரென்பார் முற்றுணையாய் வந்த தாபதர் என்றுங் கூறினர். (உஉ)

ஆதியிற்குந்திமைந்தரைவர்க்குமுரியளாமென்
றோதியவிதியினுனெஞ்சுலப்புறுவுவகைகூர்வாள்
சோதிடம்பொய்யாதென்றுந்தோன்றுவருரியோரென்றுந்
தாதியர்தேற்றத்தேற்றத்தன்மனத்தளர்வுதீர்வாள்.

(இ - ள்.) ஆதியில் - முற்பிறப்பில்—குந்தி மைந்தர் ஐவர்க்கும் உரியளாம் என்று ஓதிய விதியினுல் - குந்திதேவியினுடைய புத்திரரைவர்க்கும் உரியளாவாள் என்று (சிவபெருமான்) நியமித்த நியதியினுல்—நெஞ்சு உலப்பு உறு உவகை கூர்வாள் - மனம் நீக்கமில்லாத மகிழ்ச்சிமிகுபவளும்—சோதிடம் பொய்யாது என்றும் - (பாண்டவர் அரக்குமாளிகையில் இறந்திலர் என்று கூறிய) சோதிடம்

பிழைபடாதென்றும்—உரியோர் தோன்றுவர் என்றும் - உரியநாயகராகிய அவர் தோன்றுவார் என்றும்—தாதியர் தேற்றத் தேற்ற - கைத்தாயர் தெளிவிக்கத் தெளிவிக்க—தன் மனத் தளர்வு தீர்வாள் - தன்னுடைய மனம் தளர்ச்சிநீங்குபவளும், எ - று.

ஈண்டு, முற்செய்யுளிற்போல மைந்தரென்ருெழியாது குந்தி மைந்தரைவரும் என்று தொகைகொடுத்துக் கூறியது ஐந்திந்திரர்களையும் குறிப்பால் விளக்குதற்கென்க. ஐவர் தொகைக்குறிப்பு. உம்மை முற்று. ஆகும் என்னுஞ் செய்யுமென் முற்றினீற்றுயிர்மெய் கெட்டது. தேற்றத்தேற்ற என்னும் அடுக்கு மிகுதிபற்றி வந்தது. ஐவர்க்குமுரியளாவாள் என்று முற்பிறப்பிற் சிவபெருமான் விதித்த விதியின் வசத்தால் மகிழ்ச்சி கூர்வாளாயினும் பாண்டவர் அரக்குமாளிகையில் இறந்தாரென்பதனைக் கேள்வியுற்றுக் கவலையுறுபவள் சோதிடம் பொய்யாதென்று தாதியர்தேற்றத் தன்மனத் தளர்வுதீர்வாளென்க. (உ௩)

சூட்டியதொடையன்மாலைத்தோழியர்வைகறோறுந்
தீட்டியபடங்களுந்தஞ்சிந்தையும்பொலிவுகொள்ளக்
கோட்டியசிலையினோடுங்கொடிமணித்தேரினோடுங்
காட்டியகோலமன்றிப்பிறிதொன்றுங்காண்கிலாதாள்.

(இ - ள்.) சூட்டிய தொடையல் மாலைத் தோழியர் - சூட்டப்பட்ட பூமாலையையும் மணிமாலையையுமுடைய தோழியர்கள்—வைகல் தோறும்-நாடோறும்—தீட்டிய படங்களும் தம் சிந்தையும் பொலிவு கொள்ள - எழுதிய படங்களும் தம்முடைய மனமும் பொலிவடைய—கோட்டிய சிலையினோடும் கொடிமணித் தேரினோடும் - வளைத்தவில்லோடும் கொடிகட்டிய அழகிய தேரோடும்—காட்டிய கோலம் அன்றி - காண்பித்த (அருச்சுனனுடைய) வடிவத்தையேயன்றி—பிறிது ஒன்றும் காண்கிலாதாள் - வேறொன்றையும் பாராதவளும், எ - று.

ஒன்றும் என்னும் உம்மை முற்றோடு சிறப்பு. பொலிவுகொள்ளக் காட்டிய கோலம் என்றியையும். தொடையன் மாலை உம்மைத்தொகை. பண்புத்தொகையாக்கி மாலைவிசேடமெனக் கொள்ளினும் பொருந்தும். அருச்சுனனதுவடிவை, கோட்டியசிலையினோடுங் கொடிமணித்தேரினோடுந் தீட்டினமையினால் படங்களும் கண்டசிந்தையும் பொலிவுகூர்ந்தன என்க. (உ௪)

ஆண்டெரிப்பிறந்தபோதேயன்பினலெந்தைநேர்ந்த
பூண்டெரிமார்பனின்றிப்பொன்னவைபொலியத்தோன்றி
யீண்டெரிமுன்னர்மன்னரிழிவுறவேட்டிலானேன்
மீண்டெரிபுகுவனென்னுமெண்ணமேவிளையுநீராள்.

(இ - ள்.) ஆண்டு எரிப் பிறந்தபோதே - அக்காலத்தில் (யான்) அக்கினியிற் பிறந்தபொழுதே—அன்பினால் எந்தை நேர்ந்த பூண் தெரி மார்பன் - அன்போடு என்பிதா நியமித்த ஆபரணம் விளங்குதற்குக் காரணமாகிய மார்பையுடைய அருச்சுனன்—இன்று இப் பொன் அவை பொலியத் தோன்றி - இன்றைக்கு இந்த அழகிய சபை பொலிவடையத்தோன்றி—ஈண்டு எரி முன்னர் - சுவாலிக்கின்ற அக்கினியின் எதிரே—மன்னர் இழிவு உற வேட்டிலானேல் - அரசர்கள் இழிவடைய என்னை விவாகஞ்செய்யாதொழிவனானால்—மீண்டு எரி புகுவன் என்னும் எண்ணமே விளையும் நீராள் - திரும்ப அக்கினியிலே பிரவேசிப்பேன் என்னும் எண்ணமே உண்டாகுந்தன்மையையுடையவளும் (ஆகிய) எ - று.

ஏகாரமிரண்டுந் தேற்றம். தெரி என்னும் வினைத்தொகை மார்பன் என்னுங் கருவிப்பெயர்கொண்டது. யாகசேனனாகிய தன்பிதா அச்சமுதலியவற்றாலன்றி அருச்சுனனுடைய வெற்றியைக்குறித்து அவன்மீது கொண்ட பற்றினாலே தன்னை மணஞ்செய்துகொடுக்க உடன்பட்டானென்பாள் அன்பினால் என்றும், அரசர்கள் தாம் அவாவிய பெண்ணை ஒருவன் தமக்குமுன்னரே விவாகஞ்செய்யின் அது பெருமிழிவரவை அவர்க்குப்பயக்குமென்பாள் மன்னரிழிவுற வேட்டிலானேல் என்றுங் கூறினாள். (உரு)

கோண்பிறைநுதலாடன்னைக்கோதையர்பலருங்கூடிச்
சேண்புனல்பலகொண்டாட்டிச்செழுந்துகிறொழுதுசேர்த்திப்
பூண்பனவிசையப்பூட்டிப்புகைகமழ்தாமஞ்சூட்டிக்
காண்பவராண்மைதேயக்காமவேள்கலகஞ்செய்தார்.

(இ - ள்) கோண் பிறை நுதலாள் தன்னை - வளைவாகிய பிறைபோலும் நெற்றியையுடைய அந்தத் திரௌபதியை—கோதையர் பலரும் கூடி - தாதியர் பலருஞ் சேர்ந்து—பல கொண்டு சேண் புனல் ஆட்டி - பலவற்றையுந் தேய்த்துக் கங்காதீர்த்தத்தினாலே ஸ்நானஞ்செய்வித்து—செழும் துகில் தொழுது சேர்த்தி- செப்பமாகிய வஸ்திரத்தைத் (தாம் ஏவன்மகளிராதலினால்) வணங்கி அணிந்து— பூண்பன இசையப் பூட்டி - பூண்பனவற்றை இயைய அணிந்து—புகை கமழ் தாமம் சூட்டி - அகிற்புகை ஊட்டிய மாலையைச் சூட்டி—காண்பவர் ஆண்மை தேயக் காமவேள் கலகம் செய்தார் - காணுமரசருடைய ஆண்டன்மைகுறைய மதனகலகஞ்செய்தார்கள். எ - று.

கூர்வாள், தீர்வாள், காண்கிலாதாள், நீராள் ஆகிய கோண்பிறைநுதலாளென்றியையும். கூர்வாள் முதலியவற்றை முற்றாக்கி இவ்வியல்பினையுடைய கோண்பிறைநுதலாள் எனப்பொருள்கொள்ளினும் அமையும். முப்பத்திரண்டுவகை ஓமாலிகைகளையும் பத்துத்துவரையுந் தேய்த்துக் கங்கை நீரினால் முழுக்காட்டினாரென்பார் பலகொண்டுசேண்புனலாட்டி என்றார். இங்ஙனங்கூறாது கங்கைமுதலிய பல தீர்த்தங்களினாலே ஆட்டினாரெனப் பொருள்கூறல் இத்துணைச் சிறப்பின்று. இவளை ஆட்டி, சேர்த்தி, பூட்டி, சூட்டவே மதனகலகமிகுதலிற்காணுமரசர்க்குக் காமநோய் மிக்கு ஆண்டன்மை தேய்ந்ததென்க. (உசா)

வந்தனர்குமரர்யாரும்வருகெனமகிழ்ந்துபோற்றிச்
சந்தணிமுலையினாளைத்தாயினும்பரிவுகூர்ந்தோர்
கந்தனுமுவமையாற்றாக்காவலர்காமத்தீயி
னிந்தனமிடுவதேய்ப்பவேத்தவையேற்றினாரே.

(இ - ள்.) தாயினும் பரிவுகூர்ந்தோர் - நற்றாயினும் அன்புமிக்க கைத்தாயர்—சந்து அணி முலையினாளை - சந்தனக்குழம்பை அணிந்த தனங்களையுடைய திரௌபதியை—குமரர் யாரும் வந்தனர் வருக என மகிழ்ந்து போற்றி - இராசகுமாரரனைவரும் வந்தார்கள் (தலைவியே) சபைக்கு வருக என்று மகிழ்ந்து துதித்து- கந்தனும் உவமை ஆற்றாக் காவலர் காமத்தீயில் இந்தனம் இடுவது ஏய்ப்ப - முருகக்கடவுளும் நிகராகாத அரசர்களுடைய காமாக்கினியில் விறகிடுதலைப்போல— வேத்தவை ஏற்றினார் - அரசசபையில் அவளை அழைத்துவந்தார்கள். எ - று.

ஏ - அசை. உம்மைகளிரண்டுஞ் சிறப்பு. வருக என்னும் வியங்கோளீறு தொக்கது. சந்து ஆகுபெயர். வேந்தென்னும் மென்றொடர்க்குற்றியலுகரம் வன்றொடராயது. வீரத்தினாலும் அழகினாலும் இளமையினாலும் முருகக்கடவுளும் நிகராகாத அரசரென்பார் கந்தனுமுவமையாற்றாக்காவலர் என்றும், இவளை வேத்தவையேற்றியபொழுது அரசர்க்குக் காமத்தீ மிகக்கனற்றிற்றென்பார் காவலர் காமத்தீயினிந்தனமிடுவதேய்ப்ப வேத்தவை யேற்றினர் என்றுங் கூறினர். (உஎ)

வெங்கழற்படைக்கைவேந்தர்விழிகளால்விளங்குமேனிப்
பொங்கழற்பிறந்தபாவைபொற்பினைப்பொலியநோக்கிப்
பைங்கழைத்தனுவோன்செங்கைப்பகழியாற்பாவமெய்தி
யங்கழற்பட்டநெய்போலனைவருமுருகினாரே.

(இ - ள்.) கழல் வெம் படைக்கை வேந்தர் அனைவரும் - வீரக்கழலையணிந்த கொடிய படைக்கலங்களை ஏந்திய கையையுடைய அரசரனைவரும்—பொங்கு அழல் பிறந்த பாவை விளங்கு மேனிப் பொற்பினை - சுவாலிக்கின்ற அக்கினியிற் பிறந்த கொல்லிப்பாவைபோன்ற திரௌபதியினுடைய பிரகாசிக்குஞ் சரீரத்தின் அழகை—பொலிய விழிகளால் நோக்கி - பொலிவடையும்படி கண்களாற் பார்த்து—அங்கு - அப்பொழுது—பைங் கழைத் தனுவோன் செங்கைப் பகழியால் பாவம் எய்தி - பசிய கருப்புவில்லையுடைய மன்மதனது சிவந்தகையிலுள்ள பாணத்தினால் உருவப்பெற்று—அழல் பட்ட நெய்போல் உருகினார் - அக்கினியிற் பட்ட நெய்போல மனம் உருகினார்கள். எ - று.

ஏ - அசை. பாவை ஆகுபெயர். பாவம் - படுதல் என்னும் பொருட்டு. (உஅ)

மங்குலின் மங்குன்மூடி வயங்கொளிமறைந்துதோன்றாச்
செங்கதிர்ச்செல்வன்போலச்சீர்கெழுவடிவமாறி
யங்கவரிருந்ததன்மையறிந்ததோசெறிந்தபொய்கைப்
பங்கயம்போன்றதாலப்பரிவுறுபாவைபார்வை.

(இ - ள்) மங்குலின் மங்குல் மூடி - முகிலின்மேல் முகில்மூடுதலால்—வயங்கு ஒளி மறைந்து தோன்றாச் செங் கதிர்ச் செல்வன் போல - பிரகாசிக்கின்ற ஒளிமறைந்து வெளிப்படாத சிவந்த கிரணங்களையுடைய சூரியன் போல—அங்கவர் சீர்கெழு வடிவம் மாறி இருந்த தன்மை - அப் பாண்டவர்கள் சிறப்புப்பொருந்திய உருவம்மாறி இருந்ததன்மையை—அப் பரிவு உறு பாவை பார்வை அறிந்ததோ - அந்த அன்புமிக்க திரௌபதியினுடைய கண் அறிந்ததோ—செறிந்த பொய்கைப் பங்கயம் போன்றது - நெருங்கிய தடாகத்திலுள்ள தாமரைமலரையொத்தது. எ - று.

ஆல் - அசை. ஓகாரம் வினா. பங்கயம் ஆகுபெயர். தோன்றாத என்னும் பெயரெச்சத்தீறுதொக்கது. மூடி என்னுஞ் செய்தெனெச்சம் ஏதுப்பொருட்டு. செங்கதிர்ச்செல்வன் என்பது "காலமுலகமுயிரே" என்னுஞ் சூத்திரத்தானஃறிணை முடிபாயினும் "இசைத்தலுமுரிய" என்னுஞ் சூத்திரத்தான் உயர்திணை முடிபாயிற்று. அவள்கண் இப்பாண்டவர் வடிவமாறியிருந்தமையை அறிந்தமையினாற் போலும் பொய்கையிற் செழித்தலராநின்ற தாமரைமலர்போற் செழிப்புற்றிருந்ததென்க. முதலிலுள்ள மங்குல் என்பதற்கு ஆகாயம் எனப்பொருள்கொள்ளினும் பார்வை என்பதற்கு நோக்கமெனப் பொருள்கொள்ளினும் பொருந்தும். (உகூ)

மணக்கடுங்காதல்விம்மமாலைதாழ்புயங்கள்வாட
வெனக்கெனக்கென்றென்றேமாந்திருந்தகாவலரைநோக்கிச்
சினக்கடமொழுகுங்கன்னக்களிற்றினன்றிட்டத்துய்ம
னினைக்கவுமரியதொன்றைநினைவினேடுரைசெய்வானே.

(இ - ள்.) சினக் கடம் ஒழுகும் கன்னக் களிற்றினன் திட்டத்துய்மன் - கோபம் பொருந்திய மதமொழுகும் கதுப்பையுடைய யானைப்படையை யுடைய திட்டத்துய்மன்—மனக் கடும் காதல் விம்ம - மனத்திற் பேராசைமிக—மாலை தாழ் புயங்கள் வாட - மாலைதூங்கும் புயங்கள்மெலிய—எனக்கு எனக்கு என்று என்று ஏமாந்து இருந்த காவலரை நோக்கி - தனித்தனியே எனக்கென்று எனக்கென்று மதித்துச் செருக்குற்றிருந்த அரசர்களைப் பார்த்து—நினைக்கவும் அரியது ஒன்றை நினைவினேடு உரைசெய்வான் - எண்ணவுமரியதொன்றைக் கருத்தோடு சொல்லுவான். எ - று.

ஏ - அசை. நினைக்கவும் என்னும் உம்மை சிறப்பு. அவையஞ்சாமனத்திட்ப முடையானென்பார் சினக்கடமொழுகுங் கன்னக்களிற்றினன் என்றும், இவளை ஒருவற்கே யெனச்குறிக்கில் அரசரெல்லாந் தம்மோடு வெகுண்டு போர் புரியத் தொடங்குவராதலின் அது நிகழாதபடிக்கும் நல்வினை யுடையார்க்கே வில்வளைத் திலக்குவீழ்த்தலியையு மாகலின் அவரே இவளை மணஞ்செய்யு முரிமை யுடையராவரெனக் கருதியும் எவராலும் நினைத்தற்கரிய உபாயத்தோ டோருரை கூறினனென்பார் நினைக்கவு மரியதொன்றை நினைவினே டுரைசெய்வான் என்றுங்கூறினர். (௬0)

சிலையிதுசிலீமுகங்களிவைகடுந்திரிகைவேகத்
திலைமுகத்துழலுகின்றவெந்திரத்திகிரிநாப்ப
ணிலையிலாவிலக்குமஃதேநெஞ்சுறயாவரெய்தார்
கலைவலீரவர்க்கேயந்தக்கன்னியுமுரியளென்றான்.

(இ - ள்.) கலை வலீர் - கலைஞானங்களில் வல்லவர்களே—சிலை இது - வில் இது—சிலீமுகங்கள் இவை - அம்புகள் இவை—கடும் திரிகை வேகத்து இலைமுகத்து உழலுகின்ற எந்திரத்திகிரி நாப்பண் நிலை இலா இலக்கும் அஃதே - கடிய குலாலசக்கர வேகத்தையுடைய ஆரினிடத்திற் சுழலுகின்ற யந்திரசக்கரத்தின் நடுவே சுற்றுகின்ற இலக்கும் அதுவே—நெஞ்சு உற யாவர் எய்தார் - அதை மனத்தால் நுனித்து எவர் எய்தாரோ—அவர்க்கே அந்தக் கன்னியும் உரியள் என்றான் - அவருக்கே அந்தப்பெண்ணும் உரியள் என்று சொன்னன். எ-று.

ஏகாரம் இரண்டும் பிரிநிலை. கன்னியும் என்னும் உம்மை சிறப்பு. நூல்களில் விதிக்கப்பட்ட ஆரிடமுதலிய மணத்திறங்களை யெல்லாம் அறிந்தீராதலின்யான் கூறும் இதற்கும் வெகுளாது உடன்படுவீ ரென்பான் கலைவலீர் என்றும், சுழலும் இலக்கை மனத்தால் நுனித்துச் சிறிதுபோழ்தாராய்ந்தன்றி எத்துணைத் தனுர் வேத சாதுரிய முடையார்க்கும் எய்து வீழ்த்தல் கூடாதென்பான் நெஞ்சுறயாவரெய்தார் என்றுங்கூறினன். இலக்கணையை மணம்புரிதற்காக அரசர்கள் திரிபன்றியெய்துழிச் சிறிதுபோது தாமதித்து மனத்தால் நுனித்தெய்யாமையின் அவர்களுக்கு அதனை வீழ்த்தலும் மணம்புரிதலுங் கூடாவாக, மதித்து நுனித்தெய்த சிவசனுக்கு அதனை வீழ்த்தலும் மணம்புரிதலுங் கூடிற்றெனக. (௬க)

வேறு.

இச்சொற்பழனப்பாஞ்சாலர்க்கிறைவன்புதல்வனியம்புதல்கேட்
டச்சொற்றத்தஞ்செவிக்குருமேருகக்கலங்குமரவன்னார்
கச்சைப்பொருதுபுடைபரந்துகதித்துப்பணைக்குங்கதிராரப்
பச்சைக்குரும்பையிளமுலைமேற்பரிவானாணம்பிரிவுற்றார்.

(இ - ள்.) இச்சொல் - இந்தவசனத்தை—பழனப் பாஞ்சாலர்க்கு இறைவன் புதல்வன் இயம்புதல் கேட்டு - வயல் சூழ்ந்த பாஞ்சால தேசத்தரசன் புதல்வனாகிய திட்டத்துய்மன் சொல்லுதலைக்கேட்டு—அச்சொல் தத்தம் செவிக்கு உருமேறு ஆக - அந்தவசனம் தத்தங்காதுகளுக்கு இடியேறுபோலாக—கலங்கும் அரவு அன்னார் - கலங்கும் பாம்பையொத்த அரசர்கள்—கச்சைப் பொருது - கச்சைமோதி—புடை பரந்து - அடிபரந்து—கதித்துப் பணைக்கும் - உயர்ந்துபருக்கும்—கதிர் ஆரப் பச்சைக் குரும்பை இளமுலைமேல் பரிவால் - (திரௌபதியினது) ஒளிபொருந்திய முத்துவடங்களையுடைய பசுமையாகிய குரும்பைபோலும் இளைய தனங்களின்மேற்கொண்ட ஆசையினால்—நாணம் பிரிவுற்றார் - வெட்கம் நீங்கினார்கள். எ - று.

அரசர்களுக்கு வில்வளைத்திலக்கு வீழ்த்தல் கூடாமையினாலே அவன்கூறிய இச்சொல் மிகக்கலக்க முண்டாக்கிற்றென்பார் அச்சொற்றத்தஞ் செவிக்குருமேருகக்கலங்கு மரவன்னாரென்றும், மகளிருடைய அவயவங்களுள் ஆடவரை மிக வருத்தி நாணைப்பிரிப்பன கண்ணும் முலையுமேயாம்; அவற்றுள்ளும் இத்தன்மையுடைய முலை அவ்வரசரை மிகவருத்தி நாணைப் பிரித்ததென்பார் கச்சைப்பொருதுபுடைபரந்துகதித்துப் பணைக்குங் கதிராரப் பச்சைக் குரும்பை யிளமுலைமேற் பரிவானாணம் பிரிவுற்றார் என்றுங் கூறினார். (கூஉ)

கண்போலம்புநுதல்போலுங்கடுங்கார்முகமுங்காண்டொறுமத்
திண்போர்வேந்தர்மனக்கலக்கஞ்செப்புந்தகவன்றானாலும்
விண்போயுழன்றுசுழலிலக்கைமெய்யேயெய்துவீழ்த்திமலர்ப்
பெண்போல்வாளைக்கைப்பிடிக்கும்பேராசையிலேபேதுற்றார்.

(இ - ள்.) கண்போல் அம்பும் நுதல்போலும் கடும் கார்முகமும் காண்டொறும் - (திரௌபதியினுடைய) கண்ணைப்போலும் அம்பையும் நெற்றியைப்போலும் கொடிய வில்லையும் பார்க்குந்தோறும்—அத் திண் போர் வேந்தர் மனக்கலக்கம் செப்புந் தகைத்தன்று - அந்த (நாணழிந்த) வலிய போரையுடைய அரசர்களது மனக்கலக்கம் எவராலுஞ் சொல்லுந் தகைமை யுடைத்தன்று—ஆனாலும் - ஆயினும்—விண் போய் உழன்று சுழல் இலக்கை மெய்யே எய்து வீழ்த்தி- (அவர்கள்) ஆகாயத்தில் உயர்ந்து மிகச் சுழலுகின்ற இலக்கை உறுதியாக எய்து விழுத்தி—மலர்ப் பெண்போல்வாளைக் கைப்பிடிக்கும் பேர் ஆசையில் பேதுற்றார் - இலக்குமிபோன்ற இயல்பினை யுடையாளை மணஞ்செய்யும் பேராசையினால் மயங்கினார்கள். எ - று.

ஏ - அசை. காண்டொறும் என்புழித் தொறும் என்பது காலப்பன்மை குறித்து நின்றது. கண்போலம்பு நுதல்போலுங் கடுங்கார்முகமும் என்பது விபரீதவுவமை என்னும் அலங்காரம். இவள்கண்ணும் நுதலும் தம்மை மிகவருத்துமாறுபோல அவ்வில்லும் அம்பும் இவளை மணஞ்செய்தற்கு இடையீடாய் வருத்தினமையின் அரசர் மனங்கலங்கினாரென்க. (கூகூ)

திருந்தார்மன்றற்குழலணங்கின்செவிலித்தாயர்கடல்கடைந்து
வருந்தாவமுதநிகர்வாளைமயில்போற்கொண்டுமன்னவைபுக்
கிருந்தாரிருந்தகாவலரையின்னோரின்னோரிவரென்று
முருந்தார்பவளத்துவரிதழ்வாய்முகிழ்வாணகைக்குமொழிகின்றார்.

(இ - ள்.) திருந்து ஆர் மன்றல் குழல் அணங்கின் செவிலித்தாயர்-ஒப்பனை செய்யப்பட்ட மணம்பொருந்திய கூந்தலையுடைய திரௌபதியின் கைத்தாயர் கள்—கடல் கடைந்து வருந்தா அமுதம் நிகர்வாளை - பாற்கடலைக் கடைந்து வருந்தப்படாது பெற்ற அமுதத்தை யொத்த அவளை—மயில்போல் கொண்டு மன்னவை புக்கு இருந்தார் - மயில்போல அழைத்துக்கொண்டு அரச சபையிற்போயிருந்து—இருந்த காவலரை - அச்சபையிலிருந்த அரசர்களை—இவர் இன்னோர் இன்னோர் என்று - இவர் இன்னாரின்னாரென்று—பவளத்துவர் இதழ் வாய் முருந்து ஆர் வாள் முகிழ் நகைக்கு - பவளம்போலும் செம்மையாகிய அதரம்பொருந்திய வாயையும் இறகினடிக்குருத்துப்போலும் ஒளியை யரும்பும் பற்களையுமுடைய அவளுக்கு—மொழிகின்றார் - சொல்லுகின்றார்கள். எ - று.

திருந்து முதனிலைத் தொழிற்பெயர். இருந்தார் வினையெச்சமுற்று. இருந்தார் இருந்த காவலர் என்பதற்கு, பெருமையாகிய மாலை மார்பில் இருக்கப்பெற்ற அரசர் எனப்பொருள் கோடலு மொன்று. வருந்தாத என்னும் ஈறுதொக்க பெயரெச்சம் அமுதம் என்னும்பிறபெயர்கொண்டது. அமுதநிகர்வாள், முகிழ்வாணகை என்பன சுட்டின்பொருளாய் நின்றன. கடல்கடைந்து வருந்தா அமுதம் இல்பொருளுவமை. முருந்தார் என்பதில் ஆர் உவமவுருபு.      (௩௪)

மாற்றம்பிறிதொன்றுரையானிவ்வன்போர்வில்லின்வலிநோக்கிச்
சீற்றஞ்சிந்தைகொண்டழலப்பொய்யேமலர்ந்ததிருமுகத்தா
னேற்றந்தன்னில்வேறொருவரிப்பேருலகிலிலரென்னத்
தோற்றம்படைத்தோன்றனைக்காட்டித்துரியோதனன்மற்றிவனென்றார்.

(இ - ள்.) இப் பேர் உலகில் - இந்தப் பெரிய உலகத்தில்—ஏற்றந்தன்னில் வேறு ஒருவர் இலர் என்ன - பெருமையில் (ஒப்பானவர்) வேறொருவர் இலர் என்று சொல்லும்படி—தோற்றம் படைத்தோன் தனைக் காட்டி - தோற்றத்தைப் பொருந்தினவனைக் காட்டி—இவ் வன்போர் வில்லின் வலி நோக்கிப் பிறிது மாற்றம் ஒன்று உரையான் - இந்த வலிய போர்க்குரிய வில்லினது வலிமையைப் பார்த்துப் பிறிது வசனமொன்றையும் பேசாதவனாய்—சிந்தை சீற்றம் கொண்டு அழல - (வளைக்குந் திறமை யின்மையினாலே) மனங் கோபத்தைப் பொருந்தி அழல—பொய்யே மலர்ந்த திருமுகத்தான் இவன் - (வளைக்குந் திறமை யுடையவன்போலப்) பொய்யாகவே மலர்ந்த அழகியமுகத்தையுடையவனாகிய இவன்—துரியோதனன் என்றார் - துரியோதன மகாராசன் என்று சொன்னார்கள். எ - று.

மற்று - அசை. உரையான் வினையெச்சமுற்று. எவரும் உலகிற்றன்னை நிகரானரெனக் கருதும்படி தோற்றம்படைத்தோனாதலின் இவள் இவன்மாட்டு மருண்டு மணமாலை சூட்டுவாளோ வென்றையுற்று, மனத்தில் எத்துணையழற்சி யிருப்பினும் அதனைப்புறத்தார்க்குப் புலப்படவிடாது வெளியே முகமலர்ந்து அழற்சியில்லாதான்போல நடித்தலில் வல்லன் என அவன் தீக்குணத்தைச் செவிலியர் விதந்து கூறினாரென்க.      (௩௫)

மணியின்கிரணவெயிலெறிப்பமண்ணேழ்தாங்குநச்செயிற்றுப்
பணியின்முடிநாயகத்தலையின்பாங்கேநிரைத்தபஃறலைபோற்
றுணியுங்கொடுமைவகிரன்னதுணைவர்துச்சாதனன்முதலோ
ரணியுங்கழற்காற்சுயோதனனுக்கருகாசனத்தரிவரென்றார்.

(இ - ள்.) மணியின் கிரண வெயில் எறிப்ப-பணாமணியின் ஒளியாகிய வெய்யில் எறிக்க—மண் ஏழ் தாங்கும் நச்சு எயிற்றுப் பணியின் முடி நாயகத்தலையின்-ஏழுலகங்களையுந் தாங்குகின்ற நஞ்சுபொருந்திய பற்களை யுடைய சேடனது சுடிகையை யுடைய நாயகத்தலையினது—பாங்கு நிரைத்த பல் தலைபோல் - பக்கங்களில் நிரைத்த பலதலைகளைப்போல—அணியும் கழற்கால்சுயோதனனுக்கு அருகு ஆசனத்தர் இவர் - அணியப்படும் வீரக்கழல் பொருந்திய காலையுடைய துரியோதன மகாராசனுக்கு அருகிலுள்ள ஆசனங்களி லிருக்கின்ற இவர்கள்—துணியும் கொடுமை வகிர் அன்ன துணைவர் துச்சாதனன் முதலோர் என்றார் - துணிக்கப்பட்ட கொடுமைத் துண்டங்களை யொத்த அவன் தம்பியராகிய துச்சாதனன் முதலியோர் என்றார்கள். எ - று.

ஏ-அசை. ஆசனத்தர் பெயரெச்சமுற்று. நஞ்சு என்னும் மென்றொடர்க் குற்றிய லுகரம் வன்றொடராயது. துணிக்கும் என்னும் பிறவினை எதுகைநோக்கித் துணியும் எனத்தன்வினைபோலநின்றது. கொடுமைவகிர் என்றது இல்பொருளுவமை. துணியுங் கொடுமை என்பதற்கு இதற்கு மேற்பட்ட தில்லையெனப் பலருந் துணியுங் கொடுமை எனப்பொருள்கோடலும் ஒன்று. (௩௬)

உலைவந்தயருஞ்சூன்மந்திக்குருகாநிலங்கிண்டுதவுகுலக்
கலைவன்பலவின்சுளைகீறிக்களிப்போடளிக்குங்காந்தாரத்
தலைவன்சகுனியிவன்கண்டாய்தக்கோராடாச்சூதுக்கு
நிலைவஞ்சனைக்குந்தரணிபரில்யாரேயிவற்குநிகரென்றார்.

(இ - ள்.) உதவு குலக் கலை - உதவிசெய்கின்ற மேன்மையாகிய ஆண்குரங்கு—உலைவந்து அயரும் சூல் மந்திக்கு - வருந்திச் சோர்கின்ற கருப்பத்தையுடைய மந்திக்கு—உருகா - மனமுருகி—நிலம் கிண்டு - நிலத்தை அகழ்ந்து—வன் பலவின் சுளை கீறிக் களிப்போடு அளிக்கும் காந்தாரத் தலைவன் சகுனி இவன் - வலிய பலாப்பழச்சுளையைக் கிழித்துக் களிப்போடு கொடுக்கும் காந்தார தேசத்தரசனாகிய சகுனி இவன்—தக்கோர் ஆடாச் சூதுக்கும் நிலை வஞ்சனைக்கும் - பெரியோர் ஆடாத சூதுக்கும் நிலையான வஞ்சகத்துக்கும்—இவற்கு நிகர் தரணிபரில் யார் என்றார் - இவனுக்கு உவமை அரசர்களில் எவர் என்றுசொன்னார்கள். எ - று.

ஏ - அசை. கண்டாய் முன்னிலையசை. பலவு ஆகுபெயர். பெண்படும் பாட்டிற்கிரங்கித் தீர்க்கும் அன்புடைக் கலையென்பார் குலக்கலை என்றும், எத்துணைச் சூழ்ச்சி யுடையோராலும்மாற்றுதற்கரிய வஞ்சனை என்பார் நிலைவஞ்சனை என்றுங் கூறினர். இவன் தேயத்திலுள்ள குரங்கு பலாப்பழச்சுளை கொடுத்துத் தன்மந்தியின் வருத்தந் தீர்த்தின்பஞ் செய்யுமாறுபோல இவனும் உன்னை மணஞ் செய்யில் வேண்டியவற்றைத் தந்தின்பஞ்செய்து நின்மன முவக்குமா றொழுக வல்லன் என்பது இறைச்சிப்பொருள். இவ்வியல்பினனாயினும் தீக்குணங்களினுஞ் சிறந்தா னென்பதனையும் உணர்த்துவாராய்ச் சூதுக்கு நிலைவஞ்சனைக்குந் தரணிபரில்யாரே யிவற்குநிகர் என்று கூறினாரென்க. (௩௭)

பேசாதொடுங்கும்பேரறிவாற்பெரும்போர்வலியாற்பிறப்பான்மெய்த்
தேசாலியற்றும்பலபடையாற்றிண்டோள்வலியாற்செஞ்சிலைக்கை
யாசான்மைந்தனிவன்றனக்கிங்காரேயுவமையமரரிலு
மீசானனைமற்றொருசிறிதொப்பெனலாமல்லதிலையென்றார்.

(இ - ள்) பேசாது ஒடுங்கும் பேர் அறிவால் - (பயனின்மொழிகளைப்) பேசாமல் அடங்கியிருக்கும் பேரறிவினாலும்—பெரும் போர் வலியால் - பெரிய போர் வலிமையினாலும்—பிறப்பால் - பிறப்பினாலும்—மெய்த் தேசால் - சரீர அழகினாலும்—இயற்றும் பல படையால் - செய்கின்றபடைக்கலத்தொழிலினாலும்—திண்தோள் வலியால் - திண்ணிய புயவலிமையினாலும்—செஞ்சிலைக்கை ஆசான் மைந்தன் இவன் தனக்கு இங்கு உவமை யார் - சிவந்த வில்லை ஏந்திய கையையுடைய துரோணாசாரியனது புத்திரனாகிய இந்த அசுவத்தாமனுக்கு இவ்வுலகில் உவமையாவார் யாவர்—அமரரிலும் ஈசானனை ஒரு சிறிது ஒப்பு எனலாம் - தேவர்களுள்ளும் ஈசான உருத்திரரை ஒரு சிறிது நிகரென்று சொல்லலாம்—அல்லது இலை என்றார் - அன்றி வேறுவமை இல்லை யென்று சொன்னார்கள். எ - று.

மற்று, ஏ அசைகள். அமரரிலும் என்னும் உம்மை எச்சத்தோடு சிறப்பு. படை ஆகுபெயர். தாய்மரபு தந்தைமரபாகிய இரண்டுந் தூய்மையுடையன என்பார் பிறப்பாலென்றார். சிவவிந்தாலுற்பத்தியான விசேடித்த பிறப்புடையன் என்பார் பிறப்பாலென்றாரெனினுமமையும். (ருஅ)

பெண்மைக்கிரதியெனவந்தபெண்ணாரமுதேபேருலகி
லுண்மைக்கிவனேவலிக்கிவனேயுறவுக்கிவனேயுரைக்கிவனே
திண்மைக்கிவனேநெறிக்கிவனேதேசுக்கிவனேசிலைக்கிவனே
வண்மைக்கிவனேகன்னனெனுமன்னன்கண்டாய்மற்றிவனே.

(இ - ள்.) பெண்மைக்கு இரதி என வந்த பெண் ஆர் அமுதே - பெண்டன்மைக்கு இரதி என்றுசொல்ல அவதரித்த பெண்களுட் பெறுதற்கரிய அமுதுபோல்வாளே—பேர் உலகில் உண்மைக்கு இவனே - பெரிய உலகத்திற் சத்தியத்துக்கு இவனே—வலிக்கு இவனே - வலிமைக்கு இவனே—உறவுக்கு இவனே - நட்புக்கு இவனே—உரைக்கு இவனே - சொல்லுக்கு இவனே—திண்மைக்கு இவனே - கலங்காநிலைக்கு இவனே—நெறிக்கு இவனே - நல்லொழுக்கத்திற்கு இவனே—தேசுக்கு இவனே - புகழுக்கு இவனே—சிலைக்கு இவனே - விற்போருக்கு இவனே—வண்மைக்கு இவனே - கொடைக்கு இவனே—இவன் கன்னன் எனும் மன்னன் - இவ்வியல்பினையுடைய இவன் கன்னன் என்னும் அரசன். எ - று.

மற்று என்பதும் ஈற்றிலுள்ள ஏகாரமும் அசைகள். ஏனைய ஏகாரங்கள் பிரிநிலைகள். கண்டாய் முன்னிலையசை. அமுது, சிலை என்பன ஆகுபெயர்கள். நாணமடமச்சம் பயிர்ப்பென்னு நான்குகுணமுங் கற்புமாகிய பெண்டன்மையில் இரதி சிறந்தமையிற் பெண்மைக்கிரதி என்றும், அமுதம் உலகினுள்ள பொருளெல்லாவற்றினுஞ் சிறந்து, உண்டார்க்குக் கழிபெருஞ்சுவையோ டுறுதி பயக்குமாறுபோல இவளும் உலகினுள்ள எல்லாப் பெண்களினுஞ்சிறந்து, கொண்டாற்குக் கழிபெருஞ்சுவையோ டுறுதிபயத்தலிற் பெண்ணாரமுதே என்றும், நட்கப்படுவோர் இவ்விலங்கணத்தராகல்வேண்டுமென நூல்கள் விதித்த இலக்கணமெல்லாவற்றையும் இவனொருங்குடைமையின் உறவுக்கிவனே என்றும், எத்துணை நுண்ண

றிவினையுடைய அரசரமைச்சரெவரினுஞ் சொல்வன்மையில் இவன் சிறந்தமையின் உரைக்கிவனே என்றும், தன்குருவாகிய பரசுராமன் தன்றொடைமீது தலைவைத்துத் துயிலும்பொழுது கிருட்டிணர் வண்டாய்த் தன்றொடையைத்துளைத்து இரத்தம்பெருகச்செய்தழியும், குருவினது நித்திரைக்குப் பங்கமாகும் எனக்கருதித் தொடையசையாதிருந்த கலங்காநிலையுடையன் என்பார் திண்மைக்கிவனே என்றுங் கூறினர். ஏனைய வெளிப்படை. (௩௯)

அலத்தான்முன்னம்பிளந்தபகையடர்ப்பான்கருதிப்பிளப்புண்ட
சலத்தால்யமுனைபிணித்ததெனத்தயங்கும்படிசேர்தானையினன்
குலத்தாலுயர்ந்தவசுதேவன்குமரன்களபக்கொங்கையர்மெய்ந்
நலத்தான்மகிழுஞ்சிந்தையினனறுந்தாரிராமனிவனென்றார்.

(இ - ள்) யமுனை - யமுனாநதி—முன்னம் அலத்தால் பிளந்த பகை அடர்ப்பான் கருதி - முன்னாளிலே கலப்பைப்படையினாற்றன்னைப்பிளந்த பகையை வெல்லக் கருதி—பிளப்புண்ட சலத்தால் பிணித்தது என - பிளபட்ட நீரினாற் சூழ்ந்தவாறுபோல—தயங்கும் படி சேர்தானையினன் இவன் - விளங்குகின்ற பெருமைபொருந்திய (நீல) வஸ்திரத்தையுடைய இவன்—குலத்தால் உயர்ந்த வசுதேவன் குமரன் - குலத்தினாலுயர்ந்த வசுதேவருடைய புதல்வன்—களபக் கொங்கையர் மெய் நலத்தால் மகிழும் சிந்தையினன் - கலவைச்சாந்தையணிந்த முலைகளையுடைய பெண்களின் மெய்யுறுபுணர்ச்சியினால் மகிழும் மனத்தையுடையான்—நறுந்தார் இராமன் என்றார் - நறுமணம் பொருந்திய (பனம்பூ) மாலையையணிந்த பலராமன் என்றார்கள். எ - று.

இது, என என்னும் உவமைச்சொல்லோடுவந்த தற்குறிப்பேற்றமென்னும் அலங்காரம். தானையினன் பெயரெச்சமுற்று. பலராமன் கோபாலமகளிர்களோடு சலக்கிரீடைசெய்ய விரும்பி நெடுந்தூரத்தில் இருந்த யமுனாநதியைஅருகில் வரும்படியழைக்க அந்நதி அவன் கருத்தின்படியே வாராது பராமுகஞ்செய்தமையால், அவன் வெகுண்டு தன் கலப்பையை அதிலிட்டுப் பலகால்களாகப் பிளந்தமை பற்றி அலத்தான்முன்னம்பிளந்த என்றார். பிளப்புண்ட சலத்தால் என்பதற்குப் பிளப்புண்ட கோபத்தால் எனவும், தயங்கும்படி என்பதற்கு விளங்கும்படி எனவும் பொருள்கொள்ளினும் அமையும். (௪0)

இந்தக்குரிசில்யதுகுலத்துக்கெல்லாந்திலகமெனுமாறு
வந்துற்பவித்துப்பொதுவருடன்வளருங்கள்ளமாமாயன்
முந்தக்கஞ்சமாமனுயிர்முடித்தானிவற்குமுகிலூர்தி
யந்தப்புரத்திலாராமமந்தப்புரத்துக்காராமம்.

(இ - ள்.) இந்தக் குரிசில் - இந்தப் பெருமையிற்சிறந்தோன்—யதுகுலத்துக்கு எல்லாம் திலகம் எனுமாறு வந்து உற்பவித்து - யதுவம்மிசத்திற்கெல்லாம திலகம் என்று சொல்லும்படி வந்தவதரித்து—பொதுவருடன் வளரும் கள்ள மாமாயன் - இடையருடன்வளர்கின்ற கள்ளமாகிய பெரிய மாயத்தையுடைய கிருட்டிணன்—முந்தக் கஞ்ச மாமன் உயிர் முடித்தான் - முன்னமே கஞ்சனாகிய மாமனுடைய உயிரை நீக்கினன்—இவற்கு - இவனுக்கு—முகில் ஊர்தி அந்தப்புரத்தில் ஆராமம் - இந்திரனுடைய சுவர்க்கத்திலிருக்குங் கற்பகச்சோலை—அந்தப்புரத்துக்கு ஆராமம் - (தன் மனைவியர் இருக்கும்) அந்தப் புரத்திற் சோலையாம். எ - று.

தங்காலத்திலெல்லாங் கோபாலமகளிரோடு போகம் அனுபவித்து நந்த கோன் முதலிய கோபாலரோடளவளாவுத லுடையராயிருந்தமையின் வளரு மென நிகழ்காலத்தாற் கூறினர். கிருட்டிணர் இந்திரனது கற்பகச்சோலையைத் தம்முடைய அந்தப்புரத்திற் கொண்டுவந்து வைத்தவரென்க. (௪௧)

தண்ணந்துளவோன்றனக்கிளவலிவன்காண்மின்னேசாத்தகியென்
றெண்ணும்போசகுலத்தலைவனெவருஞ்சூழவிருக்கின்றான்
கண்ணன்றன்னையவமதித்துக்கழறும்புன்சொற்கார்முகத்தைத்
திண்ணென்கருத்தானீங்கிவன்காண்சேதிப்பெருமான்சிசுபாலன்.

(இ - ள்.) மின்னே - மின்போல்வாளே—இவன் தண்ணந் துளவோன் தனக்கு இளவல் - இவன் குளிர்ந்த துழாய்மாலையையணிந்த கிருட்டிணனுக்குத் தம்பி—சாத்தகி என்று எண்ணும் போசகுலத் தலைவன் - சாத்தகி என்று எவரும் மதிக்கும் போசகுலத்துக்குத் தலைவன்—எவரும் சூழ இருக்கின்றான் - எவருந் தன்னைச்சூழ இருக்கின்றான்—ஈங்கு இவன் - இவ்விடத்திலுள்ள இவன்—கண்ணன் தன்னைக் கார்முகத்தை அவமதித்துப் புன்சொல் கழறும் திண்ணென் கருத்தான் - கிருட்டிணனையும் இந்த வில்லையும் இகழ்ந்து எளிய சொற்களைப் பேசுகின்ற திண்ணென்ற மனத்தினையுடையான்—சேதிப் பெருமான் சிசுபாலன்- சேதிநாட்டுக்கரசனாகிய சிசுபாலன். எ - று.

அம் சாரியை. மின் ஆகுபெயர். காண் முன்னிலையசை. கிருட்டிணனை யவமதித்துப் பேசுமாறுபோல இந்த வில்லையும் தன்னாற்றலுக்குத் தக்கதன்றென அவமதித்துப் பேசுமியல்புடையானென்பார் கண்ணன்றன்னைக் கார்முகத்தையவமதித்துக்கழறும்புன்சொற் றிண்ணென்கருத்தானென்றார். கிருட்டிணனை அவமதித்துப் பேசும் புன்சொல்லையுங் கோபத்தாற்கருகிய முகத்தையும் திண்ணென்ற கருத்தையும் உடையான் எனப் பொருள்கோடலும் ஒன்று. இப்பொருட்குக் கார்முகத்தை என்பதில் ஐ சாரியை. எவருஞ் சூழ இருக்கின்ற சேதிப்பெருமானாகிய சிசுபாலனெனினும் அமையும். இப்பொருட்கு இருக்கின்றான் பெயரெச்சமுற்று.

தார்வண்டிமிரத்தேனொழுகுந்தடந்தோள்வீரன்சராசந்தன்
போர்வெஞ்சரத்தால்யாவரையும்புறங்கண்டன்றிப்போகாதான்
சீர்வண்மதுராபுரிவிடுத்துத்துவாரகையினிற்சென்றொதுங்கக்
கார்வண்ணனையுநெடுங்காலம்வென்றானிவன்காணென்றாரே.

(இ - ள்.) தார் வண்டு இமிரத் தேன் ஒழுகும் தடம் தோள் வீரன் இவன் - மாலையில் வண்டுகள்மொய்க்கத் தேனொழுகுகின்ற விசாலித்த புயங்களையுடைய வீரனாகிய இவன்—சராசந்தன்—சராசந்தன் என்னும் அரசன்—போர் வெம் சரத்தால் யாவரையும் புறங்கண்டு அன்றிப் போகாதான் - போரிலே கொடிய பாணத்தால் எல்லாரையும் புறங்கொடுக்கச்செய்தல்லாமற் போகாதவன்—கார் வண்ணனையும் - மேகவண்ணனாகிய கிருட்டிணனையும்—சீர் வண் மதுராபுரி விடுத்துத் துவாரகையினில் சென்று ஒதுங்க - சிறந்த அழகிய மதுராபுரியை விடுத்துத் துவாரகாபுரியிற்போய் ஒதுங்க—நெடுங்காலம் வென்றான் என்றார் - அநேக நாள் வென்றவன் என்றார்கள். எ - று.

ஏ - அசை. காண் முன்னிலையசை. கார்வண்ணனையும் என்னும் உம்மை எச்சத்தோடு சிறப்பு. ஒழுகுமென்னும் பெயரெச்சம் தோளென்னு நிலப்பெயர் கொண்டது. இவன்மீதுகொண்ட அச்சத்தால், சிறந்த மதுராபுரியைவிடுத்துச் சிறப்பில்லாத துவாரகாபுரியையடைந்தானென்பார் சீர்வண்மதுராபுரியென்ற டைகொடுத்தும், துவாரகையென்றடைகொடாதுங் கூறினர். தார்வண்டிமிரத் தேனொழுகுந் தடந்தோள் என விதந்தமையால், தம்மையடைந்தார்க்கு அவர் வேண்டுவனகொடுத் துவப்பிக்குமியல்பினனென்பது பெறப்பட்டது. (சங)

பனைக்கைப்பிறைவெண்கோட்டயிராவதமேபோலும்பகட்டிலிவன்
வினைக்கட்புகுந்தாலெதிர்நின் றுவேறாரிவனைவெல்கிற்பார்
முனைக்கட்செங்கண்டீயுமிழுமுகத்தான்மாதேபகதத்தன்
றனக்குத்தானேநிகரென்னத்தருக்கொடீண்டேயிருக்கின்றான்.

(இ - ள்.) மாதே - பெண்ணே—தனக்குத் தானே நிகர் என்னத்தருக்கொடு ஈண்டே இருக்கின்றான் - தனக்குத் தானேநிகர் என்று கருதி அகங்காரத்தோடு இங்கே இருக்குமரசன்—முனைக்கண் செம் கண் தீ உமிழும் முகத்தான் பகதத்தன் - போர்முனையில் சிவந்தகண் அக்கினியை உமிழும் முகத்தையுடைய பகதத்தன் என்பவன்—இவன் பனைக்கைப் பிறை வெண் கோட்டு அயிராவதமேபோலும் பகட்டில் - இவன் பனைபோலும்கையையும் பிறைபோலும் வெண்மையாகிய கோட்டையுமுடைய ஐராவதத்தையே ஒத்த யானையில் ஏறி—வினைக்கண் புகுந்தால் - யுத்தத்திற்புகுந்தால்—இவனை எதிர் நின்று வெல்கிற்பார் வேறு ஆர் - இவனை முன்னின்று வெல்லவல்லவர் வேறுயாவர். எ - று.

ஐராவதமே என்னும் ஏகாரமும் தானே என்னும் ஏகாரமும் பிரிநிலை. ஈண்டே யென்னும் ஏகாரம் அசை. முகத்தான் பெயரெச்சமுற்று. தனக்குத்தானே நிகரென்பது பொதுநீங்குவமையென்னும் அலங்காரம். பனைக்கைப் பிறைவெண்கோட்டுப் பகடென்றியையும். யானைப்போரில் வல்லவன் என்பதாம். பனைக்கைமுதலிய விசேடணங்களை ஐராவதத்திற்கேற்றுதல் ஈண்டுச் சிறப்பின்று. (சச)

இவன்சல்லியனென்றுரைசான்றவிகல்வேன்மன்னர்க்கேறனையா
னிவன்றன்பகைவர்யாவரையுமிமையோராக்குமெழினீல
னிவன்றண்டமிழ்தேரடல்வழுதியிவன்றேரிரவிகுலவளவ
னிவன்செந்தழலோன்மரபாகியீரேழுலகம்புகழ்சேரன்.

(இ - ள்.) இவன் - இந்த அரசன்—சல்லியன் என்று உரைசான்ற வேல் இகல் மன்னர்க்கு ஏறு அனையான் - சல்லியனென்று புகழ்மிக்க வேலையுடைய பகையரசர்களாகிய யானைகளுக்குச் சிங்கேறுபோன்றவன்—இவன் - இந்த அரசன்—தன்பகைவர் யாவரையும் இமையோர் ஆக்கும் எழில் நீலன் - தன்பகைவரனைவரையும் (வீரசுவர்க்கத்திற் குடியேற்றுதலினால்) தேவராக்கும் அழகையுடைய நீலனென்பவன்—இவன் - இவ்வரசன்—தண் தமிழ் தேர் அடல் வழுதி - குளிர்ந்த தமிழை ஆராய்கின்ற வலிய பாண்டியன்—இவன் - இந்த அரசன்—தேர் இரவிகுல வளவன்-தேரையுடைய சூரியனதுகுலத்தில் அவதரித்த சோழன்—இவன் இவ்வரசன்—செம் தழலோன் மரபு ஆகி ஈரேழ் உலகம் புகழ் சேரன் - சிவந்த அக்கினிகுலத்திலவதரித்துப் பதினாலுலகும் புகழுகின்ற சேரன். எ - று.

உலகும் என்னும் உம்மை முற்று. இகல்வேன்மன்னர்க்கேறு என்பது ஏக தேச உருவகம். இவன் றன்பகைவர் யாவரையு மிமையோராக்கு மெழினீலன் என்பது பிறிதினவிற்சி யென்னும் அலங்காரம். தன்முன்னின்று பொரும் பகைவரில் அஞ்சுவாரைக்கோறல் அறமன்மையின் அவரையொழித்து, அஞ்சாப்பகைவரனைவரையுங் கொல்லும் அறமுடையானென்பார் எழில் நீலன் என்றார். சல்லியன் முதலிய ஐவரையும் அவரவருயர்ச்சி தோன்ற அடைகொடுத்துக் கூறினமையின் இவர்கள் நின்னை மணஞ்செய்யத்தக்கா ரென்றாராம். இமையோராக்கும் என்பதற்கு அச்சத்தால் இமைத்தலை யுடையராகச் செய்யும் எனப் பொருள்கொள்ளுதலு மொன்று. (சரு)

வில்லாண்மையினுல்வெங்கருப்புவில்லோன்றனக்கேநிகரென்னப்
பல்லார்புகழும்பான்மையினுற்பதினெண்புவிக்கும்பதியாய
வெல்லாவரசுநின்பொருட்டாலீண்டேதிரண்டவின்னமுதச்
சொல்லாய்நல்லாய்மென்பூவாய்தோகாய்பாவாய்திரௌபதியே.

(இ - ள்.) இன் அமுதச் சொல்லாய் - இனிய அமுதம்போலுஞ் சொல்லையுடையவளே—நல்லாய் - நல்லாளே—மென் பூவாய் - மெல்லிய நாகணவாய் போன்றவளே—தோகாய் - சாயலான் மயில்போன்றவளே—பாவாய் - பாவை போன்றவளே—திரௌபதியே - திரௌபதியே—பதினெண்புவிக்கும் பதி ஆய எல்லா அரசும் - பதினெண்டேயத்துக்குந் தலைமையாகிய சகல இராசசமூகங்களும்—வில் ஆண்மையினுல் வெம் கருப்புவில்லோன்றனக்கே நிகர் என்ன - வில்வீரத்திறுற் கொடிய கருப்புவில்லையுடைய மன்மதனுக்கே நிகர் என்று—பல்லோர் புகழும் பான்மையினுல் - பலரும் புகழுந்தன்மையோடு—ஈண்டே திரண்ட - இங்கேவந்து கூடின. எ - று.

தனக்கே என்னும் ஏகாரம் பிரிநிலை. புவிக்கும், அரசும் என்னும் உம்மைகள் முற்று. பூவை, தோகை, பாவை ஆகுபெயர்கள். ஆலுருபு உடனிகழ்ச்சிக்கண்வந்தது. அரசு என்னுஞ் சொற்கியையத்திரண்ட என அஃறிணைவினைகொடுத்தார். மன்மதன் பூம்பாணத்தாற் றப்பாம லெய்யுமாறுபோல இவருந் தப்பாமற் பகைவரை எய்யவல்லர் என்பார் வில்லாண்மையினுல் வெங்கருப்பு வில்லோன் றனக்கே நிகரென்ன என்றார். பெண்களுடைய அவயவங்களிலுள்ள அழகெல்லாவற்றையும் பொறுக்கி யீட்டினுற்போன்ற சிறந்த அவயவங்களை யுடைமையின் நல்லாய் எனவும், சேடியர் கற்பித்தபடி தவறாமற் கூறுமொழி யுடைமையிற் பூவாயெனவும், தங்கண்மணிப் பாவைபோறலிற் பாவாய் எனவும் விளித்தாரென்க. எல்லா அரசும் வில்லாண்மையினேடும் மன்மதனை யொத்த அழகோடும் திரண்டன எனப் பொருள்கொள்ளினும் அமையும். (சகூ)

இவரிற்றனதுதோள்வலியாலரியேறென்னவெழுந்திருந்தத்
தவரிற்புரிநாணுறவேற்றித்தழல்கான்முனைவெஞ்சாயகத்தாற்
பவரிற்செறியநிரைத்துருளும்பல்வாய்த்திகிரிப்பயிலிலக்கைக்
கவரிற்செழுந்தார்புனைந்தவனைக்கைக்கொண்டிடுநீகடிதென்றார்.

(இ - ள்.) இவரில் - இந்த அரசர்களுள் (எவனாயினும்)—அரி ஏறு என்ன எழுந்திருந்து - சிங்கேறுபோல எழுந்து—தனது தோள்வலியால் அத்தவரில் புரி நாண் உற ஏற்றி - தன் புயவலிமையினுல் அந்தவில்லிற் புரியையுடைய நாணைப் பொருந்தப் பூட்டி—தழல் கால் முனை வெம் சாயகத்தால் - அக்கினியைக் காலு

கின்ற நுதியையுடைய கொடிய பாணத்தினால்—பவரில் செறிய நிரைத்து உருளும் பல்வாய்த்திகிரிப் பயில் இலக்கை - ஆர்களால் நெருங்க நிரைக்கப்பட்டு உருளுகின்ற பல நுதிகளையுடைய யந்திரசக்கரத்திற் பொருந்திய இலக்கை—கவரில் செழும் தார்புனைந்து - கவர்ந்தால் (அவனுக்குச்) செழுமையாகிய மாலையைச் சூட்டி—அவனை நீ கடிது கைக்கொண்டிடு என்றார் - அவனை நீ விரைந்து (நாயகனாகக்) கைக்கொள்ளுவாய் என்றார்கள்.

எழுந்திருந்தென்பது ஒருசொல். உருளுந்திகிரி யென்றியையும். கவரிச் செழுந்தார் எனப் பாடமோதிக் கவர்தலை யுடையானுக்கு எனப்பொருள் கூறுவாருமுளர். பவர் - ஆர். (சஎ)

வேறு.

முத்தநகைப்பவளவிதழ்க்குளிர்வெண்டிங்கண்முகத்தாளைக் கைத்தாயர்மொழிந்தகாலைச், சித்திரமொத்துணர்வழிந்துதத்தம்பைம்பொற்றிகழரியாசனத்திருந்தார்சிற்சில்வேந்த, ரத்தனுவின்பெருமையையுமிலக்கத்துள்ளவருமையையுங்கருதாமலாண்மைகூறி, யெத்தனையெத்தனைவேந்தராசைகூரயான்யானென்றெழுந்திருந்தார்யானைபோல்வார்.

(இ - ள்.) முத்த நகைப் பவள இதழ்க் குளிர் வெண் திங்கள் முகத்தாளை-முத்துப்போலும் பற்களையும் பவளம்போலும் அதரத்தையும் குளிர்ந்த வெண்மையாகிய பூரண சந்திரன்போலும் முகத்தையுமுடைய திரௌபதிக்கு—கைத்தாயர் மொழிந்தகாலை - கைத்தாயர்கள் இங்ஙனஞ் சொன்னபொழுது—சிற்சில் வேந்தர்-சிலசில அரசர்கள்—சித்திரம் ஒத்து உணர்வு அழிந்து-சித்திரத்தைப்போன்று அறிவழிந்து (செயலற்று)—தத்தம் பைம் பொன் திகழ் அரி ஆசனத்து இருந்தார் - தங்கள் தங்கள் பசும்பொன்னாற் செய்யப்பட்ட விளங்குகின்ற சிங்காசனங்களி லிருந்தார்கள்—யானைபோல்வார் எத்தனை எத்தனை வேந்தர்-யானைபோன்ற எத்தனை எத்தனை அரசர்கள்—அத்தனுவின் பெருமையையும் இலக்கத்துள்ள அருமையையும் கருதாமல் ஆண்மை கூறி - அந்த வில்லின் பெருமையையும் இலக்கிலுள்ள அருமையையும் நினையாமல் வீரம்பேசி—ஆசைகூர யான்யான் என்று எழுந்திருந்தார் - ஆசைமிக யான்யான் என்று சொல்லி எழுந்தார்கள். எ - று.

பெருமையையும் அருமையையும் என்னும் உம்மைகள் சிறப்போ டெண்ணுப்பொருள. முகத்தாளை என்னும் ஐயுருபு குவ்வுருபாகத்திரித்துப்பொருளுரைக்கப்பட்டது. போல்வார் பெயரெச்சமுற்று. மதயானை பாகன்வழிச் செல்லாது தன்வழிச்சென்று கெடுமாறுபோல இவரும் அறிவின்வழிச் சென்று தனுவின் பெருமையையும் இலக்கின் அருமையையுங் கருதாது ஆசைவயத்தராய் வீரங் கூறித் தாம் எடுத்தகருமங் கடைபோகாமையின், நாணழிந்தாரென்பார் யானை போல்வார் என்றார். (சஅ)

தனுவெடுத்துநாண்பிணிப்பான்கிளராநின்றதன்குலத்திலவனிபரைத்தடுத்துவேதப், பனுவலுக்குந்தவத்தினுக்குமுரியவேள்விப்பார்ப்பனமாக்களினிடையேபாண்டுமைந்த, ரனுவுருக்கொண்டருமாறியிருந்ததன்மையறிந்தருளியலாயுதனோடருளிச்செய்தான், மனுமுறைக்குவரம்பாகிவருந்தம்வீடமாநிலமீதவதரித்தவாசுதேவன்.

(இ - ள்.) மனு முறைக்கு வரம்பு ஆகி - மனுநீதிக் செல்லையாகி—மா நில மீது வருத்தம் வீட அவதரித்த வாசுதேவன் - பெரிய பூமியின்மீது (அதன்)வருத்தம் நீங்க அவதாரஞ்செய்த கிருட்டிணர்—வேதப் பனுவலுக்கும் தவத்தினுக்கும் உரிய வேள்விப் பார்ப்பனமாக்களின் இடையே - வேத நூலினுக்கும் தவத்தினுக்குமுரிய யாகத்தையுடைய பிராமணர்களின் நடுவே—பாண்டு மைந்தர் அனுருக்கொண்டு உருமாறி இருந்த தன்மை அறிந்தருளி - பாண்டவர்கள் (அவர்களை) ஒத்த உருவத்தைக்கொண்டு தம்வடிவம் மாறியிருந்த தன்மையைத் தெரிந்தருளி—தனு எடுத்து நாண் பிணிப்பான் கிளராநின்ற தன்குலத்தில் அவனிபரைத் தடுத்து - வில்லை எடுத்து நாண் பூட்டும்படி முயலுகின்ற தன்குலத்தில் அரசர்களைத் தடுத்து — அலாயுதனோடு அருளிச்செய்தான் - (அவர்கள் மறைந்திருந்த தன்மையைப்) பலராமனோடு கூறினர். எ - று.

பனுவலுக்குந் தவத்தினுக்கும் என்னும் உம்மைகள் எண்ணோடுசிறப்பு. மனுமுறைக்கு வரம்பாகியவதரித்த வாசுதேவன் வருத்தம்வீட அவதரித்தவாசுதேவன் எனத் தனித்தனி இயையும். அசுரர் இராக்கதராதியோர் மானுடராய்ப் பூமியிலவதரித்துமனுமுறையை நீக்கியொழுகினமையின் அவரை வதைத்துமனுமுறையை நிலைபெறுத்தினமைபற்றி மனுமுறைக்கு வரம்பாகி என்றார். தங்குலத்திற்கு முதல்வனுதலினுலும் அவன் கருத்தின்படி தங்குலத்தார் வில்வளைக்க முயன்றமையினுலும் அவரைத் தடுக்குமாறு பலராமனோடு கிருட்டிணர் கூறினரென்க. அநுரூபம் என்பது அனுவுரு என்ருயிற்று. இதற்குப் பொருள் ஒத்த உரு. (சகூ)

பலருமுடன்கங்கரித்துமேருசாரப்பாரவரிசிலையினிலைபார்த்துமீண்டார், பலருமொருகையிற்பிடிக்கவடங்காவில்லின்பருமைதனைக்குறித்துமனம்பதைக்கப்போனர், பலருமலர்க்கைப்படுத்திப்பெயர்க்கமாட்டார்பணைத்தோணொந்தமையுமெனப்பயந்துநின்றார், பலருமெடுத்தணிமணிநாண்பூட்டவாராப்பரிசொடுமற்றதன்வலிமைபகர்ந்தேவிட்டார்.

(இ - ள்.) பலரும் உடன் அகங்கரித்து - பல அரசரும் ஒருசேர அகங்காரங்கொண்டு—மேருசார் அப் பார வரிசிலையின் நிலைபார்த்து மீண்டார் - மேருவையொத்த அந்தப் பாரமான வரிந்த வில்லின் வலிமையைப்பார்த்துத்திரும்பினர்—பலரும் ஒரு கையிற் பிடிக்க அடங்கா வில்லின் பருமைதனைக் குறித்து - பல அரசரும் ஒரு கையினுற்பிடிக்க அடங்காத வில்லின்பருமையை நினைத்து—மனம் பதைக்கப் போனர் - மனம்பதைக்சத் திரும்பினர்கள்—பலரும் மலர்க்கைப் படுத்திப் பெயர்க்கமாட்டார் - பல அரசரும் தாமரை மலரை யொத்த கையாற்பிடித்து அசைக்கமாட்டாதவராய்—பணைத் தோள் நொந்து அமையும் எனப் பயந்து நின்ருர் - பருத்த புயங்கள் வருந்தி இதுபோதும் என அஞ்சி நின்ருர்கள்—பலரும் எடுத்து அணி மணி நாண் பூட்ட வாராப் பரிசொடு - பல அரசருந் தூக்கிக் கட்டிய அழகிய நாணைப்பூட்ட முடியாத தன்மையினுல்—அதன் வலிமை பகர்ந்து விட்டார் - அவ்வில்லின் வலிமையைப் பேசி (அம்முயற்சியை) விட்டார்கள். எ - று.

மற்று, ஏ அசைகள். சார் உவமவுருபு. மாட்டார் வினையெச்சமுற்று. ஒடுவுருபு கருவிப் பொருளில்வந்தது; அதனை எண்ணுப்பொருட்டாக்கி நாண்பூட்ட முடியாத தன்மையையும் அதன் வலிமையையுஞ் சொல்லி எனப்பொருள் கூறினும் பொருந்தும். (ருo)

வல்லியம்போனடந்துதனுவிருகையாலும் வாரியெடுத்தெதிர்நிறுத்திமல்லல்வாகுச், சல்லியனுநாணேற்றமுடியாதந்தத்தனுவுடனேதன்றனுவுந்தகரவீழ்ந்தான், வில்லியரின் முன்னெண்ணத்தக்கவின்மைவேந்தடுபோர்ச்சராசந்தன்வில்வேதத்திற், சொல்லியவாறெடுத்தூன்றிமற்றைக்கையாற்றொல்வலிநாணியுமெடுத்துத்தோளுஞ்சோர்ந்தான்.

(இ - ள்.) மல்லல் வாகுச் சல்லியனும் - வலிய புயங்களை யுடைய சல்லியனும்—வல்லியம்போல் நடந்து - புலிபோல நடந்து—தனு இருகையாலும் வாரி எடுத்து எதிர் நிறுத்தி - வில்லைத் தன் இருகைகளாலும் வாரித்தூக்கி எதிரில் நிறுத்தி—நாண் எற்ற முடியாது - நாண்பூட்ட முடியாமல்—அந்தத் தனுவுடன் தன் தனுவும் தகர வீழ்ந்தான் - அந்த வில்லுடன் தன்னுடம்பும் தகர்ந்துபோக விழுந்தான்—வில்லியரின் முன் எண்ணத்தக்க வின்மை வேந்து அடுபோர்ச் சராசந்தன் - வில்வீரரில் முன் எண்ணத்தக்க விற்றிறலையுடைய அரசர்களைக் கொல்கின்ற போரையுடைய சராசந்தன்—வில்வேதத்தில் சொல்லியவாறு எடுத்து ஊன்றி - அந்தவில்லைத் தனுர்வேதத்தில் சொல்லியபடி எடுத்து ஊன்றி—மற்றைக் கையால் தொல் வலி நாணியும் எடுத்து - மற்றைக் கையினாலே பழைய வலியநாணியையும் எடுத்து—தோளும் சோர்ந்தான் - கைகளுஞ் சோர்ந்தான். எ - று.

ஏ - அசை. கையாலும் என்னும் உம்மை முற்று. தனுவும் என்னும் உம்மை சிறப்பு, ஏனையவும்மைகள் எச்சத்தோடு சிறப்பு. தனுவுடனே வீழ்ந்தானெனவியையும். இவ்வில்லின் பொருட்டாகப் பலவரசர்களும் முற்கூறியவாறே அஞ்சி வலியழியவும் இவன் சிறிதும் அஞ்சாது அதனைநோக்கி வளைப்பேனென்று சென்றானென்பார் வல்லியம்போ னடந்தென்றும், தொன்றுதொட்டதும் எத்துணை வலியுடையோராலும் இழுத்து வில்லில் மாட்டுதற்கருமை யாதன் முதலிய வலியுமுடைய நாணி என்பார் தொல்வலிநாணி என்றுங் கூறினர். (நக)

பூகதனுகியவன்றேபகைவரெல்லாம்போற்றவளர்ந்துலகாளப்புனைந்தமௌலி, மாகதனும்வில்லெடுத்துவரிநாண்வில்லின்மார்பளவும்போக்கினன்வன்போர்நீலன், சாகதனென்றவைதுதிக்கநெடுநாண்கொற்றத்தனுவொருசாணெனக்கொணர்ந்தான்சாணேயல்ல, வேகதனுநால்விரலென்றுரைக்கநாணிவீக்கினன்வலம்புரித்தார்வேந்தர்வேந்தே.

(இ - ள்.) பூகதன் ஆகிய அன்றே பகைவர் எல்லாம் போற்ற வளர்ந்து - பூமியிற்பிறந்த அன்றைக்கே பகைவரனைவரும் துதிக்க வளர்ந்து—உலகு ஆளப் புனைந்த மௌலி மாகதனும் - உலகத்தை ஆளும்படி அணிந்த கிரீடத்தையுடைய மாகதராசனும்—வில் எடுத்து - வில்லை நிறுத்தி—வரி நாண் வில்லின் மார்பு அளவும் போக்கினன்-வரிந்த நாணை அவ்வில்லின் மார்பளவுக்குங் கொடுவந்தான்—வன் போர் நீலன் - வலிய போரையுடைய நீலன் என்னு மரசன்—சாகதன் என்று அவை துதிக்க - வலியவன் என்று சபையிலுள்ளோர் தன்னைத் துதிக்க—நெடு நாண் கொற்றத் தனு ஒருசாண் எனக் கொணர்ந்தான் - நெடியநாணை வெற்றிபொருந்திய வில்லுக்கு ஒரு சாண்தூரம் உண்டு என்றுசொல்லக் கொடுவந்தான்—வலம்புரித் தார் வேந்தர் வேந்து - நந்தியா வர்த்தமாலையை அணிந்த அரசர்க்கரசனுகிய துரியோதனன்—சாண் அன்று வேகதனு நால்விரல் என்று உரைக்க - சாணளவு தூரம் அன்று வேகமாகிய வில்லிற்கு நாலுவிரல் தூரம்

வில்லிற்கு நாலுவிரல் தூரம் உண்டென்றுசொல்ல—நாணி வீக்கினன் - நாணியைக் கொணர்ந்தான். எ - று.

ஏ இரண்டும் அசைகள். மாகதனும் என்னும் உம்மை எச்சத்தோடு சிறப்பு. வில்லின்மார்பு - வில்நடு. கதன் - அடைந்தவன். சாகதன் - வலியவன். பூமியிற் பிறந்தபொழுதே இவனிலக்கணங்களை யறிந்து பகைவரெல்லாம் இவனெம்மை ஜெயித்தப்பாது வெல்வானெனக்கருதிப் புகழ வளர்ந்தானென்பார் பூகதனாகிய வன்றே பகைவரெல்லாம் போற்றவளர்ந்தென்றார். (ருஉ)

கலைவருத்தமறக்கற்றகன்னனென்னுங்கழற்காளையரனிருந்தகயிலையென்னு, மலைவருத்தமறவெடுத்தநிருதனென்னமன்னவையின்வலியுடனேவந்துதோன்றி, நிலைவருத்தமறநின்றுபரியகோலநீள்வரிநாண்மயிர்க்கிடைக்கீழ்நின்றதென்னச், சிலைவருத்தமறவளைத்துவளைந்தவண்ணச்சிலைக்காறன்முடித்தலையைச்சிந்தவீழ்ந்தான்.

(இ - ள்.) கலை வருத்தம் அறக் கற்ற கன்னன் என்னும் கழற் காளை - நூல்களை முட்டின்றிப்படித்த கன்னன் என்கின்ற வீரக்கழலையுடைய வீரன்—அரன் இருந்த கயிலை என்னும் மலை வருத்தம் அற எடுத்த நிருதன் என்ன - சிவபெருமான் வீற்றிருந்த கைலாசம் என்னும் மலையை வருத்தமின்றித் தூக்கிய இராவணனைப்போல—மன் அவையின் வலியுடன் வந்து தோன்றி - அரசசபையில் வலிமையோடுவந்து வெளிப்பட்டு—நிலை வருத்தம் அற நின்று - வில்வீரற்குரிய நிலையில் வருத்தமின்றி நின்று—பரிய கோல நீள் வரி நாண் - பருத்த அழகிய நீண்ட வரிந்தநாண்—மயிர்க்கிடைக்கீழ் நின்றது என்ன - மயிர்க்கிடை தூரத்தின்கீழ் நின்றதென்றுசொல்ல—சிலை வருத்தம் அற வளைத்து - வில்லை வருத்தம் நீங்க எடுத்துவளைத்து—வளைந்த வண்ணச் சிலைக்கால் தன் முடித்தலையைச் சிந்த வீழ்ந்தான் - வளைந்த அழகியவிற்கால் தனது முடியையுடைய தலையையிடற விழுந்தான். எ - று.

ஏ அசை. மயிர்க்கிடை ஆகுபெயர். மயிரினது கிடையென விரியும். ஏனையர்போலக் கலைகளை வருத்தமுற்றுப் பயிலாது விவேகசாதுரிய முடைமையின் வருத்தமின்றிப் பயின்றவனென்பார் கலைவருத்தமறக் கற்ற கன்னன் என்றும், அங்ஙனம்பயின்றோர்க்கும் பகைவரையடர்க்குமாற்ற லுடைமை அரிதாமாயினும் இவற்கு அதுவும் அரிதன்றென்பார் கழற்காளை என்றுங் கூறினார். (ருங)

அரவநெடுங்கொடியுயர்த்தோன்முதலாவுள்ளவனைவருமங்கொருதனுவுக்காற்றாராகி, யுரவுமெலிந்தெழின்மாழ்கிச்செயல்வேறின்றியுள்ளமழிந்திருந்ததற்பினருமேறென்னக், கரவுடனந்தணர்நாப்பணிருந்தகொற்றக்கருமுகில்வாகனன்புதல்வன்கரியமேனி, யிரவிகுலச்சிறுவனைப்போலெழுந்துமன்றலிளங்கொடிதம்முனைநோக்கியியம்பினனே.

(இ - ள்.) அரவ நெடும் கொடி உயர்த்தோன் முதலா உள்ள அனைவரும் - பாம்பை நெடிய கொடியாகக் கொண்டமையினலே உயரச்செய்த துரியோதன மகாராசன்முதலாகிய அனைவரும்—அங்கு ஒரு தனுவுக்கு ஆற்றாராகி - அவ்விடத்தில் ஒருவில்லுக்கு ஆற்றாதவராய்—உரவு மெலிந்து-வலிமை குறைந்து—எழில் மாழ்கி - அழகுநீங்கி—வேறு செயல் இன்றி - வேறொரு செய்கையு மின்றி—உள்ளம் அழிந்து இருந்ததற்பின் - மனமழிந்திருந்தபின்பு—அந்தணர் நாப்பண் கரவுடன் இருந்த கொற்றக் கருமுகில்வாகனன் புதல்வன்-பிராமணர்களுக்கு நடுவே

மறைந்த வடிவத்தோடு இருந்த வெற்றிபொருந்திய கரிய முகில் வாகனத்தை யுடைய இந்திரனது புதல்வனாகிய அருச்சுனன்—இரவிகுலக் கரியமேனிச் சிறுவனைப்போல் எழுந்து - சூரியகுலத்தவதரித்த கரியவடிவத்தை யுடைய இராமனைப் போல எழுந்து—மன்றல் இளங்கொடி தம்முனை நோக்கி-மணத்திற்குரிய இளைய கொடிபோன்ற திரௌபதியினுடைய தமையனாகிய திட்டத்துய்ம்மனைப்பார்த்து—உரும் ஏறு என்ன இயம்பினான்-இடியேறுபோல முழங்கிச்சொன்னான். எ - று.

ஏ அசை. அனைவரும் என்னும் உம்மை முற்று. இளங்கொடி ஆகுபெயர். பல அரசராலும் நாண்பூட்ட முடியாதவில்லை நாண்பூட்டி இலக்குவீழ்த்த நல்வினை யுடைமையினாலும் சரீரவலியினாலும் அஞ்சாமனத்திட்பத்தாலும் நீலநிறத்தாலும் இராமனை ஒப்பானென்பார் கரியமேனி யிரவிகுலச்சிறுவனைப்போலென்றார். திட்டத்துய்ம்மன் யாகசேனனாகிய பிதாவினாலே மணத்தை நடாத்தும் அதிகாரம்பூண்டு, முன்னர்அரசரைநோக்கி வில்வளைத் திலக்குவீழ்த்தானுக்கே இவள் உரியள் என்று கூறினமையினால் அவனைநோக்கிக் கூறினானென்க. (௫௪)

மன்மரபிற்பிறந்திருதோள்வலியாலிந்தமண்ணாளுமவர்க்கன்றிமறைநூல்வாணர், தொன்மரபிற்பிறந்தவருமிலக்குவீழ்த்தாற்சூட்டுமோதொடையலிளந்தோகையென்னத், தன்மரபுக்கணிதிலகமானவீரன்றகவன்றோமன்றலுக்குத்தாழ்வோவென்றான், வின்மரபிற்சிறந்தநெடுவில்லையீசன்மேருகிரியெடுத்ததெனவிரைவிற்கொண்டான்.

(இ - ள்.) மன் மரபில் பிறந்து - அரசகுலத்தி லவதரித்து—இருதோள்வலியால் இந்த மண் ஆளும் அவர்க்கு அன்றி-இருபுயவலிமையினாலும் இந்தப்பூமியை ஆளும் அரசர்களுக்கன்றி—மறைநூல்வாணர் தொன்மரபில் பிறந்தவரும் இலக்கு வீழ்த்தால் - பிராமணருடைய பழையகுலத்திற் பிறந்தவர்களும் இலக்கை எய்து விழுத்தினால்—இளந்தோகை தொடையல் சூட்டுமோ என்ன-இளைய மயில் போன்ற சாயலினையுடைய பெண் அவர்களுக்கும் மணமாலையைச் சூட்டுவாளோ என்று அருச்சுனன் வினவ—தன் மரபுக்கு அணி திலகம் ஆனவீரன் - தனதுகுலத்திற்கு அழகிய ஓர்திலகமாயுள்ள திட்டத்துய்ம்மன்—மன்றலுக்குத் தாழ்வோ தகவு அன்றோ என்றான் - அது விவாகத்துக்குத் தாழ்வோ பெருமையன்றோ என்றுசொன்னான்—வில்மரபில் சிறந்த நெடு வில்லை - (அப்பொழுது அவன்) விற்குலத்துட்சிறந்த நெடியவில்லை—ஈசன் மேருகிரி எடுத்தது என விரைவில் கொண்டான் - சிவபெருமான் மேருமலையை எடுத்ததுபோல விரைவில் எடுத்தான். எ - று.

பிறந்தவரும் என்னும் உம்மை எச்சம். சூட்டுமோ என்னும் ஓகாரம் வினா. தாழ்வோ என்னும் ஓகாரம் எதிர்மறை. தோகை ஆகுபெயர். தான்மேற்கொண்ட ஒழுக்கத்தாலும் வீரத்தாலுந் தன்மரபை எம்மரபினு மேற்படுத்தியவனென்பார் தன்மரபுக்கணிதிலகமான வீரன் என்றும், பினாகஞ் சார்ங்கமென்னும் உயர்ந்த விற்களினின்றுமுயர்ந்த வில்லென்பார் வின்மரபிற்சிறந்த நெடுவில்லென்றுங் கூறினார். அந்தணர் தம்மிலிழிந்த மூன்றுவருணத்துப் பெண்களையும் மணம்புரியலாமென்னு நூல்வழக்கறிந்தானாகலிற் றகவன்றோமன்றலுக்குத் தாழ்வோ என்றானென்க. சிவபெருமான் பாரமாகிய மேருமலையைப் பரமாணுப் பிரமாணமாயினும் வருத்தமின்றி எடுத்தாற்போல இவ்வருச்சுனனும் இவ்வில்லை எடுத்தானென்பார் ஈசன் மேருகிரியெடுத்ததென விரைவிற் கொண்டான் என்றார். (௫௫)

கிளர்மகுடவயவேந்தர்நாண்களெல்லாங்கீழாகத்தனிநெடுநாண்கி ளரவேற்றித், தளர்வறுசாயகந்தொடுத்துக்கற்றோர்யாருந்தனுநூலுக் காசிரியன்றானேயென்ன, வுளர்திகிரிச்சுழலிலக்கையவையோர்தங்களூ க்கமுடன்விழவெய்தானுரவுத்தோளான், வளருமருந்தவவேள்விமுனி வரார்த்தார்வாசநறுமலர்சொரிந்துவானோரார்த்தார்.

(இ - ள்.) உரவுத்தோளான் - வலிமைபொருந்திய புயங்களையுடைய அருச் சுனன்—கிளர் மகுட வயவேந்தர் நாண்கள் எல்லாம் கீழ் ஆக - பிரகாசிக்கின்ற கிரீடத்தையணிந்த வெற்றிபொருந்திய அரசர்கள் வில்லிற் பூட்டும்படி வலித்த நாணினெல்லைகளெல்லாங் கீழ்ப்பட—தனி நெடுநாண் கிளர ஏற்றி-ஒப்பற்ற நெடியநாணை மேற்படும்படி பூட்டி—தளர்வு அறு சாயகம் தொடுத்து - தளர்ச்சி யில்லாத அம்பைத்தொடுத்து—கற்றோர் யாரும் தனுநூலுக்கு ஆசிரியன் தானே என்ன-படித்தோரனைவரும் தனுர்வேதத்திற்கு ஆசாரியன் இவனே என்றுசொல்ல —உளர்திகிரிச் சுழல் இலக்கை அவையோர் தங்கள் ஊக்கமுடன்விழ எய்தான் - சுழலுகின்ற யந்திரசக்கரத்திற் கிடந்து சுழலும் இலக்கைச் சபையி லுள்ளோரு டைய உள்ளக் கிளர்ச்சியோடு விழும்படி எய்தான்—வளரும் அரும் தவ வேள்வி முனிவர் ஆர்த்தார் - (அப்பொழுது) வளருகின்ற அரிய தவத்தையும் யாகத்தையு முடைய பிராமணர்கள் ஆரவாரித்தார்கள்—வாச நறுமலர் சொரிந்து வானோர் ஆர்த்தார் - வாசனையையுடைய நல்ல பூக்களைச்சொரிந்து தேவர்களும் ஆரவாரித் தார்கள். எ - று.

ஏகாரம் பிரிநிலை. நாண்கள் ஆகுபெயர். நாண்களினெல்லைகளென்றது வில் லின்மார்பளவும் போக்கினமை முதலாகிய எல்லைகளையென்க. வில்வளைத்திலக்கு வீழ்த்துத் திரௌபதியை மணஞ்செய்யலாம் என்ற ஊக்கமும் அவையினுள்ளார் க்கப்பொழுதே யிலதாயிற்றென்பார் ஊக்கமுடன்விழவெய்தா னென்றார். அரசர் களுடைய நாணங்கெடத் தான் நாண்பூட்டினான் எனினும் அமையும். (ருசு)

தாஞ்சாரற்கரியதனுவளைத்தானென்றுதரணிபர்தம்முகங்கருகத் தனுவினோடும், பூஞ்சாரன்மணிநீலகிரிபோனின்றபூசுரனையிவனவனே போன்மென்றெண்ணிப், பாஞ்சாலர்பதிகன்னியிருதன்செங்கட்பங்கய த்தாற்பாங்காகப்பரிந்துநோக்கித், தேஞ்சாரநறுங்கழுநீர்ச்செய்யதாமஞ் செம்மணிகாலருவியெனச்சேர்த்தினளே.

(இ - ள்.) தரணிபர் - அரசர்கள்—தாம் சாரற்கு அரிய தனு வளைத்தான் என்று தம் முகங் கருக - தாங்கள் கிட்டுதற்கரிய வில்லைவளைத்தான் என்று தங் கள் முகம் வாட—பாஞ்சாலர்பதி கன்னி - (அப்பொழுது) பாஞ்சாலராசனுடைய புதல்வியாகிய திரௌபதி—தனுவினோடும் பூஞ்சாரல் மணி நீலகிரிபோல் நின்ற பூசுரனை - வில்லினோடும் பொலிவாகிய சாரலையுடைய அழகிய நீலமலைபோல நின்ற பிராமணனை—இவன் அவனே போன்மென்று எண்ணி-இவன் அந்த அருச் சுனனேபோல்வன் என்று சிந்தித்து—தன் இரு செங்கண் பங்கயத்தால் பாங்கு ஆகப் பரிந்து நோக்கி - தன்னுடைய இரண்டு சிவந்த கண்ணாகிய தாமரைப்பூக் களினால் (நாயகன் என்னும்) உரிமையுண்டாக அன்புகொண்டு பார்த்து—தேம் சார் நறும் கழுநீர்ச் செய்ய தாமம் - தேன் பொருந்திய நறுமணங்கமழும் செங் கழுநீர்மலராற் றொடுக்கப்பட்ட செப்பமாகிய மாலையை—செம்மணிகால் அருவி எனச் சேர்த்தினள் - மாணிக்கரத்தினத்தைக் கொழித்துவிழும் அருவியைப் போலச் சூட்டினாள். எ - று.

ஏ - அசை. அவனேயென்னும் ஏகாரம் பிரிநிலை. சார என்பதில் அகரம் சாரியை. பங்கயம் ஆகுபெயர். போலும் என்னுஞ் செய்யுமென்முற்றுப்போன்ம் எனநின்றது. இவள்கட்பொறி தனக்குவப்பைத்தரும் விடையமாகிய அருச்சுன னதுவடிவைக் காண்கின்றபொழுதிற் றண்மையோடு செழிப்பைப் பொருந்தலிற் றாமரைமலர்போன்றிருந்த தென்பார் இருகண் செங்கட்பங்கயத்தால் என்றும், செங்கழு நீர்மலர்மாலை யாதலிற் செம்மணிகா லருவியென்றுங் கூறினார். நீலகிரி யென்றதற்கியைய அருவி என்றாரென்க. தேஞ்சாரச் சேர்த்தினா ளென்றியைத் துப் பொருள்கூறினு மமையும். (ருஎ)

அந்தரதுந்துபிமுழங்கச்சங்கமார்ப்பவானகதுந்துபிமுதல்வனாதி யாக,வந்திருந்தபேரவையைமதியானாகிமாலையிடுபசுஞ்செம்பொன்மாலை யோடுஞ், சந்திரனுமுரோகிணியுமென்னமுன்னர்த்தான்வளைத்ததடஞ் சிலைகைத்தலத்திலேந்தி, யிந்திரசூனுவுமெழுந்தாங்ககேலுற்றானிருபுற மூந்துணைவர்வரவிணையிலாதான்.

(இ-ள்.) இந்திர சூனுவும் - இந்திரகுமாரனாகிய அருச்சுனனும்—அந்தரதுந் துபி முழங்க - தேவதுந்துபி முழங்க—சங்கம் ஆர்ப்ப - சங்குகள் ஒலிக்க—ஆனக துந்துபி முதல்வன் ஆதியாக வந்து இருந்த பேர் அவையை மதியான் ஆகி - வசு தேவனது தலைமைமிக்க புதல்வராகிய கிருஷ்ணர்முதலாக வந்திருந்த பெரிய சபையிலுள்ளோரை மதியாதவனாய்—மாலை இடு பசும் செம்பொன் மாலையோ டும் - தனக்கு மாலைசூட்டிய பசுமையாகிய செம்பொன்மாலையையணிந்த திரௌ பதியோடும்—சந்திரனும் உரோகிணியும் என்ன-சந்திரனும் உரோகிணியும் என்று சொல்ல—தான் வளைத்த தடம் சிலை கைத்தலத்தில் ஏந்தி-தான்வளைத்த பெரிய வில்லைக் கையிலேந்தி—துணைவர் இருபுறமும் வர - துணைவர் இருமருங்கினும் வர—இணையிலாதான் ஆங்கு எழுந்து ஏகலுற்றான் - நிகரற்றவனாய் அவ்விடத்தி னின்றும் எழுந்து சென்றான். எ - று.

சூனுவும் என்னும் உம்மை சிறப்பு. இருபுறமும் என்னும் உம்மை முற்று. அவை ஆகுபெயர். இணையிலாதான் வினையெச்சமுற்று. செம்பொன்மாலை அன் மொழித்தொகை. பசுஞ் செம்பொன்மாலையோடும் ஏகலுற்றா னென்றியையும். எத்துணைப்பேராற்ற லுடையோரு மஞ்சியொதுங்கத்தக்க பேரவை யென்பார் ஆனக தும்துபி முதல்வனாதியாக வந்திருந்தபேரவை என்றும், ஒருவரையொரு வர் நீங்காமையினாலும் மன் அன்புடைமையினாலுஞ் சந்திரனையும் உரோகிணி யையும் ஒப்பாரென்பார் சந்திரனு முரோகிணியுமென்ன என்றுங் கூறினார். ஆன கதுந்துபி - வசுதேவன். இணையிலாதான் இந்திரசூனுவும் எனக்கூட்டிப் பொருள் கொள்ளினும் பொருந்தும். ஆனக துந்துபிமுதல்வன் என்பதற்கு வசுதேவனாகிய முதல்வன் எனப்பொருள் கொள்ளுதல் பொருத்தமின்று. (ருஅ)

பார்ப்பான்வந்தொருகோடியரசைச்சேரப்பரிவித்துப்பாஞ்சாலன் பயந்ததெய்வச், சீர்ப்பாவைதனைவலியாற்கொண்டுபோகச்செயலின்றி யிருந்தீரென்செய்தீரென்று, வேர்ப்பாடுநுதல்சிவந்தவிழியனாகிவிழியி லான்மகன்கழறவெகுண்டுமேன்மே, லார்ப்பாகக்கொதித்தெழுந்ததுகா ந்தகாலத்தார்க்குமகராலயம்போலரசரீட்டம்.

(இ-ள்.) விழி இலான் மகன் - துரியோதனமகாராசன்—வேர்ப் புஆடு நுதல் சிவந்த விழியன் ஆகி - வேர்வையுண்டாகும் நெற்றியையும் சிவந்த கண் ணையும் உடையனாய்—பார்ப்பான் வந்து ஒருகோடி அரசைச் சேரப் பரிவி

த்து - ஒரு பிராமணன்வந்து ஒருகோடி அரசரை ஒருசேர வருந்தச்செய்து—பாஞ்சாலன் பயந்த தெய்வச் சீர்ப் பாவைதனை வலியாற் கொண்டு போக - பாஞ்சாலராசன் பெற்ற தெய்வத்தன்மையையுடைய சிறந்த கொல்லிப்பாவை போல்வாளை வலியினாற் கொண்டுபோக—செயல் இன்றி இருந்தீர் - ஒருசெயலுமின்றியிருந்தீர்கள்—என் செய்தீர் என்று கழற - என்ன செய்தீர்கள் என்று சொல்ல—அரசர் ஈட்டம் - (அதைக்கேட்ட) ராசகூட்டம்—உகாந்தகாலத்து ஆர்க்கும் மகராலயம்போல் - உகமுடிவில் ஒலிக்குஞ் சமுத்திரம்போல—வெகுண்டு மேன்மேல் ஆர்ப்பு ஆகக் கொதித்து எழுந்தது - கோபித்து மேலும் மேலும் ஆரவாரம் உண்டாக மனங் கொதித்தெழுந்தது. எ - று.

பாவை ஆகுபெயர். ஈட்டம் என்னுஞ் சொற்கியைய எழுந்தது என அஃறிணையொருமை வினைகொடுத்தார். ஒருகோடியென்பது ஈண்டு எண்ணையுணர்த்தாது மிகுதியையுணர்த்திற்று. அரசர்களுக்கு அவண்மீதுகொண்ட ஆசை மீதூருமாறு பாஞ்சாலன் பயந்ததெய்வச் சீர்ப்பாவையென்றுயர்த்துக் கூறினான். துரியோதனமகாராசன் ஆண்டுவந்திருந்த அரசருளெல்லாஞ் சிறந்தவரசனாதலின் அங்ஙனம் வெகுண்டுகூற அரசரீட்டம் அதனால் மானங்கொண்டு வெகுண்டெழுந்ததென்க. ஆடல் - உண்டாதல். காந்தருவதத்தையைச் சீவகன் வீணையில்வென்று கைக்கொண்டபொழுது கட்டியங்காரனென்னு மரசன் தான் அம்மணங்கருதிவந்த அரசரின் மிக்கானாதலின், அவரை இவ்வாறே வெகுண்டுகூறிச் சீவகனைப் பொருது அவளைக் கைக்கொள்ளுமாறேவின்மை காண்க.                    (ருகூ)

முருத்துவாணகைத்துவர்வாய்முகத்தினாளைமூத்தோன்பின்னிறு
த்தியமர்முருக்குமாறு, மருத்துவான்றிருமகனுமருத்தின்செல்வமை
ந்தனுமேபுரிந்திட்டார்மறையோருள்ளா, ருருத்துவாய்மடித்தெழுந்து
கோகுதட்டிட்டூன்றியதண்டெதிரோச்சியுடன்றவேந்தர், கருத்துவார்
தகவெருக்கொண்டோடவோடக்கையுரங்காட்டினர்வளர்த்தகனலேயன்
னார்.

(இ-ள்.) மருத்துவான் திரு மகனும் மருத்தின் செல்வ மைந்தனுமே - இந்திரனது அழகிய குமாரனாகிய அருச்சுனனும் வாயுவினுடைய செல்வத்தையுடையபுத்திரனாகிய வீமனுமே—முருத்து வாள் நகைத் துவர்வாய்முகத்தினாளை - இறகினடிக்குருத்துப்போலுமொளிமிக்க பற்கள் பொருந்திய பவளம் போன்ற வாயையுடைய முகத்தையுடையாளை—மூத்தோன்பின் நிறுத்தி-தமையனாகிய தருமனுக்குப்பின் நிறுத்தி—முருக்குமாறு அமர் புரிந்திட்டார் - அவர்களை அழிக்கும்படி போர்செய்தார்கள்—மறையோருள்ளார் - அப்போது பிராமணராயுள்ளோர்—வளர்த்த கனலே அன்னார் - வளர்த்த அக்கினியையே போன்றவராய்—உருத்து-கோபித்து—வாய் மடித்து எழுந்து கோகு தட்டிட்டு - அதரத்தைமடித்து எழுந்து (வீராவேசத்தாற்) தமதுதோளிற் றட்டி—ஊன்றிய தண்டு எதிர் ஓச்சி-தாங்களூன்றிய தண்டங்களை எதிரேவீசி—உடன்ற வேந்தர் கருத்து வார்தக வெருக்கொண்டு ஓட ஓடக்கையுரங் காட்டினர் - பகைத்த அரசர்கள் மனம்மிக அஞ்சியோடவோடத் தங்கள் கைவலிமையைக் காட்டினார்கள். எ - று.

ஏகாரமிரண்டும் பிரிநிலை. வாய் ஆகுபெயர். அன்னார் வினையெச்சமுற்று. தட்டிட்டு, வார்தக என்பன ஒருசொல்- ஓட ஓட' என்னும் அடுக்கு ஒருதொழில் பலகானிகழ்தல்பற்றி வந்தது. முருந்து என்னு மென்றொடர்க்குற்றியலுகரம் வன்

ருடராயிற்று. வளர்த்தகனல் நெய்முதலிய ஆகுதிகளாலிடைவிடாது சுவாலித் தெரியுமாறுபோல இடைவிடாது கிளருகின்ற கோபமுடையவ ரென்பார் வளர்த் தகனலேயன்னார் என்றார். கோகு-தோள். கோகு தட்டிட்டு என்பதற்கு குடுமியைத் தட்டிமுடித்து எனப்பொருள் கொள்ளுதலுமொன்று. முயற்சியுடையராயொரு தொழிலில் விரைந்துசெல்வார் குடுமிதட்டிமுடிந்துசேறல் வழக்காதலிற் கோகு தட்டிட்டு எனக் கூறினரென்க. "தெய்வமடிதற்றுத்தான் முந்துறும்" எனப் பிறரு மிக்கருத்துப்படக் கூறுதல் காண்க. (சுO)

மிகைத்தமுனிவரர்முனிந்தவுறுதிநோக்கிவென்றெடுத்தவிற்றடக் கைவிசயன்சற்றே, நகைத்துநகைத்தவரவரைவிலக்கியென்முன்னமன் வரினும்பிளப்பலெனநவிலாநின்றான், புகைத்தகனல்விழிக்கன்னன்றரு க்காலெள்ளிப்பூசுரனென்றவமதித்துப்புனைவில்வாங்கி, யுகைத்தபகழியு முகைத்தானுரனுந்தன்கையொருகணையாலுடன்பிளந்தானுருமேறொப் பான்.

(இ - ள்.) வென்று எடுத்த வில் தடக்கை விசயன் - பகைவரைவென்றே ந்திய விற்பொருந்திய பெரிய கையையுடைய அருச்சுனன்—மிகைத்த முனிவரர் முனிந்த உறுதி நோக்கி-மிகுந்த பிராமணர்கள் கோபித்த உறுதியைப் பார்த்து— சற்றே நகைத்து நகைத்து அவரவரை விலக்கி - சற்றே சிரித்துச் சிரித்து அவரவ ரைத் தடுத்து—என்முன் நமன் வரினும் பிளப்பல் என நவிலா நின்றான் - எனக் குமுன்னே யமன்வரினும் அவனைப் பிளப்பேனென்று சொல்லிநின்றான்—புகை த்த கனல் விழிக் கன்னன் - புகைகின்ற கோபாக்கினி பொருந்திய கண்ணையு டைய கன்னனானவன்—தருக்கால் எள்ளி - செருவத்தினால் இகழ்ந்து—பூசுரன் என்று அவமதித்து - பிராமணனென்று மதியாமல்—புனை வில் வாங்கி - அலங்க ரிக்கப்பட்ட வில்லைவளைத்து (ப்பாணத்தைச் செலுத்தினான்)—உகைத்த பகழி யும் உகைத்தான் உரனும் - செலுத்தின பாணத்தையும் செலுத்தின அவனது மார்பையும்—உருமேறு ஒப்பான் - இடியேற்றையொத்த அவ்வருச்சுனன்— தன் கை ஒரு கணையால் உடன் பிளந்தான் - தன் கையிலுள்ள ஒரு பாணத்தால் ஒருசேரப் பிளந்தான். எ - று.

வரினும் என்னும் உம்மை சிறப்பு. பகழியும், உரனும் என்னும் உம்மைகள் சிறப்போடெண்ணுப்பொருள. நகைத்து நகைத்து என்னும் அடுக்கு ஒருதொழில் பலகானிகழ்தல்பற்றி வந்தது. அவரவர் என்னுமடுக்கு மிகுதிபற்றிவந்தது. பாண த்தைச்செலுத்தினான் என்பது வருவிக்கப்பட்டது. உருமேறு, இடையீடின்றி எதிர்ப்பட்டவெவற்றையும் ஒருசேரப் பிளக்குமாறுபோல இவனுந் தனக்கெய்த பகழியையும் அவன் உரனையும் ஒருசேரப் பிளந்தானென்பார் உருமேறொப்பான் என்றார். வென்றெடுத்தவிற்றடக்கைவிசயன் என்பதற்கு எல்லா அரசரையும் வெ ன்று திரௌபதியைக் கைக்கொண்ட விசயனெனினும் அமையும். (சுக)

குன்றான்மெய்வகுத்தனையவீமன்றன்மேற்கொல்லியல்செய்சல்லி யனைக்குத்திவீழ்த்திக், கன்றான்முன்விளவெறிந்தகண்ணனென்னக்கான் முடியொடுறவளைத்துவான்மேல்வீசி, நின்றான்மற்றவனயலேதெறித்து வீழ்ந்துநெஞ்சொடிந்தானிருவருமுன்னில்லாராகி, வென்றாலுந்தோற் றாலும்வசையேவெம்போர்வேதியரோடுடற்றலெனமீண்டுபோனார்.

(இ - ள்.) குன்றால் மெய் வகுத்தனைய வீமன் - மலையால் உடம்பை வகுத் தாற்போன்ற வீமனானவன்—தன்மேல் கொல் இயல் செய் சல்லியனைக்குத்தி வீழ்

த்தி - தன்னிடத்திற் போரைச்செய்கின்ற சல்லியனென்னும் அரசனைக்குத்திவி ழுத்தி—கன்றால் முன் விளவு எறிந்த கண்ணன் என்ன - பசுக்கன்றினால் முன்னே விளாமரத்திற்கு எறிந்த கிருட்டிணரைப்போல—கால் முடியொடு உற வளைத்து வான்மேல் வீசி நின்றான் - கால் தலையோடு பொருந்த வளைத்து அவனை ஆகாய த்தில் வீசிநின்றான்—அவன் அயலே தெறித்து வீழ்ந்து நெஞ்சு ஒடிந்தான் - அச் சல்லியன் பக்கத்திலே துள்ளிவிழுந்து நெஞ்சுமுரிந்தான்—இருவரும் முன் நில்லார் ஆகி - அப்பொழுது அந்தக் கன்னன் சல்லியனென்னுமிருவரும் முன்னிற்க மாட்டாதவர்களாய்—வென்றாலும் தோற்றாலும் வெம் போர் வேதியரோடு உடற்றல் வசையே என - வெற்றியடைந்தாலுந் தோல்வியடைந்தாலும் கொடியபோரைப் பிராமணரோடு செய்தல் வசையே என்று—மீண்டு போனார் - திரும்பிப் போனார்கள். எ - று.

மற்று - அசை. இருவரும் என்னும் உம்மை முற்று. ஏனையவும்மைகளிரண்டும் இழிவு சிறப்போ டெண்ணுப்பொருள. கொல்லியல் ஆகுபெயர். வசையே என்னும் ஏகாரம் தேற்றம். கண்ணனென்ன வீசியென்றியையும். தமக்கு இவரைவெல்லும் ஆற்றலில்லையென்பதை நன்றாயறிந்தும் யுத்தப் பயிற்சியுடையராய் அரசகருமஞ்செய்யும் அந்தணர்போலாது வேதமோதல் தீ வேட்டன்முதலிய சற்கருமஞ்செய்யும் அந்தணராதலில் இவரோடுபொருதல் தகுதியன்றெனக்கருதி நீங்கினாரென ஏனையோர்கருதுமாறு வென்றாலும் வசையேயென்றார். தோற்றாலும் வசையேயென்பது வெளிப்படை. (சுஉ)

வேறு.

வண்ண நூன்முனிவரல்லர்மருத்துவான்மருத்துநல்கு
மண்ணலங்குமரராமென் றயிர்ப்புறுமரசர்யாருங்
கண்ணனால்விலக்கப்பட்டுக்கடிநகர்தோறுந்தங்
ளெண்ணமும்பயனும்வேறாவெய்தினரென்டமன்னோ.

(இ - ள்.) வண்ண நூல் முனிவர் அல்லர் - இவர் அழகிய பூணூலையுடைய பிராமணரல்லர்—மருத்துவான் மருத்து நல்கும் அண்ணல் அம் குமரர் ஆம் என்று - இந்திரனும் வாயுவும்பெற்ற பெருமைபொருந்திய புதல்வராகும் என்று—அயிர்ப்பு உறும் அரசர் யாரும் - சந்தேகத்தைப்பொருந்து மரசரனைவரும்—கண்ணனால் விலக்கப்பட்டு - கிருட்டிணராற் (போரிலே) விலக்கப்பட்டு—தங்கள் எண்ணமும் பயனும் வேறாக் கடி நகர்தோறும் எய்தினர் - தங்கள் நினைவும் அதன் பிரயோசனமும் வேறாகக் காவலையுடைய நகரங்கடோறுஞ் சென்றார்கள். எ - று.

அம் சாரியை. என்ப, மன், ஒ அசைகள். வேறாக என்னும் செயவெனெச்சம் ஈறுதொக்கது. பிராமணராயின் வீரராகிய கன்னன் சல்லியன் என்னு மிவர்களை வெல்லமாட்டார்கள் ; பின் இவர்களை வெல்லவல்லர் அருச்சுனனும் வீமனுமேயென்றறிந்தவராதலில் அயிர்ப்புற்றாரென்பார் குமரராமென்றயிர்ப்புறும் என்றும், கிருட்டிணர் பாண்டவசகாயராதலின் அவரோடு போர்நிகழின் அப்போர் அவர்மணத்திற்கிடையீடாமென்ற கருத்தாலும் ஒருவாறது நிகழினும் தன்கருத்து வாயாதென்ற கருத்தாலும் விலக்கினாரென்பார் கண்ணனால் விலக்கப்பட்டு என்றும், போரைவென்று திரௌபதியை மணஞ்செய்தல் வேண்டும் என்னுங் கருத்திற்குமாறாய்த் தோல்வியடைந்தமையின் எண்ணமும் பயனும் வேறாய் என்றுங் கூறினார். (சுங)

அன்றிலக்கெய்தகோவுந்துணைவருமானவெம்போர்
வென்றுகொற்றவையோடொக்குமின்னிடைப்பொன்னுந்தாமுஞ்
சென்றுமட்கலஞ்செய்கம்மிசெழுமனைமுன்றிலெய்தி
யின்றுபெற்றனமோரையமென்செய்வதிதனையென்றார்.

(இ-ள்.) அன்று இலக்கு எய்த கோவும் துணைவரும் - அன்றைக்கு இலக்கை எய்த அருச்சுனனும் துணைவர்களும்—ஆன வெம் போர் வென்று - நிகழ்ந்த கொடியபோரை வென்று—கொற்றவையோடு ஒக்கும் மின் இடைப் பொன்னும் தாமும் - வீரலக்குமியோடொக்கும் மின்போன்ற இடையையுடைய திரௌபதியுந் தாங்களும்—சென்று மட்கலம் செய் கம்மி செழுமனைமுன்றில் எய்தி - போய் மட்பாண்டங்களைச்செய்யுந் தொழிலையுடைய குயவனது செப்பமாகிய வீட்டுமுற்றத்தையடைந்து—ஓர் ஐயம் இன்று பெற்றனம் இதனை என்செய்வது என்றார் - ஒருபிச்சையை இன்றைக்குப் பெற்றோம் இதனை என்னசெய்வது என்று (தாய்க்குச்) சொன்னார்கள். எ - று.

கம்மி என்பதில் இகரம் பெயர்விகுதி. எதிர்த்த பகைவரைவென்று கைக்கொண்டமையிற் திரௌபதியைக் கொற்றவையோடொச்சு மின்னிடைப் பொன்னென்றார். தாங்கொண்ட பார்ப்பனவேடத்திற்கியைய ஐயமென்று கூறினார்.

உள்ளிருந்தன்னைமைந்தருரைத்தசொற்கேட்டுத்தேவர்
தெள்ளமுதென்னமக்காள்சேரநீரருந்துமென்னப்
புள்ளினமொடுங்குமாலைப்பொழுதிவள்புறம்பரெய்திக்
கள்ளவிழ்கூந்தலாளைக்கரும்பெனவிரும்பிக்கண்டாள்.

(இ - ள்.) மைந்தர் உரைத்த சொல் அன்னை உள் இருந்து கேட்டு - புதல்வர்கள் சொன்னவசனத்தைத் தாயாகிய குந்திதேவி உள்ளேயிருந்து கேட்டு—மக்காள் நீர் தேவர் தெள் அமுது என்னச் சேர அருந்தும் என்ன - புதல்வர்காள் நீவிர் தேவர்களுடைய தெளிந்த அமிர்தத்தைப்போல ஒருங்கு உண்ணுங்களென்று சொல்லி—இவள் - இந்தக் குந்திதேவியானவள்—புள் இனம் ஒடுங்கும் மாலைப்பொழுது புறம்பர் எய்தி - பட்சிக்கூட்டங்கள் ஒதுங்குகின்ற மாலைக்காலத்தில் வெளியேவந்து—கள் அவிழ் கூந்தலாளைக் கரும்பு என விரும்பிக் கண்டாள் - தேன்விரிந்த அளகத்தையுடைய திரௌபதியை இனிமையைத்தருங் கரும்பைக் கண்டதுபோல விரும்பிக்கண்டாள். எ - று.

என்ன எய்தி விரும்பிக் கண்டாள் என்றியையும். தன்புதல்வர்களில் வீமனும் அருச்சுனனும் அவ்விடத்திலுள்ள பிராமணர்களுடைய வீடுகளில் நாடோறுஞ் சென்று அன்னப்பிச்சையேற்றுவந்து துணைவருக்குந் தனக்குங் கொடுத்துண்ணும் வழக்கம்பற்றி, இன்றோரையம் பெற்றனமென்றுகூற, தெள்ளமுதென்னமக்காள்சேரநீரருந்துமென ஆராயாது கூறினாளென்க. இவளுடைய இலக்கணங்களைக் கண்டபொழுதே இவளாற் பெரும்பேறெல்லாம் பின்னுண்டாகுமென்பதை நன்றாயறிந்தவளாதலிற் கரும்பென விரும்பிக்கண்டாள் என்றார். (சுரு)

என்னினைந்தென்சொன்னேன்மற்றென்செய்தேனென்றுசோருமன்னையைவணங்கிநின்சொல்லாரணப்படியதாகு
நின்னினைவன்றுலெங்கணெஞ்சினுநினைவுண்டென்றான்
றன்னிகரிலாதகேள்விசான்றசீர்த்தருமனென்பான்.

(இ - ள்.) என் நினைந்து என் சொன்னேன் - எதைநினைத்து எதைச்சொன்னேன்—மற்று என்செய்தேன் என்று சோரும் அன்னையை - என்னகாரியத்தைச் செய்தேனென்று சோருகின்ற தாயை—தன் நிகர் இலாத கேள்விசான்ற சீர்த் தருமன் என்பான் வணங்கி - தனக்கு உவமையில்லாத கல்விமிக்க புகழையுடைய தருமன் என்பவன் வணங்கி—நின் சொல் ஆரணப்படியது ஆகும்-உனது சொல் வேதத்தின் றன்மையதாகும்—நின் நினைவு அன்றல் - இது உன்னெண்ணமாத்திரமன்று—எங்கள் நெஞ்சிலும் நினைவு உண்டு என்றான் - எங்கள்மனத்தினும் இந்த எண்ணம் உண்டு என்று சொன்னான். எ - று.

மற்று வினைமாற்று. நெஞ்சிலும் என்னும் உம்மை எச்சம். ஒருபெண்ணை நாங்களைவரும் விவாகஞ் செய்வோமென்று தாய்க்குக்கூறில் அது நூல் வழக்கோடும் உலகவழக்கோடும் முரணுமாயினும் முற்பிறப்பிலே சிவபெருமான் றங்களுக்குக்கற்பித்த ஊழின்வயத்தனாய்நின் றிங்ஙனங் கூறினமையின் அவன்கூறியகூற்று வழுவாகாதென்பார் தன்னிக ரிலாத கேள்விசான்ற சீர்த்தருமன் என்றார். (௬௬)

பாரனைத்தினுந்தன்னுமம்பரப்பியபார்த்தனென்னும்
வீரனைப்பயந்தபாவைவிதிவழியிதுவென்றெண்ணி
மாரனுக்கரசுநல்குமங்கையுந்தானுமந்தக்
காரிருட்கங்குன்மைந்தர்கட்டுரைகசிந்துகேட்டாள்.

(இ - ள்.) பார் அனைத்தினும் தன் நாமம் பரப்பிய பார்த்தன் என்னும் வீரனைப் பயந்த பாவை - பூமிமுழுதினுந் தன்பெயரைப் பரவச்செய்த அருச்சுனன் என்னும் வீரனைப்பெற்ற குந்திதேவி—இது விதிவழி என்று எண்ணி-இது ஊழ்வசம் என்று சிந்தித்து—மாரனுக்கு அரசு நல்கும் மங்கையும் தானும் - மன்மதனுக்கு ராச்சியத்தைக் கொடுக்கும் திரௌபதியுந் தானும்—அந்தக் கார் இருட் கங்குல் - அந்தக் கரிய இருளையுடைய இராக்காலத்தில்—மைந்தர் கட்டுரை கசிந்து கேட்டாள் - புதல்வர்சொல்லிய பொருள்பயக்கும் மொழிகளை மனமுருகிக் கேட்டாள். எ - று.

அனைத்தினும் என்னும் உம்மைமுற்று. பாவை ஆகுபெயர். மங்கையுந்தானுங்கேட்டாள் என்பது சிறப்பினு லொருமைமுடிபேற்றது. பாவை என்பதற்கு "இழைத்தபாவையி னிருந்தவர்க்கு" என்பதற்குரைத்தவாறுரைக்க. மன்மதனுக்கடங்காது வேட்கை விடுத்த விழுமியோராளேரும் இவளைக் காணின்வேட்கை வயத்தராய் அவளாலாளப் படுவாரென்பார் மாரனுக்கரசுநல்குமங்கை என்றார். ()

பொற்றொடிக்கனகமாலைப்பொலங்குழைப்பூவைதன்னைப்
பெற்றபூபதியவ்வீரர்பெருமிதவாய்மையெல்லா
மொற்றராலுணர்ந்துநெஞ்சத்துவகையோடையமின்றி
மற்றைநாள்வந்துகொற்றவாண்மனைகொண்டுபுக்கான்.

(இ - ள்.) பொற்றொடிக் கனகமாலைப் பொலம் குழைப் பூவைதன்னைப் பெற்ற பூபதி - பொன்னாலாகிய வளையலையும் பொன்னரிமாலையையும் பொற்காதணியையும் உடைய திரௌபதியைப்பெற்ற யாகசேனன்—அவ்வீரர் பெருமிதவாய்மை எல்லாம் ஒற்றரால் உணர்ந்து - அப்பாண்டவர்களுடைய மேன்மை

யாகிய உண்மைகளை யெல்லாம் ஒற்றர்களால் அறிந்து—ஐயம் இன்றி - சந்தேகமின்றி—நெஞ்சத்து உவகையோடு - மனச் சந்தோஷத்தோடு—மற்றைநாள்வந்து கொற்ற வாழ் மனைகொண்டு புக்கான் - மற்றைநாள்வந்து வெற்றியையுடைய தான் வாழ்கின்ற மாளிகைக்கு அவர்களை யழைத்துக்கொண்டு போனான். எ - று.

பூவை ஆகுபெயர். "ஐம்மூன்றதாமுடல் - மம்மேல்வரி னிருமூன்றதாமுடல்" என்னும் வீரசோழிய விதிபற்றி வாண்மனையென ழகரம்ணகரமாயிற்று. கொற்றமனை என்பதைச் சினவேல் என்பதுபோற் கொள்க. ஒற்றுவராவார் ஒற்றப்படுவாராயிராதபடி மறைந்த வடிவோடு சென்று அவரியல்பையறியுமவரென்க. மறைந்துவந்து வில்வளைத்திலக்கு வீழ்த்தவன் அவ்வருச்சுனன்போலும் என்றையுற்றவன் ஒற்றரால் அவனேயெனத்தெளிந்து மகிழ்ந்தானென்பார் ஒற்றராலுணர்ந்து நெஞ்சத்துவகையோடையமின்றி என்றார். (சுஅ)

அடுத்தபல்பொருளும்வைக்கவாயுதமன்றிவேறொன்
றெடுத்திலரென்றும்வேதமுனிவரரல்லரென்றுங்
கொடுத்தனசிறப்பினோடுங்குருமணித்தவிசினேற்றித்
தொடுத்ததார்க்குருக்களென்றேதுணிந்தனன்யாகசேனன்.

(இ - ள்). யாகசேனன் - யாகசேனனானவன்—அடுத்த பல் பொருளும் வைக்க - இயைந்த பலபொருள்களையும் வைக்க—ஆயுதம் அன்றி வேறு ஒன்று எடுத்திலர் என்றும் - அவர்கள் ஆயுதங்களையே யல்லாமல் வேறொன்றையும் எடுத்திலர்கள் என்றமையினாலும்—வேத முனிவரர் அல்லர் என்றும் - (தம் சுயவடிவத்தைக் காட்டினமையின்) வேதத்தையுடைய பிராமணரல்லரென் றறிந்தமையினாலும்—கொடுத்தன சிறப்பினோடும் குருமணித் தவிசின் ஏற்றி-கொடுக்கப்பட்ட வரிசைகளோடும் நிறம் விளங்குகின்ற இரத்தினங்க ளழுத்திய ஆசனத்திலேற்றி—தொடுத்த தார்க் குருக்கள் என்றே துணிந்தனன் - தொடுக்கப்பட்ட மாலையை யணிந்த குருகுலகுமாரர் என்றே அவர்களை நிச்சயித்தான். எ - று.

ஏகாரம் தேற்றம். பொருளும் என்னும் உம்மை முற்று. கொடுத்தன வினைமுற்றுப் பெயரெச்சம் வைத்தபல் பொருள்களுள்ளும் ஆயுதங்களையே எடுத்தமையினாலும் சுயவடிவத்தைக் காட்டினமையினாலும் குருக்களென்றறிந்தான். சாதி தருமத்தாலும் பண்டைப்பயிற்சி வயத்தாலும் ஆயுதத்தை மாத்திரம் பாண்டவரெடுத்தாரென்க. (சுகூ)

கைவருசிலையின்வென்றுகைப்பிடித்தவனுக்கின்றே
மைவருகண்ணினாளைவதுவைசெய்திடுதுமென்ன
நெய்வருமுனைகொள்கூர்வேனிருபனைநோக்கியாங்க
ளைவரும்வேட்டுமென்றனசைவிலாவறத்தின்மைந்தன்.

(இ - ள்.) கைவரு சிலையின் வென்று கைப்பிடித்தவனுக்கு - தனக்குக்கை வந்த விற்றொழிலினாலே வென்று கைப்பற்றினவனுக்கு—இன்றே - இன்றைக்கே—மைவரு கண்ணினாளை வதுவை செய்திடுதும் என்ன - மைவந்து குடிகொண்ட கண்ணையுடைய திரௌபதியை மணம்புணர்த்துதும் என்று யாகசேனன் சொல்ல—அசைவு இலா அறத்தின் மைந்தன்-தளர்வில்லாத தருமபுத்திரன்—நெய்வரு முனைகொள் கூர்வேல் நிருபனை நோக்கி - நெய்பூசிய நுதி பொருந்திய

கூரியவேலையுடைய யாகசேனனைப்பார்த்து—யாங்கள் ஐவரும் வேட்டும் என்றான் - நாங்களைவரும் இவளை விவாகஞ் செய்குதும் என்று சொன்னான். எ - று.

ஏகாரம் தேற்றம். வேட்டும் தன்மைப்பன்மைமுற்று. சிலை ஆகுபெயர். இலாத என்னும் பெயரெச்சத் தீறுதொக்கது. மகளிருடைய கண்ணைச் சிறப்பிக்கும் மை இவள் கண்ணைச்சேர்ந்து தான் சிறப்புறல்வேண்டுமென்று வந்து குடிகொண்ட கண்ணெனன்பார் மைவருகண்ணிஞள் என்றும், எதிர்த்த பலகவரைத் தப்பாது முருக்குமாற்றலுடைய அரசனென்பார் நெய்வருமுனைகொள் கூர்வேனிருபன் என்றும், அவ்வாற்றலுடையான் முன்னும் உன்மகளை நாங்களைவரும் விவாகஞ் செய்வோமென்று அஞ்சாதுகூறிய மனத்திட்ப முடையான் என்பார் அசைவிலாவறத்தின் மைந்தன் என்றுங்கூறிஞர். மைவருகண்ணிஞள் எனவிதந் தமையிற் பெறுதற்கரியளென்பது பெறப்பட்டது. கைவருசிலை என்பதற்குக் கையிற்பொருந்திய வில்லு எனப்பொருள்கொள்ளினும் பொருந்தும். (எ0)

தருமன்மாமதலைசொல்லாற்றளர்வுறுகாலைமாலை
நிருபநின்மனத்திலையநீக்குகநீக்குகென்ஞத்
துருபதன்முன்னர்வந்துதோன்றினன்சுருதியாவும்
விரைமலர்விதியின்மிஞ்சவிதித்தருள்வியாதனென்பான்.

(இ - ள்) தருமன் மா மதலை சொல்லால் தளர்வு உறுகாலை - (யாகசேனஞனவன்) பெருமைபொருந்திய தருமபுத்திரன் சொன்ன சொல்லால் வருத்தமுறுஞ்சமயத்தில்—சுருதி யாவும் விரைமலர் விதியின் மிஞ்ச விதித்தருள் வியாதன் என்பான் - வேதங்க ளனைத்தையும் வாசனைபொருந்திய தாமரைமலரிலிருக்கின்ற பிரமனிலும் மேற்படப் பகுத்தருளிய வியாத முனிவஞனவன்—மாலை நிருப நின் மனத்தில் ஐயம் நீக்குக நீக்குக என்ஞ - மாலையையணிந்த அரசனே உன்மனத்தில் நிகழுஞ்சந்தேகத்தினை ஒழிக்குக ஒழிக்குக என்றுசொல்லி—துருபதன் முன்னர் வந்து தோன்றினன் - அவ்வியாகசேனனுக்கு முன்னேவந்து தோன்றிஞன். எ - று.

நீக்குக நீக்குக என்னும் அடுக்கு விரைவுபற்றிவந்தது. விதியின் என்னும் இன்னுருபு நீக்கப்பொருட்டு. (எக)

தொழுதுபொற்றவிசினேற்றிச்சூழ்ந்தனனிருந்துகேட்ப
முழுதுணர்கேள்விஞானமுனிகுலத்தரசுபோல்வான்
பழுதறுகன்னிதன்னைப்பாண்டவரைவருக்கு
மெழுதருமறையின்வேள்வியியற்றுதற்கியற்கைகேண்மோ.

(இ - ள்.) சூழ்ந்தனன் தொழுது பொற்றவிசின் ஏற்றி-(வியாதமுனிவனைப்) பிரதக்ஷிணஞ்செய்து வணங்கிப் பொன்ஞலாகிய ஆசனத்தில் இருத்தி—இருந்து கேட்ப - தானுமிருந்துகேட்ப—முழுது உணர் கேள்வி ஞான முனிகுலத்து அரசு போல்வான் - எல்லாவற்றையுமறிந்த கல்வியையும் ஞானத்தையுமுடைய இருடிகுலத்துக்கு ஒரு அரசுபோன்ற அம்முனிவன்—பழுது அறு கன்னிதன்னை - குற்றமில்லாத இப்பெண்ணை—பாண்டவர் ஐவருக்கும் எழுது அரும் மறையின் வேள்வி இயற்றுதற்கு - பாண்டவர்களைவருக்கும் எழுதுதலரிய வேதவிதிப்படி விவாகஞ் செய்தற்கு—இயற்கை கேள் - ஏதுவைப் பாஞ்சாலராசனே கேள். எ - று.

மோ - முன்னிலையசை. சூழ்ந்தனன்- வினையெச்சமுற்று. எழுது என்பது முதனிலைத்தொழிற்பெயர். எழுத என்னும் வினையெச்சத்தீறு தொக்கதெனினு மமையும். ஐவருக்கு முரியளாதலினால் இவள்பெண்மை பழுதடையா வதனால் மேன்மையே யடையுமென்பான் பழுதறுகன்னி என்றான். (எஉ)

வேறு.

மூளாரழலுற்பவித்தாளிவண்முற்புவத்தி
னாளாயனியென்றுரைசால்பெருநாமமிக்காள்
வாளார்தடங்கணவட்காரணவாணர்க்கென்றுங்
கேளானமௌற்கல்லியனென்பவன்கேள்வனானான்.

(இ - ள்.) மூள் ஆர் அழல் உற்பவித்தாள் இவள் - மூளுகின்ற நிறைவாகிய யாகாக்கினியிற் றோன்றிய இவள்—முன் பவத்தில் - முற்பிறப்பில்—நாளாயனி என்று உரைசால் பெரும் நாமம் மிக்காள் - நாளாயனியென்று புகழ் நிறைந்த பெருமையாகிய பெயராற் சிறந்தவள்—வாள் ஆர் தடம் கண் அவட்கு - வாள் போன்ற விசாலமாகிய கண்ணையுடைய அவளுக்கு—ஆரணவாணர்க்கு என்றும் கேள் ஆன மௌற்கல்லியன் என்பவன் கேள்வன் ஆனான் - முனிவர்களுக்கு என்றைக்குந் தலைமையைப் பொருந்திய மௌற்கல்லிய முனிவன் என்பவன் நாயகனாயினான். எ - று.

வாளார் என்பதில் ஆர் உவமவுருபு. உற்பவித்தாள் பெயரெச்சமுற்று. முற்பிறப்பில் இவள் கற்பிற்சிறந்த மகளிரெல்லாரினுங் கற்பிற்சிறந்து விளங்கினமையின் இவட்குரிய நாளாயனியென்னும் பெயர் எவரானும் புகழப்பட்டுப் பெருமையடைந் திருந்ததென்பான் நாளாயனியென்றுரைசால் பெருநாமம் என்றான். ()

காதிற்கலந்தகடைக்கண்ணிதன்கற்புமன்புஞ்
சோதித்தலுன்னித்தணியாததுவக்குநோயன்
கோதித்தநெஞ்சன்பெருமூப்பினன்கூர்ந்துநாளும்
வாதித்தலன்றிமகிழாமனைவாழ்வுபூண்டான்.

(இ - ள்.) காதிற் கலந்த கடைக்கண்ணிதன் கற்பும் அன்பும் சோதித்தல் உன்னி - (அவன்) காதையளாவிய கடைக்கண்ணை யுடையாளது கற்பையும் (தன் மேல்வைத்த) அன்பையுஞ் சோதித்தலை நினைத்து—தணியாத துவக்கு நோயன் - தீராத பெருவியாதியுடையனாய்—கோதித்த நெஞ்சன்-கொதித்த மனத்தையுடையனாய்—பெரு மூப்பினன் - மிக்க வயோதிகத்தை யுடையனாய்—கூர்ந்து நாளும் வாதித்தல் அன்றி - மிகுந்து நாடோறும் (மனையாளை) வருத்தப் படுத்துதலேயன்றி—மகிழா மனைவாழ்வு பூண்டான் - சந்தோஷ மில்லாத இல்லறத்தைப் பொருந்தினான். எ - று.

நோயன், நெஞ்சன், மூப்பினன் என்பன வினையெச்சமுற்றுக்கள். மகிழாத என்னும் பெயரெச்சத்தீறுதொக்கது. கொதித்தல் கோதித்தல் என முதனீண்டது. (எச)

கச்சிற்கடங்காமுலையாளக்கணவனுண்ட
மிச்சிற்புறத்துவிரல்வீழவும்வீழ்தன்மிஞ்சிக்
குச்சித்தலின்றிநுகர்ந்தாள்கொடுங்காமநோய்கொண்
டிச்சித்தவின்பநுகராமலிளைத்தமெய்யாள்.

(இ - ள்.) கச்சிற்கு அடங்கா முலையாள் - கச்சினுக்கடங்காத முலையினையுடைய நாளாயனி—கடும் காமநோய்கொண்டு இச்சித்த இன்பம் நுகராமல் இளைத்த மெய்யாள் - கொடிய காமநோயைப்பொருந்தித் தான் விரும்பிய இன்பத்தை அனுபவியாமல், மெலிந்த உடம்பையுடையளாய்—அக் கணவன் உண்ட மிச்சிற் புறத்து விரல் வீழவும் - அந்நாயகன் உண்டசேடத்தில் (அழிந்த) விரல் விழவும்—வீழ்தல் மிஞ்சிக் குச்சித்தல் இன்றி நுகர்ந்தாள் - விருப்பம் மிகுந்து அருவருப்பின்றி அச்சேடத்தை உண்டாள். எ - று.

வீழவும் என்னும் உம்மை சிறப்பு. மெய்யாள் வினையெச்சமுற்று. அடங்காத என்னும் பெயரெச்சத்தீறு தொக்கது. குத்சிதம் குச்சிதம் எனத் தற்பவமாயிற்று. நாயகனோடனுபவிக்கும் புணர்ச்சியின்பங்காரணமாக அவனிற் பற்றுவைத்தாளல்லள், இயற்கையாகவே அவனிற் பற்றுவைத்தாளென அவள் கற்பின் மிகுதியை உணர்த்துவானாய்க் கொடுங்காமநோய் கொண்டிச்சித்தவின்ப நுகராமலிளைத்தமெய்யாளென்றும், இவள் காமவின்பமனுபவிக்கத்தக்க பருவத்தினும் இங்ஙனமிருந்தாளென்பான் காதிற்கலந்த கடைக்கண்ணி என்றும் கச்சிற்கடங்காமுலையாளென்றுங் கூறினன். (எரு)

அன்பன்றெரிவைவழிபாடுகண்டார்வமெய்தித்
துன்பம்பயந்தபிணியாலழிதோற்றமாற்றித்
தன்பங்கையீசன்றிறைநல்கமுன்சாபம்வாங்கும்
வன்பன்றனக்குங்கிடையாதவடிவுகொண்டான்.

(இ - ள்.) அன்பன் - நாயகனாகிய அம்முனிவன்—தெரிவை வழிபாடு கண்டு ஆர்வம் எய்தி - தன்மனைவியினுடைய வழிபாட்டைக்கண்டு அவளில் விருப்பம் பொருந்தி—துன்பம் பயந்த பிணியால் அழி தோற்றம் மாற்றி - துன்பத்தைத்தந்த பெருவியாதியினால் (இயல்பு) அழிந்த வடிவத்தை நீக்கி—ஈசன் முன் தன் பங்கைத் திறை நல்க - சிவபெருமான் முற்காலத்திற்றமது ஒருபாகத்தைப் (பார்வதியாருக்குத்) திறையாகக்கொடுக்க—சாபம் வாங்கும் வன்பன் றனக்கும் - வில்லைவளைத்த வலிமையையுடைய மன்மதனுக்கும்—கிடையாத வடிவுகொண்டான்- பெறுதற்கரிய வடிவத்தைப்பொருந்தினன். எ - று.

வன்பன்றனக்கும் என்னும் உம்மை சிறப்பு. மன்மதனுக்கஞ்சி உமைக்குத் தன்பங்கைக் கொடுத்தாரன்றித் தானாய்க் கொடுத்திலர் என்பான் திறை நல்க என்றான். (எசு)

மின்னேயுனக்குமிகுகற்புடைமீனுமொவ்வா
ளின்னேவரம்வேண்டுவவேண்டுகவீண்டையென்ன
நின்னேயமென்றும்பிரியாநலனேர்கவென்று
டன்னேரிலாதமனைவாழ்விற்றவத்தின்மிக்காள்.

(இ - ள்.) மின்னே - மின்போல்வாளே—உனக்கு மிகு கற்பு உடை மீனும் ஒவ்வாள் - உனக்கு மிக்க கற்பையுடைய அருந்ததியும் நிகராகாள் - இன்னே ஈண்டை வேண்டுவ வரம் வேண்டுக என்ன - இப்பொழுதே இவ்விடத்தில் நீ விரும்பிய வரத்தை வேண்டுக என்றுசொல்ல—தன் நேர் இலாத மனைவாழ்வில் தவத்தில் மிக்காள் - தனக்கு ஒப்பில்லாத இல்லறத்திலிருந்து செய்கின்ற தவத்தான் மிக்க நாளாயனி என்பவள்—நின் நேயம் என்றும் பிரியா நலம் நேர்க

என்றாள் - உன்னிடத்தில் வைத்த அன்பு எந்நாளும் நீங்காத வரத்தைத்தருக என்றாள். எ - று.

மீனும் என்னும் உம்மை சிறப்பு. பிரியாத என்னும் பெயரெச்சத்தீறுதொக்கது. மின் ஆகுபெயர். ஈண்டை என்பதில் ஐ சாரியை. நுடக்கமும் ஒளியும் உடையாளேயென அவளையுவப்பித்தல் காரணமாக மின்னேயென்றும், கற்பிற் சிறந்த அருந்ததியுந் தனது நாயகன்சொல்லாற் கற்போல நெடுங்காலமசைவின்றி நிற்றன்மாத்திரையேயன்றி நின்போல மிச்சிற்புறத்தேவிரலழிந்து வீழவும் குச்சித்தலின்றி நுகர்தலாகிய அருஞ்செய்கை செய்யாமையின் அவள் கற்பின் உன்கற்புச்சிறந்ததென்பான் உனக்கு மிகுகற்புடைமீனு மொவ்வாளென்றுங் கூறினான். மனைவாழ்விற்றவமாவது கணவனை வழிபட்டொழுகி அவன் பணியிற்றவறாமை முதலாயின. மனைவாழ்வில் தவத்தில் என்பதற்கு மனைவாழ்விலுந் தவத்திலும் எனப் பொருள் கொள்ளினு மமையும். (எஎ)

குன்றுநதியுமரனும்பைங்கொடியுமாகித்
துன்றுந்துணையாய்ப்பலயோனிகடோறுமெய்தி
நின்றுஞ்சரித்துமரும்போகநெடிதுதுய்த்தா
ரென்றும்பிரியாதிருவோருமிதயமொத்தே.

(இ - ள்.) இருவோரும் என்றும் பிரியாது இதயம் ஒத்து - அவரிருவரும் எப்பொழுதும் ஒருவரையொருவர் பிரியாமல் மனமொத்து—குன்றும் நதியும் மரனும் பைங்கொடியும் ஆகி - மலையும் நதியும் மரமும் பசியகொடியுமாய்—பல யோனிகள்தோறும் எய்தி - பலயோனிகடோறும் பொருந்தி—துன்றும் துணையாய் - இன்றியமையாத துணையாய்—நின்றும் சரித்தும் அரும் போகம் நெடிது துய்த்தார் - நின்றும் இயங்கியும் அரியபோகத்தை நெடுங்காலமனுபவித்தார்கள். எ-று.

ஏ - அசை. நின்றும், சரித்தும் என்னும் உம்மைகள் எண்ணோடு சிறப்பு. அவன் குன்றாயின் இவள் நதியாயும் அவன் மரனாயின் இவள் கொடியாயும் இவ்வாறே ஒவ்வொரு யோனியினும் ஒருவரையொருவர் பிரியாதிருந்தாரென்க. இருதலைப்புள்ளி னோருயிர்போல இருவருந் தம்முளொத்தனுபவித்தபோகம் என்பான் அரும்போகம் என்றான். (எஅ)

இந்தப்பிறப்பினலமெய்தியிறந்தபின்னுஞ்
சிந்தித்தவண்ணமிவளிந்திரசேனையாகி
யந்தப்பதியையடைந்தாண்மற்றவனுமஞ்சி
வந்தித்ததொல்லையருமாதவமன்னிநின்றான்.

(இ - ள்.) இந்தப் பிறப்பில் நலம் எய்தி இறந்த பின்னும் - இந்தப் பிறவியில் (முற்கூறியபடி மலைமுதலிய பலவடிவங்களையெடுத்து) இன்பத்தையனுபவித்து இறந்தபின்பும்—இவள் இந்திரசேனை ஆகி - இவள் இந்திரசேனை யென்பவளாய்—சிந்தித்தவண்ணம் அந்தப் பதியை அடைந்தாள் - தான் நினைத்தபடி அந்த நாயகனாகிய மௌத்கல்லியனையடைந்தாள்—அவனும் அஞ்சி - அவனும் (முத்தியிலாசையுடைமையினால் இவளைச்சேர்தற்கு) அஞ்சி—வந்தித்த தொல்லை அரு மாதவம் மன்னி நின்றான் - (கடவுளை) வழிபடுகின்ற பழைய அருமையாகிய பெரிய தவத்தில் நிலையுற்றுநின்றான். எ - று.

மற்று அசை. பின்னும் என்னும் உம்மை எச்சம். அவனும் என்னும் உம்மை சிறப்போ டெச்சம். வந்தித்த என்பது காலமயக்கம். (எகூ)

அன்னோனகலவவன்மேலவளாசைமிஞ்சி
யென்னோபுரிவதினியென்றலுமேந்தல்கூற்றாற்
றன்னோர்வடிவினொருகூறொருதையலாளு
முன்னோனைநோக்கித்தவஞ்செய்தனண்மூரல்வாயாள்.

(இ - ள்.) அன்னோன் அகல - அவன் தன்னைப்பிரிய—அவள் அவன்மேல் ஆசை மிஞ்சி - அவள் அவனில் விருப்பம்மிகுந்து—இனிப் புரிவது என்னோ என்றலும் - (உன்னைப்பிரிந்து)இனி நான் செய்வதென்னையோ என்று வினவுதலும்—ஏந்தல் கூற்றால் - (நீ என்தவத்திற்கு ஊறுசெய்கின்றமையால் மானுடயோனியிற்பிறந்து ஐந்துபுருஷரைச் சேரக்கடவை என்று) மௌற்கல்லியமுனிவன்சொன்ன சாபவசனத்தினால்—மூரல் வாயாள் - (இப்பெரியோன் சொன்னசொற் றவறினனே என்றமையாற்) சிரிப்புப்பொருந்திய வாயையுடைய அவள்—தன் ஓர் வடிவின் ஒரு கூறு - தம்முடைய திருவுருவத்தின் ஒருபாகத்தை—ஒரு தையல் ஆளும் முன்னோனை நோக்கித் தவம் செய்தனள் - பார்வதியாராகிய ஒரு பெண் ஆட்சிசெய்கின்ற எவர்க்கும் முதல்வராகிய சிவபெருமானைநோக்கித் தவஞ் செய்தாள். எ - று.

ஆளும் என்னும் பெயரெச்சம் முன்னோன் என்னும் நிலப்பெயர்கொண்டது. திறைநல்க என முற்கூறியதற் கியைய ஈண்டு ஆளும் என்ற வினைகொடுத்தார். இவட்கு ஈண்டுத்தோன்றிய நகை எள்ளல்பற்றிவந்ததென்க. (அ0)

ஐந்தானனத்தோனருள்செய்யவழகின்மிக்கா
ளைந்தானசொல்லாற்கணவற்றருகையவென்று
ளைந்தானசொல்லானளித்தான்மற்றவனுமுன்னா
ளைந்தானபோகமிவளெய்தியவாறறிந்தே.

(இ - ள்.) ஐந்து ஆனனத்தோன் அருள் செய்ய - ஐந்துமுகங்களையுடைய சிவபெருமான் (வெளிப்பட்டு) கிருபைசெய்தருள—அழகின் மிக்காள் - அழகிற் சிறந்த இந்திரசேனையானவள்—ஐந்தான சொல்லால் ஐய கணவன் தருக என்றாள் - ஐந்துமுறை சுவாமீ நாயகனைத் தருக என்று வேண்டிக்கொண்டாள்—அவனும் - அந்தச் சிவபெருமானும்—இவள் முன்னாள் ஐந்து ஆனபோகம் எய்தியவாறு அறிந்து - இப்பெண்ணானவள் முற்காலத்தில் தன் நாயகனாகிய மௌற்கல்லிய முனிவனுடைய சாபத்தினால் ஐந்தாகிய போகத்தைப் பொருந்தியபடியை அறிந்து—ஐந்து ஆன சொல்லான் அளித்தான் - ஐந்துமுறை இவள் வேண்டிக் கொண்ட சொல்லினால் ஐந்துநாயகர்களைக் கொடுத்தருளினார். எ - று.

மற்று, ஏ அசைகள். அவனும் என்னும் உம்மை சிறப்போடெச்சம். ஐந்தான போகம் - ஐந்து நாயகர்களோ டனுபவிக்கு மின்பம். இச்செய்யுள் சொற்பொருட் பின்வருநிலை என்னுமலங்காரம். (அக)

முன்னின்றதேவன்மொழியின்படிகங்கைமூழ்கித்
தன்னந்தனிநின்றழுகின்றவத்தையல்கண்ணீர்
பொன்னங்கமலவனமானபுதுமைநோக்கி
யென்னென்றிவளையிமையோர்பதியெய்தினனே.

(இ - ள்.) முன் நின்ற தேவன் மொழியின்படி - தனக்கு முன்னேநின்ற சிவபெருமான் (நீ இந்தக் கங்கையிலே முழுகிப் புறப்படும்போது உனக்கெதிரே எவன் தோற்றப்படுகின்ருனே அவனை நம்மாட்டழைத்துவருவாய் என்று) அருளிச்செய்த திருவாக்கின்படி—கங்கை மூழ்கி - கங்கையில் ஸ்நானஞ்செய்து—தன்னந்தனி நின்று அழுகின்ற அத் தையல் கண்ணீர் - (ஒருவரையுங் காணுமையால்) தன்னந்தனியேநின்றுஅழுகின்றஅப்பெண்ணினுடைய கண்ணீரெல்லாம்—பொன் அம் கமல வனம் ஆன - பொற்ருமரைக் காடாயின—புதுமை நோக்கி - அந்தப்புதுமையைப் பார்த்து—இமையோர் பதி என் என்று இவளை எய்தினன் - இந்திரன் இஃதென்ன ஆச்சரியம் என்று இவளையடைந்தான். எ - று.

அம் சாரியை. ஏ அசை. தன்னந்தனி - மிக்கதனிமை. ஆன என்பதைப் பெயரெச்சமாக்கிப் பொருள் கொள்வாருமுளர். (அஉ)

அவனைத்தொடர்பால்வருகென்னவவனுமாங்கட்
சிவனைச்சிறிதுமதியாதெதிர்சென்றகாலை
யிவனுக்கென்மேன்மையெனச்சீறலுமெஞ்சினன்போற்
புவனத்தெவருநகையாடப்புலம்பிவீழ்ந்தான்.

(இ - ள்.) அவனை - தன்முன்வந்த இந்திரனை—தொடர்பால் வருக என்ன - (சிவபெருமான் அருளிச்செய்த திருவாக்கின்) சம்பந்தத்தால் வருக என்று (இந்திரனை) அழைக்க—அவனும் - அவ்விந்திரனும்—ஆங்கண் - அவ்விடத்தில்—சிவனைச் சிறிதும் மதியாது எதிர் சென்றகாலை - சிவபெருமானைச் சற்றேனும் மதியாமல் எதிரேபோன பொழுதில்—இவனுக்கு மேன்மை என் எனச் சீறலும் - இவனுக்கு (நம்மை மதியாத) மேன்மை என்னை என்று சிவபெருமான் கோபிக்கவும்—புவனத்து எவரும் நகை ஆட - உலகத்திலுள்ளோரெவருஞ் சிரிக்க—புலம்பி எஞ்சினன்போல் வீழ்ந்தான் - அஞ்சி இறந்தவன் போல் அவன் விழுந்தான். எ - று.

அவனும் என்னும் உம்மை சிறப்போடெச்சம். நமது தொண்டரின் காற்றூளியளவுமிலனுய்த் தோன்றிக் கணத்திலழியும் மின்போல நிலையுதலில்லாச் செல்வத்தை நிலைபுதலுடைத்தெனமதிக்கு முழுமகனும் பற்பலமாற்ருரா லலைப்புண்டு தீராவிடரை யனுபவிக்கும் வலியிலனுமாகிய இவ்விழிவரவுடையானுக்கும் ஒருமேன்மையுண்டோவென்பார் இவனுக்கென்மேன்மை என்ருர். எவரும்அஞ்சியொழுகற்பாலராகிய கடவுளை மதியா தெதிர்சென்று தண்டிக்கப்பட்டமையின் எவரும் நகையாடினுரென்க. (அங)

வெவ்வாயுதங்களுதவாமல்விபுதநாத
னிவ்வாறுவீழமழுவாளியிமைப்பின்மீண்டு
மவ்வாசவற்குப்பிலமொன்றிலடைந்தவச்சிரக்
கைவாசவர்களொருநால்வரைக்காட்டினனே.

(இ - ள்.) வெவ் ஆயுதங்கள் உதவாமல் - சிவபெருமான் கொடிய ஆயுதங்களைச் செலுத்தாமல்—விபுதநாதன் இவ்வாறு வீழ - இந்திரன் இந்தப்பிரகாரம் விழ—மழுவாளி இமைப்பில் - மழுப்படையை யுடைய அவர் ஒருமாத்திரைப் பொழுதில் — மீண்டும் - திரும்பவும் — அவ் வாசவற்கு - அந்த இந்திரனுக்கு

—பிலம் ஒன்றில் அடைந்த வச்சிரக்கை வாசவர்கள் ஒரு நால்வரைக் காட்டினன் - (மலையின்கீழ்ப்பொருந்திய) பிலமொன்றில் (இந்த இந்திரனைப்போலத் தவறுசெய்தமையால்) வந்திருந்த குலிசத்தையேந்திய கையையுடைய இந்திரர் நால்வரைக் காண்பித்தார். எ - று.

ஏ - அசை. மீண்டும் என்னும் உம்மை எச்சம். (அச)

வன்பாதலத்தில்வருநால்வரும்வானின்வந்த
புன்பாகசாதனனுந்தன்னடிபோற்றிநிற்ப
வன்பான்மகிழ்நரிவட்கைவருமாதிரென்று
மென்பாவைபங்கன்விதிக்கப்புவிமீதுவந்தார்.

(இ - ள்.) வன் பாதலத்தில் வரும் நால்வரும் - கொடிய பிலத்தில்(முன்) வந்திருந்த நான்கிந்திரரும்—வானில் வந்த புன் பாகசாதனனும் - (அப்பொழுது) சுவர்க்கத்தினின்றும்வந்த எளிமையையடைந்த இந்திரனும்—தன் அடிபோற்றி நிற்ப-தம்முடைய திருவடிகளைத் துதித்துநிற்க—மென் பாவை பங்கன் - மெல்லிய பார்வதியாரை ஒருபாகத்திலுடைய சிவபெருமான்—ஐவரும் அன்பால் இவட்கு மகிழ்நர் ஆதிர் என்று விதிக்க - நீங்களைவரும் அன்புடன் இவளுக்கு நாயகராகுதிரென்று பணிக்க—புவிமீது வந்தார் - அப்டணியின்படி அவர்கள் பூமியில் அவதரித்தார்கள். எ - று.

நால்வரும் என்னும் உம்மை முற்றுமைபொருட்டு. குற்றஞ்செய்தோர் துயரனுபவித்தற்கிடமாதலிற் பாதலத்தை வன்பாதலமென்றும், சிவபெருமானை மதியாமையாகிய பெருந்தவற்றைச் செய்தமையின் விண்ணுலகாளும் பெருந்தகைமையுடையானைப் புன்பாகசாதனன் என்றுங்கூறினர். (அரு)

தருமன்பவனன்றினநாதன்றனயர்தம்பால்
வருமிந்தநால்வரவர்நால்வருமாலைமார்பா
தெருமந்தவிந்தச்சிலைவீரனித்தேவர்க்கெல்லாம்
பெருமன்பிறப்பிற்கவனேமுன்பிதாவுமானன்.

(இ - ள்.) மாலை மார்பா - மாலையையணிந்த மார்பையுடைய அரசனே—தருமன் பவனன் தினநாதன் தனயர் தம்பால் வரும் இந்த நால்வர் - யமன் வாயுதேவன் சூரியனுடைய புதல்வர்களாகிய தேவமருத்துவர் ஆகிய இவர்களிடத்தில் அவதரித்த இந்த நால்வரும்—அவர் நால்வரும் - பிலத்தில் முன் வந்திருந்த அந்த நான்கிந்திரர்களுமே—தெருமந்த இந்தச் சிலை வீரன் - (பகைவர் மனஞ்) சுழலுதற்குக் காரணமாகிய இந்த வில்லைக் கையிலேந்திய வீரன்—இத்தேவர்க்கு எல்லாம் பெருமன் - இந்தத் தேவர்களுக்கெல்லாந் தலைவன்—பிறப்பிற்கு அவனே முன் பிதாவும் ஆனன் - தன்பிறப்பிற்கு அவனே முன்னர்ப் பிதாவுமாயினன். எ - று.

ஏகாரம் பிரிநிலை. பிதாவும் என்னும் உம்மை எச்சம். தெருமந்த என்னும் பெயரெச்சம் சிலையென்னுங் கருவிப்பெயர்கொண்டது. இத்தேவர் என்னும் அண்மைச்சுட்டு, தருமன் பவனன் றினநாதன் றனயர் என முற்கூறிய தேவரை யுணர்த்திற்று. ஏனை நான்கிந்திரர்களும் யமன்முதலிய நான்குதேவர்களின் கலையாலவதரிக்க; இவன் தன்கலையாலவதரித்தமையிற் பிறப்பிற்கவனே முன்பிதாவுமானன் என்றார். (அசு)

இம்மாதுதொல்லையருமாதவத்தெல்லைகண்ட
வம்மாதிவள்காதலரைவருமாகவென்று
தெம்மாதர்முற்பூண்கவர்மன்னன்றெளியுமாறு
வெம்மாதவத்தோன்பெருஞானவிழியுமீந்தான்.

(இ - ள்.) இம் மாது - இந்தத் திரௌபதியானவள்—தொல்லை அரு மாதவத்து எல்லை கண்ட அம் மாது - முற்பிறப்பில் அரிய பெரிய தவத்தினெல்லையைக்கண்ட அந்த இந்திரசேனை—ஐவரும் இவள் காதலர் ஆக என்று - ஆதலால் இந்தப் பாண்டவரைவரும் இவளுக்கு நாயகராகுக என்று கூறி—வெம் மாதவத்தோன் - (பெரியோரால்) விரும்பப்படும் பெருந்தவத்தையுடைய வியாதமுனிவன்—தெம் மாதர் முற்பூண் கவர் மன்னன் தெளியுமாறு - பகையரசர் மனைவிகளுடைய மங்கலியங்களைக் களைகின்ற பாஞ்சாலராசன் தெளியும்படி—பெரு ஞானவிழியும் ஈந்தான் - அவனுக்குப் பெருமையாகிய ஞானக்கண்ணையுங் கொடுத்தான். எ - று.

விழியும் என்னும் உம்மை எச்சத்தோடு சிறப்பு. தெம்மாதர்முற்பூண் கவர்மன்னன் என்பது பிறிதுநவிற்சி என்னும் அலங்காரம். நாயகனால் அக்கினி சான்றாக அணியப்படுதலானும், ஏனையணிகளை அணிதற்கேதுவாகிய தலைமை பூண்டிருத்தலினாலும் மங்கலியத்தை முற்பூண் என்றார். இங்ஙனங்கூறித் தெளிவிக்கவும் அவன்மனத்தில் ஐயநிகழ்ந்தமையால் அதனைத் தீர்க்குமாறு வியாத முனிவன் அவற்கு ஞானக்கண்ணைக் கொடுத்தானென்க. வெம் மாதவம் என்பதற்கு அருந்தவம் எனப் பொருள்கூறினும் பொருந்தும். (அஎ)

ஓதாதுணர்ந்துமறைநாலுமுருவுசெய்த
வேதாவுமொவ்வாவியாதன்மொழிவெள்ளநீராற்
கோதானநெஞ்சைக்குளிப்பாட்டினன்கோடிகோடி
தோதானவண்டுதுதைமாலைகொள்சோமகேசன்.

(இ - ள்.) கோடி கோடி தோது ஆன வண்டு துதை மாலைகொள் சோமகேசன் - கோடி கோடி நிரையான வண்டுகள் நெருங்குகின்ற மாலையையணிந்த யாகசேனன்—ஓதாது உணர்ந்து மறைநாலும் உருவுசெய்த - (ஒருவரிடத்திலும்) ஓதாமற் றானுகவறிந்து தைத்திரியம் முதலிய நான்குவேதங்களையும் இருக்கு முதலிய நான்காய்வகுத்த—வேதாவும் ஒவ்வா வியாதன் மொழி வெள்ள நீரால் - பிரமனுமொவ்வாத வியாதமுனிவனுடைய வாக்காகிய நீர்வெள்ளத்தால்—கோது ஆன நெஞ்சைக் குளிப்பாட்டினன் - (ஐவருக்குந் தன்மகளை விவாகஞ் செய்து கொடுத்தல் நியதியாகவும் அதுதகாது என்றமையினாற்) குற்றம்பொருந்திய மனத்தை முழுக்காட்டினான். எ - று.

"போந்தவ ணிருந்தபின் புகரி லாமறை, யாய்ந்திடின் வந்திடு மவற்றை நால்வகை, வாய்ந்திட நல்கியே மரபி னோர்க்கெலா, மீந்தனை யவரகத் திருளை நீத்தியால்" எனச் சிவபெருமான் கொடுத்த வரத்தால் வேதத்தை ஓதாதுணர்ந்து பகுத்தான் என்பார் ஓதாதுணர்ந்து மறைநாலு முருவுசெய்த வியாதன் என்றார். வேதாவும் என்னும் உம்மை சிறப்பு. உருவுசெய்தவியாதன் வேதாவு மொவ்வா வியாதனெனத் தனித்தனியியையும். திரளானவண்டு மதுவையுண்டு மிச்சிலாக்கிய மாலையை வெறுத்துநீக்காதணியுமியல்பினனாதலின் ஐவரையும் ஒருத்தி மணம்புரியலாமென்ற வியாதனுடையமொழிக் குடன்பட்டானென இறைச்சிப்பொருளும் போதரக் கோடிகோடி தோதானவண்டுதுதைமாலைகொள் சோமகேசன் கோதான நெஞ்சைக்குளிப்பாட்டினன் என்றும், வேதங்களைச் சிவபெருமானிடத்தோதி

புணர்ந்த பிரமனிலும் ஓதாதுணர்ந்துருவுசெய்தான் விசேடமுடையனாதலின் வே தாவுமொவ்வா வியாதன் என்றும், அவன்மொழி யாகசேனனுடைய உள்ளவழுக் கைப் பற்றறநீக்கிற்றென்பார் அதனை வெள்ள நீர் என்றுங்கூறினர். தைத்திரியம் பௌடிகம், தல்வகாரம், அதர்வமென நான்காய் விரிந்துகிடந்த வேதங்களைப் பின் சில்வாழ்நாட் சிற்றறிவினோருணருமாறு இருக்கு யசு சாமம் அதர்வமென நா ன்காய் உருவுசெய்தானென்க. தூதானவண்டு எனப்பாடமோதி மகளிரனுப்பிய தூதாகிய வண்டுகள் எனப்பொருள்கொள்வாருமுளர். (அஅ)

வியப்போடுதொல்லைமுனிசொற்றலைமீதுகொண்டு
பயப்போன்மகண்மேற்புரிகின்றபரிவினுக்கும்
வயப்போர்நிருபர்பெருமைக்கும்வலிக்குமீடா
நயப்போடுமன்றலயர்வித்தனனன்கொர்நாளில்.

(இ - ள்.) பயப்போன் - பிதாவாகிய யாகசேனன்—தொல்லை முனி சொல் வியப்போடு தலைமீதுகொண்டு - பழைய வியாதமுனிவனுடைய சொல்லை அதிசய த்தோடு தன்றலைமேற்கொண்டு—மகள்மேற் புரிகின்ற பரிவினுக்கும் - தன் புதல் விமேற்செய்கின்ற அன்பிற்கும்—வயப்போர் நிருபர் பெருமைக்கும் - வெற்றிபொ ருந்திய போரையுடைய பாண்டவர்களது பெருமைக்கும்—வலிக்கும் ஈடா - தன் வலிமைக்குந் தக—நன்கு ஓர்நாளில் நயப்போடு மன்றல் அயர்வித்தனன் - நன்மை யையுடைய ஒரு சுபதினத்தில் விருப்போடு விவாகத்தைச் செய்வித்தான். எ - று.

உம்மைகள் மூன்றும் எண்ணோடு சிறப்பு. ஈடாக என்னும் வினையெச்சத்தீறு தொக்கது. வலியென்றது இடம்பொருளேவல்களை. பெருந்தகைமையுடைய விந் திரர்களாகிய விவர் சிவபெருமான்றிருவாக்கால் இவளொருத்திக்கு மணவாளரா யினரென்றமையின் வியப்புற்றானென்பார் வியப்போடு என்றார். மகண்மேற்கொ ண்ட பரிவுமுதலிய மூன்றற்குந்தகுமாறு மணத்தைநடாத்தினனென்க. ஈண்டு வலியென்பதற்குப் பாண்டவருடைய வலி எனப்பொருள்கூறிற் சிறப்பின்று. ()

பாடுஞ்சுருதிமறைவாணரும்பாரிலுள்ள
சூடுங்கனகமுடிவேந்தருந்தொக்குநிற்ப
நீடுங்கதிர்மாமணித்தூண்கணிரைத்தபத்தி
யாடுங்கொடிமண்டபமெய்தினரண்டர்போலவார்.

(இ- ள்.) பாடும் சுருதி மறைவாணரும் - பாடுகின்ற சுதியையுடைய வேதங் களையறிந்த பிராமணர்களும்—பாரில் உள்ள சூடும் கனகமுடி வேந்தரும் - பூமியி லுள்ள அணிகின்ற பொன்முடியையுடைய அரசர்களும்—தொக்கு நிற்ப - திரண்டு நிற்க—அண்டர் போல்வார் - தேவர்களையொத்த பாண்டவரைவரும்—நீடும் கதிர் மாமணித் தூண்கள் நிரைத்த பத்தி - உயர்ந்த ஒளிபொருந்திய மாணிக்கத்தூண் கள் நிரைக்கப்பட்ட ஒழுங்கையுடைய—ஆடும் கொடி மண்டபம் எய்தினர் - அசை கின்ற கொடிகள்கட்டிய மண்டபத்தை அடைந்தார்கள். எ - று.

உம்மைகளிரண்டும் எண்ணோடு சிறப்பு. (௯௦)

குறிக்கும்பணிலமுதலாயிரகோடியாகப்
பிறிக்குங்கருவியிடந்தோறும்பிளிறியார்ப்பச்
செறிக்குங்கழற்காலறன்மைந்தனைச்செம்பொன்வேதி
யெறிக்குங்கிரணமணிப்பீடமதேற்றினரே.

(இ - ள்.) குறிக்கும் பணிலம் முதல் ஆயிரகோடியாகப் பிறிக்கும் கருவி - ஊதப்படுஞ் சங்குமுதல் ஆயிரகோடியாகப் பகுக்கப்படும் வாத்தியங்கள்—இடம் தோறும் பிளிறி ஆர்ப்ப - இடங்கடோறும் மிக்கொலிக்க—செறிக்கும் கழற் கால் அறன் மைந்தனை - அணியப்படும் வீரக்கழல்பொருந்திய கால்களையுடைய தரும புத்திரனை—செம் பொன் வேதி எறிக்கும் கிரண மணிப் பீடமது ஏற்றினர் - மாற்றுயர்ந்த பொன்னாற்செய்த வேதிகையிலுள்ள எறிக்கின்ற கிரணங்களையுடைய இரத்தினங்களழுத்திய ஆசனத்திலேற்றினார்கள். எ - று.

ஏ அசை. வேதிகை மணப்பீடம்வைத்தற்கியற்றப்பட்ட மேடை. (கூக)

இடத்தோளிவட்கும்வலத்தோளிவ்விறைவனுக்குந்
திடத்தோடுரைத்தகுறியின்பயன்சேர்ந்துதோய
விடத்தோடமுதங்கலந்தென்னமிளிரும்வேற்கண்
வடத்தோடுவிம்முமுலையாளைவலத்தில்வைத்தார்.

(இ - ள்.) இடத் தோள் இவட்கும் - இடத்தோள் இந்தத் திரௌபதிக்கும் - வலத் தோள் இவ் இறைவனுக்கும் - வலத்தோள் இந்தத் தருமபுத்திரனுக்கும்—திடத்தோடு உரைத்த குறியின் பயன் சேர்ந்து தோய - உறுதியோடு அறிவித்த சகுனத்தின்பயனைச் சேர்ந்து ஒன்றையொன்று பொருந்த—விடத்தோடு அமுதம் கலந்து என்ன மிளிரும் வேற்கண் - நஞ்சோடு அமுதங்கலந்தாற்போல விளங்கும் வேல்போலுங் கண்களையும்—வடத்தோடு விம்மும் முலையாளை - முத்துவடத் தோடு பூரிக்கும் முலைகளையுமுடைய திரௌபதியை—வலத்தில் வைத்தார் - அவ னுடைய வலப்பக்கத்தில் வைத்தார்கள். எ - று.

விடத்தோடமுதங்கலந்தென்ன என்பதில் ஒடு மயக்கப்பொருளில் வந்தது. வடத்தோடு என்பதில் ஒடு வேறுவினை ஒடு. பொதுநோக்காற்றுயரையுங் குறிப்பு நோக்காலுவப்பையுந்தருமியல்புடைய கண்ணெனபார் விடத்தோடமுதங் கலந் தென்னமிளிருங்கண்ணென்றார். இதனைப் பண்புவமையாக்கலித்துணைச் சிறப்பின்று. உரைத்தகுறியாவது இவளிடத்தோளும் இவன்வலத்தோளுந் துடித்தல். பயனாவது தோய்தல். நாயகன்வலத்தில் நாயகியை இருத்தில் அவன் வலத்தோளும் அவ்விடத்தோளும் பொருந்துதல்பற்றி இங்ஙனங் கூறினர். இனி, திடத்தோடு ரைத்த குறியின்பயன் சேர்ந்து இடத்தோளிவட்கும் வலத்தோளிவ்விறைவனுக் குந் தோய்வலத்தில்வைத்தார் எனக்கொண்டுகூட்டி, உறுதியோடு யாகசேனனு க்கு முன்கூறிய சோதிடத்தின் பயன் பலிக்குமாறு இடத்தோளிவளுக்கும் வலத் தோள் இத்தருமனுக்கும்பொருந்த வலப்பக்கத்தில் வைத்தார்கள் எனப்பொருள் கொள்வாருமுளர். அவர், சேர்ந்து என்னுஞ் செய்தெனெச்சத்தைச் செயவெ னெச்சமாகத் திரிப்பர். (கூஉ)

கேள்விக்கொருவனெனுந்தௌமியன்கீதவேத
வேள்விக்குவேண்டுவனயாவும்விதியினீட்டி
மூள்வித்தசெந்தீக்கரியாகமுரசுயர்த்த
தாள்வித்தகற்குவரமானசடங்குசெய்தான்.

(இ - ள்.) கேள்விக்கு ஒருவன் எனும் தௌமியன் - கல்விக்கு ஒருவனென்று சொல்லப்படும் தௌமியமுனிவன்—கீத வேத வேள்விக்கு வேண்டுவன யாவும் இசையையுடைய வேதவிதிப்படி செய்யப்படும் விவாகத்திற்கு வேண்டுவன எவற் றையும்—விதியின் ஈட்டி - விதிப்படி தொகுத்து—மூள்வித்த செந்தீ கரி ஆக - சுவாலிக்கச்செய்த சிவந்த அக்கினிசாக்ஷியாக—முரசு உயர்த்ததாள் வித்தகற்கு -

(கொடியாகக் கொண்டமையினால்) முரசத்தை'யுயர்த்திய முயற்சியையுடைய சாமர்த்தியனாகிய தருமனுக்கு—வரம் ஆன சடங்கு செய்தான் - மேலாகிய விவாகக்கிரியைகளைச் செய்தான். எ - று.

கல்விகேள்விகளால் நிறைந்த ஆசாரியனே வேள்விக்கு வேண்டுவனவாகிய எவற்றையும் வேதவிதிதவறுமற் றொருத்து மேலான சடங்குசெய்ய வல்லனென்பார் கேள்விக் கொருவனெனுந் தௌமியன் நீதவேத வேள்விக்கு வேண்டுவன யாவும் விதியினீட்டி வரமானசடங்கு செய்தானென்றார். (கூ௩)

பன்மங்கலமுமுடன்வைகியபண்பினாளை
நன்மங்கலப்பூண்டுகிலோடுநயந்துசாத்தித்
தன்மங்கலந்தமனத்தோனையத்தையலோடுந்
தென்மங்கலச்செஞ்சுடர்த்தீவலஞ்செய்வித்தாரே.

(இ - ள்.) பன்மங்கலமும் உடன்வைகிய பண்பினாளை - பல மங்கலங்களும் ஒருசேரத் தங்கிய குணத்தையுடையாளுக்கு—துகிலோடு நல் மங்கலப்பூண் நயந்து சாத்தி - வஸ்திரத்தோடு நல்லமங்கலியத்தை விரும்பி அணிவித்து—தன்மம் கலந்த மனத்தோனை - தருமம் பொருந்திய மனத்தையுடைய நாயகனை—அத்தையலோடும் - அப்பெண்ணோடும்—தென் மங்கலச் செஞ் சுடர்த்தீ வலஞ் செய்வித்தார் - அழகிய மங்கலத்தையுடைய சிவந்த சுவாலைபொருந்திய அக்கினியைப் பிரதக்ஷிணஞ்செய்வித்தார். எ - று.

ஏ - அசை. மங்கலமும் என்னும் உம்மை முற்று. பண்பினாளை என்னும் ஐயுருபு குவ்வுருபாகத்திரித்துப் பொருளுரைக்கப்பட்டது. சாத்தி என்பதிற் பிறவினைப்பொருளுணர்த்தும் விவ்விகுதி தொக்குநின்றது. ஆடையணிமுதலிய புறத்தணியேயன்றி நாணமடமச்சம் பயிர்ப்பென்னும் அகத்தணிகளையு மொருங்குடையாளென்பார் பன்மங்கலமு முடன்வைகிய பண்பினாள் என்றும், அமங்கலத்திற்குரிய ஏனைத்தீப்போலாது மங்கலத்திற் கேதுவாய் வேதவிதிப்படி தாபிக்கப்பட்ட தீ என்பார் தென்மங்கலச்செஞ்சுடர்த்தீ என்றுங் கூறினார். (கூ௪)

கங்குற்பவளவனமீதுகடற்றரங்கம்
பொங்கித்தரளத்திரள்சிந்திப்பொழியுமாபோ
லங்கிப்புறத்துத்திருக்காப்பணியங்கையேந்திச்
செங்கட்கரியகுழலாள்பொரிசிந்தினாளே.

(இ - ள்.) கங்குல் - இராக்காலத்தில்—கடல் தரங்கம் பொங்கிப் பவளவனமீது தரளத்திரள் சிந்திப் பொழியுமாபோல் - கடற்றிரையானது கிளர்ந்து பவளக்காட்டின்மீது முத்துத்திரளை வீசிச் சொரியுந்தன்மைபோல—செங்கட் கரிய குழலாள் - செவ்வரிபரந்த கண்ணையுங் கரிய அளகத்தையுமுடைய திரௌபதி—திருக்காப்பு அணி அங்கை ஏந்தி - திருக்காப்பையணிந்த அகங்கையிலேந்தி—அங்கிப் புறத்துப் பொரி சிந்தினாள் - அக்கினியில் நெற்பொரியைச் சொரிந்தாள். எ-று.

ஏ - அசை. கடற்றரங்கம் இரவில் மிகக்கிளருதல்பற்றிக் கங்குற்கடற்றரங்கம் என்றார். கங்கிற்பவளவனமீது எனப்பாடமோதி, கரையிற்படர்ந்த பவளக்காட்டின்மீது எனப்பொருள்கொள்வாருமுளர். கரியகுழலாள் கங்குலிற் பொரிசிந்தினாள் எனப் பொருள்கொள்வாருமுளர். அது முதனூற்கருத்தோடு முரணுதலால் பொருந்தாதென்க. (கூரு)

இவ்வாறுமன்றலயர்வித்தபினீன்றகாதல்
வெவ்வாரழலின்முறைமூழ்கினள்மீண்டுதோன்ற
மைவாரளகவடமீனிகர்கற்பினளை
யவ்வாறுமற்றையொருநால்வருமன்றுவேட்டார்.

(இ - ள்.) இவ்வாறு மன்றல் அயர்வித்தபின் - இந்தப்படி விவாகத்தைச்செய்வித்தபின்பு—ஈன்ற காதல் வெவ் ஆர் அழலில் முறை மூழ்கினள் மீண்டுதோன்ற- (திரௌபதியானவள்) தன்னைப்பெற்ற விருப்பத்தையுடைய கொடிய நிறைந்த அக்கினியில் முறையே முழுகித் திரும்பத்தோன்ற—மை வார் அளக வடமீன் நிகர் கற்பினளை - கரிய நீண்ட அளகத்தையுடைய அருந்ததிபோலுங் கற்பினையுடைய அவளை—அன்று - அன்றைக்கு—மற்றை ஒருநால்வரும் அவ்வாறு வேட்டார் - ஏனைநால்வரும் அம்முறைப்படி விவாகஞ் செய்தார்கள். எ - று.

மூழ்கினள் வினையெச்சமுற்று. வீமன்முதலிய நால்வரையும் மணஞ்செய்யும் போழ்து ஒவ்வொருவருக் கொவ்வொருமுறை தீயின்மூழ்கி எழுந்தா ளென்பார் முறைமூழ்கினண் மீண்டுதோன்ற என்றும், ஐவரையும் மணஞ்செய்துழியும் அவள்கற்பிற்கதனாலோ ரிழிவுண்டாயிற்றிலதென்பார் வடமீனிகர் கற்பினள் என்றுங் கூறினர். ஒவ்வொருவரையும் மணஞ்செய்யும்பொழுது கன்னிகையாமாறு தீயின் மூழ்கினளென்க. (கஅசு)

மாரன்கரும்புவளரும்படிவார்த்தநீரா
லீரம்புலராக்கரத்தோருக்கியாகசேனன்
றேரும்பரியுங்களிறுந்திரள்சேனையாவும்
பாருந்தனமுமுமதென்றுபலவுமீந்தான்.

(இ - ள்.) மாரன் கரும்பு வளரும்படி வார்த்த நீரால் - மன்மதனுடைய கருப்பு வில்லால் நிகழும் இல்லொழுக்கம் விருத்தியாகும்படி வார்த்துத் தத்தஞ்செய்த நீரினாலே—ஈரம் புலராக் கரத்தோருக்கு - ஈரங்காயாத கையையுடைய பாண்டவருக்கு—யாகசேனன் - யாகசேனன் என்பவன்—தேரும் பரியும் களிறும் திரள் சேனையாவும் - தேருங் குதிரையும் யானையுந் திரண்ட பதாதி முழுதும்—பாருந் தனமும் பலவும்-பூமியுந் திரவியமுமாகிய பலவற்றையும்—உமது என்று ஈந்தான் - உம்முடையனவென்று கொடுத்தான். எ - று.

யாவும் என்னும் உம்மை எண்ணேடு முற்று. கரும்பு ஆகுபெயர். தாராதத் தஞ் செய்தவுடனே மகட்குக் கொடுக்கற்பாலனவற்றை யொருசேரக் கொடுத்தான் என்பார் ஈரம்புலராக்கரத்தோருக் கியாகசேனன் பலவுமீந்தான் என்றார். மாரன்கரும்பு வளரும்படி வார்த்தநீரால் ஈரம்புலராக்கரத்தோர் என்பதற்கு மன்மதனுடைய வில்லாகிய கரும்புகள் வளரும்படி தினந்தோறுந் தத்தஞ் செய்யுநீரினால் ஈரம்புலராத கையையுடையோர் எனப்பொருள்கூறி, பெருங் கொடையாளர் எனத் தாற்பரியங் கொள்வாருமுளர். (கஅஎ)

வேறு.

ஆண்டுமன்றல்பெற்றங்குரித்தாரிகற், பாண்டுமைந்தரெனுஞ்சொற்பரவலுந், தாண்டுவெம்பரித்தேர்த்தார்த்தராட்டிரர், மீண்டுவெந்தவர் மேல்வினைசெய்யவே.

(இ - ள்.) இகல் பாண்டுமைந்தர் - வலிய பாண்டவர்கள்—ஆண்டு மன்றல் பெற்று அங்குரித்தார் எனும் சொல் பரவலும் - அப்பாஞ்சால தேசத்தில் விவாகத்தைப்பெற்று வெளிப்பட்டார்களென்னுஞ் சொற் பரம்புதலும்—தாண்டு வெம் பரித் தேர்த் தார்த்தராட்டிரர் - பாய்கின்ற வேகம்பொருந்திய குதிரை பூண்ட தேரையுடைய திருதராட்டிரன் புதல்வர்கள்—அவர்மேல் மீண்டும் வந்து வினை செய்ய - அப்பாண்டவர்கண்மேலே திரும்பவும் வந்து யுத்தஞ்செய்ய. எ - று.

ஏ - அசை. மீண்டும் என்னும் எச்சவும்மை விகாரத்தாற் றொக்கது. தார்த்த ராட்டிரர் - திருதராட்டிரன் மைந்தர். (கூஅ)

சென்றசேனையுந்திட்டத்துய்மன்னுட, னின்றசேனையுநேருறுபூசலிற், கொன்றசேனையொழிகுருசேனையை, வென்றசேனைவெகுண்டு வென்கண்டவே.

(இ - ள்.) சென்ற சேனையும் - (துரியோதனனுதியர்களோடு) போன சேனைகளும்—திட்டத்துய்மன்னுடன் நின்ற சேனையும் - திட்டத்துய்மனோடு நகரில் நின்றசேனைகளும்—நேருறு பூசலில் - எதிர்த்தபோரில்—கொன்ற சேனை ஒழிகுரு சேனையை-கொல்லப்பட்ட சேனையொழிய எஞ்சிநின்ற குருகுல குமாரர்களுடைய சேனைகளை—வென்ற சேனை வெகுண்டு வென் கண்ட - வெற்றிகொண்ட திட்டத்துய்மனுடைய சேனைகள் கோபித்துப் புறங்காட்டச் செய்தன. எ - று.

ஏ - அசை. ஒழி என்னும் முதனிலைத்தனிவினை வினையெச்சமாயிற்று. திட்டத்துய்மனுடைய சேனைகள் குருகுல குமாரர்களுடைய சேனைகளில் எதிர்த்தனவற்றைக்கொன்று ஏனையவற்றைப் புறங்கண்டன என்பது கருத்து. (கூகூ)

சாலும்வஞ்சச்சகுனியொடெண்ணிய, நாலுமைந்தருநச்செயிறுகவும் வாலுமெய்யும்வருக்கங்களாகவு, மாலும்வெம்பகையாடரவானதே.

(இ - ள்.) சாலும் வஞ்சக் சகுனியொடு எண்ணிய நாலுமைந்தரும் - மிக்க வஞ்சகத்தையுடைய சகுனியோடு சேர்த்தெண்ணப்பட்ட நான்குவீரர்களும்—நச்சு எயிறு ஆகவும் - நஞ்சையுடைய நான்குபற்களாகவும்—வருக்கங்கள் வாலும் மெய்யும் ஆகவும் - அணிவகுப்புக்கள் வாலுஞ் சரீரமுமாகவும்—ஆலும் வெம் பகை - தொடர்ந்த கொடிய பகைவரதணி—ஆடு அரவு ஆனது - படம் விரித்தாடுகின்ற பாம்பானது. எ - று.

ஏ - அசை. பகை ஆகுபெயர். இப்பகைக்குச் சிறந்த காரணமா யுள்ளான் சகுனியாதலின் அவ்வுயர்புபற்றிச் சகுனியொடென ஒருவினை யொடுச்சொற் கொடுத்தார். பாம்பிற்குரிய கருவியாய்ப் பலபற்களிருப்பினுங் கொலைக்குச் சிறந்த கருவியாய்க் காளி முதலிய நான்குபற்களுமே யுளவாமாறுபோலப் பகைக்குரிய கருவியாய்ப் பலவீரரிருப்பினுஞ் சிறந்த கருவியாய்ச் சகுனிமுதலிய நான்குமைந்தருமே யிருந்தாரென்பார் சகுனியொடெண்ணிய நாலுமைந்தரு நச்செயிறுக என்றார் சகுனியொடெண்ணிய நாலுமைந்தராவார் சகுனி, கன்னன் துரியோதனன், துச்சாதனன். காளி முதலிய நான்கு பற்களாவன காளி காளாத்திரி யமன் யமதூதி. (க00)

அந்தநாகமழலுமிழ்கண்விடஞ், சிந்தமேல்விடுசீற்றமுந்தோற்றமு மூந்தவார்சிலைக்கைம்முகில்வாகனன், மைந்தன்வாளிமழைகளின்மாய்ந்தவே.

(இ - ள்.) அந்த நாகம் - அந்தப்பாம்பு—அழல் உமிழ் கண் விடம் சிந்த - அக்கினியைக் கக்குகின்ற கண்கள் நஞ்சைச்சொரியும்படி—மேல்விடு சீற்றமும்

தோற்றமும் - பகைவர்மேற்செய்த கோபமும் பொலிவுமாகிய இரண்டும்—முந்த - முற்பட—வார் சிலைக்கை முகில்வாகனன் மைந்தன் வாளி மழைகளின் மாய்ந்த - நீண்ட வில்லையேந்திய கையையுடைய இந்திர குமாரனாகிய அருச்சுனன்பொழிந்த பாணமழைகளினால் அழிந்தன. எ - று.

ஏ - அசை. நாகம்விடுத்தசீற்றம் என இயையும். தோற்றம் என்றது அணியின்பொலிவை. பகைவரது சீற்றத்தையு மணியின்பொலிவையும் அருச்சுனன் முன்னர்க் கெடுத்தானென்க. (கூ0௧)

சமரவேழமுகாசுரன்சாய்ந்தனன், குமரனாலெனக்கோநகுலன்றனாலமரில்யானையணிமுகத்தோடுமெய்,சமர்படப்புறந்தந்தனன்கன்னனே

(இ - ள்.) குமரனால் - சுப்பிரமணியக் கடவுளால்—சமரம் வேழமுகாசுரன் சாய்ந்தனன் என - போரில் யானைமுகத்தை யுடைய தாரகாசுரன் புறங்கொடுத்தமைபோல—கன்னன் - கன்னனானவன்—கோ நகுலன்றனால் - அரசனாகிய நகுலனால்—அமரில் - போரில்—யானை அணிமுகத்தோடு மெய் சமர்பட - யானைகளின் அழகுபொருந்திய முகத்தோடு தன்னுடம்பும் (பாணங்கள் தைத்துக்கிடத்தலால்) முட்பன்றியைப் போன்றிருக்க—புறம் தந்தனன் - புறங்கொடுத்தான். எ - று.

ஏ - அசை. சமரம் என்பதில் மகரம் சந்தவின்ப நோக்கிக்கெட்டது. பட என்பது உவமவுருபு. சமர் - முட்பன்றி. சிறந்த வீரனாகிய கன்னனையும் யானைகளையும்வென்ற வீரமுடைமையின் நகுலனைக் கோநகுலன் என்றார். சமரவேழமுகாசுர னென்பதற்கிவ்வாறு பொருள்கொள்ளாது சமரத்தையுடைய வேழமுகாசுரனெனப் பொருள்கோடலித்துணைச் சிறப்பின்று. யானை அணி முகத்தோடு மெய் சமர்படப் புறந்தந்தனன் என்பதற்கு, யானைகளின் அழகுபொருந்திய முகத்தோடு மெய்யும் பாணந் தைத்துக் கிடத்தலால் அவை முட்பன்றியைப் போன்றிருக்கக் கன்னனானவன் புறங்கொடுத்தான் எனப் பொருள்கூறி, யானைகளுக்குப் பாணம் தைத்தவளவில் அவன் அஞ்சி நில்லாதோடினன் எனத் தாற்பரியங் கொள்ளுதலுமொன்று. தாரகன் யானைமுகத்தோடு புறந்தந்தாற்போலக் கன்னனும் யானைமுகத்தோடு புறந்தந்தான் என வேறுமொரு பொருள் விளங்கியவாறு கண்டுகொள்க. (கூ0௨)

முன்னிடச்சமர்மோதுஞ்சகுனியை, மின்னிடைப்புயங்கம்வெருக்கொண்டெனத், தன்னிடக்கைத்தனுவொடுந்தேரொடும், பின்னிடப்பொருதானவன்பின்னவன்.

(இ - ள்.) அவன் பின்னவன் - அந்த நகுலனுடைய தம்பியாகிய சகாதேவன்—முன்னிடச் சமர்மோதும் சகுனியை-முற்பட யுத்தஞ்செய்யுஞ் சகுனியை—மின் இடைப் புயங்கம் வெருக்கொண்டென - மின்னலினாற் பாம்பு அஞ்சினமைபோல—தன் இடக்கைத் தனுவொடும் தேரொடும் பின்னிடப் பொருதான் - தனது இடக்கையிலேந்திய வில்லோடுந் தேரோடும் (அவன் அஞ்சிப்) புறந்தர யுத்தஞ்செய்தான். எ - று.

மின்னிடை என்பதில் ஏழனுருபு மூன்றனுருபாகத் திரித்துப் பொருள் கொள்ளப்பட்டது. வேறுதுணையின்றித் தனுவையுந் தேரையுந் துணையாகக் கொண்டு பொருதானென்க. (கூ0௩)

தண்மதிக்குடைத்தம்முனுந்தம்பியு, மெண்ணுமற்றையிளைஞர்கள் யாவருங், கண்ணுறக்களங்காணுமுன்றீயினால், வெண்ணெயொத்துடைந் தார்விறல்வீமனால்.

(இ-ள்.) தண் மதிக்குடைத் தம்முனும் தம்பியும் - குளிர்ந்த பூரணசந்திரன் போலுங் குடையையுடைய தமையனாகிய துரியோதன ராசனும் தம்பியாகிய துச்சாதனனும்—எண்ணும் மற்றை இளைஞர்கள் யாவரும் - எண்ணப்படும் மற்றைத் தம்பியரனைவரும்—கண் உறக் களம் காணுமுன் - கண்ணால் நன்றாக யுத்த களத்தைப் பார்க்குமுன்னே—தீயினால் வெண்ணெய் ஒத்து - நெருப்பினாலே வெண்ணெயுடையுந் தன்மையையொத்து—விறல் வீமனால் உடைந்தார் - வலிய வீமனாற் புறந்தந்தோடினார். எ - று.

வெண்ணெய்நெருப்பைக் காணுமுனுடையுமாறுபோல இவரும் வீமனைக்காணுமுனுடைந்தாரென்க. பிதா இருப்பினும் அரசவுரிமையை நடாத்து மதிகாரம் இவற்குளதாயிருந்த தென்பார் தண்மதிக்குடைத்தம்முன் என விசேடித்தார். ()

விரோசனக்கதிர்மைந்தனும்வேந்தனுஞ், சரோசனத்திறற்றம்பியு மாமனும், புரோசனப்பெயர்ப்புன்மதிதன்னைநொந், தரோசனத்துடனந்நகர்நண்ணினார்.

(இ - ள்.) விரோசனக் கதிர் மைந்தனும் வேந்தனும் - சூரியனுடைய புதல்வனாகிய கன்னனுந் துரியோதனராசனும்—சரோசனத் திறல் தம்பியும் மாமனும் - (தமையனை) ஒத்த கோபத்தினையுடைய வலிய தம்பியாகிய துச்சாதனனும் மாமனாகிய சகுனியும்—புரோசனப்பெயர்ப் புன்மதி தன்னை நொந்து - புரோசனன் என்னும் பெயரைப் பொருந்திய எளிய புத்தியையுடைய மந்திரியை நொந்து—அரோசனத்துடன் அந் நகர் நண்ணினார் - பிரகாச மின்மையுடன் அந்த அத்தின புரியை அடைந்தார்கள். எ - று.

விரோசனக்கதிர் இருபெயரொட்டு. புன்மதியென்பது உயர்திணைப்பொருளுணர்த்தி நிற்பதோர் அஃறிணைச்சொல். மதவலி என்பதுபோல. அமைச்சனை அரசுகொன்றமையின் அவனைப் புன்மதியென்றார். பாண்டவ ரைவரையுங்கோறல் வேண்டுமென்னுந் தங்கருத்தை முற்றுவியாமையின் நொந்தும், அவருய்ந்தமையின் தமக்குக் கேடுநிகழுமென்னும் அச்சத்தால் ஒளிகுன்றியும் நகரை யடைந்தாரென்க. சரோசனன் - ஒத்த கோபமுடையோன். அரோசனம் - பிரகாசமின்மை.

முந்துபோரின்முதுகிடும்வேந்தரால், விந்தைதன்னையுமேதகவேட்டபினந்தமாநகரைவருமாமனும், வந்தகண்ணனுமன்புடன்வைகினார்.

(இ - ள்.) முந்து போரில் முதுகிடும் வேந்தரால் - முற்பட்டயுத்தத்திற் புறந்தரும் அரசர்களால்—விந்தைதன்னையும் மேதக வேட்டபின் - விசயலக்குமியையும் மேன்மைதக விவாகஞ்செய்தபின்—அந்த மா நகர் - அந்தப் பெரிய நகரில்—ஐவரும் மாமனும் - பாண்டவரைவரும் மாமனாகிய யாகசேனனும்—வந்த கண்ணனும் அன்புடன் வைகினார் - வந்த கிருட்டிணரும் அன்போ டிருந்தார்கள். எ-று.

தன்னையும் என்னுமும்மை எச்சத்தோடு சிறப்பு. போரிற் புறந்தந்த அரசரே விந்தையைவேட்டற் கேதுவா யிருந்தமையின் வேந்தராலென ஆலுருபு

கொடுத்துக் கூறினார். ஈண்டு வேட்டல் என்றது தம்வயப்படுத்தலை. கிருட்டிண ரைப் பாண்டவருடைய விவாகத்திற்காக யாகசேனன் ஓலைபோக்கி அழைத்தா னென்க. (கOசு)

தும்பைசூடியவேற்றுரியோதனன், வெம்புபோரின்முதுகிட்டுமீண்டபி
றம்பிகூறுதருமனுக்கீயுமா,றம்பிகேயனமைச்சரொடெண்ணினான். [ன்

(இ - ள்.) தும்பை சூடிய வேல் துரியோதனன் - தும்பைமாலையை யணிந்த வேற்படையினையுடைய துரியோதனராசன்—வெம்பு போரில் முதுகிட்டு மீண்ட பின் - கோபத்தைச் செய்கின்ற போரிற் புறந்தந்து வந்தபின்—அம்பிகேயன் - அம்பிகையினுடைய புதல்வனாகிய திருதராட்டிரன்—தம்பி கூறு தருமனுக்கு ஈயுமாறு - தன் தம்பியாகிய பாண்டுவினது பங்கை (அவன் புதல்வனாகிய) தரு மனுக்குக் கொடுக்கும்படி—அமைச்சரொடு எண்ணினான் - மந்திரிமார்களுடன் ஆலோசித்தான். எ - று.

சூடிய என்னும் பெயரெச்சந் துரியோதனன் என்னும் பெயர்கொண்டது. பாண்டவரை அதிரப்பொருமாறு தும்பை சூடினானென்க. தும்பைசூடுதலை வேலு க்கேற்றினு மமையும். (கOஎ)

தாதினாற்பொலிதார்வரைமார்பரைத், தூதினாற்றங்கடொல்பதிசேர்
த்தினான், காதினாற்பயனின்றெனக்கண்கள்போற், கோதினாற்றெரியாம
னக்கோளினான்.

(இ - ள்.) தாதினால் பொலி தார்வரை மார்பரை - பூந்தாதினாற் பொலிகின்ற மாலையையணிந்த மலைபோன்ற மார்பையுடைய பாண்டவர்களை—காதினால் பயன் இன்று என - கொலைசெய்யமுயலுதலின் ஒரு பிரயோசனமு மில்லையென்று—கண்கள்போல் கோதினால் தெரியா மனக்கோளினான் - தன் கண்களைப்போலக் குற்றத்தினால் (நன்மை தீமைகளைப்) பகுத்தறியாத மனக் கோட்பாட்டினையுடைய திருதராட்டிரன்—தூதினால் தங்கள் தொல் பதி சேர்த்தினான் - தூதாற்றங்க ளுடைய பழைய நகரத்தில் அவர்களை வருவித்தான். எ - று.

காது என்பது முதனிலைத்தொழிற்பெயர்; அது ஆகுபெயராய் நின்றது. புது மணவாளரானமையிற் றாதினாற்பொலிதார்வரை மார்பரென்றும், கண்கள் குருடா னமையிற் றமக்குரிய விடயங்களைப் பற்றாதவாறுபோல இவன்மனமும் அறியா மையின் வயத்ததா யிருத்தலின் நன்மை தீமைகளைப் பகுத்தறியா வியல்பிற்றாய தென்பார் கண்கள்போற் கோதினாற் றெரியாமனம் என்றுங் கூறினார். பாண் டவரைக் கொல்லுமாறு தானுந் துரியோதனாதியரும் இத்துணையுஞ் சூழ்ந்த சூழ்ச்சிகளுக்கெல்லாம் அவர் தப்பினமையின், இனி இவரைக்கோறல் நமக்கரி தெனத்துணிந்து, அவரைத் தம்வயப்படுத்துமாறு தூதினாற்றங்க டொல்பதி சேர் த்தினானென்க. காதினாற் பயனின்றென என்பதற்குப் பாண்டவரைக் கொன்றால் நமக்கொருபயனின்றெனப் பொருள்கூறில், பாண்டவரைக் கொல்லுமாறு முன் னர்ப் பல உபாயங்கள் செய்தமையினாலும் பின்னருஞ் சூதாடி வெல்லுமாறு விர கோதன் முதலான தீச்செயல்களைப் புரிந்தமையினாலும் அது பொருந்தாதென்க.

வீடுமற்கும்விதுரற்குமேற்கவர், நாடுமுற்றுநரபதிநல்கவே
யாடுபொற்கொடியங்நகர்வைகினார், நீடுவிற்றிறலோர்நெடுங்காலமே.

(இ - ள்.) நரபதி - திருதராட்டிர மகாராசன்—வீடுமெற்கும் விதுரற்கும் ஏற்க அந் நாடுமுற்றும் நல்க - வீடுமனுக்கும் விதுரனுக்கும் இயையப் பாண்டவர்களுக்குரிய நாடுமுழுதையும் கொடுக்க—நீடு வில் திறலோர் - நெடிய வில்வலிமையையுடைய அவர்கள்—ஆடு பொன் கொடி அந்நகர் நெடுங்காலம் வைகினர் - ஆடுகின்ற அழகிய கொடிகளையுடைய அந்த அத்தினபுரியில் நெடுங்காலம் இருந்தார்கள். எ - று.

ஏ - இரண்டும் அசைகள். உம்மைகளிரண்டும் எண்ணோடு சிறப்பு. அ என்பது பண்டறிசுட்டு. வீடுமனும் விதுரனுமே பாண்டுவின் கூறுமுழுதையும் அவன் புதல்வர்க்கடைவிக்குமாறு முயன்றமையின் அவ்விருவர் கருத்தின்படி கொடுத்தானென்பார் வீடுமெற்கும் விதுரற்கும் ஏற்கவென்றார். (கoகூ)

ஆக செய்யுள் - கூoஎ.

திரௌபதிமாலையிட்டசருக்க முற்றிற்று.

---

# இந்திரப்பிரத்தச்சருக்கம்.

வேதமும்வேதம்விளம்புமெய்ப்பொருளுமப்பொருள்விதங்களும்பஞ்ச
பூதமும்புலனும்புலன்களின்பயனுமப்பயன்பொலிவுறநுகரு
ஞாதமுமுலகம்படைத்தளித்தழித்துஞானமாயகிலமுநிறைவுற்
றாதியுநடுவுமுடிவுமாய்நின்றவாதியானடியிணைபணிவாம்.

(இ - ள்.) வேதமும் - வேதங்களும்—வேதம் விளம்பும் மெய்ப் பொருளும் - வேதங்கள் சொல்லுகின்ற உண்மைப்பொருளும்—அப்பொருள் விதங்களும் - அந்த உண்மைப்பொருளின் பகுப்புக்களும்—பஞ்ச பூதமும் - ஐம்பூதங்களும்—புலனும் - காட்சியும்—புலன்களின் பயனும் - அவற்றிற்கு விடையமாயுள்ள காட்சிப்பொருளும்—அப்பயன் பொலிவு உற நுகரும் ஞாதமும் - அக் காட்சிப்பொருளைப் பொலிவு பொருந்தக்காணுங் காண்பானும்—உலகம் படைத்து அளித்து அழித்து - உலகத்தைச் சிருட்டித்துத் திதித்துச் சங்கரித்து—ஞானமாய் அகிலமும் நிறைவு உற்று - ஞானமயமாய் எங்கும் வியாபித்து—ஆதியும் நடுவும் முடிவும் ஆய்நின்ற - தோற்றமும் நிலையும் இறுதியுமாய்நின்ற—ஆதியான் அடி இணை பணிவாம் - கடவுளுடைய இருபாதங்களையும் யாம் வணங்குவாம். எ - று.

வேதம்விளம்பு மெய்ப்பொருள் என்றது பதியை. அப்பொருள் விதங்கள் என்றது அப்பதிப்பொருள் ஐந்தொழிலுஞ் செய்யுமாறு பலவகைப்பட்டமையை. காண்பான் காட்சி காட்சிப்பொருள் என்னும் மூன்றையும் முறையே வடநூலார் ஞாதா ஞானம் ஞேயம் என்பர். ஞாதா ஞாதம் எனநின்றது. இனி ஆழியானடியிணை பணிவாம் என்று பாடமோதி வேதம்விளம்பு மெய்ப்பொருளும் என்பதற்கு ஆதிநாராயணனென்றும், அப்பொருள்விதங்களும் என்பதற்கு அவனுடைய வியூகர்களாகிய சங்கருடணன் பிரத்தியும்நன் அநிருத்தனெனவும் பொருள்கொள்வாருமுளர். (க)

அத்தினபுரியிலையிருபதின்மரைவரென்றிரண்டறத்தம்மி [ண்
லொத்தனர்மருவத்தெவ்வர்மெய்வெருவவுளமகிழ்நாளின்மற்றொருநா
மைத்துனன்முதலாந்தமரையுந்தக்கமந்திரத்தவரையுங்கூட்டி
யித்தினமுயர்ந்ததினமெனமகுடஞ்சூட்டுதற்கெண்ணினனிகலோன்.

(இ - ள்) அத்தின்புரியில் - அத்தினபுரத்தில்—ஐயிருபதின்மர் ஐவர் என்று இரண்டு அறத் தம்மில் ஒத்தனர் மருவ - நூற்றுவர் ஐவர் என்று இரண்டுபெகுப்பு நீங்கத் தங்களுள் ஒத்துக்கலக்க—தெவ்வர் மெய் வெருவ - (அதனால்) பகைவர் சரீரநடுங்க—உளம் மகிழ் நாளில் ஒருநாள்-மனமகிழுகின்ற நாள்களில் ஒருநாள்— இகலோன் - வலியையுடைய திருதராட்டிரன்—மைத்துனன் முதலாம் தமரையும் - மைத்துனனாகிய சகுனி முதலிய சுற்றத்தவரையும்—தக்க மந்திரத்தவரையும் கூட்டி - தகுதியையுடைய மந்திரிமாரையும் ஒருங்கழைத்து—இத்தினம் உயர்ந்த தினம் என மகுடம் சூட்டுதற்கு எண்ணினன் - இந்தத்தினமே மேலாகிய தினமென்று (தருமனுக்கு) முடிசூட்ட எண்ணினன். எ - று.

மற்று - அசை. ஒத்தனர் வினையெச்சமுற்று. மருவ என்னுஞ் செயவெனெச்சங் காரணப்பொருட்டு. வெருவல் ஆகுபெயர். சகுனி தன் புதல்வனாகிய துரியோதனனுக் குசாத்துணையாதலினாலும், அவன்வழியே தன்புதல்வன் ஒழுகுபவன் ஆதலினாலும் கலகம்விளையாவண்ணம் சகுனியை யுள்ளிட்டுத் தமரையழைத்துசாவினனென்க. (உ)

செழுமுரசுயர்த்தவேந்தனுக்கின்றுதிருவபிடேகநாளென்று
முழுமுரசறைந்துநகரிகோடித்துமுடிபுனைகடிகொண்மண்டபத்தி
னெழுமுரசதிரப்பகீரதிமுதலாமெத்துறைப்புனல்களுமியற்றித்
தொழுமுரசுடன்வெள்வலம்புரிமுழங்கச்சுருதிமாமுனிவருந்தொக்கார்.

(இ - ள்.) செழு முரசு உயர்த்த வேந்தனுக்கு - மாட்சிமையையுடைய முரசத்தைக் கொடியாகக் கொண்டமையினால் உயரச்செய்த தருமனுக்கு—இன்று திரு அபிடேகநாள் என்று முழு முரசு அறைந்து - இந்தநாள் அழகிய மகுடாபிஷேகஞ் செய்தற்குரிய நாளென்று பெரிய முரசை யடிப்பித்து—நகரி கோடித்து-நகரத்தை அலங்கரிப்பித்து—முடி புனை கடிகொள் மண்டபத்தின் - முடியை யணியும் சிறப்பைப் பொருந்திய மண்டபத்தில்—எழு முரசு அதிர - ஒலியெழுகின்ற முரசங்கள் முழங்க—பகீரதி முதலாம் எத்துறைப் புனல்களும் இயற்றி - கங்கை முதலாகிய எந்தத் துறைகளிலுமுள்ள தீர்த்தங்களையும்வருவிக்க—தொழு முரசுடன் வெள் வலம்புரி முழங்க - அப்பொழுது வென்ற ஏற்றுரிபோர்த்த முரசங்களோடு வெண்மையாகிய வலம்புரிச்சங்குகள் ஒலிக்க—சுருதி மா முனிவரும் தொக்கார் - வேதங்களை யறிந்த பெரியமுனிவர்களும் வந்து கூடினார்கள். எ-று.

இது சொற்பொருட்பின் வருநிலை என்னும் அணி. முனிவரும் என்னும் உம்மை எச்சத்தோடு சிறப்பு. புனல்களும் என்னும் உம்மை முற்று. இயற்றி யென்னுமெச்சம் இயற்றவெனத் திரிக்கப்பட்டது. முழங்க என்னும் எச்சம் இது நிகழாநிற்க இது நிகழ்ந்ததென்னும் பொருட்டு. தொழு இருமடி யாகுபெயர். பகீரதிமுதலாம் எத்துறைப் புனல்களும்என்பதனால் சமுத்திர தீர்த்த முங் கொள்க. நகரிலுள்ளா ரனைவரு மறியுமாறு அறைந்த முரசமென்பார் முழுமுரசென்றார். தொழுமுரசு என்பதற்கு மங்கலமுரசாதலின் எவராலும் மதிக்

கப்படும் முரசு எனப் பொருள்கூறினு மமையும். இப்பொருட்குத் தொழுதல் - மதித்தல். (௩)

அத்தியின்பலகைநவமணியழுத்தியாடகத்தமைத்தரிமுகத்தாற்
பத்திகொள்பீடத்தழகுறவிருத்திப்பசும்பொனின்றசும்புகணிறைந்த
சுத்தநீர்வியாதன்றௌமியன்முதலோர்சொரிந்தனர்சோமன்வந்துதித்
சித்திரகிரியினெடுநிலாவெள்ளஞ்சீருடன்வழியவார்த்தெனவே. [துச்

(இ - ள்.) வியாதன் தௌமியன் முதலோர் - வியாதன் தௌமியன் முதலிய முனிவர்கள்—ஆடகத்து அமைத்து - பொன்னாற் (கேவணத்தைச்) செய்து—நவமணி அழுத்தி - நவரத்தினங்களைப்பதித்து—அரிமுகத்தால் பத்தி கொள் - சிங்கமுகங்களால் வரிசையாகத் தாங்கப்படும்—அத்தியின் பலகைப் பீடத்து அழகுஉற இருத்தி - யானைத்தந்தப்பலகையினாலியற்றிய ஆசனத்திலே தருமனை அழகுமிக இருத்தி—சோமன் வந்து உதித்து - சந்திரன்வந்துதித்து—சித்திரகிரியின் நெடுநிலாவெள்ளம் சீருடன் வழிய வார்த்தென - அழகிய மலையில் மிக்க நிலாவெள்ளத்தைச் சிறப்போடு வழியும்படி வார்த்தாற் போல—பசும் பொனின் தசும்புகள் நிறைந்த சுத்தநீர்-பசுமையாகிய பொற்குடங்களில் நிறைந்திருக்கின்ற சுத்தமாகிய தீர்த்தங்களை—சொரிந்தனர் - சொரிந்தார்கள். எ - று.

அத்தி ஆகுபெயர். சந்திரன் உதிக்கும்போது பொன்னிறமாகக் காணப்படுதலிற் பொற்குடத்துக் குவமையாயிற்று. இனி, அமுதம் பொழிதன்மாத்திரைக்கு அதனை உவமை கூறினதாகக் கோடலுமாம். பொற்குடஞ் சோமனாகவும் தருமன் சித்திரகிரியாகவும் நிலாவெள்ளம் தீர்த்தமாகவுங் கொள்க. (௪)

உதயமால்வரையினுதயராகத்தோடுதித்ததேருதயனென்றுரைப்பத்
துதையளிததைந்தமாலையான்சென்னிச்சோதிமாமகுடமுஞ்சூட்டிப்
பதயுகமரசர்முடிகளாற்சிவப்பப்பகர்விதிமுடித்தபின்பலரு
மிதயமொத்தமிர்தமொழியவரடைவேயிருகைநீராசனமெடுத்தார்.

(இ - ள்.) உதய மால் வரையின் உதயராகத்தோடு உதித்த தேர் உதயன் என்று உரைப்ப-பெரிய உதயகிரியில் உதிக்கும்பொழுதுபொருந்தியசெந்நிறத்தோடுதித்த தேரையுடைய சூரியன் என்றுசொல்ல—துதை அளி ததைந்தமாலையான் சென்னிச் சோதி மா மகுடமும் சூட்டி - நெருங்கிய வண்டுகள் மொய்க்கின்றமாலையையுடைய தருமனது தலையில் ஒளிபொருந்திய பெரியமுடியையுஞ் சூட்டி—அரசர் முடிகளால் பதயுகம் சிவப்ப - அரசர்கள் வணங்கும்பொழுது அவர்முடிகள் படுதலால் அவனுடைய இரு கால்களுஞ் சிவக்க—பலரும் இதயம் ஒத்துப் பகர் விதி முடித்தபின் - வியாதன்முதலிய முனிவர்கள் பலரும் மனமொத்து நூலில் விதித்த விதிகளைச் செய்துமுடித்தபின்பு—அமிர்த மொழியவர்-அமுதம்போலும் இனியசொற்களையுடைய பெண்கள்—அடைவே இருகை நீராசனம் எடுத்தார் - முறையே இரண்டுகைகளாலும் ஆலத்தியை எடுத்தார்கள். எ - று.

மகுடமும் என்னும் உம்மை சிறப்போடெச்சம். ததைந்தஎன்பது காலமயக்கம். நிகழ்தற்பாலனவாகிய கிரியைகள் நிகழ்ந்தபின் நீராசனமெடுத்தன் மரபாதலின் இவரும் அம்முறைபற்றி நிகழ்த்தினரென்பார் அடைவே என்றார். உதயகிரி தருமனாகவுஞ் சூரியன் கிரீடமாகவுங்கொள்க. அமிர்தமொழியவர்பலரும் இதயம்

* *

ஒத்து அடைவே இருகை நீராசனம் எடுத்தார் என்றியைத்துப் பொருள் கொள்ளுதல் இத்துணைச்சிறப்பின்று. (டு)

ஒற்றையொடிரட்டைவலம்புரிமிழற்றவொருகுடைமதியெனநிழற்றக்
கொற்றவர்முன்பின்போதரமடவார்குழுப்பொரிசிந்திவாழ்த்தெடுப்ப
விற்றைநாளெவரும்வாய்த்தவாவெனவேழுயரிராசகுஞ்சரமேன்
மற்றைநால்வருந்தற்சூழ்வரத்தருமன்மைந்தன்மாநகர்வலம்வந்தான்.

(இ - ள்.) தருமன் மைந்தன் - தருமபுத்திரனானவன்—ஒற்றையோடு இரட்டை வலம்புரி மிழற்ற-ஒற்றைச்சங்கோடு இரட்டைச்சங்கம் முழங்க—ஒருகுடை மதி என நிழற்ற-வெண்கொற்றக்குடை பூரணசந்திரனைப்போல நிழலைச்செய்ய—கொற்றவர் முன் பின் போதர - அரசர் முன்னும் பின்னும் போக—மடவார்குழு பொரி சிந்தி வாழ்த்தெடுப்ப - பெண்கள்கூட்டம் நெற்பொரியைச் சிந்தி வாழ்த்தலைச்செய்ய—எவரும் இற்றைநாள் வாய்த்தவா என்ன - பலரும் இந்தநாள் வாய்த்தபடி நன்றென்று சொல்ல—மற்றை நால்வரும் தற்சூழ்வர - ஏனை நான்குதம்பியருந் தன்னைச் சூழ்ந்துவர—ஏழ் உயர் இராச குஞ்சரமேல் மா நகர் வலம் வந்தான் - ஏழுமுழம் உயர்ந்த இராசயானையிலேறிப் பெரிய நகரைப் பிரதக்ஷிணஞ் செய்தான். எ - று.

மிழற்ற, நிழற்ற, போதர, வாழ்த்தெடுப்ப, என்ன, சூழ்வர, வலம்வந்தானெனமுடிக்க. ஒற்றையொடிரட்டைவலம்புரி அரசவரிசைக் குரியவெண்க. முடி சூடி அரசவுரிமையெய்துமவர் ஏனை வாகனங்களையொழித்து அரசுவாவிலேறிவலம்வரல் தொன்றுதொட்ட மரபாதலின், ஏழுயரிராசகுஞ்சரமேலேறினன். யானைக்கு உத்தம இலக்கணம் ஏழுமுழவுயரம். ஏனைநாட்களினும் இற்றைநாள் இக்காட்சிகாண்டற்குரிய சிறப்பையுற்றிருத்தலின் அதனை வாய்த்தவா என்றார். (சு)

மாநகர்வலமாய்வந்துதன்குரவர்மலர்ப்பதமுறைமையால்வணங்கிக்
கோநகரிருக்கையடைந்தனனொருநாட்கொற்றவனேவல்கைக்கொண்டு
பேய்நகரெனுமாறியாவரும்வழங்காப்பிறங்குநீள்கானிடையழிந்த
தூநகர்முன்னோரிருந்ததொன்றதத்தொன்னகர்வைகுமாதுணிந்தான்.

(இ - ள்.) மா நகர் வலமாய் வந்து - பெரிய நகரைப் பிரதக்ஷிணஞ்செய்து—தன் குரவர் மலர்ப் பதம் முறைமையால் வணங்கி-தன் குரவர்களுடைய தாமரை மலர்போலும் பாதங்களை முறைமையோடு வணங்கி—கோநகர் இருக்கை அடைந்தனன் - தலைமையாகிய நகரிலுள்ள மாளிகையை அடைந்த தருமன்—ஒருநாள் கொற்றவன் ஏவல் கைக்கொண்டு-ஒருநாள் திருதராட்டிரமகாராசனுடைய ஏவலை அங்கீகரித்து—பேய் நகர் எனுமாறு - பேய்களினுடைய நகரம் என்று சொல்லும்படி - யாவரும் வழங்கா - எவருஞ் சஞ்சரியாத—பிறங்கு நீள் கானிடை அழிந்த தூநகர் - உயர்ந்த நெடிய காட்டில் அழிந்த நல்ல நகர்—முன்னோர் இருந்தது ஒன்று-பழைய அரசர்கள் இருந்ததொன்றுண்டு—அந்தத் தொல் நகர் வைகுமா துணிந்தான் - அந்தப் பழைய நகரிலிருக்கும்படி துணிந்தான். எ - று.

வழங்கா என்னும் ஈறுதொக்கபெயரெச்சம் நகர் என்னும் பெயர்கொண்டது. அடைந்தனன் என்பது வினையாலணையும்பெயர். கிருபன் துரோணன் வீடுமன்

திருதராட்டிரன் விதுரனுகிய குரவரை யொருவர்பி னொருவராக வணங்கினு னென்பார் முறைமையால் வணங்கி யென்ருர். முறைமையால் வணங்கி யென் பதற்கு முடிசூடி நகர் வலம்வந்தவரசர் குரவரை வணங்கல் வேண்டுமென்னும் வழக்கால் அவரை வணங்கி யெனப் பொருள் கோடலு மொன்று. இப்பொருட்கு முறைமை - வழக்கு. (எ)

அங்கண்மாஞாலமுழுவதுங்கொடுத்தற்காயர்தம்பதியினங்குரித்த, செங்கண்மான்முதலாங்கிளைஞரும் வயிரத்தேர்முதற்சேனையுந்தாமும், வெங்கண்மாசுணத்தோனெண்ணமெத்திசையும்வெளிப்படவேந்தரைவ ரும்போய்த், தங்கண்மாதவத்தாற்காண்டவப்பிரத்தமென்னுமத்தழல் வனமடைந்தார்.

(இ - ள்.) வேந்தர் ஐவரும் - பாண்டவரைவரும்—அம் கண் மா ஞாலம் முழுவதும் கொடுத்தற்கு - அழகிய இடமகன்ற பெரிய பூமிமுழுதையும் தமக்குக் கொடுக்கும்படி—தங்கள் மா தவத்தால் - தங்களுடைய பெரிய தவத்தினுல்—ஆயர்தம் பதியில் அங்குரித்த செம் கண் மால் முதலாம் கிளைஞரும் - இடைச் சேரியில் அவதரித்த சிவந்த கண்களையுடைய கிருட்டிணர் முதலாகிய சுற்றத்தவர் களும்—வயிரத் தேர்முதற் சேனையும் தாமும் - வயிரம்பொருந்திய தேர்முதலிய நால்வகைச்சேனைகளுந் தாங்களும்—வெங்கண் மாசுணத்தோன் எண்ணம் எத்தி சையும் வெளிப்பட - வன்கண்மைபொருந்திய சர்ப்பக்கொடியையுடைய துரியோ தனனது எண்ணம் எந்தத் திசையிலும் வெளிப்படும்படி—காண்டவப்பிரத்தம் என்னும் அத்தழல் வனம் போய் அடைந்தார் - காண்டவப்பிரத்தம் எனப்படும் அந்த அக்கினியையுடைய காட்டைப் போய்ச்சேர்ந்தார்கள். எ - று.

மாசுணம் ஆகுபெயர். காலாள், யானை, குதிரை, தேர் என முறையின் வையாது தலைதடுமாற்றமென்னுந் தந்திரவுத்தியாற் றேரை முன்வைத்தார். வெங் கண் என்றது ஈண்டு மாசுணத்தை விசேடியாதுடையானை விசேடித்து நின்றது. வெங்கண் மாசுணத்தோ னெண்ண மெத்திசையும் வெளிப்பட என்றமையால், காண்டவப் பிரத்தமென்னும் வனத்திலுள்ள அழிந்தநகரைப் பாண்டவர்க்குக் கொடுக்குமாறு துரியோதனனே தந்தையையேவினன் என்பது பெறப்பட்டது. தங்கண்மாதவத்தாற் றழல்வனமடைந்தார் எனப் பொருள் கொள்ளுதல் பொருந் தாது. (அ)

போயவட்புகுந்தபொழுதுபைங்கடலும்பூவையும்புயலுநேர்வடிவின்
மாயவற்கெவ்வாறிவ்வுழியிவர்கள்வாழ்வதென்றொருநினைவெய்தி
நாயகக்கடவுள்ன்னைமுன்னுதலுநாகர்நாயகனெடுநடுங்கி
மேயகட்புலன்கள்களித்திடத்திருமுன்னின்றனன்விச்சுவகன்மா.

(இ - ள்.) போய் அவண் புகுந்தபொழுது - போய் அவ்விடத்தை அடைந்த பொழுது—பைங்கடலும் பூவையும் புயலும் நேர் வடிவின் மாயவற்கு - பசுமை யாகிய சமுத்திரத்தையுங் காயாம்பூவையும் முகிலையும் ஒத்த வடிவத்தையுடைய கிருட்டிணருக்கு—இவர்கள் இவ்வுழி வாழ்வது எவ்வாறு என்று ஒரு நினைவு எய்தி - இவர்கள் இவ்விடத்தில் வாழுவ தெப்படியென்று ஒரு எண்ணம் உண் டாகி—நாயகக்கடவுள் தன்னை முன்னுதலும் - இந்திரனை நினைக்கவும்—நாகர் நாயகனெடு விச்சுவகன்மா நடுங்கி மேய கட்புலன்கள் களித்திடத் திருமுன் நின்

றனன் - அவ்விந்திரனோடு விச்சுவகன்மன் நடுங்கிப் பொருந்திய தன்னிருகண்க ளும் களிப்படையக் கிருட்டிணருடைய திருமுன்னே நின்றான். எ - று.

பைங்கடலும் பூவையும் புயலுநேர்வடிவென்றது பலபொருளுவமை. முப் பத்துமுக்கோடி தேவர்க்கு மதிபனாதலின் இந்திரனை நாயகக் கடவுளென்றும் காண்டவப்பிரத்தம் என்னும் வனத்தில் நகரை யமைப்பித்தற்கு விச்சுவகன்ம னுடைய வரவைவிரும்பி இந்திரனை நினைத்தமையின் விச்சுவகன்மா முன்னின் றனன் என அவன்வரவை விதந்துங் கூறினார். எம்பெருமான் நாயேனைப் பொரு ட்படுத்தழைத்து வருகவென்றென் னெசமானனை நினைத்த தென்னையோவென் றவச்சத்தால் விழுங்கப்பட்டமையின் நடுங்கியும், கிருட்டிணரைத் தரிசித்தமை யிற் கண்களித்தும் நின்றானென்க. (கூ)

நுண்ணிதினுணர்ந்தோருணர்தருஞ்சிற்பநூலறிபுலவனைநோக்கித்
திண்ணிதினமரர்சேகரன்மொழிந்தான்றேவருமனிதரும்வியப்ப
மண்ணினும்புயங்கர்பாதலமுதலாமற்றுளவுலகினுநமதாம்
விண்ணினுமுவமையிலதெனக்கடிதோர்வியனகர்விதித்திநீயெனவே.

(இ - ள்.) அமரர் சேகரன் - தேவர்களுக்குத் தலைவனாகிய இந்திரன்—நுண் ணிதின் உணர்ந்தோர் உணர்தரும் சிற்பநூல் அறி புலவனை நோக்கி - நுட்பமா கக் கருவிநூற் பொருள்களை யறிந்தோர் அறியுஞ் சிற்பசாத்திரத்தை யறிந்த அறி ஞனாகிய விச்சுவகன்மனைப் பார்த்து—தேவரும் மனிதரும் வியப்ப - தேவர்களும் மனிதர்களும் வியக்க—மண்ணினும் - பூமியினும்—புயங்கர் பாதலம் முதல் ஆம் மற்று உள உலகினும் - நாகர்கள் வசிக்கும் பாதலமுதலாகிய வேறாயுள்ள உலகங் களினும்—நமது ஆம் விண்ணினும் உவமை இலது என - நம்முடையதாகிய சுவர்க்கத்திலும் உவமை இன்று என்று சொல்ல—ஓர் வியன் நகர் கடிது நீ விதி த்தி என - ஒரு சிறந்த நகரத்தை விரைந்து நீ செய்குதியென்று—திண்ணிதின் மொழிந்தான் - உறுதியாகச் சொன்னான். எ - று.

ஏ - அசை. உணர்ந்தோர் நுண்ணிதின் உணர்தரும் சிற்பநூல் என மாற்றிப் பொருள்கோடலுமொன்று. தான்கூறிய இலக்கணத்திற் சிறிதுங் குறைபாடிலதா யியற்றுகவென யாப்புறுத்துவானாய்த் திண்ணிதின் மொழிந்தானென்க. கருவி நூல்களென்றது நிகண்டு வியாகரணம் தருக்க முதலியவற்றை. அமரர்சேகரன் என்பதற்குக் கிருட்டிணர் எனப் பொருள்கூறின், நமதாம் விண்ணினும் என்ற மையினாலும் அவ்விந்திரன் பெயரால் இந்திரப் பிரத்தமென்றிட்டான் என்றமை யினாலும் அது பொருந்தாதென்க. (கo)

தேவினுந்தேவயோனியிற்பிறந்ததிரளினுஞ்சிறந்தயாவர்க்கும்
பூவினுமெவ்வெவ்வுலகினுமுன்னம்புந்தியாலியற்றியபுரங்கள்
யாவினுமழகும்பெருமையுந்திருவுமின்பமுமெழுமடங்காக
நாவினும்புகலக்கருத்தினுநினைக்கவரியதோர்நலம்பெறச்சமைத்தான்.

(இ - ள்.) தேவினும் - தேவர்களுக்கும்—தேவயோனியிற் பிறந்த திரளி னும் - தேவயோனிகளிற் பிறந்த கூட்டத்திற்கும்—சிறந்த யாவர்க்கும் - சிறந்த மற்றை எவர்களுக்கும்—பூவினும் எவ்வெவ்வுலகினும் முன்னம் புந்தியால் இயற்றிய புரங்கள் யாவினும் - பூமியினும் மற்றெந்த வெந்த வுலகங்களினும்

முற்காலத்திலே தன் மனத்தால் நினைத்துச்செய்த நகரங்கள் எவற்றினும்—அழகும் பெருமையும் திருவும் இன்பமும் ஏழு மடங்கு ஆக - அழகும் பெருமையுஞ் செல்வமும் இன்பமும் ஏழுமடங்காக—நாவினும் புகலக் கருத்தினும் நினைக்க அரியதோர் நலம் பெற - நாவினுற் சொல்லவும் மனத்தினுல் நினைக்கவுமரிய நன்மையைப்பொருந்த—சமைத்தான் - நகரை உண்டாக்கினுன். எ - று.

நாவினும் கருத்தினும் என்னும் உம்மைகள் பிரித்துக் கூட்டப்பட்டன. நாவினுங் கருத்தினும் முறையே புகல நினைக்க என்றியைப்பினுமமையும். தேவயோனியிற் பிறந்ததிரள் என்றது சித்தர் வித்தியாதரர் கந்தருவர் முதலியோரை. இனி, தேவினுந்தேவயோனியிற்பிறந்ததிரளினுஞ் சிறந்த யாவர்க்கு மென்பதற்குத் தேவரினுள்ளுந் தேவயோனியிற் பிறந்த திரளினுள்ளுஞ் சிறப்புற்றேரெவர்க்குமெனப் பொருள்கோடலுமொன்று. (கக)

*மரகதங்கோமேதகந்துகிர்தரளம்வைரம்வைதூரியநீல*
*மெரிமணிபுட்பராகமென்றிவற்றிற்காகரமிந்தமாநகரென்*
*றரிமுதலிமையோரனைவரும்புகழ்ந்தாராடகப்பொருப்பினையழித்துத்*
*தரணியினகரொன்றமைத்தவாவென்றுதபதியர்யாவரும்வியந்தார்.*

(இ - ள்.) மரகதம் கோமேதகம் துகிர் தரளம் - மரகதம் கோமேதகம்பவளம் முத்து—வைரம் வைதூரியம் நீலம் எரிமணி புட்பராகம் என்று இவற்றிற்கு - வைரம் வைரேியம் நீலம் மாணிக்கம் புட்பராகம் என்றுசொல்லப்பட்ட இந்த நவரத்தினங்களுக்கும்—இந்த மா நகர் ஆகரம் என்று - இந்தப்பெரிய நகரம் உண்டாகுமிடம் என்று—அரிமுதல் இமையோர் அனைவரும் புகழ்ந்தார் - விட்டுணுமுதலான தேவர்களனைவரும் புகழ்ந்தார்கள்—ஆடகப் பொருப்பினை அழித்து - மேருமலையை வடிவழித்து—தரணியில் நகர் ஒன்று அமைத்தவா என்று - பூமியிலே நகரம் ஒன்று அமைத்தவாறு என்னை என்று—தபதியர் யாவரும் வியந்தார் - சிற்பியரனைவரும் புகழ்ந்தார்கள். எ - று.

மரகதமுதலிய நவமணிகளால் இந்நகர முழுவதுஞ் செய்யப்பட்டமையின் இவற்றிற்காகரமிந்தமாநகரென்றூர். தோற்றத்தாலும், ஒளியாலும் மேருவை மலையாந்தன்மையைக் கெடுத்து நகராந்தன்மையாக்கியதென்னையென்று தபதியர் வியந்தாரென்க. வைரேியத்தை வைதூரியமெனவும் வழங்குப. ஆகரம் பொன் மணி முதலியன உண்டாகுமிடம். அரிமுதலிமையோரென்பதற்கு இந்திராதிதேவரெனப் பொருள்கூறுவாருமுளர். (கஉ)

*என்பதியழகுகுலைந்ததென்றெண்ணியிந்திரன்வெறுக்கவுமியக்கர்*
*மன்பதிபொலிவுசிதைந்ததென்றிடவுமற்றுளவானவர்பதிகள்*
*புன்பதியாகிப்போயினவெனவும்புரையறுபுந்தியாற்புவிமே*
*னன்பதியிதுவொன்றியற்றினனென்றுநாரணுதிகடுதித்திடவும்.*

(இ - ள்) இந்திரன் - இந்திரனைவன்—என்பதி அழகு குலைந்தது என்று எண்ணி வெறுக்கவும் - எனதுநகரம் அழகுநீங்கியதென்று எண்ணி அதனை வெறுக்கவும்—இயக்கர்மன் - குபேரன்—பதி பொலிவு சிதைந்தது என்றிடவும் - எனதுநகரம் பொலிவுகுறைந்ததென்று சொல்லவும்—மற்று உள வானவர் - ஒழிந்த தேவர்கள்—பதிகள் புன்பதி ஆகிப் போயின எனவும் - எங்கள் நகரங்கள் எளிய

நகரங்களாகிப்போயின என்று சொல்லவும்—நாரணாதிகள் - விட்டுணுமுதலாயினோர்—புரை அறு புந்தியால் புவிமேல் நன் பதி இது ஒன்று இயற்றினன் என்று துதித்திடவும் - (விச்சுவகன்மன்) தனது குற்றமற்ற மனத்தாற் பூமியிலே நல்ல நகரமிதுவொன்றைச் செய்தான் என்று புகழவும். எ - று.

சுவர்க்கம் அழகினும் போகத்தினும், அளகை செல்வப்பொலிவினுஞ் சிறந்தனவென்க. (கங)

சந்திராபதமுந்தினகராபதமுமிருபொழுதினுமெழச்சமைத்த
மந்திராதிகளுமஞ்சமுமதிலுமகரதோரணமணிமறுகுங்
கொந்திராநின்றசோலையுந்தடமுங்கொற்றவன்கோயிலுநோக்கி
யிந்திராபதியவ்விந்திரன்பெயராலிந்திரப்பிரத்தமென்றிட்டான்.

(இ - ள்.) சந்திராபதமும் தினகராபதமும் இருபொழுதினும் எழச் சமைத்த - சந்திரனுக்கு ஆபத்தும் சூரியனுக்கு ஆபத்தும் மாலை காலை என்னு மிருகாலத்தினும் உண்டாகும்படி உண்டாக்கிய—மந்திராதிகளும் - மாளிகைமுதலாயினவைகளையும்—மஞ்சமும் மதிலும் மகரதோரண மணி மறுகும் - மஞ்சங்களையும் மதில்களையும்மகரதோரணங்கள்செறிந்த அழகியவீதிகளையும்—கொந்து இராநின்ற சோலையும் - பூங்கொத்துக்கள் பொருந்தாநின்ற சோலைகளையும்—தடமும் கொற்றவன் கோயிலும் - தடாகங்களையும் அரசனாகிய தருமனுடைய கோயிலையும்—இந்திராபதி நோக்கி - கிருட்டிணர் பார்த்து—அவ் இந்திரன் பெயரால் இந்திரப்பிரத்தம் என்று இட்டான் - அந்நகரைச்செய்வித்த இந்திரனுடைய பெயரினாலே அதற்கு இந்திரப்பிரத்தம் என்று பெயரிட்டார். எ - று.

இந்திரா - இலக்குமி; அது ஐயீருகாது நின்றது. வெறுக்கவும், என்றிடவும், எனவும், துதித்திடவும், சமைத்த மந்திராதிகள் எனவும், எழச்சமைத்த மந்திராதிகள் எனவும் இயையும். மிகவுயர்ந்தமையினாலே சந்திர சூரியர்களுடைய செலவைத் தடுத்ததென்பார் சந்திராபதமுந் தினகராபதமுமிருபொழுதினுமெழ என்றார். ஆபதம் - ஆபத்து. (கச)

இமையவர்பதியிலுள்ளனயாவுமிங்குளவிங்குமற்றுள்ள
வமைவுறுபொருள்களங்கிலவெனுமாறமைத்தவான்றொல்பதியழகைச்
சமைவுறவிரித்துப்புகழ்வதற்குன்னிற்சதுர்முகத்தவனுமெய்தளரு
நமர்களானவிலமுடியுமோமுடியாதாயினும்வல்லவாநவில்வாம்.

(இ - ள்.) இமையவர்பதியில் உள்ளன யாவும் இங்கு உள - தேவருலகிலுள்ளனவெல்லாம் இந்நகரத்தில் உள்ளன—இங்கு உள்ள அமைவு உறுபொருள்கள் - இந்நகரிலுள்ள நிறைந்த பொருள்கள்—அங்கு இல எனுமாறு அமைத்த வான் தொல் பதி அழகை - அந்நகரத்தில் இல்லையென்றுசொல்லும்படி உண்டாக்கிய பெரிய பழைய இந்நகரத்தினழகை—சமைவு உற விரித்துப் புகழ்வதற்குஉன்னில் - முடிவுபெற விரித்துச்சொல்லுவதற்குச் சிந்திக்கில்—சதுர்முகத்தவனும் மெய் தளரும் - பிரமனும் உடம்புவருந்துவன்—நமர்களால் நவில முடியுமோ - (அங்ஙனமாயின்) நம்மவர்களால் விரித்துச்சொல்லக்கூடுமோ—முடியாது - கூடாது—ஆயினும் வல்லவா நவில்வாம் - ஆயினும் இயன்றவாறு சொல்லுவாம். எ - று.

மற்று அசை. ஒகாரம் வினு. சதுர்முகத்தவனும் ஆயினும் என்னும் உம்மைகள் சிறப்பு. இந்நகரத்தினழகை நான்கு முகங்களையுடைய பிரமனும் விரித்துக் கூறமுடியாது; அங்கனமாயின் ஒருமுகத்தையுடைய நமர்களாற் கடைபோகக் கூறல் எங்ஙனம் இயலுமென்பார் தொல்பதியழகைச் சமைவுற விரித்துப் புகழ்வதற் குன்னிற் சதுர்முகத்தவனு மெய்தளரு நமர்களா னவில முடியுமோ முடியாதென்றார். (கடு)

விதிமறைமுறையிற்சாந்திசெய்கடவுள்வேதியராரவமொருசார்
மதிமுறைதவறுவமைச்சர்சொல்விழையுமன்னவராரவமொருசார்
நிதிகெழுசெல்வத்தளகையோர்நெருக்கானிறைந்தபேராரவமொருசார்
பதிதொறுமுழவர்விளைபயனெடுக்கும்பறைகறங்காரவமொருசார்.

(இ - ள்.) மறை விதி முறையில் சாந்தி செய் கடவுள் வேதியர் ஆரவம் ஒருசார் - வேதவிதியின் முறைமையினால் யாகத்தைச் செய்கின்ற தெய்வத்தன்மை பொருந்திய பிராமணர்களுடைய ஆரவாரம் ஒருபக்கத்தில்—மதி முறை தவறு அமைச்சர் சொல் விழையும் மன்னவர் ஆரவம் ஒருசார் - புத்தியின் முறைமை தவறாத மந்திரிகளுடைய சொல்லை விரும்பும் அரசர்களினாரவாரம் ஒருபக்கத்தில்—நிதிகெழு செல்வத்து அளகையோர் நெருக்கால் நிறைந்த பேர் ஆரவம் ஒருசார் - நிறைவுபொருந்திய செல்வத்தையுடைய செட்டிகளின் நெருக்கினாலே நிறைந்த பெரிய ஆரவாரம் ஒருபக்கத்தில்—பதிதொறும் உழவர் விளைபயன் எடுக்கும் பறை கறங்கு ஆரவம் ஒருசார் - ஊர்கடோறும் வேளாளர்கள் விளையும் பிரயோசனங்களை எடுத்தற்கேதுவாகிய பறைகள் ஒலிக்கும் ஆரவாரம் ஒருபக்கத்தில். எ-று.

எடுக்கும் என்னும் பெயரெச்சம் பறை என்னுங் கருவிப்பெயர் கொண்டது. சாந்தியாகச் செய்யப்படும் யாகத்தைச் சாந்தியென்றது ஆகுபெயர். இச்செய்யுள் சாதித்தன்மையென்னு மலங்காரமுஞ் சொற்பொருட்பின்வருநிலையென்னுமலங்காரமுங் கொள்ளக்கிடந்தது. நீதியுடைய மன்னரென்பார் மதிமுறை தவறுவமைச்சர் சொல்விழையுமன்னவர் என்றும், ஆதியிலே வணிகர் அளகாபுரியினின்று பூமியில் வந்தாரென்னுங் கதையையுட்கொண்டு அவரை அளகையோரென்றுங் கூறினர். திருவிளையாடற்புராணத்தில் "நம்மளகாபுரம்" என வணிகப்பெண் கூறியதூஉம் இதுபற்றியென்க. மறைவிதியென மாற்றாது விதிமறையெனக்கொண்டு விதியையுடைய மறை எனப் பொருள் கூறுதலும், நிதிகெழுசெல்வம் என்பதற்குச் சங்கநிதி பதுமநிதியோடு சேர்ந்த செல்வமெனப் பொருள்கூறி, அது அளகையை விசேடித்ததெனக்கோடலும் பொருந்தும். (கசு)

தோரணமஞ்சத்தலந்தொறுநடிக்குந்தோகையர்நாடகமொருசார்
பூரணபைம்பொற்கும்பமுமொளிகூர்புரிமணித்தீபமுமொருசார்
வாரணமிவுளிதேர்முதனிரைத்தவாகமுஞ்சேனையுமொருசார்
நாரணன்வனசபதயுகம்பிரியாநலம்பெறுமாதவரொருசார்.

(இ - ள்.) தோரண மஞ்சத் தலந்தொறும் நடிக்கும் தோகையர்நாடகம் ஒருசார் - தோரணங்களையுடைய மஞ்சங்களினிடங்கடோறும் நடஞ்செய்கின்ற பெண்களுடைய நாட்டியம் ஒருபக்கத்தில்—பைம் பொன் பூரணகும்பமும் ஒளி கூர் புரி மணித்தீபமும் ஒருசார் - பசும்பொன்னாற்செய்த பூரண கும்பங்களும் ஒளிமிக்க விரும்பப்படும் இரத்தினதீபங்களும் ஒரு பக்கத்தில்—வாரணம் இவுளி தேர்முதல் நிரைத்த வாகமும் சேனையும் ஒருசார் - யானைகுதிரை தேர்முதலாக நிரைக்க

ப்பட்ட படைகளும் பதாதிகளும் ஒருபக்கத்தில்—நாரணன் வனச பதயுகம் பிரியா நலம் பெறு மாதவர் ஒருசார் - விஷ்ணுவினுடைய தாமரைமலர்போன்ற பாதங்களிரண்டையும் இடைவிடாது சிந்திக்கும் நலத்தைப்பெறுகின்ற பெரிய தவத்தினையுடையோர் ஒருபக்கத்தில். எ - று.

வேசரியுஞ் சேனையின்பாற்படுதலின், வாரணமிவுளிதேர்முதனிரைத்த வாகம் என்றார். "சேனையானைதேர்மாச்சதுரங்கம்" என்புழிப்போல ஈண்டுச் சேனையென்பது பதாதியையுணர்த்திற்று. வாரணமிவுளிதேர் மூன்றும் அஃறிணைப்பொருளாதலின் அவற்றை ஒருசேரவும், சேனை உயர்திணைப்பொருளாதலின் அதனைப்பிரித்து வேறாகவுங்கூறி, அவற்றுள்ளும் மதத்தாற் கதஞ்சிறந்து தானே பொருதலின் யானையை முன்னரும் மதமின்மையினாலே கதஞ்சிறவாமையிற் குதிரையை அதன்பின்னரும் குதிரையானன்றித் தானியங்காமையிற்றேரை அதன்பின்னரும் வைத்தாரென்க. இனி, வாகமென்பதற்கு வாகனமென்றும் சேனையென்பதற்கு நால்வகைச்சேனையென்றும் பொருள்கொண்டு, முதலென்பதனாற் சிவிகைமுதலியன கோடலுமொன்று. (௧௭)

சிற்பவல்லபத்தின்மயன்முதனுள்ளதெய்வவான்றபதியரொருசார்
வெற்பகமருவிவீற்றுவீற்றிருக்கும்விஞ்சையர்கின்னரரொருசா
ரற்புதவடிவினுருப்பசிமுதலாமழகுடையரம்பையரொருசார் [ர்
பொற்புடையமரர்பதியுமெய்ம்மகிழ்ந்துபொழிதருபொன்மலரொருசா

(இ - ள்.) சிற்ப வல்லபத்தின் மயன்முதல் உள்ள தெய்வ வான் தபதியர் ஒருசார் - சிற்பநூலில் வல்லபத்தையுடைய மயன்முதலாயுள்ள பெருமைபொருந்திய தெய்வத்தச்சர்கள் ஒருபக்கத்தில்—வெற்பு அகம் மருவி வீற்று வீற்று இருக்கும் விஞ்சையர் கின்னரர் ஒருசார் - வெள்ளிமலையினிடங்களைப்பொருந்தி வெவ்வேறாய் இருக்கின்ற விஞ்சையர்களுங் கின்னரர்களும் ஒருபக்கத்தில்—அற்புத வடிவின் உருப்பசி முதலாம் அழகு உடை அரம்பையர் ஒருசார் - அதிசயத்தைத்தரும் உருவத்தையுடைய உருப்பசிமுதலாகிய அழகினையுடைய தெய்வப்பெண்கள் ஒருபக்கத்தில்—பொற்பு உடை அமரர்பதியும் மெய்மகிழ்ந்து பொழிதரு பொன்மலர் ஒருசார் - அழகினையுடைய தேவருலகத்தவர்களும் உடம்புகளித்துப் பொழிகின்ற பொற்பூக்கள் ஒருபக்கத்தில். எ - று.

உம்மை சிறப்பு. சிற்பம், அமரர்பதி என்பன ஆகுபெயர்கள். விஞ்சையர் கின்னரர் வெள்ளிவெற்பையிடமாகக் கொள்ளினும் அதனுள் ஒருசேரவிராது தத்தமக்கு வெவ்வேறாக வகுக்கப்பட்ட இடங்களில் இருத்தலின் வெற்பகமருவிவீற்றுவீற்றிருக்கும் விஞ்சையர் கின்னரர் என்றார். வெற்பகமெனப் பொதுப்படக்கூறினாரேனும் ஈண்டு வெள்ளிமலையையே கொள்க; அவர் வசித்தற்குரியதது வேயென்பது நூற்றுணிபாதலின். அமரர்பதி என்பதற்கு இந்திரன் எனப்பொருள்கொள்ளுதல் ஈண்டுப் பொருந்தாது. (௧௮)

வரையெலாமகிலுஞ்சந்தனதருவுமான்மதநாவியின்குலமுந்
திரையெலாமுத்தும்பவளவண்கொடியுஞ்செம்மணிகளுமரகதமுங்
கரையெலாம்புன்னைக்கானமுங்கண்டலடவியுங்கைதையங்காடுந்
தரையெலாம்பொன்னும்வெள்ளியும்பழனவேலிசூழ்சாலியுங்கரும்பும்.

(இ - ள்.) வரை எலாம் அகிலும் சந்தன தருவும் மான்மத நாவியின் குலமும் - மலைகளிலெல்லாம் அகிலமரங்களும் சந்தனமரங்களும் கஸ்தூரி மிருகங்களின் கூட்டங்களும்—திரை எலாம் முத்தும் வண் பவளக் கொடியும் செம்மணிகளும் மரகதமும் - கடல்களிலெல்லாம் முத்துக்களும் அழகிய பவளக் கொடிகளும் மாணிக்க ரத்தினங்களும் மரகத ரத்தினங்களும்—கரை எலாம் புன்னைக் கானமும் கண்டல் அடவியும் கைதை அம் காடும் - கடற்கரைகளி லெல்லாம் புன்னைக்காடும் கண்டற்காடும் தாழைக்காடும்—தரை எலாம் பொன்னும் வெள்ளியும் - வெறுநிலங்களிலெல்லாம் பொன்னும் வெள்ளியும்—பழன வேலி சூழ் சாலியும் கரும்பும் - மருதநிலங்களிலெல்லாம் சூழ்ந்த நெற்களும் கரும்புகளும். எ - று.

அம் சாரியை. மான்மதநாவி என்பது இரண்டனுருபும் பயனுமுடன் றொக்க தொகை. கண்டல் - ஓர்மரம். தரை என்பதற்கு முல்லைநிலம் எனப் பொருள் கொண்டு அது வனஞ்சார்ந்த நிலமாதலின், அவ்வனமெல்லாம் பொன் வெள்ளி படும் ஆகரமாயிருக்கும் என அகலங்கூறி, நானிலங்களையுஞ் சிறப்பித்தாரென்றலு மொன்று. (௧௯)

ஆலையிற்கரும்பின்கண்களிற்றெறித்தவாரமும்வயற்புறத்தடுத்த
சோலையிற்பயிலுங்குயிலையுஞ்சுருதிச்சுரும்பையுநிரைநிரைதுரப்ப
வேலையிற்குதித்தவாளையேறும்பர்வியனதிகலக்கிவெண்டிங்கண்
மாலையிற்பரவும்வானமீன்கொடிபோல்வாவியிற்குளிக்குமாமருதம்.

(இ - ள்.) மா மருதம் - பெரிய மருதநிலங்களில்—ஆலையில் கரும்பின் கண்களில் தெறித்த ஆரமும் - ஆலையிலிட்ட கரும்புகளின் கணுக்களினின்று தெறித்த முத்துக்களும்—வயல் புறத்து அடுத்த சோலையில் பயிலும் குயிலையும் - வயல்களின் புறத்திலுள்ள சோலைகளிலிருக்குங் குயில்களையும்—சுருதிச் சுரும்பையும் நிரை நிரை துரப்ப - சுதியையுடைய வண்டுகளையும் நிரை நிரையாக ஓட்டுவன—வேலையில் குதித்த வாளை ஏறு - சமுத்திரத்தினின்று தாவிய வாளை யேறுகள்—வியன் உம்பர் நதி கலக்கி - பெருமையையுடைய ஆகாயகங்கையைக் கலக்கி—வெண் திங்கள் மாலையில் பரவும் வானமீன் கொடிபோல் வாவியில் குளிக்கும் - வெண்மையாகிய இளம்பிறையுதிக்கும் மாலைக்காலத்திற் பரம்பும் நக்ஷத்திரத்தின் வரிசைபோல வாவிகளிலே முழுகும். எ-று

ஆரமும் என்னும் உம்மை சிறப்பு. "கடல்வாழ்சுறவு மேறெனப்படுமே" என்றதனால் வாளையேறென்றார். மாமருதம் என்பதில் ஏழனுருபை விரியாது நிலத்தைக் கருத்தாவாக்கிக்கூறலுமொன்று. களங்கமில்லாவிளம்பிறையென்பார் வெண்டிங்களென்றும், இரவினும்பார்க்க மாலையிற்றாரகை யொளிமிக்கு விளங்கலியல் பென்பார் மாலையிற்பயிலும் வானமீனென்றும், வாளையேறுகள் ஒன்றன்பின்னொன்று தொடர்ந்து சென்றமைபோதரக் கொடியென்றுங் கூறினர். வேலையிற்குதித்த வாளையேறு வாவியிற்குளிக்குமாமருதம் என்பதனால் நெய்தற்றிணையோடு மருதத்திணைமயக்கங் கூறப்பட்டது. (௨௦)

புரிசையிற்குடுமிதொறுநிரைதொடுத்தபொற்கொடியாடையினிழலைக்
கிரிமிசைபறக்குமன்னமென்றெண்ணிக்கிடங்கில்வாழோதிமக் கிளைகள்
விரிசிறைப்பறவின்கடுமையாலெய்திமீதெழுமஞ்செனக்கலங்கிப்
பரிசயப்படுதண்சததளப்பொகுட்டுப்பார்ப்புறைபள்ளிவிட்டகலா.

(இ - ள்.) கிடங்கில் வாழ் ஓதிமக் கிளைகள் - அகழியில் வாழுகின்ற அன்னக் கூட்டங்கள்—புரிசையில் குடுமிதொறும் நிரை தொடுத்த பொன் கொடி ஆடையின் நிழலை - மதில்களிலுள்ள சிகரங்கடோறும் நிரையாகக் கட்டப்பட்ட அழகிய கொடிப்புடைவைகளின் ரூபத்தை—கிரிமிசை பறக்கும் அன்னம் என்று எண்ணி - மலைகளின்மேற்பறக்கும் அன்னங்கள் என்று சிந்தித்து—விரி சிறைப் பறவின் கடுமையால் எய்தி - விரிந்த சிறகினது பறத்தலின் வேகத்தாற்சென்று—மீது எழும் மஞ்சு எனக் கலங்கி - பின்னர் மலைமீது எழுகின்ற முகிலென்று கலங்கி—பரிசயப்படு தண் சததளப் பொகுட்டுப் பார்ப்பு உறை பள்ளிவிட்டு அகலா- தாம் பழகிய குளிர்ந்த தாமரைப்பொகுட்டாகிய குஞ்சுகளிருக்கின்ற சயனத்தை விட்டு நீங்கா. எ - று.

ஓதிமக்கிளைகள் எண்ணி, எய்தி, கலங்கி அகலா எனமுடிக்க. பறத்தல் பறவெனநின்றது ; "பறவியல்வாவல்" என்றாற்போல. பொகுட்டுப்பள்ளியென்றியையும். இச்செய்யுள் மயக்கவணி. நீரில்வாழுந் தஞ்சாதிபோலாது மலையில் வாழும் வேற்றுச்சாதியாயினும் அன்னமென்னுஞ் சாதியொற்றுமையால் அவற்றைக்காணச்சென்று, பின் இவை அன்னங்களல்ல முகிலென்று கலங்கிப் பள்ளிவிட்டகன்றிலவென்க. மலையில்வாழும் அன்னச்சாதிகளு முளவாதலிற் கிரிமிசைபறக்குமன்னம் என்றும், பரிசயப்படாவிடத்திற்பயிலின் அப்பயிற்சி பின்னுங் கலங்குதற் கேதுவாலிற், பரிசயப்பட்டவிடத்திற் பயின்றதென்பார் பரிசயப்படுதண் சததளப்பொகுட்டுப் பள்ளியென்றுங் கூறினர். கிரிமிசை பறக்குமன்னம் என்பதற்கு மலைமீதுபறக்குந் தஞ்சாதி யன்னமென்றல் பொருந்தாது. (உக)

கயற்றடஞ்செங்கட்கன்னியர்க்கிந்துகாந்தவார்சிலையினுலுயரச்
செயற்படுபொருப்பின்சாரலிற்கங்குற்றெண்ணிலாவெறித்தலினுருகி
வியப்பொடுகுதிக்குந்தாரைகொளருவிவிழைவுடன்படிவனசகோர
நயப்புடையன்னச்சேவல்பேடென்றுநண்ணலாலுளமிகநாணும்.

(இ - ள்.) கயல் தடம் செம் கண் கன்னியர்க்கு - கயல்போலும் விசாலித்த செவ்வரிபரந்த கண்களையுடைய பெண்கள் விளையாடுதற்கு—வார் இந்து காந்தச் சிலையினால் உயரச் செயற்படு பொருப்பின் சாரலில் - நெடிய சந்திர காந்தக்கல்லினாலே உயரமாகச் செய்யப்பட்ட மலையின்சாரலிலே—கங்குல் தெள் நிலா எறித்தலின் - இராக்காலத்திற்றெளிந்த நிலா எறித்தலினாலே—உருகி வியப்பொடு குதிக்கும் தாரைகொள் அருவி - உருகி வியக்கப்படுதலோடு குதிக்கின்ற தாரையாகிய அருவியில்—விழைவுடன் படிவன சகோரம் - விருப்புடன் முழுகுகின்ற சகோரப்பக்ஷிகள்—நயப்பு உடை அன்னச் சேவல் பேடு என்று நண்ணலால் - விருப்பினையுடைய சேவலன்னங்கள் தம்மைப் பெடை யன்னங்களென்று கருதிச் சமீபித்தலால்—உளம் மிக நாணும் - மனம் மிக வெட்கிக்கும். எ-று.

படிவன பெயரெச்சமுற்று. இதுவும் மேலையணி. வெண்மைநிறத்தானும் நீரின்மூழ்கலையுவத்தலானுங் காமவிச்சைமீதூர்ந்து அதனால் விழுங்கப்பட்டமையினும் அன்னச்சேவல்கள் சகோரங்களைப் பெடையென நணுகுதலையும், வேற்றுச் சாதியான அன்னச்சேவல்கள் தம்மைப் பெடையென்றணுகன் மாத்திரையேயன்றிப் புணர்ச்சிக்குரிய விங்கிதங்களையு நிகழ்த்தலிற் சகோரம் உளமிக நாணுதலையுஞ் செய்தனவென்க. (உஉ)

அரிமணிச்சிலையின்சலாகையால்வட்டமாகவேயமைத்தசாலகந்தோ
றெரிமணிக்குழையார்வதனமண்டலத்திலெழிலுடன்மிளிருமைத்தடங்
விரிமணிக்கதிரோனளிக்கமுன்களிந்தவெற்பிடைவீழுமாநதியின் [கண்
புரிமணிச்சுழியிற்றுணையொடுமுலாவிப்பொருவனகயல்களேபோலும்.

(இ - ள்.) அரி மணிச் சிலையின் சலாகையால் - ஒளிபொருந்திய நீலரத்தின மாகிய கல்லின் சலாகையினால்—வட்டமாக அமைத்த சாலகம்தோறும் - வட்ட மாகச் செய்யப்பட்ட சாளரங்கடோறும்—எரி மணிக் குழையார் வதன மண்டலத்தில்—மாணிக்கரத்தினங்களழுத்திய காதணியையுடைய பெண்களின் முகமண்டலத்தில்—எழிலுடன் மிளிரும் மைத் தடம் கண் - அழகோடு விளங்குகின்ற மை தீட்டிய விசாலமாகிய கண்கள்—விரி மணிக் கதிரோன்முன் அளிக்க - பரந்த அழகிய கிரணங்களையுடைய சூரியன் முற்காலத்திற் பெற-களிந்த வெற்பிடை வீழும் மா நதியின் புரி மணிச் சுழியில் - களிந்த மலையினின்றும் விழும் பெரிய காளிந்தி நதியில் உண்டாகின்ற நீலநிறத்தை யுடைய சுழியிலே—துணையொடும் உலாவிப் பொருவன கயல்கள் போலும் - துணையோடும் உலாவி ஒன்றோடொன்று போர் செய்கின்ற கயல்மீன்களை ஒக்கும். எ - று.

ஏ - அசை; தேற்றமெனினும்அமையும். பொருவனபெயரெச்சமுற்று. அளிக்க என்னுஞ் செயவெனெச்சம் ஏதுப்பொருட்டு. மணிச்சிலை இருபெயரொட்டு. தடங்கண் போலும் என்க. வட்டமாகிய சாலகங்கள் களிந்தநதிச் சுழியாகவும் அவற்றிலுள்ள கண்கள் துணையொடுமுலாவிப் பொருகயல்களாகவுங் கொள்க. (௨௩)

இனத்தினுயர்ந்தவிந்திரபுரியுமிந்திரப்பிரத்தமுமிரண்டுங் [கொண்
தனத்தினுணர்வாற்கேள்வியாலழகாற்றக்கதொன்றியாதெனத்துலை
மனத்தினனிறுக்கவுயர்ந்ததொன்றொன்றுமண்மிசையிருந்ததுமிகவுங்
கனத்தினலன்றித்தாழுமோயாருங்கண்டதுகேட்டதன்றிதுவே.

(இ - ள்.) இனத்தினல் உயர்ந்த இந்திரபுரியும் இந்திரப்பிரத்தமும் இரண்டும் - இனமாகிய மற்றை நகரங்களுள் உயர்ந்த அமராவதியும் இந்திரப்பிரத்தமுமாகிய இரண்டிலும்—தனத்தினல் உணர்வால் கேள்வியால் அழகால் - திரவியத்தினலும் அறிவினலும் கல்வியினலும் அழகினலும்—தக்கது ஒன்றுயாது எனத் துலைகொள் மனத்தினல் நிறுக்க - தகுந்ததொன்று எதுவென்று தராசின்றன்மையைக்கொண்ட மனத்தால் நிறுக்க—ஒன்று உயர்ந்தது - அமராவதி யுயர்ந்தது—ஒன்று மண்மிசை இருந்தது - இந்திரப்பிரத்தம் பூமியிலிருந்தது—மிகவும் கனத்தினல் அன்றித் தாழுமோ - மிகவும் பாரத்தினலன்றித் தாழுமா—இது யாரும் கண்டது - இது எவருங் கண்ணுற்கண்டது—கேட்டதன்று-செவியாற் கேட்டதன்று. எ - று.

ஏ - அசை. ஓ - எதிர்மறை. இனம், துலை ஆகுபெயர்கள். இனத்தினல் என்னும் மூன்றனுருபு ஏழனுருபாகத்திரித்துப் பொருளுரைக்கப்பட்டது. உணர்வாற் கேள்வியாற்றக்கதென்பது வாழ்வார்தொழில் நகரிலேற்றிக் கூறப்பட்ட மரபுவழுவமைதி. இச்செய்யுள் அல்பொருட்டற்குறிப்பேற்றமென்னு மலங்காரம். (௨௪)

நிறக்கவல்லிரும்பைச்செம்பொனும்வண்ணநிகழ்த்தியவிரதமேநிகர்ப்பப், பிறக்கமும்வனமுமொழித்தவணமைத்தபெரும்பதிக்குவமையும்பெறுமன், மறக்கடுங்களிற்றுக்குபேரன்வாழளகைவடக்கிரிந்ததுநெடுவானிற், றுறக்கமுமொளித்ததிலங்கையும்வெருவித்தொடுகடற்சுழிப்புகுந்ததுவே.

(இ - ள்.) நிறக்க வல் இரும்பைச் செம்பொன் ஆம் வண்ணம் நிகழ்த்திய இரதம் நிகர்ப்ப - நிறக்கும்வண்ணம் வலிய இரும்பை மாற்றுயர்ந்த பொன்னாகும்படி செய்த ரசகுளிகையைப்போல — பிறக்கமும் வனமும் ஒழித்து அவண் அமைத்த பெரும் பதிக்கு உவமையும் பெறுமல் - (விச்சுவகன்மன் முன்னுள்ள) பழுதையும் காட்டையுங் கெடுத்து அவ்விடத்திலே உண்டாக்கிய பெரிய நகரத்திற்கு உவமையுமில்லாமல்—மறக் கடும் களிற்றுக் குபேரன் வாழ் அளகை வடக்கு இரிந்தது - வலிய வேகம்பொருந்திய யானையையுடைய குபேரன் வாழ்கின்ற அளகைநகர் வடக்கில் ஓட்டமெடுத்தது—துறக்கமும் நெடு வானில் ஒளித்தது - சுவர்க்கலோகமும் உயர்ந்த ஆகாயத்தில் ஒளித்துவிட்டது—இலங்கையும் வெருவித் தொடு கடல் சுழி புகுந்தது - இலங்கைநகரும் பயந்து தோண்டப்பட்ட கடற்சுழியினுள் அமிழ்ந்தியது. எ - று.

ஏ அசை. உவமையும் என்னும் உம்மை இழிவுசிறப்பு. துறக்கமும், இலங்கையும் என்னும் உம்மைகள் எச்சத்தோடு சிறப்பு. இச்செய்யுள்மேலையலங்காரம். பழுதாவன ஏற்றிழிவுமுதலாகிய குற்றங்கள். எல்லாவளங்களினுஞ் சிறந்து ஏனை நகரங்களையெல்லாந் தன்கீழ்ப்படுத்திய அளகையென அதன்சிறப் புணர்த்துவாராய் அதனதிபனை மறக்கடுங்களிற்றுக்குபேரன் என்றார். பிறக்கம் என்பதற்குமலை எனப் பொருள்கொண்டு, பிறங்கல் பிறக்கமென நின்ற தென்பாருமுளர். (௨௫)

வாவியும்புறவுஞ்சோலையுமலர்ந்தமலர்களுமணிகளின்குழாமு
மேவியெங்கெங்குமயங்கலிற்றத்தம்வேரியும்வாசமுந்தூதாப்
பூவினஞ்சுரும்பையழைக்கும்வண்பழனப்புதுவளஞ்சுரக்குநாடனைத்து
மோவியங்குறித்துப்பூமகள்வடிவையொப்பனைசெய்தவாறொக்கும்.

(இ - ள்.) பூ இனம் - மலரினங்களாகிய மகளிர்—தத்தம் வேரியும் வாசமும் தூதா - தத்தமக்குரிய தேனும் நறுமணமுந் தூதாக—சுரும்பை அழைக்கும் வண் பழனப் புது வளம் சுரக்கும் நாடு அனைத்தும் - வண்டுகளாகிய நாயகரை அழைக்கின்ற அழகிய வயல்களையுடைய புதிய வளங்களைப்பயக்கும் நாடு முழுதிலும்—வாவியும் புறவும் சோலையும் - வாவிகளும் முல்லை நிலங்களும் சோலைகளும்—மலர்ந்த மலர்களும் மணிகளின் குழாமும் மேவி - மலர்ந்த பூக்களையும் இரத்தினக் கூட்டங்களையும் பொருந்தி—எங்கெங்கும் மயங்கலில் - எவ்வெவ் விடங்களிலுஞ் செறிந்திருத்தலால்—பூமகள் வடிவை ஓவியம் குறித்து ஒப்பனை செய்தவாறு ஒக்கும் - (அச்செறிவு) பூமிதேவியின்வடிவைச் சித்திர மெழுதி அலங்கரித்ததன்மையைப்போலும். எ - று.

அழைக்குமென்னும் பெயரெச்சம் பழனமென்னும் நிலப்பெயர் கொண்டது. பூவினம் தத்தம்வேரியும் வாசமுந்தூதாச் சுரும்பை யழைக்குமென்பது குறிப்புருவகம். நாடனைத்திலும் வாவிமுதலியவைகள் மலரையும் மணிகளையும் பொருந்திச் செறிதலின் அது பூமகள்வடிவை ஒப்பனைசெய்தவா றொக்குமென்க. (௨௬)

பரிமளமதுபமுரல்பசுந்தொடையற்பாண்டவரைவருங்கடவு
ளெரிவலம்புரிந்துமுறைமுறைவேட்ட வின்னெழிலிளமயிலன்றி
வரிசையினணுகியுரிமையாலவனிமயிலையுமன்றலெய்தினர்போற்
புரிவளைதரளஞ்சொரிபுனலகழிப்புரிசைசூழ்புரங்குடிபுகுந்தார்.

(இ - ள்.) பரிமள மதுப முரல் பசும் தொடையல் பாண்டவர் ஐவரும் - வாசனைபொருந்திய வண்டுகள் ஒலிக்கும் பசிய மாலையையணிந்த பாண்டவர்களைவரும்—கடவுள் எரி வலம் புரிந்து முறை முறை வேட்ட இன் எழில் இளமயில் அன்றி - தெய்வத்தன்மையையுடைய அக்கினியை வலஞ்செய்து முறை முறையா கவிவாகஞ்செய்த இனிய அழகுபொருந்திய இளைய மயில்போன்ற சாயலையுடைய திரௌபதியையேயல்லாமல்—உரிமையால் அவனிமயிலையும் வரிசையின் அணுகி மன்றல் எய்தினர்போல் - உரிமையினாலே பூமிதேவியையும் வரிசையோடு அடைந்து விவாகஞ்செய்தவர்களைப்போல—புரி வளை தரளம் சொரி புனல் அகழிப் புரிசை சூழ் புரம் குடி புகுந்தார் - புரிகளையுடைய சங்குகள் முத்துக்களைச் சொரிகின்ற நீர் பொருந்திய அகழியையுடைய மதில் சூழ்ந்த இந்திரப் பிரத்த நகரிற் குடி புகுந்தார்கள். எ - று.

மயிலையும் என்னும் உம்மை எச்சம். மயில்கள் ஆகுபெயர். எவராலுங் கொண்டாடப்படுதலும் புகழப்படுதலும் பிறவுயிர்கட்கருளுதலும் ஒருங்குடைய பாண்டவரென்பார் பரிமளமதுபமுரல்பசுந்தொடையற் பாண்டவரென்றும், ஆசாரியன் முறைப்படி தாபனஞ்செய்த சிவாக்கினியென்பார் கடவுளெரியென்றும், களவொழுக்கத்தானன்றிப் பலருமறிய விதியுளிநடாத்தப்படும் மணமென அதன் சிறப்புணர்த்துவார்வரிசையினென்றும், அரசர்வழிவழி அவனியாளுதலைப்பெறுதல்தொன்றுதொட்டமரபென்பார் உரிமையாலென்றும், வேண்டுநர்க்கு வேண்டியவற்றை வேண்டியாங்கீயும் வளத்தினும் மாற்றாராற் பற்றப்படாமையினுஞ் சிறந்தநகரென்பார் புரிவளை தரளஞ்சொரி புனலகழிப் புரிசைசூழ் புரம் என்றுங் கூறினர். (உஎ)

வேறு.

உரங்குடிபுகுந்ததிண்டோளுதிட்டிரன்முதலியோரப்
புரங்குடிபுகுந்துதங்கள் பொன்னெயிற்கோயிலெய்தத்
திரங்குடிபுகுந்தகல்விச்சிற்பவித்தகன்றனெஞ்சாற்
கரங்குடிபுகாமற்செய்தகடிநகர்காட்டலுற்றான்.

(இ - ள்.) உரம் குடி புகுந்த திண் தோள் உதிட்டிரன் முதலியோர் - வலிமை குடி புகுந்த திண்ணிய புயங்களையுடைய தருமன் முதலாயினோர்—அப்புரம் குடி புகுந்து-அந்நகரிற் குடிபுகுந்து—தங்கள் பொன் எயில் கோயில் எய்த - தங்களுடைய பொன்மதிலாற் சூழப்பட்ட கோயிலையடைய—திரம் குடி புகுந்த சிற்பக் கல்வி வித்தகன் - உறுதிகுடிகொண்ட சிற்பநூலிற் சாமர்த்தியமுடையனாகிய விச்சுவகன்மன்—கரம் குடி புகாமல் தன் நெஞ்சால் செய்த கடிநகர் காட்டலுற்றான் - கையினாற்செய்யாது மனத்தால் நினைத்துச்செய்த புதிய நகரத்தை அவர்களுக்குக் காட்டுவோனாயினன். எ - று.

எனையோர் புயங்களைச் சிறப்பிக்கும் உரம் இப்புயத்தையணைந்து தான் சிறப்புறவேண்டுமென்று கருதிவந்து குடிகொண்டதென்பார் உரங்குடிபுகுந்த திண்டோள் என்றும், நிறைவுடைமையின் ஒருவராலுந்துளக்கப்படாக் கல்வியென்பார்

திரங்குடி புகுந்த கல்வி என்றுங்கூறினர். கரங்குடி புகாமலென்பதிற் குடிபுகல் ஈண்டுச் செய்தலென்னும் பொருடந்துநின்றது. (உஅ)

நாபுரப்பதற்கேயேற்றநவிரறுவாய்மைவேந்தர்
கோபுரத்தும்பர்மஞ்சகோடியினின்றுதங்கண்
மாபுரத்துள்ளவெல்லைவளமனையாவுமாதர்
நூபுரத்தரவவீதியகலமுநோக்கினரே.

(இ - ள்.) நா புரப்பதற்கே ஏற்ற நவிர் அறு வாய்மை வேந்தர் -நாவைக்காத்தற்கே இயைந்த குற்றமில்லாத மெய்ம்மையையுடைய அரசர்கள்—கோபுரத்துஉம்பர் மஞ்ச கோடியில் நின்று - கோபுரத்தின்மேலுள்ள மஞ்சங்களின் முகப்பில் நின்று—தங்கள் மா புரத்து உள்ள எல்லை வள மனை யாவும்- தங்களுடைய பெரிய நகரத்திலுள்ள எல்லையுளடங்கிய வளம்பொருந்திய மாளிகைகளனைத்தையும்—மாதர் நூபுரத்து அரவ வீதி அகலமும் - பெண்களுடைய சிலம்பொலி பொருந்திய வீதியின் விசாலத்தையும்—நோக்கினர்- பார்த்தார்கள். எ - று.

புரப்பதற்கே என்னும் ஏகாரம் தேற்றம். ஏனையது அசை. யாவும் என்னும் உம்மை முற்றேடெண். நாவைப் பழுதடையாமற் காப்பது சத்தியமாதலின் நாபுரப்பதற்கேயேற்ற நவிரறு வாய்மையென்றும், எப்பொழுதும் மகளிரியங்குத லுறுத வீதி என்பார் மாதர் நூபுரத்தரவவீதி என்றுங் கூறினர். எல்லைவளமனை என்பதற்கு எல்லையையும் வளமனையையும் எனப் பொருள் கொள்ளினும் பொருந்தும். (உகூ)

அரவின்வெஞ்சுடிகைகொண்டவவிர்மணிச்சோதிமேன்மேல்
விரவிவந்தெறித்துப்பச்சைமெய்சிவப்பேறிற்றாக
விரவிதன்னிரதம்பூண்டவெழுபெயர்ப்பவனவேகப்
புரவியையையுற்றேகொல்புரிவலம்புரிவதென்பார்.

(இ - ள்.) அரவின் வெம் சுடிகை கொண்ட அவிர் மணிச் சோதி-சர்ப்பங்களினுடைய வெவ்விய உச்சியிலே பொருந்திய விளங்குகின்ற இரத்தினங்களினொளி-மேன்மேல் விரவி வந்து எறித்துப் பச்சை மெய் சிவப்பு ஏறிற்று ஆக-மேலும் மேலும் நெருங்கிவந்து எறித்தலாற் பச்சைவடிவம் சிவப்பேற—இரவி-அதுகண்ட சூரியனானவன்—தன் இரதம் பூண்ட எழுபெயர்ப்பவன வேகப் புரவியை-தன்னுடைய தேரிற்பூண்ட ஏழென்னும் பெயரையுடைய வாயுவேகம் பொருந்திய குதிரையை—ஐயுற்றே கொல் புரி வலம் புரிவது என்பார்-அதனாற் சந்தேகங்கொண்டுபோலும் இந்நகரைப் பிரதக்ஷிணஞ் செய்வதென்று சொல்லுவார்கள். எ - று.

ஏ-அசை. கொல் - ஐயம். இது பெயர்பொருட்டற்குறிப்பேற்றம் என்னும் அலங்காரம். சூரியனுடைய தேரிற்பூண்ட குதிரைக்குச்சப்தாஸ்வம் என்று பெயர்வழங்குதல்பற்றி எழுபெயர்ப்புரவி என்றார். எழ் என்னும்பெயர்க்கியைபப்பன்மையாயும் வழங்குப. சூரியன் இந்நகரில் வரும்பொழுது தன் குதிரையின்பச்சைமெய் சிவத்தலினால் அதனைப் பிறிதோர் குதிரையெனக் கருதித் தன்குதிரையைத் தேடுதற்குப் போலும் இப்புரியை வலம்வருவதென்பார் என்பதுகருத்து. புரவியையையுற்றே கொல் என்பதற்குக் குதிரையினால் இந்நகரை மேருகிரியென்றையுற்றோ எனப் பொருள் கூறினும் பொருந்தும். இப்பொருட்கு ஐயுருபை ஆலுருபாகத் திரிக்க. ()

அருளுடையறத்தின்வாழ்வாமந்நகரில்லமெங்கு
மிருளுடையிந்திரநீலத்தியன்றசாளரங்கணோக்கி
யுருளுடையொற்றைநேமியுறுபரித்தேரோன்சீறத்
தெருளுடைத்திமிரம்போனசின்னெறிபோலுமென்பார்.

(இ - ள்.) அருள் உடை அறத்தின் வாழ்வு ஆம் அந் நகர் இல்லம் எங்கும் - கிருபையையுடைய தருமத்தின் வாழ்வைப்பொருந்தும் அந்நகரத்திலுள்ள மாளிகைகளெங்கும்—இருள் உடை இந்திரநீலத்து இயன்ற சாளரங்கள் நோக்கி - கருமையையுடைய இந்திரநீலரத்தினங்களாற்செய்த பலகணிகளைப் பார்த்து—உருள் உடை ஒற்றை நேமி உறு பரித் தேரோன் சீற - உருளுதலையுடைய ஒற்றைச்சக்கரம்பொருந்திய குதிரைபூண்ட தேரினனாகிய சூரியன் கோபிக்க—தெருள் உடைத் திமிரம் போன சில் நெறிபோலும் என்பார் - புத்தியையுடைய இருள்கள் ஓடிப்போன சிறுவழிகள்போலும் என்பார்கள். எ - று.

உருள் முதனிலைத்தொழிற்பெயர். அருளில்லாவழி அறங் கடை போகாமையின் அருளுடையறமென்றும், மதியுடையார் தம்மின் மிக்காரோடு முரண்டு போர்புரிதல் கூடாவழித் தம்முயிரைப் பாதுகாக்குமாறு அவர்க்குப் புலப்படா விடங்களில் நுழைகளினும் புகுந்துசேறலியல்பாதலின், அவர் தொழிலை இருட்கேற்றித் தெருளுடைத்திமிரம் என்றுங்கூறினர். இது அல்பொருட் 'டற்குறிப்பேற்றமென்னும் அலங்காரம். தெருளுடைத்திமிரம் என்பதற்குத் திணிந்தவிருளெனப் பொருள்கொள்வாருமுளர். (௩௧)

சமர்முகப்பொறிகண்மிக்கதடமதிற்குடுமிதோறுங்
குமருறப்பிணித்தபைம்பொற்கொடித்துகிலசைவுநோக்கி
நமர்புரக்கிழத்தியும்பர்நாயகன்புரத்தினோடு
மமர்பொரப்பற்பல்கையாலழைப்பதுபோலுமென்பார்.

(இ - ள்.) சமர் முகப் பொறிகள் மிக்க தட மதில் குடுமிதோறும் - போர்முகத்தையுடைய பொறிகள்மிக்குள்ள விசாலித்தமதிலின்சிகரங்கடோறும்—குமர் உற பிணித்த பைம் பொன் கொடித் துகில் அசைவு நோக்கி - அழிவின்மைபொருந்தக் கட்டிய பசிய அழகிய கொடிப்புடைவைகளின் அசைவைப் பார்த்து (இவற்றினசைவு)—நமர் புரக் கிழத்தி - நம்முடைய நகரமாகிய தலைவி—உம்பர்நாயகன் புரத்தினோடும் அமர் பொர - இந்திரனது நகரோடு யுத்தஞ்செய்ய—பற்பல் கையால் அழைப்பதுபோலும் என்பார் - பற்பலகைகளால் அழைத்தலைப்போலும் என்பார்கள். எ - று.

சமர்முகப்பொறிகளாவன, "வளைவிற்பொறியுமயிற்செறிநிலையுங் கருவிரலூகமுங் கல்லுமிழ்கவணும்" என்றிவை முதலாயின. சமர்முகப்பொறிகள் மதிலிற்கின்றியமையாவங்கமென்க. (௩௨)

தசும்புறுமகிலின்றூபஞ்சாறடுகரும்பின்றூப
மசும்பறுமடையின்றூபமவிபெறுமழலின்றூபம்
விசும்புறநான்குதிக்குமிசைமிசையெழுதனோக்கிப்
பசும்புயலேழன்றின்னும்பலவுளவாகுமென்பார்.

(இ - ள்.) தசும்பு உறும் அகிலின் தூபம் - குடங்களிலிட்டுப் புகைக்கும் அகிலின் புகையும்—கரும்பின் சாறு அடு தூபம் - கருப்பஞ்சாற்றைக் காய்ச்சுதலாலுண்டாகும் புகையும்—அசும்பு அறா மடையின் தூபம் - வழுக்கு நிலம் நீங்காத அடுக்களையிலிருந்தெழும் புகையும்—அவி பெறும் அழலின் தூபம் - அவி சொரியப்பெறும் யாகாக்கினியின் புகையும் ஆகிய இவை—விசும்பு உற நான்கு திக்கும் மிசை மிசை எழுதல் நோக்கி - ஆகாயத்திற்பொருந்த நான்கு திசைகளிலும் மேன்மேலெழுதலைப் பார்த்து—பசும் புயல் எழு அன்று - பசுமையாகிய முகில்கள் எழலல்ல—இன்னும் பல உள ஆகும் என்பார் - இன்னும் பல முகில்கள் உள்ளனவாம் என்று சொல்லுவார்கள். எ - று.

மடை ஆகுபெயர். புகை விரைவிற்றணியாதிருக்குமாறு அகில் முதலியவற்றைக் குடத்திலிட்டுப் புகைப்பரென்க. எப்பொழுதுஞ் சமைத்தல் நீங்காமையின் வழுக்குநிலம் அறா மடைப்பள்ளி என்பார் அசும்பறாமடை என்றார். (௩௩)

அடுக்குறநிலஞ்செய்மாடத்தணியுறுபெரும்பதாகை
மிடுக்கினலனிலனெற்றிவிசையுடனெடுத்துமோத
வுடுக்களுநாளுங்கோளுமுள்ளமுமுடலுஞ்சேர
நடுக்குறுகின்றவிந்தநகர்வழிபோகவென்பார்.

(இ - ள்.) நிலம் அடுக்குறச் செய் மாடத்து அணியுறு பெரும் பதாகை - இடங்கள் அடுக்காகப் பொருந்தச் செய்யப்பட்ட மேன்மாடத்திற் கட்டிய பெருங்கொடிகளை—அனிலன் மிடுக்கினால் எற்றி விசையுடன் எடுத்து மோத-வாயுவானவன் வலிமையினால் வீசி விசையுடனே உயர்த்தி அடிக்க—உடுக்களும் நாளும் கோளும் - நக்ஷத்திரங்களும் நாண்மீன்களும் கிரகங்களும்—இந்த நகர்வழி போக உள்ளமும் உடலும் சேர நடுக்கு உறுகின்ற என்பார் - இந்த நகரத்தின்வழியே போதற்கு மனமும் உடம்பும் ஒருசேர நடுக்கமடைகின்றன என்பார்கள். எ - று.

அச்சுவினிமுதலிய இருபத்தேழு நக்ஷத்திரங்களையு நாண்மீனென்றுள்ப. ()

துதையளிமுரலும்வாசச்சோலையின்பொங்கர்தோறும்
விதமுறவெழுந்துகாளமேகங்கள்படிதனோக்கிக்
கதிர்மணியகழிமாமேகலையுடைநகரமாதின்
புகைநறுமலர்மென்கூந்தல்போலுமாகாண்மினென்பார்.

(இ - ள்.) துதை அளி முரலும் வாசச் சோலையின் பொங்கர்தோறும் - நெருங்குகின்ற வண்டுகள் ஒலிக்கும் வாசனையையுடைய சோலையின் கொம்புகடோறும்—விதம் உற எழுந்து காள மேகங்கள் படிதல் நோக்கி - பலபகுப்பாக எழுந்து கரியமுகில்கள் படிதலைப்பார்த்து—கதிர் மணி அகழி மா மேகலை உடை நகர மாதின்—ஒளிபொருந்திய இரத்தினங்களையுடைய அகழாகிய பெரிய மேகலையென்னும் ஆபரணத்தையணிந்த நகரமாகிய பெண்ணினது—புகை நறு மலர் மென் கூந்தல் போலுமா காண்மின் என்பார் - அகிற்புகை யூட்டிய நறுமணம் பொருந்திய மலரைமுடித்த மெல்லிய கூந்தலைப்போலுமாற்றைக் காணுங்கள் என்பார்கள்.

கதிர்மணிமேகலையென்றியைப்பினுமமையும். அளகம் ஐம்பாலாகமுடிக்கப்படுதலின் விதமுற எழுந்த காளமேகத்தை விதந்து கூறினார். (௩௫)

ஈட்டியமணியும்பொன்னுமெழில்பெறப்புடைகடோறும்
பூட்டியசிகரிசாலப்புரிசையின்புதுமைநோக்கிக்
கோட்டியநகரியென்னுங்குலக்கொடிமன்றலெய்தச்
சூட்டியசூட்டுப்போலத்துலங்குமாகாண்மினென்பார்.

(இ - ள்.) ஈட்டிய மணியும் பொன்னும் - தொகுக்கப்பட்ட இரத்தினங்களையும் பொன்னையும்—எழில்பெறப் புடைகள்தோறும் பூட்டிய - அழகுண்டாகப் பக்கங்கடோறும் சேர்த்துச்செய்த—சிகரி சால் அப் புரிசையின் புதுமைநோக்கி - கோபுரங்கள்மிக்க அந்தமதிலின் அதிசயத்தைப் பார்த்து—கோட்டிய நகரி என்னும் குலக்கொடி மன்றல் எய்த - சித்திரித்த நகரமென்கின்ற குலப்பெண் விவாகஞ்செய்யும்படி—சூட்டிய சூட்டுப்போலத் துலங்குமா காண்மின் என்பார்-கோலஞ்செய்வார் சூட்டிய நெற்றிச்சூட்டைப்போல விளங்குமாற்றைப் பாருங்கள் என்பார்கள். எ - று.

சூட்டுதற்கு வினைமுதல் வருவித்துரைக்கப்பட்டது. இனிச் சூட்டென்பதற்குத் தலையிற்சூட்டிய மாலையெனினு மமையும். (௩௬)

பணையினம்பலவுமார்ப்பப்பைங்கொடிநிரைத்தசெல்வத்
துணைமணிமாடமன்னுந்தோரணவீதியாவும்
புணைவனநெருங்கநீடிப்பொழிபுயல்கிழிக்குஞ்சார
லிணைவரைநடுவட்போதும்யாறுபோலிலங்குமென்பார்.

(இ - ள்.) பணை இனம் பலவும் ஆர்ப்ப-வாத்தியபேதங்கள் பலவும் ஒலிக்க—பைம் கொடி நிரைத்த செல்வத் துணை மணி மாடம் மன்னும்தோரணவீதியாவும்-பசுமையாகிய கொடிகள் நிரைக்கப்பட்ட செல்வத்தையுடைய தம்முள் நிகர்த்த இரத்தினங்களழுத்திய மாடங்கள்பொருந்திய தோரணங்களையுடைய வீதிகளனைத்தும்—புணை வனம் நெருங்க நீடிப் பொழி புயல் கிழிக்கும் சாரல் - மூங்கிற்காடுகள் நெருங்கவளர்ந்து மழையைப்பொழிகின்ற முகில்களைக் கிழிக்குஞ் சாரலையுடைய—இணை வரை நடுவண் போதும் யாறுபோல் இலங்கும் என்பார் - இரண்டு மலைகளின் நடுவேபாயும் ஆற்றைப்போல விளங்கும் என்பார்கள். எ - று.

துணை மாடம் எனக்கூட்டுக. இருமருங்குமுள்ளமாடங்கள் இணைவரையாகவும் அவற்றினடுவிலுள்ள வீதி ஆறாகவுங்கொள்க. என்பாரென்னும் வினைமுற்றுக்கள் எட்டினையும் வினையெச்சமாக்கி நாபுரப்பதற்கே என்னுஞ்செய்யுளிலே நோக்கினரென்னும் வினைமுற்றோடுமுடிக்க. (௩௭)

கண்ணுறுபொருள்கள்யாவுங்கண்டுகண்டுவகைகூர
வெண்ணுறுகிளைஞரோடும்யாதவகுமரரோடும்
பண்ணுறுவேதவாழ்நர்பலரொடும்வைகியாங்கண்
விண்ணுறுதபதிக்கம்மவிடைகொடுத்தருளினனே.

(இ - ள்.) எண் உறு கிளைஞரோடும் - (தருமனனவன்) மதிக்கப்படுந் தன் சுற்றத்தாரோடும்—யாதவ குமரரோடும் - யதுகுலகுமாரர்களோடும்—பண் உறு வேத வாழ்நர் பலரொடும் - இசைபொருந்திய வேதவிதிப்படி வாழுகின்ற பிராமணர்கள் பலரோடும்— கண்ணுறு பொருள்கள் யாவும் கண்டு கண்டு உவகைகூர ஆங்கண் வைகி - மதிக்கப்படும் பொருள்க ளெல்லாவற்றையும் பார்த்துப்பார்த்து

மகிழ்ச்சிமிக அவ்விடத்தில் இருந்து—விண்ணுறு தபதிக்கு விடைகொடுத்தருளி ஞன் - விச்சுவகன்மனுக்கு விடைகொடுத்தான். எ - று.

அம்ம, ஏ அசைகள். வேதம் ஆகுபெயர். வேதத்திற்குரிய இசைகளாவன: உதாத்த அநுதாத்த சுவரித பிரசயங்கள். உதாத்தம் உயர்த்திச்சொல்வது; அநு தாத்தம் தாழ்த்திச் சொல்வது; சுவரிதம் நலித்துச்சொல்வது; பிரசயம் விலங்கிச் சொல்வது. இவற்றை முறையே எடுத்தல் படுத்தல் நலிதல் விலங்கல் என வழங் குப. விலங்கலைநீக்கி மூன்றென்பாருமுளர். கண்ணுறுபொருள்கள் என்பதற்குக் கட்பொறிக்கு விடயமாகிய பொருள்கள் எனப் பொருள்கோடலுமொன்று. (௩௮)

கேசவன்முதலாவுள்ளகிளைஞருங்கேண்மைதப்பா
வாசவன்முதலிஞேருமன்னுதம்பதிகள்புக்கா
ரோசவன்றிகிரியோச்சியுதயபானுவுக்குமேலாந்
தேசவன்ருனும்வையந்திசைமுறைதிருத்தியாண்டான்.

(இ - ள்.) கேசவன் முதலா உள்ள கிளைஞரும் - கிருட்டிணர் முதலாகிய சுற் றத்தவர்களும்—கேண்மை தப்பா வாசவன் முதலிஞேரும் - சுற்றமாந் தன்மை தவருத இந்திரன்முதலாஞேர்களும்—மன்னு தம் பதிகள் புக்கார் - நிலையான தங்கள் நகரங்களை அடைந்தார்கள்—உதயபானுவுக்கும் மேலாம் தேசவன்தானும்- உதித்தலையுடைய சூரியனுக்கும் மேலாகிய ஒளியையுடைய தருமனும்—ஓச வன் திகிரி ஓச்சி - ஒளியையுடைய ஆஞ்ஞாசக்கரத்தைச் செலுத்தி—திசை முறைதிரு த்தி வையம் ஆண்டான் - திக்குக்களில் நீதியைச்செலுத்திப் பூமியை ஆண்டான். எ - று.

பானுவுக்கும் என்னும் உம்மை சிறப்பு. தானும் என்னும் உம்மை எச்சம். அருச்சுனனுக்குப் பிதாவாதல்பற்றிக் கேண்மைதப்பாவாசவன் என்ருர். நட்பிற் றவருத இந்திரன் எனப்பொருள்கோடலீண்டுச் சிறப்பின்று. ஓசம் - ஒளி. (௩௯)

யாய்மொழிதலைமேற்கொண்டுமிளையவர்மொழிகள்கேட்டும்
வேய்மொழிவேய்த்தோள்வல்லிமென்மொழிவிரும்பலுற்றும்
வாய்மொழியறத்தின்மைந்தன்மாநகர்வாழுநாளி
லாய்மொழிப்பாடலோடோரந்தணனுங்கண்வந்தான்.

(இ - ள்.) வாய்மொழி அறத்தின்மைந்தன் - உண்மையைப்பேசுகின்ற தரும புத்திரன்—யாய் மொழி தலைமேற்கொண்டும் - தாயினுடைய வசனத்தைச் சிர மேற்கொண்டும்—இளையவர் மொழிகள் கேட்டும் - தம்பிமாருடைய வசனங்களைக் கேட்டும்—வேய் மொழி வேய்த் தோள் வல்லி மென் மொழி விரும்பலுற்றும்-கரு ம்புபோலும் இனியமொழியையும் மூங்கில்போலுந் தோளையுமுடைய திரௌபதி யினது மென்மையாகிய வசனங்களை விரும்பியும்—மா நகர் வாழும் நாளில்-பெரிய நகரில் வாழுகின்றநாளில்—ஆய் மொழிப்பாடலோடு ஓர் அந்தணன் ஆங்கண் வந் தான் - ஆராய்கின்ற சொற்களையுடைய பாடலுடனே ஒருமுனிவன் அவ்விடத்தில் வந்தான். எ - று.

வாய்மைமொழியென்பது மைவிகுதிகெட்டு வாய்மொழியென நின்றது. வாய் மொழியென்பதை வினைத்தொகையாக்கி வாய்ந்தமொழியெனக் கோடலுமொ ன்று. தாய் எவரினுஞ் சிறந்தாளாதலின் அவள்சொல்லை எவர்சொல்லினும் மேலா

க்கொண்டொழுகினன் என்பார்' யாய்மொழிதலைமேற்கொண்டும் என்றும், தன க்கிளையராயினும் அவருடைய நீதிமொழிகளைமாத்திரம் தெரிந்து செவியாற் கேட்டான் என்பார் இளையவர் மொழிகள்கேட்டும் என்றும், தன் மனையாளது சொல்லின்வழியொழுகின் அது இம்மை மறுமைப்பயன் இரண்டினையும் இழப்பித்தலின் அங்ஙனமொழுகாது அவள் இன்சொல்லைமாத்திரம் செவிக்கின்பநிகழுமாறுவப்புற்றுன் என்பார் வேய்த்தோள்வல்லிமென்மொழி விரும்பலுற்றும் என்றும், சிவநாமங்களடங்கிய பாடலென்பார் ஆய்மொழிப் பாடலென்றுங் கூறினர். வேய்-கரும்பு. வேய் என்பதனை முதனிலைத் தொழிற்பெயராக்கி, அலங்காரமான சொல்லெனப் பொருள்கொள்வாருமுளர். (௬0)

இந்தநாரதனைப்போற்றியிருபதம்விளக்கிவாசச்
சந்தனகருவின்றூபந்தவழ்மணித்தவிசினேற்றி
வந்தனுவிதியிற்சற்றும்வழுவறவழிபாடெய்தி
யந்நாால்வருமவ்வேந்துமாதிவாசவர்களானர்.

(இ - ள்.) அந்த நால்வரும் அவ்வேந்தும் - அந்தத் தம்பியர்நால்வரும் அத் தருமனும்—இந்த நாரதனைப் போற்றி - வந்த இந்த நாரதமுனிவனைத் துதித்து—இருபதம் விளக்கி - இருபாதங்களையுஞ் சுத்திசெய்து—வாசச் சந்தன அகருவின் தூபம் தவழ் மணித் தவிசின் ஏற்றி - வாசனையையுடைய சந்தனம் அகில் ஆகிய இவற்றின் புகைபடிந்த அழகிய ஆசனத்திலிருத்தி—வந்தனு விதியில் சற்றும் வழு அற வழிபாடு எய்தி-வழிபாட்டிற்குரிய விதியிற் சிறிதுந் தவறில்லாமல் அம்முனிவனை வழிபடுதலைப் பொருந்தி—ஆதி வாசவர்கள் ஆனர் - பழைய இந்திரர்களானார்கள். எ - று.

சற்றும் என்னும் உம்மை சிறப்பு. வந்தனு என்பது ஐயீருகாதுநின்றது. இம்முனிவரனை வழிபட்டமையினால்வந்த மகிழ்ச்சியினாலும் மேன்மையினாலும் பழைய இந்திரரானாரென்க. (௬௧)

வரமிகுகற்பினளுமாமியும்வணங்கிநிற்பச்
சரிகமபதநிப்பாடற்றண்டுதைவருசெங்கையோ
னிருசெவிபடைவீடாகவெம்பிரானளிக்கப்பெற்ற
பெருமுனியவர்க்கோர்காதைபெட்புறப்பேசுவானே.

(இ - ள்.) வரம் மிகு கற்பினளும் மாமியும் வணங்கி நிற்ப - வரத்தான் மிக்க கற்பினையுடைய திரௌபதியும் மாமியாகிய குந்திதேவியும் வணங்கி நிற்க—சரிகமபதநிப் பாடல் தண்டு தைவரு செம் கையோன் - சரிகமபதநி என்னும் ஏழுசுரங்களையும் அமைத்துப் பாடும்வீணையை இயக்குகின்றசிவந்த கையையுடையவனும்—எம் பிரான் இரு செவி படைவீடு ஆக அளிக்கப் பெற்ற பெரு முனி - சிவபெருமான் தமது இரண்டு திருச்செவிகளையும் (தன் இசைப்பாட்டிற்குப்) படைவீடாகக் கொடுக்க அப்பேற்றைப்பெற்ற பெரிய முனிவனும் ஆகிய நாரதன்—அவர்க்கு ஓர் காதை பெட்பு உறப் பேசுவான் - அவர்களுக்கு ஒருசரித்திரத்தை விருப்பம் மிகச் சொல்லுவான். எ - று.

ஏ - அசை. படைவீடு எப்பொழுதும் வசித்தலையுடைய இடம். சிவபெருமான் ஐவர்க்குமுரியையாவை எனத் தனக்கீந்த வரத்தால், ஐவரைப் புணரினுங் கற்பிலக்கணத்திற்றவறு வியல்புடையாளென்பார் வரமிகுகற்பினள் என்றும், இவ

ன்பாடலை என்றுஞ் சிவபெருமான் உவந்து திருச்செவிசாத்தி யருள்வர் என்பார் இருசெவிபடைவீடாக வெம்பிரானளிக்கப்பெற்ற பெருமுனி என்றும், இவன் கூறுகின்ற சரித்திரம் இவர்க்கு ஒருபெண்ணைப் பலர் இச்சித்தலான் வருமேதங்களை நீக்கி இன்பம்விளைத்தற் கேதுவாதலின் இவரால் விரும்பப்படத்தக்கதாயிற்றென்பார் பெட்புற என்றுங்கூறினர். வார்த்தை என்ற பாடத்திற்கு முன்னிகழ்ந்தவோர் வார்த்தை எனப்பொருள்கொள்க. (௬௨)

முராரியைமுராரிநாபிமுளரிவாழ்முனியைமுக்கட்
புராரியைநோக்கிமுன்னாட்புரிபெருந்தவத்தின்மிக்கார்
சுராரிகடம்மிற்சுந்தோபசுந்தரென்றிருவர்தங்க
டிராரியேவலினால்வந்ததிலோத்தமைதன்னைக்கண்டார்.

(இ - ள்.) முராரியை - விட்டுணுவையும்—முராரி நாபி முளரி வாழ் முனியை - விட்டுணுவினுடைய உந்திக்கமலத்திற்றோன்றிய பிரமனையும்—முக்கண் புராரியை நோக்கி - மூன்றுகண்களையுடைய சிவபெருமானையுங் குறித்து—முன் நாள் புரி பெரும் தவத்தின் மிக்கார் - முற்காலத்திற்செய்த பெரிய தவத்தில் மேம்பட்ட—சுராரிகள் தம்மிற் சுந்தோபசுந்தர் என்று இருவர் - அசுரருள் சுந்தோபசுந்தர் என்று சொல்லப்படும் இருவர்—தங்கள் திர அரி ஏவலினால் வந்த திலோத்தமைதன்னைக் கண்டார் - தங்கள் வழிப்பகையாகிய இந்திரனது கட்டளையினால் வந்த திலோத்தமை என்பவளைக் கண்டார்கள். எ - று.

மிக்கார் பெயரெச்சமுற்று; அது இருவர் என்னும் பெயர்கொண்டது. சுராரிகடம்மிற் சுந்தோபசுந்தரென்றிருவர் தவத்தின்மிக்கார், அவர் திலோத்தமை தன்னைக் கண்டாரென்றியைத்தலும் ஒன்று. (௬௩)

காண்டலுமவண்மேல்வைத்தகாதலாலுழந்துநெஞ்சி
னீண்டியதுயரத்தோடுமிருவருநயந்தபோழ்தப்
பூண்டருபொலிவினாடன்பொருட்டமர்தம்மிற்பூண்டு
மாண்டனரென்னும்வார்த்தைமாநிலமறியுமன்றே.

(இ - ள்.) காண்டலும் - காணுதலும்—அவள்மேல் வைத்த காதலால் உழந்து - அவள்மேற்கொண்ட ஆசையினால் வருந்தி—நெஞ்சில் ஈண்டிய துயரத்தோடும் இருவரும் நயந்தபோழ்து - மனத்தில் மிக்க துன்பத்தோடும் அவ்விருவரும் அவளை விரும்பினபொழுதில்—அப் பூண் தரு பொலிவினாள்தன்பொருட்டு - அந்த ஆபரணங்கள் தகைமையடைதற்கேதுவாகிய பொலிவினையுடையவளின் பொருட்டு—தம்மில் அமர் பூண்டு - தம்முள் யுத்தத்தைப்பொருந்தி—மாண்டனர் என்னும் வார்த்தை மா நிலம் அறியும்-இறந்தார்கள் என்னும் வசனத்தைப் பெரிய உலகத்தார் அறிவர். எ - று.

அன்று ஏ அசைகள். நிலம் ஆகுபெயர். தரு என்னும் வினைத்தொகைபொலிவென்னுங் கருவிப்பெயர்கொண்டது. வெகுளிமூட்டித் தம்மையமர்க்கணைவுவார் பிறரின்றித் தாமாயதனை மேற்கொண்டாரென்பார் அமர்தம்மிற் பூண்டென்றார். பூண்களினாற்றக்க பொலிவுடையாளென்றல் சிறப்பின்று. (௬௪)

நீவிரும்விதியால்வேட்டநேயமுண்டேனுமன்ற
லோவியமனையாடன்னையோரோராண்டொருவராக
மேவினிர்புரியுமங்ஙன்மேவுநாளேனையோரிக்
காவியங்கண்ணினாளைக்கண்ணுறல்கடனதன்றே.

(இ - ள்.) நீவிர்உம் விதியால் வேட்ட நேயம் உண்டேனும் - நீங்கள் உங்கள் ஊழால் விவாகஞ்செய்த அன்பு உண்டாயினும்—ஓவியம் அனையாள் தன்னை - சித்திரப்பாவைபோன்ற திரௌபதியை—ஓர் ஒரு ஆண்டு ஒருவராக மேவினிர் மன்றல் புரியும் - ஒவ்வொருவருடத்திற்கு ஒவ்வொருவராகக் கலந்து புணர்குதிர்- அங்ஙன் மேவுநாள் - அவ்வாறு புணருநாளில்—ஏனையோர் இக் காவி அம் கண்ணினாளைக் கண்ணுறல் கடனது அன்று - ஒழிந்தோர் இந்தக் கருங்குவளைமலர் போன்ற கண்களையுடைய பெண்ணைக் காணுதல் முறைமையன்று. எ - று.

ஏ - அசை. உண்டேனும் என்னும் உம்மை சிறப்பு. காவி ஆகுபெயர். அம் சாரியை. மேவினிர் முன்னிலை வினைமுற்றெச்சம். கடனது என்பதில் அது பகு திப்பொருள் விகுதி. அ து எனப்பிரித்துச் சாரியைகள் என்பாருமுளர். (சரு)

எண்ணுறக்காணிலோராறிருதுவும்வேடமாறிப்
புண்ணியப்புனல்களாடப்போவதேயுறுதியென்று
வண்ணவிற்றிறலினார்க்குவாய்மலர்ந்தருளிமீண்டு
பண்ணுடைக்கீதநாதபண்டிதன்விசும்பிற்போனான்,

(இ - ள்.) எண் உறக் காணில் - மனம்பொருந்த இவளைக் கண்டால்—ஓர் ஆறு இருதுவும் வேடம் மாறி - அவர்கள் ஆறிருதுவரைக்கும் வடிவம்மாறி—புண்ணியப் புனல்கள் ஆடப் போவதே உறுதி என்று - புண்ணியத்தையுடைய தீர்த்தங்களில் ஸ்நானஞ்செய்யப்போதலே துணிபென்று—வண்ணவில் திறலினார்க்கு வாய்மலர்ந்தருளி - அழகிய வில்வலியையுடைய பாண்டவர்களுக்குத் திருவாய்மலர்ந்தருளி—பண் உடை நாத கீத பண்டிதன் - பண்களையுடைய ஓசைபொருந்திய இசைப்பாட்டில்வல்ல நாரதமுனிவன்—மீண்டு விசும்பில் போனான் - அவ்விடத்தினின்றுந் திரும்பி ஆகாயத்திற் சென்றான். எ - று.

ஏகாரம் தேற்றம். அபுத்தி பூருவமாகக்காணில் அதனாலோர் குற்றமின்றென்பான் எண்ணுறக்காணில் என்றான். பெருவிறலினராயினும் சுந்தோபசுந்தரைப் போலக் காமவயத்தராய்ப் பொருதழியாது பெரியோர் வார்த்தைக்கு அமைந்தொழுகு மியல்பினரென்பது போதர வண்ண விற்றிறலினார்க்கு வாய்மலர்ந்தருளி என்றார். (சசு)

சொன்னநாட்டொடங்கியைந்துசூரருந்தேவர்நாளுக்
கின்னநாளவதியென்றேயெண்ணியங்கிரதிகேள்வ
னன்னநாண்மலர்ப்பைந்தாமத்தறன்மகனாதியாக
மின்னனாடன்னைவேட்டமுறையினான்மேவினாரே.

(இ - ள்) சொன்னநாள் தொடங்கி - நாரதமுனிவன் சொன்ன நாள் முதலாக—ஐந்து சூரரும் - ஐந்துவீரர்களும்—தேவர் நாளுக்கு இன்னநாள் அவதி என்று எண்ணி - தேவர்களுடைய ஒருநாளாகிய மனுடவருடமொன்றுக்கு இந்த நாள் எல்லை என்று சிந்தித்து—அங்கு - அவ்விடத்தில்—இரதிகேள்வன் அன்ன நாள் மலர்ப் பைந்தாமத்து அறன்மகன் ஆதி ஆக - மன்மதன்போன்ற அழகினையுடைய புதிய மலராலாய பசிய மாலையையணிந்த தருமன் முதலாக—மின் அனாள் தன்னை வேட்ட முறையினால் மேவினார் - மின்போன்ற திரௌபதியைத் தாம் விவாகஞ்செய்த முறைப்படியே புணர்ந்தார்கள். எ - று.

ஏ இரண்டும் அசை. ஐவரும் திரௌபதியின் போகத்தையநுபவிக்கும் ஆசையின்வயத்தராய் அதன்வழி யொழுகாது முனிவரன் கூறிய மொழியின்வயத்தராய் அதன்வழி யொழுகிய மனத்திட்பமுடையர் என்பார் ஐந்துசூரருந் தேவர் நாளுக்கின்னநா ளவதியென்றே யெண்ணி என்றார். (௬௭)

ஆ செய்யுள் - ௬௯௪.

இந்திரப்பிரத்தச்சருக்கமுற்றிற்று.

---

# அருச்சுனன்றீர்த்தயாத்திரைச்சருக்கம்.

துன்பம்பயமிடிநோய்பகைசோரங்கொலையெய்தா
தின்பம்பொருளறன்யாவையுமியல்பாதலினெய்தித்
தன்பைங்குடைநிழன்மன்பதைதரியார்முனைமதியா
வன்பன்றனைநிகர்வாழ்வுறவருநாள்களிலொருநாள்.

(இ - ள்.) தரியார் முனை மதியா வன்பன் - பகைவருடைய போர்முனையை மதியாத வன்மைக்குணத்தையுடைய தருமனானவன்—தன் பைங்குடைநிழல் மன்பதை -'தன்னுடைய குளிர்ந்த குடைநிழலின்கீழுள்ள மக்கட்பரப்பு—துன்பம் பயம் மிடி நோய் பகை சோரம் கொலை எய்தாது - துயரம் பயம் வறுமை வியாதி பகை களவு கொலை ஆகிய இவைகளையடையாமல்—இன்பம் பொருள் அறன் யாவையும் இயல்பாதலின் எய்தி - இன்பம் பொருள் தருமம் ஆகிய மூன்றையும் இயல்பாயிருத்தலினால் அடைந்து—தனை நிகர் வாழ்வு உற வருநாள்களில் ஒருநாள் - தன்னையொத்த வாழ்வைப்பொருந்த அரசுசெய்துவரும் நாட்களில் ஒருநாள். எ - று.

மன்பதை எய்தாது எய்தி வாழ்வுறவென்றியையும். தரியார் முனைமதியாவன்பனயினுந் தன்குடைக்கீழ்வாழும் மன்பதையைத் தன்னுயிர்போல் நேசித்தானென்பது கருத்து. தலைதடுமாற்றமென்னுந் தந்திரவுத்தியால் இன்பம் பொருளறன் என்றும், மானுடகதியடைந்தோரால் அடைதற்பாலனவாகிய அறம் பொருள் இன்பம் வீடென்னும் நான்கனுள்ளும் வீடொழிந்த ஏனைமூன்றும் லௌகிகத்தினிற்பார்க்கின்றியமையாதனவென்பார் இயல்பாதலினெய்தி என்றும், அநீதியென்னு முருப்பத்தைநீக்கி நீதியென்னுந் தட்பத்தைக்கொடுக்குங் குடையென்பார் பைங்குடை என்றுங் கூறினர். யாவையும் என்பதில் ஐயைச்சாரியையாக்கி யாவும் ஆண்டியல்பாயிருத்தலின் அவற்றை யடைந்தெனப் பொருள் கூறுவாருமுளர். ()

அறையோதவனஞ்சூழ்புவியரசானவனைத்துந்
திறையோடிடமறநிற்பதொர்திருவாயின்மருங்கே
யிறையோடியரிருகையுமெடுத்தெண்ணுறமுறையோ
முறையோவெனவொருவைதிகமுனிவந்துபுகுந்தான்.

(இ - ள்.) அறை ஓத வனம் சூழ் புவி அரசு ஆன அனைத்தும் - ஒலிக்கின்ற திரையையுடைய கடல்சூழ்ந்த பூமிக்கரசராயுள்ளாரெவரும்—திறையோடு இடம் அற நிற்பது ஓர் திரு வாயில் மருங்கு - தாங் கொடுக்கவேண்டிய திறைப்பொருள்களோடு இடமற நெருங்கிநிற்கின்ற ஒப்பற்ற அழகிய வாயிலின் பக்கத்தில்—ஒரு

வைதிகமுனி - வேதவொழுக்கத்தையுடைய ஒருமுனிவன்—உயர் இருகையும் எடுத்து - உயர்ந்த இருகையையும் மேலே எடுத்து—எண் உற - பார்த்தோர்க்கு ஆலோசனைமிக—இறையோடு முறையோ முறையோ என வந்து புகுந்தான் - அரசனோடு இது முறையோ முறையோ என்று குறைகூறி வந்தடைந்தான். எ - று.

ஏ-அசை. அரசு என்பதற்கியைய அனைத்தும் என அஃறிணைமுடிபாகக் கூறினார். இறையோடு கூறி என்றியையும். முறையோ முறையோ என்னும் அடுக்கு அவலம் பற்றிவந்தது. ஒருவருங் குறைகூறி அறியாவிவ்வாயிலில் ஒரு வைதிக முனி குறைகூறுதற்கு வந்தகாரணம் என்னையோவென்றெவர்க்கும் யோசனைமிக வென்பார் எண்ணுற என்றார். (௨)

கடைகாவலர்குறைகூறலும்விசயன்கடிதிற்றன்
புடைகாவலர்தொழவந்துபுவித்தேவனைமறையின்
றொடைகாவலவிதுவென்னெனவவனுந்தொடுகழலோய்
விடைகாவலர்நிரைகொண்டனர்வில்வேடுவரென்றான்.

(இ - ள்.) கடைகாவலர் குறை கூறலும் - வாயிலாளர் முனிவனுடைய குறையைச் சொல்லுதலும்—விசயன் - அருச்சுனனானவன்—கடிதில் தன்புடைகாவலர் தொழ வந்து - விரைவில் தன்பக்கத்தில் அரசர்கள் வணங்க வந்து—புவித்தேவனை - அந்தணனை—மறையின் தொடை காவல இது என் என - வேதவொழுக்கத்தைக் காப்பவனே உனக்குவந்த இந்தக்குறை என்னை என்றுவினவ—அவனும் - அவ்வந்தணனும்—தொடு கழலோய் - அணியும் வீரக்கழலையுடைய அரசனே—வில் வேடுவர் விடைகாவலர் நிரை கொண்டனர் என்றான் - வில்லையுடைய வேடர்கள் இடையர்களிடத்தினின்றும் என் பசுக் கூட்டங்களைக் கவர்ந்துகொண்டுபோயினர் என்று சொன்னான். எ - று.

அவனும் என்னும் உம்மை எச்சம். தொடை ஆகுபெயர். எனக்குவந்தஇந்த ஆபத்தை நீக்கவல்ல வீரமுடையானேயென்பான் றொடுகழலோய் என்றும், வேடர் பசுக்களைக்கவரும்போது அவற்றைக்காக்கும் இடையர் கவராது தடைபுரிந்தழியும் அவரைக்கெடுத்து அவற்றைக் கொடுபோயினாரென்பான் விடைகாவலர் நிரைகொண்டனர் வில்வேடுவர் என்றுங் கூறினான். (௩)

அஞ்சாதொழிமுனிநீயுனதானின்கணமின்றே
யெஞ்சாவகைதருவேனெனவேவுக்கொருதிலகன்
வெஞ்சாபமெடுப்பான்வருவிசயன்றருமனுடன்
மஞ்சார்பொழில்விளையாடிடுமயில்சீறடிகண்டான்.

(இ - ள்.) முனி நீ அஞ்சாதொழி - முனிவனே நீ அஞ்சற்க—உனது ஆனின்கணம் இன்றே எஞ்சாவகை தருவேன் என - உன் பசுக்கூட்டத்தை இன்றைக்கே குறையாதபடி யான் தருவேன் என்றுசொல்லி—ஏவுக்கு ஒரு திலகன் வெம் சாபம் எடுப்பான் வருவிசயன் - பாணங்களைப் பிரயோகித்தலில் ஒப்பற்ற மேலோனாகிய கொடியவில்லை எடுக்கவரும் அருச்சுனன்—தருமனுடன் மஞ்சு ஆர் பொழில் விளையாடிடும் மயில் சீறடி கண்டான் - தருமனோடு முகில்படிகின்ற சோலையில் விளையாடுந் திரௌபதியினுடைய சிறுத்த கால்களைக் கண்டான். எ - று.

இன்றே என்னும் ஏகாரந் தேற்றம். திலகன் பெயரெச்சமுற்று. ஏ ஆகுபெயர். ஆனின்கணத்திற் சிறிதெஞ்சக்கொடுப்பின் அது தன் வீரத்திற்குப் பழுதாதலின் எஞ்சாவகைதருவேன் என்றான். தருமனுந் திரௌபதியும் எப்பொழுதும் விளையாடுஞ் சோலையென்பதை அருச்சுனன் நன்குயறிந்திருந்தும் வில்லெடுக்க வேறு வழியாய்ச்செல்லாது அதன்வழியாகச் சென்றெடுத்தமையின் எண்ணுறக் காண்டலாயிற்றென்க. (சு)

காணுமெய்நடுங்காவொளிகருகாமனமிகவு
நாணுவிரைவொடுசாயகநாண்வெஞ்சிலைகொள்ளாச்
சேணுநெறிசெல்லாநனிசீறுவமர்வெல்லா
மாணுநிரைமீளாவொரிமைப்போதினில்வந்தான்.

(இ - ள்.) காணு மெய் நடுங்கா ஒளி கருகா - கண்டு சரீரம் நடுங்கி ஒளிகுன்றி—மனம் மிகவும் நாணு - மனம் மிகவும் வெட்கித்து—விரைவொடு சாயகம் நாண் வெம் சிலை கொள்ளா - விரைவோடு அம்பையும் நாணையுடைய கொடிய வில்லையும் எடுத்து—சேணும் நெறி செல்லா - தூரமாகிய வழியிற்போய்—நனி சீறு அமர் வெல்லா - மிகக் கோபித்து யுத்தத்தைவென்று—மாண் ஆ நிரை மீளா- மாட்சிமைப்பட்ட பசுக்கூட்டங்களை மீட்டு—ஒரு இமைப்போதினில் வந்தான் - ஒருமாத்திரைப்பொழுதில் வந்தான். எ - று.

மிகவும் என்னும் உம்மை சிறப்பு. காணு நடுங்கா கருகா நாணு கொள்ளா செல்லா சீறு வெல்லா மீளா வந்தானென்றியையும். சிவபெருமானுகந்தாடும் பஞ்சகௌவியமுந் தோன்றுதற்கிடனுயிருத்தல் முதலிய விசேடமுடைமையின் மாணுநிரையென்றார். இதுபற்றியன்றே ஆவினுக்கருங்கலமரனஞ்சாடுதல் என்றார் பிறரும். (எ)

தொறுக்கொண்டவருயிருந்தொறுநிரையுங்கவர்சூரன்
மறுக்கம்படுமறையோன்மனமகிழும்படிநல்கிப்
பொறுக்குந்தவமுனிசொற்படிபுனிதப்புனல்படிவா
னிறுக்குந்துலைநிகர்தம்முனைநிகழ்வோடுபணிந்தான்.

(இ - ள்.) தொறுக் கொண்டவர் உயிரும் தொறு நிரையும் கவர் சூரன்-பசுக்கூட்டத்தைக் கைக்கொண்ட வேடவருயிரையும் பசுக்கூட்டத்தையுங் கவர்ந்த வீரனாகிய அருச்சுனன்—மறுக்கம் படு மறையோன் மனம் மகிழும்படி நல்கி-துன்பத்தைப்பொருந்தும் முனிவனது மனம் மகிழும்படி (பசுக்கூட்டத்தைக்) கொடுத்து—பொறுக்கும் தவமுனி சொற்படி புனிதப் புனல் படிவான் - தாங்குந் தவத்தையுடைய நாரதமுனிவனது சொல்லின்படி சுத்தமாகிய தீர்த்தங்களில் ஸ்நானஞ்செய்யுமாறு—நிறுக்கும் துலை நிகர் தம்முனை நிகழ்வோடு பணிந்தான் - நிறுக்கின்ற துலைநாவையொத்த நடுவுநிலைமையையுடைய தமையனாகிய தருமனைக் கருமநிகழ்ச்சியோடு வணங்கினான். எ - று.

துலை ஆகுபெயர். குரவரைக் கண்டுழியெல்லாம் வணங்கும் வணக்கம்போலாது இவன் தன் றமையனாகிய குரவனைத் தீர்த்தமாடுதற்கு விடைபெறுமாறு வணங்கினனென்பார் நிகழ்வோடு பணிந்தான் என்றார். பசுப் பெண்டிர் பாலர் பார்ப்பார் என்பார்க்கிடர்புரிவாரை அரசர் உயிர்க்கொலைசெய்த லறநூற்றுணிபாதலிற் றொறுக்கொண்டவருயிரைக் கவர்ந்தானென்க. (அ)

ஆடம்பரமன்வேடமகற்றித்தொழுதகுதொல்
வேடம்பெறுமறையோருடன்விசயன்புரவிசயன்
சூடந்தருபாகீரதிதோய்காலையிலவணே
சேடன்றலமடவார்புனலயர்வானெதிர்சென்றார்.

(இ - ள்.) விசயன் - அருச்சுனனானவன்—ஆடம்பர மன்வேடம் அகற்றி - ஆடம்பரத்தையுடைய இராசவேடத்தை நீக்கி—தொழுதகு தொல் வேடம் பெறு மறையோருடன் - வணங்கத்தக்க பழைய தவவேடத்தைப்பொருந்தும் பிராமணரோடு—புரவிசயன் சூடம் தரு பாகீரதி தோய் காலையில் - திரிபுரத்தை யழித்த சிவபெருமானுடைய சடாமுடிதந்த கங்கையில் ஸ்நானம் பண்ணும்பொழுதில்—அவண் - அவ்விடத்தில்—சேடன் தல மடவார்-நாகலோகத்திலுள்ள பெண்கள்—புனல் அயர்வான் எதிர் சென்றார்-நீராடும்படி அவனெதிரே போயினார்கள். எ-று.

ஏ - அசை. அயர்வான் வானீற்றுவினையெச்சம். ஆடம்பரமன்வேட மென்றதனால் அரசவேடத்தினிழிபும், தொழுதகுதொல்வேட மென்றதனாற்றவவேடத்தினுயர்வு முணர்த்தியவாறு. வினையெச்சமாக்காது, புனலயர்வானுக் கெதிரே சென்றார் என்பாருமுளர். (எ)

ஓடுங்கயல்விழியாரினுலூபிப்பெயரவளோ
டாடும்புனலிடைநின்றவனநுராகமிகுந்தே
நாடும்பிலவழியேயவள்பின்சென்றுநலத்தா
னீடுங்கொடிமணமெய்தினன்முகில்போலுநிறத்தான்.

(இ - ள்.) முகில் போலும் நிறத்தான் ஆடும் புனலிடை நின்றவன் - முகில் போலும் நிறத்தையுடையனாகிய ஸ்நானஞ்செய்கின்ற நீரில்நின்ற அருச்சுனன்—ஓடும் கயல் விழியாரின் - காதளவு ஓடுகின்ற கயல்மீன்போலுங் கண்களையுடைய பெண்களுள்—உலூபிப்பெயரவளோடு - உலூபி என்னும் பெயரை யுடையவளோடு—அநுராகம் மிகுந்து - ஆசைமிகுந்து—நாடும் பிலவழியே அவள் பின் சென்று - ஆராயப்படும் பாதலவழியே அவளுக்குப் பின்சென்று—நலத்தால் நீடும் கொடி மணம் எய்தினன் - இன்பத்தால்மிக்க கொடிபோலும் அவளைப் புணர்ந்தான். எ - று.

மிகுந்தே என்னும் ஏகாரம் அசை. நிறத்தான் பெயரெச்சமுற்று. கொடி ஆகுபெயர். முகில்போலுநிறத்தான் என்பதைச் சுட்டுப்பெயராக்கினு மமையும். ஓடும் என்னும் பெயரெச்சம் விழியென்னும் பெயர்கொண்டது. கண்டாரைத் தம் வயமாக்கவல்ல சாதுரியமுடையரென்பார் ஓடுங்கயல்விழியாரென்றும், கிரீடை செய்தற்குரிய புனலென்றென்பார் ஆடும்புனலென்றும், இருண்மண்டுதலால் எவர்க்கும் இயங்குதலரிய வழியென்பார் நாடும்பிலவழி என்றும், புணர்ச்சிக்குரிய மங்கைப்பருவத்தளென்பார் நலத்தானீடுங்கொடி என்றும், தீர்த்தயாத்திரைசெய்வார் ஐம்புலன்வழிச்செல்லாது மகளிரை மறலியாகக்கொண் டொழுகற்பாலரென்னும் நூற்றிணிபை மறப்பித்து ஆசையின்வயத்ததாக்குந் தாமதகுணத்தனென்பார் முகில்போலுநிறத்தான் என்றுங்கூறினார். (அ)

இம்மென்றளிமுரல்பாயலிலின்பத்தைவளர்த்தும்
பொம்மென்பரிபுரநாண்மலர்பொற்சென்னியில்வைத்துஞ்
செம்மென்கனியிதழாளொடுசின்னாளுலமுற்றா
னம்மென்கொடியனையாளுமிராவானையளித்தாள்.

(இ - ள்.) இம் என்று அளி முரல் பாயலில் இன்பத்தை வளர்த்தும் - (அவ் வருச்சுனன்) இம்மென்று வண்டுகள் ஒலிக்கின்ற சயனத்தில் இன்பத்தை வளரச் செய்தும்—பொம் என் பரிபுர நாள் மலர் பொன் சென்னியில் வைத்தும்-பொம் மென்கின்ற சிலம்பையுடைய அவள் கால்களாகிய புதிய தாமரைமலர்களைத் தன்னுடைய அழகிய சிரசிற் சூடியும்—செம் மென் கனி இதழாளொடு சில் நாள் நலம் உற்றான் - சிவந்த மென்மையாகிய கொவ்வைக் கனிபோலும் அதரத்தையுடைய உலூபியோடு சிலநாள் இன்பத்தை அநுபவித்தான்—அம் மென் கொடி அனையாளும் இராவானை அளித்தாள் - அழகிய மென்மையாகிய கொடிபோன்ற அவளும் இராவான் என்னும் புதல்வனைப் பெற்றாள். எ - று.

இம்மெனல், பொம்மெனல் அனுகரணவோசை. அனையாளும் என்னும் உம்மை எச்சம். மென்பூஞ்சயனமென்பார் இம்மென்றளிமுரல்பாய லென்றும், இருதலைப்புள்ளினோருயிர்போல இருவரும்ஒத்தபோகத்தை யநுபவித்தாரென்பார் இன்பத்தைவளர்த்தும் என்றும், தனக்குரிய மெல்லோசை நீங்கிக்கரண விசேடத் தால் வல்லோசையாயொலிக்குஞ் சிலம்பென்பார் பொம்மென் பரிபுரமென்றும், ஊடிப் பின்பதனைநீக்கிப் புணர்தல் காமத்திற் கின்பமாதலின் அங்ஙனநிகழ்த்தினா னென்பார் பரிபுரநாண்மலர் பொற்சென்னியில் வைத்தும் என்றுங்கூறினார். (௯)

ᵉ நாகாதிபன்மகன்மைந்தனலங்கண்டுமகிழ்ந்து
நாகாதிபன்மகன்மீளவுநதியின்வழிவந்து
நாகாதிபன்வண்சாரலினன்னீர்கள்படிந்து
நாகாதிபன்விடுமும்மதநாறுந்திசைபுக்கான்.

இ - ள்.) நாகாதிபன் மகன் - இந்திரனுடைய குமாரனாகிய அருச்சுனன்—நாகாதிபன் மகள் மைந்தன் நலம் கண்டு மகிழ்ந்து-சேடன்மகளாகிய உலூபியுடைய புதல்வனது அழகைக்கண்டு சந்தோஷங்கொண்டு—மீளவும் நதியின் வழி வந்து - திரும்பவும் நதியின் வழியாகப் பூமியில் வந்து—நாகாதிபன்வண் சாரலின் நல் நீர்கள் படிந்து - இமயமலையின் அழகிய சாரலினுள்ள நல்ல தீர்த்தங்களிலாடி—நாகாதிபன் விடும் மும்மதம் நாறும் திசை புக்கான் - ஐராவதம் சொரிகின்ற மும்மதங் களுங் கமழுங் கீழைத்திசையை அடைந்தான். எ - று.

உம்மை எச்சம். இச்செய்யுள் சொற்பின்வருநிலையென்னு மலங்காரம். மலை களுக்கெல்லாந்தலைமைபூண்டிருத்தலின் இமயத்தை நாகாதிபன் என்றும், யானை களுக்கெல்லாந் தலைமைபூண்டிருத்தலின் ஐராவதத்தை நாகாதிபன் என்றுங்கூறி னார். (௧௦)

நெளிந்தாடரவணையயனிறம்போலநிறக்குங்
களிந்தாநதிமுதலாகியகடவுண்ணதிபலவு
முளிந்தாரழலெழுகானெறிமுக்கோலினராகித்
தெளிந்தாறியபெரியோரொடுசென்றாடினனன்றே.

(இ - ள்.) முக்கோலினர் ஆகித் தெளிந்து ஆறிய பெரியோரொடும்-திரிதண் டத்தையுடையராய் மனந்தெளிந்தடங்கிய பெரியோர்களோடு—முளிந்து ஆர் அழல் எழு கான் நெறி சென்று - காய்தலால் நிறைவாகிய அக்கினி சுவாலிக்கின்ற

காட்டுவழியிற் போய்—நெளிந்து ஆடு அரவு அணை ஐயன் நிறம்போல நிறக்கும் - நெளிந்து படமெடுத்தாடுஞ் சர்ப்பமாகிய சயனத்தையுடைய விட்டுணுவினது நிறம்போலக் கருநிறங்கொண்டிருக்கும்—களிந்தாநதி முதலாகிய கடவுள் நதி பலவும் ஆடினன். - காளிந்திநதிமுதலான தெய்வத்தன்மை பொருந்திய நதிகள் பலவற்றிலும் ஸ்நானஞ்செய்தான். எ - று.

அன்று, ஏ அசைகள். முளிந்து என்னுஞ் செய்தெனெச்சம் ஏதுப்பொருட்டு. முக்கோல் மூன்றுகோல் ஒன்றாகச்சேர்த்துக் கட்டப்பட்டதண்டு. பாம்பிற்கு உடம்பைப் புடைபெயர்த்துப் படமெடுத்தாடலியல்பாதலின் நெளிந்தாடரவென்றார். (௧௧)

பத்திக்குவரம்பாகியபார்த்தன்பலதீர்த்த
மத்திக்கினுமெத்திக்கினுமாமென்றவையாடிச்
சித்திக்கொருவிதையாகியதென்னாட்டினையணுகித்
தத்திச்சொரியருவித்தடவரவக்கிரிசார்ந்தான்.

(இ - ள்.) பத்திக்கு வரம்பாகிய பார்த்தன் - அன்புக்கு எல்லையாகிய அருச்சுனன்—அத்திக்கினும் எத்திக்கினும் ஆம் என்றவை பல தீர்த்தம் ஆடி - அந்தக்கீழைத்திக்கினும் ஒழிந்ததிக்கினும் விசேடமுடையனவாம் என்று சொல்லப்பட்ட பலதீர்த்தங்களில் ஸ்நானஞ்செய்து—சித்திக்கு ஒரு விதை ஆகிய தென் நாட்டினை அணுகி - சித்திக்கு ஒருவித்தாயுள்ள தக்ஷிணபூமியையடைந்து—தத்திச் சொரி அருவித் தட அரவக்கிரி சார்ந்தான் - குதித்துப் பாய்கின்ற அருவியையுடைய பெரிய திருவேங்கடமலையை அடைந்தான். எ - று.

ஈண்டுத் தென்னாடென்றது விந்தகிரியின்றென்பாலையென்க. இவனின்மேற்பட்ட பத்தியுடையாரிலரென்பார் பத்திக்குவரம்பாகியபார்த்தன் என்றும், காஞ்சி அருணை சிதம்பரம் முதலிய சிவாலயங்களும் ஸ்ரீரங்கம் முதலிய விட்டுணுவாலயங்களும் அத்தென்றிசைக்க ணுளவாகலின் எவரும் அவற்றை வணங்கித் தம்மிட்ட சித்திகளைப் பெறுதற்கு அத்திசையேதுவா யிருந்ததென்பார் சித்திக் கொருவிதையாகிய தென்னாடென்றுங் கூறினார். இவ்வருச்சுனன் கண்ணப்பநாயனாரா யவதரித்துழியும் முற்பிறப்பிற் பயிற்சிவயத்தாற் பத்திக்குவரம்பா யிருந்தமை காண்க. அரவக்கிரி - திருவேங்கடம். (௧௨)

இச்சைப்படிதன்பேரறமெண்ணான்கும்வளர்க்கும்
பச்சைக்கொடிவிடையோனொருபாகந்திறைகொண்டாள்
செச்சைத்தொடையிளையோனுகர்தீம்பான்மணநாறுங்
கச்சைப்பொருமுலையாளுறைகச்சிப்பதிகண்டான்.

(இ - ள்.) தன் இச்சைப்படி பேர் அறம் எண்ணான்கும் வளர்க்கும் பச்சைக்கொடி - தமது பிரியப்படி பெரிய தருமம் முப்பத்திரண்டையும் வளர்க்கும் பச்சைநிறத்தையுடைய கொடிபோன்றவரும்—விடையோன் ஒருபாகம் திறைகொண்டாள் - சிவபெருமானுடைய ஒருபாகத்தைத் திறையாகக் கொண்டவரும்—செச்சைத் தொடை இளையோன் நுகர் தீம்பால் மணம் நாறும் கச்சைப்பொரு முலையாள் - வெட்சிமாலையையுடைய சுப்பிரமணியக் கடவுள் உண்ட இனிய பால்மணங்கமழும் கச்சைமோதும் முலையையுடையவரும் ஆகிய காமாட்சியம்மையார்—உறை கச்சிப்பதி கண்டான் - எழுந்தருளி யிருக்கின்ற காஞ்சிநகரத்தைக் கண்டான். எ - று.

கொடி ஆகுபெயர். ஆன்மாக்கண்மீதுகொண்ட பேரருளினாலே ஏவுவாரின்றிச் சுயேச்சையாக முப்பத்திரண்டறங்களையும் வளர்த்த பெருமாட்டியென்பார் இச்சைப்படிதன் பேரறமெண்ணான்கும் வளர்க்கும் பச்சைக்கொடி என்றார். முப்பத்திரண்டறங்களாவன: ஆதுலர்க்கன்னசாலை முதலாயின. செச்சைக்கொடியென்றபாடத்திற்கு ஆட்டுக்கடாக் கொடியெனப் பொருள்கொண்டு, வாகனமாதலின் அதுவே கொடியுமாயிற்றென அகலங் கூறுக. (௧௩)

அயனார்புரிமகசாலையுமணியத்திகிரிக்கே
மயனார்செய்திருக்கோயிலுமாநீழலின்வைகெண்
புயனாருறைமெய்க்கோலமுமுள்ளன்பொடுபோற்றிப்
பயனார்புனனதியேழுமந்நகரூடுபடிந்தான்.

(இ - ள்.) அயனார் புரி மகசாலையும் - பிரமன்செய்த யாகசாலையையும்—அணி அத்திகிரிக்கு மயனார் செய் திருக் கோயிலும் - அழகிய அத்திகிரியில் மயன் செய்த திருக்கோயிலையும்—மா நீழலில் வைகு எண்புயனார் உறை மெய்க்கோலமும் - மாமரநிழலில் வீற்றிருக்கின்ற எட்டுப்புயங்களையுடைய சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் மெய்ம்மையாகிய திருக்கோலத்தையும்—உள் அன்பொடு போற்றி - மன அன்போடு துதித்து—பயன் ஆர் புனல் நதி ஏழும் அந்நகரூடு படிந்தான் - பிரயோசனம்மிக்க நீரையுடைய நதிகளேழிலும் அந்நகரின்கண்ணே ஸ்நானஞ்செய்தான். எ - று.

ஏ - அசை. அத்திகிரிக்கு என்னும் நான்கனுருபு ஏழனுருபாகத் திரித்துப் பொருளுரைக்கப்பட்டது. மூழ்குவாரது பாவங்களைக் கெடுக்கும் புனல் என்பார் பயனார்புனல் என்றார். பருகல் மூழ்கல் முதலிய பயன்களார்ந்த புனல் என்றல் சிறப்பின்று. ஐராவதம் மலைவடிவெடுத்தமையின் அதற்கு அத்திகிரியென்றபெயராயிற்று. ஏழுநதிகளாவன: கம்பை, பம்பை, மஞ்சனி, பிச்சி, கலிச்சி, மண்ணி, வெஃகா என்பனவாம். (௧௪)

பெற்றாள்சகதண்டங்களனைத்தும்மவைபெற்று
முற்றாமுகிழ்முலையாளொடுமுக்கண்ணர்விரும்பும்
பற்றாமெனமிக்கோரிகழ்பற்றொன்றினுமுண்மை
கற்றார்தொழுமருணாசலமன்போடுகைதொழுதான்.

(இ - ள்.) சகத் அண்டங்கள் அனைத்தும் பெற்றாள் - தோன்றியழியுமியல்பினையுடைய அண்டங்களனைத்தையும் பெற்றவரும்—அவை பெற்றும் முற்றா முகிழ் முலையாளொடு - அவைகளைப்பெற்றும் முதிராத அரும்புபோன்ற தனங்களையுடையவருமாகிய பார்வதியாரோடு—முக்கண்ணர் விரும்பும்பற்று ஆம் என - சிவபெருமான் விரும்பும் ஸ்தலமென்று—உண்மை கற்றார் - மெய்ப்பொருளையறிந்த ஞானிகள்—மிக்கோர் இகழ் பற்று ஒன்றினும் தொழும் அருணாசலம் - (ஞானிகளுக்குத் தகாதென்று) மேலோரிகழுகின்ற விருப்பமொன்றினாலும் வணங்கும் அருணாசலத்தை—அன்போடு கைதொழுதான் - அன்போடு வணங்கினான். எ-று.

ஒன்றினும், பெற்றும் என்னும் உம்மைகள் சிறப்பு. பற்றாமென என்பதில் பற்று ஆகுபெயர். சகதண்டம் வடநூன்முடிபு. முற்றாத என்னும் ஈறு தொக்க பெயரெச்சம் முலையென்னும் பெயர்கொண்டது. ஞானியர்க் கெவ்வாற்றானும் ஆகாதெனப் பெரியோர் விலக்கிய பற்றைவைத்து அந்த ஞானியர்

தொழும் அருணாசலமென்க. இவ்வாறே "பற்றொன்றிலார்பற்றுந்தில்லைப்பரமன்" என்று பெரியாரும் பணித்தார். பெற்றாள் சகதண்டங்களனைத்துமவைபெற்றும், முற்றாமுகிண்முலையாள் என்பதன்கருத்தை, "சிவஞ்சத்திதன்னையீன்றுஞ் சத்திதான்சிவத்தையீன்று, முவந்திருவரும் புணர்ந்திங்குலகுயிரெல்லா மீன்றும்,பவன்பிரமசாரியாகும் பான்மொழிகன்னியாகும்" என்னுஞ் சிவஞான சித்தித் திருவிருத்தத்தானுணர்க. மேலோரிகழும் பற்றுத் தம்மைவந்தடைந்தாலும் ஞானிகள் வணங்கும் அருணாசலம் எனப் பொருள்கூறி, தலங்களை நினைப்பின் அதுவும் பற்றுண்டாதற்கு ஏதுவாமாயினும் நினைத்துச் சென்று வழிபட்டான் மாத்திரம் முத்திகொடுக்குஞ் சிதம்பரம்முதலிய தலங்களைப்போலாது இருந்தவிடத்திருந்து நினைத்தமாத்திரத்தின் முத்திகொடுத்தற் சிறப்புடைமைபற்றி உணர்விறந்த ஞானியரும் பற்றைவைத்து வணங்கும் அருணாசலம் எனவகலங்கூறலும், ஞானியர் பற்றொன்றிலும் வணங்கும் அருணாசலம் பற்றொன்றாவிடினும் வணங்கும் அருணாசலமெனப் பொருள்கூறி, ஒன்றினும் என்னும் எச்சவும்மையால் ஒன்றாவிடினும் என்பதுபோந்ததெனவும் பற்றொன்றின் வணங்குதல் அது நீங்குதற்கெனவும் பற்றொன்றாவிடின் வணங்குதல் பயிற்சிவயத்தான் மீண்டுவந்து தாக்காதொழிதற்கெனவும் அகலங்கூறலும் ஒன்று. (௧௫)

உருகுங்கமழ்நெய்பாலிருபாலுங்கரையொத்துப்
பெருகுந்துறையேழேழுபிறப்புங்கெடமூழ்கிக்
கருகுங்கருமுகின்மேனியர்கவிஞானியர்கண்ணிற்
பருகுஞ்சுவையமுதானவர்பாதந்தலைவைத்தான்.

(இ - ள்.) உருகும் கமழ் நெய் பால் இருபாலும் கரை ஒத்துப்பெருகும்துறை- உருகுகின்ற நறுநெய்யும் பாலும் இருமருங்கும் கரையொத்துப் பெருகுகின்ற பெண்ணையாற்றில்—ஏழேழு பிறப்பும் கெட மூழ்கி - எழுமையினையுடைய தன்னெழுபிறப்புங் கெடும்படி ஸ்நானஞ்செய்து—கருகும் கருமுகில் மேனியர் (பாதம்) - கருமையாகிய முகில்போன்ற திருமேனியை யுடைய விட்டுணுவினுடைய பாதங்களையும்—கவி ஞானியர் கண்ணிற் பருகும் சுவை அமுது ஆனவர் பாதம் - பாமாலைகளைச் செய்யும் ஞானிகள் கண்ணாற்பருகுகின்ற சுவைபொருந்திய அமுதமானவராகிய சிவபெருமானுடைய பாதங்களையும்—தலைவைத்தான் - வணங்கினான். எ-று.

உருகும் நெய் கமழ்நெய்யெனத் தனித்தனி சென்றியையும் ஏழேழுபிறப்பும் என்பதனை "எழுமை யெழுபிறப்பும்" என்பதுபோலவும், கருகுங்கருமுகில் என்பதனைக் "கருங்கண்ணன்" என்பதுபோலவுங் கொள்க. பாமாலை சூட்டித் தம்மை வழிபடுமன்பர்க்கு வெளிப்பட்டருள் புரியு மியல்புடையரென்பார் கவிஞானியர் கண்ணிற் பருகுஞ்சுவையமுதானவர் என்றார். பெண்ணையில் நெய் பால் பெருகினமை "அவ்வைபாடலுக்கு நறுநெய்பால் பெருகி" என்ற கவியுளுரைத்தாம். கவிஞானியர் திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் முதலாயினோர். (௧௬)

ஐயானனனியல்வாணனையடிமைக்கொளமெய்யே
பொய்யாவணமெழுதும்பதிபொற்போடுவணங்கா
மெய்யாகமவதிகைத்திருவீரட்டமுநேமிக்
கையாளனகீந்திரபுரமுங்கண்டுகைதொழுதான்.

(இ - ள்.) ஐயானனன் - ஐந்து முகங்களையுடைய சிவபெருமான்—இயல்வாணனை அடிமைக் கொள - இல்லொழுக்கத்திற் புகுஞ் சுந்தரமூர்த்தி நாயனாரை அடிமைக்கொள்ளும்படி—மெய்யே பொய் ஆவணம் எழுதும்பதிபொற்போடு வண

ங்கா - மெய்யாகவே பொய்யடிமையோலையெழுதிய திருவெண்ணெய் நல்லூரை அழகோடு வணங்கி—மெய் ஆகம அதிகைத் திருவீரட்டமும் - மெய்ம்மையாகிய ஆகமவிதியையுடைய திருவதிகை வீரட்டானத்தையும்—நேமிக் கையாளன் அகீந்திரபுரமும் கண்டு கைதொழுதான் - சக்கரப்படையையேந்திய கையையுடைய விட்டுணு வீற்றிருக்கும் அகீந்திரபுரத்தையுந் தரிசித்து வணங்கினான். எ - று.

ஏகாரந் தேற்றம். எழுதும் என்னும் பெயரெச்சம் பதியென்னும் நிலப்பெயர்கொண்டது. ஆகமம் ஆகுபெயர். இயல் ஈண்டு ஒழுக்கம். அட்டாங்க பஞ்சாங்கமாகவென்பார் பொற்போடென்றும், சிவபெருமான், விட்டுணு நடித்த பெருவாய்த்தருக்கத்தினால் அறிவுநிலைதிரிந் தருச்சனை விடுத்த முப்புரத்தாரை யெரித்து, அருச்சனையினிலையுற்ற மூவர்க்கும் அருள்புரிதற்கும் சமய குரவர் நால்வருள் ஒருவராகிய திருநாவுக்கரசுநாயனாரை அவர் தமக்கையாராகிய திலகவதியார் அஞ்செழுத்தோதிக்கொடுத்த விபூதிவாயிலாகச் சூலைநோய் தவிர்த்தாளுதற்கும் இடமாகிய பதியென்பார் மெய்யாகமவதிகைத்திருவீரட்டமும் என்றுங் கூறினார். வீரத்தைப் புரியுமிடம் வீரட்டானம்; அது மூலட்டானம் என்பதுபோல நின்றுவீரட்டமென மரீஇயிற்று. வீரஞ்செய்தட்டதானம் வீரட்டானமென மரீஇயிற்றென் பாருமுளர். இயல்வாணனை என்பதற்கு இயற்றமிழ்ப்புலவராகிய சுந்தரமூர்த்தி நாயனாரை எனப்பொருள்கோடலும் ஒன்று. (௧௭)

இன்னம்பலபலயோனியிலெய்தாநெறிபெறவே
முன்னம்பலரடிதேடவுமுடிதேடவுமெட்டா
வன்னம்பலபயில்வார்புனலணிதில்லையுளாடும்
பொன்னம்பலநாதன்கழல்பொற்போடுபணிந்தான்.

(இ - ள்.) முன்னம் பலர் அடி தேடவும் முடி தேடவும் எட்டா - முற்காலத்திலே விட்டுணு பிரமாவாகிய இருவரும் அடியைத்தேடவும் முடியைத் தேடவுங் கிட்டாத—அன்னம் பல பயில் வார் புனல் அணி தில்லையுள் ஆடும் பொன்னம்பல நாதன் கழல்-அன்னங்கள் பல இருக்கும் மிக்க நீரையுடைய அழகிய சிதம்பரத்தில் நடிக்கும் நடேசபெருமானுடைய பாதங்களை—இன்னம் பலபல யோனியில் எய்தா நெறி பெறப் பொற்போடு பணிந்தான் - இன்னும் பற்பல யோனிகளிற் பிறவாத வழியையடையும்படி அழகோடு வணங்கினான். எ - று.

ஏ - அசை. உம்மைகளிரண்டுஞ் சிறப்பு. இன்னம் பரூஉ. எட்டாத என்னும் ஈறுதொக்க பெயரெச்சம் பொன்னம்பலநாதன் என்னுஞ் செயப்படு பொருட்பெயர் கொண்டது. இருவரையும் பலரென்றது தமிழ்வழக்கு. பொற்போடு பணிந்தான் என்பதற்குப் பொற்போடு வணங்கா என்பதற்குரைத்தாங்குரைக்க. நடேசபெருமானை இம்மைப்பயன் கருதாது மறுமைப்பயன்கருதி வணங்கினனென்க. ()

இலங்காபுரிமுன்செற்றவனிருபோதும்வணங்கத்
துலங்காடரவணைமேலறிதுயில்கொண்டவர்பொற்றாள்
பொலங்காவிரியிருபாலும்வரப்பூதலமங்கைக்
கலங்காரமளிக்குந்தென்னரங்கத்திடைதொழுதான்.

(இ - ள்.) இலங்காபுரி முன் செற்றவன் இருபோதும் வணங்க - இலங்கைநகரை முன் அழித்த அனுமன் இரவும் பகலும் வணங்க—துலங்கு ஆடு அரவு அணைமேல் அறி துயில் கொண்டவர் பொன் தாள் - விளங்குகின்ற படமெடுத்தாடும் சர்ப்பசயனத்தின்மேல் யோகநித்திரைசெய்த விட்டுணுவினுடைய பொலிவாகிய பாதங்களை—பொலம் காவிரி இருபாலும் வர - அழகிய காவிரியாறு இரண்டுபெ

க்கங்களிலும் பாய—பூதல மங்கைக்கு அலங்காரம் அளிக்கும் தென் அரங்கத்திடை தொழுதான் - பூமிதேவிக்கு அலங்காரத்தைக்கொடுக்குந் தென்றிசைக்கணுள்ள ஸ்ரீரங்கத்தில் வணங்கினான். எ - று.

வரவென்னுஞ் செயவெனெச்சம் எதுப்பொருட்டு. பொலங்காவிரி என்பதற்குப் பொற்பொடியையுடைய காவிரியெனப் பொருள்கொள்ளினும், அலங்கு ஆரம் அளிக்கும் எனப் பிரித்து விளங்கும் முத்துவடத்தை ஆக்கும் எனப் பொருள்கொள்ளினும் இழுக்காது (கக)

வளவன்பதிமுதலாகவயங்கும்பதிதோறுந்
துளவங்கமழதிசீதளதோயங்கள்படிந்தே
யிளவண்டமிழெழுதேடுமுன்னெதிரேறியதுறைசூழ்
தளவங்கமழ்புறவஞ்செறிதண்கூடல்புகுந்தான்.

(இ - ள்.) வளவன் பதி முதலாக வயங்கும் பதிதோறும் - சோழதேயம் முதலாக விளங்குகின்ற தேயங்கள்தோறும்—துளவம் கமழ் அதி சீதள தோயங்கள் படிந்து - துழாயின் மணங்கமழும் மிக்க குளிர்ச்சியையுடைய தீர்த்தங்களிலே ஸ்நானஞ்செய்து—இள வண் தமிழ் எழுது எடு முன் எதிர் ஏறிய துறை சூழ் - திருஞானசம்பந்த மூர்த்தி நாயனாருடைய அழகிய தேவாரப்பதிகம் எழுதிய திருவேடு எதிர்சென்ற வைகையாறு சூழ்ந்த—தளவம் கமழ் புறவம் செறி தண் கூடல் புகுந்தான் - முல்லைப்பூக்கமழும் வனஞ்சார்ந்த குளிர்ந்த மதுரையையடைந்தான். எ-று.

ஏ - அசை. அம் மூன்றுஞ் சாரியை. இளமை, தமிழ், தளவு ஆகுபெயர்கள். கருத்தாவினுடைய இளமையை அவர்செய்த பதிகத்தின் மேலேற்றிக் கூறினாரெனினு மமையும். இனி, இளவண்டமிழ் என்பதற்கு, புதிய அழகிய தேவாரப்பதிகம் எனப்பொருள் கூறி, சமணர்களோடு வாது நிகழ்ந்தபொழுது பாடினமையின் இளவண்டமிழ் என்றார் என அகலங்கூறுதலுமொன்று. இப்பொருட்கு இளமை புதிதென்னும் பொருட்டு. சூழ்கூடல் செறிகூடல் எனத் தனித்தனி இயையும்.()

வேறு.

குன்றிிளவாடைவரும்பொழுதெல்லாமலர்ந்ததிருக்கொன்றைநாறக், தென்றல்வரும்பொழுதெல்லாஞ்செழுஞ்சாந்தின்மணநாறுஞ்செல்வவீதி, நன்றறிவார்வீற்றிருக்குநான்மாடக்கூடல்வளநகரியாளும், வென்றிபுனைவடிசுடர்வேன்மீனவனைவானவர்கோன்மதலைகண்டான்.

(இ - ள்.) குன்றில் இள வாடை வரும் பொழுது எல்லாம் மலர்ந்த திருக்கொன்றை நாற - வெள்ளிமலையிலிருந்து இளவாடைக் காற்று வரும்பொழுதெல்லாம் விரிந்த திருக்கொன்றைமலர் கமழ—தென்றல் வரும் பொழுது எல்லாம் செழும் சாந்தின் மணம் நாறும் செல்வ வீதி - தென்றற்காற்று வரும்பொழுதெல்லாம் செழுமையாகிய சந்தனமலரின் மணங்கமழும் செல்வம் பொருந்திய வீதியையுடைய—நன்று அறிவார் வீற்றிருக்கும் நான்மாடக்கூடல் வள நகரி ஆளும் - நன்மையையறியும் மேன்மக்கள் வீற்றிருக்கின்ற நான்மாடக்கூடலாகிய வளத்தையுடைய மதுரையை அரசாளும்—வென்றி புனை வடிசுடர் வேல் மீனவனை-வெற்றிபொருந்திய கூரிய ஒளியையுடைய வேலையேந்திய பாண்டியராசனை—வானவர்கோன் மதலை கண்டான் - அருச்சுனன் கண்டான். எ - று.

சாந்து ஆகுபெயர். புனை என்னும் வினைத்தொகை வேலென்னுங் கருவிப் பெயர்கொண்டது. வாடை வெள்ளிமலையினின்று வருதலிற் குன்றிலென்பதற்கு

வெள்ளிமலையென்றும். "விடையாவடந்தைசெய் வெள்ளியம் பொருப்பினுந், தென்கால்விடுக்குஞ் செம்பிற்பொருப்பினும்" என்று பெரியாரும் பணித்தார். மதுரையையழிக்குமாறு இந்திரன் முகில்களையேவ, அவை வந்து மழைபெய்தழித்துழிச் சோமசுந்தரக்கடவுள் தமது சடையிலுள்ள நான்கு முகில்களையனுப்ப, அவை நான்குமாடங்களாய்க்கூடி அழியாது காத்தமையின் நான்மாடக்கூடலாயிற்று. தமிழில் வல்ல புலவர் வீற்றிருக்கும் மதுரையென்பார் நன்றறிவார் வீற்றிருக்கும் நான்மாடக்கூடல் என்றும், கடல்சுவற வென்ற வேலென்பார் வென்றிபுனை வேல் என்றுங் கூறினர். பொதியத்திற்குச் சந்தனம் போலக் கைலைக்குக் கொன்றைசிறந்த தென்க. சிவபெருமான் அணிந்திருக்கும் கொன்றைமாலையின் மணம் என்றலு மொன்று. திருவடையாளமாலையாதலின் திருக்கொன்றையென விசேடித்தார். (உக)

அந்நிலத்தினவரல்லாவந்தணரோடிவனவனுக்காசிகூற, வெந்நிலத்தீரெப்பதியீரெத்திசைக்குப்போகின்றீரென்றுபோற்றிச், சென்னியர்க்கும்வில்லவர்க்குமணிமுடியாங்கனைகழற்காற்செழியன்கேட்பக், கன்னியைக்கண்ணுற்றாடவந்தனமென்றனன்மெய்ம்மைக்கடவுள்போல்வான்.

(இ - ள்.) இவன் அந்நிலத்தினவர் அல்லா அந்தணரோடு அவனுக்கு ஆசி கூற - இந்த அருச்சுனனானவன் அத்தேயத்தவரல்லராகிய தன்னோடுவந்த பிராமணருடனே அந்தப் பாண்டியனுக்கு ஆசிசொல்ல—சென்னியர்க்கும் வில்லவர்க்கும் மணி முடியாம் கனை கழல் கால் செழியன் - சோழருக்குஞ் சேரருக்கும் இரத்தினங்களழுத்திய முடியாயிருக்கும் ஒலிக்கின்ற வீரக்கழலையணிந்த காலையுடைய பாண்டியராசன்—எந்நிலத்தீர் எப்பதியீர் எத்திசைக்குப் போகின்றீர் என்று போற்றிக் கேட்ப - எத்தேயத்தீர் எவ்வூரீர் இப்பொழுது எத்திக்கிற்குப் போகின்றீர் என்று துதித்துக் கேட்க—மெய்ம்மைக் கடவுள் போல்வான் - மெய்ம்மைக்கடவுளையொத்தவனாகிய அருச்சுனன்—கன்னியைக் கண்ணுற்று ஆட வந்தனம் என்றனன் - கன்னியைப்பார்த்து ஆட வந்தோம் என்று சொன்னான். எ - று.

பாண்டியர்க்குரிய குமரியாறு இக்காலத்துக் கடல்கொள்ளப்பட்டது. கன்னியைக் கண்ணுற்றாட என்பதைக் குமரியாற்றைக்கண்டு தீர்த்தமாடவென்றும், கன்னியைக்கண்டு அவளோடு புணர என்றும் இரட்டுறமொழிந்து கொள்க. கன்னியைக் கண்ணுற்று என்பதற்கு, திரௌபதியைக் காண்டலால் என வேறுமொரு பொருள் கொள்ளக் கிடந்தமை காண்க. இப்பொருட்கு, கண்ணுற்று என்னுஞ் செய்தெனெச்சம் ஏதுப்பொருட்டு. மெய்ம்மைக் கடவுளென்பது மெய்ம்மையை விளக்குங் கடவுளென விரியும். அறக்கடவுள், காவற்கடவுளென்பனபோல. தவவேடமுடைமையிற் போற்றிக்கேட்டா னென்க. சேரசோழரைத் தன்கீழ்ப்படுத்தி அரசாண்டானென்பார் சென்னியர்க்கும் வில்லவர்க்கு மணிமுடியாங் கனைகழற்காற் செழியன் என்றும், எத்துணைப் பெருந்தகைமையோரும் நாத்தவறுதற்கேதுவாகிய மகளிராசை மிதூர்ந்துழியும் நாத்தவறாமையின் மெய்ம்மைக்கடவுள் போல்வான் என்றுங் கூறினர். மெய்ம்மைக்கடவு ளென்பதற்கு மெய்ம்மையையுடைய கடவுளெனப் பொருள்கோடல் சிறப்பின்று. (உஉ)

வெய்தின்மகபதிமுடியில்வளையெறிந்துமீண்டநாள்விண்ணின்மாதர்
கொய்துமலர்தொலையாதகுளிர்தருக்களொருகோடிகொண்டுபோந்து
மைதவழ்தன்றடங்கோயில்வருதமதனொருமருங்குவைத்தகாவிற் [னே.
கைதவர்கோன்மற்றவர்க்குப்போனகஞ்செய்தருந்துமிடங்கற்பித்தா

(இ - ள்.) கைதவர்கோன் - பாண்டியராசன்—வெய்தில் மகபதி முடியில் வளை எறிந்து மீண்டநாள் - விரைவோடு இந்திரனுடைய முடியிலே வளையை எறிந்து திரும்பியநாளில்—விண்ணின் மாதர் மலர் கொய்து தொலையாத குளிர் ஒரு கோடி தருக்கள் கொண்டு போந்து - தெய்வமகளிர் பூக்களைக் கொய்து தொலையாத குளிர்ந்த ஒப்பற்ற புதுமையையுடைய ஐந்தருக்களைக் கொண்டுவந்து—மைதவழ் தன் தடம் கோயில் வருதம் அதன் ஒருமருங்கு வைத்த காவில்-முகில்கள் தவழ்கின்ற தனது விசாலித்த மாளிகையினிருப்பிடத்தின் ஒருபக்கத்தே வைத்த சோலையில் அவர்க்கு - அவர்களுக்கு—போனகம் செய்து அருந்தும் இடம் கற்பித்தான் - சோறு சமைத்து உண்ணுமிடத்தை நியமித்தான். எ - று.

மற்று, ஏ அசைகள். ஒப்பற்ற புதுமை என்றது வேண்டிய வேண்டியாங் கீதலை. ஒருகோடியென்ப தெண்ணைக் குறித்ததென்றல் ஐந்தரு வென்பதனோடு முரணுதலின் பொருந்தாதென்க. வருதமதன் என்பதில் அது பகுதிப்பொருள் விகுதி. இவன் குலமுதல்வனாகிய உக்கிரப்பெருவழுதி இந்திரன்முடியில் வளையெறிந்தமையைக் குலவொற்றுமைபற்றி இவற்கேற்றிக் கூறினார். வருதம்-இருப்பிடம். (௨௩)

வேதியரோடக்காவிலிளைப்பாறியிருந்தளவின்மின்குழாம்போற்
றாதியருஞ்சேடியருந்தற்சூழச்சிலைமதனன்றனிசேவிக்கச்
சோதியரிச்சிலம்பரற்றத்துணைநெடுங்கண்செவியளப்பத்தொடித்தோள்
யாதியரவிந்தையெனநிருபன்மகள்விளையாடற்காங்குவந்தாள். [வீசி

(இ - ள்.) வேதியரோடு அக்காவில் இளைப்பாறி இருந்த அளவில் - (அருச்சுனன்) பிராமணரோடு அந்தச் சோலையில் இளைப்பாறி இருந்தபொழுதில்—நிருபன் மகள் - பாண்டியராசனுடைய புதல்வி—மின் குழாம்போல் தாதியரும் சேடியரும் தற்சூழ - மின்னற்கூட்டம்போலச் செவிலியருந் தோழியருந் தன்னைச்சூழ—சிலைமதனன் தனி சேவிக்க - வில்லையுடைய மன்மதன் தனியே வழிபட—சோதி அரிச் சிலம்பு அரற்ற - ஒளிபொருந்திய தரிசுகளிட்ட சிலம்பு ஒலிக்க—துணை நெடும் கண் செவி அளப்ப - இரண்டு நெடிய கண்களுங் காதையளக்க—தொடித் தோள் வீசி - வளையலையுடைய கையை வீசி—ஆதி அரவிந்தை என விளையாடற்கு ஆங்கு வந்தாள் - மேன்மையை யுடைய இலக்குமியைப்போல விளையாடுதற்கு அவ்விடத்திலே வந்தாள். எ - று.

சூழ, சேவிக்க, அரற்ற, அளப்ப, வீசி வந்தாளென்க. அழகானும் நல்வினையுடையான்மாட்டுச் சேரலானும் அரவிந்தையென என்றார். அரிச்சிலம் பென்பதற்குத் தவளையினொலிபோன்ற ஒலியுடைய சிலம்பென்றலும் ஒன்று. இப்பொருட்கு அரி ஆகுபெயர். (௨௪)

பச்சென்றதிருநிறமுஞ்சேயிதழும்வெண்ணகையும்பார்வையென்னு
நச்சம்புமமுதூறநவிற்றுகின்றமடமொழியுநாணும்பூணுங்
கச்சின்கணடங்காதகனதனமுநுண்ணிடையுங்கண்டுசோர்ந்து [ன்.
பிச்சன்போலாயினனப்பெண்கொடிமெய்நலமுழுதும்பெறுவானின்ரு

(இ - ள்.) அப் பெண் கொடி மெய் நலம் முழுதும் பெறுவான் நின்றான்-அப் பெண்ணாகிய கொடியினுடைய சரீரநலமுழுவதையும் பெறும்படிநின்ற அருச்சுனன்—பச்சென்ற திரு நிறமும் - பசிய அழகிய நிறத்தையும்—சேய் இதழும்-செம்மையாகிய அதரத்தையும்—வெண் நகையும் - வெண்மையாகிய பற்களையும்—பார்வை என்னும்நச்சு அம்பும்-கண்ணென்கின்ற நஞ்சுதோய்த்த அம்பையும்—அமுது

ஊற நவிற்றுகின்ற மட மொழியும் - அமிர்தமூறப் பேசுகின்ற மடமையையுடைய சொற்களையும்—நாணும் பூணும் - வெட்கத்தையும் ஆபரணத்தையும்—கச்சின்கண் அடங்காத கனதனமும் நுண் இடையும் கண்டு சோர்ந்து - கச்சிலடங்காத கனத் ததனங்களையும் நுண்ணிய இடையையுங் கண்டு சோர்ந்து—பிச்சன்போல் ஆயினன் - பித்தன்போலானான். எ - று.

ஐம்பொறியானுகரும் புணர்ச்சியை இவண்மாட்டொருசேர நுகருவான் என்பார் மெய்ந்நலமுழுதும்பெறுவானின்றான் என்றும், பித்துடையான்றன் வயமின்றி அதன்வயத்தனுமாறுபோல இவனுந் தன்வயமின்றி ஆசையின்வயத்தனானனென்பார் பிச்சன்போலாயினன் என்றுங்கூறினார். (௨௫)

புத்திரர்வேறில்லாதுபுரிவரியதவம்புரிந்துபூழி வேந்தன்
சித்திரவாகனன்பயந்தசித்திராங்கதையென்னுஞ்செஞ்சொல்வஞ்சி
பத்திரமுநறுமலருமவயவம்போல்விளங்குவனபலவுங்கொய்து
மித்திரமாமகளிருடன்விரவியொருசெய்குன்றின்மேவினாளே.

(இ - ள்.) பூழிவேந்தன் சித்திரவாகனன் - பாண்டியனாகிய சித்திரவாகனன் என்பவன்—வேறு புத்திரர் இல்லாது புரிவரிய தவம் புரிந்து - வேறு புதல்வர்களில்லாமையாற் செய்தற்கரிய தவத்தைச் செய்து—பயந்த சித்திராங்கதை என்னும் செம் சொல் வஞ்சி - பெற்ற சித்திராங்கதை யென்கின்ற இனிய சொற்களையுடைய பெண்ணானவள்—பத்திரமும் நறு மலரும் அவயவம்போல் விளங்குவன பலவும் கொய்து - இலைகளும் நறுமணம்பொருந்திய மலர்களும் ஆகிய அவயவம் போல் விளங்குவன பலவற்றையுங் கொய்து—மித்திர மா மகளிருடன் விரவி ஒரு செய்குன்றில் மேவினாள் - நண்பையுடைய பெருமையாகிய பெண்களோடு சேர்ந்து ஒரு செய்குன்றிற் போயினாள். எ - று.

ஏ - அசை. வேந்தன் சித்திரவாகனன் இருபெயரொட்டுப்பண்பு. பூழி - கொடுந்தமிழ்நாடுகளிலொன்று. அவயவம்போல் விளங்குவனவாகிய பத்திரங்களையும் நறுமலர்களையும் ஏனைய பலவற்றையுங் கொய்தெனப் பொருள்கொண்டு, பலவும் என்பதற்கு அவயவம்போன்றிராத ஏனைய பத்திரங்களையும் மலர்களையும் என வகலங்கூறுதலும் ஒன்று. இப்பொருட்குப் பலவும் என்னும் உம்மை எண்ணொடு முற்று. விளங்குவன பெயரெச்சமுற்று. (௨௬)

முன்னுருவந்தனைமாற்றிமுகில்வாகன்றிருமதலைமோகியாகித்
தன்னுருவந்தனைக்கொண்டுசாமனிலுங்காமனிலுந்தயங்குமெய்யோன்
பொன்னுருவமெனமலர்ந்துபொலிந்ததொருசண்பகத்தின்பூந்தண்ணீழ
மின்னுருவநுண்ணிடையாள்விழிகளிக்குமபடிநின்றான்வீரரேறே. [ன்

(இ - ள்.) முகில் வாகன் திரு மதலை-இந்திரனுடைய அழகிய புதல்வனும்—வீரர் ஏறு - வீரராகிய யானைகளுக்கு ஆண்சிங்கம்போன்றவனும் ஆகிய அருச்சுனன்—மோகி ஆகி - அவள்மேல் மோகத்தையுடையனாய்—முன் உருவம்தனைமாற்றித் தன் உருவம்தனைக் கொண்டு - முந்திய தவவேடத்தை நீக்கித் தன்னுடைய அரசவேடத்தைக்கொண்டு—சாமனிலும் காமனிலும் தயங்கும் மெய்யோன்-சாமனிலும் அவன்றமையனாகிய காமனிலும்பார்க்கப் பிரகாசிக்கின்ற வடிவத்தையுடையனாய்—பொன் உருவம் என மலர்ந்து பொலிந்தது ஒரு சண்பகத்தின் பூந்தண் நீழல் - பொன்னினது வடிவைப்போல மலர்ந்து சிறந்த ஒருசண்பகமரத்தின் பொலிவாகிய குளிர்ந்த நிழலில்—மின் உருவ நுண் இடையாள் விழி களிக்கும்படி

நின்ருன் - மின்போன்ற நுண்ணிய இடையையுடையாளது கண்களிக்கும்படி நின்ருன். எ - று.

ஏ - அசை. உம்மைகளிரண்டும் எண்ணோடு சிறப்பு. மெய்யோன் வினையெச்சமுற்று. வீரரேறு ஏகதேச உருவகம். உருவ உவமவுருபு. சாமன் காமன் றம்பி. மோகியாய் அறிவழிந்தமையின் வேடமாறித் தீர்த்தயாத்திரை செய்தல் வேண்டுமென்ற நாரதமுனிகூற்றை மறந்து தன்னுருவைக்கொண்டானென்க. ()

வண்டானந்திரிதடத்துவரிவண்டினம்பாடமயில்களாடத் [ன்றுந்
தண்டார்மெய்க்கிளிக்கூட்டஞ்சான்ரேர்களுரைபயிற்றத்தமிழ்கண்மூ
கொண்டாடியிளம்பூவைக்குழாந்தலைசாய்த்துளமுருகுங் குன்றினுங்கட்
கண்டாளக்குமரனைத்தங்கொடிக்கயலைப்புறங்காணுங்கண்ணினுளே.

(இ - ள்.) வண்டானம் திரி தடத்து வரி வண்டின் இனம் பாட - கொய்யடி நாரைகள் உலாவுகின்ற தடாகத்தில் இசைப்பாட்டையுடைய வண்டின் கூட்டங்கள் பாட—மயில்கள் ஆட - மயில்கள் கூத்தாட—தண் தார் மெய்க் கிளிக் கூட்டம் சான்ரேர்கள் உரை பயிற்ற - தண்மையாகிய ஆரம்பொருந்திய வடிவையுடைய கிளிக்கூட்டங்கள் அறிவால் நிறைந்தோர்களுடைய வசனங்களைப் பேச—இளம் பூவைக்குழாம் - இளமையாகிய நாகணவாய்க் கூட்டங்கள்—தமிழ்கள் மூன்றும் கொண்டாடித் தலைசாய்த்து உளம் உருகும் குன்றின் ஆங்கண் - அம்முத்தமிழையுங் கொண்டாடித் தலையைச்சாய்த்து மனமுருகுகின்ற மலையின் அவ்விடத்தில்—தம் கொடிக் கயலைப் புறம் காணும் கண்ணினுள் - தங்கள் கொடியாகிய கயன் மீனைப் புறந்தரச்செய்யுங் கண்களையுடைய அவள்—அக் குமரனைக் கண்டாள் - அந்த அருச்சுனனைக் கண்டாள். எ - று.

ஏ - அசை. பாட, ஆட, பயிற்ற, தலைசாய்த்துளமுருகுங் குன்றென்க. தண் மெய்யெஃறியையும். தார் - ஆரம். "செந்தார்ப்பசுங்கிளியார்" என்ருர் பிறரும். நீர் இடையருத தடமென்பார் வண்டானர்திரிதடம் என்றும், சோம சுந்தரக்கடவுள், குமாரக்கடவுள், அகத்தியனுர், தொல்காப்பியனுர் முதலியோர் ஆராய்ந்தமையின் இயற்றமிலழச் சான்ரேர்களுரையென்றுங் கூறினர். (உஅ)

செந்திருவையனையாளுந்திருமாலையனையானுஞ்சிந்தையொன்ருய்
வந்திருவர்விலோசனமுந்தடையின்றியுறவாடிமகிழ்ச்சிகூர்ந்து
வெந்துருவமிழந்தமதன்மீளவும்வந்திரதியுடன்மேவுமாபோற்
கந்தருவமுறைமையினுற்கடவுளர்க்குங்கிடையாதகாமந்துய்த்தார்.

(இ - ள்.) செம் திருவை அனையாளும் திருமாலை அனையானும்-இலக்குமியையொத்த சித்திராங்கதையும் விட்டுணுவையொத்த அருச்சுனனும்—சிந்தை ஒன்ருய் - மனமொருமித்து—வந்து இருவர் விலோசனமும் தடை இன்றி உறவாடி - வந்து இருவருடையகண்களும் தடையின்றி உறவுசெய்து—மகிழ்ச்சிகூர்ந்து-மகிழ்ச்சி மிகுந்து—வெந்து உருவம் இழந்த மதன் மீளவும் வந்து இரதியுடன் மேவுமா போல்-எரிந்து வடிவமிழந்த மன்மதன் திரும்பவும் (வடிவத்தோடு) வந்து இரதியுடனே சேருமாறுபோல—கந்தருவ முறைமையினுல் கடவுளர்க்கும் கிடையாத காமம் துய்த்தார் - கந்தருவமுறைப்படி தேவர்களுக்குங் கிடையாத காமத்தை அனுபவித்தார்கள். எ - று.

விலோசனமும் என்னும் உம்மை முற்று. மீள்வும் என்னும் உம்மை எச்சம். கடவுளர்க்கும் என்னும் உம்மை சிறப்பு. உறவாடி, மகிழ்ச்சிகூர்ந்து என்னுஞ்சினை வினைகள் துய்த்தார் என்னும் முதல்வினையோடு முடிந்தன. மகளிரில் விசேடித் தமையிற் சித்திராங்கதையைச் செந்திருவையனையாள் என்றும், புருஷரில் விசேடித்தமையில் அருச்சுனனைத் திருமாலையனையான் என்றும், காட்சிமாத்திரையாற் புணருந் தேவர்க்குப் போகபூமியினர்க்குரிய மெய்யுறு புணர்ச்சி கிடைக்கப்பெறாமையிற் கடவுளர்க்குங் கிடையாதகாமம் என்றுங் கூறினர். (உகூ)

கூடியிருவருமொருவரெனவிதயங்கலந்தத்தற்பின்குறித்ததூநீ
ராடியவந்ததுந்தனையருச்சுனனென்பதுமிளமானறியக்கூறி
நீடியதென்றையுறுவர்நீயினியேகெனவுரைப்பநெடுங்கண்ணாள்போய்ச்
சேடியருக்கஞ்ஞான்றுநிகழ்ந்ததெல்லாமகிழ்ந்துருகிச்செப்பினளே.

(இ - ள்.) இருவரும் ஒருவர் எனக் கூடி இதயம் கலந்ததன்பின்-இருவரும் ஒருவரைப்போலச் சேர்ந்து மனங்கலந்தபின்னர்—குறித்த தூ நீர் ஆடியவந்ததும்-நியமிக்கப்பட்ட சுத்தமாகிய தீர்த்தமாடும்படி வந்தமையையும்—தன்னை அருச்சுனன் என்பதும் இளமான் அறியக் கூறி - தன்னை அருச்சுனன் என்பதையும் இளமையாகிய மான்போன்ற சித்திராங்கதை அறியும்படி சொல்லி—நீடியது என்று ஐயுறுவர்-காலம் நீட்டித்ததென்று சந்தேகங் கொள்வர்—இனி நீ ஏகு என உரைப்ப - இனி நீ போ என்றுசொல்ல—நெடும் கண்ணாள் போய் - நெடிய கண்ணை யுடைய அவள் போய்—அஞ்ஞான்று நிகழ்ந்தது எல்லாம் சேடியருக்கு மகிழ்ந்து உருகிச் செப்பினள் - அப்பொழுது சம்பவித்தவைகளை யெல்லாம் தாதியர்களுக்கு மனமகிழ்ந்து உருகிச் சொன்னாள். எ - று.

ஏ - அசை. மான் ஆகுபெயர். நிகழ்த்திய கரணவிசேடத்தால் இருவரும் நாகரைப்போல ஒருடம்பாயினரென்பார் இருவரும் ஒருவரெனக்கூடி என்றார். தனக்கொத்த உருவுந் திருவும் பருவமுங் குலனுமுடையானைக் கூடினமையின் மகிழ்ந்தும் அவன்செய்த தலையளி நினைக்குந்தோறும் மனமுருகச் செய்தலின் உருகியுஞ் செப்பினளென்க. (௩0)

கவுரியர்கோன்றிருமகளைக்கண்ணனையார்கொண்டுபோய்க்கன்னிமாடத்
தவிருமணிப்பரியங்கத்தையமளியேற்றியபின்னங்கன்போரா
னவிருடைமாமயலுழந்துநயனங்கள்பொருந்தாமனுறுமற்
றவிர்கெனவுந்தவிரா மற்றன்விரகங்கரையழிந்துதளர்ந்தாண்மன்னே.

(இ - ள்.) கவுரியர்கோன் திருமகளைக் கண் அனையார் கொண்டுபோய் - பாண்டியராசனுடைய அழகிய குமாரியைக் கண்போன்ற தாதியருஞ் செவிலியருங் கொண்டுபோய்—கன்னிமாடத்து அவிரும் மணிப் பரியங்கத்து ஐயமளி ஏற்றிய பின் - கன்னிமாடத்தில் விளங்குகின்ற மணிகளழுத்திய கட்டிலில் விரித்த பஞ்சசயனத்திலேற்றியபின்பு—அநங்கன் போரால் நவிர் உடை மா மயல் உழந்து - மன்மதனுடைய போரினாலே புன்மையாகிய பெரிய மயக்கத்தை யனுபவித்து—நயனங்கள் பொருந்தாமல் நாண் உறாமல் - நித்திரைசெய்யாமலும் வெட்கமடையாமலும்—தவிர்க என்வும் தவிராமல் - ஒழிக என்வும் ஒழியாமலும்—தன் விரகம் கரையழிந்து தளர்ந்தாள் - தன் காமநோய் எல்லை கடந்து வருந்தினாள். எ - று.

மன், ஓ அசைகள். ஐயமளி, மயிற்சேணம் இலவின்பஞ்சு செம்பஞ்சு வெண் பஞ்சு அன்னத்தூவி என்பவற்றுலாய ஐவகைமெத்தை. கண் தீவழி நீக்கி நல்வழியிலுய்த் துதவுமாறுபோலத் தாதியருந் தீமையினீக்கி நன்மையினுய்த் துதவலிற் கண்ணனையார் என்றும், கன்னியர்க்கிதுதகாதெனப் பலருமறிந்து தூற்றும் மயலென்பார் நவிருடைமாமயலென்றுங் கூறினர். ஏனையவயவங்களினுங் கண் சிறந்தவாறுபோல ஏனைமகளிரினும் இவர் சிறத்தலிற் கண்ணனையா ரென்றுரெனினும் அமையும். (௩௧)

தங்கண்மலைச்சந்தனத்தைத்தழற்குழம்போவிதுவென்னுந்தாபந்தோன்
தங்கள்கடற்றண்முத்தைக்கண்முத்தானீருக்குந்தக்கோராய்ந்த [றத்
தங்கடமிழ்க்குழலிசையைத்தன்செவிக்குவிடமென்னுந்தபனனேகத்
தங்கள்குலக்கலைமதியைத்தபனனெனுமென்பட்டாடனிபொறுதாள்.

(இ-ள்.) தாபம் தோன்ற - வெப்பமுண்டாக—தங்கள் மலைச் சந்தனத்தை இது தழல் குழம்பு என்னும் - தங்கள் பொதியமலையிலுள்ள சந்தனக் குழம்பை இது அக்கினிக்குழம்பென்று சொல்லுவாள்—தங்கள் கடல் தண் முத்தைக் கண் முத்தால் நீறுக்கும் - தங்களுடைய கடலிலுண்டாகிய குளிர்ந்த முத்தைக் கண்ணீரால் நீறுக்குவாள்—தக்கோர் ஆய்ந்த தங்கள் தமிழ்க் குழல் இசையைத் தன் செவிக்கு விடம் என்னும் - புலவர்கள் ஆராய்ந்த தங்களது தமிழ்நூல் விதியையுடைய வேய்ங்குழலிசையைத் தன்காதுக்கு நஞ்சு என்று சொல்லுவாள்—தபனன் ஏகத் தங்கள் குலக் கலை மதியைத் தபனன் எனும் - சூரியன் அஸ்தமிக்கத் தங்கள் குலத்துக்குத் தலைமையாகிய கலைகளையுடைய சந்திரனைச்சூரியன் என்பாள்—என் பட்டாள் தனி பொறுதாள் - என்னபாட்டைப் பட்டாள் தனிமையைப்பொறுத அவள். எ - று.

ஓ - இசைநிறை. சிறப்பின்கண்வந்ததெனினும் அமையும். தோன்றவென்னும் செயவெனெச்சம் ஏதுப்பொருட்டு. தக்கோராய்ந்த குழலிசை என்க. சந்தனம், தமிழ் ஆகுபெயர்கள். இச்செய்யுள் சொற்பொருட்பின்வருநிலை யென்னும் அலங்காரம். முத்தமிழ்க்குமதிபராகிய அகத்தியனுர் முதலிய சங்கப் புலவர்கள் அருளிச்செய்த நூல்களின்விதி பிறழாதியற்றப்பட்ட குழலில் அந்நூல்களின் விதிப்படியே மாத்திரைமுதலாயின பிறழாதெழுப்பப்பட்ட இசையென்பார் தங்கடமிழ்க்குழலிசை என்றுர். (௩௨)

அங்குயிர்போலிருமருங்குமாயமடமகளிரிருந்தாற்றவாற்றக், கங்குலெனும்பெருங்கடலைக்கரைகண்டாள்கடற்புறத்தேகதிருங்கண்டா, ளிங்கிவள்போய்மலர்க்காவினெழில்விசயற்கிடழிந்தவின்னலெல்லாஞ், சங்கெறியுந்தடம் பொருநைத்துறைவனுக்குச் செவிலியராந்தாயர் சொன்னர்.

(இ - ள்.) அங்கு உயிர்போல் இருமருங்கும் ஆய மடமகளிர் இருந்து ஆற்ற ஆற்ற - அவ்விடத்தில் உயிரைப்போல இரண்டுபக்கத்திலும் தோழியராகிய மடமையையுடைய பெண்கள் இருந்து (வருத்தத்தைத்) தணிக்கத் தணிக்க—கங்குல் எனும் பெரும் கடலைக் கரைகண்டாள் - இரவென்னும் பெரிய கடலைக் கரைகண்டவளாய்—கடல் புறத்தே கதிரும் கண்டாள் - கடலின்மீதே சூரியனையுங் கண்டாள்—இவள் போய் மலர்க்காவில் எழில்விசயற்கு ஈடு அழிந்த இன்னல் எல்லாம் - இவள்போய்ப் பூஞ்சோலையிலே அழகிய அருச்சுனனுக்கு மனவலியழிந்த துன்பமெல்லாவற்றையும்—செவிலியர் ஆம் தாயர் - கைத்தாயர்—சங்கு எறியும் தடம்

பொருநைத் துறைவனுக்குச் சொன்னார் - சங்குகளை வீசும் விசாலமாகிய பொருநையாற்றையுடைய பாண்டியராசனுக்குச் சொன்னார்கள். எ - று.

இங்கு - அசை. ஆற்ற என்னுஞ் செயவெனெச்சங் காரணப்பொருட்டு. கதிரும் என்னும் உம்மை எச்சம். கண்டாள் வினையெச்சமுற்று. இங்கிவள் என்பது "சங்கிவன்" என்பதுபோல ஒருசொல்லாய்நின்று சுட்டுப்பொருளுணர்த்திற்றெனினும் அமையும். விரகநோயாளர்க்கு இரவு நீட்டித்தலிற் கங்குலெனும் பெருங்கடல் என்றும், ஆன்றோரால் அரசர்க்கு இவை தகுமென விதக்கப்பட்ட அறமுதலியனவாயினும் மானத்திற்றீர்வனவாயின் அவற்றை மேற்கொள்ளாப் பேரபிமானமுடையானென்னும் இறைச்சிப்பொருள்போதரச் சங்கெறியுந் தடம்பொருநைத் துறைவனென்றுங் கூறினார். (௩௩)

ஐந்தருவினீழலின்வாழரியுடனேயோரரியாசனத்தில்வைகிப்
புந்தியுறவொருவருமுன்பூணுதமணியாரம்பூண்டகோமா
னந்தவுரைசெவிப்படலுமதிதூரம்விழைவுடன்சென்றுடுதீர்த்தம் [ன்.
வந்ததுநந்தவப்பயனென்றுட்கொண்டான்மகோததியும்வணங்குந்தாளா

(இ - ள்.) ஐந்தருவின் நீழலின்வாழ் அரியுடன் ஓர் அரி ஆசனத்தில் வைகி - பஞ்சதருவின் நீழலில் வாழுகின்ற இந்திரனோடு ஒரு சிங்காசனத்திலிருந்து—ஒருவரும் முன் பூணாத மணி ஆரம் புந்தி உறப் பூண்ட கோமான் - ஒருவரும் முன் அணியாத இரத்தினங்களழுத்திய பதக்கத்தைமனம்விரும்ப அணிந்ததலைவனும்—மகோததியும் வணங்கும் தாளான் - சமுத்திரமும் வணங்கும் கால்களையுடையவனும் ஆகிய பாண்டியராசன்—அந்த உரை செவிப்படலும் - அந்தவசனம் காதிற் புகுதலும்—அதிதூரம் விழைவுடன் சென்று ஆடு தீர்த்தம் வந்தது நம் தவப்பயன் என்று உட்கொண்டான் - மிகுதூரத்திற்கு விருப்பத்தோடு சென்று ஸ்நானஞ் செய்தற்குரிய தீர்த்தமாடுதற்கு (அருச்சுனன்) வந்ததுநம்முடைய தவப்பயன் என்றுநினைத்தான். எ - று.

ஏ - அசை. மகோததியும் என்னும் உம்மை எச்சத்தோடு சிறப்பு. தீர்த்தம் ஆகுபெயர். இவன்குலத்தின் முன்னோனாகிய உக்கிரபாண்டியன் செயல்கள் ஒற்றுமைபற்றி இவன்மேலேற்றிக் கூறப்பட்டன. எத்துணைப்பேராற்றலுடையோராலுஞ் சுமக்கமுடியாத திட்பமுடைத்தாய் அவருயிரைப் போக்கலால் எவரும் உவர்க்கும் ஆரத்தை முருகக்கடவுளின் கலையாதலின் ஏனையாரம்போலுவந்துதாங்கினவனென்பார் புந்தியுறப்பூண்டகோமான் என்றும், வருணன் அனுப்பிய கடலை வேல்விட்டுத் தன்கணைக்காலளவாமாறு அஞ்சுவித்த ஆற்றலான் என்பார் மகோததியும் வணங்குந்தாளான் என்றுங் கூறினார். (௩௪)

வழுதிதிருமகள்கொடுத்தமையலினல்வடிவமுந்தன்மனமும்வேறாப்
பொழுதுவிடிவளவுமதன்பூசலிலேகருத்தழிந்துபூவாம்வாளி
யுழுதகொடும்புண்வழியேயூசிநுழைந்தெனத்தென்றலூரவூர
விழிதுயிலாவிசயனுமவ்விபுதருடன்றுயிலுணர்ந்துவிதியுஞ்செய்தான்.

(இ - ள்.) வழுதி திருமகள் கொடுத்த மையலினால் தன் வடிவமும் மனமும் வேறா - பாண்டியனுடைய அழகிய புதல்வியானவள் கொடுத்த மயக்கத்தினால் தன் உருவமும் மனமும் வேறுபட—பொழுது விடிவு அளவும் மதன் பூசலிலே கருத்து அழிந்து - இராக்காலம் விடியும்வரையும் மன்மதனுடைய போரினாலே மனமழிந்து—பூவாம் வாளி உழுத கொடும் புண்வழியே ஊசி நுழைந்து எனத் தென்

றல் ஊர ஊர - பூவாகிய பாணங்கள் உழுத கொடிய புண்ணின்வழியே ஊசி நுழைந்தாற்போலத் தென்றற்காற்று ஏற ஏற—விழிதுயிலா விசயனும் - நித்திரை செய்யாத அருச்சுனனும்—அவ் விபுதருடன் துயிலுணர்ந்து விதியும் செய்தான் - தன்னுடன்வந்த அந்தப் பிராமணரோடு (ஒருவாறு நித்திரைசெய்து) எழுந்து நித்தியகருமத்தையுஞ் செய்தான். எ - று.

பூசலிலே என்னும் ஏகாரந் தேற்றம். விசயனும் என்னும் உம்மை சிறப்போடெச்சம். விதியும் என்னும் உம்மை எச்சம். வேருகவென்னுஞ் செயவெனெச்சம் ஈறுதொக்கது. (௩௫)

பஞ்சவரினடுப்பிறந்தோன்பஞ்சவன்பேரவையெய்திப்பஞ்சபாண,
வஞ்சகன்செய்வஞ்சனையான்மதிமயங்கியிருந்துழியம்மதுரைவேந்தன்,
சஞ்சரிகநறுமலர்த்தார்த்தனஞ்சயனென்றறிந்தெழுந்துதழீஇக்கொண்
டாங்க,ணஞ்சலினியுனக்குரியள்யான்பயந்தகடற்பிறவாவமுதமென்றான்.

(இ - ள்.) பஞ்சவரில் நடுப்பிறந்தோன் பஞ்சவன் பேர் அவை எய்தி - பாண்டவரில் நடுப்பிறந்த அருச்சுனன் பாண்டியனது பெரிய சபையை அடைந்து—பஞ்சபாண வஞ்சகன் செய் வஞ்சனையால் மதிமயங்கி இருந்துழி - பஞ்சபாணங்களையுடைய மன்மதன்செய்கின்ற வஞ்சகத்தாற் புத்திமயங்கியிருந்த பொழுது—அம் மதுரைவேந்தன் - அந்தப் பாண்டியராசன்—ஆங்கண் - அவ்விடத்தில்—சஞ்சரிக நறுமலர்த் தார்த் தனஞ்சயன் என்று அறிந்து எழுந்து தழீஇக்கொண்டு - (அவனை) வண்டுகள் விழுகின்ற வாசனைபொருந்திய மலர் மாலையையுடைய அருச்சுனன் என்று அறிந்து எழுந்து தழுவிக்கொண்டு—இனி அஞ்சல் - இனி அஞ்சற்க—யான் பயந்த கடல் பிறவா அமுதம் உனக்கு உரியள் என்றான் - யான்பெற்ற பாற்கடலிற்பிறவாத அமிர்தம்போன்றவள் உனக்குரியவள் என்று சொன்னான். எ - று.

அஞ்சல் எதிர்மறைக்கண்வந்த அல்லீற்றுவியங்கோள். கடற்பிறவாவமுதம் இல்பொருளுவமை. பஞ்சபாணங்களை வெளிப்பட்டெய்யாது மனத்து மறைந்து நின்றெய்தலின் மன்மதனை வஞ்சகனென்றார். தீர்த்தயாத்திரைக்கு வந்த தாபதனுக்கு அரசன் மகட்கொடுப்பனோ என்றையுற்றஞ்சற்க; உன்னை என்குலத்தவனும் எவரும்மதித்த வீரனுமாகிய அருச்சுனன் என்றறிந்துகொண்டேன் அதனால் என்மகட்டருதற்கோர் தடையின்றென்பான் அஞ்சலினி யுனக்குரியள் யான்பயந்தகடற்பிறவா வமுதமென்றான் என்க. (௩௬)

கேண்மதியோர்மொழிமுன்னங்கேண்மையினங்குலத்தொருவன்கி
ரீசன்றன்னைத், தாண்மலரன்புறப்பணிந்துதவம்புரிந்தான்மகப்பொரு
ட்டாற்றரித்தகொன்றை, நாண்மலரோன்வெளிநின்றந்நரபதிக்குநின்கு
லத்துநரேசர்யார்க்கும், வாண்மருவுங்கரதலத்தோயோரொருமாமகவெ
ன்றுவரமுமீந்தான்.

(இ - ள்.) ஓர் மொழி கேள் - ஒருவசனத்தைக் கேள்—கேண்மையின் நம்குலத்து ஒருவன் - உரிமையையுடைய நமது வம்மிசத்துள்ள ஒருவன்—மகப்பொருட்டால் முன்னம் கிரீசன் தன்னைத் தாள் மலர் அன்பு உறப் பணிந்து தவம் புரிந்தான் - பிள்ளைப்பேற்றின்பொருட்டு முற்காலத்திற் சிவபெருமானுடைய பாததாமரைகளை அன்புமிக வணங்கித் தவஞ்செய்தான்—கொன்றைநாள் மலர் தரித்தோன் வெளிநின்று - கொன்றையின் புதியமலரைத் தரித்த அச்சிவபெருமான்

வெளிப்பட்டுநின்று—வாள் மருவும் கரதலத்தோய் - வாட்படை பொருந்திய கையையுடையவனே—நின் குலத்து நரேசர் யார்க்கும் ஓர் ஒரு மா மகவு என்று - உன் குலத்திலரசரனைவர்க்கும் ஒவ்வொரு பெருமையாகியபிள்ளை உண்டாகுகஎன்று—அந்நரபதிக்கு வரமும் ஈந்தான் - அவ்வரசனுக்கு வரத்தையுங்கொடுத்தார். எ-று.

மதி - முன்னிலையசை. வரமும் என்னும் உம்மை எச்சம். தரித்தகொன்றை நாண்மலரோன் என்பது உறங்கிவாய்பிளந்தான் என்பதுபோல விகுதி பிரித்துக் கூட்டப்பட்டது. செய்யுளாதலிற் கரதலத்தோயென ஓவாயிற்று. (௩௭)

அன்றுரைத்தவரத்தின்வழியநேகரவனிபருமகவளித்தாரொன்றொன், றென்றுரைக்கமறுதொழிநீயொருமகவும்பெண்மகவாயுதித்ததென்பா, னன்றுரைக்குமொழியாயென்னவ்விபெறுமகவெனக்கேநல்கவேண்டு, மென்றுரைத்தான்மன்றல்பெறவிருந்தோனுமாமனுரைக்கிசைந்தானன்றே.

(இ - ள்.) அன்று உரைத்த வரத்தின்வழி - முற்காலத்திற் சிவபெருமானருளிய வரத்தின்படி—அவனிபர் அநேகரும் மகவு ஒன்றொன்று அளித்தார் - (நங்குலத்தில்) அரசரனைவரும் பிள்ளைகளொவ்வொன்றைப் பெற்றார்கள்—என்பால் ஒருமகவும் பெண்மகவாய் உதித்தது - என்னிடத்தில் அவ்வொருபிள்ளையும்பெண்பிள்ளையாய்ப் பிறந்தது—நன்று உரைக்கும் மொழியாய் - நன்மையைப் புலப்படுத்தும் வசனங்களையுடையவனே—ஒன்று உரைக்க நீ மறுது ஒழி - நான் ஒருவசனத்தைச்சொல்ல நீ மறுதொழி—என் நவ்வி பெறும் மகவு எனக்கே நல்கவேண்டும் என்று உரைத்தான் - என்னுடைய மான்போன்ற மகள் பெறும்பிள்ளையை எனக்கே தரல்வேண்டும் என்றுசொன்னான்—மன்றல்பெற இருந்தோனும் மாமன் உரைக்கு இசைந்தான் - விவாகத்தைப்பெற இருந்த அருச்சுனனும் மாமன்கூறிய வசனத்திற்கு உடன்பட்டான். எ - று.

அன்று, ஏ அசைகள். மகவும் என்னும் உம்மை இழிவுசிறப்பு. எனக்கே என்னும் ஏகாரம் தேற்றம். இருந்தோனும் என்னும் உம்மை எச்சம். நவ்வி ஆகுபெயர். தன்கருத்திற்கவனை யுடன்படுத்துவானாய்நன்றுரைக்குமொழியாய் என்றான். மாதுலனாகிய பாண்டியன் கூறியகூற்றிற்கு உடன்படுதல் மிக அரிதாயினும் மன்றலின் வயத்தனாய் நின்றமையின் உடன்பட்டான் என்பார் மன்றல்பெற விருந்தோனும் இசைந்தான் என்றார். (௩௮)

தெண்டிரைகைதொழுகழலோன்றிருமகட்குவதுவையெனச்சேரசோழ, ரெண்டிசையின்முடிவேந்தரெல்லோருமுனிகணத்தோரெவருமீண்ட, வண்டர்பிரானளித்தசிலையாண்டகையையலங்காரமனைத்துஞ்செய்து, மண்டபமொன்றினிலறுகால்வண்ணமணிப்பலகையின்மேல்வைத்தாரன்றே.

(இ - ள்.) தெண்டிரை கைதொழு கழலோன் திருமகட்கு வதுவை என - சமுத்திரம் வணங்கிய காலையுடைய பாண்டியனது அழகிய புதல்விக்கு விவாகம் என்று—முடிச் சேர சோழர் எண் திசையின் வேந்தர் எல்லோரும் முனி கணத்தோர் எவரும் ஈண்ட - முடியையுடைய சேரசோழர்களும் எட்டுத்திக்கிலுமுள்ள அரசரனைவரும் முனிவர் கூட்டத்தோ ரனைவரும் நெருங்க—அண்டர்பிரான் அளித்த சிலை ஆண்டகையை - இந்திரன்பெற்ற வில்வீரனாகிய அருச்சுனனை—அலங்காரம் அனைத்தும் செய்து - அலங்காரம் முழுதுஞ்செய்து—மண்

டபம் ஒன்றினில் - மண்டபமொன்றில்—அறுகால் வண்ண மணிப் பலகையின் மேல் வைத்தார் - ஆறுகால்களையுடைய அழகிய இரத்தினுசனத்தில் இருத்தினூர்கள். எ - று.

அன்று, ஏ அசைகள். சோமசூரியாக்கினியென்னு மூன்றுகுலத்துள்ளு மவதரித்த வேந்தர்களே முடிசூடி அரசாளற்குரியரென்பதும் ஏனையர் குறுநில மன்னரின்பாற்பட்டு முடிசூடா தரசாளற்குரியரென்பதும் நூற்றுணிபாகலின் முடியென்பதைச்சேரசோழற்கேற்றிப் பொருள்கூறினும். இங்ஙனமன்றித்“தூம்புடைநெடுங்கைவேழந்துற்றியவெள்ளில்” என்பதுபோல வேந்தரென்னுஞ் சொற்கியைய முடியென் றடைகொடுத்துக் கூறினூரென்றலும் ஒன்று. புருஷபாகம் ஸ்திரீபாகம் ஆகிய இரண்டனையும் பகுத்தற்கு அறுகாலிடப்பட்ட தென்க. தெண்டிரைகை தொழுகழலோன் என்பதற்கு மகோததியும் வணங்குந்தாளான் என்பதற்குரைத்தாங்குரைக்க. (௩௯)

கோமடந்தைகளிகூரப்புகழ்மடந்தைகளிகூரக்கொற்றவிந்தை
மாமடந்தைகளிகூர மணவினையொப்பனைக்குரியமடந்தைமார்கள்
பூமடந்தையனையாளைப்பூட்டியவெண்டரளமணிப்பூண்களாலே
நாமடந்தைநிகராக்கிநாயகன்றன்வலப்பாகநண்ணுவித்தார்.

(இ - ள்.) கோமடந்தை களிகூர - ராசலக்குமி களிப்புமிக—புகழ்மடந்தை களிகூர - கீர்த்திலக்குமி களிப்புமிக—கொற்றவிந்தை மாமடந்தை களிகூர - வெற்றியையுடைய வீரலக்குமியென்னும் பெண் களிப்புமிக—மணவினை ஒப்பனைக்கு உரிய மடந்தைமார்கள்-கல்யாணக்கோலஞ்செய்தற்குரிய பெண்கள்—பூமடந்தை அனையாளை - இலக்குமியையொத்த சித்திராங்கதையை—பூட்டிய வெண்தரளமணிப் பூண்களால் நாமடந்தை நிகர் ஆக்கி - பூட்டிய வெண்மையாகிய முத்தாபரணங்களினல் சரசுவதிபோல அலங்கரித்து—நாயகன் தன் வலப்பாகம் நண்ணுவித்தார் - நாயகனுடைய வலப்பாகத்தில் இருத்தினூர்கள். எ-று.

பூட்டிய தரளவடங்களாற் பாரதியைப்போலச் சுவேதவர்ணமாக்கினூரென்க. களிகூரவென்னும் செயவெனெச்சம் மூன்றும் நண்ணுவித்தார் என்னும் வினைமுற்றோடு தனித்தனிசென்றியையும். இவளை மணம்புணர்தலால் நாயகற்கு அரசுசிறத்தலிற் கோமடந்தைகளிகூரவென்றும்,அங்ஙனம்அரசுசிறத்தலாற் பெரும்புகழ்சிறத்தலிற் புகழ்மடந்தை களிகூர வென்றும், அங்ஙனம் புகழும் அரசுஞ் சிறக்கவே முனைமுகத்தெதிர்ந்த எத்துணைப்பேராற்றலுடைய பகைஞரும்அஞ்சி முதுகு தருதலாற் கொற்றஞ்சிறத்தலிற் கொற்றவிந்தைமாமடந்தைகளிகூரவென்றும், நல்வினையுடையான் மாட்டுச் செல்லுந்துணையும் பொதுவாயிருத்தலிற் பூமடந்தையனையாள் என்றுங் கூறினூர். பேரழகுடைமையிற் பூமடந்தையனையாள் எனப் பொருள்கோடல் ஈண்டுச் சிறப்பின்று. கொற்ற விந்தை பூமடந்தை களி கூர மாமடந்தை அனையாளை எனக்கூட்டி வீரலக்குமியும் பூமிலக்குமியும் களிப்பு மிக இலக்குமியையொத்த சித்திராங்கதையை எனப் பொருள்கூறினும் அமையும். அங்ஙனம் கொற்றஞ் சிறத்தலாற் பூபாரந் தீருமெனப் பூமிலக்குமி களிகூர்ந்தாளென்க. இச்செய்யுள் சொற்பொருட்பின் வருநிலை என்னும் அலங்காரம். (௪0)

இந்திரனுஞ்சசியுமெனவிறையோனுமுமையுமெனவெம்பிரானுஞ்
செந்திருவுமெனக்காமதேவுமிரதியுமெனவெஞ்சிலைவலோனுஞ் [த்
சந்தணிபூண்முலையாளுஞ்சதுர்மறையோர்சடங்கியற்றத்தழல்சான்றாக
துந்துபியின்குலமுழங்கச்சுரிசங்கின்குழாந்தழங்கத்துலங்கவேட்டார்.

(இ - ள்.) இந்திரனும் சசியும் என - இந்திரனையும் இந்திராணியையும் போலவும்—இறையோனும் உமையும் என - சிவபெருமானையும் உமாதேவியையும்போலவும்—எம்பிரானும் செந்திருவும் என-விட்டுணுவையும் இலக்கு மியையும்போலவும்—காமதேவும் இரதியும் என - மன்மதனையும் இரதியையும்போலவும்—வெம் சிலைவலோனும் சந்தணி பூண் முலையாளும் - கொடிய விற்றொழில் வலியையுடைய அருச்சுனனும் சந்தனக்குழம்பையணிந்த ஆபரணங்கள் பொருந்திய முலையையுடைய சித்திராங்கதையும்—சதுர் மறையோர் சடங்கு இயற்ற - பிராமணர்கள் சடங்கைச்செய்ய—தழல் சான்று ஆக - அக்கினிசாக்ஷியாக—துந்துபியின் குலம் முழங்கச் சுரிசங்கின் குழாம் தழங்கத் துலங்க வேட்டார் - துந்துபிக்கூட்டங்கள் ஒலிக்கச் சுரித்த முகத்தையுடைய சங்கக் கூட்டங்கள் முழங்க விளங்க விவாகஞ்செய்தார்கள். எ - று.

இந்திரனும் முதலிய உம்மைகள் எட்டும் எண்ணோடு சிறப்பு. சந்து ஆகுபெயர். என வேட்டார் என்றியையும். தாம்வேண்டிய பற்பல போகங்களையும் வேண்டியாங்கனுபவித்தலின் இந்திரனையும் சசியையும், ஒருவரை ஒருவர் இன்றியமையாது கலந் தில்லறங் கடைபோகச்செய்தலின் இறையோனையும் உமையையும், பற்பல செல்வங்களையும் வழிபடுவார்க்கீந்து பாதுகாத்தலின் எம்பெருமானையும் செந்திருவையும், இச்சை மீதூர்ந்திடைவிடாது காமவின்ப நுகர்தலிற் காமதேவையும் இரதியையும் உவமை கூறினார். முன்போலக் கரந்து மணவாது பலருமறிய மணத்தலிற் றுலங்க வேட்டார் என்றார். (௪௧)

வேறு.

நோக்கியகண்ணிமையாமனோக்கிநோக்கிநுண்ணியமென்புலவியிலேநொந்துநொந்து, தேக்கியசெங்கனிபிதழாரமுதுண்டுண்டுசேர்த்திய கைந்நெகிழாமற்சேர்ந்துசேர்ந்து, தூக்கியபொற்றுலையினநுராகமேன்மேற்றொடரவரும்பெரும்போகந்துய்த்தார்முன்னைப், பாக்கியம்வந்திருவருக்கும்பலித்ததல்லாற்பாயனலத்திப்படியார்பயன்பெற்றாரே.

(இ - ள்.) நோக்கிய கண் இமையாமல் நோக்கி நோக்கி - பார்த்த கண் இமையாமற் பார்த்துப்பார்த்து—நுண்ணிய மென் புலவியில் நொந்து நொந்து-நுட்பமாகிய மெல்லிய புலவியினால் வருந்தி வருந்தி—தேக்கிய செம் கனி இதழ் ஆர் அமுது உண்டு உண்டு - நிறைந்த சிவந்த கொவ்வைக்கனிபோலும் அதரங்களிற் பொருந்திய அமிர்தத்தைப் பருகிப்பருகி—சேர்த்திய கை நெகிழாமல் சேர்ந்து சேர்ந்து-அணைத்தகை நெகிழாமற் சேர்ந்து சேர்ந்து—தூக்கிய பொன் துலையின் - நிறுக்கின்ற பொற்றராசுக்கோல்போல—அநுராகம் மேன்மேல் தொடரவரும் பெரும்போகம் துய்த்தார் - மிக்கவிருப்பம் மேலும் மேலும் இருவர்க்குஞ் சமப்பட்டுத் தொடரவருகின்ற பெரிய போகத்தை அநுபவித்தார்கள்—முன்னைப் பாக்கியம் வந்து இருவருக்கும் பலித்தது அல்லால் - (நன்மைக்கேதுவாகிய) பழைய ஊழ்வந்து இருவருக்கும் வாய்த்ததேயல்லாமல்—பாயல் நலத்து இப்படிப் பயன் பெற்றார் யார் - புணர்ச்சியில் இப்படி இன்பத்தை அநுபவித்தவர் யாவர். எ - று.

ஏ - அசை. புலவியிலே என்னும் ஏகாரம் பிரிநிலை. பாக்கியம் ஆகுபெயர். நுண்ணியபுலவி மென்புலவியெனத் தனித்தனியியையும். நாயகன் தன்னழகை இமையாது நோக்குழி நும்மாற்காதலிக்கப்பட்டாருள் யாரையொப்பேன் என்றென்னை நோக்கினீர் என்று புலவிநுணுக்கம் எடுத்து வருந்தினாள் என்பார் நோக்கிய கண்ணிமையாம னோக்கி நோக்கி நுண்ணியபுலவியிலே நொந்து என்றும், அப்புலவி துனியாகாது விரைந்து புணர்தற்குரியதாயிற்றென்பார் மென்புலவி என்

றும், ஏனையவற்றை நிறுக்குந் தராசுபோலாது பொற்றராசு இருதட்டுஞ் சிறிதும் பேதம் இன்றித் தம்முள் ஒத்திருக்குமாறுபோல இருவர்போகமுஞ் சிறிதாயினும் பேதப்படாது தம்முள் ஒத்திருந்தன என்பார் தூக்கியபொற்றுலையினநுராகம் என்றும், புணர்வதன் முன்னும் பின்னும் ஒத்தவன்பினரா யனுபவிக்கும் போகமென்பார் அநுராகமேன்மேற்றொடரவரும் பெரும்போகம் என்றுங் கூறினர். (சஉ)

பன்னாளினெடும்போகம்பயின்றபின்னர்ப்பப்புருவாகனனென்னும்
பைதற்றிங்க,ளன்னனையவள்பயந்தாள்பயந்தபோதேயம்மகவையுவகை
யுடனவனுமீந்தான், றென்னவென்றளிமுரலவேம்பின்றண்டார்த்தேம்
பரிசில்வழங்குபுயத்தென்னர்கோவு, நின்னலென்மரபுநிலைபெற்றதென்
றுநேயமுடன்கவர்ந்துதுயர்நீங்கினனே.

(இ - ள்) நெடும் போகம் பல் நாளில் பயின்றபின்னர் - பெரிய போகத்தைப் பலநாளில் இருவரும் அநுபவித்தபின்பு—அவள் பப்புருவாகனன் என்னும் பைதல் திங்கள் அன்னனைப் பயந்தாள் - அச்சித்திராங்கதை என்பவள் பப்புருவாகனன் எனப்படும் இளம்பிறைபோன்ற புதல்வனைப் பெற்றாள்—பயந்தபோதே அவனும் உவகையுடன் அம்மகவை ஈந்தான் - பெற்றபொழுதே அவ்வருச்சுனனும் மகிழ்ச்சியுடன் அந்தப்பிள்ளையைக் கொடுத்தான்—தென்ன என்று அளி முரல - தென்ன என்று வண்டுகள் ஒலிக்க—வேம்பின் தண் தார்த் தேம் பரிசில் வழங்கு புயத் தென்னர்கோவும் - (அவைகளுக்கு) வேம்பினது குளிர்ந்த பூமாலையிலுள்ள தேனாகிய உபகாரத்தைக்கொடுக்கின்ற புயத்தையுடைய பாண்டியராசனும்—நின்னால் என்மரபு நிலைபெற்றது என்று நேயமுடன் கவர்ந்து துயர் நீங்கினன் - உன்னால் என்வம்மிசம் நிலைபெற்றது என்று அன்போடு அப்பிள்ளையை வாங்கித் தன்வருத்தம்நீங்கினன். எ - று.

ஏ - அசை. கோவும் என்னும் உம்மை சிறப்பு. தேம்பரிசில் வழங்குபுயம் என்பது நிலங் கருத்தாவாயிற்று. தென்னவென்பதைத் தென்னனேயென விளியாகவும் தென்னவென்னும் இசைக்குறிப்பாகவும் இரட்டுறமொழிக. இம்மைமறுமைப்பயனிரண்டையும் எனக்கொருங்கீயவல்ல புதல்வனைப் பிறர்க்களிக்கின்றேனேயெனக்கவலாது என்வாக்கை நிலையுறுத்தினேனேயென்று உவகையுற்றீந்தானென்பார் உவகையுடனவனுமீந்தானென்றும், தன்மாட்டு ஆறறிவுடைய மக்களிரந்துழி வேண்டியகொடுத்து அவரையுவப்பித்தலேயன்றி நான்கறிவுடைய வண்டுகள் முதலாயின இரந்துழியும் வேண்டுவன கொடுத்து அவற்றை உவப்பிக்கும் பெருங்கொடையாளனாகிய சித்திராங்கதன், பெற்ற புதல்வனை அருச்சுனன் தனக்கு ஈயத் தற்பயன்கருதாது உலகளிக்கும் பிறர் பயன்கருதியேற்றான் அதனால் அவன் பெருந்தகைக்கோர் இழிவு இன்று என்னும் இறைச்சிப்பொருள்போதரத் தென்னவென்றளிமுரலவேம்பின்றண்டார்த்தேம்பரிசில் வழங்குபுயத் தென்னர்கோவும் நேயமுடன் கவர்ந்து என்றுங் கூறினர். (சங)

பார்த்தனருச்சுனன்கரியோன்விசயன்பாகசாதனிசவ்வியசாசிபற்
குனன்பா, ரேத்துதனஞ்சயன்கிரீடிசுவேதவாகனெனுநாமம்படைத்த
பிரான்யாழோரின்பம், வாய்த்தவிதழமுதமொழிப்பேதைதாதைமனையி
ருக்கத்திருவழுதிவளநாடுள்ள, தீர்த்தமுழுவதுமாடியன்பாற்றென்பாற்
திருமலையுங்கைதொழுதுசிந்தித்தானே.

(இ - ள்.) பார்த்தன் அருச்சுனன் கரியோன் விசயன் பாகசாதனி சவ்வியசாசி பற்குனன் பார் எத்து தனஞ்சயன் கிரீடி சுவேதவாகன் எனு நாமம்

படைத்தபிரான்-பார்த்தன் அருச்சுனன் கிருட்டிணன் விசயன் பாகசாதனி சவ்விய சாசி பற்குனன் உலகிலுள்ளோர் துதிக்கின்ற தனஞ்சயன் கிரீடி சுவேதவாகனன் என்னும் இப்பத்துநாமங்களையும் பெற்றுக்கொண்ட அருச்சுனன்—யாழோர் இன்பம் வாய்த்த இதழ் அமுதமொழிப் பேதை - காந்தருவப் புணர்ச்சியைப் பெற்றுக் கொண்ட அதரத்தையும் அமுதம்போன்ற மொழியையுமுடைய சித்திராங்கதை—தாதை மனை இருக்க - பிதாவின் வீட்டிலிருக்க—திருவழுதி வளநாடு உள்ள தீர்த்தம் முழுவதும் ஆடி - அழகிய பாண்டியனது வளம்பொருந்திய நாட்டிலுள்ள தீர்த்தமனைத்திலும் முழுகி—அன்பால் தென்பால் திருமலையும் கைதொழுதுசிந்தித்தான் - அன்பினால் தென்றிசைக்கணுள்ள அழகர் திருமலையையும் வணங்கித்தியானித்தான். எ - று.

ஏ-அசை. வாய்த்தபேதை, இதழ்ப்பேதை, அமுதமொழிப்பேதை எனத்தனித்தனி சென்றியையும். பாரேத்து என்பதனை இடைநிலைத்தீபகமாகப் பொருள் கொள்க. பிரதையின் புதல்வனாதலிற் பார்த்தன் என்றும், இவனாற்செய்யப்படுஞ் செயல்கள் குற்றமற்றிருத்தலினாலும் இவன் நிறம் நான்குதிசைகளினும் அரிதாயிருத்தலினாலும் அருச்சுனன் என்றும், களங்கமற்ற கரிய நிறத்தாலும் அன்பினாலும் கரியோன் என்றும், எவராலும் வெலற்கரிய அரசரோடு யுத்தஞ்செய்யப்போய் ஒருபொழுதிலும் அவர்களை வெல்லாது யுத்தகளத்தினின்று மீளாமையின் விசயன் என்றும், இந்திரனுடைய புதல்வனாதலிற் பாகசாதனி என்றும், வலக்கையாலன்றி இடக்கையாலும் பாணப்பிரயோகஞ் செய்தலிற் சவ்வியசாசி என்றும், உத்தரநட்சத்திரத்தி லவதரித்தமையிற் பற்குனன் என்றும், எல்லாத்தேயத் தரசரையும் வென்று அவர்களுடைய திரவியங்களைக் கவர்ந்து செல்வனாயிருத்தலிற் றனஞ்சயன் என்றும், இந்திரனாற்றலையிற் சூட்டப்பட்ட கிரீடமுடையனாதலிற் கிரீடி என்றும், வெள்ளைக்குதிரைகள் இவனிரதத்திற் கட்டப்பட்டமையிற் சுவேதவாகன் என்றும் இவற்குக் காரணப்பெயர்களாயின. இந்தப் பத்துநாமங்களையும் இந்திரன் முதலியோராற் பெற்றுக்கொண்டமையின் நாமம் படைத்தபிரான் என்றார். காந்தருவப் புணர்ச்சியாவது கந்தருவரென்பார் ஈண்டுச் செய்த நல்வினைப் பயத்தால் ஒருவர் கொடுப்பாரும் அடுப்பாருமின்றி இருவரும் ஒருபொழிலகத்து எதிர்ப்பட்டுப் புணர்வது. கந்தருவப் புணர்ச்சியை யொப்பதனைக் கந்தருவப் புணர்ச்சியென்றார். கந்தருவப் புணர்ச்சியை ஒப்பதனைக் களவென்பர் இறையனார். ()

கன்றியவெங்கரன்முதலோர்களத்தில்வீழக்கவிகுலநாயகனிதயங்கலங்கிவீழ, வொன்றுபடமரமேழுமுததியேழுமூடுருவச்சரந்தொடுத்தவொருவில்வீரன், றுன்றியெழுபதுவெள்ளங்குரங்கின்சேனைசூழ்போதவாய்த்ததிருத்துணைவனோடுஞ், சென்றவழியின்றளவுந்துளவநாறுஞ்சேதுதரிசனஞ்செய்தான்றிறல்வல்லோனே.

(இ - ள்.) கன்றிய வெம் கரன் முதலோர் களத்தில் வீழ - கோபித்த கொடிய கரன்முதலான இராக்கதர்கள் யுத்தகளத்தில் வீழ—கவிகுலநாயகன் இதயம் கலங்கி வீழ - குரக்குக்குலத்திற் கதிபனாகிய வாலி மனங்கலங்கி வீழ—மரம் ஏழும் உததி எழும் ஒன்றுபட ஊடுருவச் சரம் தொடுத்த ஒருவில்வீரன் - மராமரம் ஏழும் கடல் ஏழும் ஒருசேர ஊடுருவும்படி பாணத்தைச்செலுத்திய ஒப்பற்ற வில்வீரனாகிய இராமன் எழுபது வெள்ளம் குரங்கின் சேனை துன்றிச் சூழ்போத - எழுபது வெள்ளங்குரக்குச்சேனை நெருங்கிச் சூழ்ந்துபோக—வாய்த்த திருத் துணைவனோடும் சென்றவழி - தனக்கு இயைந்த அழகிய தம்பியாகிய இலக்குமணனோடும் போன

வழியானது—இன்று அளவும் துளவம் நாறும் சேது தரிசனம் செய்தான்-இற்றை நாள்வரையும் துழாய் மணங்கமழும் சேதுவைத் தரிசனஞ்செய்தான்—திறல் வல்லோன்-போரில் வல்லவனாகிய அருச்சுனன். எ - று.

ஏ - அசை. வழிநாறும் என இடத்துநிகழ்பொருளின்றொழில் இடத்தின்மேலேற்றிக் கூறப்பட்டது. கவிகுலம் வடநூன்முடிபு. தருப்பசயனத்திற் கிடந்து வருணனை வழிவேண்டுழியும் அவன் வராதொழிய வெகுண்டு எழுகடலும் வறழுமாறு அக்கினியம்பைத் தொடுத்தான் என்பார் உததியேழும் ஊடுருவ வென்றும், தம்பியர் மூவருள்ளும் தமையன் குறிப்பறிந்தேவல் புரிந்தொழுகலே விரதமாகப் பூண்டு வனத்திலுந் தொடர்ந்துசென்ற பேரன்புடையதுணைவன் இவனொருவனே என்பார் வாய்த்ததிருத்துணைவன் என்றும், அன்பர்களருச்சித்த துழாய்கள்செறிந்த திருப்பாதத்தான்மிதித்து நூறுயோசனைகாறும் நடந்தமையினால் அத்துழாயின் மணம் ஒழியாது அவ்வழியிற் செறிந்து கமழ்ந்துகொண்டே யிருக்குமெனமணமிகுதியும் அவ்வழியின் மேன்மையு முணர்த்துவார் சென்றவழியின்றளவுந் துளவ நாறும் என்றுங்கூறினார். (சரு)

வன்றிரைவெங்களிற்றினங்களிரண்டுபோலுமலையாமலிடுங்கணையமரனேபோலுந், தன்றலைகளமிழாமலெடுப்பான்மேருத்தாழ்கடலினீட்டியதோர்தடக்கைபோலு, மன்றியிருபூதலமுமிருதட்டாகவகத்தியன்வாழ் குன்றினையுமணிமுக்கோணக்,குன்றினையுஞ்சீர்தூக்கிநிறுப்பதாகக்கோகனதனமைத்ததுலைக்கோலும்போலும்.

(இ - ள்.) வன் திரை வெம் களிற்று இனங்கள் இரண்டுபோலும் மலையாமல் இடும் கணைய மரன்போலும் - (அந்தச் சேதுவானது) வலிய திரையாகிய கொடிய யானைகள் இருபக்கத்திலும் போர்செய்யாமல் நடுவே இட்ட கணைய மரத்தைப் போலும்—மேரு தன் தலைகள் அமிழாமல் எடுப்பான் தாழ் கடலில் நீட்டியது ஓர் தடக்கைபோலும் - மேருமலையானது(வாயுபறித்தெறிந்த)தன் சிகரங்கள் அமிழ்ந்தாமல் எடுக்கும்படி ஆழமாகிய கடலில் நீட்டிய ஒரு பெரிய கையைப்போலும்—அன்றி - இவைகளன்றி—இரு பூதலமும் இரு தட்டு ஆக - இரண்டு பூமிகளும் இரண்டு தட்டுகளாக—அகத்தியன்வாழ் குன்றினையும் அணி முக்கோணக்குன்றினையும் சீர்தூக்கி நிறுப்பதாக - அகத்தியமுனிவன் வாழுகின்ற பொதியமலையையும் அழகிய திரிகோணமலையையும் ஒப்புநோக்கி நிறுக்கும்படி—கோகனதன் அமைத்த துலைக்கோலும் போலும் - பிரமன் உண்டாக்கிய தராசுக்கோலையும் போலும்.எ-று.

ஏ - அசை. பூதலமும் என்னும் உம்மை முற்று. கோலும் என்னும் உம்மை எச்சம். இச்செய்யுள் பலபொருளுவமையென்னும் அலங்காரம். இரு பூதலமென்றது கடலாற் பிரிக்கப்பட்ட இலங்கையையும் பாண்டி நாட்டையுமென்க. கணையமரம் - யானைகள் ஒன்றோடொன்று சண்டையிடாமல் அவற்றிற்கிடையே நாட்டுந்தம்பம். (சசு)

அண்டர்தமகங்கையினும்வரனுண்டென்றென்றரம்பையரோடவனியில்வந்தாடுங்கன்னித், தண்டுறையுந்தண்பொருநைப்பாவநாசத்தடந்துறையும்படிந்துநதித்தடமேபோந்து, பண்டுமெழுப்படையோனம்மழுவாற்கொண்டபாக்கியபூமியுஞ்சேரன்பதிகளியாவுங், கண்டுமனங்களிகூரச் சென்றுமேலைக்கடல்கண்டானூரகதலங்கண்டுமீண்டான்.

(இ - ள்.) உரகதலம் கண்டு மீண்டான் - நாகருலகத்தைக் கண்டு திரும்பிய அருச்சுனன்—அண்டர் - தேவர்கள்—தம கங்கையினும் வரன் உண்டு என்று என்று - தங்களுடைய கங்கைகளினும்பார்க்க மேன்மையுண்டென்றென்று கூறி—அரம்பையரோடு அவனியில் வந்து ஆடும் கன்னித் தண் துறையும் - அரம்பையரோடு பூமியில்வந்து ஸ்நானஞ்செய்கின்ற கன்னியா குமரி என்னுங் குளிர்ந்த ஆற்றிலும்—தண் பொருநைப் பாவநாசத் தடம் துறையும் படிந்து - குளிர்ந்த தாமிரபர்ணியினது பாவநாசம் என்கின்ற விசாலமாகிய துறையிலும் ஸ்நானஞ்செய்து—நதித் தடமே போந்து - அந்த நதிக்கரையின் வழியே போய்—பண்டு மழுப்படையோன் அம்மழுவால் கொண்ட பாக்கிய பூமியும் - முற்காலத்திற் பரசுராமன் அந்த மழுப்படையினாற்கொண்ட பாக்கியத்தையுடைய பூமியையும்—சேரன் பதிகள் யாவும் கண்டு-சேரனுடைய ஊர்கள் எவற்றையும்பார்த்து—மனம் களிகூரச் சென்று மேலைக்கடல் கண்டான் - மனங் களிப்புமிக நடந்து மேலைத்திசைக்கடலைக் கண்டான். எ - று.

தடமே என்பதில் ஏ இசைநிறை. கங்கையினும் என்னும் உம்மை சிறப்பு. என்றென்றென்னும் அடுக்கு ஒருதொழில் பலகானிகழ்தல்பற்றிவந்தது. மழுப்படையென முன்விதத்தலின் அம்மழு எனச்சுட்டிக்கொடுத்தார். பொருநையாற்றுத் துறை பலவற்றுள்ளும் பாவநாசத்துறை விசேடமுடைமையின் அதனைவிதந்து கூறினர். சத்தியலோகம் வைகுண்டலோகம் சுவர்க்கலோகம் என்னும்மூன்றிடத்துமுள்ள கங்கைகள் என்பார் தமகங்கையெனப் பன்மையுருபுகொடுத்தும், சிவபெருமான்கொடுத்தருளிய மழுவாற்கொண்ட விசேடம்படைத்த பூமி என்பார் பாக்கிய பூமி என்றும், எவருமஞ்சிச் சேறல்கூடாத உரகதலத்தைத் தனியேகண்டு மீண்டதீரனாதலிற் சிறிதும் அச்சமின்றித் தனியே மேலைக்கடலைக் கண்டான் என்பார் மேலைக்கடல் கண்டானுரகதலங்கண்டு மீண்டான் என்றுங் கூறினர். மலைகளுளவாதலிற் பல போகங்களுஞ் செறிந்த பூமி என்பார் பாக்கியபூமி என்றார் எனினும் அமையும். (சஎ)

அந்தநெடுந்திசைப்புனல்களாடுநாளிலைந்து தடத்தரம்பையரோரைவர்சேர, விந்திரன்வெஞ்சாபத்தாலிடங்கராகியிடருழந்தோர்பழையவடிவெய்தநல்கிச், சிந்துதிரைநதிபலவுஞ்சென்றுதோய்ந்துதிங்களுடனரவுறவுசெய்யும்வேணிக், கொந்தவிழுமலரிதழித்தொடையோன்வைகுங் கொடிமதில்சூழ்கோகன்னங்குறுகினானே.

(இ - ள்.) அந்த நெடும் திசைப் புனல்கள் ஆடும் நாளில் - அந்த நெடியதிக்கிலுள்ள தீர்த்தங்களிலே ஸ்நானஞ்செய்கின்றநாளில்—ஐந்து தடத்து-ஐந்து தடாகங்களில்—அரம்பையர் ஓர் ஐவர் - அரம்பையர்களைவர்—சேர இந்திரன் வெம் சாபத்தால் இடங்கராகி இடர் உழந்தோர் - ஒருசேர இந்திரனுடைய கொடியசாபத்தால் முதலைகளாகி வருந்தினவர்கள்—பழைய வடிவு எய்த நல்கி - பழைய உருவத்தைப்பொருந்த அருள்செய்து—சிந்து திரை நதி பலவும் சென்று தோய்ந்து - வீசுகின்ற திரைகளையுடைய நதிகள் பலவற்றிலும்போய் ஸ்நானஞ்செய்து—திங்களுடன் அரவு உறவுசெய்யும் வேணிக் கொந்து அவிழும் இதழி மலர்த் தொடையோன் வைகும் - சந்திரனோடு பாம்பு நண்புசெய்கின்ற சடாமுடியின் கண்ணே கொத்தில் அலரும் கொன்றைப் பூமாலையை யணிந்த சிவபெருமான் வீற்றிருக்கும் - கொடி மதில் சூழ் கோகன்னம் குறுகினான் - கொடிகளையுடைய மதில்சூழ்ந்த திருக்கோகர்ணத்தை அடைந்தான். எ - று.

ஏ அசை. இந்திரன் காரணமாகவந்த சாபத்தை இந்திரன் சாபமென்றார். இந்திரன் அரம்பையர் ஐவரை ஒரு இருடியினுடைய தவத்தைச் சிதையுங்கள் என்று ஏவ அவர்கள் அங்ஙனஞ் செய்யப்புகுந்து அம்முனிவருடைய சாபத்தால் முதலைகளாயினார்கள். பின் அம்முனிவர் அவர்கள் வேண்டுகோளுக் கிரங்கி அருச்சுனனுல் விச்சாபம் நீங்கும் எனத்தீர்வு கூறினர். அருச்சுனன் மேலைச் சமுத்திர தீரத்திற் றீர்த்தயாத்திரை செய்துவருங்காலத்தில் அவ்வரம்பையர்கள் தனித்தனி முதலைகளாய் வாசஞ்செய்யும் ஐந்து தடாகங்களிலும் ஒருவரும் இறங்கி ஸ்நான முதலியன செய்யாதிருத்தலை அறிந்து, தான் அத்தடாகங்களில் இறங்க அவனைப் பரிசித்த மாத்திரத்தால் அரம்பையர்கள் முதலை வடிவ நீங்கிப்பழைய வடிவடைந்தனர். சிவலிங்கப்பெருமான் பசுவின் செவிவடிவாயிருத்தலின் அத்தலத்திற்குக் கோகர்ணமென்றேதுப்பெயராயிற்று. சிந்துதிரையென்பதற்குக் கரையை யழிக்குந் திரையெனினுமமையும். (௪௮)

ஆகன்னமுறச்செம்பொன்வரைவில்வாங்கியவுணர்புரங்கட்டழித் தோனடியில்வீழ்ந்து, கோகன்னவளம்பதியிற்றன்பின்வந்தகுலமுனிவர்தமையிருத்திக்கோட்டுக்கோட்டு, நாகன்னப்பெடையுடனேயாடுங்கஞ் சநறைவாவிவண்டுவரைநண்ணியாங்கட், பாகன்னமொழிக்கனிவாய்முத் தமூரற்பாவைநலம்பெறமுக்கோற்பகவனானான்.

(இ - ள்.) ஆகன்னம் உறச் செம்பொன்வரை வில் வாங்கி - காதளவும் பொருந்த மேருமலையாகிய வில்லைவளைத்து—அவுணர்புரம் கட்டழித்தோன் அடியில் வீழ்ந்து - அவுணர்கள் வசிக்கும் திரிபுரத்தை முற்றும் அழித்த சிவபெருமானுடைய பாதத்தில் வணங்கி—கோகன்ன வளம் பதியில் தன்பின் வந்த குலமுனிவர் தமை இருத்தி - அந்தத் திருக்கோகர்ணம் என்னும் வளத்தையுடைய ஸ்தலத்தில் தன்பின்னேவந்த கூட்டமாகிய தவத்தினரை இருத்தி—கோட்டுக் கோட்டு நாகு- நீர்க்கரையினுள்ள சங்கின்பெடைகள்—அன்னப் பெடையுடனே ஆடும் கஞ்ச நறை வாவி வண் துவரை நண்ணி - அன்னப்பெடைகளுடனே விளையாடுகின்ற தாமரைமலரின் தேனையுடைய வாவிகள் பொருந்திய அழகிய துவாரகையைஅடைந்து—ஆங்கண் - அவ்விடத்தில்—பாகு அன்ன மொழி கனிவாய் முத்த மூரல் பாவை நலம்பெற - பால்போலுஞ் சொல்லையும் கொவ்வைக்கனிபோலும் வாயையும் முத்துப்போலும் பற்களையும் உடைய பாவைபோல்வாளது இன்பத்தைப்பெற—முக்கோல் பகவன் ஆனான் - திரிதண்டத்தையுடைய சந்நியாசியாயினான். எ - று.

பாவை ஆகுபெயர். பாகன்னமொழி பயனுவமை. கனிவாய் பண்புவமை. முத்தமூரல் உருவுவமை. "உவ்வும்மாம்பிற" என்பதனாற் கோகர்ணமென்பது கோகன்னமெனக் கெட்டுத் திரிந்தது. ஆ என்னும் உபசர்க்கம் ஈண்டு அளவுகுறித்து நின்றது. (௪௯)

வெங்கதிர்போய்க்குடதிசையில்வீழ்ந்தபின்னர்வீழாமன்மாலையின் வாய்மீண்டுமந்தச், செங்கதிர்வந்தெழுந்ததெனமீதுபோர்த்தசெய்யவாடையுந்தானுந்தீர்த்தவாரிச், சங்கதிருமணிவீதிநகரிசூழ்ந்ததடஞ்சாரலிரைவதகசயிலநண்ணிப், பொங்கதிர்பைம்புயலெழுந்துபொழியுங்கங்குற்போயொருநீள்வடதருவின்பொதும்பர்சேர்ந்தான்.

(இ - ள்.) வெம் கதிர் போய்க் குடதிசையில் வீழ்ந்தபின்னர் - சூரியன்போய் மேற்குத் திக்கில் அஸ்தமித்தபின்னர்—அந்தச் செங்கதிர் - அந்தச் சூரியனே— வீழாமல் மாலையின்வாய் மீண்டும் வந்து எழுந்தது என - அஸ்தமியாமல் மாலைக் காலத்தில் திரும்பவும் வந்துதித்ததுபோல—மீது போர்த்த செய்ய ஆடையும் தானும் - உடம்பின்மீது போர்த்த (காவிதோய்த்த) சிவந்த வஸ்திரமுந் தானுமாக— தீர்த்த வாரிச் சங்கு அதிரும் மணி வீதி நகரி சூழ்ந்த தடம் சாரல் இரைவதகசயிலம் நண்ணி - நீர்ப்பெருக்கிலுள்ள சங்குகள் ஒலிக்கும் அழகிய வீதியையுடைய நகரியைச்சூழ்ந்த விசாலமாகிய சாரல்பொருந்திய இரைவதகமலையை அடைந்து— பொங்கு அதிர் பைம் புயல் எழுந்து பொழியும் கங்குல் போய் - பொலிகின்ற முழக்கத்தையுடைய நீலமுகில் எழுந்து மழையைப்பொழிகின்ற இராக்காலத்திற் போய்—ஒரு நீள் வடதருவின் பொதும்பர் சேர்ந்தான் - ஒரு நீண்ட ஆலமரச்சோலையை அடைந்தான். எ - று.

மீண்டும் என்னும் உம்மை எச்சம். ஆடையுந்தானுஞ் சேர்ந்தான் என்பதுதிணைவிராய்ச் சிறப்பாலாண்பால் முடிபேற்றது; "தானுந்தன் புரவியுந் தோன்றினான்" என்பதுபோல. மீண்டுமெந்தச் செங்கதிர்வந்தெழுந்ததெனவென்பது இல்பொருளுவமை. காலமுகிலென்பார் பொங்கதிர்பைம்புயல் என்றார். (௫o)

இந்திரற்குத்திருமதலைமன்றலெண்ணியாதவர்கோன்வளம்பதியிலெய்தினனென், றந்தரத்தைநீலத்தால்விதானமாக்கியண்டமுறவிடிமுரசுமார்ப்பவார்ப்ப, வந்திரட்டைவரிசிலையாற்பஞ்சவண்ணமகரதோரணநாட்டிவயங்குமின்னான், முந்துறத்தீபமுமெடுத்துத்தாரைமுத்தான்முழுப்பொரிசிந்தினகாலமுகில்களம்மா.

(இ - ள்.) இந்திரற்குத் திருமதலை - இந்திரனுடைய அழகிய புத்திரனாகிய அருச்சுனன்—மன்றல் எண்ணி யாதவர்கோன் வளம் பதியில் எய்தினன் என்று - விவாகத்தைக்கருதி யதுகுலராசனுடைய வளம்பொருந்தியநகரில்வந்தான்என்று— காலமுகில்கள் - கார்காலத்து மேகங்கள்—அந்தரத்தை நீலத்தால் விதானம் ஆக்கி - ஆகாயத்தை நீலநிறத்தால் மேற்கட்டியாக்கி—அண்டம் உற இடி முரசும் ஆர்ப்ப ஆர்ப்ப - அண்டத்தைப்பொருந்த இடியாகிய முரசும் ஒலிப்ப ஒலிப்ப—வந்து இரட்டை வரிசிலையால் பஞ்சவண்ண மகரதோரணம் நாட்டி - வந்து இந்திரவில் வானவில் என்னும் இரண்டு வரிந்த வில்லினாலே ஐந்து நிறங்களையுடைய மகரதோரணங்களை நிரைத்து—வயங்கு மின்னால் முந்துறத் தீபமும் எடுத்து - பிரகாசிக்கின்ற மின்னலினால் முன்னே தீபங்களையுமெடுத்து—தாரை முத்தால் முழுப்பொரி சிந்தின - மழைத் தாரைகளோடு சொரியும் முத்துக்களால் முழுப் பொரிகளைச் சொரிந்தன. எ - று.

அம்மா - அசை. முரசும், தீபமும் என்னும் உம்மைகள் எச்சம். "அதுவென் வேற்றுமை யுயர்திணைத்தொகைவயி - னதுவெனுருபுகெடக் குகரம் வருமே" என்பதனால் இந்திரற்குத்திருமதலையென்றாயிற்று. முகில்கள், ஆக்கி நாட்டி எடுத்துச் சிந்தினவென வினைமுடிபுசெய்க. தாரைமுத்து மூன்றாம்வேற்றுமையும் பயனுமுடன் றொக்கதொகை. கண்ணுட்குத்தினான் என்புழிக் கண் செயப்படுபொருளும் இடமுமாதல்போல, ஈண்டு அந்தரஞ் செயப்படுபொருளும் இடமுமாயிற்று. மேற்றிசை கீட்டிசை என்னும் இருதிசைகளினும் இந்திரதனுத் தோ

ன்றுதலின் இரட்டை வரிசிலை என்றும், முழக்கின்முன் மின்றோற்றலின் மின்னுன் முந்துறத்தீபமும் எடுத்தென்றும், முத்துப்பமிடங்கள்பலவற்றுள்ளும் முகிலும் ஒன்றாதலின் மழைத்தாரையோடு முத்தையுஞ் சொரிந்த வென்பார் தாரைமுத்தென்றும், முரிவில்லர்ப் பொரியென்பார் முழுப்பொரியென்றுங் கூறினர். தம் முதல்வன் புதல்வனுதலின் இவ்வா றுபசரித்தனவென்க. இது தற்குறிப்பேற்றமென்னும் அலங்காரம். தாரையாகிய முத்தெனப் பொருள்கோடல் பொருத்தமின்று. ஒரு திசையிலேயே இணைந்து இருவில்லுத் தோன்றுதலுமுண்மையின் இரட்டைவரிசிலை என்றாரெனினுமமையும். (௫௧)

யாங்கருதிவருங்கருமமுடிப்பானெண்ணிலிராமன்முதல்யதுகுலத்தோரிசையாரென்று, பாங்குடனேதனக்குயிராந்துளபமௌலிப்பரந்தாமன்றனைநினைந்தான்பார்த்தனுகப்,பூங்கமலமலரோடையனையான்றானும் பொன்னெடுந்தேர்ப்பாகனுமேயாகப்போந்து, நீங்கரியநண்பினுய்நெடுநாணீங்குநேயத்தோனினைவின்வழிநேர்பட்டானே.

(இ - ள்.) யாம் கருதி வரும் கருமம் முடிப்பான் எண்ணில் - யாம் சிந்தித்து வருங் காரியத்தை முடிக்கும்படி எண்ணினல்—இராமன் முதல் யதுகுலத்தோர் இசையார் என்று - பலராமன்முதலிய யாதவகுலத்தோர் உடன் படார் என்று—பார்த்தன் - அருச்சுனன்—பாங்குடன் தனக்கு உயிராம் துளப மௌலிப் பரந்தாமன்தனை நினைந்தான் ஆக - உரிமையுடனே தனக்கு ஆன்மாவாகும் துழாய்மாலை பொருந்திய கிரீடத்தையுடைய கிருட்டிணரை நினைக்க—பூங்கமல மலர் ஓடை அனையான்-பொலிவாகிய தாமரைமலரோடையை யொத்த அவர்—தானும் பொன் நெடும் தேர்ப்பாகனுமே ஆகப் போந்து - தாமும் அழகிய நெடிய தேர்ப்பாகனுமே யாகப்போய்—நீங்க அரிய நண்பினுய் நெடுநாள் நீங்கும் நேயத்தோன் நினைவின் வழி நேர்பட்டான் - பிரிதற்கரிய நண்பனுய் நெடுநாள் தம்மைப்பிரிந்திருந்த அருச்சுனனுடைய எண்ணத்தின்படி உடன்பட்டார். எ - று.

ஏ - அசை. பாகனுமே என்னும் ஏகாரம் பிரிநிலை. இராமன் தலைக்குறை. "மார்க்கர்கண்டநூல்" என்பதுபோல. வெயிலாலிடர்ப்பட்டுத் தன்னையடைந்தோர்க்கு அவ்விடரை நீக்கியிதஞ்செய்யுந் தாமரை யோடைபோல, பிறராலிடர்ப்பட்டுத் தம்மையடைந்தோர்க்கு அவ்விடரைநீக்கி யிதஞ்செய்பவரென்பார் பூங்கமலமலரோடையனையானென்றார். நெடுங்காலம் பிரிந்திருந்த நண்பனுயினுன் தன்மாட்டுவந்து ஓர் குறைநேர்ந்துழி அவன் கருத்தின்படி யக்குறைமுடித்தல் நட்கப்பட்டானுக்கியல்பாதலின், நீங்கரியநண்பினுய் நெடுநாணீங்கு நேயத்தோனினைவின்வழி இவரும் நேர்பட்டாரென்க. கரசரணுதி அவயவங்கள் தாமரைமலர்போலிருத்தலாற் பூங்கமலமலரோடையனையான் எனக் கொள்ளினும் பொருந்தும். ()

மதியாகியவணிருந்ததோழன்றன்னையதுகுலநாயகன்பரிவோடிறைஞ்சவன்பா, லதியானநெடுஞ்சுருதியாசிகூறியாகமுறத்தழீஇமகிழ்வுற்றுலநீழன், மதியார்செஞ்சடைமுடியோனென்னவைகிவந்தவாறுரைப்பநெடுமாலுங்கேட்டுத், துதியாடிக்காலையிலேவருதுமென்றுசொற்றிணைப்பின்மீளவும்போய்த்துவரைசேர்ந்தான்.

(இ - ள்.) யதி ஆகி அவண் இருந்த தோழன்தன்னை - துறவியாகி அவ்விடத்திலிருந்த துணைவனாகிய அருச்சுனனை—யதுகுல நாயகன் பரிவொடு இறைஞ்ச - யதுகுலத்தலைவராகிய கிருட்டிணர் அன்போடு வணங்க—அன்பால் அதி ஆன நெடுஞ்சுருதி ஆசிகூறி - அவன் அன்போடு அதிகமான பெரிய வேதருக்குகளினாலே (கிருஷ்ணருக்கு) ஆசிசொல்லி—ஆகம் உறத் தழீஇ மகிழ்வு உற்று - மார்புபொருந்தத் தழுவிச் சந்தோஷங்கொண்டு—ஆல நீழல் மதி ஆர் செஞ் சடைமுடியோன் என்ன வைகி - ஆலமரநீழலில் சந்திரன் விளங்குகின்ற சிவந்த சடாமுடியையுடைய சிவபெருமானைப்போல இருந்து—வந்தவாறு உரைப்ப - தான்வந்த காரியத்தைச் சொல்ல—நெடு மாலும் கேட்டு - நெடிய வடிவத்தையுடைய கிருஷ்ணரும் கேட்டு—துதி ஆடி - துதிசெய்து—காலையில் வருதும் என்று சொற்று - உதயகாலத்தில் வருவேம் என்று சொல்லி—இமைப்பில் மீளவும் போய்த் துவரை சேர்ந்தான் - இமைப்பொழுதில் திரும்பவும்போய்த் துவாரகையை அடைந்தார். எ - று.

மாலும் என்னும் உம்மை எச்சத்தோடு சிறப்பு. மீளவும் என்னும் உம்மை எச்சம். இமைப்பு ஆகுபெயர். கூறித் தழீஇ மகிழ்வுற்று வைகி உரைப்ப என்க. துறவுபூண்டு ஆலநீழலி லிருத்தலின் சிவபெருமானை அருச்சுனற்கு உவமை கூறினார். உன்கருத்தின்படியே என்றங்கையுடன் நாளை வருவேனென்பார் வருதும் என உளப்பாட்டுத் தன்மைப்பன்மையாற் கூறினார். (௫௩)

ஆதவன்வந்துதிப்பதன்முன்மற்றநாளிலணிநகர்வாழ்சனமனைத்து
மந்தக்குன்றின், மாதவனதேவலினான்மழைக்காலத்துவாசவற்குவிழா
வயர்வான்வந்தகாலை, யாதவரிற்போசரின்மற்றுள்ளவேந்தரியாவருஞ்
சூழ்வரநறுந்தாரிராமன்வந்தான், சூதடர்பச்சிளங்கொங்கைப்பச்சைமே
னிச்சுபத்திரையுந்தோழியர்கள்சூழவந்தாள்.

(இ - ள்.) மற்றநாளில் - அடுத்தநாளில்—ஆதவன் வந்து உதிப்பதன்முன் - சூரியன் (உதயகிரியில்) வந்து உதிக்கமுன்னரே—அணி நகர் வாழ் சனம் அனைத்தும் - அழகிய அந்நகரத்தில் இருக்குஞ் சனங்கள் முழுவதும்—அந்தக் குன்றில் - அந்த இரைவதகமலையில்—மாதவனது ஏவலினால் - கிருட்டிணருடைய கட்டளையினால் மழைக்காலத்து வாசவற்கு விழா அயர்வான் வந்தகாலை-மழைக்காலத்தில் இந்திரனுக்குத் திருவிழாச்செய்யும்படிவந்த சமயத்தில்—யாதவரில் போசரில் உள்ள வேந்தர் யாவரும் சூழ்வர நறும் தார் இராமன் வந்தான் - யாதவரிலும் குந்திபோசரிலுமுள்ள அரசரனைவருஞ் சூழ்ந்துவர நறுமணங்கமழும் மாலையையணிந்த பலராமன் வந்தான்—சூது அடர் பச்சிளம் கொங்கைப் பச்சைமேனிச் சுபத்திரையும் தோழியர்கள் சூழ வந்தாள் - சூதாடு கருவியைவென்ற பசிய இளமையாகிய தனங்களையும் பச்சைநிறம்பொருந்திய வடிவத்தையுமுடைய சுபத்திரை என்பவளும் தோழியர்கள்சூழ அங்கேவந்தாள். எ - று.

மற்று - அசை. சுபத்திரையும் என்னும் உம்மை எச்சம். சூது ஆகுபெயர். யாதவரும் போசரும் இன்னரென்பது முற்கூறப்பட்டது. மழைக்கதிபன் இந்திரனாதலின் அக்காலத்தில் அவற்கு விழாவயர்தலியல்பென்க. அருச்சுனன், தம்முடைய தங்கையை மணஞ்செய்தல் எளிதில் முடியுமாறு கிருட்டிணர் இங்ஙனம் ஏவினார். (௫௪)

முக்கோலுங்கமண்டலமுஞ்செங்கற்றூசுமுந்நூலுஞ்சிகையுமாய்முதிர்ந்துதோன்று,மக்கோலமனைவருங்கைதொழுதுநோக்கியருணலம்பெற்றகன்றதற்பின்னனைத்துலோகத், தெக்கோலயோனிகட்குமுயிராய்த்தோற்றமீரைந்தாய்ப்பாற்கடலினிடையேவைகு,மைக்கோலமுகில்வண்ணன்றானுமெய்திமனவணக்கம்புரிவோனைவணங்கினானே.

(இ - ள்.) முக்கோலும் கமண்டலமும் செங்கல் தூசும் முந்நூலும் சிகையும் ஆய் - திரிதண்டமும் கமண்டலமும் காவிவஸ்திரமும் பூணூலும் குடுமியுமாய்— முதிர்ந்து தோன்றும் அக்கோலம் அனைவரும் கைதொழுது நோக்கி - முதிர்ந்து விளங்கும் அந்த வடிவத்தை எவர்களும் வணங்கிப் பார்த்து—அருள் நலம் பெற்று அகன்றதன்பின் - கிருபையாகிய நலத்தை (அவனிடத்திற்) பெற்று நீங்கியபின்— அனைத்து லோகத்து எக்கோல யோனிகட்கும் உயிராய்-சகலலோகங்களிலுமுள்ள பலவகைப்பட்ட வடிவத்தையுடைய யோனிகளுக்கெல்லாம் ஆன்மாவாய்—தோற்றம் ஈரைந்தாய் - பிறவிபத்தாய்—பாற்கடலின் இடையே வைகும் மைக்கோல முகில்வண்ணன்தானும் எய்தி - பாற்கடலின் நடுவே இருக்கும் கருமையாகிய அழகிய மேகவண்ணத்தையுடைய கிருட்டிணரும் வந்து—மனவணக்கம் புரிவோனை வணங்கினான்-தம்மை மனத்தால் வணங்கும் அருச்சுனனைக் (காயத்தால்) வணங்கினார். எ - று.

ஏ - அசை. யோனிகட்கும் என்னும் உம்மை முற்று. தானும் என்னும் உம்மை எச்சம். சிகையுமாய்த் தோன்றுமெனவியையும். தவவேடமுடைமையிற் காயத்தால் வணங்காதொழிந்தான் என்க. முக்கோல்-அயன் அரி அரன் என்னு மூவரும் ஒருவரென்று புலப்பட மூன்று கோல் ஒன்றாகச் சேர்க்கப்பட்டது.(௫௫)

துன்னியிருவருமொருப்பட்டிருந்தகாலைச்சுபத்திரையத்தடங்குன்றின்சூழலோர்சார், மின்னியபைம்புயலினெழிலிரேகைபோலவெளிப்படலுமெய்புளகமேன்மேலேறிக், கன்னியிளந்தனிக்கடம்புமலர்ந்ததென்னக்கண்டவிழியிமையாதகாட்சிகாண, மன்னியமாதவத்தோனைமந்தமூரன்மாதவன்மைத்துனமையினான்மகிழ்ச்சிகூர்ந்தே.

(இ - ள்.) இருவரும் துன்னி ஒருப்பட்டு இருந்தகாலை - அருச்சுனன் கிருட்டிணராகிய இருவருஞ்சமீபித்து மனம் ஒருப்பட்டிருந்தபொழுதில்—சுபத்திரை - சுபத்திரை என்பவள்—அத் தடம் குன்றில் சூழல் ஓர் சார் - அந்த விசாலமாகிய இரைவதகமலையின் சாரலினொருபக்கத்தில்—பைம்புயலின் மின்னிய எழில் இரேகைபோல-பசுமையாகிய முகிலில் மின்னிய அழகினையுடைய இரேகையைப்போல- வெளிப்படலும்-தோன்றுதலும்—மெய் மேன்மேல் புளகம் ஏறி - சரீரம் மேலும் மேலும் ரோமாஞ்சங்கொண்டு—கன்னி இளம் தனிக்கடம்பு மலர்ந்ததென்ன கண்டவிழி இமையாத காட்சி காண - மிக இளமையாகிய ஒரு கடப்பமரம் மலர்ந்தாற்போலப் பார்த்த கண் இமையாத(அருச்சுனனது)தோற்றத்தைக் கண்டு—மன்னிய மா தவத்தோனை - நிலையாகிய பெருந் தவத்தையுடைய அவனை—மந்த மூரல் மாதவன் மைத்துனமையினால் மகிழ்ச்சி கூர்ந்து - புன்முறுவலையுடைய கிருட்டிணர் மைத்துனமுறைமையினால் மகிழ்ச்சிமிகுந்து., எ - று.

ஏ - அசை. கன்னியிளம் என்பது ஒருபொருட்பன்மொழி. மன்னிய வென்னும் பெயரெச்சம் மாதவத்தோன் என்னும் பெயரில் விசேடிக்கப்பட்ட தவம் என்னும் முதனிலைகொண்டது. மெய்புளகம் ஏறி என்பது இடத்து நிகழ் பொருளின்றொழிலிடத்தின்மே லேற்றிக் கூறப்பட்டது. அருச்சுனன் ரூ, வொருவனாய் நின்று இருகண்ணுலுமிமையாது நோக்கலின் ஐதாய்மலரும் இளந்தனிக்கடம்பலர்ந்த குவியாமலருவமையாயிற்று. சுபத்திரைமீதுகொண்ட வேணவாவினால் எடுத்த வேடத்திற்கியையா வொழுக்கமுடையனாயினானே இவனறிவிருந்தவா றென்னையென்ற வெள்ளற்பாடுபெற்றிக் கிருட்டிணருக்கு மந்தமூர லுண்டாயிற்றென்க. ஆபரணங்களினொளி நீலநிறஞ்செறிந்து மின்னற்கொடிபோற் றுவண்டு தோன்றுதலிற் புயலின் மின்னிய இரேகை என்றார். (௩௬)

அடிகடிருவுளத்தெண்ணமெம்மனோர்களறியினிசையலர்பலரிங்கறிவுறமற், கடியயர்வுற்றும்பதிகொண்டடைகவென்றுங்காவலர்க்குக்கடனென்றுங்கசியக்கூறிக், கொடியிடைவெங்களபமுலைக்கன்னிமானைக்கூயணங்கேமெய்மையுறக்கொண்டகோலப், படிவமுனிக்கிருபருவம்பணித்தவேவல்பரிவுடனீபுரியென்றுபணித்திட்டானே.

(இ - ள்.) அடிகள் திருவுளத்து எண்ணம் எம்மனோர்கள் அறியின் இசையலர் - சுவாமிகளுடைய திருவுள்ளக்கருத்தை நம்மவர்கள் அறிந்தால் உடன்படார்கள்—இங்கு பலர் அறிவுறமல் கடி அயர்வுற்று உம்பதி கொண்டு அடைக என்றும் - (ஆதலால்) இவ்விடத்திற் பலரறியாமல் விவாகஞ்செய்து உம்முடைய நகரத்திற்குக் கொண்டுபோகுக என்றும்—காவலர்க்குக் கடன் என்றும் கசியக் கூறி - இது அரசர்களுக்கு முறை என்றும் (அருச்சுனன்) மனமுருகும்படி சொல்லி—கொடி இடை வெம் களபமுலைக் கன்னிமானைக் கூய் - கொடிபோலும் இடையையும் விரும்பப்படுங் கலவைச்சாந்தையணிந்த முலையையும் உடைய இளமையாகிய மான்போல்வாளை அழைத்து—அணங்கே - பெண்ணே - மெய்மை உறக்கொண்ட கோலப் படிவமுனிக்கு - மெய்ம்மையாக எடுத்த அழகிய தவவேடத்தையுடைய இந்த முனிவனுக்கு—நீ இருபருவம் பணித்த ஏவல் பரிவுடன் புரி என்று பணித்திட்டான்- நீ நாலுமாசம் பணித்த பணிகளை அன்புடன் செய்குதி என்று கட்டளையிட்டார். எ - று.

ஏ - அசை. பிறரயிராதபடி அடிகடிருவுளத்தெண்ணம் என்றுயர்த்தும், பலராமர் முதலாயினார் சுபத்திரையைத் துரியோதனனுக்கு மணஞ்செய்ய உத்தேசித்திருத்தலின் எம்மனோர்கள் அறியின் இசையலர் என்றும், உனக்கு மணஞ்செய்து தருதலே என் கருத்தென்பார் பலரிங்கறிவுறமற் கடியயர்வுற்றும்பதி கொண்டடைக என்றும், பிறரறியாமல் மணஞ்செய்துகொண்டு சேறல் நெறியன்று என அருச்சுனன் பழிக்கஞ்சாவண்ணம் காவலர்க்குக் கடன் என்றும், சுபத்திரை இவன் யாவன் கொல்லோ என்றையுறுதபடி அவனை மெய்மையுறக்கொண்ட கோலப்படிவமுனி என்றும் கிருட்டிணர் கூறினார். என்றோழர் இங்ஙனங் கூறியது என்மீது பேரன்புடைமையாலென் றவனுருகுதற்கு ஏதுவாயிற்றென்பார் கசியவென்றாசிரியரடை கொடுத்தார். அரசகன்னியர் தாம்நினைத்தவரங் கோடற்காக முனிவரர்க்குக் குற்றேவல்புரிதல் தொன்றுதொட்ட வழக்கென்க. படிவம் - தவவேடம். (௩௭)

வேறு.

உள்ளடங்கியகாமவெங்கனல்புறத்தோடிக்
கொள்ளைகொண்டுடன்மறைத்தெனக்கூறையுந்தானு
மெள்ளவந்துதன்கடிமனைமேவியவேடக்
கள்ளவஞ்சனையறிந்திலள்கற்புடைக்கன்னி.

(இ - ள்.) உள் அடங்கிய வெம் காமக்கனல் புறத்து ஓடி - உள்ளே அடங்கிய கொடிய காமாக்கினி புறத்தே பரந்து—கொள்ளைகொண்டு உடல் மறைத்து என - முழுதுங் கவர்ந்து உடம்பை மறைத்தாற்போல—கூறையும் தானும் மெள்ள வந்து-காவிவஸ்திரமுந் தானுமாய் மெல்லவாக வந்து—தன் கடிமனை மேவிய கள்ள வேட வஞ்சனை - தனது காவலையுடைய வீட்டிலிருந்த மறைந்த வேடத்தையுடைய வஞ்சனாகிய அருச்சுனனை—கற்பு உடைக் கன்னி அறிந்திலள் - கற்பையுடைய சுபத்திரை அறிந்திலள். எ - று.

மெல்லவென்பது மெள்ளவென மரீஇயிற்று. அறிந்தாளாயிற் கற்பொழுக்கிற்கு அது விரோதமென்றஞ்சித் தமையன் பணித்தபணிக் குடன்படாளென்பார் வஞ்சனையறிந்திலள் கற்புடைக்கன்னி என்றார். கள்ளவஞ்சனையென்பதற்குக் கள்ளமாகிய வஞ்சத்தையெனினும் அமையும். (௫அ)

ஈங்குவந்ததென்றவப்பயனென்றுகொண்டெண்ணி
யாங்குவந்தொருமனையிடையருந்தவன்றுயிலத்
தூங்குகண்ணினள்சுபத்திரைதோழியர்பலரும்
பாங்குவைகமற்றொருமனைபுகுந்துகண்படுத்தாள்.

(இ - ள்.) அருந்தவன் - அரிய தவவேடத்தையுடைய அருச்சுனன்—ஈங்கு வந்தது என் தவப்பயன் என்று கொண்டு எண்ணி-(இவள்) இங்கேவந்தது எனது தவப்பயன் என்று (மனத்தில்) வைத்துச் சிந்தித்து—ஆங்கு உவந்து ஒரு மனையிடைத் துயில-அப்பொழுது மகிழ்ந்து ஒரு வீட்டில் நித்திரைசெய்ய—தூங்கு கண்ணினள் சுபத்திரை - உறங்குகின்ற கண்ணையுடையளாகிய சுபத்திரை—தோழியர் பலரும் பாங்கு வைக - தோழிமார்பலரும் பக்கத்திலிருக்க—மற்றொரு மனை புகுந்து கண்படுத்தாள் - வேறொரு வீட்டிற்புகுந்து நித்திரை செய்தாள். எ-று.

கண்ணினள் பெயரெச்சமுற்று. என்று கொண்டென்பதை ஒருசொல்லாக்கி என்றெண்ணியென்றலும் ஒன்று. ஈங்குவந்துழியே என்னெண்ணமினித் தவறாது கடைபோமெனத் துணிந்தானாதலின் ஈங்குவந்ததென்றவப்பயனென்றெண்ணினனென்க. தான் வழக்கமாகப் புரியுந் துயிலின்றிச் சூரியோதயத்தின்முன்னரே யெழுந்து இரைவதகசயிலத்தில் வந்தமையினாலும் முனிவன் தன்னியமங்களை முடித்துத்துயிலப்போங்காறும்விழித்திருந்தமையினாலுந்தூங்குகண்ணினளென்றார்.

புடவியெங்கணும்புதையவான்பொழிதருபுனலா
லடவியாரழலவியவுமவிந்திலதையோ
தடவிவாடைமெய்கொளுத்திடத்தனஞ்சயற்கணங்கின்
விடவிலோசனக்கடைதருவிரகவெங்கனலே.

(இ - ள்.) வாடை மெய் தடவிக் கொளுத்திட - வாடைக்காற்றானது உடம்பைப் பரிசித்துச் சுட—தனஞ்சயற்கு அணங்கின் விட விலோசனக் கடைதரு விரக வெம் கனல்-அருச்சுனனுக்குச் சுபத்திரையினது நஞ்சுபோன்ற கடைக்கண் தருகின்ற காமமாகிய கொடிய அக்கினி—புடவி எங்கணும் புதைய வான் பொழி தரு புனலால் - பூமியெங்கும் மறைய மேகங்கள் பொழியும் மழையினால்—அடவி ஆரழல் அவியவும் - காட்டிலுள்ள நிறைந்த அக்கினி தணியவும்—ஐயோ அவிந்திலது - ஐயோ தணிந்திலது. எ - று.

ஏ - அசை. அவியவும் என்னும் உம்மை சிறப்பு. புருஷர்க்கு விரகக் கனலை மூட்டுங் கண்ணும் முலையும் என்னுமிரண்டனுள் அவர்க்கதனை மிகமூட்டுவது கண்ணேயென்பார் விடவிலோசனக்கடைதரு விரகவெங்கனல் என்றார். "அலைத்ததுகாமன்சேனை" என்பதற்கு நச்சினார்க்கினியாருரைத்தவுரையாலும் இக்கருத்துப் பொள்ளெனப்புலப்படும். வாடைக்காற்றால் விரகக்கனல் மிக்கதென்க. (௬௦)

மதனலீலையிற்பழுதறவழிபடும்பாவை
வதனவாண்மதிவந்துமுன்னிற்கவுமருண்டச்
சதனமேவருந்தபோதனன்றனக்குவெம்மோக
விதனவல்லிருள்விடிந்திலதாரிருள்விடிந்தும்.

(இ - ள்.) மதன லீலையில் பழுது அற வழிபடும் பாவை - மன்மதனுலாகும் புணர்ச்சியிலே குற்றம் நீங்க வழிபடுகின்ற பாவைபோல்வாளது—வதனவாள் மதி வந்து முன் நிற்கவும் - முகமாகிய ஒளிபொருந்திய சந்திரன் வந்து முன்னே நிற்கவும்—மருண்டு அச் சதனம் மேவரும் தபோதனன் தனக்கு - மயங்கி அந்த வீட்டிலிருக்கின்ற தவத்தையுடைய அருச்சுனனுக்கு—ஆர் இருள் விடிந்தும்-நிறைவாகிய இருள் புலர்ந்தும்—வெம் மோக விதன வல் இருள் விடிந்திலது - கொடிய ஆசையாகிய வருத்தத்தைத்தரும் வலிய இருள் புலர்ந்திலது. எ - று.

நிற்கவும், விடிந்தும் என்னும் உம்மைகள் சிறப்பு. பாவை ஆகுபெயர். வழிபடல் மதனலீலையைத்தவறற நடாத்தற்கேதுவாயிற்றென்பார் மதனலீலையிற்பழுதற வழிபடும் என்றும், ஏனைமதிபோலக் களங்கமும் வளர்தல் தேய்தலாகிய குற்றமும் இல்லா மதியென்பார் வாண்மதியென்றும், புறக்கண்ணை மறைத்தன்மாத்திரமமைந்த ஏனையிருள்போலாது அகக்கண்ணை மறைத்துத் தீராத் துயர்செய்யும் இருள் என்பார் வெம் மோகவிதனவல்லிருள் என்றுங் கூறினார். (௬௧)

அற்றைநாண்முதலநேகநாளகின்மணங்கமழுங்
கற்றைவார்குழற்கன்னிகைவழிபடக்கருத்தா
லிற்றைமாமதன்பூசலுக்கென்செய்வோமென்றென்
றெற்றையன்றில்போன்மெய்ம்மெலிந்துள்ளமுமுடைந்தான்.

(இ - ள்.) அற்றை நாள் முதல் அநேகநாள் - அந்தநாண் முதற் பலநாள்—அகில் மணம் கமழும் கற்றை வார் குழற் கன்னிகை வழிபட - அகிற்புகையின் மணங்கமழும் கூட்டமாகிய நீண்ட கூந்தலையுடைய சுபத்திரை வழிபாடு செய்ய—கருத்தால் இற்றை மா மதன் பூசலுக்கு என்செய்வோம் என்று

என்று - மனத்தால் இன்றைக்குப் பெரிய மன்மதனுடைய யுத்தத்திற்குஎன்செய்வோம் என்றென்று சிந்தித்து—ஒற்றை அன்றில்போல் மெய்மெலிந்து உள்ளமும் உடைந்தான் - துணைபிரிந்த அன்றிற்பக்ஷிபோல உடம்புமெலிந்து மனமும் தளர்ந்தான். எ - று.

உள்ளமும் என்னும் உம்மைஎச்சம். அகில் ஆகுபெயர். என்செய்வோம் என்றது இழித்தற்கண் ஒருமைப்பால் பன்மைப்பாலாயிற்று. அருச்சுனனை மயக்கத்தக்க அழகுடையள் என்பார் அகின்மணங்கமழுங் கற்றைவார்குழற் கன்னிகை என்றும், எடுத்த தவவேடத்திற்கியையத் தன் கள்ளவஞ்சனை புறத்தார்க்குப் புலப்படாவண்ணம் மனத்தில் வருந்தினனென்பார் கருத்தாலிற்றை மாமதன் பூசலுக்கென்செய்வோமென்றென்று என்றும் கூறினர். (௬௨)

நல்லிலக்கணம்பலவுடையவயவநலத்தால்
வில்லிலக்கணத்தழும்புடைக்கரங்களான்மிகவுந்
தொல்லிலக்கணம்பலவுடைச்சுபத்திரையொருத
னில்லிலக்கணவனையிவன்யார்கொலென்றயிர்த்தாள்.

(இ - ள்.) தொல் இலக்கணம் பல உடைச் சுபத்திரை-(பெண்களுக்குரிய) பழைய இலக்கணங்கள் பலவற்றையுடைய சுபத்திரையானவள்—நல் இலக்கணம் பல உடை அவயவ நலத்தால் - (புருஷர்களுக்குரிய) நல்ல இலக்கணங்கள் பலவற்றையுடைய அவயவங்களின் அழகினாலும்—வில் இலக்கணத் தழும்பு உடைக் கரங்களால் - வில்லினது இலக்கணமமைந்த தழும்பையுடைய கைகளினாலும்—ஒரு தன் இல்லில் அக்கணவனை - ஒப்பற்ற தன்வீட்டி லிருக்கின்ற அந்த நாயகனாகிய அருச்சுனனை—இவன் யார் என்று அயிர்த்தாள் - இவன் யாரோவென்று சந்தேகங்கொண்டாள். எ - று.

கொல் - அசை. வில்லிலக்கணத் தழும்பாவது முன்கைச்சந்து முழங்கைக்கு முன் என்னு மிரண்டினும் முன்கைச்சந்தைச் சேர்ந்து உத்தம இலக்கணங்களையுடைய விரல்களிந்திற்கருகே யானைத்தோலின் நூற்றுரையையும் சிறுமீனையுமொத்த மூவிரனிளத்தையுடையது. யானைத்தோல்காழ்ப்பேறினபடிக்கும், அதிலே நூற்றையுரைத்தது வெண்மைக்கும், சிறுமீன் தழும்பின் வடிவிற்கு முவமை. இதனை, "கிலுத்தங்கூர்ப்பரங்கள்" என்னுஞ் சீவகசிந்தாமணிச் செய்யுளானறிக. நூறு - நீறு. (௬௩)

மங்கையங்கொருநாளவன்மலரடிவணங்கி
யெங்கும்வண்புனலாடுதற்கேகினீரெனினுந்
தங்குமாநகர்யாதெனத்தபோதனன்றானு
மெங்கண்மாநகரிந்திரப்பிரத்தமென்றிசைத்தான்.

(இ - ள்.) மங்கை அங்கு ஒருநாள் அவன் மலர் அடி வணங்கி - சுபத்திரையானவள் அவ்விடத்தில் ஒருநாள் அந்த அருச்சுனனது தாமரை மலர்போன்ற கால்களை வணங்கி—வண் புனல் ஆடுதற்கு எங்கும் ஏகினீர் எனினும் - அழகிய தீர்த்தங்களில் ஆடுதற்கு எவ்விடங்களிலுஞ் சென்றீர் எனினும்—தங்கும் மாநகர் யாது என-நீர் இருக்கும் பெரிய நகரம்யாதென்று வினவ—தபோதனன்தானும்-

தவத்தையுடைய அவனும்—எங்கள் மா நகர் இந்திரப்பிரத்தம் என்று இசைத்தான் - எங்களுடைய பெரிய நகரம் இந்திரப்பிரத்தம் என்று சொன்னான். எ-று.

எனினும் என்னும் உம்மை சிறப்பு. தபோதனன்றானும் என்னும் உம்மை எச்சம். மங்கை ஈண்டுப் பருவத்தையுணர்த்தி நின்றது. ஏனைநால்வரையு முளப்படுத்தி எங்கண்மாநகரென்றான். (௩௪)

என்றகாலையிலிந்திரன்மதலையையொழிய
நின்றபேரையங்நெடுங்கணாள்வினவலுநிருபன்
வென்றிமன்னவர்யாரையும்வினவினைமின்னே
மன்றலங்தொடைவிசயனைமறந்ததென்னென்றான்.

(இ-ள்.) என்றகாலையில் - என்று சொன்னபொழுதில்—அந் நெடுங்கணாள் - அந்த நெடிய கண்ணையுடைய சுபத்திரையானவள்—இந்திரன் மதலையை ஒழிய நின்றபேரை வினவலும் - அருச்சுனனையொழிய எஞ்சிய தருமன் முதலியோரை வினவவும்—நிருபன் - அருச்சுனன்—மின்னே - மின்போல்வாளே—வென்றி மன்னவர் யாரையும் வினவினை - வெற்றியையுடைய அரசர் நால்வரையும் வினாவினாய்—மன்றல் அம் தொடை விசயனை மறந்தது என் என்றான் - வாசனை பொருந்திய அழகிய மாலையையுடைய அருச்சுனனை மறந்தது என்னை என்றான் எ - று.

மின் ஆகுபெயர். நால்வரினுஞ் சிறந்தான் அருச்சுனன் என்பதவட்குப் புலப்பட மன்றலங்தொடைவிசயன் என்றான். (௩௫)

யாழின்மென்மொழியெங்கணாயகியிவளவனுக்
கூழினன்புடைமன்றலுக்குரியளாதலினால்
வாழிவெஞ்சிலைவிசயனைமறைத்தனளென்னாத்
தோழிநின்றவளொருத்திகைதொழுதனள்சொன்னாள்.

(இ - ள்.) நின்றவள் தோழி ஒருத்தி - (அப்பொழுது அங்கு) நின்ற தோழியொருத்தி—யாழில் மென் மொழி எங்கள் நாயகி இவள் - யாழிசைபோலும் மெல்லிய சொற்களையுடைய எங்கள் தலைவியாகிய இவள்—அவனுக்கு ஊழின் அன்பு உடை மன்றலுக்கு உரியள் ஆதலினால் - அந்த அருச்சுனனுக்கு ஊழினால் அன்புடைய விவாகத்துக்குரியளாதலால்—வெம் சிலை விசயனை மறைத்தனள் என்னா - கொடிய வில்லையுடைய அருச்சுனனை (வினவாது) மறைத்தாளென்று—கை தொழுதனள் சொன்னாள். - அவனை வணங்கிச் சொன்னாள். எ - று.

வாழி - அசை. நின்றவள் பெயரெச்சமுற்று. தொழுதனள் வினையெச்சமுற்று. யாழ் ஆகுபெயர். யாழின்மென்மொழி பயனுவமம். ஊழால்வந்த அன்பென்றலும் ஒன்று. தோழியர் பலராயினும் அப்பொழுதாங்கு நின்றாளொருத்தியாதலிற் றோழிநின்றவளொருத்தி என்றும், தவவேடமுடைமையிற் கைதொழுதனள் சொன்னாள் என்றுங் கூறினார். ()

பங்குனன்பெருந்தீர்த்தநீர்படிவதற்காகப்
பொங்குதெண்டிரைப்புவிவலம்போந்தனனென்றே
யங்குநின்றுவந்தவருரைத்தனரவனிப்போ
தெங்குளானெனத்தெரியுமோவடிகளுக்கென்றாள்.

(இ - ள்.) பங்குனன் - அருச்சுனன்—பெரும் தீர்த்த நீர் படிவதற்கு ஆக - பெரிய தீர்த்தங்களிலுள்ள நீரிலே ஸ்நானஞ்செய்வதற்காக—பொங்கு தெண் திரைப் புவி வலம் போந்தனன் என்று - கிளருகின்ற தெளிவாகிய திரைகளை யுடைய கடலாற்சூழப்பட்ட பூமியைப் பிரதக்ஷிணஞ்செய்தானென்று—அங்கு நின்று வந்தவர் உரைத்தனர் - அந்த இந்திரப்பிரத்தநகரினின்று வந்தவர் சொன்னார்—அவன் இப்போது எங்கு உளான் என அடிகளுக்குத் தெரியுமோ என்றாள்- அவன் இப்பொழுது எவ்விடத்திலிருக்கின்றான் என்று சுவாமிகளுக்குத் தெரியுமோ என்றாள். எ - று.

ஏ - அசை. ஓ வினா. திரை ஆகுபெயர். தீர்த்தயாத்திரைசெய்தல் பாவந்தீர்தற் கேதுவாவதன்றிப் புவிவலஞ்செய்தலு மதற்கேதுவாயிற்றென்பாள் தீர்த்தநீர் படிவதற்காகப் பொங்குதெண்டிரைப் புவிவலம்போந்தன னென்றுடம்பொடு புணர்த்தியும், ஓரிடத்திருந்தாங்கிருந்து மூவிடத்து முக்காலப்பொருளையு முணரும் யோகக்காட்சி யுடையனென்பாள் இப்போதெங்குளானெனத் தெரியுமோ வடிகளுக்கென்றுங் கூறினாள். புவிவலஞ்செய்தல் பாவநீங்குதற் கேதுவென்பதனைத் "தமது, பாவராசிகளகலுமோ பார்வலஞ்செயினும்" என்பதனானறிக. தீர்த்தநீர் என்பதனை இருபெயரொட்டாக்கலும் ஒன்று. (௬௭)

பாங்கிநல்லுரைதன்செவிப்படுதலும்விசயன்
தீங்கிலன்பலதிசைகளுஞ்சென்றுநீராடிக்
கோங்கிளங்கொழுமுகைநிகர்கொங்கையாள்பொருட்டா
லீங்குவந்துநும்மில்லிடையிருந்தனனென்றான்.

(இ - ள்.) பாங்கி நல் உரை தன் செவிப்படுதலும்-தோழியினுடைய நல்லவசனம் தன்காதிற் புகுதலும்—விசயன் தீங்கு இலன்-அருச்சுனன் ஒரிடையூறுமில்லாதவனாய்—பல திசைகளும் சென்று நீர் ஆடி - பலதிக்குக்களிலும் போய்த் தீர்த்தமாடி—கோங்கு இளம் கொழு முகை நிகர் கொங்கையாள் பொருட்டால்-கோங்கினது இளமையாகிய கொழுத்த அரும்புபோன்ற முலையையுடையாள் பொருட்டினால்—ஈங்கு வந்து நும் இல்லிடை இருந்தனன் என்றான் - இங்கே வந்து உம்முடைய வீட்டிலிருந்தான் என்று சொன்னான். எ - று.

இலன் வினையெச்சமுற்று. பாங்கியாற் கூறப்பட்ட அருச்சுனற்குரிய ளென்றதும், அவனிப்போதெங்குளானெனத் தெரியுமோ என்றதும் ஆகிய வுரைகள் அவன்செவிக்கின்பஞ் செய்தலில் நல்லுரையென விசேடிக்கப்பட்டன.சிறந்த வீரரையும் வெல்லவல்ல வலியும் வீரமும் உடையனாயினும் சீதளோஷ்ணங்களைச்சகிக்கலாற்றாப் பூவின்மெல்லியவியல்புடைய அரசகுமரனாதலினாற் தீர்த்தநீர்படிவதற்குப் புவிவலம்போதலினால் வருந்துவானேயென்று சுபத்திரைகவலாது சுகமுடையனாயிருந்தானென்பான் தீங்கிலனென்றும், முனிவரையும் மாலுறுக்கும் முலையென்பான் கோங்கிளங்கொழுமுகைநிகர் கொங்கையென்றுங் கூறினான். (௬௮)

யதியுரைத்தசொற்கேட்டலும்யாதவிநுதல்வாண்
மதிவெயர்த்தது துடித்ததுகுமுதவாய்மலரும்
புதியகச்சணிகுரும்பைகளரும்பினபுளகம்
பதியிடத்தரிவையர்க்குளமாகுலம்படாதோ.

(இ - ள்.) யதி உரைத்த சொல் கேட்டலும் - துறவியாகிய அருச்சுனன் சொன்னசொல்லைக் கேட்டலும்—யாதவி நுதல் வாள் மதி வெயர்த்தது - சுபத்திரையினது நெற்றியாகிய ஒளிபொருந்திய சந்திரன் வியர்த்தது—வாய்க்குமுத மலரும் துடித்தது-வாயாகிய செவ்வாம்பன்மலரும் துடித்தது—புதிய கச்சு அணி குரும்பைகள் புளகம் அரும்பின - புதிய கச்சையணிந்த (முலைகளாகிய) குரும்பைகள் மயிர்சிலிர்த்தன—அரிவையர்க்குப் பதியிடத்து உளம் ஆகுலம் படாதோ - பெண்களுக்கு நாயகரிடத்தில் மனம் ஆரவாரப்படாதோ. எ - று.

ஓ - எதிர்மறை. மலரும் என்னும் உம்மை எச்சம். நடைமலையென்பது யானையை யுணர்த்துமாறுபோலக் கச்சணி குரும்பைகள் என்பது முலையையுணர்த்தி நின்றது. நாயகரிடத்து வேட்கைமிக்குழி மகளிர்க்கிம்மெய்ப்பாடுகெ ணிகழ்தலியல்பென்க. ஆரவாரம் ஈண்டு உவகையையுணர்த்திற்று. ஓகாரத்தை அசையாக்கிப் பதியிடத்தரிவையர்க் குளம் ஆகுலம்படாது, ஆகவே பதியிடத்து மகிழ்ச்சியேயுண்டாம் எனப்பொருள் கோடலும் ஒன்று. (௬௯)

உகவைமுத்தமென்பவளமுநீலமுமொளிர
வகவுபச்சிளந்தோகைபோனின்றவவ்வணங்கை
மிகவிருப்பநோய்வளர்தலின்மெலிந்ததோள்விசயன்
றகவுடைத்தனதடக்கையால்வளைக்கரந்தகைந்தான்.

(இ - ள்.) உகவை முத்த மென் பவளமும் நீலமும் ஒளிர - சந்தோஷத்தினால் முத்தையுடைய மென்மையாகிய பவளம்போலும் வாயுங் கருங்குவளை மலர்போலுங் கண்ணும் விளங்க—அகவு பச்சிளம் தோகைபோல் நின்ற அவ் அணங்கை - ஆடுகின்ற பசிய இளைய மயில்போல்நின்ற அந்தப் பெண்ணை—விருப்ப நோய் மிக வளர்தலின் மெலிந்த தோள் விசயன் - காமநோய் மிக வளர்தலினால் மெலிந்த புயங்களையுடைய அருச்சுனன்—தகவு உடைத் தன தடக்கையால் வளைக்கரம் தகைந்தான் - பெருமையையுடைய தனது நீண்ட கையினால் வளையலையணிந்த கையைப் பிடித்தான். எ - று.

பவளம், நீலம் ஆகுபெயர்கள். உவகையென்பது உகவையென எழுத்து நிலைமாறிற்று; தசை சதையென நின்றாற்போல. வாயுங் கண்ணுமே முற்படவுவகைக்குறிப்பை வெளிப்படுத்தலின் உகவைமுத்தமென்பவளமு நீலமுமொளிர என்றும், கன்னியாதலில் இளந்தோகையென்றும், ஊழ்வயத்தானிங்ஙனம் ஏவப்பட்டுத் தகைந்தவன்றி இதற்குமுன் இங்ஙனம் நெறியினீங்கித் தகையாக் கையென்பார் தகவுடைத் தனதடக்கை என்றுங் கூறினர். (௭௦)

தகைந்தபோதுயிர்ச்சேடியர்தவிர்கெனச்சிலசொற்
பகர்ந்துபோயொருமாதவிப்பந்தரிற்புகுந்து
புகுந்தநீர்மையைத்தேவகியறியுமாபுகன்று
ரகைந்தபல்பெருங்கிளைஞரிலார்கொலோவறிந்தார்.

(இ - ள்.) தகைந்தபோது-பிடித்தபொழுது—உயிர்ச் சேடியர் தவிர்கஎன-உயிர்போன்ற தோழியர் இதனை ஒழிகவென்று சொல்ல—சில சொல் பகர்ந்துபோய் - (அவன்) அவர்களுக்குச் சில சொற்களைச் சொல்லிப்போய்—ஒரு மாதவிப் பந்தரில் புகுந்து - ஒரு மல்லிகைப் பந்தரிற் புக—புகுந்த நீர்மையைத் தேவகி அறியுமா புகன்றார்— (அவர்கள்) சம்பவித்ததன்மையைத் தேவகியறியும்படி சொன்னார்கள்—அகைந்த பல் பெரும் கிளைஞரில் ஆர் அறிந்தார் - நெருங்கிய பல பெரிய சுற்றத்தாரில் யாவர் இதனையறிந்தவர் [ஒருவரும் இல்லை.] எ - று.

கொல், ஓ அசைகள். புகுந்து எனச் செயவெனெச்சஞ்செய்தெனெச்சமாகத் திரிந்துநின்றது. அகைந்த பெயரடியாகத்தோன்றிய பெயரெச்சம். தகைந்தபோது ஆரவாரமுண்டானமையிற் சேடியர் பலர் குழுமினர். அருந்தவனாதலின் நம்மை முனிந்து சாபமிடுவனென்று சிறிதுமஞ்சாது அவன்மீதுகொண்ட பேரன்பினாற் றவிர்கவென்னுங் கடுஞ்சொல்லைக் கூறினர் உயிர்ச்சேடியராதலினென்க. (எக)

அறிவுறாவகையலாயுதன்முதல்வடமதுரை
செறியும்யாதவர்யாரையுந்தன்னுடன்சேர்த்து
மறிகொள்செங்கையன்விழாவயர்வான்பெருந்தீவி
லுறியில்வெண்டயிருண்டவன்கொண்டுசென்றுற்றான்.

(இ - ள்.) உறியில் வெண் தயிர் உண்டவன் - உறியிலுள்ள வெண்மையாகிய தயிரையுண்ட கிருட்டிணர்—அறிவு உறாவகை - (இம்மணச்செய்தியை) அறியாதபடி—அலாயுதன் முதல் வடமதுரை செறியும் யாதவர் யாரையும் தன்னுடன் சேர்த்து - பலராமன்முதல் வடமதுரையில் இருக்கும் யதுகுலத்தாரனைவரையுந் தன்னோடு சேர்த்து—மறி கொள் செம் கையன் விழா அயர்வான் - மான்கன்றையேந்திய சிவந்த திருக்கரத்தையுடைய சிவபெருமானுக்குத் திருவிழாச்செய்யும் படி—பெரும் தீவில் கொண்டு சென்று உற்றான் - பெருந்தீவில் அழைத்துக்கொண்டுபோயினார். எ - று.

உறாத என்னும் பெயரெச்சத்தீறு தொக்கது. சென்றுற்றான் என்பது ஒருசொன்னீர்மைத்து. வடமதுரை என்பது பிறிதோடியைபுநீக்கிய விசேடணம் அடுத்துநின்றது. உறியில் வெண்டயிருண்டவன் என்றபெயரடையால் தான் புரியுஞ் சூழ்ச்சி பிறர்க்குப் புலப்படாவகை நடிக்கவல்லசாதுரியரென்பது பெறப்பட்டது. அகந்தைவயத்தராய்த் தம்மைப் பரமபதியெனக் கருதாத தீயருக்குந் தம்மைப் பதியெனக்காட்டித் தடுத்தாட்கொள்ளுங் கருணைக்கடலென்பார் மறிகொள்செங்கையன் என்றார். (எ௨)

உற்றகங்குலில்யாவருந்தணந்தவாறுணர்ந்து
பெற்றதன்பெரும்பிதாவினைமுன்னினன்பெரியோன்
சிற்றிடைப்பெருங்கொங்கையுந்தம்முனைத்தியான
முற்றமுன்னினளிருவருமுன்முன்வந்துற்றார்.

(இ - ள்.) பெரியோன்-அருச்சுனன்—உற்ற கங்குலில் யாவரும் தணந்தவாறு உணர்ந்து-கிருட்டிணர் தீவை) அடைந்த இராக்காலத்தில் எவர்களும் (அவ்விடத்தை)நீங்கிய தன்மையை அறிந்து—பெற்ற தன் பெரும் பிதாவினை முன்னினன் - பெற்ற தனது பெருமையையுடைய பிதாவாகிய இந்திரனைச் சிந்தித்தான்—சிற்றிடைப் பெரும் கொங்கையும் தம்முனைத் தியானம் முற்ற முன்னினள் - சிறிய

இடையையும் பெரிய முலையையுமுடைய சுபத்திரையுந் தன்தமையனாகிய கிருட்டிணரைத் தியானலட்சணம் முதிரத் தியானித்தாள்—இருவரும் முன் முன் வந்துற்றார் - அவ்விருவரும் நினைத்த அவ்விருவர் முன்னும் வந்தடைந்தார்கள். எ-று.

கொங்கையும் என்னும் உம்மை எச்சம். தியானம் ஆகுபெயர். முன்முன் என்னும் அடுக்குப் பன்மை குறித்துநின்றது. தவவேடத்தாலும் பிதாவின் கருத்திற்கிணைய விவாவகஞ்செய்தல்வேண்டுமென்ற கருத்து வேணவாவின்கண்ணும் நிகழ்தலாலும் பெருந்தகையனாயினனென்பார் பெரியோனென்றார். தியானம் முற்றத் தம்முனைமுன்னினள் என்பதற்குத் தன்கருத்து முடியுமாறு தம்முனைத் தியானித்தாளெனப் பொருள்கொண்டு, தன் கருத்தென்றது அருச்சுனனை மணஞ்செய்தல்வேண்டுமென்னுங்கருத்தென்றலும் ஒன்று. (எ௩)

இந்திராணியோடெய்தியவிந்திரன்றன்னை
யிந்திராபதியெதிர்கொளத்துவரைமாமூதூர்ச்
சந்திராதவமண்டபத்திடுபொலந்தவிசில்
வந்திராவணங்கியதிருமகனுடன்மகிழ்ந்தான்.

(இ - ள்.) இந்திராணியோடு எய்திய இந்திரன் தன்னை - இந்திராணியோடு வந்த இந்திரனை—இந்திராபதி எதிர்கொள - இலக்குமிக்கு நாயகராகிய கிருட்டிடிணர் எதிர்கொள்ள—துவரை மா மூதூர்ச் சந்திர ஆதவ மண்டபத்து இடுபொலம் தவிசில் வந்து இரா - (அவன் துவாரகை என்கின்ற பெரிய பழைய நகரத்திலுள்ள சந்திரனது ஒளியையுடைய மண்டபத்திலிட்ட பொன்னாலாகிய ஆசனத்தில் வந்திருந்து—வணங்கிய திரு மகனுடன் மகிழ்ந்தான் - தன்னை வணங்கிய அழகிய குமாரனாகிய அருச்சுனனோடு மகிழ்ந்தான். எ - று.

எதிர்கொள இரா மகிழ்ந்தான் என்க. இந்திராபதி வடநூன்முடிபு. சந்திரனது ஒளி என்றது வெண்மையுந் தட்பமும் உடைய ஒளியையென்க. இரவாதலிற் சந்திரனொளிசெறியப்பெற்ற மண்டபமெனினுமமையும். தன்புதல்வன் பற்பல மணம்புரியினும் அவற்றாற் பெரும்பேறுகளையெய்தாது, இம்மை மறுமைப்பயனிரண்டையும் ஒருங்கீயவல்ல மித்திரரும் மைத்துனருமாகிய கிருட்டிணரின்றங்கையை மணஞ்செய்யின் அதனால் அப்பேறுகளையெல்லாமொருங்கெய்துவானென் றுள்ளத்தின் மீக்கூர்ந்தெழு முவகைவயத்தனாயினனென்பார் மகிழ்ந்தானென்றார். (எ௪)

பொருவரும்புருகூதனும்புலோமகன்னிகையு
மிருவருந்தமகலன்களாலிவரிருவரையு
மருவரும்படியணிதலினணிகெழுவனப்பா
லொருவரும்பிறரொப்பலரென்னுமாறுயர்ந்தார்.

(இ - ள்.) பொருவு அரும் புருகூதனும் புலோம கன்னிகையும் இருவரும் - உவமையில்லாத இந்திரனும் இந்திராணியுமாகிய இருவரும்—தம கலன்களால் இவர் இருவரையும் மருவரும்படி அணிதலின் அணிகெழு வனப்பால் -

தங்களாபரணங்களால் இவர்கள் இருவரையும் பொருந்தும்படி அலங்கரித்தலினால் உண்டாகிய பேரழகினால்—பிறர் ஒருவரும் ஒப்பு அலர் என்னுமாறு உயர்ந்தார் - வேறொருவரும் நிகரல்லர் என்று சொல்லும்படி உயர்ந்தார்கள். எ - று.

மரு முதனிலைத்தொழிற்பெயர். உண்டாகியவென்பது சொல்லெச்சம். உயர்ந்தார் என்னும் பயனிலைக்கு அவர் என்னும் எழுவாய் வருவிக்க. ஒருவரும் என்னும் உம்மை முற்று. இருவர்க்கும் இயையுமாறணிதலின் மருவரும்படி யென்றார். புலோமன் புதல்வியெனப் பொருடந்து நிற்றலிற் புலோம கன்னிகை யென்பது ஏதுப்பெயர். மிகவும் அழைக்கப்படுபவன் எனப் பொருடரும் புருகூதன் என்னும் பெயர் ஈண்டு அருச்சுனன் அழைத்தற்கும் ஏதுவைச் சுட்டிநின்றது. (எ௫)

பாலருந்ததிநறுநெய்யாய்ப்பாடியிற்கள்ளத்
தாலருந்ததிவிரகனதருளினால்விரைவிற்
சாலருந்ததிதலைவனுந்தலைபெறும்பலநுண்
ணூலருந்ததியுறப்புகுந்தாசிகணுவன்றார்.

(இ - ள்.) ஆய்ப் பாடியில் - இடைச்சேரியில்—பால் அரும் ததி நறுநெய் கள்ளத்தால் அருந்து அதி விரகனது அருளினால் - பால் அரியதயிர் நறுநெய் ஆகிய இவைகளைக் களவினாலெடுத்துண்ட மிக்க உபாயத்தையுடைய கிருட்டிணரது கிருபையினால்—சால் அருந்ததி தலைவனும் - (கற்பினால்) நிறைந்த அருந்ததிக்கு நாயகனாகிய வசிட்டமுனிவனும்—தலைபெறும் பல நுண் நூலரும் - தலைமைபொருந்திய பல நுண்மையாகிய நூல்களையுடைய அறிஞர்களும்—விரைவில் ததி உறப் புகுந்து ஆசிகள் நுவன்றார் - விரைவோடு கூட்டமாக வந்து ஆசிகளைச் சொன்னார்கள். எ - று.

ஆய் என்பது வேடு என்பதுபோலச் சாதியையுணர்த்திநின்றது. பான்முதலியவற்றைக் கள்ளத்தாலருந்திய அதிவிரகனாதலின் வசிட்டன்முதலியோரை ஒருவருமுணராவண்ணம் அழைத்தானென்க. தயிர்நெய்போல விகாரமாகா தவிகாரியாய பாற்கும் அவைபோலடைபுணர்த்திக் கூறின் அதனாலதன்றலைமைக்கிழுக்காமென்பார் வாளா பாலென்றும், கற்போற்றோய்த்த தயிரென்பார் அருந்ததி யென்றும், புத்தருக்குநெய்யென்பார் நறுநெய்யென்றுங் கூறினார். சால் என்பதனைத் தலைவனுக்கேற்றித் தவமுதலியவற்றாற் சான்ற தலைவனென்றலும் ஒன்று. ததி - கூட்டம். (எ௬)

தொடங்கினாதவெம்முரசுடன்சுரிமுகந்தழங்கச்
சடங்கினாலுயராகுதித்தழலவன்சான்றா
விடங்கினான்மிகுவிசயனக்கன்னியைவேட்டான்
மடங்கினார்தமபதிதொறுமவ்வுழிவந்தார்.

(இ - ள்) விடங்கினால் மிகு விசயன் - அழகினால் மிக்க அருச்சுனன்—நாத வெம் முரசுடன் சுரிமுகம் தழங்க - ஓசையையுடைய விரும்பப்படும் முரசோடு சங்கு ஒலிக்க—சடங்கினால் உயர் ஆகுதித் தழலவன் சான்றா - கிரியையினாலுயர்ந்த ஆகுதியையுடைய அக்கினிதேவன் சாட்சியாக—தொடங்கி அக்கன்னியைவேட்டான் - முயன்று அந்தச் சுபத்திரையை விவாகஞ்செய்தான்—அவ்வுழி வந்தார்

தம பதிதொறும் மடங்கினர் - அவ்விடத்தில் வந்தோரனைவரும் தங்கள் நகரங்கள் தோறும் மீண்டு சென்றார்கள். எ - று.

ஆக என்னும் எச்சம் ஈறுதொக்கது. சரிமுகம் அன்மொழித்தொகை. மணமுரசென்பார் வெம்முரசென்றும், ஓமாக்கினியென்பார் சடங்கினலுய ராகுதித் தழலவன் என்றும், சுபத்திரைக்கியைந்த நாயகனென்பார் விடங்கினன் மிகுவிசயன் என்றும், பிறரறியாது ஆரவாரமின்றி வந்தபடி மீண்டாரென்பார் மடங்கினரென்றுங் கூறினர். தொடங்கி வேட்டானென்றியையும். தொடங்கிமுழங்கவென்றியைத்து முழக்குவாராற் றொடங்கப்பட்டு முழங்கவென்றலும் ஒன்று. (எஎ)

முன்னம்யாவையுமுடித்தருண்மொய்துழாய்முடியோன்
கன்னனாருயிர்கொளவளர்காளையைத்தழீஇக்கொண்
டன்னமென்னடையரிவையர்பொருட்டுநீயின்ன
மென்னவென்னமாதவவுருக்கொள்ளுதியென்றான்.

(இ - ள்.) முன்னம் யாவையும் முடித்தருள் மொய் துழாய் முடியோன்-முன்னரே (இந்த விவாகத்திற்குரிய காரியம்) அனைத்தையும் முடித்தருளிய நெருங்கிய துழாய்மாலைபொருந்திய முடியையுடைய கிருட்டிணர்—கன்னன் ஆர் உயிர்கொள வளர் காளையைத் தழீஇக்கொண்டு - கன்னனுடைய பெறுதற்கரிய உயிரைக்கவர வளருகின்ற அருச்சுனனைத் தழுவிக்கொண்டு—நீ அன்ன மெல் நடை அரிவையர் பொருட்டு-நீ அன்னம்போலும் மெல்லிய நடையையுடைய பெண்கள்பொருட்டு—இன்னம் என்ன என்ன மாதவ உருக்கொள்ளுதி என்றான் - இன்னும் என்ன என்ன பெரிய தவவேடத்தைக்கொள்ளுவாய் என்று (நகையாடிச்) சொன்னர். எ - று.

கொள என்னுஞ் செயவெனெச்சம் ஏதுப்பொருட்டு. என்னவென்ன என்னும் அடுக்குப் பன்மைபற்றிவந்தது. கன்னனாருயிர்கொளவளர்காளை யென்னும் பெயரடையாற் சுபத்திரையைத் தன்வடிவத்தோடு போய் மணஞ்செய்யிற்றன்னை வெல்லவல்ல வீரருளரென்றஞ்சி மாதவவேடங் கொண்டானல்ல னென்பதுபெறப்பட்டது. கண்களிக்கத்தக்க பேரழகுடைய அரிவையரென்பார் அன்னமென்னடையரிவையர் என்றார். தான் மனத்திற்குறித்த கருத்தெவைகளையும் முடிக்கின்ற துழாய்முடியோன் எனவும், பூமிதேவி குறித்த கருத்தெவற்றையும் முடிக்கின்ற துழாய்முடியோன் எனவும், அன்பர்களின் மனக்குறிப்பெவற்றையும் முடிக்கின்ற துழாய்முடியோன் எனவும் பொருள்கொள்ளினும் அமையும். (எஅ)

வேறு.

காமற்பயந்தோன்றனதேவலிற்காமபாலன்
வாமப்பதிதன்னினும்வாசவமாபிரத்த
நாமப்பதியேதிசையாகநடக்கலுற்றான்
றாமக்குழலாடனித்தேர்விடச்சாபவீரன்.

(இ - ள்.) சாபவீரன் - வில்வீரனாகிய அருச்சுனன்—தாமக் குழலாள் தனித் தேர் விட - மாலையையணிந்த அளகத்தையுடைய சுபத்திரை தனித்த தேரை செலுத்த—காமற் பயந்தோன் தனது ஏவலின் - மன்மதனைப் பெற்ற கிருட்

டிணருடைய கட்டளையினல்—காமபாலன் வாமப் பதி தன்னினும் - பலராமனு டைய அழகிய துவாரகாபுரியினின்றும்—மா வாசவப்பிரத்த நாமப் பதியே திசை ஆக நடக்கலுற்ருன் - பெரிய இந்திரப் பிரத்த மென்னும் பெயரையுடைய நகர மே தான் நோக்கிச் செல்லுந் திக்காகச் செல்வாளுயினன். எ - று.

ஏகாரம் பிரிநிலை. இன் நீக்கப்பொருளில்வந்த ஐந்தனுருபு. சேமத்தேர் பிற சூழாத் தேரென்பார் தனித்தேரென்றும், மணமாலை சூட்டப்பெற்ற கூந்தலாள் என்பார் தாமக்குழலாள் என்றும், எத்துணைப் பேராற்றலுடையாரையுந் துணைவே ண்டாது வெல்லவல்ல வீரனென்பார் சாபவீரன் என்றுங் கூறினர். காமபாலன் என்பது, அன்பர்களிச்சித்த போகங்களைப் பாலிப்பவனென்றும், தம்பிமகனுகிய மன்மதனைப் பாலித்தவன் என்றும் பொருள்பட்டேதுப்பெயராயிற்று. தனித்தே ரென்பதற்கு நிகரில்லாத தேரெனப் பொருள்கோடலும் உண்டு. (எகூ)

வென்றித்துவரைநகர்காவலர்தம்மைவென்று
மன்றற்குழலினிளையாளைவலிதினெய்திக்
குன்றச்சிறகரரிந்தோன்மகன்கொண்டுபோனு
னென்றப்பலற்குக்கடல்வண்ணனியம்பினனே.

(இ - ள்.) குன்றச் சிறகர் அரிந்தோன் மகன் - மலைகளின் சிறகை அரிந்த இந்திரனுடைய குமாரனுகிய அருச்சுனன்—வென்றித் துவரை நகர் காவலர் தம் மை வென்று - வெற்றியையுடைய துவாரகையென்னும் நகரைக் காவல் செய்பவ ர்களை வென்று—மன்றல் குழலின் இளையாளை - வாசனை பொருந்திய அளகத்தை யுடைய எங்கள் தங்கையை—வலிதின் எய்திக் கொண்டு போனன் என்று - வலா ற்காரமாக வந்து கொண்டு போயினனென்று—அப்பலற்குக் கடல்வண்ணன் இய ம்பினன்-அந்தப் பலராமனுக்குச் சமுத்திரவண்ணராகிய கிருட்டிணர் சொன்னர். எ - று.

ஏ-அசை. சிறகர் கடைப்போலி. குன்றச்சிறகரரிந்தோன் மகன் என்ற பெய ரடையால் வென்றித்துவரை நகர் காவலரை வேறற்கேதுவும், கடல்வண்ணனெ ன்ற பெயரடையாற் றூன்செய்யும் விரகுகள் பிறர்க்குச் சிறிதும் புலப்படாவண் ணம் ஒழுகவல்லரென்பதும் பெறப்பட்டன. அப்பலற்கு என்பதில் அ என்னுஞ் சுட்டு அருச்சுனற்குத் தங்கையைக்கொடுக்க உடன்படா இயல்புடையானென்பத னைச் சுட்டுதலோடு வடிவுபோல நெஞ்சும் வெள்ளையனென்பதனையுஞ் சுட்டிற்று. ஒருகாலத்தும் போரிற் றேல்வியடையா வீரரென்பார் வென்றித்துவரை நகர்காவ லர் என்ருர். (அ௦)

சேலாம்பிறப்பிற்றிருமாலிதுசெப்புமுன்னே
காலாந்தகனும்வெருவுந்திறற்காளைதன்னை
நீலாம்பரனும்யதுவீரநிருபர்யாரும்
நாலாம்படையோடெதிர்சூழ்ந்தமர்நாடினரே.

(இ - ள்.) சேல் ஆம் பிறப்பின் திருமால் இது செப்புமுன் - சேல்மற்சாவ தாரத்தையுடைய கிருட்டிணர் இதனைக் கூறமுன்னரே—கால அந்தகனும் வெரு வும் திறல் காளைதன்னை - உருத்திரனும் அஞ்சும் வென்றியினையுடைய அருச்சு

னனை—நீல அம்பரனும் யதுவீர நிருபர் யாரும் - நீலவஸ்திரத்தையுடைய பலராமனும் யதுகுல வீரரானவர்களும்—நாலு ஆம் படையோடு எதிர் சூழ்ந்து அமர் நாடினார் - நான்காகிய சேனையோடு எதிரேசூழ்ந்து போர்செய்தார்கள். எ - று.

ஏ இரண்டும் அசை. காலாந்தகனும் என்னும் உம்மை சிறப்பு. யாரும் என்னும் உம்மை எண்ணோடு முற்று. காலாந்தகன் நீலாம்பரன் என்பன வடநூன்முடிபு. சேலாம் நாலாம் என்பன செய்யுமென்னும் பெயரெச்சத்துயிர்மெய் கெட்டன. எத்துணைவீரராலும் வேறற்கரியவாற்றலுடைய னென்பார் காலாந்தகனும் வெருவுந்திறற்காளையென்றும், தன்வெள்ளைவடிவோடு முரணும் நீலாம்பரத்தையுடையனுதலிற் றன்னால் வேறல் கூடா விசயனையும் வெல்வேனென முரணியுணர்ந்தானென்பார் நீலாம்பரனென்றும், போரில் வல்ல வீரரணி சூழினும் அவற்றைத் தப்பாது பிளக்குந் தநுர்வேதசாமர்த்தியனென்பதனை நன்குயறிந்தாராகலின் உற்றுப்பொராது அஞ்சி மனங்குலைந்து பொருதாரென்பார் நாடினார் என்றுங் கூறினார். (௮௧)

அஞ்சேலமரினுமர்தம்மையுமாவிகொள்ளேன்
செஞ்சேலனையவிழியாயெனத்தேற்றியந்த
மஞ்சேயனையதடந்தேரவளூரவந்த
வெஞ்சேனைமுற்றும்புறந்தந்திடவென்றுபோனான்.

(இ - ள்.) செம் சேல் அனைய விழியாய் - செம்மையாகிய சேல்மற்சம் போன்ற கண்களையுடையாளே—அஞ்சேல் - அஞ்சற்க—அமரில் நுமர்தம்மையும் ஆவி கொள்ளேன் எனத் தேற்றி - போரில் நின்சுற்றத்தாரையும் ஆன்மாவைக் கவரேன் என்று தெளிவித்து—அந்த மஞ்சு அனைய தடம் தேர் அவள் ஊர - அந்த முகிலை ஒத்த விசாலித்த தேரை அவள் செலுத்த—வந்த வெம் சேனை முற்றும் புறந்தந்திட வென்று போனான் - வந்த கொடிய சைனியம் முழுதும் புறங்கொடுக்க அதனைவென்று சென்றான். எ - று.

ஏ - அசை. தம்மையும் என்னும் உம்மை சிறப்போடெச்சம்; உன்றமையனாகிய பலராமனோடெனப் பொருடரலின் எச்சமுமாயிற்று. அந்தவென்பது பண்டறிசுட்டு. சேலனையவிழி மஞ்சேயனையதேர் என்பன பண்போடு தொழில்பற்றிவந்த வுவமை. தன்றமையனுஞ் சுற்றத்தாரும் பொருதிறக்கப்போகின்றாரெனவழுதுசிவத்தலிற் செஞ்சேலனையவிழியென்றான். பேராற்றலுடைய பகைவர் முனையை முருக்கவல்ல சேனையென்பார் வெஞ்சேனையென்றார். (௮௨)

மடைப்பட்டவாளையகினாறுமருதவேலி
யிடைப்பட்டதங்கள்வளநாடுசென்றெய்தியாங்குத்
தொடைப்பட்டதிண்டோளறன்காளைதுணைவரோடு
நடைப்பட்டுருகியெதிர்கொள்ளநகரிபுக்கான்.

(இ - ள்.) மடைப்பட்ட வாளை அகில் நாறும் மருதவேலி இடைப்பட்ட தங்கள் வள நாடு சென்று எய்தி - நீர்மடையிலுண்டாகிய வாளைமீன் அகிலம் புகை கமழ்கின்ற மருதநிலத்திற்கிடையிலுள்ள தங்களுடைய வளஞ்செறிந்த

நாட்டைச் சென்றடைந்து—ஆங்கு-அவ்விடத்தே—தொடைப்பட்ட திண்தோள் அறன் காளை துணைவரோடும் நடைப்பட்டு உருகி எதிர்கொள்ள - மாலையையணிந்த திண்ணிய புயங்களையுடைய தருமன் தம்பியரோடு நடந்து மனமுருகி எதிர்கொள்ள—நகரி புக்கான் - இந்திரப்பிரத்தநகரை அடைந்தான். எ-று.

மருதவேலி பண்புத்தொகை. அகில் ஆகுபெயர். வாளையகில்நாறுமென இடத்துநிகழ்பொருளின்றொழில் இடத்தின்மேலேற்றிக் கூறப்பட்டது. எவராலுங் கொண்டாடப்படும் போகமிக்க நாடென்பார் மடைப்பட்டவாளையகிலுறு மருதவேலியிடைப்பட்ட வளநாடென்றும், எவரையும் அச்சத்தோடு வணங்குவிக்குந் திண்ணிய புயமென்பார் தொடைப்பட்டதிண்டோள் என்றுங் கூறினார். தீர்த்தயாத்திரைசெய்தற்காக நெடுங்காலம் பிரிந்து வந்தமையிற் றுணைவரோடு தமையன் எதிர்கொண்டான் என்க. மடைப்பட்டவாளைகள் யாற்றோடுவரும் அகின்மணங் கமழும் நாடென்றல் இத்துணைச்சிறப்பின்று. (அ௩)

முன்போர்விளைத்தமுசலப்படைமொய்ம்பினுனுந்
தன்போலுயர்ந்தோரிலனான தடங்கண்மாலும்
பின்போயினியமொழியாயிரம்பேசிமன்றற்
கன்போடுதவுமுபசாரமனைத்துமீந்தார்.

(இ - ள்.) முன் போர் விளைத்த முசலப்படை மொய்ம்பினனும் - முன்னரே போரைச்செய்த கலப்பைப்படையையுடைய பலராமனும்—தன் போல் உயர்ந்தோர்இலன் ஆன தடம் கண் மாலும் - தன்னைப்போல உயர்ந்தோர் இலராகிய விசாலித்த கண்களையுடைய கிருட்டிணரும்—பின் போய் இனிய மொழி ஆயிரம் பேசி - பின்னரேசென்று இனிய மொழிக ளாயிரங்களைக் கூறி—மன்றற்கு அன்போடு உதவும் உபசாரம் அனைத்தும் ஈந்தார் - விவாகத்திற்கு அன்புடன் கொடுக்கற்பாலனவாகிய உபசாரப்பொருள்கள் முழுதையும் கொடுத்தார்கள். எ - று.

உபசாரம் ஆகுபெயர். மன்றலுடையார்க்குச் செய்யும் உபசாரத்தை மன்றன் மேலேற்றிக் கூறியது உபசாரம். அருச்சுனற்குப் பெண்கொடேனென்றுகொண்ட சூளுறவாற் கோபாவேசத்தனாய் அவனோடு போர்செய்து தோல்வியடைந்த பலராமன் என்பார் புகழ்வதுபோலப் பழித்து முன்போர்விளைத்த முசலப்படை மொய்ம்பினன் என்றும், தங்கைக்கும் நாயகற்கும் செய்யும் உபசாரங்களைச்செய்யாதொழியிற்றாங்கள் எவராலும் இழிக்கப்பட்டு நகையாடற்பாலரெனக் கருதி அது நிகழாவண்ணந் தமையனை உடன்படுமாறுசெய்து அவனிருக்கு மிடத்திற்போய் உபசாரமனைத்துஞ் செய்தற்கேதுவான யுத்திசாமர்த்திய ரென்பார் தன்போலுயர்ந்தோரிலனான தடங்கண்மாலென்றும், அருச்சுனன் பெண்கொள்ளத்தக்க கிழமைபூண்டோனாகவும் கொடாது மறுத்துழி அவன் அவண்மீதுகொண்ட வேணவாவினால் வலிந்து கொண்டுபோயினமை யறிந்துங்கடுஞ்சமர் புரிந்தாரேயெனப் பாண்டவர் கொண்ட மனக்கோபந் தீரும்வாயிலறிந்து அதற்குரிய இனியமொழிகளைக் கூறினாரென்பார் பின்போயினியமொழி யாயிரம்பேசியென்றுங் கூறினார். (அச)

ஞாலத்தெரிவைகளிகூரநடாத்துசெங்கோற்
றாலத்துவசன்றுவராபதிதன்னில்வைக
நீலக்கடல்களிரண்டாமெனநெஞ்சொடொத்த
சீலத்தவனோடவண்வைகினன்செங்கண்மாலே.

(இ - ள்.) ஞாலத் தெரிவை களிகூர - பூமிதேவி களிப்புமிக—செங்கோல் நடாத்து தாலத்துவசன் துவராபதிதன்னில் வைக-செங்கோலைச் செலுத்துகின்ற பனைக்கொடியையுடைய பலராமன் துவாரகாபுரியிலிருக்க—நீலக்கடல்கள் இரண்டு ஆம் என - (கண்டோர்) இரண்டு நீலக்கடல்கள் என்றுசொல்ல—நெஞ்சொடு ஒத்த சீலத்தவனோடு - தம் மனத்தோடியைந்த ஒழுக்கத்தையுடைய அருச்சுனனோடு—செம் கண் மால் அவண் வைகினன் - சிவந்த கண்களையுடைய கிருட்டிணர் ஆண்டே இருந்தார். எ - று.

ஏ - அசை. வைக வைகினன் என்றியையும். கடலென்னும் விசேடியம் எனைப் பால் தேன்முதலிய விசேடணங்களோடியையாமற் பிறிதோடியைபு நீக்கிய விசேடணங்கொடுத்து நீலக்கடல்களென்றார். இளையநம்பி, செங்கோலோச்சியரசாளா இளவரசாதலானும் தந்நெஞ்சிற்கியைந்த தோழனாகிய அருச்சுனனைப் பிரிதலாற்றாமையானும் இந்திரப்பிரத்தத்திலிருந்தார். செங்கோலோச்சி உலகாளுமரசனாகிய மூத்தநம்பி, தன்றேயத்தைநீங்கிப் பிறதேயத்திருப்பின் அதனால் உயிர்கள் கலங்கி மிகவருந்துமேயென்ற அருண்மிகுதியால் இந்திரப்பிரத்தத்தை விடுத்து விரைந்து துவாரகையை யடைந்திருந்தான். (அ௫)

பன்னாளிவரிப்பதிசேர்ந்தபின்பங்கசாத
மின்னாளுமார்பற்குயிர்போலும்விசயனென்பா
னன்னாளினன்மைதருமோரையினல்கவஞ்சி
யன்னாளிடத்திலபிமன்னுவவதரித்தான்.

(இ - ள்.) இவர் இப்பதி சேர்ந்த பல் நாட்பின் - இவர்கள் இந்நகரைச் சேர்ந்த பலநாளின்பின்—பங்கசாதமின் ஆளும் மார்பற்கு உயிர்போலும் விசயன் என்பான் - செந்தாமரையாசனியாகிய இலக்குமி ஆள்கின்ற மார்பினையுடைய கிருட்டிணருக்கு ஆன்மாவையொத்த அருச்சுனனானவன்—நல் நாளில் நன்மைதரும் ஓரையில் நல்க - சுபதினத்திலே சுபமுகூர்த்தத்திலே கருப்பாதானஞ் செய்ய—வஞ்சி அன்னாள் இடத்தில் அபிமன்னு அவதரித்தான் - கொடிபோல்வாளாகிய அச்சுபத்திரையினிடத்தே அபிமன்னு தோன்றினான். எ - று.

பங்கசாதமின்னாளுமார்பற் குயிர்போலும் விசயனென்பான் என்ற பெயரடையால் தன்வயத்தனாகாது சுபத்திரைவயத்தனாய்ப் பற்பலபோகங்களையும் நுகர்ந்தானென்பது பெறப்பட்டது. நற்றினத்திலே நல்லவோரையிலே கருப்பாதானஞ் செய்கவென்னும் நூல்விதிபிறழாமற் செய்தானென்க. வஞ்சியன்னாள் என்பதற்கு வஞ்சிக்கொம்பன்னாளென்றலும் ஒன்று. (அ௬)

வேதஞ்சிறக்கமநுநீதிவிளங்கவிப்பா
ராதங்கமாறவருமைவரினைவர்மைந்தர்
பூதங்களைந்திற்குணமைந்தும்பொலிந்தவாபோ
லோதங்கியிலுற்பவித்தாள்வயினுற்பவித்தார்.

(இ - ள்.) பூதங்கள் ஐந்தின் குணம் ஐந்தும் பொலிந்தவாபோல் - பிருதுவிமுதலிய பூதங்களைந்தினும் கந்தம்முதலிய குணங்களைந்தும் பொலிந்தவாறுபோல—வேதம் சிறக்க மநுநீதி விளங்க இப்பார் ஆதங்கம் மாற வரும் ஐவரின் - வேத ஒழுக்கஞ் சிறப்படையவும் மநுநீதிவிளங்கவும் இப்பூமியின் வருத்தமாறவும் பிறந்த பாண்டவரைவரால் — ஓது அங்கியில் உற்பவித்தாள்

வயின் - சொல்லப்படுகின்ற யாகாக்கினியிற் பிறந்த திரௌபதியின் வயிற்றினி ன்றும்—ஐவர் மைந்தர் உற்பவித்தார் - பஞ்சத்திரௌபதர்களாகிய புதல்வர்கள் பிறந்தார்கள். எ-று.

வேதம் ஆகுபெயர். இன்னுருபுகள் ஏதுப்பொருளில் வந்தன. பூதங்களைந் திற் குணமைந்தும் பொலிந்தவாபோலென்பது தொழிலுவமை. செயவெனெச்சங் கள் காரண காரியப்பொருளவாய் நின்றன. இராக்கதர் அசுரர் முதலியோரே துரி யோதனாதியராயவதரித்து வேதவொழுக்க முதலியவற்றைக் கெடுத்துப் பூமிக்குப் பாரமாயிருந்ததனால், அவரையழித்துப் பூபாரந்தீர்க்கப் பாண்டவரவதரித்தார் என் பார் வேதஞ்சிறக்கமநுநீதி விளங்கவிப்பா ராதங்கமாறவருணமவரென்றும், எவரா லும்புகழ்ந்து பேசப்படும் யாகாக்கினியென்பார் ஓதங்கியென்றுங் கூறினார். தருமன் முதலிய ஐவர்க்கும் முறையே பிரதிவிந்தியன், சுருதசோமன், சுருதகீர்த்தி, சதா னிகன், சுருதசேனன் என ஐவர் திரௌபதியின்வயிற்றிலவதரித்தாரென்க. (அஎ)

அம்மாதுலனும்பயந்தோருமழகின்மிக்க
விம்மாமகாருக்கியற்றும்விதியெய்ந்தபின்னர்த்
தெம்மாறுவின்மைமுதலாயசெயல்கள்யாவுங்
கைம்மாறுகொண்டுநனிகைவருமாறுகண்டார்.

(இ - ள்.) அழகில் மிக்க இம் மா மகாருக்கு-அழகிற்சிறந்த இந்தப் பெருமை யையுடைய புதல்வர்களுக்கு—அம் மாதுலனும் பயந்தோரும் - அந்த மாதுலரா கிய கிருட்டிணரும் பெற்ற பாண்டவர்களும்—இயற்றும் விதி எய்ந்த பின்னர் - செய்யும் நியதிகளைச் செய்துமுடித்தபின்—தெம் மாறு வின்மை முதலாய செய ல்கள் யாவும் - பகையை நீக்குதற்கேதுவாகிய வில்முதலியவற்றின் றொழில்களை யெல்லாம்—கை மாறு கொண்டு நனி கைவருமாறு கண்டார் - கையிற் பிரம் பைக்கொண்டு மிகவும் கைவரும்படி பழக்கினார்கள். எ - று.

மாறென்னும் வினைத்தொகை வின்மையென்னும் ஏதுப்பெயர்கொண்டது. மாதுலனும் பயந்தோரும் மாறுகொண்டு கைவருமாறு கண்டார் என்றியையும். தநுர்வேதமுதலியன கற்றற்குச் சிறந்த சாதனமாகிய யுத்திமுதலியன இப்புதல்வர் க்குச் சிறிதுங் குறைவற்றிருப்பினும், பாலியதசையுடையராதலின் அவற்றினரு மையும் பெருமையுந் தெரியாது விளையாட்டினூக்கஞ்செலுத்தி மிகப்பராமுகஞ்செ ய்வராதலின், அது நிகழவொட்டாது தடுத்தற்குக்கையிற் பிரம்பைக்கொண்டா ரென்க. இயற்றும் விதியாவன: உபநிட்டானம் அன்னப்பிராசனம் சௌளம் முத லியன. (அஅ)

அரிதிற்பயந்தவறுவோருளுமாண்மைதன்னு
ளிருதுக்களின்மேலிளவேனிலின்றேற்றமெய்ப்ப
மருதுக்கிடைபோமதுசூதன்மருகன்வெம்போர்
விருதுக்கொருவனிவனென்னவிளங்கினனே.

(இ - ள்.) அரிதில் பயந்த அறுவோருளும் - அரிதாகப்பெற்ற ஆறுபுதல்வரு ள்ளும்—மருதுக்கு இடை போம் மதுசூதன் மருகன் - மருதமரங்களுக்கு இடையே தவழ்ந்துசென்ற கிருட்டிணருடைய மருகனாகிய அபிமன்—இருதுக்களின் மேல்

இளவேனிலின் தோற்றம் ஏய்ப்ப-இருதுக்களின் மேலாகிய இளவேனிலின் றோற்றத்தைப்போல—ஆண்மைதன்னால் வெம் போர் விருதுக்கு இவன் ஒருவன் என்ன விளங்கினான் - ஆண்டகைமையினாலே கொடிய போர்வென்றிக்கு இவன் ஒருவனேயென்றுகூற விளங்கினான். எ - று.

ஏ - அசை. போகும் என்னும் பெயரெச்சத்துயிர்மெய் கெட்டது. மருதுக்கிடைபோம்மதுசூதன்மருகன் என்ற பெயரடையால் வெம்போர் விருதுக்கொருவனாதற்கேதுக் கூறியவாறு. அறுவோருளும் ஆண்மைதன்னால் மதுசூதன் மருகன் சிறந்தானெனவே ஏனையவருஞ் சிறவாத் தூர்ப்பலமுடையரென்பது போதருமன்றே அங்ஙனம் போதராது அவரும் மாற்றார்முனை முருக்கு மாற்றலுடையரென்பது போதர அரிதிற்பயந்தவென விசேடித்தார். குபேரனுடைய புத்திரர்களாகிய நளகூபரன் மணிக்கிரீபன் என்னும் இருவரும் நாரத முனிவருடைய சாபத்தினால் முப்பத்தாறாயிரம்வருடம் இரு மருதமரமாய் வருந்தினவர்கள், பின்பு அம்முனிவர் கிருட்டிணரால் இச்சாபம் நீங்கும் என்று சொல்லியபடியே கிருட்டிணர் உரலோடு தவழ்ந்து ஊடாகச் செல்லும்பொழுது அம்மரவடிவ நீங்கிச் சாபந்தீர்ந்தார் என்பது கதை. (அகூ)

உரனாலழகாலுரையான்மற்றுவமையில்லா
நரநாரணர்க்குநலங்கூர்தருநண்புபோல்வா
னரனார்விழியாலழிந்தங்கமநங்கமான
மரனாருடனண்பிசைந்தன்றுவசந்தகாலம்.

(இ - ள்.) உரனால் அழகால் உரையால் மற்று உவமையில்லா நரநாரணர்க்கு நலம் கூர்தரு நண்புபோல் - வலியினாலும் அழகினாலும் சொல்லினாலும் வேறுவமையில்லாத கிருட்டிணருக்கும் அருச்சுனனுக்குமுள்ள நலம்மிகுந்த நண்பைப்போல—வான் அரனார் விழியால் அழிந்து அங்கம் அநங்கமான மரனாருடன்- பெருமையினையுடைய சிவபிரானது கண்ணினாலே வெந்து சரீரம் அருவமான மன்மதனாரோடு—வசந்தகாலம் நண்பு இசைந்தன்று - வசந்தகாலம் நட்பைப்பொருந்திற்று. எ-று.

இசைந்தன்றென்பது அன்சாரியைபெற்ற உடன்பாட்டுத் தெரிநிலைவினைமுற்று. இல்லாத என்னும் பெயரெச்சத்தீறு தொக்கது. அரனார் என்பது உயர்த்தற்கண்ணும் மரனாரென்பதிழித்தற்கண்ணும் வந்தன. நரநாரணர்க்குள்ள நண்புபோல வசந்தகாலம் மரனாரோடு நண்பிசைந்ததென்க. உரனாலழகாலுரையான்மற்றுவமையில்லா நரநாரணரெனவே இவற்றில் தமக்குத் தாமே நிகர்த்தவரென்பது பெறப்பட்டது. எவரையும் மாலுறுக்கும் மதனன் மயக்கின்பாற்படாது அவனையெரித்த பேராற்றலுடையரென்பார் வானரனாரென்றார். நண்புபோலவென்றும் பாடம். (கூo)

ஆ செய்யுள் - எசச.

அருச்சுனன்றீர்த்தயாத்திரைச்சருக்க முற்றிற்று.

---

# காண்டவதகனச்சருக்கம்.

நனியாடலனற்கடவுள்யமனிருதிநண்ணுதிசைநாள்கடோறு, முனி யாமனடந்திளைத்துமுன்னையினும்பரிதாபமுதிர்ந்ததென்று, தனியாழி த்தனிநெடுந்தேர்த்தனிப்பச்சைநிறப்பரியைச்சயிலராசன், பனியாலவ் விடாய்தணிப்பான்பனிப்பகைவன்பனிசெய்வோன்பக்கஞ்சேர்ந்தான்.

(இ - ள்.) பனிப்பகைவன் - பனிக்குப் பகைவனாகிய சூரியனானவன்—பரி - தன்குதிரையானது—நனி ஆடல் அனற் கடவுள் யமன் நிருதி நண்ணுதிசை நாள்கள்தோறும் முனியாமல்நடந்து இளைத்து - மிகுந்த வென்றியினையுடைய அக்கினி தேவன் யமன் நிருதி என்னும் இவர்கள் இருக்கின்ற திக்குகளிலே நாள்கடோறும் வெறாமல் நடந்து இளைத்தலால்—முன்னையினும் தாபம் முதிர்ந்தது என்று-முன்னையினும்பார்க்கத் தாகத்தால் முதிர்ந்ததென்று கருதி—தனி ஆழித் தனி நெடும் தேர்த் தனிப் பச்சைநிறப் பரியை - ஒருருளையையுடைய ஒன்றாகிய நெடியதேரிற் பூட்டிய தனித்த பச்சைநிறத்தையுடைய அக்குதிரைக்கு—சயிலராசன் பனியால்- இமயமலையிலுள்ள பனியினாலே—அவ்விடாய் தணிப்பான் - அவ்விடாயை நீக்குதற்பொருட்டு—பனி செய்வோன் பக்கம் சேர்ந்தான் - அம்மலையின் பக்கத்தை அடைந்தான். எ - று.

இளைத்தென்னுஞ் செய்தெனெச்சங் காரணப்பொருட்டு. பரியை என்பது வேற்றுமைமயக்கம். சயிலராசன், பனிசெய்வோன் என்பனவற்றில் சயிலம் என்னும் அஃறிணைச்சொல்லை ராசன் என்னும் பெயராலும் செய்வோன் என்னும் வினையாலும் உயர்திணையாண்பாலாக்கிக் கூறியது வடமொழிமதம். இச்செய்யுள் பெயர்பொருட்டற்குறிப்பேற்றமென்னும் அலங்காரமுஞ் சொற்பொருட்பின்வருநிலை யென்னும் அலங்காரமுங் கொள்ளக் கிடந்தது. சூரியன் தக்ஷிணாயனத்தை விட்டு உத்தராயணத்தில் வந்தானென்பது கருத்து. நனியாடலென்னும் விசேடணத்தை ஏனையிருவர்க்குமேற்றி எவற்றையும் முருக்கவல்ல அனலெனவும் எத்துணைப் பேராற்றலுடையாருயிரையுங் கவரவல்ல கண்ணோட்டம் இல்லாயமன் எனவும் வலியிற் சிறந்த இரக்கமில்லா அரக்கனை நிருதியெனவும் அகலங்கொள்க. உயர்ந்தசாதிக்குதிரை நெருப்பு நீர்முதலியவற்றிலுந் தான்பயின்ற நிலம்போல உவப்புடன் செல்லுதலியற்கையென்பார் முனியாமனடந்து என்றார். (க)

கலக்கமுறவிளவேனிற்கலகமெழுந்திடும்பசுந்தண்காவுதோறுஞ்
சிலைக்கணிநாண்முறுக்குவபோற்றென்றலின்பின்சுழலளிகள்சேரவோட
வுலைக்கனலிற்கருங்கொல்லன்சிறுகுறட்டாற்றகடுபுரிந்தொதுக்கிமாரன்
கொலைக்கணைகள்சமைப்பனபோற்குயிலலகாற்பல்லவங்கள்கோதுமாலோ.

(இ - ள்.) கலக்கம் உற இளவேனில் கலகம் எழுந்திடும் பசும் தண் காவுதோறும் - கலக்கமுண்டாக இளவேனிற்குரிய கலகம் எழுகின்ற பசிய குளிர்ந்தசோலை தோறும்—சிலைக்கு அணி நாண் முறுக்குவபோல் தென்றலின்பின் சுழல் அளிகள் சேர ஓட - (மன்மதனுடைய) வில்லிற்கு அழகியநாணை முறுக்குதல்போலத்தென்றற்காற்றின் பின்னரே சுழல்கின்ற வண்டுகள் ஒருசேர ஓட—கரும் கொல்லன்

உலைக்கனலில் தகடு புரிந்து சிறுகுறட்டால் ஒதுக்கி - கரிய கொல்லனானவன் உலைமுகத்துள்ள அக்கினியில் தகட்டைச் செய்து சிறு குறட்டினாலே ஒதுக்கி— மாரன் கொலைக் கணைகள் சமைப்பனபோல் - மன்மதனுக்குரிய கொலைத்தொழிலைச்செய்யும் பாணங்களை உண்டாக்குதல்போல—குயில் அலகால் பல்லவங்கள் கோதும் - குயில்கள் அலகினாலே தளிர்களைக் கோதாநிற்கும். எ - று.

ஆல், ஓ அசைகள். கருங்கொல்லன் சாதியடை. முறுக்குவ, சமைப்பன என்னுமிரண்டும் அஃறிணைப்பன்மை யுணர்த்தாது முறுக்குதல், சமைத்தல் என்னுந் தொழில்களையுணர்த்தி நின்றன. கா என்பது "கிளந்தவல்ல" என்னும் அதிகாரப் புறநடையால் உகரச்சாரியைபெற்றுக் காவு என நின்றது. கருங்கொல்லன் குயிலாகவுஞ் சிறுகுறடு அதனலகாகவும் உலைக்கனல் தளிராற் செம்மைபெற்ற மரச்செறிவாகவும் பரந்ததகடு விரிந்த தளிராகவும் ஒதுக்குதல் அலகால் அதனைச் சுருட்டிக் கோதுதலாகவுங் கொள்க. நறுமணமளாவிவருதலின் அதனை நுகர்தற்குத் தென்றலின்பின் அளிகள் சேரவோடினவென்க. (௨)

செங்காவிசெங்கமலஞ்சேதாம்பறடந்தொறுமுத்தீகளாகப்
பைங்காவினெடுஞ்சினைக்கைமலர்நறுந்தேனாகுதிகள்பலவும்வீழ்க்க
வுங்காரமதுகரங்களோங்காரச்சுருதியெடுத்தோதவேள்வி
வெங்காமனிரதியுடன்புரிந்துதனதென்றலந்தேர்மேற்கொண்டானே.

(இ - ள்.) தடம்தொறும் செம் காவி செம் கமலம் சேதாம்பல் முத்தீகளாக - தடாகங்களாகிய ஓமகுண்டங்கடோறும் செங்குவளைமலர்களும் செந்தாமரைமலர்களும் செவ்வாம்பன்மலர்களும் மூன்றக்கினிகளாக—பைங்காவின் நெடும் சினை மலர்க்கை நறும் தேன் ஆகுதிகள் பலவும் வீழ்க்க - பசிய சோலையின் நெடியசினையிலுள்ள மலராகிய கை நறிய தேனாகிய ஆகுதிகள் பலவற்றையுஞ் சொரிய—மதுகரங்கள் உங்கார ஓங்காரச் சுருதி எடுத்து ஓத - வண்டின் கூட்டங்களாகிய அந்தணர்கள் உங்காரமாகிய பிரணவத்தை முதலாகவுள்ளவேதத்தை எடுத்துக்கூற— வெங்காமன் இரதியுடன் வேள்வி புரிந்து - விருப்பத்தைத்தருகின்ற மன்மதன் இரதியோடு யாகத்தைச் செய்து—தன தென்றல் அம் தேர் மேற்கொண்டான் - தனது தென்றலாகிய அழகிய தேரின்மீது ஏறினான். எ - று.

ஏ - அசை. செங்காவி முதலிய மூன்றும் ஆகுபெயர். தனதென்றலந்தேர் என்புழி அகரவுருபு அஃறிணையொருமைக்கண் வந்தது. ஆக வீழ்க்க ஓதப் புரிந்து மேற்கொண்டானென வினைமுடிபுசெய்க. மலர் முன்கையாகவுஞ் சினை ஏனைக்கையாகவுங் கொள்க. இச்செய்யுள் குறிப்புருவகமென்னும் அலங்காரங்கொள்ளக் கிடந்தது. உதாத்த அநுதாத்த சுவரிதம் என்னும் ஓசை விகற்பமுண்டாக வேதமோதலியல்பாதலின் எடுத்தோத என்றார். யாககர்த்தர்கள் அவ்வியாகமுடிவிற் றேவியரோடு தேரேறி வலம்வரல் இயல்பாதலிற் காமனும் இரதியோடு தேரேறி வலம்வந்தானென்க. வெங்காமன் என்பதற்கு எவரையும் நல்வழிக்கட் செல்லவிடாது காமமாகிய தீவழிக்கட் செலுத்தலிற் கொடிய காமனெனப்பொருள்கோடலும் ஒன்று. முத்தீகளாவன: ஆகவநீயம், காருகபத்தியம், தக்ஷிணாக்கினி என்பனவாம். (௩)

தேவியருந்திருமாலுஞ்செழுமலர்த்தார்த்தனஞ்சயனுந்தேவிமாரு
மேவியனந்தரம்வேனில்விழவயர்வான்முரசறைந்துவீதிதோறு
மோவியமுமுயிர்ப்பெய்தவுபேந்திரனுமிந்திரனுமுவமைசாலப்
பூவினமுஞ்சுரும்புமெனப்புரமுழுதும்புறப்படவண்பொங்கர்சேர்ந்தார்.

(இ - ள்.) திருமாலும் தேவியரும் - கிருட்டிணரும் மனைவியரும்—செழுமலர்த் தார்த் தனஞ்சயனும் தேவிமாரும் - செழுமையாகிய மலர்மாலையை அணிந்த அருச்சுனனும் தேவியரும்—உபேந்திரனும் இந்திரனும் உவமை சாலமேவி-உபேந்திரனும் இந்திரனும் தமக்கு உவமை அமையத் (தத்தம் மாளிகையைவிட்டு ஒருசேரக்) கூடி—அனந்தரம் வேனில் விழவு அயர்வான் வீதிதோறும் முரசு அறைந்து - அதன்பின் வேனிற்காலத்திற்குரிய விழாவைக் கொண்டாடும்படி வீதிகடோறும் முரசை அடிப்பித்து—ஓவியமும் உயிர்ப்பு எய்த - சித்திரமும் (தம்மைக் கண்டு) பெருமூச்சுவிட—பூவினமும் சுரும்பும் என - பூவின்கூட்டத்தையும் அவற்றில் வீழ்கின்ற வண்டுகளையும்போல—புரம் முழுதும் புறப்பட-நகரத்துள்ளாரனைவருந் தம்மைத் தொடர்ந்து புறப்பட—வண் பொங்கர் சேர்ந்தார் - வளவிய சோலையை அடைந்தார்கள். எ - று.

ஓவியமும் என்னும் உம்மை சிறப்போடெச்சம். பூவைச் சுரும்பு தொடருமாறுபோல இவரை நகரந் தொடர்தலாற் பூவினமுஞ் சுரும்புமென வென்பது தொழிலுவமை. புரம் ஆகுபெயர். அறைந்து என்பதிற் பிறவினைப் பொருளுணர்த்தும் விவ்விகுதி தொக்குநின்றது. ஓவியமும் உயிர்ப்பெய்தப் பொங்கர் சேர்ந்தார் புரமுழுதும் புறப்படப் பொங்கர்சேர்ந்தாரெனத் தனித்தனியியையும். உவமை சால மேவி அறைந்து சேர்ந்தாரென வினைமுடிபுசெய்க. மகளிர் கொண்டாடத்தகும் நாகரீகமுடையனென்பார் செழுமலர்த்தார்த்தனஞ்சயன் என்றும், இவ்விருபாலாரையும்போல யாமும் பேரழகோடுயிர்படைத்துக் காமச்சுவை யனுபவிக்கப் பெற்றிலேமேயென நைந்துருகினவென்பார் ஓவியமுமுயிர்ப்பெய்தவென்றுங் கூறினார். தம்முட்பெருமை சிறுமை கருதாது தேவியரோடு பொழில்விளையாடலும் இருவர்மனமும் ஒருவர்மனம்போற் கலத்தலும் இருவர் நிறமும் ஒரேநிறமாயிருத்தலு மாகிய சம்பந்தம்பற்றி இவர்க்கு உபேந்திரனையும் இந்திரனையும் உவமையாகக் கூறினார். இவர்கள் சேர்ந்தசோலை யமுனாநதி தீரத்துள்ள சோலை. (௬)

கொண்டலெழமின்னுடங்கக்கொடுஞ்சாபம்வளைவுறச்செங்கோபந்தோன்ற
வண்டளவுநறுங்குமிழும்வண்டணிகாந்தளுமலரமலைகடோறுந்
தண்டரளவருவிவிழத்தையலார்வடிவுதொறுஞ்சாயற்றோகை
கண்டுநமக்கிளவேனில்கார்காலமானதெனக்களிக்குமாலோ.

(இ - ள்.) தையலார் வடிவுதொறும் - பெண்களுடைய வடிவங்கடோறும்—கொண்டல் எழ - அளகமாகிய முகில் எழ—மின் நுடங்க - இடையாகிய மின்னல் அசைய—கொடும் சாபம் வளைவு உற-புருவமாகிய கொடிய இந்திரதனுவளைய—செம் கோபம் தோன்ற - அதரமாகிய சிவந்த இந்திரகோபம் விளங்க—வண் தளவும் நறும் குமிழும் வண்டு அணி காந்தளும் மலர - அழகிய பல்லாகிய முல்லையரும்பும் மூக்காகிய நல்ல குமிழம்பூவும் வளையலையணிந்த கையாகிய காந்தண்மலரும் தோன்ற—மலைகள்தோறும் தண் தரள அருவிவிழ - தனமாகிய மலைகடோறும்

குளிர்ந்த முத்துவடமாகிய அருவி தாழ—சாயல் தோகை கண்டு - மென்மையை யுடைய மயில்கள் அவற்றைப் பார்த்து—நமக்கு இளவேனில் கார்காலம் ஆனது எனக்களிக்கும் - எங்களுக்கு இளவேனிற்காலம் கார்காலமானதென்று களிப் படையும். எ - று.

ஆல், ஒ அசைகள். தையலார்வடிவுதொறும் எழ நடங்க வளைவுற தோன்ற மலர விழக் கண்டு களிக்குமென வினைமுடிபுசெய்க. கொண்டல் எழுதன்முதலி யன கார்காலத்திற்குரிய குறியென்க. ஐம்புலன்வழிச்செல்லா முனிவரையுந் தம் வயமாக்கும் மூரற்குச் சிறந்தகருவி பல்லென்பார் வண்டளவு என்றும், கண்முத லிய அங்கங்கள் சிறப்புற்றிருப்பினும் மூக்கில்வழி முகஞ் சிறவாமையின் முகத் தைச் சிறப்பித்தற்குச் சிறந்தகருவி மூக்கென்பார் நறுங்குமிழென்றும், ஆடவரைத் தம்வயமாக்கும் ஆலிங்கனமுதலியவற்றிற்குச் சிறந்தகருவிகையென்பார் வண்டணி காந்தளெனவும் அடைபுணர்த்திக் கூறினர். இச்செய்யுள் மயக்கவணி கொள்ளக் கிடந்தது. மலர என்பது ஈண்டுத் தோன்ற என்னும் பொருட்டு. (ரு)

பாராமனகையாமற்பாடாமலாடாமற்பாதஞ்செங்கை
சேராமன்முகராகம்வழங்காமலிகழாமற்செவ்வாயூற
னேராமனிழலதனை நிகழ்த்தாமன்மலர்ந்தழகுநிறைந்தநீழ
லாராமந்தொறுந்தங்களவயவம்போல்வனகொய்தாரணங்குபோல்வார்.

(இ - ள்.) அணங்குபோல்வார் - தெய்வமகளிர்போன்ற பெண்கள்—பாரா மல் - (தாங்கள்) பாராமலும்—நகையாமல் - சிரியாமலும்—பாடாமல் - பாடாம லும்—ஆடாமல் - ஆடாமலும்—பாதம் செம் கை சேராமல் - காலையுஞ் சிவந்த கையையுஞ் சேராமலும்—முகராகம் வழங்காமல் - நட்புச் செய்யாமலும்— இகழாமல் - இகழாமலும்—செவ் வாய் ஊறல் நேராமல்-சிவந்த வாயினாலே சுவையாமலும்—நிழலதனை நிகழ்த்தாமல் - நிழலைச்செய்யாமலும்—மலர்ந்து அழகு நிறைந்த நீழல் ஆராமம்தொறும் - மலர்ந்து அழகுநிறைந்த நீழலையுடைய சோலைக டோறும்—தங்கள் அவயவம்போல்வன கொய்தார்-தங்களுடைய அவயவம்போல் வனவாகிய மலர்முதலியவற்றைக் கொய்தார்கள். எ - று.

பாதஞ்சேராமலுஞ் செங்கைசேராமலுமெனத் தனித்தனியியைத்து உதை யாமலும் அணையாமலும் எனப் பொருள்கொள்க. இளவேனிலாதலி னித்தொழி ல்களானலரா தியல்பாயலர்ந்தனவென்க. பொழிற்கண் விளையாட்டாற் பிரிந்து தனித்தனியே நிற்றலுந் திவ்விய சரீரகாந்தியுடைமையும் மலர் முதலியவற்றில் வைத்த ஆசையினல் அவற்றை இமையாது நோக்கலும்பற்றி அணங்குபோல்வார் என்றார். மா பார்க்க, முல்லை நகைக்க, குருக்கத்தி பாட, புன்னை ஆட, அசோகு உதைக்க, குரா அணைக்க, பாலை நட்க, பாதிரி இகழ, மகிழ்சுவைக்க சண்பகம் நிழல்பட அலர்வனவாம். பார்க்க அலர்வது மரா என்பாரும் மஞ்சாடி என்பாரு முளர். முகராகம் ஒருசொல்லாய் நட்பை உணர்த்திற்று. (சு)

மாற்றுதபனிநீரான்மான்மதகுங்குமமலயவாசச்சந்தின்
சேற்றாலச்சோலையெலாஞ்செங்கழுநீர்த்தடம்போன்றசிந்தைத்தாப
மாற்றுதகாதலருக்கமுதானவிளநீரலடர்ந்தபூகத்
தாற்றலும்மரகதசெந்துகிராலப்பொழில்போன்றதடங்களெல்லாம்.

(இ-ள்.) அச் சோலை எலாம் - அந்தச்சோலைமுழுதும்—மாற்றாத பனி நீரால்- நீங்காத பனிநீரினாலும்—மான்மத குங்கும மலய வாசச் சந்தின் சேற்றால் - கஸ்தூரியுங் குங்குமமுமாகிய இவை கலந்த பொதியமலையிலுள்ள வாசனைபொருந்திய சந்தனக் குழம்பினாலும்—செங்கழுநீர்த் தடம்போன்ற - செங்கழுநீர்த் தடாகங்களையொத்தன—தடங்கள் எல்லாம் - தடாகங்களெல்லாம்—சிந்தைத் தாபம் ஆற்றாத காதலருக்கு அமுது ஆன இளநீரால் - மனவேட்கையைத் தாங்கமாட்டாத நாயகர்களுக்கு அமுதான முலையென்னும் இளநீர்களினாலும்—அடர்ந்த பூகத்தாற்றால் - நெருங்கிய அளசமாகிய கமுகம்பாளைகளினாலும்– அம் மரகத செம் துகிரால் - அழகிய மரகதமுஞ் சிவந்த பவளமுமாகிய காய்ப்பாக்குப் பழப்பாக்குக்களினாலும்—அப் பொழில் போன்ற - அந்தச் சோலையையொத்தன. எ - று.

மாற்றாத என்பது ஈண்டுத் தன்வினை. மான்மதகுங்குமம், மரகதசெந்துகிர் என்பன வடநூன்முடிபு. நீரில் நவமணிகளுமுளவாதலிற் றடாகத்தில் மரகதமும் பவளமும் உளவென்றார். மகளிர் கூந்தற்குப் பூகத்தாறு உபமானமென்க. இரட்டுற மொழிதலான் மனத்தில் விடாயைத் தாங்கமுடியாத நீர்வேட்கையுடையார்க்கென இள நீர்க்கியையவும் பொருள்கொள்க. (எ)

மெய்கொண்டமொழிவிசயன்மெய்யினெழிலிமையாமன்மேன்மே
னோக்கு, மைகொண்டகுழலொருத்திமற்றவன்செங்கையிற்சிவிறிம
ழைகண்டஞ்சிப், பொய்கொண்டுவகுத்தனையமருங்கசையத்தனபாரம்
புளகமேறக், கைகொண்டுமுகம்புதைத்துத்தன்விரற்சாளரங்களிலேக
ண்கள்வைத்தாள்.

(இ - ள்.) மெய் கொண்ட மொழி விசயன் மெய்யில் எழில் - உண்மை பொருந்திய வசனத்தையுடைய அருச்சுனனது சரீரத்தின் அழகை—இமையாமல் மேல் மேல் நோக்கும் மைகொண்ட குழல் ஒருத்தி - இமையாமல் மேலும் மேலும் பார்க்கின்ற கருமைபொருந்திய அளகத்தையுடைய ஒருபெண்ணனவள்—அவன் செம் கையில் சிவிறிமழை கண்டு அஞ்சி - அவனது சிவந்த கையிலுள்ள நீர்தூவுந் துருத்தியினின்று வரும் நீர்மாரியைக் கண்டு பயந்து—பொய்கொண்டு வகுத்தனைய மருங்கு அசைய - பொய்யினாற் செய்தாலொத்த இடை தள்ளாட—தனபாரம் புளகம் ஏற-முலைகள் ரோமாஞ்சங்கொள்ள—கைகொண்டுமுகம் புதைத்து - கையினால் முகத்தைப் பொத்தி—தன் விரல் சாளரங்களில் கண்கள் வைத்தாள் - தன்விரல்களின் இடைவெளிகளாகிய பலகணிகளில் கண்களை வைத்துப் பார்த்தாள். எ - று.

மற்று, ஏ அசைகள். விரல் ஆகுபெயர். அசைய ஏறக் கண்கள் வைத்தாளென்றியையும். பொய்கொண்டு வகுத்தனைய என்பது இல்பொருளுவமை. மெய்கொண்டமொழிவிசயன் என்ற பெயரடையால் அவன் ஆடவரெவரினுஞ் சிறந்தானென்பதும், மைகொண்ட குழலொருத்தியென்ற பெயரடையால் அவள் மகளிரெவரினுஞ் சிறந்தாளென்பதும் பெறப்பட்டன. (அ)

நங்கையங்கோர்கொடியனையாள்வதனமதிசலமதியாய்நடுங்குமாறு
பங்குனன்றன்றிருச்செங்கைப்பங்கயத்தின்சிவிறியினாற்பரிவுகூரக்
குங்குமங்கொள்புனல்விடவுமிமையாமற்புனல்வழியேகூர்ந்தபார்வை
செங்கலங்கற்புதுப்புனலுக்கெதிரோடிவிளையாடுஞ்சேல்கள்போலும்.

(இ - ள்.) பங்குனன் - அருச்சுனனானவன்—அங்கு ஓர் கொடி அனையாள் நங்கை வதன மதி - அவ்விடத்தில் ஒரு கொடிபோன்ற பெண்ணினுடைய முக மாகிய சந்திரன்—சல மதியாய் நடுங்குமாறு - நீரிலுள்ள சந்திரனாய் அசையும் படி—தன் திருச் செம் கைப் பங்கயத்தின் சிவிறியினால் - தனது அழகிய சிவந்த கையாகிய தாமரைமலரிலுள்ள நீர்தூவுந் துருத்தியினால்—பரிவு கூர - (அவளுக்கு) விருப்பம்மிக—குங்குமங்கொள் புனல் விடவும் - குங்குமத்தைக் கரைத்த நீரைத் தூவவும்—இமையால் புனல்வழியே கூர்ந்த பார்வை - இமையாமல் நீரின்வழியே நுண்ணிதாய்ப் பார்த்த அவளுடைய கண்கள்—செம் கலங்கல் புதுப் புனலுக்கு எதிர் ஓடி விளையாடும் சேல்கள்போலும் - சிவந்த கலங்கலையுடைய புதுநீருக் கெதிரே ஓடி விளையாடுகின்ற சேல்மீன்கள் போலும். எ - று.

விடவும் என்னும் உம்மை சிறப்பு. அனையாள் பெயரெச்சமுற்று. நடுங்குமா று விடவும் பரிவுகூர விடவும் எனத் தனித்தனியியையும். நங்கை ஓர் கொடிய னையாள் என்ற பெயரடையால் வதனமதி நடுங்குதற்கேது பெறப்பட்டது. குங்கு மங்கொள்புனல் செங்கலங்கற் புதுப்புனலாகவும் எதிராய்ப் பார்த்த கண்கள் அப்புதுப்புனலுக்கெதிரோடி விளையாடுஞ் சேல்களாகவுங் கொள்க. இது பண் போடு தொழில்பற்றி வந்த உவமை. தன்னாற் காதலிக்கப்பட்ட அருச்சுனன்கைச் சிவிறிநீர் முகத்திற்பட்டுழி அவன் கையாற்றீண்டியதுபோல் அவட்கின்பஞ் செய்ததென்பார் பரிவுகூர என்றார். பரிவுகூர என்பதற்கு வருத்தமிகவெனப் பொருள்கோடல் இத்துணைச் சிறப்பின்று. (௬)

நறைகமழ்தண்டுழாய்மாலைநாரணற்குநண்பானநரனார்செங்கை [வை
யுறையுமலர்ச்செந்திருவுமொவ்வாதபொற்புடையாளொருபொற்பா
நெறிதருபைங்குழலின்மிசைவீசியநீர்பெருக்காற்றினிறைநீர்வற்றி
யறல்படுநுண்கருமணலினரித்தொழுகுஞ்சின்னீரோடமைந்ததம்மா.

(இ - ள்.) நறை கமழ் தண் துழாய் மாலை நாரணற்கு நண்பு ஆன நரனார் - மணங்கமழுங் குளிர்ந்த துழாய்மாலையணிந்த கிருட்டிணருக்குச் சிநேகனான அருச்சுனனானவன்—செம் கை - தன் சிவந்த கையினால்—மலர் உறையும் செம் திருவும் ஒவ்வாத பொற்பு உடையாள் - தாமரை மலரிலிருக்கும் இலக்குமியும் ஒவ் வாத அழகையுடையாளாகிய—ஒரு பொற்பாவை நெறிதரு பைங்குழலின் மிசை வீசிய நீர் - ஒரு கொல்லிப்பாவைபோல்வாளது நெறிப்பையுடைய பசிய அளகத் தின்மேல் வீசிய நீர்—பெருக்கு ஆற்றில் நிறை நீர் வற்றி - பெருக்கையுடைய ஆற்றில் நிறைந்தநீர் வற்றி—அறல் படு நுண் கருமணலின் அரித்து ஒழுகும் சில் நீரோடு அமைந்தது - இடையிடுதலைப்பொருந்திய நுண்ணிய கருமணலில் அரித் துப்பாய்கின்ற அற்ப நீரோடு ஒத்தது. எ - று.

அம்மா - அசை. செந்திருவும் என்னும் உம்மை சிறப்பு. பொற்புடையாள் பெயரெச்சமுற்று. அறல் - அறுதல்; அது இடையிடுதல் என்னும் பொருட்டு. நெறிதருபைங்குழற்கியைய அறல்படு நுண்கருமணலென்றார். நாரணற்கு நண்பா னநரனார் என்னும் பெயரடையால் சலக்கிரீடையில் வல்லனென்பதும், செந்திரு வும் ஒவ்வாத பொற்புடையாளொரு பொற்பாவை என்ற பெயரடையால் அவ

னோடாடற்கியைந்த சாதுரியமுடையளென்பதும் அவனாற் காதலிக்கப்படத் தக்காளென்பதும் பெறப்பட்டன. (௧௦)

விளிந்துமயில்புறங்கொடுக்குமெல்லியலாளொருத்திநெடுவேயும்பாகுஞ்
சுளிந்துவருங்கடகளிற்றுச்சுவேதவாகனன்கடகத்தோளின்மீது
தெளிந்தநறுங்கத்தூரிச்சேறுபடுசிவிறியினீர்சிந்துந்தோற்றங்
களிந்தகிரிமிசைக்கடவுட்காளிந்திபரந்ததெனக்கவினுமாதோ.

(இ - ள்.) மயில் விளிந்து புறம்கொடுக்கும் மெல்லியலாள் ஒருத்தி - மயில் தோற்றுப் புறங்கொடுக்கின்ற மெல்லிய சாயலையுடைய ஒரு பெண்ணானவள் — நெடு வேயும் பாகும் சுளிந்துவரும் கடகளிற்றுச் சுவேதவாகனன் கடகத்தோளின்மீது - நெடிய முட்கோலையும் பாகனையுங் கோபித்து வருகின்ற மதம் பொருந்திய யானையையுடைய அருச்சுனனது கடகத்தையணிந்த புயங்களின் மேல்— தெளிந்த நறும் கத்தூரிச் சேறுபடு சிவிறியில் நீர் சிந்தும் தோற்றம் - தெளிந்த நல்ல கஸ்தூரிச் சேறுகலந்த துருத்தியிலுள்ள நீரைத்தூவுங் காட்சி—களிந்த கிரி மிசைக் கடவுள் காளிந்தி பரந்தது எனக் கவினும் - களிந்த மலைமீது தெய்வத்தன்மை பொருந்திய காளிந்தி நதி பரந்ததுபோல விளங்கும். எ - று.

மாது, ஓ அசைகள். வேய் ஆகுபெயர். தெளிந்த என்னும் பெயரெச்சம் நீர் என்னும் பெயர்கொண்டது. களிந்தகிரிமிசைக்கடவுட் காளிந்தி பரந்ததென வென்பது பண்போடுதொழில்பற்றிவந்தவுவமை. சுவேதவாகனன் வாளாபெயராய் நின்றது. விளிந்துமயில்புறங்கொடுக்கு மெல்லியலாள் என்ற பெயரடையால் நீர்விளையாட்டில் எவரையும் புறகிடச்செய்யுஞ் சாதுரியமுடையாளென்பதும் வேயும்பாகுஞ் சுளிந்துவருங்கடகளிற்றுச் சுவேதவாகனன் என்ற பெயரடையால் அவள்தூவிய நீர்மாரிகண்டும் புறகிடாதெதிரேற்று நிற்கும் ஆற்றலுடையானென்பதும் பெறப்பட்டன. கடகம் - தோள்வளை. (௧௧)

பிறையனையதிலகநுதற்பேதையிளம்பிடியொருத்திபிடித்தசெங்கை
நறைகமழும்பொலஞ்சிவிறிநண்ணியசெஞ்சிந்தூரநாரம்வீச [து
வறைகழல்வெஞ்சிலைத்தடக்கையருச்சுனன்றன்றிருமுகத்திலானபோ
நிறைமதிமேல்வாளிரவிகரங்கணிரைத்தோடுவபோனிறத்தமாதோ.

(இ - ள்.) பிறை அனைய திலக நுதல் இளம்பிடிப் பேதை ஒருத்தி - எண்ணாட்பிறைபோன்ற திலகத்தையணிந்த நெற்றியையுடைய இளம்பிடியானை போலும் பெண்ணொருத்தி—செம் கை பிடித்த நறை கமழும் பொலம் சிவிறி நண்ணிய செம் சிந்தூர நாரம் வீச - சிவந்த கையிற்பிடித்த மணங்கமழும் அழகியதுருத்தியிற்பொருந்திய செம்மையாகிய சிந்தூரநீரை வீச—அறை கழல் வெம் சிலைத் தடக் கை அருச்சுனன்தன் திருமுகத்தில் ஆனபோது - (அந்த நீர்) ஆரவாரிக்கும் வீரக்கழலை அணிந்த கொடிய வில்லையேந்திய நீண்ட கையையுடைய அருச்சுனனது அழகிய முகத்திற்பொருந்தினபொழுது— நிறைமதிமேல் வாள் இரவி கரங்கள் நிரைத்து ஓடுவபோல் நிறத்த - பூரணசந்திரன்மேல் ஒளி பொருந்திய சூரியனுடைய கிரணங்கள் நிரைக்கப்பட்டு ஓடுந்தன்மைபோல ஒளியைச் செய்தன. எ - று.

மாது, ஒ அசைகள். பிடி ஆகுபெயர். நிரைத்தென்பது படுவிகுதி தொக்கு நின்றது. செஞ்சிந்துரம் கருங்கண்ணன்போல நின்றது. நிறைமதிமேல் வாளிரவி கரங்கணிரைத்தோடுவபோ லென்பது இல்பொருளுவமை. "மாக்கடனடுவணெ ண்ணுட்பக்கத்துப் - பசுவெண்டிங்கடோன்றியாங்குக் - கதுப்பயல் விளங்குஞ்சிறு நுதல்" எனப் பிறர்கூறுதலாற் பிறை என்பதற்கு எண்ணுட் பிறையென்றும். ()

பாண்டுமதலையுங்காதற்பாவையருந்துழாயோனும்பாவைமாரு
மீண்டுபெருஞ்சனத்துடனேயிவ்வண்ணமிடந்தோறுமினிதினுடி
யாண்டுவரிசிலைமதனுமவன்படையுஞ்சேவிப்பவழகுகூர
மீண்டுதமமனைதோறுநிரைநிரைவாள்விளக்கேந்தமேவினரே.

(இ - ள்.) பாண்டு மதலையும் காதல் பாவையரும் - அருச்சுனனும் விருப்பை யுடைய அவன் மனைவியரும்—துழாயோனும் பாவைமாரும் - கிருட்டிணரும் அவர் மனைவியரும்—ஈண்டு பெரும் சனத்துடன் இவ்வண்ணம் இடந்தோறும் இனிதின் ஆடி - நெருங்கிய பெரிய சனங்களோடு இவ்வாறு இடங்கடோறும் மகிழ்ச்சியோடு விளையாடி—ஆண்டு - அவ்விடத்தில்—வரி சிலை மதனும் அவன் படையும் சேவிப்ப - வரிந்த வில்லையுடைய மன்மதனும் அவனுடைய சைனியமும் வழிபட—அழகு கூர மீண்டு - அழகுமிகத் திரும்பி—நிரை நிரை வாள் விளக்கு ஏந்த தம மனைதோறும் மேவினர் - நிரைநிரையாக ஒளிபொருந்திய தீபங்களை எடுக்கத் தங்களுடைய வீடுகடோறும் சேர்ந்தார்கள். எ - று.

ஏ இரண்டும் அசை. எத்துணைப் பேராற்றலுடையாரையும் வென்று தன்னடிக்கீழ்ப்படுத்துமாறு யுத்தசந்நத்தனாய் வந்த மன்மதனும் அவன்படைஞருந் தங் கிலைக்களமாகிய அச்சோலையிற்றானே அழகினுங் காமநுகர்ச்சியினும் அவர்க்குத் தோல்வியடைந்து சேவித்தாரென்க. ஈண்டு மனை என்றது முதுவேனில் உஷ்ண சமனத்தின் பொருட்டு யமுனாநதி தீரத்திலுள்ள சோலையில் அமைக்கப்பட்ட மண்டபத்தை. (கா)

நெடுவேனில்புகுதரமேலிளவேனிலகன்றதற்பினிகரில்கஞ்சப்,படு
வேய்வெள்வளையமுந்தண்பட்டாலவட்டமுஞ்செம்படீரச்சேறு, முடு
வேய்நித்திலத்தொடையுமூடுறுமண்டபத்தடமுமொழுகிநீண்ட,வடுவே
ய்கண்மடந்தையர்க்குமகிழ்நருக்குமமைந்தனவான்மனைகளெல்லாம்.

(இ - ள்.) மேல் இளவேனில் அகன்றதன்பின் - பழைய இளவேனிற்காலங் கழிந்தபின்பு—நெடுவேனில் புகுதர - முதுவேனிற்காலம் வர—ஒழுகி நீண்ட வடு ஏய் கண் மடந்தையர்க்கும் மகிழ்நருக்கும் - காதளவோடி நீண்ட மாவடுவகிரையொத்த கண்களையுடைய பெண்களுக்கும் நாயகர்களுக்கும்—படு ஏய் நிகரில் கஞ்ச வெள் வளையமும் - தடாகத்திற்பொருந்திய ஒப்பில்லாத தாமரையினது வெள்ளிய வளையமும்—தண் பட்டு ஆலவட்டமும் - குளிர்ந்த பட்டினாற்செய்த ஆலவட்டங்களும்—செம் படீரச் சேறும் - செப்பமான சந்தனக்குழம்பும்—உடு ஏய் நித்திலத் தொடையும் - நக்ஷத்திரத்தையொத்த முத்துமாலைகளும்—மண்டப ஊடு உறு தடமும் - மண்டபத்தின் நடுவிற்பொருந்திய தடாகங்களும்—வான் மனைகள் எல்லாம் அமைந்தன - பெருமையாகிய வீடுகடோறும் அமைந்திருந்தன. எ - று.

வடுவேய்கண் வடிவுவமை. வடு ஆகுபெயர். "வடுப்பிளவனைய கண்ணாள்" என்ருர் பிறரும். தண்மைதரும் எவற்றினு மிக்க தண்மைதருவது தாமரை வளைய மென்பார் நிகரில்கஞ்சப் படுவேய்வெள்வளையமென்றும், செம்மை கருமை நிற முள்ள பட்டுக்கள் வெம்மைதரலிற் றண்மைதரும் பசும்பட்டாலாய ஆலவட்ட மென்பார் தண்பட்டாலவட்டம் என்றும், வெம்மைதருங் கஸ்தூரிமுதலிய வளா வாது தண்மைதரும் பனிநீர்முதலிய வளாய படீரச்சேறென்பார் செம்படீரச்சே றென்றும், தலசம் சலசம் என இரண்டாய்ப் பகுக்கப்பட்ட முத்துக்களில் மிக்க தண்மைதருஞ் சலசமுத்துக்கள் பொன்மை வெண்மை செம்மையானபலநிறமும் ஒளியும் உடையனவாயிருத்தலின் அவற்ருற்ருெடுத்த தொடையென்பார் பலநிற மும் ஒளியும் உடைய உடுவை உவமைபுணர்த்தி உடுவேய்நித்திலத் தொடையெ ன்றும், சந்திரகாந்தத்தாற் செய்து சந்தனத்தான் மெழுகி இளந்தென்றலிடையீ டின்றி இழுகிவருதற்குரிய உயர்ந்த சாளரங்கள் பலவுடைய சிறந்தமனையென்பார் வான்மனையென்றுங் கூறினர். செம்படீரச் சேறென்பதற்குச் செஞ்சந்தனக் குழ ம்பெனப் பொருள் கூறுவாருமுளர். அது இத்துணைச் சிறப்பின்றென்க. (௧௪)

திலகநுதற்குறுவியர்தஞ்செவிப்பூவிலளியினத்தின்சிறகர்க்காற்ருற்
புலரமதுநுகர்மாதர்புன்முறுவலிதழூறல்புதிதின்மாந்தி
யிலகுபரிமளபுளகவீரமுலைத்தடமூழ்கியிரதிகேள்வன்
கலகமிடும்பரிதாபமகற்றினரினிமையுடன்கலந்தகேள்வர்.

(இ - ள்.) இனிமையுடன் கலந்த கேள்வர் - மகிழ்வைச் செய்தலுடன் புண ர்ந்த நாயகர்கள்—திலக நுதல் குறுவியர் - (பெண்களுடைய) திலகத்தையணிந்த நெற்றியிலுள்ள சிறிய வியர்வையானது—தம் செவிப் பூவில் அளி இனத்தின் சிற கர்க் காற்ருல் புலர - தங்களுடைய காதிலணிந்த பூக்களில் விழும் வண்டின் கூட் டத்தின் சிறைக்காற்றினுற் காயும்படி—மது நுகர் மாதர் புன்முறுவல் இதழ் ஊறல் புதிதின் மாந்தி - கட்குடிக்கும் அப்பெண்களது புன்சிரிப்பால் அதரத்தி லூறுமமிர்தத்தைப் புதிதாயுண்டு—இலகு பரிமள புளக ஈரமுலைத் தடம் மூழ்கி - பிரகாசிக்கின்ற வாசனைபொருந்திய ரோமாஞ்சத்தையுடைய குளிர்ந்த முலைத்தட ங்களில் அமிழ்ந்தி—இரதிகேள்வன் கலகமிடும் பரிதாபம் அகற்றினர் - மன்மதன் கலகஞ்செய்தலால்வந்த (அவர்கள்) துயரத்தை நீக்கினர்கள். எ - று.

முலைத்தடம் - முலையாகிய உயர்ந்தவிடமென விரியும். புலர மாந்தி என வியையும். கலகமிடும்பரிதாபம் உண்ட இளைப்பென்பதுபோல நின்றது. புணர்ச்சி விசேடத்தால் நெற்றியிற் குறுவியர்வை உண்டாயிற்றென்க. புன்முறுவலும் அம் முறுவற்குறிப்பானிகழும் அதரபானமும் பூக்கொய்தல் நீர்விளையாடன் முதலிய வற்ருற் சிலபொழுது இடையீடுபெட்டுப் பின்கட்குடித்துழி நிகழ்தலிற் புதிதாயின வென்பார் புன்முறுவலிதழூறல் புதிதின் மாந்தியென்றும், வெம்மைக்காலத்திற் சீதளத்தைத்தரும் முலை என்பார் ஈரமுலையென்றும் கூறினர். புன்முறுவலிதழூ றல் என்பதற்குப் புன்முறுவலையுடைய இதழூறலெனப் பொருள் கொள்வாரும், அகற்றினர் என்பதைக் கேள்வர்கள் தங்கள் பரிதாபத்தை நீக்கினர்கள் எனப் பொருள்கொள்வாரும், செவிப்பூவில் அளி என்பதற்குப் பெண்களுடைய காது ப்பூ என்னும் ஆபரணத்தைப் பூ எனக்கருதி விழும் வண்டுகள் எனப் பொருள் கொள்வாரும் உளர். (௧௫)

மாரவசந்தனையகன்றுவயங்குறுவெங்கோடையினுன்மறுகியாற்ரு
தாரமளிமதுமலரிலாரவடங்களிற்பனிநீராரச்சேற்றி
னீரநெடுங்குழலிசையிலியங்கியசாமரக்காற்றிலிளநிலாவிற்
பேரழலும்புகுந்ததெனப்பிணங்கினர்தங்கேள்வர்ப்பிரிந்தமாதர்.

(இ - ள்.) தம் கேள்வர்ப் பிரிந்த மாதர் - தம் நாயகரைப்பிரிந்தபெண்கள்—மார வசந்தனை அகன்று - மன்மதனுக்குரிய இளவேனிற்காலத்தை நீங்கி—வயங்குறு வெம் கோடையினுல் மறுகி - பிரகாசிக்கின்ற முதுவேனிற் காலத்தினுல் வருந்தி—ஆற்ருது - அதைச் சகிக்கமாட்டாமல்—ஆர் அமளி மது மலரில் - (அவ் வெம்மைக்கு உபசாந்தமாகச்செய்யும்) நிறைந்த சயனத்திற் படுத்த தேன்பொருந்திய பூக்களிலும்—ஆர வடங்களில்—முத்துவடங்களிலும்—பனிநீர் ஆரச் சேற்றில் - பனிநீர்கலந்த சந்தனக்குழம்பிலும்—ஈர நெடும் குழலிசையில் - குளிர்ந்த நெடிய வேய்ங்குழலோசையிலும்—இயங்கிய சாமரக் காற்றில் - அசைகின்ற சாமரங்களிலிருந்துவருங் காற்றிலும்—இள நிலாவில் - இளமையாகிய சந்திரிகையிலும்—பேர் அழலும் புகுந்தது எனப் பிணங்கினர் - (சீதளமேயன்றிப்) பெரிய அக்கினியும் பிரவேசித்ததென்று மனங் குழம்பினர்கள். எ - று.

அழலும் என்னும் உம்மை எச்சத்தோடு சிறப்பு. வசந்தத்தை ஆண்பாலாக்கியது வடமொழிமதம். ஈர் அ நெடுங்குழல் எனக் கண்ணழித்து இசைநூலிற் கூறிய விதிபிறழாமல் அடியும் நுனியுந்தள்ளி எண்விரலளவிற்ருய் அரிந்து செய்யப்பட்ட அந்த வேய்ங்குழல் எனப் பொருள்கோடலும் ஒன்று. "முந்தைமறை நூன்மரபின்" என்னும் பெரியபுராணச்செய்யுளால் இக்கருத்துப் பொள்ளெனப் புலப்படும். (௧௬)

கோடைவெயில்சுடச்சுடமெய்கொளுந்தியிறந்தனபோலக் கொண்டல்கோடை, வாடைசிறுதென்றலெனுமாருதங்களெம்மருங்கும்வழக்கமின்றி, யாடையில்வெண்சாமரத்திலாலவட்டத்தினுயிர்ப்பிலழகார் நெற்றி, யோடைமுகமதகயத்தின்றழைசெவியிற்பல்லிறகிலொளித்த மாதோ.

(இ - ள்.) கொண்டல் கோடை வாடை சிறுதென்றல் எனும்மாருதங்கள் - கொண்டல் கோடை வாடை இளந்தென்றல் என்னுங் காற்றுக்கள்—கோடை வெயில் சுடச் சுட - முதுவேனிற்காலத்துவெய்யில் சுடச்சுட—மெய் கொளுந்தி இறந்தனபோல - (அதனுற்) சரீரம் கொளுத்தப்பட்டு இறந்தனபோல—எம்மருங்கும் வழக்கம் இன்றி - எப்பக்கத்தினும் இயங்குதலின்றி—ஆடையில் - புடைவையிலும்—வெண் சாமரத்தில் - வெண்மையாகிய சாமரத்திலும்—ஆல வட்டத்தினில் - ஆலவட்டத்திலும்—உயிர்ப்பில் - சுவாசத்திலும்—அழகு ஆர் நெற்றி ஓடை முக மத கயத்தின் தழை செவியில் - அழகுநிறைந்த நெற்றிப் பட்டத்தை யணிந்த முகத்தையுடைய யானையின் தழைத்த செவிகளிலும்—பல் இறகில் ஒளித்த - மயிற்பீலிவிசிறிகளிலும் ஒளித்தன. எ - று.

மாது, ஓ அசைகள். இறகு ஆகுபெயர். இறந்தனபோல வழக்கமின்றி ஒளித்தனவென்க. இவற்ருன்மாத்திரங் காற்றியங்கினவென்பதாம். இச்செய்யுள் போல என்னும் உவமச்சொற்பெற்றுவந்த தற்குறிப்பேற்றமென்னும் அலங்காரங் கொள்ளக்கிடந்தது. திக்குப்பால ரெண்மரினுஞ் சிறந்த இந்திரனதாட்சி யாதலினுலும் வேள்வி வேட்டல் முதலிய நற்கருமஞ் செய்வார்க் குரித்தாதலினுலும் கீழ்த்

திசையில் நின்றுவருங் கொண்டலை முன்னும் அத்திசைக்கெதிராய மேற்றிசை யில் நின்றுவருங் கோடையையதன்பின்னும் நற்கருமம் ஒன்றற்கே யுரியதாதலின் வடதிசையில் நின்றுவரும் வாடையையதன்பின்னும் அதற்கெதிராய தென்றிசை யில் நின்றுவருந் தென்றலையதன்பின்னுங் கூறினர். பல்லிறகென்பதற்குப் பட்சி களின் பல இறகெனப் பொருள்கோடல் பொருத்தமின்று. (௧எ)

தாழிநறுங்குவளையந்தார்த்தருமன்மகனருட்புனலுந்தரங்கவேலை
யூழிநெடும்பெரும்புனலுமுடலிலுறுவெயர்ப்புனலுமூறியூறிப்
பாழிதொறுமிறைக்கின்றபைம்புனலுமல்லதுவெம்பருவந்தன்னாற்
பூழிபடுகமர்வாயநானிலத்துப்புகலுதற்கோர்புனலுமுண்டோ.

(இ - ள்.) தாழி நறும் குவளை அம் தார்த் தருமன் மகன் அருட் புனலும் - சாடிகளிலுண்டாகின்ற நறுமணங்கமழுங் குவளையினது அழகிய மாலையையணி ந்த தருமபுத்திரனது அருளாகிய நீரும்—தரங்க வேலை ஊழி நெடும் பெரும் புன லும் - திரைபொருந்திய கடலிலுள்ள எக்காலமும் வற்றாத மிக்க நீரும்—உடலில் உறு வெயர்ப் புனலும் - சரீரத்திலுண்டாகின்ற வெயர்வைநீரும்—பாழிதொறும் ஊறி ஊறி இறைக்கின்ற பைம் புனலும் அல்லது - குண்டுகடோறும் ஊறி ஊறி இறைக்கப்படுகின்ற பசிய நீருமல்லாமல்—வெம் பருவந்தன்னால் பூழிபடு கமர் வாய நால் நிலத்து - முதுவேனிற்காலத்தால் புழுதி பொருந்திய பிளப்பைத் தம் மிடத்துடைய முல்லைமுதலிய நான்குநிலத்திலும்—புகலுதற்கு ஓர் புனலும் உண் டோ - எடுத்துச்சொல்லுதற்கு வேறொருநீரும் உண்டோ. எ - று.

ஒகாரம் எதிர்மறை. புனலும் என்னும் உம்மை சிறப்பு. இறைக்கின்ற என்ப திற் படுவிகுதி தொக்கது. கேணிமுதலிய நீர்நிலைகளி லுண்டாக்கின் ஞெண்டுமுத லிய பகையாலழியுமென்றஞ்சித் தாழியிலுண்டாக்கப்பட்ட அருமையுடைய குவ ளையென்பார் தாழிநறுங்குவளையென்றும், நீர்போலத் தட்பந்தரு மியல்புடையது அருளென்பார் அதனை உருவகப்படுத்தி அருட்புனலென்றும், பாலைக்குத் தனக் கென நிலமின்றென்பார் நானிலமென்றும், பிற நீர்நிலைகளிலெல்லாம் நீர் வறந் தமையின் ஊரிலுள்ளாரால் இடைவிடாது மொள்ளப்படுந் தெளிந்த பாழிநீர் என்பார் பாழிதொறுமிறைக்கின்ற பைம்புனலென்றுங் கூறினர். இந்நான்குபுன லுமன்றி உலகில் வேறுபுனலில்லையென்பது கருத்து. (௧அ)

நீகாரமழைபொழியநித்திலவெண்குடைநிழற்றநீலவாட்கட்
பாகாருமொழிமடவார்மணிக்கவரியிருமருங்கும்பயிலவீசக்
கார்காலம்புகுந்துசெழுங்காளமுகிலிரண்டொருபாற்கலந்ததென்ன
வாகாரமழகெறிப்பவிருவருமாங்குடனிருந்தாராவிபோல்வார்.

(இ - ள்.) நீகார மழை பொழிய - பனிநீர்மழைபொழிய—வெண் நித்திலக் குடை நிழற்ற - வெண்மையாகிய முத்துக்குடை நிழலைச்செய்ய—நீலவாள் கண் பாகு ஆரும் மொழி மடவார் இரு மருங்கும் மணிக் கவரி பயிலவீச - நீலநிறத்தை யுடைய வாள்போலுங் கண்ணையும் பால்போலுஞ் சொல்லையுமுடைய பெண்கள் இருபக்கத்திலும் அழகிய சாமரங்களைப் பொருந்த வீச—ஆவிபோல்வார் இருவ ரும் - ஆன்மாவையொத்த நண்பர்களாகிய கிருஷ்ணர் அருச்சுனன் என்னும் இரு வரும்—செழும் காள முகில் இரண்டு கார்காலம் புகுந்து ஒருபால் கலந்தது

என்ன-செழுமையாகிய கரிய முகில்கள் இரண்டு கார்காலத்தில் வந்து ஓரிடத்துக் கலந்தாற்போல—ஆகாரம் அழகு எறிப்ப ஆங்கு உடன் இருந்தார் - உடம்பு அழகைவீச அச்சோலையிலுள்ள மண்டபத்தில் ஒருங்கிருந்தார்கள். எ - று.

ஆவிபோல்வார் பொழிய நிழற்ற வீச எறிப்ப இருந்தார் என' வினைமுடிபு செய்க. ஆர் உவமவுருபு. சார்காலம் என்பது ரகரமிடையிட்டுவந்த ஆசெதுகை. போல்வார் பெயரெச்சமுற்று. முகிலிரண்டொருபாற் சலந்ததென்ன வென்பது பண்புவமை. வாட்கண் தொழிலோடு வடிவுபற்றி வந்தவுவமை. பாகாருமொழி பயனுவமை. நீகாரமழைபொழிதன் முதலிய மூன்றும் வெம்மைக் குபசாந்தமாய் நிகழ்ந்தனவென்க. வெம்மை தணியத் தக்க காற்றுப் புறப்பட வீசவென்பார் பயிலவீசவென்றார். நீகாரம் - பனிநீர். இதுதற்பவம். ஆகாரம் - உடம்பு. (கக)

வேறு.

இனியபான்முகந்தொழுக்குமாகுதியெனவிலங்குமுப்புரிநூலுந்
தனதுவெஞ்சிகைக்கொழுந்தெனப்புறத்தினிற்றாழ்ந்தசெஞ்சடைக்காடு
புனிதவெண்புகைமருங்குசுற்றியதெனப்புனைந்தவாடையுமாகி [ம்
மனிதவேதியர்வடிவுகொண்டவரெதிர்வன்னிவானவன்வந்தான்.

(இ - ள்.) வன்னிவானவன் - அக்கினிதேவன் — இனிய பால் முகந்து ஒழுக்கும் ஆகுதி என இலங்கும் முப்புரி நூலும் - இனிய பாலையள்ளிச் சொரியும் ஆகுதியைப்போல விளங்கும் பூணூலையும்—தனது வெம் சிகைக் கொழுந்து எனப் புறத்தினில் தாழ்ந்த செம் சடைக் காடும் - தன்னுடைய உஷ்ணம்பொருந்திய சுவாலையின் கொழுந்தைப்போலப் புறத்தே தாழ்ந்த சிவந்த சடையாகிய காட்டையும்—புனித வெண் புகை மருங்கு சுற்றியது எனப் புனைந்த ஆடையும் ஆகி - பரிசுத்தமான வெண்மையாகிய புகை இடையிற்சுற்றினாற்போல அணிந்த வெள்ளைவஸ்திரத்தையும் பொருந்தி—மனித வேதியர் வடிவு கொண்டு அவர் எதிர் வந்தான் - மானுடமுனிவர் வடிவங்கொண்டு அவ்விருவருக்கும் எதிரே வந்தான். எ - று.

யாகதேனுச் சொரிந்த முரியாப் பாலென்பார் இனியபாலென்றும், சிறிதுங் களங்கமில்லா வெண்புகையென்பார் புனிதவெண்புகையென்றும், தேவமுனிவர் முதலியோருமுளராதலிற் பிறிதோடியையுநீக்கிய விசேடணங் கொடுத்துமனிதவேதியரென்றுங் கூறினார். (உ0)

வந்தவந்தணன்வரவுகண்டிருவரும்வந்தெதிர்வணங்கித்தஞ்
சிந்தையன்பொடுவேதிகையெனத்திகழ்செம்பொனின்றவிசேற்ற
வந்தணனுங்குழிந்தபொற்கண்ணினனவிமணங்கமழ்வாய
னுந்துவெம்பசிபெரிதுவல்லேயெனக்கோதனமிடுகென்றான்.

(இ - ள்.) வந்த அந்தணன் வரவு இருவரும் கண்டு - வந்த முனிவனுடைய வரவைக் கிருஷ்ணர்அருச்சுனன்என்னும் இருவரும் கண்டு—வந்து எதிர்வணங்கி-வந்து எதிரே வணங்கி—தம் சிந்தை அன்பொடு வேதிகை எனத் திகழ் செம்பொனின் தவிசு எற்ற-தம்மன அன்போடு வேதிகைபோல விளங்குகின்ற மாற்றுயர்ந்த பொன்னாற்செய்த ஆசனத்தில் இருத்த—அவி மணம் கமழ் வாயன் அந்தணனும் - அவிப்பாகத்தின் மணங்கமழும் வாயை யுடையனாகிய அந்த முனிவனும்—குழிந்த பொன் கண்ணினன் - தாழ்ந்த செங்கண்ணையுடையனாய்—உந்து வெம் பசி பெரிது-மேன்மேலும் வளர்கின்ற கொடிய பசி பெரிதாயிருக்கின்றது—

வல்லே எனக்கு ஓதனம் இடுக என்றான் - விரைவாக எனக்குஅன்னமிடுக என்று கூறினான். எ - று.

அந்தணாளனும் என்னும் உம்மை எச்சத்தோடு சிறப்பு. கண்ணினன் பெயரெச்சமுற்று. வாயன் வினையெச்சமுற்று. இடுக என்னும் வியங்கோள்ஈறு தொக்கது. அப்பிராமணன் அக்கினிதேவனாயிருக்குஞ் சம்பந்தம்பற்றி வேதிகையெனத் திகழ் செம்பொனின்றவிசென்று கூறினார். உந்து வெம்பசியென்பதற்கு மானங் குலங் கல்வி முதலியவற்றை நீக்கும் பசியெனப் பொருள்கோடலும் ஒன்று. இப்பொருட்கு உந்தல் - நீக்கல். "உந்து வெம்பசி பெரிது வல்லேயெனக் கோதன மிடுகென்று" கூறிவந்த அக்கினியை அவிமணங் கமழ்வாயன் என ஆசிரியர் விசேடித்தது முதனூற் கதை நோக்கி யென்க. அதனை இருபத்தைந்தாஞ் செய்யுள் விசேடவுரையிற் காண்க. (உக)

கரியமேனியரிருவருஞ்செய்யபொற்காயமாமுனியுண்டற்
குரியபோனகமிடுதுமிக்கணத்தெனவுவகையோடுரைசெய்தா
ரரியவாயினும்வழங்குதற்கேற்றனவல்லவாயினுந்தம்மிற்
பெரியவாயினுமதிதிகள்கேட்டனமறுப்பரோபெரியோரே.

(இ - ள்.) கரிய மேனியர் இருவரும் - கரிய வடிவத்தையுடைய கிருஷ்ணர் அருச்சுனன் என்னும் அவ்விருவரும்—செய்ய பொன் காய மா முனி - செம்மையாகிய அழகிய வடிவத்தையுடைய முனிவரனே—உண்டற்கு உரிய போனகம் இக் கணத்து இடுதும் என உவகையோடு உரைசெய்தார் - நீ உண்டற்குரிய போசனத்தை இக்கணத்தே தருவோம் என்று மகிழ்ச்சியோடு சொன்னார்கள்—பெரியோர் - பெரியோர்கள்—அரிய ஆயினும் - பெறுதற்கரியவாயினும்—வழங்குதற்கு ஏற்றன அல்ல ஆயினும் - கொடுத்தற்கியைந்தனவல்லவாயினும்—தம்மின் பெரிய ஆயினும் - (கொடுக்குந்) தம்மினும் பெரியனவாயினும்—அதிதிகள்கேட்டன மறுப்பரோ - அதிதிகள் கேட்டவற்றை இல்லையென்பாரோ. எ - று.

எ - அசை. ஓகாரம் - எதிர்மறை. ஆயினும் என்னும் உம்மைகள் மூன்றும் எண்ணோடு சிறப்பு. அண்மைவிளியாதலின் முனியென்றியல்பாயிற்று. வெம்பசி பெரிதுவல்லே ஓதனம் இடுக என்றமையின் உண்ணும்பதனழிவுற்ற ஓதனத்தை எனக்கிடுவர்கொல்லோவென் றையுற்று மனம் அழிவனென்றஞ்சி அதனை நீக்கி அவனையுவப்பிக்குமாறு விரும்பியுண்ணும் வெஞ்சோற்றைப் பால் நெய் பருப்பு முதலியவற்றோடு விரைந்து தருதும் என்பார் உண்டற்குரிய போனகமிடுதுமிக்கணத்தென்றார். முயன்று தேடியுங் கிடைத்தற்கரிய தானத்திற்குரிய சற்பாத்திரனாயினான் றம்மெதிரே தானாய்வந்தனன் என்றமையின் அவர்க்குவகையுண்டாயிற்றென்க. அரியவற்றைக் கொடுத்தல் ஔவைக்கு நெல்லிக்கனியீந்த அதியமான் நெடுமானஞ்சிமாட்டும்,வழங்குதற்கேற்றனவல்லவற்றைக் கொடுத்தல் தூர்த்தவேடதாரிக்குத் தம்மனைவியையீந்த இயற்பகை நாயனார்மாட்டும், தம்மிற் பெரியவாயினவற்றைக் கொடுத்தல் யுத்தகளத்திற் குற்றுயிராய்க் கிடந்துழி வந்து யாசித்த மாயமுனிவரற்குத் தான் இயற்றிய புண்ணியங்களையீந்த கன்னன்மாட்டுங் காண்க. அதிதியாவான் வேற்றூரினின்றும் வழிப்போக்கனாய் அன்னமுதலிய உதவி பெறும்பொருட்டு வருபவன். (உஉ)

அளித்துமென்றசொற்றன்செவிப்படுதலும்பெற்றனன்போலாகி
யொளித்துவந்தனனிருபிறப்பினனலேனுதாசனனென்னுமங்
களித்துவண்டிமிர்தொடையலீரெனக்குணுக்காண்டவமெனுங்கானங்
குளித்தருந்துதற்கிடங்கொடானவ்வனங்கொண்டல்வாகனன்காவல்.

(இ-ள்.) அளித்தும் என்ற சொல் தன் செவிப்படுதலும் - தருவோமென்ற சொற்றன்காதிற் புகுதலும்—பெற்றனன்போல் ஆகி - (அக்கினியாகியஅந்தணன் அதனைப்)பெற்றுக்கொண்டவன்போலாய்—களித்து வண்டு இமிர் தொடையலீர்-களிப்படைந்து வண்டுகள்மொய்க்கின்ற மாலையையுடையீர்—ஒளித்து வந்தனன்-யான் என்வடிவத்தை மறைத்து வந்தேன்—இருபிறப்பினன் அலேன் - அந்தணனல்லேன்—உதாசனன் என் நாமம் - உதாசனனென்பது என்பெயர்—எனக்கு உணுக் காண்டவம் எனும் கானம்-எனக்கு உணவு காண்டவமென்னும் வனம்—அவ் வனம் - அவ்வனத்தை—காவல் கொண்டல்வாகனன் குளித்து அருந்துதற்கு இடம் கொடான் - காவல்செய்கின்ற இந்திரன் நான் படிந்து உண்ணுதற்கு இடங் கொடுக்கமாட்டான். எ - று.

ஆகி என்னும் எச்சம் "புகுந்தியான்" என்னுஞ் செய்யுளில் என்றான் என்னும் முற்றுக்கொண்டது. அருச்சுனனே நீ இந்திரற்குப் புதல்வனாயிருத்தலினாலுங் கிருஷ்டிணரே நீர் அவ்வருச்சுனற்குயிர்த்தோழரும் மைத்துனருமாயிருத்தலினாலும் உங்களிடத்து வெளிப்பட்டுவந்து அவனாற் காக்கப்படுங் காண்டவத்தை யெரிக்க உதவிசெய்யுங்களெனில் உடன்படீரென்பதனை நன்றாயறிந்தேனாதலின் மறைந்துவந்து வரங்கொண்டேனென்பான் ஒளித்துவந்தனனென்றும், என்மாட்டிடப் படுவனவற்றையெல்லாம் எஞ்சாதுண்ணல் எனக்கியல்பாதலின் நீர் உவந்தீயுங் காண்டவத்தையுஞ் சிறிதுமெஞ்சா துண்பேனென்பான்உதாசனனென்னுமம் என்றும், தம்மை அடைந்தாரைக் காக்கத்தக்க வன்மையுஞ் சாதுரியமும் ஒருங்குடையார்க்குந் தண்ணளி இல்வழிக் கண்ணோடிக்காத்தல் கடைபோகாமையின் அவ்விரண்டனையும் பயன்படுத்தும் அத்தண்ணளி நும்மாட்டவற்றோடொருங்குளதாதலை நன்றாயறிந்து நும்மையடைந்தேன் என்பான் களித்துவண்டிமிர் தொடையலீர் என்றும், நெடுநாளாய் அவ்வனத்தை உண்ணல்வேண்டுமென் றாசைமீதூர்ந் திருத்தலின் அவ்வானசதீர நான் அதற்குள் அமிழ்ந்தி உண்ணல்வேண்டும் என்பான் குளித்தருந்துதற்கு என்றுங் கூறினான். கொண்டல்வாகனன் அவ்வனம் குளித்தருந்துதற்கு இடங்கொடான் காவல் என்றியைத்து, இந்திரன் அவ்வனத்தை உண்ண இடங்கொடான் ஏனென்றால் தான் காவலாளன் ஆதலால் என்றலும் ஒன்று. இப்பொருட்குக் காவல் ஆகுபெயர். உதாசனன் - ஓமஞ் செய்வனவற்றை உண்பவன். (உஙு)

மிடைந்தநால்வகைமகீருகங்களுநெடுவெற்பினங்களுந்துன்றி
யடைந்ததானவரரக்கர்பேருரகருக்காலயங்களுமாகிக்
குடைந்துசோரிகொள்வாளுகிரரிமுதற்கொடுவிலங்கினமிக்குக்
கடைந்தகூரெயிற்றுலதக்கனும்வாழ்கானனமதுகண்டீர்.

(இ - ள்.) அது - அவ்வனம்—மிடைந்த நால்வகை மகீருகங்களும் - நெருங்கிய நால்வகைப்பட்ட தாவரயோனிகளும்—நெடு வெற்பு இனங்களும் துன்றி - நெடிய மலைக்கூட்டங்களும் நெருங்கி—அடைந்த தானவர் அரக்கர் பேர் உரகருக்கு ஆலயங்களும் ஆகி - (தத்தமக்குரிய இடங்களைவிட்டு) வந்து சேர்ந்த அசு

ரர் இராக்கதர் பெரிய நாகர் ஆகிய இவர்களுக்கு வீடுகளும் பொருந்தி—குடைந்து சோரிகொள் வாள் உகிர் அரி முதல் கொடு விலங்கினம் மிக்கு - அகழ்ந்து இரத்தத்தைக்கொள்கின்ற ஒளிபொருந்திய நகத்தையுடைய சிங்கம் முதலிய கொடிய விலங்கினங்கள் மிகுந்து—சடைந்த கூர் எயிற்று ஆலதக்கசனும் வாழ் கானனம் - கடைந்தாற்போன்ற கூரிய பற்களில் நஞ்சையுடைய தக்ககன் என்னுஞ் சர்ப்பமும் வாழ்கின்ற வனமாகும். எ - று.

கண்டீர் என்பது அசை. ஆலயங்களும் என்னும் உம்மை எச்சம். தக்கசனும் என்னும் உம்மை எச்சத்தோடு சிறப்பு. ஆலதக்கசன் வடநூன்முடிபு. கண்டீர் என்பதை முன்னிலைப்பன்மை முற்றாக்கிப்பொருள் கொள்வாருமுளர். நால்வகை மகீருகங்களாவன: வித்து வேர் கிழங்கு கொடிகளிற் றோற்றுவனவாம். கொம்பொன்று சேர்த்து ஐந்தென்பாருமுளர். மகீருகம் என்பதற்குப் பூமியிற்றோன்றுவது என்பது பொருள். (உச)

புகுந்தியான்முகம்வைக்கினேழ்புயலையுமேவியப்புருகூதன்
றொகுந்தராதலவிறுதிபோனெடும்புனல்சொரிந்தவித்திடுமென்னை
முகுந்தனானிரைபுரந்தவாறெனவொருமுனைபடவிலக்கிற்பின்
மிகுந்ததாகமுமெண்ணமுமுடிந்திடும்வேண்டுவதிதுவென்றான்.

(இ - ள்.) யான் புகுந்து முகம் வைக்கின் - நான் பிரவேசித்து அவ்வனத்தையுண்ண வாய்வைத்தால்—அப்புருகூதன்-அந்த இந்திரன்—ஏழ் புயலையும் ஏவி-ஏழு முகில்களையுமனுப்பி—தொகும் தராதல இறுதிபோல் நெடும் புனல் சொரிந்து என்னை அவித்திடும் - நெருங்கிய உலகமுடிவிற்போல மிக்க நீரைச் சொரிவித்து என்னைத் தணிப்பான் -முகுந்தன் ஆன் நிரை புரந்தவாறு என ஒரு முனைபட விலக்கின் - கிருஷ்ணரே நீர் பசுநிரைகளைக் காத்தவாறுபோல ஒருமுகமாக அம்மழையை விலக்கினால்—பின் - அதன்பின்பு—மிகுந்த தாகமும் எண்ணமும் முடிந்திடும் - அதிகப்பட்ட என்தாகமுங் கருத்தும் முடிவுபெறும்—வேண்டுவது இது என்றான் - எனக்கு வேண்டியது இதுவே என்று சொன்னான். எ - று.

முகம் ஆகுபெயர். சொரிந்து என்பதில் விவ்விகுதி தொக்குநின்றது. முகுந்தன் அண்மைவிளியாதலினியல்பாயிற்று. அன்றி முன்னிலையிற் படர்க்கை மயங்கிற்றெனினும் அமையும். முகுந்தனைமாத்திரம் விளித்தான்; கன்மழையைத் தடுத்துப்பசுநிரையைக் காத்தவாறுபோலப் புனன்மழையைத் தடுத்துத் தன்னைக் காக்கவல்லரென்னுங் கருத்தால். அக்கினிதேவன் காண்டவத்தை எரிக்க விரும்பியதும் அதன்பொருட்டுக் கிருஷ்ணார்ச்சுனர்களிடத்து வந்ததும் என்னையெனிற் கூறுதும்:—சுவேதகி என்னும் அரசன் ஒருயாகத்தைச் செய்தான். அந்த யாகாக்கினி சொலித்தெரியாது மிகவும் புகைந்தது. அதனை நடத்திய இருத்துவிக்குக்களாகிய முனிவர்கள் அப்புகையினால் வருந்தி நம்மால் இது செய்து முடிக்க இயலாது என்று அவ்வியாகத்தை விடுத்துப்போயினர். அரசன் சிலகாலங் கழிந்தபின் தொடங்கிய யாகத்தை முற்றுவித்தல் வேண்டுமென்று பிராமணர்களைப் பின்னும் பலவாறு வேண்டினன். அவர்கள் அதற்கிசையாதவர்களாய் நீ பரமசிவனைக் குறித்துத் தவஞ் செய்வாயாயின் அவர் உன் கருத்தை முற்றுவித்தருளுவரென்று கூறினர். அவ்வாறே அரசன் அருந்தவஞ் செய்ய, சிவபெருமான் வெளிப்பட்டு நீ வேண்டிய வரத்தைக் கேட்பாயென்றனர். அவன் தான் தொடங்கிய யாகத்தை முற்றுவித்தல் வேண்டுமெனப் பிரார்த்திக்க, கடவுள் பன்னிரண்டுவருஷகாலம்

நெய்யை இடைவிடாமல் அக்கினியிற் சொரிந்து ஓமஞ் செய்வாயாயின் உன் கருத்து நிறைவேறுமென அருளிச்செய்து மறைந்தனர். அரசன் அவ்வாறே பன்னிரண்டு வருஷம் ஓமஞ் செய்து யாகத்தை முற்றுவித்தருளவேண்டுமென்று பரமசிவனைப் பிரார்த்திக்க அவர் துருவாச முனிவரை யழைத்து இவ்வரசனுடைய யாகத்தை நீ நடத்தி முற்றுவிப்பாயென ஆஞ்ஞாபித்தனர். முனிவர் மற்றை யந்தணர்களை யழைத்து அவர்களோடுதாமு மிருந்து அவ்வியாகத்தை அரசனுடைய கருத்தின்படி முற்றுவித்துப் போயினர். சுவேதகி யென்னும் அரசன் பன்னிரண்டுவருஷம் இடைவிடாது செய்த வசோர்த்தாரை யென்னும் நெய்யாகுதியினாலும் அவிகளினாலும் அக்கினி தேவனுக்கு வாட்டமும் துர்ப்பலமும் நிறவேறுபாடும் உண்டாயின. அதனால்அவன் வருந்திப் பிரமதேவரிடத்திற் றன்குறையைச் சொல்லினன். அவர் காண்டவமென்னும் வனத்தில் அனேக ஒளஷதங்களும் பிராணிகளுமிருக்கின்றன. அவ்வனத்தை நீ யுண்பாயாயின் அந்த ஒளஷதங்களினாலும் பிராணிகளுடைய மேதசுகளினாலும் உன்னோய் நீங்குமெனக் கூறினர். அக்கினி அவர் கூறியவாறே அவ்வனத்தை யுண்ணும்படி எழுதரம் பிரயத்தினஞ் செய்தும் அங்குள்ள பிராணிகளுடைய இடையூற்றின் மிகுதிப்பாட்டினால் அதுமுடிவுபெறாதாயிற்று. அக்கினிமீண்டும் பிரம தேவரிடத்திற்போய் நிகழ்ந்ததைக் கூறினன். அவர் நர நாராயண அவதாரர்களாகிய கிருஷ்ணார்ச்சுனர்களுடைய சகாயத்தினால் உனக்கது கைகூடும்; அவர்களிடத்துப் போவாயெனக் கூற அவரனுமதிப்படி கிருஷ்ணார்ச்சுனர்க ளிடத்தில் அக்கினிதேவன் வந்தானென்க. (உடு)

என்றபோதிலுன்னிச்சையின்படியுணவீந்தனமிமைப்போழ்திற்
சென்றுகொள்கெனத்தனஞ்சயன்கூறலுஞ்சிந்தைகூர்மகிழ்வெய்தி
மன்றலந்துழாய்மாயவனருளினால்வடிக்கணைமாளாமற்
றுன்றுதூணியுஞ்சாபமுமிரதமுஞ்சுவேதவாசியுமீந்தான்.

(இ - ள்.) என்றபோதில் - என்று அக்கினிதேவன் சொன்னபொழுதில்—தனஞ்சயன் - அருச்சுனனானவன்—உன் இச்சையின்படி உணு ஈந்தனம் - உன் விருப்பின்படி உணவைத் தந்தோம்—இமைப்போழ்தில் சென்று கொள்க எனக் கூறலும் - ஒருமாத்திரைப்பொழுதில் நீபோய் அதனைக் கைக்கொள்ளுக என்று சொல்லுதலும்—சிந்தை கூர் மகிழ்வு எய்தி - (அவ்வக்கனிதேவன்) மனத்தில் மிக்கமகிழ்ச்சியைப் பொருந்தி—மன்றல் அம் துழாய் மாயவன் அருளினால் - மணங்கமழும் அழகிய துழாய்மாலையையுடைய கிருஷ்ணரது அநுமதியினால்—வடிக்கணை மாளாமல் துன்று தூணியும் - கூரிய அம்புகள் குறையாமல் நெருங்கிய தூணியையும்—சாபமும் இரதமும் சுவேதவாசியும் ஈந்தான்-வில்லையும் தேரையும் வெள்ளைக்குதிரைகளையுங் கொடுத்தான். எ-று.

ஈந்தனம் எனத் தெளிவுபற்றி எதிர்காலம் இறந்தகாலமாயிற்று. சுவேதவாசி சாதியொருமை. குரக்குக்கொடியையும் ஈந்தானெனப் பொருடந்துநிற்றலால் வாசியும் என்னும் உம்மை எண்ணோடு எச்சமுமாய் நின்றது. முன் இன்னதென்றறியாது அளித்துமென்றுறுதி கூறினன்; பின் பிதாவாற் காக்கப்படும் வனமென்றறிந்தும் உன்னிச்சையின்படியுணவீந்தனம் என்று கூறினன். இவனதுண்மை யிருந்தவாறென்னையென்ற விம்மிதத்தானும் இனியென்கருத்து முற்றிற்றென்ற உறுதிப்பாட்டானும் அக்கினிதேவன் பெரிதுமுவந்தானென்க. (உசு)

ஈந்தவானரப்பதாகைநட்டீரிரண்டிவுளியுமுடன்பூட்டி
யாய்ந்தவன்றொழிற்பாகனுமருணனிலழகுறும்படி தூண்டக்
காய்ந்தசாயகநாழிகைகட்டியக்காண்டிவங்கரத்தேந்தி
வேய்ந்தமாமணிக்கவசமுமருக்கனிலழகுறமேற்கொண்டான்.

(இ - ள்.) ஆய்ந்த வன் தொழில் பாகனும்-(பாகுநூலை)ஆராய்ந்தறிந்த வலிய தொழிலையுடைய தேர்ப்பாகனும் - ஈந்த வானரப் பதாகை நட்டு - (அக்கினிதேவன்) கொடுத்த குரக்குக் கொடியை நாட்டி—ஈர் இரண்டு இவுளியும் உடன் பூட்டி - நான்கு குதிரைகளையும் ஒருங்குபூட்டி—அருணனில் அழகுறும்படி தூண்ட-(சூரியனுடைய தேர்ப்பாகனாகிய) அருணனைப்போல அழகுமிகும்படி (தேரைச்) செலுத்த—காய்ந்த சாயக நாழிகை கட்டி - (அருச்சுனன் பகைவர்களை) வதைத்த அம்புகளையுடைய தூணியைப் (புறத்திற்) கட்டி—அக்காண்டிவம் கரத்து ஏந்தி - அவ்வக்கினிதேவன் கொடுத்த காண்டீவம் என்னும் வில்லைக் கையிற்றாங்கி—மாமணி வேய்ந்த கவசமும் அருக்கனில் அழகுற-மாணிக்கமணிகளை இழைத்த கவசமும் சூரியனைப்போல அழகைச்செய்ய—மேற்கொண்டான்-(அத்தேரின் மேல்) ஏறினான். எ - று.

பாகனும் கவசமும் என்னும் உம்மைகள் சிறப்போடெச்சம். அருச்சுனனுடைய பாகனுக்கு அருணனை உவமை கூறியதற்கியைய மாணிக்கரத்தினமழுத்திய கவசத்தை யணிந்த அருச்சுனனுக்கு அருக்கனை உவமைகூறினார். காண்டிவம் எனினும் காண்டீவம் எனினும் பொருந்தும். பாகுநூலறிவேயன்றி அறிந்தபடி யியற்றுந் தொழில்வன்மையு முடையன் என்பார் ஆய்ந்த வன்றொழிற்பாகன் என்றும், முன்பல பகைவருயிரை வதைத்தமையின் இவ்வரிய கருமமுமுடிக்குந் தகுதியுடையன என்பார் காய்ந்த சாயகம் என்றும் கூறினார். சாதியடை கொடுத்து உலையிற் காய்ந்த சாயகம் என்றார் எனினும் பொருந்தும். (௨௭)

நெஞ்சின்மேலிடூக்கமோடணிதிகழ்நெடும்புயம்பூரித்துச்
சிஞ்சினீமுகந்தெறித்தனன்றெறித்தலுந்தெறித்தபேரொலிகானின்
விஞ்சிவாழ்வனசத்துவமடங்கவுள்வெருவுறவுகாந்தத்து
மஞ்சினீடுருமொலியெனப்பரந்ததுவான்முகடுறமன்னோ.

(இ - ள்.) நெஞ்சில் மேலிடும் ஊக்கமோடு - (அருச்சுனனானவன்) மனத்தில் அதிகப்படும் முயற்சியோடு—அணிதிகழ் நெடும்புயம் பூரித்து - ஆபரணம் விளங்குகின்ற நெடிய புயங்கள்பருத்து - சிஞ்சினீமுகம் தெறித்தனன்-வின்னாணியிற் றெறித்தான்—தெறித்தலும் - தெறித்தபொழுதில்—தெறித்தபேர் ஒலி - தெறித்ததனா லுண்டாகிய பேரோசை—கானில் விஞ்சிவாழ்வன சத்துவம் அடங்க உள்வெருவுற - காட்டில் மிக்கு வாழ்வனவாகிய பிராணிகள் முழுதும் மனமஞ்ச—உகாந்தத்து மஞ்சில் நீடு உரும் ஒலி என வான் முகடு உறப் பரந்தது—உகமுடிவில் முகிலினிடத்து மிக உண்டாகின்ற இடியி னொலியைப்போல அண்டமுகட்டைப் பொருந்தப் பரந்தது. எ - று.

மன், ஓ அசைகள். சிஞ்சினீ - வின்னாண். இது ஆரிய மொழியாயேநின்றது. தமிழில் சிஞ்சினி எனத்தற்பவமாகும். சிஞ்சினி என்பதற்குக் கணீர் என்று ஒலிப்பது என்பது பொருள். முகம் - ஏழாவதன் சொல்லுருபு. தேவர்கட்கெல்லாம் அவியுணவளிக்கும் இவ்வக்கினிக்கு யான் உணவளிக்கும் பேறுபெற்றேனே என்னும் மகிழ்ச்சியாலும் வீரத்தாலும் அருச்சுனற்குப் புயங்கள் பூரித்தன என்க. (௨௮)

ஆழிவாயொருவடவையின்முகத்திடையவதரித்தனனென்ன
வூழிவாயுலகனைத்தையுமுருக்குமாறுடன்றெழுந்தனனென்ன
வாழிவாழியென்றருச்சுனன்கரத்தையும்வார்சிலையையும்வாழ்த்திப்
பாழிமேனியைவளர்த்தனன்பாவகன்பவனனும்பாங்கானான்."

(இ - ள்.) பாவகன் - அக்கினிதேவன்—ஆழிவாய் ஒரு வடவையின் முகத்திடை அவதரித்தனன் என்ன - சமுத்திரத்திலே ஒரு பெண்குதிரையின் முகத்திற் பிறந்தான் என்று சொல்லவும்—ஊழிவாய் உலகு அனைத்தையும் முருக்குமாறு உடன்று எழுந்தனன் என்ன - ஊழிக்காலத்தில் உலகமுழுதையும் அழிக்கும்படி மாறுபட்டு எழுந்தானென்று சொல்லவும்—அருச்சுனன் கரத்தையும் வார் சிலையையும் வாழி வாழி என்று வாழ்த்தி - அருச்சுனனுடைய கையையும் அவன்கையிலுள்ள நீண்டவில்லையும் வாழ்க வாழ்கவென்று வாழ்த்தி—பாழிமேனியைவளர்த்தனன் - பெருமையாகிய தன் சரீரத்தை வளர்த்தான்—பவனனும் பாங்கு ஆனான் - வாயுவும் அவனுக்கு நண்பனாயினான். எ - று.

பவனனும் என்னும் உம்மை சிறப்போடெச்சம். பாங்கு என்னும் குணப்பெயர் குணியை யுணர்த்திற்று. வாழி வாழி என்னும் அடுக்கு உவகை பற்றிவந்தது. முன்னே ஏழுதரம் தான் காண்டவத்தை எரிக்கப்புகுந்துழி அங்குள்ள பிராணிகளால் இடையூறு நிகழ்ந்தவாறுபோல இப்பொழுதும் நிகழவொட்டாமல் அருச்சுனனுடைய கரங்களும் சிலையும் காத்தமையின் அவற்றை அக்கினிதேவன் வாழ்த்தினனென்க. வனத்துக்குக்கடலை உவமை கூறுதலியல்பாதலின் அதனிற் பற்றிய அக்கினியை ஆழிவாயொருவடவையின் முகத்திடை அவதரித்தனனென்ன என்றும், அவ்வனத்திலுள்ள உயிர்களை எரிக்கப்புகுந்தமையின் ஊழிவாயுலகனைத்தையு முருக்குமாறுடன் றெழுந்தனனென்ன என்றும் கூறினார். (உகூ)

மூளமூளவெம்பசியொடுஞ்சினத்தொடுமுடுகிவெய்துறவோடி
வாளமாகவேோர்பவளமால்வரைநெடுவாரியைவளைந்தென்னக்
காளமாமுகிலூர்திநந்தனநிகர்காண்டவந்தனையண்ட
கோளமீதெழவளைந்தனன்வரைபடிகொண்டலுங்குடர்தீய.

(இ - ள்) ஓர் மால் பவளவரை - ஒரு பெரிய பவளமலை—நெடுவாரியை வாளமாக வளைந்தென்ன - நெடுமையாகிய கடலை வட்டமாகச் சூழ்ந்தாற்போல - மூள மூள வெம்பசியொடும் சினத்தொடும் முடுகி வெய்துற ஓடி - (அக்கினியானவன்) மூளமூள வெம்மையாகிய பசியோடும் கோபத்தோடும் கிட்டி வேகம் பொருந்த ஓடி—வரைபடி கொண்டலும் குடர்தீய - மலைகளிற் படிகின்ற முகில்களும் குடர் கருக—காள மா முகிலூர்தி நந்தனம் நிகர் காண்டவம்தனை - கரியமுகில்களை வாகனமாகக்கொண்ட இந்திரனுடைய நந்தனவனத்தை யொக்கும் காண்டவத்தை—அண்டகோளம் மீது எழ வளைந்தனன் - அண்டகோளகையின் மீதெழ வளைந்தான். எ - று.

மூள மூள எனமிகுதிபற்றிவந்த அடுக்குக்குத் தனித்தனிபசியும் சினமும் வினைமுதல்கள். வளைந்தென்ன வளைந்தனன் குடர்தீயவளைந்தனன் மீதெழவளைந்தனன் எனத் தனித்தனி கூட்டிமுடிக்க. இந்திரனுடைய நந்தனவனம் - சைத்திரரதம். முன்னே பன்முறை காண்டவத்திலுள்ள பிராணிகள் தன் கருத்து முற்றுவண்ணஞ் செய்த இடையூற்றின் மிகுதிப்பாட்டினால் அக்கினிக்குக் கோபமூண்டதென்க. (௩௦)

ஆனவாகுலந்தன்னுடுதப்புதற்கணிபடப்பறந்தோங்குந்
தூநிறத்தனகபோதமொத்தனவிடையிடையெழுஞ்சுடர்த்தூமங்
கானமேதியுங்கரடியுமேனமுங்கடகரிக்குலந்தாமும்
வானிலேறுவபோன்றனநிரைநிரைவளர்தருகருந்தூமம்.

(இ - ள்) இடை இடை எழும் சுடர்த் தூமம்—இடையிடையே யெழுகின்ற (வெண்மையாகிய) ஒளியையுடைய புகைகள்—ஆன ஆகுலம் தன்னுடு - (அக்கினியினுலே தமக்கு) உண்டாகிய வருத்தத்தினுல்—தப்புதற்கு அணிபடப்பறந்து ஓங்கும்-(அதினின்று)தப்புதற்பொருட்டு வரிசையாகப் பறந்து மேலேசெல்லுகின்றனவாகிய—தூ நிறத்தன கபோதம் ஒத்தன - வெண்மையாகிய நிறத்தையுடைய புருக்களை யொத்தன—நிரை நிரை வளர்தரு கருந்தூமம் - நிரை நிரையாகமேலெழுகின்ற கரும்புகைகள்—கானமேதியும் - காட்டெருமைகளும்—கரடியும் - கரடிகளும் - ஏனமும் - பன்றிகளும்—கட கரிக் குலம்தாமும் - மதத்தையுடைய யானைக் கூட்டங்களும்—வானில் ஏறுவபோன்றன-(அக்கினியின் வெம்மையைச் சகிக்க முடியாத வருத்தத்தால்) ஆகாயத்திற் செல்லுவனவற்றை யொந்தன. எ - று.

ஒடு உருபு ஏதுப்பொருட்கண்வந்தது. ஆன ஆகுலந் தன்னுடு என்பதனைப் பின்னுங் கூட்டுக. உவமையடை பொருளோடுங் கூட்டப்பட்டது. (௩௧)

வரைத்தடந்தொறுங்கதுவியகடுங்கனன்மண்டலினகல்வானி
னிரைத்தெழுந்தசெம்மரகதகனகவாணீலவெண்ணிறத்தூமந்
தரைத்தலத்தினின்றண்டகோளகையுறச்சதமகன்றடஞ்சாப
முரைத்ததன்வளைவறநிமிர்ந்தழகுறவோடுகின்றதுபோலும்.

(இ - ள்.) வரைத்தடம் தொறும் - மலைப்பக்கங்க டோறும்—கதுவிய கடும் கனல் மண்டலின் - பற்றிய உஷ்ணத்தையுடைய அக்கினி நெருங்குதலினுல்—அகல்வானில் நிரைத்து எழுந்த - அகன்ற ஆகாயத்தில் நிரைகொண்டு எழுந்த—வாள் - ஒளியையுடைய — செம் மரகத கனக நீல வெண்ணிறத் தூமம் - சிவப்பு பச்சை பொன்மை நீலம் வெண்மை ஆகிய நிறங்களையுடைய புகைகள்—தடம் சதமகன் சாபம் - பெரிய இந்திரதனுவானது—உரைத்த தன்வளைவு அற நிமிர்ந்து-சொல்லப்பட்ட தன்வளைவு நீங்க நிமிர்ந்து—தரைத்தலத்தில் நின்று - பூமியில் நின்று—அண்டகோளகை உற அழகு உற ஓடுகின்றதுபோலும் - அண்டகோளகையைப் பொருந்த அழகுமிக ஓடுதலை ஒக்கும். எ - று.

மலைச் சாரல்களில் மணிகளும் பொன்னும் உண்மையால் அவற்றிற்பற்றிய அக்கினியின் புகைகளும் அந்நிறங்களை யுடையனவாயின. சதமகன் சாபம் வளைவற நிமிர்ந்தோடுவதுபோலும் என்றது இல் பொருளுவமை. (௩௨)

கருதியாயிரகோடிவெம்புயங்கமிக்கானிடையுளவென்று
பரிதிசூழ்வரவெருவுபல்குவடுடைப்பருப்பதங்களின்சாரற்
சுருதிவேள்விநூறுடையவன்சிறகறத்துணித்தவாய்தொறும்பொங்கிக்
குருதிபாய்வனபோன்றனகொளுந்தியகொழுந்தழற்கொழுந்தம்மா.

(இ - ள்.) பரிதி - சூரியனுனவன்—ஆயிரகோடி வெம்புயங்கம் இக்கானிடை உள என்று கருதி - ஆயிரகோடி கொடிய பாம்புகள் இந்தக் காட்டில் உள்ளன என்று எண்ணி—சூழ்வர வெருவு பல்குவடுஉடைப் பருப்பதங்களின் சாரல் - பிர

தக்ஷிணஞ்செய்ய அஞ்சுகின்ற பல சிகரங்களையுடைய மலைகளின் சாரல்களில்—கொளுந்திய கொழும் தழற்கொழுந்து - பற்றிய கொழுமையாகிய அக்கினிச்சுவாலைகள்—சுருதி வேள்வி நூறு உடையவன் - வேதத்தில் விதித்தயாகங்கள் நூற்றையுடைய இந்திரன்—சிறகு அறத் துணித்த வாய்தொறும் - சிறகுகள் அறும்படி வெட்டிய இடங்க டோறும்—குருதி பொங்கிப் பாய்வன போன்றன - இரத்தம் பொங்கிப் பாய்வனவற்றை யொத்தன. எ - று.

அம்மா - அசை. பாம்புகள் தனக்குப் பகையாதலிற் சூரியன் சூழ்வர வெருவுகின்றான் என்க. ஆயிரகோடி என்பது எண்ணின் மிகுதியை யுணர்த்தி நின்றது.

கோத்திரங்களின்கவானிடைக்கதுமெனக்கொளுந்தியுற்றெரிகின்ற
தீத்திறங்கள்செங்காந்தளுமசோகமுஞ்செங்குறிஞ்சியுஞ்சேரப்
பூத்தவொத்தனவன்றியுங்குலிகநீர்பொழியருவியும்போன்ற
பார்த்தகண்கள்விட்டேகலாவகைநிறம்பரந்ததாதுவும்போன்ற.

(இ - ள்.) கோத்திரங்களின் கவானிடை-மலைகளின் பக்கங்களினிடத்து—கதுமெனக் கொளுந்தி உற்று எரிகின்ற தீத்திறங்கள் - விரைவாகப்பற்றி மிக்கு எரிகின்ற நெருப்புச் சுவாலைகளின் பகுதிகள்—செங்காந்தளும் அசோகமும் செங்குறிஞ்சியும் சேரப் பூத்த ஒத்தன - செங்காந்தளும் அசோகும் செங்குறிஞ்சியும் ஒருங்கு பூத்தனவற்றைப்போன்றன—அன்றியும் - இவையன்றியும்—குலிக நீர்பொழி அருவியும் போன்ற—இங்குலிகங்கலந்த நீர்பொழிகின்ற அருவியையுமொத்தன—(அன்றியும் - அஃதன்றியும்)—பார்த்தகண்கள் விட்டு ஏகலாவகை நிறம் பரந்த தாதுவும் போன்ற—பார்த்தகண்கள் தன்னைவிட்டு (வேறுவிஷயங்களிற்) செல்லாதபடி செந்நிறம் பரந்த நற்செங்கற் பொடியையும் போன்றன. எ-று.

கவான் - மலைப்பக்கம் "விறல்வரைக்கவான்" என்றார் பிறரும். அன்றியும் என்பது பின்னுங் கூட்டப்பட்டது. பல திறப்பட இடையீடின்றிப் பரந் தெரிதலால், செங்காந்தள் முதலியன சேரப்பூத்த வொத்தன என்றார். தாது - மலையிலுண்டாகும் ஒருவகைச் செந்நிறப்பொடி. அது கைரிகம் எனவும் பெயர் பெறும். கைரிகம் - கிரியிலுண்டாவது. (௩௪)

தளைத்தபாதபத்தலைதொறும்பற்றினசருகுதிர்த்திளவேனிற்
கிளைத்துமீளவும்பொறியளியெழவளர்கிசலயங்களும்போன்ற
திளைத்தவேர்முதற்சினையுறவிரிவனதீபசாலமும்போன்ற
வளைத்தகானிடைமெலமெலவுள்புகுவன்னியின்சிகாவர்க்கம்.

(இ - ள்.) தளைத்த பாதபத் தலை தொறும் பற்றின—(பார்ப்பவர்களுடைய கண்ணையும் மனத்தையும் தம்மிடத்துப்) பிணிக்கின்ற விருக்ஷங்களின் தலைகள் தோறும் பற்றினவாய்—வளைத்த கானிடை மெலமெல உள்புகு வன்னியின் சிகாவர்க்கம்—வளைத்த காண்டவமென்னுங் காட்டில் மெல்ல மெல்ல உள்ளே புகுகின்ற அச்கினிச் சுவாலையின் பகுதிகள்—இளவேனில் - இளவேனிற்காலத்தில்—சருகு உதிர்த்து - சருகை உதிரச் செய்து—பொறி அளி எழ மீளவும் கிளைத்து வளர் கிசலயங்களும் போன்ற - புள்ளியையுடைய வண்டுகளெழப் பின்னும் கிளைத்துவளருகின்ற தளிர்களையும் போன்றன—திளைத்த வேர்முதல் சினையுற விரிவன - நெருங்கிய வேர்முதல் சினைவரையும் பொருந்த எரியும் அக்கினிகள்—தீபசாலமும் போன்ற - தீபவிருக்ஷங்களையும் போன்றன. எ-று.

பற்றின வினையெச்சமுற்று. விரிவன வினையாலணையும் பெயர். கிசலயங்களும் தீபசாலமும் என்னும் உம்மைகள் எச்சம். தளைத்த என இயல்பினால் நிகழ்காலம் இறந்தகாலமாகக் கூறப்பட்டது. தளைத்தல்-பிணித்தல். "கண் சிறைப்படு நிழற்காவு" என்றார் சிந்தாமணியினும். தளைத்தற்குச் செயப்படுபொருள்கள் வருவித்துரைக்கப்பட்டன. அடர்ந்து வளர்தலால் ஒன்றையொன்று பிணித்த பாதபம் எனினுமாம். கிசலயம்-தளிர். சருகை யுதிர்த்தற்கு வினை முதல் தளிர்கள். அக்கினிச் சுவாலைகள் தளிர்களையும் அவைகளி லிருந்து புலிங்கங்களோடு எழும்புகைகள் பொறியையுடைய வண்டுகளையும் போன்றனவென்க. (௩௫)

தழைத்தபேரொளித்திவாகரன்கரங்கள்போய்த்தடவியவ்வடவிக்கட்
பிழைத்தகாரிருட்பிழம்பினைவளைந்துடன்பிடித்தெரிப்பனபோலு
முழைத்தவான்புழையொருகரத்திருபணைமும்மதப்பெருநால்வாய்
மழைத்தகுஞ்சரமுகந்தொறும்புக்குடன்மயங்கியபொறிமாலை.

(இ - ள்.) முழைத்த வான் புழை ஒருகரத்து—முழைஞ்சின்றன்மையையுடைய பெரிய துளைபொருந்திய ஒரு கையையும்—இரு பணை-இரண்டு கோட்டையும்—மும்மதம் - மூன்று மதத்தையும்—பெரு நால்வாய் - பெரிய தொங்குகின்ற வாயையுமுடைய - மழைத்த குஞ்சர முகந்தொறும் புக்கு உடன் மயங்கிய பொறிமாலை—முகிலின்றன்மையையுடைய யானைகளின் முகங்கடோறும் போய் ஒருசேரக்கலந்த தீப்பொறிகளின் ஒழுங்குகள்—தழைத்த பேர் ஒளித் திவாகரன் கரங்கள் - தழைத்த பேரொளியையுடைய சூரியனது கிரணங்கள்—அ அடவிக்கண் பிழைத்த கார் இருட் பிழம்பினை—அக்காண்டவவனத்திலே (தமக்குத்)தப்பிவந்து ஒளித்திருந்த கரிய இருட்பிழம்பை—போய்வளைந்து தடவி உடன்பிடித்து எரிப்பன போலும்—போய்ச் சூழ்ந்து தடவி உடனே பிடித்து எரிப்பனவற்றை ஒக்கும். எ - று.

பகைவர்களுக்குப் பயந்தவர்கள் வனத்திற் புக்கு ஒளித்தலியல்பாதலால், அடவிக்கட் பிழைத்த காரிருட் பிழம்பு என்றார். முழைத்த மழைத்த என்பன குறிப்புவினைப்பெயரெச்சம். (௩௬)

அரியெனும்பெயர்பொருமையிற்போல்விரைந்தழற்கொழுந்துளைபற்ற
கிரிமுழைஞ்சுகடோறும்பதைத்தோடினகேசரிக்குலமெல்லாம் [க்
விரியுரோமவாலதிகளிற்பற்றலின்விளிவுடைச்சவரங்க
ளெரிகொள்சோகவெங்கனலினானின்றுநின்றிறந்தனசலியாமல்.

(இ - ள்.) கேசரிக் குலம் எல்லாம் - சிங்கக் கூட்டங்களெல்லாம்—அழற்கொழுந்து - அக்கினிக் கொழுந்தானது—அரி எனும் பெயர் பொருமையிற்போல் விரைந்து உளைபற்ற - (தன்னுடைய) அரியென்கின்றபெயர் (இவைகளுக்கும் உண்மையைப்) பொருமையினாற் போல விரைந்து பிடரிரோமத்திற் பற்ற - கிரி முழைஞ்சுகள் தொறும் பதைத்து ஓடின - மலைமுழைகடோறும் பதைப்புற்றோடின—விளிவு உடைச் சவரங்கள் - (ஒருமயிர் நீப்பினும்) இறத்தலையுடைய கவரிமான்கள்—விரி உரோம வாலதிகளிற் பற்றலின்—விரிந்த உரோமங்களையுடைய (தங்கள்) வானுனிகளிற் பற்றுதலினால்—எரி கொள் வெம் சோகக் கனலினால் - அவ்வக்கினி பற்றுதலினாலுண்டாகிய கொடிய சோகாக்கினியினால்—சலியாமல் நின்று நின்று இறந்தன - புடைபெயராமல் நின்று நின்று இறந்தன. எ-று.

கவரிமான்களுடைய உரோமச் சிறப்புணர்த்துவார் விரியுரோமவாலதி என்றும், அவைகள் மானத்தாற் சிறந்தன என்பார் விளிவுடைச் சவரங்கள் சோகவெங்கனலினால் நின்று நின்றிறந்தன சலியாமல் என்றும் கூறினார். புறத்திற் பற்றிய

கனலினலிறவாது அகத்திற் பற்றிய மானக்கனலினலிறந்தமையின், விளிவுடை என்னும் அடை, மயிர் நீப்பின் வாழாக்கவரிமா என அவற்றின் சாதிதருமமுணர்த்தி நின்றது. (௩எ)

எப்புறத்தினும்புகுந்துதீச்சூழ்தலினேகுதற்கிடமின்றித்
தப்புதற்கருத்தழிந்துபேரிரலையோடுழையினந்தடுமாற
மெய்ப்புறத்துவெண்புள்ளிசெம்புள்ளியாய்விடும்படிவிரைந்தோடி
யப்புறத்துவீழ்பொறிகளவ்வவற்றினையலங்கரித்தனவன்றே.

(இ - ள்.) எப்புறத்தினும் புகுந்து தீச்சூழ்தலின்—எப்பக்கத்தினும் புகுந்து அக்கினி சுற்றிக்கொள்ளுதலினலே—பேர் இரலையோடு உழை இனம்—பெரிய புல்வாயோடு உழைக்கூட்டங்கள்—ஏகுதற்கு இடம் இன்றித் தப்புதற் கருத்து அழிந்து தடுமாற—போதற்கிடமில்லாமையினல் விலகுதற்குரிய எண்ணம் நீங்கித் தடுமாற—விரைந்து ஒடி அப்புறத்து வீழ்பொறிகள்—விரைந்து ஒடிப்போய்அவைகளின் புறத்தே விழுகின்ற தீப்பொறிகள்—மெய்ப்புறத்து வெண்புள்ளி செம்புள்ளியாய்விடும்படி - உடம்பின் புறத்துள்ள வெண்ணிறப்புள்ளிகள் செந்நிறப் புள்ளிகளாம்படி—அவ்வவற்றினை அலங்கரித்தன—அவ்வவைகளை அலங்காரஞ் செய்தன. எ - று.

அன்று, ஏ அசைகள். அப்புறத்து வீழ் பொறிகள் என்பதற்கு அப்பால் விழும்பொறிகள் என அப்பொறிகளின் இயல்பு கூறினர் என்றலும் ஒன்று. இப் பொருட்கு அப்புறம் என்பது ஒருசொல்லாய்த் தூரத்தை யுணர்த்திநின்றது.(௩அ)

காழுடைப்புறக்கழைகளின்றுளைதொறுங்கால்பரந்திசைக்கின்ற
வேழிசைக்குளமுருகிமெய்புளகெழவிரைகொளுமசுணங்க
டாழழற்சுடர்சுடச்சுடவெடித்தெழுசடுலவோசையின்மாய்ந்த
வூழியிற்புயலுருமினுன்மடிந்திடுமுரகர்தங்குலம்போன்ற.

(இ - ள்.) புறக்காழுடைக் கழைகளின் துளைதொறும்-புறத்தே வயிரத்தையுடைய மூங்கில்களின் துவாரங்கடோறும்—கால்பரந்து இசைக்கின்ற ஏழ் இசைக்கு - காற்றுப்பரத்தலால் ஒலிக்கின்ற ஏழிசைகளுக்கும் - உளம் உருகி மெய் புளகு எழ இரைகொளும் அசுணங்கள் - மனமுருகிச் சரீரம் ரோமாஞ்சங்கொள்ள (அவ்வனத்தில்)இரைகவரும் அசுணப்பட்சிகள்—தாழ் அழற் சுடர் சுடச் சுடவெடித்து எழு சடுல ஓசையின் மாய்ந்த - மிகுகின்ற அக்கினிச் சுவாலைகள் சுடச்சுட வெடித்தெழுகின்ற சடுல ஓசையினல் இறந்தன—ஊழியில் புயல் உருமினல் முடிந்திடும் உரகர் தம் குலம் போன்ற-(அவைகள்) ஊழிக்காலத்தில்வரும் முகில்களுடைய இடியினலிறக்கின்ற பாம்புகளின் கூட்டங்களை யொத்தன. எ - று.

புற்சாதிகளாகிய மூங்கில் பனை முதலியன புறக்காழுடையன. இவைபெண் மரங்கள் எனப்படும். அசுணம் ஓர் பறவை. அது - இசைக்குருகுவது. சடுல ஓசையாவது அக்கினிபற்றியெரிதலாலுண்டாகும் ஒலி. இதனை இச்சருக்கத்தில் 'சடுலவாரவம்' 'அனலன்சடுலவல்லொலியும்' எனப்பின்வருவனவற்றானும் அறிக. இறைகொளும் என்பது பாடமாயின், (இசையின் கேள்வியால் அசைவின்றித்) தங்கும் எனப் பொருள்கூறுக. இறை - தங்குதல். (௩௯)

அனையபோதிலவ்விபினசாலங்களினுர்தருக்களினீண்ட
சினைகடோறும்வாழ்சிகாவலகலாபமேற்செறிதருதீச்சோதி
பனையினீளுடற்பணிகளையலகினுற்பற்றலிற்படர்பந்திப்
புனையுமாமணிநிழல்பரந்தெழுந்தெனப்பொலிந்திலங்கினமாதோ.

(இ - ள்.) அனையபோதில் - (காண்டவத்தை அக்கினி சுடுகின்ற) அப்பொழுதில்—அவ்விபின சாலங்களின் ஆர் தருக்களின் நீண்ட சினைகடோறும் வாழ் - அந்தக் காடுகளின் கூட்டங்களிற் பொருந்திய விருக்ஷங்களினுடைய நீண்ட கோடுகடோறும் வாழுகின்ற—சிகாவலகலாபமேற் செறிதரு தீச்சோதி - மயில்களினது தோகையிற் பற்றுகின்ற அக்கினிச் சுவாலைகள்—பனையின் நீள் உடல் பணிகளை அலகினால் பற்றலின் - பனையினும் பார்க்க நீண்ட உடம்புகளையுடைய பாம்புகளைத் தம்முடைய அலகுகளினாற் கௌவுதலினால் — படர் பந்திப் புனையும் மாமணி நிழல் பரந்து எழுந்தெனப் பொலிந்து இலங்கின - (அவற்றினுடைய) பரந்த வரிசையாகிய அலங்காரத்தைச் செய்யும் பெரிய இரத்தினங்களுடைய ஒளி பரந்தெழுந்தாற்போலப் பொலிந்து பிரகாசித்தன. எ-று.

மாது, ஓ அசைகள். சிகாவலம் - மயில். சிகையையுடையது என்பது பொருள். சிகை - உச்சியிற் சுடிகை. மயில்களின் ரேகைகளில் நாகரத்தினங்களினுடைய நிழலுண்மைக்கேதுக் கூறுவார் நீளுடற்பணிகளை யலகினாற் பற்றலின் என்றார். இங்ஙனமன்றி மயில்களின் ரேகைகள் பாம்புகள் போன்றன எனக்கொள்ளினும் பொருந்தும். (சo)

ஆசுகன்றனோடடவியைவளைத்தனனாசுசுக்கணிமேன்மேல்
வீசுகின்றனபுலிங்கசாலமும்புகல்வேறெமக்கிலதென்று
பாசிளங்கிளிபூவைகள்வெருவிமெய்பதைத்துளந்தடுமாறிப்
பேசுகின்றசொற்கேட்டலுநடுங்கினபிறபறவைகளெல்லாம்.

(இ - ள்.) ஆசுசுக்கணி ஆசுகன்றனோடு அடவியை வளைத்தனன் - அக்கினி (தன்னண்பனாகிய) வாயுவோடு காட்டினை வளைத்தான்—புலிங்கசாலமும் மேன்மேல் வீசுகின்றன - தீப்பொறியின் கூட்டமும் மேலும் மேலும் வீசுகின்றன— எமக்கு வேறு புகல் இலது என்று - (ஆதலால்) எமக்கு வேறு புகலிடம் இல்லையென்று—பாசு இளம் கிளி பூவைகள் - பசுமையாகிய இளைய கிளிகளும் நாகணவாய்களும்—வெருவி மெய்பதைத்து உளம் தடுமாறிப் பேசுகின்ற சொல் கேட்டலும்—அஞ்சி உடம்பு பதைத்து மனந்தடுமாறிப் பேசுகின்ற சொல்லைக் கேட்டவளவில்—பிற பறவைகள் எல்லாம் நடுங்கின - மற்றைப்பட்சிகள் எல்லாம் நடுக்கமுற்றன. எ-று.

உம்மை எச்சம். ஆசுகன் - வாயு. விரைந்து செல்பவன் என்பது பொருள். ஆசுசுக்கணி - அக்கினி. விரைந்து நன்றாய் எரிப்பவன் என்பதுபொருள். இவர் இருவர்க்கும் நாம் தப்பமுடியாமை இவர் பெயர்க்காரணங்களே விளக்குகின்றன என்பனவாய் ஆசுகன்றனோடடவியை வளைத்தனனாசுசுக்கணி எனக் கிளிகளும் நாகணவாய்களும் பேசுகின்றன என்க. அக்கினி சுவாலித்தற்குத் துணையாதலேயன்றி, அதற்கு ஒருவாறு தப்பிப்பறக்கும் நம்மையும் வாயு தடை செய்கின்றதென்பது தாற்பரியம். (சக)

நெஞ்சிலீரமுநீதியுங்குடிபுகாநிருதர்சென்னியில்வன்னி
குஞ்சிநீடுறவளர்வபோலசைந்துசெங்கொழுந்துவிட்டனமேன்மேல்
வஞ்சிநேரிடையரக்கியர்நகமுழுமதிசிவப்புறத்தீட்டும்
பஞ்சிபோன்றனவவரவர்பதயுகம்பற்றியசிகைவன்னி.

(இ - ள்.) நெஞ்சில் ஈரமும் நீதியும் குடிபுகா நிருதர் சென்னியில் வன்னி - மனத்தில் அன்பும் நீதியும் குடியிராத (அவ்வனத்திலுள்ள) இராக்கதருடைய சிர

த்திற் பற்றிய அக்கினி—குஞ்சி நீடுற வளர்வபோல்-(அவர்களுடைய) குமி நெடிதாக வளர்வனவற்றைப்போல—அசைந்து மேல் மேல் செம் கொழுந்துவிட்டன-அசைந்து மேலும் மேலும் செம்மையாகிய கொழுந்துவிட் டெழுந்தன—அவரவர் பதயுகம் பற்றிய சிகைவன்னி - அவ்வவ்வரக்கியருடைய இருகால்களிலும் பற்றிய சுவாலையையுடைய அக்கினி—வஞ்சிநேர் இடை அரக்கியர் நகமுழுமதி சிவப்பு உறத் தீட்டும் பஞ்சிபோன்றன - கொடியையொத்த இடையையுடைய அவர்கள் (தங்கள்) நகங்களாகிய பூரண சந்திரர்கள் செந்நிறம்பொருந்த ஊட்டுகின்ற செம் பஞ்சுக் குழம்புபோன்றன. எ - று.

அரக்கியர் தீட்டும் பஞ்சிபோன்றன என்றமையால் அவரவர் என்றது அவ் வரக்கியரை. இனி, வஞ்சிநேரிடை யரக்கியர் பதயுகம் பற்றிய சிகைவன்னி அவ ரவர் நகமுழுமதி சிவப்புறத்தீட்டும் பஞ்சிபோன்றன எனக்கொண்டு கூட்டிப் பொருள் கொள்ளினும் பொருந்தும். அரக்கருடைய தலைகளிலும் அரக்கியர்க ளுடைய கால்களிலும் தீபற்றியது என்பதாம். (சஉ)

முப்புரங்களைமுக்கணன்முனிந்தநாண்மூவரம்முழுத்தீயிற்
றப்பினருளர்காண்டவவடவிவாழ்தானவரியாருய்ந்தார்
பைப்புறத்தணிமணியொளிபரந்தெனப்பல்றலைகளிற்பற்றி
வெப்புறுத்தலினுரகருந்தங்கள்வாய்விடங்கள்கொன்றெனவீழ்ந்தார்.

(இ - ள்.) முப்புரங்களை முக்கணன் முனிந்தநாள் - திரிபுரங்களைச் சிவபெருமான் எரித்த நாளில்—அ முழுத்தீயில் தப்பினர் மூவர் உளர் - அந்தப் பெரிய அக்கினியிலே தப்பின அவுணரும் மூவருளர்—காண்டவ அடவி வாழ் தானவர் யார் உய்ந்தார் - காண்டவவனத்தில் வாழ்ந்த அசுரரில் யாவர் உய்ந்தவர் (ஒருவருமிலர்)—உரகரும்-நாகர்களும்—பைப்புறத்து அணிமணி ஒளிபரந்தெனப் பல் தலைகளிற் பற்றி வெப்புறுத்தலின் - படத்தின் புறத்தே அணிந்த இரத்தினத்தின் ஒளிபரந்ததுபோலப் பல தலைகளிலும் அக்கினி பற்றிச் சுடுதலினால்—தங்கள் வாய் விடங்கள் கொன்றென வீழ்ந்தார் - தங்கள் வாய்களிலுள்ள நஞ்சுகள் (தங்களைக்) கொன்றாற்போல விழுந்தார்கள். எ - று.

தப்பினரும் என எச்சவும்மை விரிக்க. உரகரும் என்னும் உம்மை எச்சம். பைப்புறம் என்புழிப் புறம் ஏழாம் வேற்றுமையின் சொல்லுருபெனக்கொண்டு படத்தின்கண் எனப்பொருள் கூறினும் பொருந்தும். கொன்றாலென்பது கொன் றெனத் திரிந்து நின்றது. வெப்புறுத்தல் ஒருசொல். சிவபெருமானுடைய நெற்றிக் கண்ணிலக்கினி மகாசங்காரகாலத்திலே எல்லாவற்றையும் எரிக்கும் பெரிய அக்கினி என்பார் அதனை முழுத்தீ என்றார். அவ்வக்கினியிலும் இது கொடிதாய் அவுணர்களைத் தப்பவொட்டாது எரித்தது என்பது தாற்பரியம். முப்புரங்களிற்ற ப்பினவர் சுதன்மன் சுசீலன் சுபுத்தி எனமூவர். வாணன் முதலிய மூவர்என்றும், தாருகாக்கன் முதலிய மூவர் என்றும் சிலபுராணங்கள் கூறும். (சங)

புகைபடப்படக்கரிந்தனபொறியினாற்பொறியெழுந்தனவானின்
மிகைபடைத்தவச்சுரபதியாயிரம்விழிகளுங்கணப்போதிற்
றகைவறக்கழைமுதலியதருக்களின்சடுலவாரவமிஞ்சித்
திகையினைத்தினும்பரத்தலிற்செவிகளுஞ்செவிடுபட்டனசேர.

(இ - ள்.) வானில் அச்சுரபதி மிகை படைத்த ஆயிரம் விழிகளும் - சுவர்க்க த்திலிருக்கின்ற அந்த இந்திரனுடைய அதிகமாகிய ஆயிரங்கண்களும்—புகை படக் கரிந்தன-புகைபடுதலாற் கரிந்தன—பொறியினால் பொறி எழுந்தன—புலிங்

கங்களினுற் பொறியெழுந்தன—கழைமுதலிய தருக்களின் சடுல ஆரவம் மிஞ்சி—மூங்கில் முதலிய விருக்ஷங்களின் (நெருப்புப்பற்றி எரிதலால் உண்டாகிய) சடுல ஒலி மிகுந்து—கணப்போதில் தகைவு அற திகை அனைத்தினும் பரத்தலில்-நொடிப்பொழுதில் தடையறத்திக்குக்கள் எங்கும் பரத்தலினுல்—செவிகளும் சேரச்செவிடுபட்டன - காதுகளும் ஒருங்கே செவிடாயின. எ-று.

அச்சுரபதி என்பதில் அகரச்சுட்டு, காண்டவத்தைக் காத்தலாகிய உலகறி பொருண்மையை யுணர்த்திற்று. தன்னுற்காக்கப்படும் காண்டவத்திற் றீப்பற்றி யதைஇந்திரன் உணர்ந்தான் என்பதை ஆசிரியர் இச்செய்யுளாற் கூறினுர். (சச)

வேறு.

விரதமேல்கொண்டுசெம்பொன்மால்வரையைவிரிசுடர்சூழ்வருவதுபோ
லிரதமேல்கொண்டவநுசனுஞ்சுதனுமிமைப்பினிற் பன்முறைதேர்ந்து
சரதமேல்கொண்டுசரிப்பதுந்தனது தாவகம்பாவகன்புகுந்து
பரதமேல்கொண்டுநடிப்பதுங்கருதிப்பார்த்தனன்பாகசாதனனே.

(இ-ள்.) விரிசுடர் - விரிந்த கிரணங்களையுடைய சூரியன்—விரதம் மேல் கொண்டு—நியமத்தை மேற்கொண்டு—செம் பொன் மால் வரையைச் சூழ்வருவதுபோல்—மாற்றுயர்ந்த பொன்னுலாகிய பெரிய மேருமலையைப் பிரதக்ஷிணஞ் செய்வதுபோல—இரதம் மேல் கொண்ட அநுசனும் சுதனும்—தேரின்மேலேறிய உபேந்திரனுகிய கிருஷ்ணனும் தன் புதல்வனுகிய அருச்சுனனும்—இமைப்பினில் பன்முறை தேர்ந்து - ஓரிமைப்பொழுதினுட் பலமுறை ஆராய்ந்து—சரதம் மேல் கொண்டு சரிப்பதும்—(அக்கினி தேவனுக்குத் தாம் கூறிய) சத்தியத்தை மேற்கொண்டு சஞ்சரிப்பதையும்—தனது தாவகம் பாவகன் புகுந்து பரதம் மேல் கொண்டு நடிப்பதும்—தனது காட்டில் அக்கினிதேவன் பிரவேசித்துப் பரத சாத்திர விதியைக் கைக்கொண்டு கூத்தாடுவதையும்—பாகசாதனன் கருதிப் பார்த்தனன்-இந்திரன் சிந்தித்துப் பார்த்தான். எ-று.

ஏ-அசை. தாவகம் என்பதில் ககரம் சுவார்த்தபாவ தத்திதப் பிரத்தியயம். தாவகம் எனினும் தாவம் எனினும் பொருந்தும். சூரியனுக்கு விரதமாவது குறித்த காலத்தில் உதித்தல் மறைதல் செல்லவேண்டிய மார்க்கத்திற் செல்லுதல் என்னும் நியமங்கள். கிருஷ்ணரும் அருச்சுனனும் எவ்வெப்பொழுது எவ்வெவ்விடத்தில் அக்கினிக்கு இடையூறு வாராமற் காக்கவேண்டுமோ அவ்வப்பொழுது அவ்வவ்விடங்களிற் றப்பாது குறிக்கொண்டு காத்து (உன்னிச்சையின்படி யுணவீந்தனம்) என்ற வாக்குத் தத்தத்தை நிறைவேற்றினுர்கள் என்பார் இமைப்பினிற் பன்முறை தேர்ந்து சரதமேல்கொண்டு சரிப்பது என்றும், நம்மவர்களாகிய இவரிருவரும் நம்முடைய காவலிலிருக்கும் வனத்துக்குக் கேடு சூழ்வதென்னை என்றுஇந்திரன் யோசித்துப்பார்த்தான் என்பார் கருதிப்பார்த்தனன் பாகசாதனன் என்றும் கூறினுர். செம்பொன் மால்வரை என்றது அக்கினிபற்றிய காண்டவத்தை. (ச௫)

மூந்தி வார்சிலைக்கைப்பற்குனன்ஞெடுத்தமுரணுடைமூரிவெங்கணைக
ளுந்தி வாளுரகர்சூடிகாமகுடகோடிகளுடைத்தலினுடைந்து
சிந்தி மீதெழுந்தமணிகளுமனலின்சிகைகளிற்றெறித்தெழுபொறியு
மிந்தி ராலயத்துக்கேற்றியதீபமென்னநின்றிலங்கினவெங்கும்.

(இ-ள்.) வார் சிலைக்கைப்பற்குனன் முந்தித் தொடுத்த முரண் உடை மூரி வெம் கணைகள்—நீண்ட வில்லைக் கையிற்றாங்கிய அருச்சுனன் முற்பட்டுத் தொடுத்த பகையையுடைய வலிய கொடிய பாணங்கள்—வாள் உரகர் சூடிகா மகுட கோடிகள் உந்தி உடைத்தலின்—ஒளி பொருந்திய நாகர்களுடைய சூடிகையாகிய மகுட கோடிகளைத் தள்ளி உடைத்தலினால்—உடைந்து சிந்தி மீது எழுந்த மணிகளும்—உடைந்து சிதறிமேலே எழுந்த இரத்தினங்களும்—அனலின் சிகைகளில் தெறித்து எழுபொறியும்—அக்கினிச் சுவாலைகளினின்று தெறித்துமேலெழுந்த பொறிகளும்—இந்திராலயத்துக்கு ஏற்றிய தீபம் என்ன-இந்திரனுடைய கோயிலுக்கேற்றிய தீபங்களைப்போல—எங்கும் நின்று இலங்கின - (விண்ணில்) எவ்விடங்களிலும் நின்று பிரகாசித்தன. எ-று.

சூடிகாமகுடம் இந்திராலயம் என்பன வடநூன்முடிபு. (௭௬)

தானவர்புரங்கணீறெழமுனிந்ததபனியச்சிலைக்கைவெள்ளூர்தி
யானவனமதுபுரத்தையுஞ்சுடுவானழன்றனன்போலுமென்றஞ்சி
வானவர்நடுங்கவானவர்க்கரசாம்வலாரியுமனனுறத்தளர்ந்து
கானவருடனேதக்ககனென்னுங்கட்செவிகெடுமெனக்கரைந்தான்.

(இ-ள்.) தானவர் புரங்கள் நீறு எழ முனிந்த தபனியச் சிலைக்கை வெள் ஊர்தி ஆனவன்—அசுரர்களுடைய முப்புரங்களும் சாம்பராயெழும்படி கோபித்த பொன் மலையாகிய மேரு என்னும் வில்லை ஏந்திய கையையுடைய வெண்மையாகிய இடப வாகனத்தை யுடைய சிவபெருமான்—நமது புரத்தையும் சுடுவான் அழன்றனன்போலும் என்று அஞ்சி - நமது நகரத்தையும் சுடும்படி கோபங்கொண்டனர் போலுமென்று பயந்து—வானவர் நடுங்க - தேவர்கள் நடுக்கமடைய—வானவர்க்கு அரசாம் வலாரியும் மனன் உறத் தளர்ந்து—தேவர்களுக் கரசனாகிய இந்திரனும் மனம் மிகத் தளர்வடைந்து—கானவருடன் தக்ககன் என்னும் கட்செவி கெடும் எனக் கரைந்தான் - வேடுவர்களுடன் தக்ககன் என்கிற பாம்பு அழியும் என்று இரங்கினான். எ-று.

புரத்தையும் வலாரியும் என்னும் உம்மைகள் எச்சத்தோடு சிறப்பு. ஏ-அசை. சிலைக்கையவன் என விகுதியை முன்னுங் கூட்டுக. இந்திரன் தன் புரத்துக்குக் கேடு வருமோ என்று தேவர்களோடு வருத்தமுற்றதேயன்றி, கானவர்களோடு தக்ககன் அக்கினியில் அகப்பட்டு இறந்து விடுவானோ என்றும் வருத்தமடைந்தான் என்க. (௭௭)

பரந்தெழுபுகையாற்றத்தமவடிவம்பண்டையிற்பதின்மடங்காகச்
சுரந்திடும்புயல்களனைத்தையுநெடுநீர்சொரிந்தவித்திடுகெனச்சொல்லி
நிரந்தரமருகுவிடாதுதன்னிழல்போனின்றவானவரையுமேவிப்
புரந்தரன்றானுமிருமருப்புப்பொருப்பின்வெம்பிடர்மிசைபுகுந்தான்.

(இ-ள்.) புரந்தரன்—இந்திரன்—பரந்து எழு புகையால்—பரம்பி எழுகின்ற புகையினால்—தத்தம வடிவம் பண்டையிற் பதின்மடங்கு ஆகச் சுரந்திடும் புயல்கள் அனைத்தையும்—தங்கள் தங்கள் உருவம் முன்னையினும் பத்துமடங்கு அதிகமாக (நீரைச்) சுரக்கின்ற மேகங்கள் அனைத்தையும் (நோக்கி)—நெடுநீர் சொரிந்து அவித்திடுக எனச்சொல்லி—மிக்க நீரைச் சொரிந்து அக்கினியைத் தணியுங்கள் என்று கூறி—நிரந்தரம் அருகுவிடாது தன் நிழல்போல் நின்ற வானவரையும்

ஏவி—எப்பொழுதும் தன் பக்கத்தை விடாது தன்னிழலைப்போல் நின்ற தேவர்களையும் (அதற்குத்துணை செய்யுங்கள் என) அனுப்பி—தானும் ஈரிருமருப்புப் பொருப்பின் வெம்பிடர் மிசை புகுந்தான்—தானும் நான்கு கோடுகளையுடைய ஐராவதத்தின் விரும்பப்படும் பிடரின்மீ தேறினன். எ-று.

வானவரையும் தானும் என்னும் உம்மைகள் எச்சத்தோடு சிறப்பு. அவித்திடுக என்பது ஈறு தொக்கது. புரந்தரன் சொல்லி, ஏவி, புகுந்தான் எனமுடிக்க. புகையினால் முகிலினுரு விருத்தியாகும் என்பதனைப் பின் வரும் 'தூமமுமெமது' என்னுஞ் செய்யுளானு முணர்க. (சஅ)

ஏவகவிருத்தச்செவ்வியின்றனுவுக்கேற்றநாண்முறுக்கிவிட்டென்னச்
சேவகவிமையோரெண்டிசாமுகத்துஞ்செஞ்சுடர்வாள்விதிர்த்தென்னப்
பாவகன்பகுவாய்நாவிதிர்த்தென்னப்பரந்தவப்பாவகற்குணவாந்
தாவகமுழுதும்வளைந்துகொண்டெழுந்தசலதரசஞ்சலசாலம்.

(இ-ள்.) அப் பாவகற்கு உணவு ஆம் தாவகம் முழுதும் வளைந்துகொண்டெழுந்த சலதர சஞ்சலசாலம்—அந்த அக்கினி தேவனுக்கு உணவாகிய காடு முழுதும் சூழ்ந்துகொண்டெழுந்த மேகங்களிலுண்டாகும் மின்னலின் கூட்டம்— ஏ அக விருத்தச் செவ்வியின் தனுவுக்கு ஏற்ற நாண் முறுக்கி விட்டு என்ன - அம்பைத் தன்னிடத்துடைய வட்டமாகிய அழகிய வில்லுக்கியைந்த நாணை முறுக்கி விட்டாற் போலவும் - சேவக இமையோர் - வீரத்தையுடைய தேவர்கள்—எண் திசாமுகத்தும் செம் சுடர்வாள் விதிர்த்து என்ன—எட்டுத் திக்குக் களிலும் செம்மையாகிய ஒளியையுடைய வாட்படைகளைச் சுழற்றினாற் போலவும்—பாவகன் பகுவாய் நாவிதிர்த்து என்ன—அக்கினி தேவன் பிளந்த வாயிலுள்ள தன் நாவைச் சுழற்றினாற் போலவும்—பரந்த—பரந்தன எ-று.

பரந்த அன்பெறு அகர வீற்றுப் பன்மை வினைமுற்று. முறுக்கி விட்டால், விதிர்த்தால் என்பன முறுக்கிவிட்டு விதிர்த்து என நின்றன. திசாமுகம், சலதர சஞ்சலசாலம் என்பன வடநூன் முடிபு. சஞ்சலம்—மின்னல். (சகூ)

ஏறியகளிறுபிளிறுநீடொலியுமெடுத்தவிற்றெறித்தநாணொலியுஞ்
சூறியவிமையோர்பெருநகையொலியுந்துந்துபிக்குழாமதிரொலியுங்
கூறியவனலன்சடுலவல்லொலியுங்குறைபடத்திசைதொறுமிகுந்த
வூறியபுவனபவனவேகத்தொடுருமுடைமுகிலின்வாயொலியே.

(இ-ள்.) ஊறிய புவன பவன வேகத்தொடு உரும் உடைமுகிலின் வாய் ஒலி- ஊறிய நீரையும் வாயுவேகத்தையும் இடியையும் உடையமுகிலினிடத்துண்டாகிய முழக்கம்—ஏறிய களிறு பிளிறு நீடு ஒலியும் - (இந்திரன்) ஏறிய ஐராவத யானை பிளிறுகின்ற பேரொலியும்—எடுத்தவில் தெறித்த நாண் ஒலியும்—(அவன்) கையில் எடுத்த வில்லினது தெறிக்கப்பட்ட நாணோசையும்—சூறிய இமையோர் பெருநகை ஒலியும் - சூழ்ந்த தேவர்களது மிகுந்த சிரிப்பொலியும்—துந்துபிக்குழாம் அதிர் ஒலியும்-துந்துபிகளின் கூட்டம் முழங்குகின்ற ஓசையும்—கூறிய அனலன் வல் சடுல ஒலியும் - சொல்லப்பட்ட அக்கினிதேவனுடைய வலிய சடுல ஓசையும்—குறைபடத் திசைதொறும் மிகுந்த - குறையும்படி திக்குக்கள் தோறும் மிகுந்தன. எ-று.

ஏ-அசை. எண்ணுப் பொருளில் வந்த ஒடுவைப் புவனத்தோடும் கூட்டுக. புவனம் - நீர். சூறுதல் - சூழுதல். தேவர்களுக்குப் பெருநகை கோப மிகுதியாலுண்டாயிற்று. (௫0)

தூமமுமெமதுபவனனுமெமதுதோழனத்தோயமுமெமதே
யாமுமிங்கிவற்றேடொன்றுதலொழிதுமீரிருபொருள்களும்பிரிந்தான்
மாமுகிலெனும்பேரெங்குளதடர்த்துவாசவனென்செயுமெம்மை [ன்.
யாமுறையறிதுமென்றுகொண்டறவுமகங்கரித்தனன்வெகுண்டழலோ

(இ-ள்.) அழலோன் - (முகில்கள் தன்னை அவிக்கவர்தமையைக் கண்ட) அக்கினிதேவன்—தூமமும் எமது - புகையும் நம்முடையது—பவனனும் எமது தோழன்-வாயுவும் நம்முடைய நண்பன்—அத்தோயமும் எமதே - அந்த நீரும் நம்முடையதே—யாமும் இங்கு இவற்றேடு ஒன்றுதல் ஒழிதும்—நாமும் இப்பொழுது இம்முப்பொருள்களோடும்பொருந்துதலை நீங்குதும்—ஈரிருபொருள்களும்பிரிந்தால் மாமுகில் எனும் பேர் எங்கு உளது - இந்நான்கு பொருள்களும் பிரிந்தால் கரிய முகிலென்னும் பெயர் யாண்டுள்ளது—வாசவன் எம்மை அடர்த்து என்செயும் - இந்திரன் எம்மைப் பொருதுயாது செய்வான்—ஆம்முறை அறிதும்என்று கொண்டு—இனி ஆகும் முறைமையை அறிகுதுமென்று உட்கொண்டு—அறவும் வெகுண்டு அகங்கரித்தனன் - மிகவும் கோபித்து அகங்கரித்தான். எ-று.

உம்மைகள் நான்கும் எச்சம். அக்கினி சம்பந்தமாகிய சூரிய கிரணங்கள் ஜலத்தை இழுக்க அது நுட்பமாகிய புகையாயெழுந்து வாயுவோடு கலந்து முகில்வடிவாதலால் இங்ஙனங் கூறப்பட்டது. ஈண்டு மாமுகில் என்பதற்கு உலகமும் அதற்குறுதியாகிய அறம் பொருளின்பங்களும் நடத்தற்கு ஏதுவாம் பெருமையுடைமை பற்றிப் பெருமையையுடைய முகில் எனப் பொருள் கூறினும் பொருந்தும். இந்திரன் நம்மைத் தணித்தற்கு இன்றியமையாத் துணையாகக்கொண்ட முகில்கள் அழிதலால் அவன் நம்மை வெல்வதில்லை யென்னுங் கருத்தால் வாசவனென்செயு மெம்மை என்று அக்கினி கூறினன். (௫௧)

மூண்டவெங்கனலையுருமின்வெங்கனலான்முருக்கியெங்கால்கையா
னெருக்கி, யாண்டவன்களிற்றின்கரநிகர்தாரையருவியின்கணங்களாலவித்துப், பாண்டவன்பகழிதொடுக்கினுங்கண்ணன்பருப்பதமெடுக்கினுமெங்கள், காண்டவம்புரத்துமென்றுகொண்டிழிந்துபொழிந்தனகணம்படுகனங்கள்.

(இ-ள்.) கணம்படு கனங்கள் - கூட்டமாகிய மேகங்கள்—பாண்டவன் பகழி தொடுக்கினும் - அருச்சுனன் (நம்மேலே) பாணங்களைத் தொடுத்தாலும்—கண்ணன் பருப்பதம் எடுக்கினும் - கிருஷ்ணர் மலையைக் (குடையாக) எடுத்துக் காக்கினும்— எம் கால் கையால் நெருக்கி - எங்களுடைய கால்களாலும் கைகளாலும் (அவைகளை) நெருக்கி—மூண்ட வெம் கனலை உருமின் வெம் கனலால் முருக்கி-மூண்ட வெம்மையாகிய அக்கினியை (நம்முடைய) இடியிலுண்டாகும் வெம்மையாகிய அக்கினியினுற் கெடுத்து—ஆண்டவன் களிற்றின் கரம் நிகர் தாரை அருவியின் கணங்களால் அவித்து - எங்கள் அரசனுடைய ஐராவதயானையின் துதிக்கையை யொத்த தாரையாகிய அருவியின் கூட்டங்களாற் றணித்து—எங்கள் காண்

டவம் புரத்தும் என்று கொண்டு இழிந்து பொழிந்தன - எங்களுடைய காண்டவத்தைக் காப்போம் என்று சொல்லிக்கொண்டு இறங்கி மழையைப் பொழிந்தன. எ - று.

நெருக்குதற்குச் செயப்படுபொருள்கள் பகழியும் பருப்பதமும். இனிக் கனலைச் செயப்படுபொருளாக்கி அதற்கியைய முதலடிக்குஆற்றொழுக்காகப் பொருள் கொள்வாருமுளர். தமது தலைவனாகிய இந்திரனாற் காக்கப்படும் உரிமைபற்றி அவ்வனத்தை எங்கள் காண்டவம் என முகில்கள் கூறின. ஆண்டவன் என்பது தேவன் என்பதன்றித் தம்மை அடிமையாகக் கொண்டவன் என்னும் உயர்ச்சி தோன்ற நின்றது. (௫௨)

காலைவாயருக்கன்பனிநுகர்ந்தென்னக்கட்டழற்காண்டவமென்னும்
பாலைவாயுள்ளசராசரமனைத்துநுகர்தலிற்பைம்புனல்வேட்டான் [ளாற்
வேலையேழையுமொண்டேழுமாமுகிலும்விதம்படப்பொழிந்ததாரைக
தாலுவேழினையுநனைத்தனனனைத்துந்தணிந்ததோதன்பெருந்தாகம்.

(இ-ள்.) காலை வாய் அருக்கன் பனி நுகர்ந்து என்ன - உதயகாலத்திலே சூரியன் பனியை உண்டாற்போல—கட்டழல் காண்டவம் என்னும் பாலைவாய் உள்ள சராசரம் அனைத்தும் நுகர்தலின் - பேரழலையுடைய காண்டவமென்கின்ற பாலை நிலத்திலுள்ள இயங்கியற்பொருள் நிலையியற்பொருளாகிய அனைத்தையும் உண்ணுதலினால்—பைம்புனல் வேட்டான் - பசுமையாகிய நீரை விரும்பிய அக்கினிதேவன்—எழு மா முகிலும் வேலை ஏழையும் மொண்டு விதம்படப் பொழிந்த தாரைகளால் - எழு கரிய முகில்களும் கடலேழையும் முகந்து பலதிறப்படச் சொரிந்த மழைத்தாரைகளால்—தாலு ஏழினையும் நனைத்தனன் - எழு நாக்களையும் நனைத்தான்—நனைத்தும் தன் பெரும் தாகம் தணிந்ததோ - அவ்வாறு நனைத்தும் அவனது பெரிய நீர்வேட்கை அடங்கிற்றோ. எ-று.

வேட்டான் - வினையாலணையும்பெயர். நுகர்ந்தென்ன நுகர்தலிற் புனல் வேட்டான் நனைத்தனன் என முடிக்க. கட்டழல் - ஒருசொல். முகில்கள் எழுவிதத்தனவாதலால் அவை பொழிந்த தாரைகளும் பலதிறத்தனவாயின வென்பார் விதம்படப் பொழிந்த தாரைகள் என்றார். (௫௩)

எக்கடல்களினுமினிப்பசையிலதென்றேழிருபுவனமுநடுங்கத் [கந்து
தொக்கடலுருமோடெழுமெழுகொண்டற்சோனையஞ்சுருவையான்மு
மைக்கடல்வெளுக்கக்கறுத்தமெய்ம்மகவான்வழங்கியவாகுதியனைத்து
நெய்க்கடல்சொரிந்ததென்னுமாறருந்திநீடுவான்முகடுறநிமிர்ந்தான்.

(இ-ள்.) மைக்கடல் வெளுக்கக் கறுத்த மெய் மகவான் - கரிய கடலும் வெளுக்கக் கறுத்த சரீரத்தையுடைய இந்திரனாகிய யாகஞ்செய்பவன்—எக் கடல்களினும் இனிப் பசை இலது என்று ஏழிரு புவனமும் நடுங்க - எந்தச் சமுத்திரங்களினும் இனி நீர்ப்பசை இல்லை என்று பதினாலுலகங்களிலுள்ள உயிர்களும் நடுங்க—தொக்கு அடல் உருமோடு எழும் சோனை எழு கொண்டல் சுருவையால் முகந்து - திரண்டு வலிய இடியோடு எழுகின்ற விடாமழையைப் பொழியும் எழு முகில்களாகிய நெய்த்துடுப்பினால் மொண்டு—வழங்கிய ஆகுதி அனைத்தும் - சொரிந்த மழையாகிய ஆகுதிகளனைத்தையும்—நெய்க்கடல் சொரிந்தது என்னுமாறு

அருந்தி - நெய்க்கடல் சொரியப்பட்டது என்று சொல்லும்படி (அக்கினிதேவன்) உண்டு—நீவொன் முகடு உற நிமிர்ந்தான் - உயர்ந்த அண்டமுகட்டைப் பொருந்தச் சுவாலித்தான். எ-று.

அம் சாரியை. புவனம் ஆகுபெயர். கடலும் என்னும் சிறப்பும்மை விகாரத் தாற் றொக்கது. ஈண்டு இடிமுழக்கம் ஆகுதிசெய்யுங்காலத்தில் வேதவொலிபோன் றிருந்தது என்பார் கொண்டலாகிய சுருவையை உருமோடெழுமென விசேடித் தார். மழை அக்கினிதேவனுக்குத் தாகசமனஞ் செய்ததன்றி அவனைத் தணித்தி லது என்பது தாற்பரியம். (௫௪)

தொழுதகுவிசயன்றாலுவேழுடையோன்சுடர்முடிநனைந்திடுவதன்முன், னெழுமுகிலினமும்பொழிதருமாரியானையுமேவினால்விலக்கி, முழுதுலகமுந்தன்னிடத்தடக்கியவான்முகடுறமுறைமுறையடுக்கிக், குழுமுவெங்கணையாற்கனற்கடவுளுக்குக் கொற்றவான்கவிகையுங்கொடுத்தான்.

(இ-ள்.) தொழுதகு விசயன் - எவராலும் வணங்கத்தகும் அருச்சுனன்—தாலு ஏழு உடையோன் சுடர்முடி நனைந்திடுவதன்முன் - ஏழு நாக்கலையுடைய அக்கினிதேவனது ஒளியையுடைய முடி நனைதற்கு முன்னரே—எழு முகிலினமும் பொழிதரு மாரி யாவையும் - ஏழு முகிற்சாதிகளும் பொழிகின்ற மழை அனைத்தையும்—எவினால் விலக்கி - அம்புகளினாற் றடுத்து—வான்முகடு உற முறைமுறை அடுக்கிக் குழுமு வெம் கணையால் - அண்டமுகட்டைப் பொருந்த முறைமுறையாக அடுக்கி நெருங்கிய வெம்மையாகிய பாணங்களால்—முழுது உலகமும் தன்னிடத்து அடக்கிய - எல்லா வுலகங்களையும் தன்னிடத்து அடக்கிய—வான் கொற்றக் கவிகையும் - பெரிய வெண் கொற்றக் குடையையும்—கனற் கடவுளுக்குக் கொடுத்தான் - அக்கினிதேவனுக்குக் கொடுத்தான். எ-று.

கவிகையும் என்னும் உம்மை உணவையன்றி என்னும் எச்சப்பொருளோடு சிறப்புப் பொருளுந் தந்தது. அடக்கிய கவிகை என இயையும். அடக்கிய என் பதை வினையெச்சமாக்கிக் காண்டவத்தை மாத்திரமன்றி உலகமுழுதையு மறைக் கும்படி கவிகையுங் கொடுத்தான் எனவும், முழுதுலகையுந் தன்னிடத்தடக்கிய வான்முகடு எனவும் பொருள் கூறுவாருமுளர். (௫௫)

ஆழ்தருபரவையேழும்வற்றிடுமாறழித்தகாருமிழ்ந்திடுநெடுநீர், தாழ்தருசரத்தான்மேய்ந்ததற்கிடையோர்தனித்திவலையும்பொசியாமல், வீழ்தருமருவிபாவகன்றனக்குவிசயனன்றளித்தபொற்குடைக்குச், சூழ்தரநிரைத்துத்தூக்கியமுத்தின்சுடர்மணித்தொடையல்போன்றனவே.

(இ-ள்.) ஆழ்தரு பரவை எழும் வற்றிடுமாறு அழித்த கார் உமிழ்ந்திடு நெடு நீர் - ஆழமாகிய கடலேழும் வற்றும்படி பருகிய முகில்கள் சொரிகின்ற மிக்கநீர்—தாழ்தரு சரத்தால் மேய்ந்ததற்கு இடை ஓர் தனித் திவலையும் பொசியாமல் வீழ்தரும் அருவி - தாழ்ந்த அம்புகளினாலே வேய்ந்த கூடத்திற்கு இடையே ஒரு சிறு திவலையும் பொசியாமல் (சுற்றுப்பக்கத்தில்) விழுகின்ற அருவிகள்—பாவகன் தனக்கு விசயன் அன்று அளித்த பொன்குடைக்கு - அக்கினிதேவனுக்கு அருச்சுனன் அன்றைக்குக் கொடுத்த அழகிய குடைக்கு—சூழ்தர நிரைத்துத் தூக்கிய முத்தின்

சுடர்மணித் தொடையல்போன்ற - சூழ நிரைத்துத் தூக்கிய முத்துக்களாலாகிய ஒளி பொருந்திய அழகையுடைய தூக்கங்களை ஒத்தன. எ-று.

நீர் திவலையும் பொசியாமல் வீழ்தரு மருவி என இயையும். தனிமை என்றது சிறுமையையும் அழித்தல் என்றது "கடல்குறை படுத்தநீர்" என்பதில் குறைபடுத்தல் என்பதுபோல முகத்தலையும் உணர்த்தின. (௫௬)

மண்டிமீதெழுந்தவன்னியின்சிகைகளிந்திரன்மதலைவாளிகளாற்
கண்டகூடத்திற்கமைத்தசெம்பவளக்காண்டகுதூண்டிரள்காட்ட
வண்டகூடத்திற்கிந்திரன்பளிங்காலமைத்தபல்லாயிரகோடி
சண்டதூணங்கள்போன்றனபரந்துதனித்தனிமுகில்பொழிதாரை.

(இ-ள்.) மண்டிமீது எழுந்த வன்னியின் சிகைகள் - நெருங்கி மேலெழுந்த அக்கினிச் சுவாலைகள்—இந்திரன் மதலை-அருச்சுனனானவன்—வாளிகளால்கண்ட கூடத்திற்கு அமைத்த காண்தகு செம்பவளத்தூண் திரள்காட்ட - அம்புகளினாற் செய்த மண்டபத்திற்கு இயற்றிய அழகு தக்க சிவந்த பவளத்தூண்களின் கூட்டங்களைக் காட்ட—முகில் பரந்து தனித்தனி பொழிதரு தாரை - முகில்கள் பரந்து தனித்தனி சொரிகின்ற மழைத்தாரைகள்—இந்திரன் அண்டகூடத்திற்குப் பளிங்கால் அமைத்த பல் ஆயிரகோடி சண்ட தூணங்கள் போன்றன - இந்திரனானவன் அண்ட கூடத்துக்குப் பளிங்கினாற்செய்த பல ஆயிரகோடி வலியதூண்களை ஒத்தன. எ-று.

அருச்சுனனுடைய சகாயத்தைப்பெற்று அவன்செய்த சரகூடத்தினுள் எரிந்தமையால் அக்கினிச் சுவாலைகளை அருச்சுனன் தான்செய்த சரகூடத்திற்கமைத்த பவளத்தூண்கள் என்றும், இந்திரனுடைய பணியினால் முகில்கள் வானினின்று மழைத்தாரைகளைச் சொரிந்தமையால் அவற்றை அண்டகூடத்திற்கு இந்திரன் பளிங்காலமைத்த தூண்கள் என்றும் கூறினார். இந்திரனுடைய ஏவலினால் முகில்கள் மிகுந்த மழையைப் பொழியவும் அருச்சுனனுடைய சகாயத்தினால் அக்கினியும் சுவாலித் தெரிந்த தென்பது தாற்பரியம். (௫௭)

தக்ககன்றன்னைக்கூயினர்தேடிச்சாயகமண்டபஞ்சுற்றி
மிக்கவிண்ணவர்கடிரிதரவவன்றன்மெல்லியன்மகவையும்விழுங்கி
யக்கணந்தன்னிலந்தரத்தெழலும்வீழ்த்தினனம்பினாற்றுணித்துச்
செக்கனலுருவச்சென்னியையுரகர்கன்னியைத்திருமணஞ்செய்தான்.

(இ-ள்.) மிக்க விண்ணவர்கள் - மிகுந்த தேவர்கள்—தக்ககன் தன்னைக் கூயினர் தேடிச் சாயக மண்டபம் சுற்றித்திரிதர - தக்ககனை அழைத்துத் தேடி (அருச்சுனன் விடுத்த) அம்புகளாலாகிய மண்டபத்தைச் சுற்றித் திரிய—அவன் தன் மெல்லியல் - அத்தக்ககனுடைய மனைவியானவள்—மகவை விழுங்கி அந்தரத்து எழலும் - புதல்வனை வாயாற் பற்றிக்கொண்டு ஆகாயத்தில் எழும்புதலும்—உரகர் கன்னியைத் திருமணஞ்செய்தான்-உலூபியைத் திருமணஞ்செய்த அருச்சுனன்—செம் கனல் உருவச் சென்னியை - (அவளுடைய) சிவப்பாகிய அக்கினிபோலும் நிறத்தையுடைய தலையை—அக்கணம் தன்னில் அம்பினால் துணித்து வீழ்த்தினான் - அந்தக் கணத்தில் அம்பினால் அறுத்து விழுத்தினான். எ-று.

மகவையும் என்னும் உம்மை இசை நிறை. சிறப்பும்மை எனினும் பொருந்தும். தன் மூன்றும் சாரியை. கூயினர் - வினையெச்சமுற்று. செங்கனல் எனற்பாலது எதுகைநோக்கி வலித்து நின்றது. அக்கினிதேவனுக்குத் தான் முன்

செய்த வாக்குத்தத்தத்தை நோக்கினனன்றி நாகர்கள் தனக்குறவினர் என்பதனை நோக்கானுயினன் என அருச்சுனனுடைய உறுதிநிலை கூறுவார் உரகர் கன்னியைத் திருமணஞ்செய்தான் வீழ்த்தினன் என்றார். (௫௮)

மருவயிற்சதகோடியினிறையைராவதத்தின்மும்மதத்தினனைத்துக்
கருவயிற்றெழிலித்தாரையால்வருணக்கடவுள்கணைகளாலவித்துச்
செருவயிற்புரளவொதுக்கியத்தோழன்சிறுவனைச்சென்றெடுத்தணைத்தா
னொருவயிற்பிறந்தோனுதலின்மகவானுடனுடன்றிலனுதாசனனே.

(இ-ள்.) அயில் மருவு சதகோடியின் இறை - கூர்மைபொருந்திய வச்சிராயுதத்தையுடைய இந்திரன்—கருவயிற்று எழிலித்தாரையால் வருணக்கடவுள் கணைகளால் அவித்து - சூற்கொண்ட வயிற்றையுடைய முகிலின் மழைத் தாரையாலும் வருணாஸ்திரங்களாலும் (அக்கினியைத்) தணித்து—அத்தோழன் சிறுவனை - அந்த (அக்கினியிலகப்பட்ட) தோழனாகிய தக்ககனுடைய மகனை—செருவயின் புரள ஒதுக்கி - போர்க்களத்தினின்றும் விலகும்படி ஒதுக்கி—ஐராவதத்தின் மும்மதத்தினால் நனைத்து - ஐராவதயானையின் மும்மதத்தால் நனைத்து—சென்று எடுத்து அணைத்தான் - போய் எடுத்தணைத்தான்—உதாசனன் - அக்கினிதேவன்—ஒருவயிற் பிறந்தோன் ஆதலின் மகவானுடன் உடன்றிலன் - சகோதரன் ஆதலால் இந்திரனோடு மாறுபட்டிலன். எ-று.

மும்மதத்தினால் நனைத்தது அக்கினியை என்பாருமுளர். தேவர்களுக்குத் தாய் அதிதியாதலால் அக்கினியை இந்திரனுடன் பிறந்தவன் என்றார். விஷ்ணுவினுடைய முகத்திலிருந்து அக்கினியும் இந்திரனும் பிறந்தார்கள் என வேதஞ் சொல்லுதலால் ஒருவயிற் பிறந்தவர் என்றலும் ஒன்று. இப்பொருட்கு வயின் இடம். (௫௯)

அன்னைவாயொடுதன்வாலதிதுணியுண்டலமருமச்சுவசேனன் [ன்
றன்னைவாசவன்போய்வீடுகண்டுழியத்தனஞ்சயன்றனதுவெங்கணையா
முன்னைவானவரைமுனைமுகந்தன்னின்முதுகிடமுதுகிடமுருக்கிப்
பின்னைவாரிதங்களேழையும்பொருதுபின்னிடப்பின்னிடப்பிளந்தான்.

(இ-ள்.) அன்னை வாயொடு தன் வாலதி துணியுண்டு அலமரும் அச்சுவசேனன் தன்னை - தாயின் தலையோடு தன்வால் வெட்டுண்டு சுழலுகின்ற அச்சுவசேனன் என்பவனை—வாசவன் போய் வீடு கண்டுழி - இந்திரன்போய் (அக்கினியினின்றும்) விடுவித்தபொழுது—அத்தனஞ்சயன் - அந்த அருச்சுனன்—தனது வெம் கணையால் முன்னை வானவரை முனைமுகம் தன்னில் முதுகிட முதுகிட முருக்கி - தன்னுடையகொடிய பாணங்களினால் முன்பு தேவர்களை யுத்தத்திற் புறந்தரப் புறந்தரப்பொருது—பின்னை வாரிதங்கள் ஏழையும் பின்னிடப் பின்னிடப் பொருது பிளந்தான்—பின் முகில்களேழையும் பின்னிடும்படி பின்னிடும்படி போர்செய்து பிளந்தான். எ - று.

வாய் - ஆகுபெயர். முன்னை பின்னை என்பவற்றில் ஐகாரம் சாரியை. வாரிதம் - மேகம். (௬௦)

தீரமால்பொருதுவீடுகண்டதற்பின்செக்கர்மெய்த்தக்ககன்பயந்த
பாரமாசுணமவ்விசயனுக்கியாவர்பகையெனப்பலரையும்வினவிச்
சூரன்மாமதலைசரணமேயரணநமக்கெனத்தொழுதுபோயெய்தி
வீரமாமுனைவெம்பகழியாகியதெம்மேதினியினும்பெருவார்த்தை.

(இ - ள்.) தீரமால் பொருது வீடு கண்டதற்பின் - வீரத்தையுடைய இந்திரன் யுத்தஞ்செய்து விடுவித்தபின்பு—செக்கர் மெய்த் தக்ககன் பயந்த பாரமாசுணம்-சிவப்பாகிய சரீரத்தையுடைய தக்ககன்பெற்ற பருத்த அச்சுவசேனன் என்னுஞ் சர்ப்பமானது—அவ்விசயனுக்கு யாவர் பகை எனப் பலரையும் வினவி - (தனக்குத் துயர்புரிந்த) அந்த அருச்சுனனுக்கு யாவர் பகைவரென்று பலரையுங் கேட்டு—மாசூரன் மதலை சரணமே நமக்கு அரணம் எனப் போய் எய்தி தொழுது-பெரிய சூரிய குமாரனாகிய கன்னனுடைய பாதங்களே நமக்குப் புகலிடம் என்று போயடைந்து வணங்கி—வீரமாமுனை வெம் பகழி ஆகியது - வீரம்பொருந்திய பெருமையாகிய நுதியையுடைய கொடிய பாணமாகியது—எம் மேதினியினும் பெருவார்த்தை - இது எவ்வுலகிலும் பெருங்கதை. எ-று.

ஏகாரம் தேற்றம். மால் இந்திரன். அச்சுவசேனனுடைய உயர்ச்சி கூறுவார் பாரமாசுணம் என்றார். அருச்சுனனுக்குப் பகைவன் கன்னனே என்று பலரும் சொல்லக்கேட்டு மாசுணம் அவனைச் சரண்புகுந்ததென்க. (௬௧)

தோழன்மாமகனைக்கண்டபின்றனதுதோழனையொருவயிற்காணான்
வேழமாமுகத்திற்கைத்தலம்புடைத்தான்விழிகளாயிரங்களுஞ்சிவந்தான்
யாழமாதிரத்தினெதிரொலியெழுமாறெயிற்றிளநிலவெழநகைத்தான்
றாழ்மாநிலத்தினின்றமர்விளைக்குந்தன்பெருந்தனையனைமுனிந்தான்.

(இ - ள்.) தோழன் மாமகனைக் கண்டபின் - தன் நண்பனுடைய பெருமையாகிய புதல்வனைக் கண்டபின்னர்—தனது தோழனை ஒருவயின் காணான் - தன் நண்பனாகிய தக்ககனை ஓரிடத்துங் காணாதவனாய்—வேழ மா முகத்தில் கைத்தலம் புடைத்தான் - ஐராவதயானையின் பெரிய மத்தகத்திற் கையைப்புடைத்து—விழிகள் ஆயிரங்களும் சிவந்தான் - கண்கள் ஆயிரங்களும் சிவந்து—மாதிரத்தின் எதிரொலி எழுமாறு எயிற்று இள நிலவு எழ நகைத்தான் - திக்குக்களில் பிரதித்தொனி எழும்படி பற்களினின்றும் இளநிலாத் தோன்றச் சிரித்து—மாநிலத்தில் நின்று அமர் விளைக்கும் தன்பெருந் தனையனை - பெரிய பூமியினின்று யுத்தஞ்செய்யும் தன்னுடைய பெருமைபொருந்திய புதல்வனாகிய அருச்சுனனை—தாழ முனிந்தான் - தான்றாழ்வடையும்படி கோபித்து. எ - று.

வயினும் என்னும் முற்றும்மை விகாரத்தாற் றொக்கது. யாழ அசைநிலை; அது படர்க்கைக்கண் வந்தது. ஒலியெழுமாறு நகைத்தான் நிலவெழ நகைத்தான் எனத்தனித்தனி கூட்டி முடிக்க. தாழ என்பது காரியப்பொருளில் வந்த எதிர்கால வினையெச்சம். வேழமா வேழமாகிய மா எனினும் பொருந்தும். இந்திரன் அருச்சுனனை முனிந்து அவனோடு போர்செய்யப் புகுந்தமையால் இடித்துவசமுந்துணிந்து தேவர்களோடு அபசெயப்பட்டுத் தாழ்வடைந்தான் ஆதலால் தாழமுனிந்தான் என்றார். இப்பொருள் தெற்றெனப் புலப்படுதற்கன்றே ஆசிரியர் அருச்சுனனை வாளா தனையன் என்னாது தன் பெருந்தனையன் என்றதூஉ மென்க. இனி, மாநிலத்தில் தாழநின்று எனமாற்றி, பூமியிற் கீழாக நின்று எனப்பொருள் கூறுவாருமுளர். அவர், நிலத்தில் நின்று எனவே கீழாக என்பது கூறாதே யமைந்து கிடந்தமையின் அதனாற் சிறந்த பொருட்பே றில்லாமையை நோக்கிற்றிலர் போலும். (௬௨)

மேகசாலங்களிளைத்ததுந்திளைத்துமேவிடுவிண்ணவரணிந்த
யூகசாலங்களுடைந்ததுங்கண்டானுருத்தெழுந்துள்ளமுங்கொதித்தா
னேகசாபமுந்தன்னேகசாயகமுமிமைப்பளவையின்விரைந்தெடுத்தான்
பாகசாதனனுமேனையதிசையின்பாலரும்படுமேல்கொண்டார்.

(இ - ள்.) பாகசாதனனும் - இந்திரனும்—மேகசாலங்கள் இளைத்ததும் - (தானனுப்பிய) மேகக் கூட்டங்கள் இளைப்படைந்தமையையும்—இளைத்து மேலிடு விண்ணவர் அணிந்த யூக சாலங்கள் உடைந்ததும் கண்டான் - நெருங்கி வந்து எதிர்த்த தேவர்கள் வகுத்த படை வகுப்பின் கூட்டங்கள் அணிகுலைந்தமையையுங்கண்டு—உருத்து எழுந்து உள்ளமும் கொதித்தான் - கோபித்தெழுந்து மனமுங்கொதித்து—தன் ஏகசாபமும் ஏகசாயகமும் இமைப்பளவையின் விரைந்து எடுத்தான் - தனது ஒரேவில்லையும் ஒரே பாணத்தையும் நொடிப்பொழுதினும் விரைந்து எடுத்தான்—ஏனையதிசையின் பாலரும் பகடு மேல் கொண்டார் - ஒழிந்ததிக்குப் பாலகர்களும் (தத்தம்) வாகனங்களில் ஏறினார்கள். எ - று.

உள்ளமும் என்னும் உம்மை எச்சம். பாகசாதனனும் திசையின் பாலரும் என்னும் உம்மைகள் சிறப்போடு எச்சம். மேலைச் செய்யுளோடு இதனை ஒரு தொடராக்கி, பாகசாதனன் காணுய்ப்புடைத்துச் சிவந்து நகைத்து முனிந்து கண்டு கொதித்து எடுத்தான் என வினைமுடிவுசெய்க. தன் ஏகசாபமும் சாயகமும் என்றது இந்திரவில்லையும் இந்திர பாணத்தையும். வேறு நிகரின்மையால் ஏகமென்றார் எனினுமாம். பகடு - ஊர்தி. (௯௩)

தேவருங்கோடிதேவருக்கொருவர்சிரங்களாய்நின்றமுப்பத்து
மூவருந்தத்தம்வாகமேல்கொண்டுமுந்துறவந்துவந்தணிந்தார்
யாவரும்புவனத்தின்றுகொலுகத்தினிறுதியென்றிரங்கினர்நடுங்க
மேவருமனிதரிருவரோடநேகவிபுதரும்வெகுண்டுபோர்விளைத்தார்.

(இ - ள்.) தேவரும் - (முப்பத்துமுக்கோடி) தேவர்களும்—கோடிதேவருக்கு ஒருவர் சிரங்களாய் நின்ற முப்பத்து மூவரும் - ஒவ்வொரு கோடி தேவர்களுக்கு ஒவ்வொருவர் தலைவராய் நின்ற முப்பத்து மூவரும்—தத்தம் வாகம் மேல் கொண்டு முந்துறவந்து வந்து அணிந்தார் - தத்தமக்குரிய வாகனங்களில், ஏறி முற்பட வந்து வந்து அணிவகுத்தார்கள்—புவனத்து யாவரும் உகத்தின் இறுதி இன்று கொல் என்று இரங்கினர் நடுங்க - புவனங்களிலுள்ள சகலரும் உகமுடிவு இன்றோ என்று இரங்கி நடுங்க—மேவரும் மனிதர் இருவரோடு அநேக விபுதரும் வெகுண்டு போர்விளைத்தார் - கூடிநிற்கும் கிருஷ்ணன் அருச்சுனன் என்னும் மனுடரிருவரோடு அநேக தேவர்களும் கோபித்துப் போர் செய்தார்கள். எ - று.

மேவரும் என்பதனை மேவ அரும் எனப் பிரித்துப் போரிலே பகைவர்கள் அணுகுதற்கரிய மனிதர் எனப் பொருள் கூறினும் பொருந்தும். கோடிதேவருக்கொருவர் சிரங்களாய் நின்ற முப்பத்து மூவராவார் மருத்துவர் இருவர், வசுக்கள் எண்மர், உருத்திரர் பதினொருவர், சூரியர் பன்னிருவர். பின்னே 'கங்கையென்னும் யாய் வயிற்றினுற்பவித்த புண்ணியனொழிந்தோர்' என்றமையால் முப்பத்து மூவர் என்றது அவனை யொழிந்தோரை. (௯௪)

பச்சைவாசிகளுஞ்செய்யனவாகப்பாகரும்பதங்களேயன்றித்
தச்சவாளிகளாற்கரங்களுமிழந்துதனிப்பெருந்திகிரியுந்தகர
வுச்சமாமகத்திற்பண்டொடிந்தொடியாதொழிந்தனபற்களுமொடிய
வச்சமேதுணையாவருக்கனுமொழிந்தவருக்கர்பன்னொருவருமகன்றார்.

(இ - ள்.) அருக்கனும் ஒழிந்த அருக்கர் பன்னொருவரும் - சூரியனும் ஒழிந்த சூரியர் பதினொருவரும்—பச்சை வாசிகளும் செய்யனவாக - (தமது தேரிற்பூட்டிய) பச்சைக்குதிரைகளும் சிவந்தனவாக—பாகரும் பதங்களே அன்றித் தச்சவாளி

களால் கரங்களும் இழந்து - பாகர்களும் கால்களேயன்றித் தைத்த பாணங்களாற் கைகளும் இழக்க—பெரும் தனி திகிரியும் தகர - பெரிய ஒருருளையுந் தகர—பண்டு உச்சமாம் மகத்தில் ஒடிந்து ஒடியாது ஒழிந்தன பற்களும் ஒடிய-முன்னாளில் உயர்ச்சி பொருந்திய (தக்கனது) யாகத்தில் தகர்ந்து தகராதொழிந்த பற்களும் தகர—அச்சமே துணையா அகன்றார் - பயமே துணையாக ஓடினார்கள். எ-று.

அருக்கனும் ஒழிந்த அருக்கர் பன்னொருவரும் ஆக, இழக்க, தகர, ஒடிய அகன்றார் என வினைமுடிவு செய்க. இழந்து என்பது செயவெனெச்சம் செய்தெனெச்சமாய்த்திரிந்து நின்றது. உச்ச மாமகம் எனப்பிரித்து ஒரு பொருட் பன்மொழி எனினும் பொருந்தும். அச்சத்தோடு ஓடினார் என்பார் அச்சமே துணையா அகன்றார் என அச்சத்தை அவருடனிகழ்வதாக வருணித்தமையால் இது உடனவிற்சியணி. அருக்கன் என்றது பிரதான சூரியனாகிய இரவியையும் ஒழிந்த அருக்கர் பன்னொருவர் என்றது வைகர்த்தனன் முதலிய மற்றைப் பதினொருவரையும். தக்ஷப்பிரசாபதி சிவபெருமானை நிந்தித்துச் செய்த யாகத்தில் வந்திருந்த தேவர்களை வீரபத்திரக் கடவுள் தண்டித்துச் சூரியர்களுடைய பற்களையுந்தகர்த்தார் என்பது புராணகதை. (௬௫)

எண்ணியவசுக்களெண்மரிற்கங்கையென்னும்யாய்வயிற்றினுற்பவித்த
புண்ணியனொழிந்தோரெழுவருந்தங்கள்புயவலிமையிற்பொருதிடுவார்
நண்ணியவமரின்விசயன்வெங்கணையானாப்புலர்ந்துள்ளமுநடுங்கி
யண்ணியநிலயம்புகுந்தனரென்றானிற்பரோவாயுள்வேதியரே.

(இ - ள்.) எண்ணிய வசுக்கள் எண்மரில்—மதிக்கப்பட்ட வசுக்கள் எட்டுப்பேரில்—கங்கை என்னும் யாய் வயிற்றின் உற்பவித்த புண்ணியன் ஒழிந்தோர் எழுவரும் - கங்கையென்னுந் தாயின் வயிற்றிலவதரித்த புண்ணியனாகிய பிரபாசனனை யொழிந்தோர் எழுபேரும்—தங்கள் புயவலிமையிற் பொருதிடுவார் - தங்கள் புய்வலிமையினாலே யுத்தஞ் செய்பவராய்—நண்ணிய அமரின் - நேர்ந்த யுத்தத்தில்—விசயன்வெம் கணையால் நாப்புலர்ந்து உள்ளமும் நடுங்கி அண்ணிய நிலயம் புகுந்தனர் என்றால் - அருச்சுனனுடைய கொடுமையாகிய பாணங்களால் நாவரண்டு மனமும் நடுங்கித் தாம் தங்கிய பதத்தை அடைந்தனரென்றால்—ஆயுள் வேதியர் நிற்பரோ - தேவமருத்துவர் (ஓடாது) நிற்பர்களோ. எ - று.

ஏ அசை. உள்ளமும் என்னும் உம்மை எச்சம். பொருதிடுவார் வினையெச்சமுற்று. எல்லாப் பாவங்கட்குங் காரணமாகிய பெண்ணாசையை விடுத்து நைட்டிகப் பிரமசரிய விரதத்தை வழுவாமற் காத்தோனாதலால் வீட்டுமனைப் புண்ணியன் என்றார். (௬௬)

அருணவெங்கனலோன்கனலொடுகலந்தானாசுகனவற்குநண்பானான்
கருணையில்யமனுங்கானிடைமடியுங்கணத்திலேகவலையுற்றனனால்
வருணனுங்கடல்கள்வறத்தல்கண்டழிந்தான்மதியொடுவைச்சிரவணனு
மிருணிறவரக்கன்றானுமிங்கிவரோடெங்ஙனம்பொருதுமென்றிளைத்தார்.

(இ - ள்.) அருணவெம் கனலோன் கனலொடு கலந்தான் - செந்நிறத்தையுடைய வெம்மையாகிய அக்கினிதேவன் (அவ்வனத்தை எரிக்கின்ற) அக்கினியோடுசேர்ந்தான்—ஆசுகன் அவற்கு நண்பு ஆனான் - வாயுதேவன் அவனுக்குச் சினேகனானான்—கருணை இல் யமனும் கானிடை மடியும் கணத்திலே கவலையுற்றனன்- கிருபையில்லாத யமனும் காட்டில் அழிகின்ற சீவராசிகளைக் கவர்தலிலே கவலை

யைப்பொருந்தினன்—வருணனும் கடல்கள் வறத்தல் கண்டு அழிந்தான் - வருணனும் சமுத்திரங்கள் வற்றுதலைக்கண்டு மனமழிந்தான்—மதியொடு வைச்சிரவணனும் இருள் நிற அரக்கன்றானும் - சந்திரனும் குபேரனும் கரியநிறத்தையுடைய நிருதியும்—இவரோடு எங்ஙனம் பொருதும் என்று இளைத்தார் - இந்தக் கிருஷ்ணார்ச்சுனர்களோடு எவ்வாறு போர் செய்வோம் என்று இளைப்படைந்தார்கள். எ - று.

ஆல் அசை. உம்மைகள் எச்சம். கணத்திலே என்பதில் ஏ பிரிநிலைப்பொருட்டது; அதனாற் பிரிக்கப்பட்டது போராதலின். தருமனாயினும் கொலைத்தொழில் பற்றிக் கருணையில் யமனென்றார். (௬௪௭)

சொன்மழைபொழிந்துநாடொறுந்தனதுதோள்வலிதுதிக்குநாவலர்க்குப்
பொன்மழைபொழியுங்கொங்கர்பூபதிதன்பொற்பதம்பொருந்தலர்போல
கன்மழைபொழியுங்காளமாமுகிலுங்கடவுளர்த்துரந்தவன்கரத்தில் [லக்
வின்மழைபொழியக்கற்களுந்துகளாய்மேனியும்வெளிறிமீண்டனவே.

(இ - ள்.) சொன்மழை பொழிந்து நாள்தொறும் தனது தோள்வலி துதிக்கும் நாவலர்க்கு - சொன்மாரியைச் சொரிந்து தினந்தோறும் தன்னுடைய புயவலிமையைப் புகழ்கின்ற புலவர்களுக்கு—பொன்மழை பொழியும் கொங்கர் பூபதி தன் பொற்பதம் பொருந்தலர்போல - பொன் மாரியைச் சொரியுங் கொங்கர் குலவரபதியாட்கொண்டானுடைய அழகிய கால்களைப் புகலிடமென்று அடையாத பகைவர்களைப்போல—கல் மழை பொழியும் காளமாமுகிலும் - கன் மழையைச் சொரியும் கரிய பெரிய மேகங்களும்—கடவுளர்த்துரந்தவன் கரத்தில் வில் மழைபொழிய - தேவர்களைத்துரத்தின அருச்சுனனது கையிலுள்ள வில்லானது பாணமாகிய மழையைச் சொரிய—கற்களும் துகளாய் மேனியும் வெளிறி மீண்டன - கற்களும் பொடியாகி உடம்பும் வெளுத்துத் திரும்பின. எ - று.

ஏ அசை. எச்சத்தோடு சிறப்புப் பொருட்டந்த முகிலும் என்னும் உம்மையால் மற்றை முகில்கள் ஒருபயனுமின்றி அஞ்சிமீண்டமை சொல்லாதேயமையும். கற்களும் மேனியுமென்னும் உம்மைகளும் அப்பொருளன. மேகங்கள் அச்சத்தால் வெளிறினவன்றி மழையாகிய உள்ளீடின்மையால் வெளிறினவல்ல என்பார் பொழிந்த முகில் என்னாது பொழியு முகில் என்றார். அச்சத்தால் உடம்பு வெளுக்குமென்பதை 'கண்ணிலான் மகன் கடுமையஞ்சியே - மண்ணிலார் வெளாவடிவமெய்தினார்' என இந்நூலாசிரியர் கூறிய வாற்றானு முணர்க. கொங்கர் பூபதிதன் பொற்பதம் பொருந்தலர், தம்மிடத்துள்ளனவும் உதவாமல் அவனுக்கஞ்சியோடுதல்போல, முகில்கள் தம்மிடத்துள்ள மழையு முதவாமல் அஞ்சி ஓடின என்பது கருத்து. (௬௪௮)

மாயவன்றனக்குநேயமைத்துனனாமைந்தனத்தந்தையைமதியான்
றூயவெங்கணையாலவனிடித்துவசந்துணித்தமர்தொடங்குமவ்வளவிற்
காயமெங்கணுநின்றொலியெழப்பரந்துகாயமில்கடவுளக்கடவு
ளுயகன்றனக்குப்பரிவுடனவைதீர்நல்லுரைநவின்றதையன்றே.

(இ - ள்.) மாயவன் தனக்கு நேயமைத்துனன் ஆம் மைந்தன் - கிருஷ்ணனுக்கு அன்பு பொருந்திய மைத்துனனாகிய அருச்சுனன்—அத்தந்தையை மதியான் - அந்தப் பிதாவாகிய இந்திரனை மதியாதவனாய்—தூயவெம் கணையால் அவன் இடித்துவசம் துணித்து அமர்தொடங்கும் அவ்வளவில் - சுத்தமாகிய கொ

டிய பாணத்தால் அவனது இடிக் கொடியை அறுத்து யுத்தத்தைத் தொடங்கும் அப்பொழுதில்—காயமில் கடவுள் - அசரீரி—காயம் எங்கணும் நின்று ஒலி எழப் பரந்து - ஆகாயம் எங்கும் நின்று ஒலி எழும்படி பரந்து—அக்கடவுள் நாயகன் தனக்கு - அந்த இந்திரனுக்கு—பரிவுடன் நவைதீர் நல் உரை நவின்றது - அன் போடு குற்றம் நீங்கிய நல்ல வசனங்களைச் சொல்லிற்று. எ - று.

அன்று ஏ அசைகள். நவின்றதை - வினைத்திரிசொல். அத்தந்தை என்னுஞ் சுட்டு உலகறிபொருட்டு. தேவராசனாகிய இந்திரனோடு பொருதற்குரிய துணைவ லியுண்மையைப் புலப்படுத்துவார் அருச்சுனனை மாயவன் றனக்கு நேய மைத்து னன் என்றும், இந்திரனோடு பொருதற்குரிய தேவ பாணம் என்பார் அவன் பாண த்தைத் தூய வெங்கணை என்றும், இந்திரன் அருச்சுனனோடு கொண்ட பகைமை யால் அவற்குளதாகும் நவையை நீக்குதலாலும் தெய்வமொழியாதலாலும் அசரீ ரியை நவைதீர் நல்லுரை என்றும் கூறினார். (சுகூ)

தமரினுமினியதக்ககன்முதலேதப்பினன்குருநிலஞ்சார்ந்தான்
குமரனுநம்மாலுய்ந்தனன்றூமக்கொடியனுங்கொண்டலுக்கவியா
னமர்களிலிருவர்நரனுநாரணனுநமக்குமிங்கிவர்சிறிதிளையா
ரமரினையொழிமினமரினையொழிமினமரருமமரர்நாதனுமே.

(இ - ள்.) தமரினும் இனிய தக்ககன் முதலே தப்பினன் குருநிலம் சார்ந் தான் - (உம்முடைய) சுற்றத்தாரினும் உமக்கு இனிய தக்ககன் முன்னமே நெரு ப்புக்குப் பிழைத்துக் குருக்ஷேத்திரத்தை அடைந்தான்—குமரனும் நம்மால் உய்ந் தனன் - அவனுடைய புதல்வனும் உங்களால் உய்ந்தான்—தூமக்கொடியனும் கொண்டலுக்கு அவியான் - புகைக்கொடியையுடைய அக்கினிதேவனும் மேகத்தி ற்குத் தணியான்—நரனும் நாரணனும் நமர்களில் இருவர் - அருச்சுனனுங் கிருட் டிணனுமாகிய இருவரும் நம்மவர்களிலிருவர்—இங்கு இவர் நமக்கும் சிறிது இளை யார் - இங்கே இவர்கள் நமக்கும் சிறிதும் தோல்வியடையார்கள் (ஆதலால்)—அம ரரும் அமரர் நாதனும் - தேவிர்காள் நீவிரும் இந்திரனே நீயும்—அமரினை ஒழி மின் அமரினை ஒழிமின் - (இவர்களோடு செய்யும்) போரை யொழிமின் போரை யொழிமின் எ - று.

ஏ அசை. குமரனும் தூமக்கொடியனும் நமக்கும் என்னும் உம்மைகள்எச்சத் தோடு சிறப்பு. சிறிதும் என்னும் சிறப்பும்மை விகாரத்தாற்றொக்கது. அமரரும் அமரர் நாதனும் எனமுன்னிலையிற் படர்க்கை மயங்கியது; இடவழுவமைதி. ஒழி மின் ஒழிமின் என்னும் அடுக்கு விரைவு பற்றிவந்தது. நம்முயற்சியும் நீவிர் குறி த்தபயனைப் பயந்தே விட்டது எனத் தேவர்களை மகிழ்விக்குமாறுகுமரனு நம் மாலுய்ந்தனன் என அசரீரிகூறிற்று. (எ0)

என்றுகொண்டுரைத்தமொழிசெவிப்பட்டவெல்லையினிரவிமுன்னிருள்
றுன்றுதன்சேனைச்சுரகணஞ்சூழச்சுரபதிதுறக்கமதடைந்தான் [போற்
வென்றுவெங்களங்கண்டருச்சுனன்றனதுவெற்றிகொள்சங்கமுங்குறித்தா
னன்றுசெந்திருமாலருச்சுனன்பொருதவாண்மைகண்டதிசயித்தனனே.

(இ - ள்.) என்றுகொண்டு உரைத்தமொழி செவிப்பட்ட எல்லையில்-என்று (அசரீரி)சொன்ன வசனம் காதிற்கேட்ட அளவில—சுரபதி - இந்திரன்—துன்று தன் சேனைச் சுரகணஞ்சூழ - நெருங்கிய தன் சேனையாகிய தேவர் கூட்டஞ் சூழ —இரவிமுன் இருள்போல் துறக்கமது அடைந்தான் - சூரியனை எதிர்ப்பட்ட இருள்போல (அங்குநில்லாது) சுவர்க்கத்தைஅடைந்தான்—அருச்சுனன் வென்று வெம் களம் கண்டு தனது வெற்றிகொள் சங்கமும் குறித்தான்-அருச்சுனன் தேவ ர்களை வென்று வெம்மையாகிய யுத்தகளத்தைப் பார்த்துத் தனது வெற்றிச்சங்

கையும் ஊதினன்—செந்திருமால் அன்று அருச்சுனன் பொருத ஆண்மை கண்டு அதிசயித்தனன் - செம்மையாகிய இலக்குமிக்கு நாயகராகிய கிருஷ்ணர் அன்றைக்கு அருச்சுனன் போர்செய்த ஆண்மையைக்கண்டு அதிசயித்தார். எ - று.

ஏ-அசை. என்று கொண்டென்பது ஒருசொல். சங்கமும் என்னும் உம்மை சிறப்பு. எதிர்த்து நின்று பொரும் ஆற்றல் சிறிதுமின்றி ஓடினன் என்பார் இரவி முன்னிருள்போலென்றார். அருச்சுனனுடைய சங்கு தேவதத்தம். (எக)

வடமதுரையினுந்தென்மதுரையினுமதிகுலநிருபர்கன்னியரைக்
கடிமணம்புரிந்தோன்வின்மையின்வன்மைகண்ணுறக்கண்டவானவரும்
புடவியிலொருவரொடுமினிப்பூசல்பொரேனெனப்போனவாசவனு
முடிசடைமவுலிநாரதன்முதலாமுனிவருமுடிவறப்புகழ்ந்தார்.

(இ - ள்.) வடமதுரையினும் தென்மதுரையினும் மதிகுல நிருபர் கன்னியரைக் கடிமணம் புரிந்தோன் வின்மையின் வன்மை - வடமதுரையிலும் தென்மதுரையிலும் சந்திரகுலத்தரச கன்னியர்களைப் புதிய விவாகஞ்செய்த அருச்சுனனுடைய விற்றொழிலின் வலிமையை—கண்ணுறக்கண்ட வானவரும் - கண்ணாரக் கண்ட தேவர்களும்—புடவியில் ஒருவரொடும் இனிப்பூசல் பொரேன் எனப் போன வாசவனும் - பூமியில் ஒருவரோடும் இனி யுத்தஞ்செய்யேன் என்று சொல்லிப்போன இந்திரனும்—முடிசடை மவுலிநாரதன் முதலாம் முனிவரும் - முடித்த சடைமுடியையுடைய நாரதர்முதலான இருடிகளும்—முடிவு அறப் புகழ்ந்தார் - அளவின்றிப் புகழ்ந்தார்கள். எ - று.

வன்மையை வானவரும் வாசவனும் முனிவரும் புகழ்ந்தார் என முடிக்க. வன்மையைக்கண்ட வானவரும் வாசவனும் முனிவரும் அருச்சுனனைப் புகழ்ந்தார் எனச் செயப்படுபொருளை வருவித்துரைப்பினும் பொருந்தும். மதிகுல நிருபர் என்றது வசுதேவனையும் சித்திரவாகனன் என்னும் பாண்டியனையும். இவர் கன்னியராவார் சுபத்திரையும் சித்திராங்கதையும். இந்திரன் பூவுலகத்தானாகிய அருச்சுனனோடு பொருது தோற்றமையால் இனிப் புடவியில் ஒருவரோடும் பொரேனென்றான். (எஉ)

மாசுணத்தரசன்மந்திரமமைத்தவனத்திடையிருந்தமாமயனை
யாசுசுக்கணிசென்றடர்த்தலும்வெருவியருச்சுனவபயமென்றரற்றத்
தேசுடைத்திகிரிச்செங்கண்மால்கருணைசெய்தனன்றீவினையுறினும்
பேசுதற்கரியபெரியவர்நினைக்கின்யார்கொலோபிழைத்திடாதவரே.

(இ - ள்.) மாசுணத்து அரசன் மந்திரம் அமைத்து அவனத்திடை இருந்த மாமயனை - சர்ப்பராசனாகிய தக்ககனது கோயிலை உண்டாக்கி அக்காட்டிலிருந்த பெருமையையுடைய மயனென்பவனை—ஆசுசுக்கணி சென்று அடர்த்தலும் - அக்கினிதேவன்போய்ச் சுடுதலும்—வெருவி அருச்சுன அபயம் என்று அரற்ற - அவன் அஞ்சி அருச்சுனா உனக்கு அடைக்கலம் என்று புலம்ப—தேசுடைத்திகிரிச் செங்கண்மால் கருணைசெய்தனன் - ஒளியையுடைய சக்கரப்படையை யேந்திய சிவந்த கண்ணராகியகிருஷ்ணர்கிருபைசெய்தார்—தீவினை உறினும் - துன்பம்மிகவரினும்—பேசுதற்கு அரிய பெரியவர் நினைக்கின் யார் பிழைத்திடாதவர் - சொல்லுதற்கரிய பெருந்தன்மையை யுடையவர் (காக்க) நினைத்தால் யாவர் (அதினின்றுந்) தப்பாதவர்கள். எ-று.

கொல், ஓ, ஏ அசைகள். தீவினை என்பது ஆகுபெயராய்த் துன்பத்தை யுணர்த்திற்று. தக்ககனுடைய கோயிலினின்று அக்கினிக்குப் பயந்து மயன் ஓடினன் என்று பொதுவகையாற் கூறும் முதனூற்கதையை நோக்கி, அமைத்த

வனத்திடை எனப் பிரித்து, தக்ககனுடைய கோயில் அமைக்கப்பட்ட காண்டவத்திலிருந்த மயனை எனப் பொருள்கூறினும் பொருந்தும். அக்கினி அருச்சுன அபயம் என்று அரற்ற அவன் அபயம் கொடுத்தான்; அவனைக் கொல்லும்படி சக்கரப்படையையெடுத்த கிருஷ்ணரும் அருச்சுனன் அபயங்கொடுத்ததைக் கண்டு அவனுக்குக் கருணைசெய்தார். என்பது முதனூற்கதை யாதலால் திகிரிச் செங்கண்மாலும் கருணைசெய்தான் என எச்சவும்மையை விரித்து அவ்வும்மையால் அருச்சுனனும் அபயங்கொடுத்தான் என முதனூலோடு பொருந்தப் பொருளுரைத்துக்கொள்க. கிருஷ்ணர் மயனைக் கொல்லும்படி சக்கரத்தை எடுத்தார் என்னும் கதையை யுட்கொண்டன்றே ஆசிரியர் ஈண்டுத் திகிரிச் செங்கண்மால் என அவரை விசேடித்தாரென்க. (எ௩)

அழைத்தடல்விசயன் றனைத்துணைசெய்கென்றுறுபத்தியோசனை யாகித்
தழைத்தவவ்வனத்தைக்கனத்தைவென்கண்டுதழலவனுகர்ந்திடுங்காலைப்
பிழைத்தவர்மயனுந்தக்ககன்மகவும்பெருந்தவனொருவன்முன்கருப்ப
மிழைத்தனுண்சிறகர்க்கருநிறக்குரீஇயினினங்களுமன்றிவேறிலரால்.

(இ - ள்.) தழலவன் - அக்கினிதேவன்—அடல் விசயன் தனை துணைசெய்க என்று அழைத்து-வலிய அருச்சுனனை எனக்குத் துணைசெய்குக என்று அழைத்து—கனத்தை வென் கண்டு - (தன்னை அவிக்கும்படிவந்த) மேகங்களைப் புறந்தரச் செய்து—ஆறு பத்துயோசனையாகித் தழைத்த அ வனத்தை நுகர்ந்திடுங்காலை-அறுபதுயோசனை விசாலமுடையதாய்த் தழைத்த அக்காண்டவத்தை எரிக்கும் பொழுது—பிழைத்தவர் - (அவ்வக்கினியிற்) றப்பினவர்கள்—மயனும் - மயனென்னும் தச்சனும்—தக்ககன்மகவும் - தக்ககனுடைய மகனாகிய அச்சுவசேனனும்—பெருந்தவன் ஒருவன்முன் கருப்பமிழைத்த - பெருமையாகிய முனிவனொருவன் முன்னே (ஒரு சாதகப்புள்ளினிடத்தே) கருவுண்டாக்கிய—நுண்சிறகர்க் கருநிறக் குரீஇயின் இனங்களும் அன்றி வேறு இலர் - நுண்மையாகிய சிறகுகளையுடைய சாதகப்பக்ஷிகளின் இனங்களுமன்றி வேறொருவருமிலர். எ - று.

ஆல் அசை. பறக்கும் வலியில்லாத மிக்க இளமைப்பருவத்தன என்பார் நுண் சிறகர்க் கருங்குரீஇயி னினங்கள் என்றார். பெருந்தவன் என்றது மந்தபால முனிவனை. இம்முனிவன் விரதசீலனாய் நெடுங்காலம் தவமுதலிய சற்கருமங்களைச்செய்து பின்பு பிதிர்லோகத்தை யடைந்து, தான் செய்த தவத்துக் கியைந்த பயன் ஒன்றும் அங்கே கிடைக்கப் பெறாமையால் மனம் வருந்தி, இதற்குக் காரணம் என்னை என்று அங்குள்ள இருஷிகளை வினவி, "பிள்ளைப்பேறின்மையாற் கிடையாதாயிற்று இனி அக்குறையை முடித்துக்கொண்டு வருவாயாயிற் புண்ணியலோகப் பயன்களெல்லாம் கிடைக்கும்" என்று அவர் கூறக் கேட்டு, மீண்டு பூமியில் வந்து, காண்டவவனத்தில் ஜரிதை என்னும் ஒரு சாதகப் பக்ஷியோடு சேர்ந்து நான்கு குஞ்சுகளைத் தந்து, அவைகளுக்குச் செயற்பாலனவற்றைக் கற்பித்து, அவ்வனத்தில் விடுத்து அப்பாற் செல்லும்பொழுது, வழியில் அக்கினிதேவனை எதிர்ப்பட்டு, அவன் காண்டவதகனஞ் செய்யப்போவதை யறிந்து, அங்கிருக்குந் தன் பிள்ளைகளாகிய குஞ்சுகளைக் காத்தல் வேண்டுமென்று அவனிடத்தில் வரம் பெற்றுக்கொண்டனன். காண்டவத்தை எரிக்கும்போது தம்மைக் காக்க வேண்டுமென்று அக்குஞ்சுகளும் அக்கினியைத் தோத்திரஞ்செய்து வேண்டிக் கொண்டன. இதனால் அக்கினி அக்குஞ்சுகளைத் தகியாதொழிந்தான். (எ௪)

என்பிறபுகல்வதீரேழுபுவனமெம்பிரானருந்தியதென்னத்
தன்பசிதணியக்காண்டவவனத்திற்சராசரமுள்ளவையனைத்தும்
வன்புடனருந்தியுதரமுங்குளிர்ந்தான்வன்னிதன்வடிவமுங்குளிர்ந்தா[ன்
னன்புடையிருவர்க்காசியும்புகன்றனசைந்துபோய்த்துறக்கமுமடைந்தா

(இ - ள்.) பிற புகல்வது என் - நாம் வேறுசொல்வதென்னே—எம்பிரான் ஈரேழு புவனம் அருந்தியது என்ன - நமது தலைவராகிய விஷ்ணு பதினாலுலகத்தையும் உண்டதுபோல—வன்னி - அக்கினிதேவன்—தன் பசி தணிய - தன் பசியடங்க—காண்டவவனத்திற் சராசரம் உள்ளவை அனைத்தும் வன்புடன் அருந்தி-காண்டவ வனத்திலுள்ள இயங்குதிணை நிலைத்திணையாயுள்ளவைகளனைத்தையும் வலிமையுடன் உண்டு—தன் உதரமும் குளிர்ந்தான் - தன் வயிறும் குளிர்ந்து—வடிவமும் குளிர்ந்தான் - உருவமுங் குளிர்ந்து—அன்புடை இருவர்க்கு ஆசியும் புகன்றான் - அன்பினையுடைய கிருஷ்ணன் அருச்சுனன் என்னும் இருவருக்கும் ஆசியையும் சொல்லி—அசைந்துபோய்த் துறக்கமும் அடைந்தான் - அசைந்து போய் விண்ணுலகத்தையும் சேர்ந்தான். எ - று.

புவனமும் என்னும் முற்றும்மை விகாரத்தாற்றொக்கது. உதரமும், வடிவமும், ஆசியும், துறக்கமும் என்னும் உம்மைகள் எச்சம். அக்கினிதேவன் முன் தனக்கு எளிதில் முற்றுப்பெறாமையாற் கிருஷ்ணார்ச்சுனர்களுடைய சகாயத்தைப் பெற்றுப் பல சீவராசிகளை வலாற்காரமாக வுண்டமையின் வன்புடனருந்தி என்றும், அவன் காண்டவத்தை உண்டதற்கு விஷ்ணு உலகத்தை உண்டதே உவமானம் என்பார் என்பிற புகல்வது என்றும் கூறினார். வயிறார உண்டமையாலும் நோய் நீக்கத்தாலுண்டாகிய சுகானுபவத்தினாலும் அக்கினி அசைந்து சென்றான்.

அமரரைமுதுகுகண்டகாவலருமவரவராண்மைகளுரைசெய்
தமரிலன்றெடுத்தபல்பெருங்கொடியாலலங்கரித்தமைத்ததந்தேர்மேற்
றமருடன்றுணைவர்நால்வருநகரச்சனங்களுமகிழ்ந்தெதிர்கொள்ளத்
தமரமும்முரசுமுழங்கவெண்சங்கந்தழங்கவந்தணிநகர்சார்ந்தார்.

(இ - ள்) அமரரை முதுகு கண்ட காவலரும் - தேவரைப் புறங்கண்ட கிருஷ்ணன் அருச்சுனன் ஆகிய அரசரிருவரும்—அவரவர் ஆண்மைகள் உரைசெய்து-தங்கள் தங்களுடைய வீரங்களைச் சொல்லி—அமரில் அன்று எடுத்த பல்பெரும் கொடியால் அலங்கரித்தமைத்த தம் தேர்மேல் - யுத்தத்தில் அன்றைக்கு எடுத்த பல பெரிய கொடிகளினாலே அலங்காரஞ்செய்த தங்கள் தேர்களின்மேலேறி—தமருடன் துணைவர் நால்வரும் நகரச்சனங்களும் மகிழ்ந்து எதிர்கொள்ள - சுற்றத்தாருடன் துணைவர்கள் நால்வரும் நகரத்திலுள்ள சனங்களும் உவந்து எதிர்கொள்ள—தமரமும்முரசும் முழங்க - ஒலியையுடைய மூன்று முரசங்களும் முழங்கவும்—வெண்சங்கம் தழங்க - வெண்மையாகிய சங்கம் ஒலிக்கவும்—வந்துஅணிநகர் சார்ந்தார் - வந்து அழகிய நகரை அடைந்தார்கள். எ - று.

காவலரும் என்னும் உம்மை சிறப்போடெச்சம். அலங்கரித்தமைத்த என்பது ஒரு சொல். தேர்மேல் வந்தென இயையும். அமரில் எடுத்த கொடி என்றது தோற்ற தேவர்களுடைய கொடிகளை. தங்களுடைய போர்வெற்றியைப் பிறர் அறியுமாறு,தோற்ற தேவர்களுடைய கொடிகளாற் றேர்களை அலங்கரித்தாரென்க.

ஆக செய்யுள் - அ௨௦.

காண்டவதகனச்சருக்கமுற்றிற்று.

ஆதிபருவம்

முற்றுப்பெற்றது.

# மகாபாரதம் ஆதிபருவப்

# பாட்டுமுதற்குறிப்பகராதி.

# பிழைதிருத்தம்.

| ப. | வ. | பி. | தி. | ப. | வ. | பி. | தி. |
|---|---|---|---|---|---|---|---|
| ௧௦ | ௩ | பெண்ணே | பெண்ணை | ௯ | ௭ | தம்மை | தம்பியை |
| ௧௧ | ௨௭ | குருசில் | குரிசில் | ஷ | ௨௦ | யிளப் | யிளைப் |
| ௧௨ | ௨௬ | குடனாட்டி | குடநாட்டி | ௬ | ௧௧ | தான் | தரன் |
| ஷ | ஷ | குணனாட்டி | குணநாட்டி | ஷ | ௨ | புடை | புடைத் |
| ௧௩ | ௩ | கொள்ணி | கொள்ளி | ௮ | ௪ | பிளந | பிளந் |
| ஷ | ௪௨ | மிகுன்ற | மிகுகின்ற | ௫ | ௩௦ | காரி | காரிய |
| ௧௬ | ௨௦ | சொலுதல் | சொல்லுதல் | ௬ | ௧௧ | விடாத [ம் | கொடாத[ம். |
| ௨௦ | ௨௨ | ருளிர | குளிர [முன் | ஷ | ௩௧ | வினையெச்ச | வினையெச்ச |
| ௨௧ | ௯ | கொடுத்து | கொடுத்து | [illegible] | ௬ | வழிவி | வழுவி |
| ஷ | ௨௦ | முகத்கி | முகத்தி | ௨ | ௨௧ | எள்ளு | என்னு |
| ௨௨ | ௪ | மனு | மநு | ஷ | ௩௬ | வில்லை | வல்லை |
| ஷ | ௧௮ | கொ.ள்ணி | கொள்ளி | ௦௪ | ௩௨ | லணையம் | லணையும் |
| ஷ | ௨௭ | தாரகாபாதி | தாரகாபதி | ௦௭ | ௩௬ | கேளன | கேளென |
| ௨௫ | ௨௩ | வீறு | ஈறு | ௦௯ | ௧ | ம்பவச்சரு | சம்பவச்சரு |
| ௨௮ | ௭ | சொல்லுல் | சொல்லும் | ௧௧ | ௨௨ | முமா | முகமா |
| ௨௯ | ௩௯ | விருப்ப | விரும்ப | ௧௨ | ௨ | மாபுற | மார்புற |
| ௩௧ | ௧௬ | சமுக | சமூக | ௧௪ | ௨௨ | யொழுதிய | யொழுகிய |
| ௩௪ | ௨ | இவற்றிக் | இவற்றிற் | ௧௭ | ௩௭ | இமைய | இமய |
| ௩௯ | ௩௮ | நிரம்பத | நிரம்பத் | ஷ | ௧௯ | வற்தை | வற்றை |
| ௪௦ | ௩௮ | தாயரை வகையர் | ஐவகைத்த யருமுளர்; | ஷ | ௨௧ | யாமான் | யாமா [ற் |
| | | | | ௧௧௯ | ௪௦ | பொருந்து | பொருந்துத |
| ௪௫ | ௩ | வானிட | வானிடை | ௨௬ | ௩ | வழங்ரு | வழங்கு |
| ௪௮ | ௮ | செல்ல | சொல்ல | ஷ | ௨௬ | நன்நி | நன்னி |
| ௬௫ | ௨௦ | செச்சம் | யெச்சம் | ௧௨௭ | ௨௩ | னென | னென்ன |
| ௬௬ | ௨௪ | ஐந்தருவின் | கற்பகத்தின் | ஷ | ௨௪ | வேழ்வி | வேள்வி |
| ௬௮ | ௪௦ | ஆசிரியர் | இதைநீக்குக | ௧௩௨ | ௨௦ | தூறி | நூறி |
| ௭௧ | ௭ | லால | லால் | ௧௩௩ | ௬ | பேற்றி | பெற்றி |
| ஷ | ௧௪ | என்னும | என்னும் | ஷ | ௨௦ | வெற்றி | வென்றி |
| ௭௨ | ௨ | யீன்றனன் | யீன்றனண் | ஷ | ௩௪ | நெங்கி | நெருங்கி |
| ஷ | ௭ | கலநத | கலந்த | ௧௩௫ | ௯ | அரிச்சுன | அருச்சுன |
| ஷ | ௭ | யான் | யான | ஷ | ௧௫ | உடநிகழ் | உடனிகழ் |
| ௭௩ | ௧௮ | முறைமைப் | மதம் | ௧௩௬ | ௪௧ | பார | பர |

# பிழைதிருத்தம்.

| ப. | வ. | பி. | தி. | ப. | வ. | பி. | தி. |
|---|---|---|---|---|---|---|---|
| ௧௩௮ | ௩௮ | ஞனு | ஞு | ௨௩௯ | ௩௫ | பிறத்த [ன் | பிறந்த |
| ௧௪௧ | ௧௦ | பா ற்றி | பென்றி | ௨௪௩ | ௩ | ஆக்கினின | ஆக்கினன் |
| ௧௪௩ | ௩௪ | நெடுத்துறை | நெடுந்துறை | ௨௫௭ | ௩௯ | விலங்கண | விலக்கண |
| ௧௪௬ | ௧௨ | பிருதுவி | பிரு[illegible]வி | ௨௫௮ | ௩௪ | கெல்லாம | கெல்லாம் |
| ௧௫௨ | ௧ | உடமபு | உட[illegible]பு | ௨௬௦ | ௧௦ | கண்டீ | கட்டீ |
| ௧௬௧ | ௫ | ருள்கொள் | ருள் | ௨௬௫ | ௧ | வில்விற்கு நாலுவிரல் தூரம் | இதை நீக்குக. |
| ௸ | ௩௩ | எழ | எழ் | | | | |
| ௧௬௫ | ௭ | செட்தென் | செய்தென் | | | | |
| ௸ | ௧௫ | வேட்டன் | வே[illegible]டேன் | ௨௬௭ | ௩௬ | பஙகய | பங்கய |
| ௧௬௬ | ௧ | யாகேசனன் | யா[illegible]சனன் | ௨௬௮ | ௩ | விடைய | விடய |
| ௸ | ௫ | மாப்பால | மா[illegible]ல் | ௸ | ௧௭ | கிருஷணர் | கிருஷ்ணர் |
| ௸ | ௨௮ | நன்பு | நண்பு | ௸ | ௨௮ | பேராறற | பேராற்ற |
| ௧௬௭ | ௬ | தியைய | தியை[illegible] | ௸ | ௨௯ | தும்துபி | துந்துபி |
| ௧௬௮ | ௧௪ | பழமை | பழைமை | ௨௮௪ | ௪௧ | வறையும் | றையும் |
| ௸ | ௩௮ | பேருக | பெரு[illegible] | ௨௯௯ | ௩ | அங்கன | அங்ஙன |
| ௧௭௭ | ௨௩ | அதிருக்கி | அதிரு[illegible] | ௩௦௬ | ௩[illegible] | கருதி | கருதி |
| ௧௭௮ | ௩௫ | கன் | கண் | ௩௧௩ | ௩௬ | பொன்ற | போன்ற |
| ௸ | ௪௧ | தரித்து | தரித்[illegible] | ௩௧௭ | ௩௭ | நிறுத்தான் | நிறத்தான் |
| ௧௮௦ | ௪௦ | யாகேசனன் | யாக[illegible]னன் | ௩௪௮ | ௩௬ | பெரிரோ | பெரியோ |
| ௸ | ௪௧ | யாகேச | யாகசே[illegible] | ௩௨௧ | ௩ | முகின் | முகிழ் |
| ௧௮௩ | ௪ | தல்வ | தலவ | ௸ | ௬ | தாணு | தாணு |
| ௧௮௬ | ௩௬ | தொற்று | தோற்று | ௩௨௩ | ௫ | அலங்காரமளிக்குமென்பதற்கு | இதைச்சேர்க்குக. |
| ௧௯௪ | ௩௯ | தென்பான் | தென்பா[illegible] | | | | |
| ௸ | ௪௦ | யென்ருன் | யென்ரு[illegible] | | | | |
| ௨௦௪ | ௩௫ | கெணகொ | கெணக்கொ | ௩௨௪ | ௩௬ | மிதூர் | மீதூர் |
| ௨௦௫ | ௩௩ | அசைச்ச | அமைச்ச | ௩௨௬ | ௩ | சோர்நது | சோர்ந்து |
| ௨௦௭ | ௨௮ | வத்தருள் | வந்தருள | ௸ | ௩௨ | விர | வீர |
| ௨௦௯ | ௩௩ | சிறப்ப | சிறப்பு | ௩௩௪ | ௧௯ | றுலகங்க | றுலங்க |
| ௨௧௮ | ௧௮ | பழமை | பழைமை | ௩௫௨ | ௩௨ | வருப்படி | வரும்படி |
| ௨௨௯ | ௧௭ | முணர்ந்தி | முணர்ந்தி | ௩௬௦ | ௧௧ | கிரீபன் | கிரீபன் |
| ௨௩௫ | ௩௩ | எனறும் | என்றும் | ௩௭௬ | ௯ | வக்கனி | வக்கினி |